# நற்றிணை

## மூலமும் உரையும்



ACC No 44005
0.31

டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலையம்
சென்னை - 600 090

11/2

# நற்றிணை மூலமும் உரையும்

பதிப்பாசிரியர்

வித்துவான் H.வேங்கடராமன்




டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலையம்
எண்.2, அருண்டேல் கடற்கரைச் சாலை, பெசன்ட் நகர்,
சென்னை-90, தொலைபேசி: 044-2491 1697
மின்னஞ்சல்: druvslibrary@gmail.com

© டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம்

வெளியீட்டெண் : 274

2019

500 படிகள்

முதற்பதிப்பு - 1989
இரண்டாம் பதிப்பு - 1997
மூன்றாம் பதிப்பு - 2013
நான்காம் பதிப்பு - 2019

பக்கங்கள் : 880

ISBN: 978-81-943775-5-9

விலை : ரூ.500/-

அச்சிட்டோர்

மணி ஆப்செட்
எண்.115/4அ1, நும்பல் கிராமம்,
மகாலட்சுமி நகர் விரிவு, திருவேற்காடு போஸ்ட்,
வேலப்பன்சாவடி, சென்னை-77.

# பொருளடக்கம்

11/2

# பதிப்புரை

நற்றிணை என்பது எட்டுத்தொகை நூல்களில் முதற்கண் வைத்துச் சிறப்பிக்கப்படுகின்றது. "நற்றிணை நல்ல குறுந்தொகை" என்னும் வெண்பாவினால் இது அறியப்படும். இவ்வெண்பாவில், அகம், புறம், நற்றிணை என்னும் நூல்கள் அடைமொழியின்றிக் கூறப்பட்டுள்ளன. பிற நூல்கள் ஐந்தும் அடைமொழி கொடுத்துக் கூறப்பட்டிருக்கின்றன. அடைமொழியின்றி இந்நூல்கள் கூறப் பெற்றிருத்தல் இவற்றிற்குத் தனிச்சிறப்பு உண்டென்பதை உணர்த்தும். இந்நூலில் உள்ள செய்யுட்களின் தொகை நானூறாகும். இந்நூலைத் தொகுப்பித்தோன் பன்னாடு தந்த பாண்டியன் மாறன்வழுதி என்பான். தொகுத்தோர் இன்னார் என்று புலப்படவில்லை. 175 புலவர்களாள் பாடப்பட்டனவாகும். நற்றிணைப்பாக்கள் பல, தொல்காப்பியம் பொருளதிகார உரையில் மேற்கோளாக வந்துள்ளன.

இது, பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர் அவர்கள் எழுதிய உரையுடன் 1915இல் முதன்முதலாக வெளியிடப்பட்டது. இப்பதிப் பிற்கு தமிழ்த் தாத்தா உ.வே.சாமிநாதையர் அவர்கள் இரண்டு பிரதிகளை ஒப்பு நோக்குவதற்காக வழங்கியுள்ளார். நற்றிணையைப் பதிப்பிக்க வேண்டும் எனும் தமிழ்த்தாத்தா அவர்களின் வேணவா பேராசிரியர் வித்துவான் எச்.வேங்கடராமன் அவர்களின் வழி 1989ஆம் ஆண்டில் நிறைவு செய்யப்பெற்றது. இந்நூலின் இரண்டாம் பதிப்பில் (1997) தமிழ்த்தாத்தா அவர்களால் எழுதிவைக்கப் பெற்றிருந்த அரும்பத அகராதி சேர்க்கப் பெற்றது. இரண்டாம் பதிப்பின் மறு அச்சீடாக இந்த நான்காம் பதிப்பு வெளியிடப்படுகிறது.

திருவையாறு அரசர் கல்லூரிப் பேராசிரியர் எச்.வேங்கடராமன் அவர்களின் நூற்றாண்டு (1919-2019) நினைவைப் போற்றும் வகையில் அவர் பதிப்பித்த நற்றிணையை மறுபதிப்பாக வெளியிடுவதற்கு அனுமதி வழங்கிய டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையக்குழுத் தலைவர் டாக்டர் கோ.விசுவநாதன் அவர்களுக்கும் துணைத்தலைவர்-பதிப்புக் குழுத்தலைவர் டாக்டர் இ.சுந்தரமூர்த்தி அவர்களுக்கும் செயலர் டாக்டர் தி.சத்தியமூர்த்தி அவர்களுக்கும் பொருளாளர் திரு.ந.ஆவுடையப்பன் அவர்களுக்கும், இந்நூல்நிலைய ஆட்சிக்குழு, பொதுக்குழு உறுப்பினர்களாகிய அறிஞர் பெருமக்களுக்கும் என் உளமார்ந்த நன்றி.

சென்னை
06.12.2019

கோ.உத்திராடம்
புலவர் மற்றும் காப்பாட்சியர் (கூ.பொ.)

## பதிப்பாளர் குறிப்பு

"தோன்றிற் புகழொடு தோன்றுக" என்ற பொதுமறைக்கும், "கருமமே கண்ணாயினார்" என்ற நீதி மொழிக்கும் எடுத்துக்காட்டாக விளங்கியவர் ஐயரவர்கள்.

ஐயரவர்கள் வாழ்நாள் முழுவதும் தமிழ் மொழிக்குத் தொண்டு செய்து அரும்பெரும் கருவூலங்களாம் சங்க இலக்கியங்களையும், புராணங்களையும், பிரபந்த நூல்களையும் தமிழுலகுக்கு அளித்தார்.

ஐயரவர்கள் பதிப்புத்துறையில் ஈடுபடுவதற்குக் காரண கர்த்தாவாக இருந்தவர் சேலம் இராமசாமி முதலியார் அவர்கள்.

அவருடைய வாழ்நாளிலேயே நற்றிணை, அகநானூறு ஆகிய இரண்டு நூல்களையும் பதிப்பிக்க நினைத்து ஆராய்ந்து வைத்த குறிப்புகள் பல. அவற்றைப் பயன்படுத்தி அவர் பெயரால் திருமதி ருக்மிணிதேவி அவர்களால் ஏற்படுத்தப்பட்டு இயங்கிக் கொண்டிருக்கும் நூல்நிலையம் இப்பதிப்பை வெளியிடுகின்றது. நற்றிணையைப் பதிப்பிக்கப் பயன்படுத்திய சுவடி, கையெழுத்துப் பிரதிகளின் விவரம்.

1. சுவடி எண் 1076.
2. கையெழுத்துப் பிரதி மூலம் எண் 509.
3. நற்றிணை மேற்கோள், ஒப்புமைப்பகுதி. எண் 506.
4. நற்றிணை மேற்கோள், ஒப்புமைப்பகுதி. எண் 507.
5. செய்யுள் முதற்குறிப்பு அகராதி. எண் 508.

இந்நூலிற்குப் பதவுரை எழுதியுதவியவர் வித்துவான் H. வேங்கடராமன் அவர்கள். அவர் திருவையாறு அரசு தமிழ்க் கல்லூரியில் பல காலம் தமிழ்ப் பேராசிரியராகப் பணி ஆற்றியவர். அன்னாருக்கு நூல் நிலையத்தின் சார்பாக நன்றி செலுத்துகின்றேன்.

இந்த நூலுக்குச் சிறந்ததொரு ஆராய்ச்சி உரை எழுதிக் கொடுத்த வித்துவான் வே.சிவசுப்பிரமணியன் அவர்களுக்கு நன்றி.

இந்நூலை அச்சிடுவதற்கு மத்திய அரசு ஓரளவு மானியம் கொடுத்தமைக்கு நன்றி செலுத்துகிறோம்.

இந்நூலை விரைவில் அச்சிட்டுக் கொடுத்த மாருதி அச்சகத்தாருக்கு நன்றி.

சென்னை - 600 090
01-12-1989

வித்துவான் சு. பாலசாரநாதன்
டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம்

***

## பதிப்பாளர் குறிப்பு

ஐயரவர்கள் அரும்பாடுபட்டுச் சேகரித்த சுவடிகளுள் நற்றிணையும் ஒன்று. முதற்பதிப்பில் விடுபட்ட ஐயரவர்களால் எழுதிவைத்திருந்த நற்றிணை அரும்பத அகராதி இப்பதிப்பில் சேர்க்கப்பட்டுள்ளது. பல அன்பர்கள் வேண்டுகோளுக்கு இணங்க நூல்நிலையம் இரண்டாம் பதிப்பாக வெளியிடுகின்றது.

பெசன்ட் நகர்,
சென்னை - 600 090
20-11-1997

வித்துவான் சு. பாலசாரநாதன்
ஆராய்ச்சித்துறை
டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம்

உ

கணபதி துணை

# முகவுரை

திருச்சிற்றம்பலம்

"ஆட்டுவித்தால் ஆர்ஒருவர் ஆடா தாரே
அடக்குவித்தால் ஆர்ஒருவர் அடங்கா தாரே
ஓட்டுவித்தால் ஆர்ஒருவர் ஓடா தாரே
உருகுவித்தால் ஆர்ஒருவர் உருகா தாரே
பாட்டுவித்தால் ஆர்ஒருவர் பாடா தாரே
பணிவித்தால் ஆர்ஒருவர் பணியா தாரே
காட்டுவித்தால் ஆர்ஒருவர் காணா தாரே"
காண்பார்ஆர் கண்ணுதலாய் காட்டாக் காலே."
—திருநாவுக்கரசர்

அமிழ்தினும் இனிய தமிழ்மொழியின்கண் என்றும் இறவாப் புகழ்பெற்று இலங்கும் இலக்கியங்கள் பாட்டும் தொகையும் கீழ்க் கணக்குமே என்பதை அனைவரும் அறிகுவர். கன்னித் தமிழின் கருவூலமாய்த் திகழும் இவை கடைச் சங்க நூல்களெனக் கற்றோராற் போற்றப்படுவனவாம். இவற்றுள் பாட்டு என்பது பத்துப் பாட்டையும் தொகையென்பது எட்டுத் தொகையையும், கீழ்க்கணக்கு என்பது நாலடியார் முதல் கைந்நிலை ஈறாக உள்ள பதினெட்டு நூல்களையும் குறிப்பனவாகும்.

சங்கம் ஏறிச் சான்றோரால் ஆய்ந்து தேர்ந்து எடுக்கப்பட்ட இந் நூல்கள் உயிர் ஓவியங்களாக மிளிர்வதை யாரே அறியார்?

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியக் கடலுக்குள் மூழ்குவார் அந்நூற்கு முன் பல்வகையான இலக்கியங்கள் தமிழில் நிறைந்து விளங்கியிருந்தன என்பதைத் தெற்றென உணர்வர். 'இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல்' என்பதே மரபாகலின் தொல்காப்பியத்திற்குமுன் பல நூல்கள் இருந்து இறந்தொழிந்தன. இயற்கையின் சீற்றத்தால் அழிவுறாது இன்றும் நின்று நிலவும் கடைச் சங்க நூல்களைக் கடல் தந்த செல்வம் என்னின் மிகை யன்று.

பண்டைத் தமிழ்ச் சான்றோர் ஒழுக்கத்தை அகம், புறம் என இருவகையாகப் பகுத்துக் கொண்டனர். புறவொழுக்கத்திலும்

அகவொழுக்கமே ஏற்றமுடையது என்பதை புறம் அகம் என்னாது அகம் புறம் என முதற்கண் வைத்து எண்ணப்பட்டமையே நன்கு விளக்கும். புறங்கையினும் அகங்கையே சிறப்புடைத்தாதலை வழக்கினுட் காணலாம்.

அவ்வொழுக்கங்களுள் அகம் என்பது இன்பம் என்னும் பொருளது. ஆகுபெயரால் அகத்தே நிகழும் இன்பத்தை அகம் என்றே ஆன்றோர் வழங்கினர். இன்பம் என்பது பொதுவாயினும் அகவின்பம் என்பது தனிப்பெரும் சிறப்புடையதாம். ஒத்த குலனும் ஒத்த வடிவும் ஒத்த குணனும் ஒத்த செல்வமும் ஒத்த இளமையும் உடைய தலைவன் தலைவியரிடம் நிகழும் இன்பத்தைச் சிறப்பிக்கும் இலக்கியங்களே அக இலக்கியங்களாம். கண்டு தின்றாரே அதன் சுவையை அறிவர். அதுபோல், அவ்வின்பத்தை துய்த்தாரே அறிவர். அதனைப் பிறர்க்கு இத் தன்மைத்தென உணர்த்த இயலாது. "இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு, அன்பொடு புணர்ந்த ஐந்திணை" என்று தொல்காப்பியர் (பொருள்:89) இதன் பெருமையை விளக்கினார்.

புறவொழுக்கம் என்பது கல்வி, கொடை, வீரம் போன்று அகம் அல்லாத அனைத்தும் ஆம், அவ்வொழுக்கம் பரந்து பட்டது. அதனை ஈண்டு விரிக்க அஞ்சுதும்.

எட்டுத்தொகை நூல்களாவன :

"நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்
கற்றறிந்தார் ஏத்துங் கலியோடு அகம்புறம் என்று
இத்திறத்த எட்டுத் தொகை"

என்னும் பழைய பாடலிற் காணும் அடைவு முறைப்படி, இந் நூல் முதலாவதாக வைத்து எண்ணப்பட்டுள்ளது ஒன்றே இதன் பெருமையை வலியுறுத்தும். மேலும் ஏனையனவற்றிற்குக் கொடுத்திருப்பதுபோல் அடைமொழி கொடாது 'நற்றிணை' என வாளா கூறியுள்ளமையும் இக் கருத்தை மெய்ப்பிக்கும். நன்னூல் என்றாற்போல தன்மையாற் பெயர் பெற்றது என்று கூறினும் தகும். எட்டுத்தொகை நூல்களுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பரிபாடலிற் சில பாடல்கள், கலித்தொகை, அகநானூறு என்பன அக இலக்கியங்களாகும்.

இவற்றுள் குறுந்தொகை என்பது நான்கடிச் சிற்றெல்லையும் எட்டடிப் பேரெல்லையுமுடைய நானூறுபாக்களைச் கொண்டதோர் இனிய நூல். பல பாவலர்களாற் பாடப்பட்டது. இத் தொகையை முடித்தவன் பூரிக்கோ என்னும் மன்னவனாவான்.

அடியளவாற் சிறுமை பதின்மூன்றும் பெருமை முப்பத்தொன்று மாக அடி நிமிர்ந்தொழுகி நெடுந்தொகை என்னும் பெயருடன் அகநானூறு செல்லா நிற்கும். ஏனைய நூல்களும் அளவானும், பாவகையானும் பொருள் வகையானும் பெயர் பெற்றன.

திணை என்னும் சொல் நிலம் குலம் சாதி ஒழுக்கம் எனப் பலபொருள்படும் என்றாலும் ஈண்டு ஒழுக்கம் என்னும் பொருளையே குறிக்கும். நற்றிணை என்பது, நல் - சிறந்த, திணை - ஒழுக்கம்; எனவே சிறந்த ஒழுக்கத்தை எடுத்து இயம்பும் நானூறு பாக்களைக் கொண்டதோர் இனிய நூல். அகவற்பாக்களால் ஆனது. அகவல் என்றால் அகவி அழைப்பது. அகவல் பாவகையுள் ஒன்று. ஆசிரியப்பா என்பர். இந்நூற்பாக்கள் ஒன்பதடிச் சிறுமையும் பன்னிரண்டடிப் பேரெல்லையுங் கொண்டன. (ஆயினும் 110, 379, இரண்டு பாடல்களும் பன்னிரண்டடிக்கு மேலுள்ளன)

நற்றிணை நானூறு எனவும் வழங்கப்படுவது. பழங்காலத் தமிழரின் ஒழுகலாற்றினை, வாழ்வியலைத் தெள்ளத் தெளிய விளங்க வைப்பது. இயற்கையழகின் இன்பப் பெட்டகமாகத் திகழ்வது. விலங்கினங்களின் அன்புணர்ச்சியையும் பறவைகளின் காதல் நிகழ்ச்சியையும் படம்பிடித்துக் காட்டுவது. முள்ளூர். மாந்தை, உறந்தை போன்ற பற்பல ஊர்களின் சிறப்பியல்புகளை எடுத்துரைப்பது. கிள்ளி, குட்டுவன், செழியன், சென்னி போன்ற முடியுடைப் பெருவேந்தர்களும், ஆஅய், ஓரி, காரி, போன்ற கொடை வள்ளல்களும், அன்னி, மிஞிலி, குறிசி, புல்லி, பழையன் தித்தன், நன்னன் போன்ற குறுநில மன்னர்களும், தழும்பன், திருமாவுண்ணி, விராஅன், வீரை போன்ற மறவர்களும் இந் நூலிற் பாவலர் பலரானும் பாராட்டப்பட்டுள்ளனர்.

பழங்காலத் தமிழர்களின் வாழ்க்கை முறைகளை அறிய விழைகுவோர்க்கு இந் நூல் சிறந்ததொரு கருவியாகும். ஒன்பான் சுவையும் தன்பாற் கொண்டிலங்கும் இந்நூற்கு இணையே இல்லை.

இந் நூலில்

குறிஞ்சித் திணையைப் பற்றியன 131 பாடல்கள்.

பாலைத் திணையைப் பற்றியன 106 பாடல்கள்.

நெய்தல் திணையைப் பற்றியன 101 பாடல்கள்.

மருதத் திணையைப் பற்றியன 32 பாடல்கள்.

முல்லைத் திணையைப் பற்றியன 29 பாடல்கள்.

நூற்றெழுபத்தைந்து பாவலர்களாற் பாடப்பட்ட தீஞ்சுவைக் கவிகளைக்கொண்ட இத்தொகை நூல் பழங்காலத் தமிழரசர் களின் வரலாற்றை அறிவதற்கும் ஒரு பெருங் கருவியாக அமைந் துள்ளது.

ஊராலும் உறுப்பாலும் இனத்தாலும் தொழிலாலும் குடிப் பிறப்பாலும் மற்றும் பல்லாற்றானும் சிறப்புப் பெயர் பெற்ற பல புலவர்களை இதன்கண் காணலாம்.

ஊரூற் பெயர் பெற்றோர் : அஞ்சில் அஞ்சியார், ஆலங்குடி வங்கனார், ஆலம்பேரி சாத்தனார், இடைக்காடனார், உரோடோ கத்துக் கந்தரத்தனார், உறையூர்க்கதுவாய்ச் சாத்தனார், ஐயூர் முடவனார், கச்சிப்பேட்டு இளந்தச்சனார், கருவூர்க் கோசனார், காஞ்சிப் புலவனார், பெருங்குன்றூர் கிழார், மாங்குடி கிழார் போன்ற பல்லோராவர்.

உறுப்பாற் பெயர் பெற்றோர் :- ஐயூர் முடவனார், குண்டுகட் பாலியாதனார், செங்கண்ணனார், நக்கண்ணையார் என இன்னோரன்னோர் பலர்.

நற்றிணை 242ஆம் பாடலில் மான்குட்டியை விழிக்கட் பேதை என்று கூறிய சிறப்பால் அதனையே சிறப்படை மொழி யாகப் பெற்று அப்பாடலைப் பாடிய பாவலர் ‘விழிக்கட் பேதைப் பெருங்கண்ணனார், எனப்பட்டார்.

நெஞ்சிற்கும் அறிவுக்கும் இடையில் உடம்பு படும் துன்பத்திற்குத் ‘தேய்புரிப் பழங்கயிறுபோல" என உவமை காட்டிய சிறப்பால் அப்புலவர் "தேய்புரிப் பழங்கயிற்றினார்" என வழங்கப் பட்டமையும் காண்க. (செய் - 284)

ஆத்திரேயன் செங்கண்ணனார், இளந்தச்சனார், பெருந்தச்சனார் என்று இனத்தாலும் பிறவாற்றாலும் பெயர் பெற்றோரும் உள்ளனர்.

ஔவையார், வெள்ளி வீதியார், வெறிபாடிய காமக் கண்ணியார் போன்ற பெண்பாற் புலவர்களும் இந்நூலிற் காணப் படுகின்றனர். விரிப்பிற் பெருகுமென்றஞ்சி இதனை விரிக்காது விடுக்கின்றனம்.

இந்நூலிற் காணப்படும் அரிய செய்திகள் சில என்றும் நினைவில் இருக்கத் தக்கனவாம். அவற்றுட் சில :-

1. "அழிவில முயலும் ஆர்வ மாக்கள்
வழிபடு தெய்வம் கட்கண் டாங்கு" (செய் - 9)

('கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தாற்போல' என்னும் பழமொழியை இவ்வடிகள் நினைவுறுத்துகின்றன.)

2. "புணரின் புணராது பொருளே பொருள் வயிற்
பிரியின் புணராது புணர்வே" (செய் - 6)

3. "வைகல் தோறும் இன்பமும் இளமையும்
எய்கணை நிழலிற் கழியும் இவ்வுலகம்" (செய் - 46)

4. "பேணுப பேணார் பெரியோர் என்பது
நாணுத்தக்கன்றது காணுங் காலை" (செய் - 72)

5. "நோயலைக் கலங்கிய மதனழி பொழுதிற்
காமம் செப்பல் ஆண்மகற்கு அமையும்" (செய் - 94)

6. "அழுந்துபடு விழுப்புண் வழும்புவாய் புலரா
எவ்வ நெஞ்சத்து எஃகெறிந்து ஆங்கு" (செய் - 97)

(வெந்த புண்ணில் வேல் விட்டதுபோல்)

(இதனுள் இப்பழமொழியைக் காண்க.)

7. "தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்
தாமறிந்து உணர்க என்ப" (செய் - 116)

8. "அரும்பிணி உறுநர்க்கு வேட்டது கொடாது
மருந்து ஆய்ந்து கொடுத்த அறவோன் போல" (செய் - 136)

9. "இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்
அசைபுநர் இருந்தோர்க்கு அரும்புணர்வின்மென"
(செய் - 214)

10. 'இசைபட வாழ்பவர் செல்வம்போல' (செய் - 217)

11. "முதிர்ந்தோர் இளமை அழிந்தும் எய்தார்
வாழ்நாள் வகைஅளவு அறிஞரும் இல்லை" (செய் - 314)

12. "பெரியோர், நாடி நட்பின் அல்லது
நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே"
(செய் - 32)

மேற்கண்டவை அணில்கடித்த பழங்கள்போல நனி பேரின்பம் பயப்பனவாம். இவைபோன்றன சுடர்விட்டு ஒளிர்வதை இந்நூலிற் பரக்கக் காணலாம்.

நற்றிணைப் பாடல்களிற் காணப்படும் உவமைகள் யாவும் சுருக்கம் உடையனவாயும் கற்பனையின்றித் தன்மை நவிற்சி

படவும் இயற்கையை ஒட்டியனவாயும் பொருளாழம் செறிந்தன வாயும் அமைந்திருந்தலை அறியலாம். உவமையென்னும் தாயணியினின்றும் உருவகம்போன்ற பல்வேறு சேயணிகள் தோன்றின என்பது உண்மையெனினும் நற்றிணை முழுவதும் உவமையே அரசோச்சி நிற்றலைக் காணலாம். தாம் கருதிய கருத்தை வெளிப்படையாகக் கூறுவது நாகரிகம் அன்று என்று கருதிப் பிறிதொன்றின் பண்பைக் கூறுமுகத்தான் வெளிப்படுமாறு உள்ளுறுத்திக் கூறும் 'உள்ளுறையுவமும் இறைச்சியும் தமிழர்தம் பண்பாட்டிற்குச் சான்றாக இருத்தலை அறிந்து மகிழ்கின்றோம். உள்ளதை உள்ளவாறு அழகுற எடுத்துரைக்கும் உவமைகள் இல்லையெனில் கவிகள் வெறுஞ் சொற்சித்திரமாகவே அமைந்து விடுமன்றோ? இதுபற்றியன்றே "உவமையிலாக் கவிதை பணியிலா வனிதை'' என்றனர் ஆன்றோர். எனவே இந்நூலுட் காணப்படும் உவமை நயங்களுட் சில காண்போம்.

தலைவன் தலைவிபால் அன்புவைத்தான் என்பதனைத் தாமரையின் தண்ணிய மகரந்தத்தினையும் சந்தனத்தின் தாதினையும் ஒன்று கலந்து தேனிறால் வைத்தாற் போன்றுளது என்னும் உவமை கூறியும் (1) காதலியைச் சுட்டிச் செல்லுமிடத்து 'வினைமுடித்தன்ன இனியோள் (3) என்று கூறும் உவமையும், தலைவியின் மாமை நிறத்திற்கு நீரில் வளர்ந்த ஆம்பலின் உள்ளே துளையையுடைய திரண்ட நார்உரித்தாற் போன்ற தண்டை உவமை காட்டியிருக்கும் பெற்றியும், (6) நன்றி மறந்த தலைவனை நினைந்து நாணம் கைவிட்டமைக்கு "மாசில் கற்பின் மடவோள் குழவியொய்ய வாங்கக் கைவிட்ட (15) பெற்றியை உவமை காட்டிச் சென்ற சிறப்பும், பொருளின் நிலையாமையை "வாடாப் பூவின் பொய்கை நாப்பண் ஒடுமீன் வழிபிற் கெடும்' (16) என்றுணர்த்தியும், நெய்தல் நிலக்கருப் பொருளாம் தாழையைக் கூறவந்த விடத்து இறாமீனின் முதுகு போன்ற சொரசொரப்பு அமைந்த பெரிய அடியினையும் சுறா மீனின் முகத்தில் நீண்டிருக்கும் கொம்பு போன்ற முட்களையும் களிற்றியானையின் கொம்பு போன்ற அரும்பினையும் உடையது (19) என்று கூறியிருக்கும் அழகும், காட்டுக் கோழியின் குரலுக்கு உருக்கிய நெய்யிற் பாலைச் சிதறினால் எழும் ஒலியைத் திணைக்கேற்ற வண்ணம் உவமைகாட்டியிருக்கும் நேர்த்தியும் (21) மலைக்கும் அருவிக்கும் திருமாலையும் பலதேவனையும் உவமைகாட்டியிருக்கும் சிறப்பும் (32) பரவிய வெயிலுக்கு விரித்துப் பரவவிட்ட வெளிய ஆடையை (43) உவமித்திருக்கும் சீர்த்தியும், நாரையின் வெள்ளிய சிறகுகட்கு நீரில் நன்கு கழுவி வெண்மைப்படுத்தப்பட்டு அழகாக மடிக்கப் பெற்ற வெள்ளாடை

களைக் காட்டியிருக்கும் அழகும் (70) மந்தியின் முகத்திற்குக் காட்டாக அத்திப்பழத்தையெடுத்துக் கூறியிருப்பதையும் (95) ஆம்பற் பூவிற்குக் கொக்கின் மூக்கை உவமை காட்டியிருத்தலையும் (100) மரத்தின் "நிழலுக்குக் கடனறி மன்னர் குடைநிழலை' உவமைகாட்டியிருக்கும் நேர்த்தியும் (146) இருளுக்கு நீலமணியையும், மணல்மேட்டிற்கு நிலவுக் குவியலையும், நாரைகளின் வரிசைக்குச் சங்குகளின் குவியலையும் திணைக்கு ஏற்றவாறு கூறியிருக்கும் பெற்றியும் (159) தலைவியின் மேனி, கூந்தல், கண், தோள் போன்றனவற்றிற்கு முறையே பொன்னையும், நீல மணியையும், குவளை மலரையும், பருத்த பசுமையான மூங்கிலையும் உவமை கூறிச் செல்லுதலையும் (166) காமவேட்கையால் மேனி முழுதும் பசலை படர்ந்துள்ளமைக்குக் காய்ச்சின பால்மேல் ஆடைபரவியிருத்தலை உவமை காட்டியிருக்கும் உயர்வும் (175) 'ஆறுகிடந்தன்ன அகல் நெடுந்தெரு' என்று கூறியிருக்கும் அழகும், (200) காணுந்தோறும் சிறந்து கம்பீரமாக நிற்கும் யானைக்கு இசைபட வாழ்பவர் செல்வத்தை உவமை காட்டியிருப்பதும் (217) கடலில் முதுகு நனையுமாறு நீராடும் நீர்க்காக்கைகளின் கூட்டத்திற்கு கைதொழும் மரபினையுடைய ஸப்தரிஷி மண்டிலத்தை உவமை காட்டியிருப்பதையும் (231) புன்னையின் கிளை, இலை, பூங்கொத்துக்கள், மகரந்தப் பொடி முதலியவற்றிற்குச் சுருக்கமாக முறையே, இரும்பின் அன்ன' எனவும், 'நீலத்தன்ன' எனவும். 'வெள்ளியன்ன' எனவும் 'பொன்னின் அன்ன' எனவும் உவமித்திருக்கும் திறனையும் (249), தாழை இலை காற்றிற்கு அடியளவும் வளையாது மேலே சிறிதளவு மட்டும் வளைதற்கு, 'உருகெழுயானை உடை கொண்டன்ன' என உவமை கூறியிருப்பதும் (299) வாயில் வேண்டி வந்து அட்டிற் சாலையிற் கூரையைப் பற்றி நிற்கும் பாணனுக்கு தழும்பன் என்பானின் "ஊணூர் ஆங்கண் பிச்சை சூழ் பெருங்களிற்றை' (300) உவமித்திருப்பதும், 'நாள் மலர்புரையும் மேனி, மலர்பிணைத் தன்ன கண்கள், மயிலோரன்ன சாயல், கிளியோரன்ன கிளவி, பாவையன்ன வனப்பு; என்று தலைவியை உவமை வாயிலாகப் படம் பிடித்துக் காட்டியிருப்பதும் (301) தலைவனின் மார்பு இன்பத்தையும் துன்பத்தையும் தரும் என்றற்கு அசுணம் கொல்பவரின் கையை உவமை காட்டியிருப்பதும் (304) தாமரை மலருக்கும் அத் தாமரையிலைக்கும் விளக்கின் ஒளியையும் களிற்றின் செவியையும் (310) காட்டிச் செல்லும் அழகும், நீர்க் காக்கை கொட்டாவி விடுதலை ஆம்பலின் அரும்பு மலர்ச்சிக்கு உவமை கூறியுள்ள நயமும் (345) காற்றால் மோதப்பட்டுப் பிசிர் பிசிராக மேகம் தவழ்ந்து செல்லுந்

தன்மைக்கு கைம்மை மகளிர் நூல் நூற்கின்ற காலத்துப் பறக்கும் பஞ்சுப் பிசிரினை உவமித்திருக்கும் அழகும் (353) தினைக்கதிர் கள் பருத்துத் திரண்டு நீண்டிருக்கும் வடிவிற்கு யானைத் தடக்கையையும், வரையோன் வண்மைபோல் கிளிகள் கிளை யோடு உண்ணும் தன்மையையும் உவமை நயம்பட நவின்று சென்றிருப்பதையும் (376) அலைகள் கடலிடத்து மெல்ல மெல்ல ஒலித்து அடங்கியிருத்தற்கு நெடுநாட் புண்ணுற்றாரை உவமை காட்டியிருத்தலும் (378) இன்னோரன்ன பலவும் பன்முறை படித்துச் சுவைத்து இன்புறத்தக்கனவாம். இதனாலன்றோ நாயனாரும் 'நவில் தொறும் நூனயம் போலும்'' என்று பாடிப் போந்தார்.

இளம்பூரணர், நச்சினார்க்கினியர், பேராசிரியர் போன்றோர் தாம் எழுதிய தொல்காப்பியப் பொருளதிகார உரைகளில் இந் நூற் செய்யுட்களை நிறைய எடுத்தாண்டுள்ளமை ஒன்றே இதன் சிறப்பை மெய்ப்பிக்கும்.

மற்றும், தொண்டி (8) பேளர் (10) கொற்கை (23) மாந்தை (35) கூடல் (40) கிடங்கில் (95) மருங்கூர் (353) போன்ற ஊர் களின் வளமும் நலமும் தலைவியின் நலனிற்கு அவை உவமை காட்டப்பட்ட சிறப்பும் நாம் அறிந்து மகிழ்வதற்குரியனவாகும்.

வாய் மொழிக் கபிலர் என்றும் பொய்யா நாவிற் கபிலர் என்றும் வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலர் என்றும் பாராட்டப்பட்ட கபிலர் பாடிய நற்றிணை 320ஆம் பாடலில் ஒரு அரிய செய்தி காணப்படுகின்றது.

கொல்லிமலைத் தலைவனாகிய வல்வில் ஓரியைக் கொன்ற மலையமான் திருமுடிக்காரி என்பான் வெற்றிப் பெருமிதத்துடன் அவ் வோரியினது கொல்லிமலைத் தெருவிலே நுழைந்தபோழ்து ஓரியின் குடிமக்கள் அனைவரும் ஒருங்கு கூடி நின்று பேராரவாரம் செய்தனர் என்னும் நிகழ்ச்சி அறியக்கிடக் கின்றது.

பண்டைத் தமிழ் மன்னர்களின் வரலாறு - போர்ச் சிறப்பு - பேராண்மை - நாட்டு வளம் - கொடைத்தன்மை - நட்பின் வலிமை போன்றனவற்றை ஆங்காங்குப் பல பாடல்கள் நமக்கு உணர்த்திச் செல்கின்றன.

இந் நூலின் செஞ்சொற் கவியின்பத்தை அனைவரும் நுகர வேண்டுமென்ற நன்னோக்குடன் முதுபெரும் புலவர், பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் அவர்கள் சிலபல ஆண்டு கட்கு முன்னர் நற்றிணையைப் பொழிப்புரையுடன் பதிப்பித்துச்

சென்றனர். அதனையே சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1952 ஆம் ஆண்டிலும், 1955 ஆம் ஆண்டிலும் மீண்டும் வெளியிட்டது. பெருமழைப் புலவர் பொ. வே. சோமசுந்தரனார் ஐயருரையை எளிமைப்படுத்தி ஆய்வுரையுடன் 1962 ஆம் ஆண்டில் வெளியிட்டனர். அடுத்து உரை வேந்தர் எனப்படும் ஒளவை. துரைசாமிப்பிள்ளை அவர்களும், புலியூர்க் கேசிகனாரும், மர்ரே கம்பெனியாரும், மணிமேகலைப் பதிப்பகத்தாரும் நற்றிணையை எளிமைப்படுத்தி வெளியிட்டமை தமிழுலகம் அறியும்.

எனினும், தமிழ்த்தாத்தா என்று தமிழுலகம் போற்றும் டாக்டர் ஐயர் அவர்கள், தாம் பதிப்பித்தருளிய குறுந்தொகையைப் போல், பதவுரையுடைனும், முடிபு கருத்து, ஒப்புமைப்பகுதிகள் போன்றவற்றுடனும் நற்றிணையையும் சிறந்த முறையிற் பதிப்பித்து நற்றமிழுலகிற்கு நல்கிட வேண்டுமென்று வேணவாக் கொண்டிருந்தனர். அதற்கேற்ற குறிப்புகளும் அவர்கள் எழுதி வைத்திருந்தனர். அவரெண்ணம் நிறைவேறுவதற்கு முன் காலன் முந்திக் கொண்ட கொடுமையை என்னென்பேன்? பதிப்பிப்பதில் அவர் மலை போன்றவர். யானோ மடுவினை ஒத்தவன். ஒரு சிறிதும் தகுதியற்றவன். என்றாலும் அவர் எண்ணத்தைப் பூர்த்தி செய்ய வேண்டும் என்ற பேரவாவே என்னை இச் செயலில் இறங்கத் தூண்டிற்று. "ஆசைபற்றி அறையலுற்றேன்" என்று கம்பன் கூறியதுபோல யானும் பேர் ஆசைபற்றியே பதிப்பிக்கலுற்றேன்.

"குற்றம் களைந்து குணம்பெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்" என்பதைப் பணிவுடன் இங்கு விண்ணப்பித்துக் கொள்ளுகின்றேன்.

தமிழ்ச்சுவை தவிர வேறு எச்சுவையும் அறியாத மரபில் வந்த நான்

"இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்" என்று செம்மாப்புடன் கூறிக்கொள்வதில் தவறில்லை என்றே எண்ணுகின்றேன். தமிழ்கூறு நல்லுலகம் இதனை வரவேற்கும் என்றும் என் இன்னோரன்ன முயற்சிக்கு ஊக்கமும் ஆக்கமும் தரும் என்றும் நம்புகின்றேன்

இதனை முட்டின்று முடித்து வைத்த முக்கட் பெருமானின் திருவடித் துணைகளை இறைஞ்சுகின்றேன்.

விரிந்த வான்மொழியின்
பரந்த பாக்கள்தன்னைச்
சுரந்த சூழ்ச்சி கொடு
விரைந்து அச்சு ஏற்பித்த
சாமிசாத சாமியைப்
பூமிதனிற் போற்றுவாம்
தேமதுரத் தமிழினை
நாமகிழ்ந்து நவிலவே.

இங்ஙனம்

திருவல்லிக்கேணி
சென்னை - 5
1-12-1989

H. வேங்கடராமன்
தமிழ்ப்பேராசிரியர் (ஓய்வு)
அரசர்கல்லூரி, திருவையாறு.

# நூலாராய்ச்சி

## (பேராசிரியர், மயிலம், வே. சிவசுப்பிரமணியன்)

## முன்னுரை

தமிழ் பன்னெடுங் காலத்துக்கு முன்னரே இலக்கியச் செல்வம் உடைய மொழி. பண்டைத்தமிழ் இலக்கணம் அகத்தியம். தொல்காப்பியம் என்பன என்பர். அகத்தியம் இன்று இல்லையாயினும் தொல்காப்பியம் முழுமையாகக் கிடைக்கிறது. கி.மு. ஐந்தாம் நூற்றாண்டிற்கும் முற்பட்டது தொல்காப்பியம் என்பர்.

ஓர் இலக்கணம் உருவாக வேண்டும் என்றால் அதற்கு முன்பே அம் மொழியில் எண்ணற்ற இலக்கியங்கள் உருவாகி இருந்தால்தான் இயலும் "இலக்கியம் கண்டு அதற்கு இலக்கணம் இயம்பலின்" (நன்) என்பது முன்னோர் விாக்கு.

முன்னர் அமைந்த இலக்கியங்களை ஒப்பு நோக்கி அவற்றுள் உயர்வும், பொதுமையும் கண்டு இவ்வாறு செய்யப் பெறல் வேண்டும் என்னும் இலக்கியத்துக்கான இலக்கணம், மரபு உருவாகிறது. அவ்வாறு உருவாகிய மரபினை ஒட்டியே பின்னர் இலக்கியங்கள் தோன்றுகின்றன.

தொல்காப்பியத்தை இலக்கண மரபாகக்கொண்டு தோன்றியவையே சங்க இலக்கியங்கள். சிறப்பாக அவற்றைப் பத்துப் பாட்டு, எட்டுத்தொகை என்பர். "பாட்டினும் தொகையினும்" என்று எழுதுவது உரையாசிரியர்கள் நெறி. இவற்றுள் எட்டுத் தொகை நூல்களை ஒரு பழம்பாடல் இவ்வாறு சுட்டுகிறது.

> "நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூ
> றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
> கற்றறிந்தார் ஏத்தும் கலியே அகம்புறமென்
> றித்திறத்த எட்டுத் தொகை"

இப்பாடல் நற்றிணை முதலாகப் புறநானூறு இறுதியாக வைத்து எட்டுத்தொகை நூல்களை வரிசைப்படுத்துகிறது. இதனுள் கால முறையோ, பொருள் முறையோ, பாமுறையோ ஏதுவும் இல்லை என்பது வெளிப்படை.

எட்டுத்தொகை நூல்கள் குறுந்தொகை முதலாகத் தொகுக்கப் பட்டன என்பது சில ஆராய்ச்சியாளர்கள் கருத்து.

எவ்வாறாயினும் எட்டுத்தொகை நூல்களுள் யாது காரணத்தாலோ நற்றிணை முதலாவதாக அமைந்துள்ளதிலிருந்தே அதற்கோர் சிறப்பு உள்ளது என்பது உண்மை. அச் சிறப்பு பொருள் ஒழுக்கத்துக்கு மூலமாகிய திணை என்பதாலேயே நூலைக் குறித்ததும், அதனையும் 'நல்' என்னும் சிறப்பு அடைமொழி கொடுத்து வழங்கியதும் ஆகியவற்றால் தெளிவாகும். எனவே "நற்றிணை" என்னும் பெயர்தானே தன் சிறப்பினை தொக்கி நிற்கிறது என்க.

சங்கம் மருவிய அகப்பொருள் பற்றிய அகவற்பாவால் ஆகிய பாடல்கள் பலவற்றையும் அடிவரையறை செய்து தொகுத்த பொழுது, நாலடி முதல் எட்டடிவரை உள்ளவற்றைக் குறுந்தொகை எனவும், ஒன்பதடி முதல் பன்னிரண்டடிவரை உள்ளவற்றை நற்றிணை எனவும், பதின்மூன்றடி முதல் முப்பத்தேழடி வரையுள்ளவற்றை நெடுந்தொகை (அகநானூறு) எனவும் நானூறு பாடல்கள் என்ற அளவில் ஒவ்வொன்றையும் தொகுத்தனர் எனலாம்.

இதனால் "நற்றிணை நானூறு" என்னும் பெயர் வழக்கும் இந் நூலுக்குண்டு. குறுந்தொகை நானூறுக்கும்; நெடுந்தொகை நானூறுக்கும் இடைப்பட்ட அடிவரையறைப் பாடல்களை உடையதாதலின் வேறு பெயர் கருதாது "நற்றிணை - நானூறு" என்றனர் எனலாம். இறையனார் அகப்பொருள் உரையில் "நற்றிணை நானூறு" என்றே அழைக்கப் பெறுவதும் காண்க.

நற்றிணை நானூறில் 234ஆம் பாடல் முற்றும் கிடைக்கப் பெறவில்லை. உரைப் பகுதிகளில் கிடைக்கும் "சான்றோர் வருந்திய வருத்தமும்" என்னும் பாடல் அதுவாகலாம் என்பது முன்னைய பதிப்பாளர்கள் கருத்தாகும். அடுத்து 385ஆம் பாடலின் பிற்பகுதி கிடைக்கப் பெறவில்லை. 56 பாடல்களில் ஆசிரியர் பெயர் காணப் பெறவில்லை. ஏனைய பாடல்களைப் பாடியவர்கள் தொகை 192. இத்தொகை வேறுபடவும் கூடும். சில ஆசிரியர் பெயர்களை ஒன்றாகக் கருதுவதும், வேறாகக் கருதுவதும் உண்டு ஆதலின்.

நற்றிணைச் செய்யுள்களுக்குக் குறிஞ்சி, முல்லை முதலிய ஐந்திணைப் பாகுபாடு ஏட்டுப் பிரதிகளில் இல்லை. பதிப்பாசிரியர்களால் பொருள் வரையறை செய்து கொடுக்கப் பெற்றுள்ளன. இத்தகைய திணைப்பொருள் வரையறை பழமையானதாதலின் செய்யுட் பொருளை உணர்ந்து கோடற்குப் பெரிதும் இன்றியமையாதது. ஆதலின் அவற்றை அப்படியே ஏற்றுக்கோடலில்

தவறில்லை. குறிஞ்சிக்கு 131, பாலைக்கு 106, நெய்தலுக்கு 101, மருதத்துக்கு 32, முல்லைக்கு 29 ஆக இவற்றை வரிசைப் படுத்தலாம். இவற்றால் நற்றிணை நானூற்றில் குறிஞ்சித் திணைப் பாடல்களே மிகுதியும் உள எனலாம். நெய்தல் திணைப் பாடல்களிலும் உரிப்பொருள் வகையால் குறிஞ்சித் திணைக்குரிய பாடல்கள் நிறைய இருக்கின்றன. முதற்பொருளானும், கருப் பொருளானும் அவை நெய்தல் திணை என்று பெயர் பெற்றுள்ளன.

நெடுந்தொகை நானூற்றில் பாலைத்திணைப் பாடல்கள் (200) மிகுதியானாற்போல, அகத்திணைக்குச் சிறந்ததாகிய குறிஞ்சி ஒழுக்கம் கருதிய பாடல்கள் மிகுதியாதலின் 'நற்றிணை' எனப் பெயர் தந்து முன்னீரீ இயினர் என்று கருதவும் இடம் தருகிறது.

சங்ககாலப் பாடல்களுக்கும் பிற்காலப் பாடல்களுக்கும் சொற் பொருட் போக்குகளில் நிறைய வேறுபாடுகள் உண்டு. மக்களின் நடை, உடை, பாவனைகளில் நாகரீக மாற்றம் ஏற்பட அவை இலக்கியத்திலும் ஏறிச் செல்வாக்குப் பெறுதலின் அம் மாற்றங்கள் இயல்பானவையே.

சங்கச் செய்யுட்களில் சில வரையறைகள் உண்டு. இன்ன பொருளை இன்னவாறு அமைக்க வேண்டும் என்னும் மரபு பிறழாமல் அவை செய்யப் பெற்றன. "மரபு நிலை திரியா மாட்சியவாகி, விரவும் பொருளும் விரவும் என்ப" என்பது தொல்காப்பியச் சூத்திரம்.

வரையறைக்குள் இருந்து செய்யினும் புலவர்களுடைய மனோபாவம், அதனை வெளியிடும் முறை, சொற்பொருட்செறிவு முதலியவற்றால் சங்கச் செய்யுள்கள் சிறந்து விளங்குகின்றன. இயற்கையின் பல்வேறு கோலங்களைச் சொற்சித்திரங்கள் ஆக்கி மகிழ்ந்து மகிழ்விக்கின்றனர் எனலாம்.

புறக்காட்சிகளிலும் அகக்காட்சிகளைப் புனைதல் மிகவும் சிறந்தது. அன்பு, வீரம் முதலிய பண்புகளை வெளிப்படுத்தும் செய்யுள்கள் அகம், புறம் எனப் பகுக்கப் பெற்றன. கருத்துப் பொருளாகிய அன்பின் வழி நிகழும் அகப்பொருள் செய்யுள்களே தொகை நூல்களில் மிகுதி.

ஒத்த அன்பால் ஒருவனும் ஒருத்தியும் பால்வழி இணைந்து உளவளாவிய காலத்துப் பிறந்த இன்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவர்க்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வா றிருந்தது எனக் கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்துணர்வே

நுகர்ந்து இன்பம் உறுவதொரு பொருள் ஆதலின் அது அகம் எனப்பட்டது. இப்பொருள் பற்றிய "புலனெறி வழக்கத்தின் இலக்கணம் தொல்காப்பியப் பொருளதிகாரத்திலும், இறையனார் அகப்பொருளிலும் கூறப் பெற்றுள்ளது.

இப்பொருள் ஐந்து திணையாகப் பகுக்கப் பெற்றது. ஒவ்வொன்றும் நிலம், காலம் ஆகிய முதற்பொருளாலும், மக்கள், மரம், விலங்கு, பறவை, தொழில் முதலிய கருப்பொருளாலும், அக ஒழுக்கமாகிய உரிப் பொருளாலும் விரிவாக அமைப்புப் பெற்றன. இவ்வரையறைகள் செய்யுளுக்கு உரியவை ஒழுக்கம் உலகியலிலும் வரும். எனவே "நாடக வழக்கமாகிய செய்யுள் வழக்கும், உலகியல் வழக்கும் கலந்ததே புலனெறி வழக்கம் எனப் பெறுகிறது.

சுவைபட வருவனவற்றை ஓரிடத்தே தொகுத்துச் சொல்லும் நாடக வழக்கும், அக ஒழுக்கத்தோடு கலந்துவருதலின் செய்யுள்களின் இலக்கியச்சுவை படிப்போரைப் பணிக்கும் தகையதாய் மேலிடுகின்றன. இல்லது, இனியது, புலவரால் நாட்டப் பெற்றது என்று இறையனார் அகப் பொருள் உரை கூறுமாயினும், இது முற்றிலும் இல்லது ஆகாது. இல்லோன் தலைவனாக உள்ளது புணர்த்தல் முதலாகப் புனைந்துரை வகையாற் கூறும் புலனெறி வழக்கம் என்றே உரையாசிரியர் கருதுகின்றனர்.

இச்செய்யுள்களிற் காணப்படும் தலைவன், தலைவியரிடையே வளரும் அன்பு நிலை, சிலர் இல்லறம் நடத்தும் முறை, முதலியன இயலுக்கு மேலும் உரம் ஊட்டி வளப்படுத்தும் தகைமைய, சங்க காலப் புலவர்களின் கவிதையாற்றலையும், அவர்களது விரிந்த மனோபாவத்தையும் அறிந்து கொள்ளுதற்கு நற்றிணையும் ஒரு கருவியாகும். அக ஒழுக்கம் கூறுவார்போல சமுதாய வாழ்க்கைக்கு வேண்டிய அரிய பேருண்மைகள் பலவற்றை நற்றிணை ஆசிரியர்கள் கூறியுள்ளனர். உரிப் பொருளாகிய ஒழுக்கம் பற்றிய செய்திகளைக் காண்போம்.

## ஐந்திணை ஒழுகலாறு

குறிஞ்சி: இயற்கைப் புணர்ச்சியில் கொடுப்பாரும் அடுப்பாரும் இன்றித் தாமே தமியராய் எதிர்ப்பட்டுப் புணர்ந்து இன்பம் துய்த்தாருள் தலைவன் புணர்ச்சிக்குப் பின் தலைவியின் பெற்றோரைப் பாராட்டுவன். "இப் பெண் யார் மகள் சொல், இவள் தந்தை வாழ்க, பொறையன் தொண்டித் துறைமுகத்தின் பொலிவும் வலிவும் இவள் தாய் பெறுக" என்பான். (8) மறுநாள்

இடந்தலைப் பாட்டில் தலைவியைச் சந்திக்கின்றான். தலைவியைப் பார்த்து 'என் சொல்லுக்கு எதிர் சொல்லாது நாணுகிறாய்; யான் உற்ற காமம் தாங்குதல் அரிது. நின் கண்களே அன்றித் தோள்களும் என்னை வருத்துகின்றன'' என்பான். (39)

தோழியரோடு விளையாடவில்லை, வேய்தல் மாலையும் கட்டவில்லை, கடற்கரைச் சோலையில் ஒருபுறம் நின்றாய்; நீயார்? நினைத்தொழுது கேட்கிறேன். கடல்பரப்பின் அணங்கோ? பேரழகு உடையாய்; இக்கழியிடத்தில் நிலைபெற்றனையோ; சொல் பெண்ணே'' என்பான். அவன் சொல்லெதிர் புன்சிரிப்புச் செய்வாள் தலைவி. கண்களில் நீர்த்துளி பரவும்'' இங்ஙனம் (155) பாராட்டிக்கூடுவன். இடந்தலைப்பாட்டில் எய்திய தலைவன் பாங்கனைச் சந்தித்து ''தலைவியின் சீறூர் மலையிடத்தது, அக்கொடிச்சியின் கையில் என் நெஞ்சு சிக்கிவிட்டது; அவளன்றிப் பிறரால் விடுத்தற்கரியது'' என வருந்திக் கூறுவன்(95) அவ்வாறு கூறிய தலைவனை நோக்கிப் பாங்கன் "மலையுறை குறவன் காதல் மடமகள் கடிய காவலால் பெறுதற்கரியவள்; நீ சொல்லும் சொல்லை ஏற்றுக்கொள்ளும் தன்மையள் அல்லள். இப்படிப்பட்ட அவளை நீ நினைத்தல் கூடாது'' (201) என்று சொல்வாள். தலைவனோ ''என்நெஞ்சத்தைவிட்டுப் போக மாட்டாள் அவள். அவளால் நான் அடைந்த துன்பத்தை நீ கண்ணாலே கண்டும் அவளை என்னோடு கூட்டி உதவிசெய்யா யாயின் இது என் ஊழ்வினை என்று வருந்தவே வேண்டும். (185) பாங்க! நய்னும் நண்பும் நாணமும், நன்குடைமையும், பயனும், பண்பும், உலகநடை அறிந்து நடத்தலும் உன்னைவிட உடையவன் யான் அவளுடைய கண்ணைக் காணாத முன்பு; இப்போது எல்லாம் போயிற்று'' (160) என்பான். இங்ஙனம் கூறிப் பாங்கனால் உதவப்பெற்றுத் தலைவியைக் கூடுவன்.

பின்னர் தலைவியும் தோழியும் ஒருங்கிருந்தவழிச் சென்று தோழியை மதியுடம்படுக்க வேண்டி, ''பெருங்கல்லை வேலியாக உடைய உங்கள் சிறுகுடி எது எனச் சொல்லவும் மாட்டீர்களானால், இத்தினைப்புனம் காவலும் நும்முடையது தானா? இதனையேனும் கூறுக'' (213) என்பான். அதுபோழ்து இவன் ஒரு குறை உடையான்போலும் என்று ஐயுற்றுத்தோழி ஆராய்வாள். அதுவரை பொறாத தன் நெஞ்சை ''நெஞ்சே நமது காதலியின் நோக்கமே நம்மை இவள்பால் இரக்கும்படி செலுத்தியது. இவள் உடன்படும்துணை நீ வருந்தாதே'' (77) என்பான்; ''இவள் அருளினும் அருளாதுவிடினும் யானுற்ற நோய்க்கு மருந்து பிறிதில்லை'' (140) என்பான். அதுபோழ்து

தோழி அவனை அகற்றுவாள். நகையாவோள் ''பாம்பு உயிரை வருத்துவதுபோல முன்பே வருந்தியிருக்கும் என் நெஞ்சை மேலும் வருத்த என்னைப்பார்த்து நகுதல் தகாது. என் உள்ளம் எவ்வாறு உரையாய்'' என்பான் (75) இதற்கு முன்னரே தலைவியின் களவினைத் தோழி அறிந்திருப்பள். தலைவி அவளை மறைக்கவும் தோழி ''தினைக்கதிரைக் கிளிகள் கொய்து கொண்டுபோகவும் அவற்றை ஓட்ட நீ எழவும் இல்லை; அழாமலாவது இரு'' என்று சொல்லி (13) அவளை அறிவாள்; அறிந்ததோழி தலைவன் தன்னை இரந்து பின்னின்றபோது உடனே ஏற்றுக்கொள்ளச் சிறிது நகையாடி மறுப்பாள். ''இத்தலைவி பரதவர் மகள். நீ கொடிஅசையும் கடைத்தெருக்களை உடைய மூதூரில் கடுந்தேர்ச் செல்வ மன்னனது காதல் மகன். குலப்பொருத்தம் இல்லை. காயவைத்த மீனிற் பறவைகளை ஓட்டுபவர்கள் நாங்கள். புலால் நாறுகிறோம். கொஞ்சம் தள்ளிநில். உனக்கு ஒத்தது அல்ல நம் சிறுநல்வாழ்க்கை. எங்களுக்குள்ளேயே தகுதியானவர்கள் உண்டு'' (45) என்று சொல்லி மறுப்பாள்—தோழி இவ்வாறு கூறி மறுத்தபொழுது தலைவன் மடலேறுவேன் என்பான். ''காமம் மடலைத் தந்தது. என்னை எண்ணி ஊர் எடுத்த அலராகிய பழிமொழி எனக்கு ஆவிரை, பூளை, உழிஞை என்று மலர்களை இடையிட்டுத் தொடுத்த எருக்கம் பூமாலையைத் தந்தது; இரவுப் பொழுது எனக்குச் செயலறவு தந்தது. எவ்வாறு உய்வேனோ'' (152) என்பான். ''மாயோனால் வருந்திய நெஞ்சே! மடற்பரி புடையாய் மாலைவருமளவும் இம் மரத்தடியில் தங்கிப் பின் செல்வாயாக'' என்று (146) தோழிகேட்கத் தன்நெஞ்சிற்குச் சொல்வான். அதுகேட்ட தோழி தலைவற்குக் குறை முடிப்பக் கருதுவாள்.

தோழி தலைவிபால் செல்வாள் ''சேர்ப்பன் ஒருவன் நம்மை நோக்கி ''என் உயிர் கைக்கொண்ட நீ யாரையோ என்று அவனால் நாம் வருந்துவதறியாமல் கேட்டான். அவன் வருந்தித் தொழுது நின்றது நகையாகின்று'' (245) என்று கூறித் தலைவியை அறிவாள். அவன் பரிந்துயரை அவன் நம்மை நயந்து என்னும் எனது வருந்து வருந்தினன் என்று சொல்லுகின்ற என்சொல்லை நீ தேறாய். நீ வேறு தோழிபரோடேனும் உலாவி அளவளாவி அறிந்து ஆராய்ந்து தக்கது செய்; முன்னர் நாடி நட்புக் கொள்வார்களே அன்றி நட்டபின்னர் ஆராய்வது இல்லை நண்பர்கள் திறந்து என்று கொஞ்சம் (32) கடிதாகக் கூறுவதும் உண்டு. இவ்வாறு கடிதாகக் கூறியவழித் தலைவி தோழியின் சொல்லை ஏற்றுக் குறை நயப்பாள். அதனால் தோழிமற் புணர்ச்சி

நடைபெறும். தலைவன் தலைவியை நோக்கி, "யான் கொண்ட காமநோயும் அதன் தளர்ச்சியும் நீங்குமாறு அழகமைந்த தோளை உடையாய்! முருகவேளைக்கலந்துடன் சென்ற வள்ளிபோல நீயும் என்னுடன் வருகின்றனையோ" என்று ஆற்றாமையும் (82) அன்பும் மேலிடக் கூறுவான். இந் நிலையில் தலைவன் பகற்குறி வேண்டுவான்.

அப்போது தோழி "தலைவனே விளையாடுகின்ற தோழியருடனே மணலில் அழுத்தி மறந்து கைவிட்ட விதை முளைத்துத் தளிர்விட, மீண்டும் அது கண்டு மகிழ்ந்து நாங்கள் நெய்பெய் தீம்பால் பெய்து அதனை வளர்த்தேமாக, உங்களைக் காட்டிலும் எங்களால் முன்னே வளர்க்கப்பெற்ற இப்புன்னை மரம் உங்களுக்குத் தமக்கை முறையாகும்! என்று எங்கள் தாய் கூறினாள். இப் புன்னை மரத்தின்கீழ் பகற்குறியில் புணர்தல் நாணுதும். நீ விரும்பினால் வேறு மர நீழல்களும் பகற்குறிக்கண் கூடற்குப் பொருந்தும்" எனப் பகற்குறி நேர்ந்த முறையிற் (172) கூறுவாள். பகற்குறி இயலாமற்போகிறது; தினையரியும் காலம் வருதலின். சிறுதினை யென்புனம் கொய்பதம் குறுகும் காலை தலைவி மனையகம் புகுவாள். தலைவனைச் சந்திக்க இயலாது, வாடி மேனி நலம் அழிவாள். (57) பகற்குறி பலவாறு இடையீடுபடுமானால் தலைவன் இரவுக்குறி வேண்டுவதும் அவ்வாறு இரவுக் குறிக்கண் தலைவியைக் கூடுதலும் சின்னாள் கழிந்து இயலாது போதல் உண்டு. தாய்துஞ்சாமை, நாய் துஞ்சாமை, ஊர் துஞ்சாமை, தோழி குரல் காட்டல், கூகைகுழறல், காவலர் கடுகல், நிலவு வெளிப்படல் என்றின்ன காரணங்களால் இரவுக்குறி இடையீடுபடும். "எமது ஊர்ப் பொய்கைத்துறையில் கடவுள் மரத்து உடன் உறைந்து பழகிய கூகையே! வெண் சோற்றை எலிக்கறியோடு நிறையக் கொடுக்கிறோம். எம் காதலர் வருதலை விரும்பித் தூங்காமல் இருக்கின்றபொழுது அஞ்சும்படி நீ குழறாதே" என்று (83) தலைவி கூறுவாள். புலிக்குப் பயந்து யானை தன் கன்றைக் காத்துத் தங்கும் அரிய வழியில் தலைவன் வருதற்குப் பயந்து தலைவனை வராதே என்று இரவுக்குறி மறுத்தலும் (85) நிகழ்கிறது.

ஒரு சில சமயங்களில் களவொழுக்கம் தாய்க்குப் புலனாதல் உண்டு என்று அஞ்சுவதும் அதன் காரணமாக விரைவில் வரைந்து கொள்க என்று தலைவனை நோக்கிக் கூறலும் உண்டு! 'மலைநாட' நின் வாய்மை ஒழிக. உன்னோடு இரவிற் புணர்ந்து சென்ற தலைவியின் தோள் மேல் அறுகால் பறவை கள்ளால் மொய்க்க, அஃதறிந்த தாய் தலைவியின் மேனியைப் பார்த்து

'முன்பும் இப்படி இருந்தாயா'' என்று கேட்டாள். அப்போது பதிற் சொல்லமாட்டாளாய் அல்லாந்து என் முகம் நோக்கினாள் தலைவி. யானோ! அவளுக்கென்னம்மா தெரியும்! இதோ இந்த சந்தனக் கொள்ளிக்கட்டைதான் காரணம். அதை இடுப்பில் இட்டவுடன் அதிலிருந்து வண்டுகள் இவள் உடம்பில் ஏறிவிட்டன என்று சொல்லித் தப்பித்தேன். விரைவில் வரைந்து கொள்க'' என்றாள் (55) ''தலைவன் வருவான் என்று உலகினர் கூறும் சொல் உண்மையோ அன்றோ என்று வலிய ஆராய்ச்சி உள்ளமொடு அயலார் அறியாதபடி தாய் பொருந்தாத கொடுமுகம் உடைய வளாய் இருக்கிறாள்!'' என்று தோழி சொல்கிறாள். (122) நல்லகாலப் தப்பித்தோம் என்று சொல்கிற பாடலும் உள்ளது. ''தலைவனோடு பகற்குறியில் புணர்ந்து நாம் சென்றுவிட தினைக் காவலுக்கு யாரும் இல்லாமல் இருக்கவும், கிளிகள் தினைக் கதிரைக் கொள்ளாமல் இருந்தன. இக் கிளிகளுக்கு என்ன கைம்மாறு செய்வோம் என்று கேட்கிறாள் தோழி (194) தலைவன் இரவுக் குறியில் வரும் வழி பார்த்துற்ற அச்சத்தால் தலைவி அவனை வரவேண்டாம் எனக்கருதும் கருத்துள்ள பாடல்கள் பல. (114, 154) அப்பொழுது தலைவன் ''நின்னை நினைத் துவரின் எனக்கு மலை வழி பாதுகாப்பாக இருக்கும்'' (192) என்பான். இரவுக்குறியினும் பகற்குறியினும் தலைவன் வாராதொழியத் தலைவி மேனி நலம் வாடுதல் கண்டு தாய் வேறு ஒன்றாகக் கருதி தெய்வத்தை நினைவுறுத்தக் கருதி வெறியாட்டு எடுப்பது உண்டு. அத்தகைய வெறியாட்டு நிகழுமோ என்று அஞ்சி தோழி தலைவனுக்கு வரைந்து கொள்ள அறிவுறுத்து வாள்.

தலைவன் பிரிவினால் தலைவிக்கு உண்டாகிய பசலையைக் கண்டு அன்னை நெல்லைப் பரப்பிக் கட்டுவைத்துப் பார்த்தால் அது முருகனால் ஆகியது என்று கூறுமோ என்கிறாள் தோழி (288) தலைவியே உன்நோய் காதலனால் உண்டாகியதென்று அறியாது அதனைப் போக்க வேலன் முருகவேளை நினைத்துச் செய்யும் வழிபாட்டால் அது தணியுமானால் நல்லதாகும். தலைவனொடு நம் தொடர்பு புலனாகாது என்றாள். (382) ''அன்னை முருகு அணங்கியது என்று கருதி வெறியெடுத்தலானே நோய் நீங்குமாயின் அதனினும் கொடியதொன்றில்லை. இவ்வாறு தணியுமோ'' என்பது (322) முன்னைய கருத்துக்கு மாறுபடு கிறது. ''அன்னை நின்னால் உண்டாகிய வேறுபாட்டை வேறாக உணர்ந்து வெறியென உணர்ந்த உள்ளத்தொடு மறியறுத்து முருகனுக்கு விழாச் செய்வாள். அது நின் பசலைக்

குதவாது என்பதைத் தலைவனிடம் சொன்னால் என்ன?" என்று தோழி தலைவியிடம் பேசுவாள் (47)

வெறியாட்டெடுக்குங்கால் முருகனை நோக்கிப் பேசுவது போலவும் இது வருகிறது. "தலைவன் மார்புதரவந்த படர் மலி அருநோய் உன்னால் வந்ததன்று என்பதைத் தெய்வமாகிய நீ அறிந்து வைத்திருந்தும் கடம்பமாலை சூடி, வேலன் வழிபட வெறியாடுகளத்தில் வந்துள்ள முருகனே! நீ கடவுளாயினும் ஆக. மிகவும் அறியாமை யுடையை" என்று (34) இப் பாடல் சொல்வது அழகாக இருக்கிறது.

ஆறு அச்சத்தால் குறிவிலக்கி வரைவு கடாவுதல் (114, 154, 192) தாய் அறிந்தாள் என்று வரைவு கடாவுதல் (55, 122) வெறி அச்சுறுத்தி வரைவு கடாவுதல் (173, 182, 61, 206) அலர் மிகுதியாகியது என்று வரைவு கடாவுதல் (4, 18) இற்செறிப்பு அறிவுறுத்தி வரைவு கடாவுதல் (27, 44, 57, 68, 119, 251, 368) என்று பல்வேறு வகையானும் தோழி தலைவனுக்கு உணர்த்தியும் வரைவு நிகழாத வழி தோழி "நாட! நீ நல்காய் ஆயினும், மீண்டும் இக்களவொழுக்கமாகிய நயனில செய்யினும் தலைவி நின் வழிப்பட்டவள். அவள்பால் தங்கிவிட்ட பசலைக்கு மருந்து பிறிதில்லை என்பதை நன்கறிந்து செல்க" (247) என்று தலைவனிடம் கூறுதல் வருகிறது. தலைவனை இரவினும், பகலினும் வாரற்க (151) என்றலும் நிகழ்கிறது.

வரைவு கடாதல் பயன் படாவழி உடன்போக்கில் செல்ல வேண்டும் என்னும் கருத்து தலைவி, தோழி மாட்டு எழும் "நம் மூர்த் தெருப்பெண்கள் சிலரும் பலரும் கடைக்கண்ணால் என்னைச் சுட்டிப்பார்த்து மூக்கின் மேல் சுட்டுவிரலை வைத்து அம்பல் தூற்ற, சிறுகோலைக் கையில் எடுத்துக் கொண்டு தாய் அலைப்ப நெடுநாள் துன்புற்றேன் தோழி! இன்று இரவு வரும் தலைவனொடு நான் உடன் போகத் துணிந்தேன். இவ்வூர் அலர் சுமந்தொழிக" என்று தலைவி உடன்போகத் துணிந்து (149) தோழி பால் கூறுகிறாள்.

உடன்போக்கில் தலைவியைத் தலைவனோடு சேர்த்து அனுப்பும் தோழி கையடை கொடுப்பாள். "நாட! என் தோழி யாகிய தலைவியை நீ நெஞ்சினால் விரும்பி முயங்கி இன்புறாய் ஆனாலும், என்னிடம் கொண்ட அன்பிலாவது அவளுக்குத் தலையளி செய்வாயாக. நீயே களைகண் ஆவது அன்றி வேறு பிறிது உடையளல்லள் அவள். முன் இருந்து நண்பர் கொடுத்தால் நஞ்சும் உண்பர் நனி நாகரிகரன்றோ" என்று தோழி (355) கூறுகிறாள்.

உடன்போக்கு பற்றிய செய்திகள் பாலைத்திணையில் வரும்.

இவ்வாறு உடன்போகா வழிச் செவிலிக்குத் தோழி அறத்தொடு நிலையால் களவை வெளிப்படுத்தி நிற்பாள். "தாயே! நின்மகள் இளையள் அல்லள் என்று கருதி வீட்டிலே காவல் செய்தாய் ஆயினும் இவள் பசந்தனள் என்பது உணராய். பலநாள் துன்பமனத்தொடு தெய்வத்தை வழிபட்டு வருந்தாதே. பரண்மேல் நின்று தினைப்புனம் காப்பின் இழந்த நலனை இவள் பெறுவாள்" (351) என்று களவு வெளிப்படுத்தி நிற்றலால் வரைவு நிகழ்தல் உண்டு.

மிகத்துன்புறும் தலைவி தோழியை நோக்கி "அன்னையின் ஆவலைக் கடந்து வீட்டு வாயிற்படியைக் கடந்து மன்றம் போகி பகற்பொழுதில் பலரும் காண வாய்விட்டு அவன் ஊரைக் கேட்டுச் செல்லலாமா? தோழி! அந்த மலைநாடனை 'நீ சான்றோய் அல்லை' என்று ஒரு சொல் வைது வரற்கு' என்று சொல்லுகிற (368) அருமையான பாடலையும் இங்கே பார்க்கிறோம்.

வரைவு நிகழ்ச்சியைக் கோவூர் கிழார் பாடல் சித்திரிக்கிறது. "நம் காதலர் இரவில் வருதலாகிய துன்பத்தினின்று நாம் பிழைக்க வேண்டி வரையப் புதியராய் வரும் வருகையும், நின் வதுவைக்காக நீ நாணியொடுங்கும் ஒடுக்கமும் கண்டால் நம் சுற்றத்தார் திருமணத்திற்கு உடன்படுவர் போலும். உடன்படின் அவர் நம் காதலரொடு மகிழ்ந்து பேசுவரோ" என்று தோழி தலைவியை நோக்கி மகிழ்ந்து (393) பேசுகிறாள்.

இவ்வாறு மணம் நிகழ்ந்த வழி மணமனை மகிழ்ச்சியை (294) ஒரு பாடல் சொல்கிறது. தலைவியின் புத்தழகு கண்டு மணமனைச் சென்ற தோழி வியந்து "தலைவனது மார்பு பிரிந்து நோயும் இப்போது வரைந்து இன்பமும் தந்தது; வானம் தீயும் காற்றும் பயந்ததுபோல். இது பொய்ம்மையன்று" என மகிழ்ந்து கூறுவது காண்கிறோம்.

இவ்வாறு குறிஞ்சித் திணைக்குரிய ஒழுகலாற்றின் பல்வேறு பொருள்களும் நற்றிணையில் தமக்கே உரிய பாணியில் புலவர் பெருமக்களால் அழகுற அமைக்கப் பெற்றுள்ளன.

பாலை : "போக்கு எல்லாம் பாலை" என்று சொல்வர். தலைவன் பிரிந்து செய்யும் திறம் கூறுவன பாலைத்திணையாகும். பிரிந்து செல்கின்றான் திறங் கூறுவனவெல்லாம் பாலையாகவும் பிரிந்து மீள்கின்றான் திறம் கூறுவனவெல்லாம் முல்லையாகவும் கொள்ளப் பெறும். "கொண்டு தலைக்கழியினும்" என்னும்

தொல்காப்பிய உடன்போக்கும் பாலை என்று சுட்டும் ஆதலின் இப் பாலைத் திணைப் பாடல்கள் அப் பொருள் குறித்தும் அமையும் என்க.

தலைவன் பொருள்வயிற் பிரிய முற்படும்போது அவன் செலவுக் குறிப்பு அறிந்து வேறுபடுகிறாள் தலைவி. தலைவன் பிரியவில்லை என்று கூறித் தேற்றுகிறான். "பொன், மணி போன்ற நின் மேனியும் கூந்தலும், மலர், மூங்கில் போன்ற நின் கண்ணும் தோளும் காணும் தோறும் மனம் மகிழ்ந்து நானும் பொருள் கொண்டு வந்து அறம் செய்து அறத்தில் நிலை பெற்றவர் போல ஆனேன். அதன் மேலும் நம் சிறுவனும் புதிய விளையாட்டு களைக் கற்றுக் கொண்டுள்ளான். வேற்றிடத்தில் எனக்கு வேலை யும் இல்லை; உன் மீட்டுள்ள காதல் கடலினும் பெரிது அதனால் யான் எதற்காகப் பிரியப் போகிறேன்" (166) என்று தலைவன் கூறுவதைப் பார்க்கிறோம்.

பிரிந்து செல்லும் தலைவனைத் தலைவியை உடன்கொண்டு செல்க என்கிறாள் தோழி. 'குவளை நீர் சூழ் மாமலர் அன்ன கண் அழ கலையொழிந்த பிணைபோலக் கலங்கி, மாறி, அன்பின்றி அகன்றால் கார்காலத்து மாலை நேரம் வரும்போது இவள் துன்பம் என்னால் தாங்கக் கூடியதன்று. காட்டு வழியில் இவனொடும் சென்றால் நல்லது" (37) என்கிறாள் தோழி.

தலைவி வருவேன் என்றபோது "நும்மொடு வருவேன் என்று தலைவியே நீ சொல்கிறாய். புகழுடைய தந்தையின் நீர் புகழுடைய மாளிகையில் தாயொடு தங்கியிருக்கும் மிக இளமை யுடையவள் நீ இத்தி மரத்தின் விழுது கோடைக்காற்றால் எழுந்து தூங்கும் பெண் யானையைத் தடவுகிற காட்டு வழியில் வருதல் நினக்குப் பொருந்துமா? முடியுமா? என்று கூறித் (162) தலைவன் மறுத்து விடுகிறான்.

பிரிவுக்கு உடன்படுதலையும் பார்க்கிறோம். அகப் பாடல்களில் இவ்வாறு வருவது மிகவும் குறைவு. "வேற்று நாட்டு அருவழியில் செல்வோம் யாம் என்று சொல்ல, நன்று என அதனை விரும்பி னாய் நீ நல்லது செய்தாய் வாழ்க. ஆண்கள் வினைமேற்கொண்ட உள்ளம் உடையவர்கள். பொருள் செய்யப் பிரிவர். அவ்வாறு அகலும்பொழுது மறுத்துக் கூறாமல் உடன்படுதலே அதற்குரிய பண்பாகும்" என்று (24) தோழியை நோக்கிக் கூறும் தலைவி யிடம் இல்லற முதிர்ச்சியைப் பார்க்கிறோம்.

இதுவே வேறொரு வகையில் வருகிறது. "போகிறேன்; போகிறேன்" என்று பலகாலும் சொல்லுவதால் மனம் வெறுத்துச்

செல்லுக என்று கூற யான் அஞ்சுகிறேன்--செல்லாதீர்கள் என்று சொன்னால் பலரும் சொல்லும் புன்சொற்களுக்கு அஞ்ச வேண்டியுள்ளது. எனவே செல்லுங்கள்; சென்று உங்கள் செயலை முடியுங்கள்; ஆனால் அங்கேயே நீட்டித்துத் தங்கி விடாதீர்கள். வடுக் கொள்ளும்படி முயங்கிப் பக்கத்தில் இருந்தாலும் நடுங்குபவள் இவள். இளமழைக்காலத்துக்குப் பிறகு வாடையும் வருமல்லவா? அதற்கு ஆற்றாள்" என்று தோழி கூறுவது (229) அருமையான பாடல் ஆகும். இதே தோழி "உலகம் படைத்த காலம் முதலாகப் பொருள் ஈட்டி வாழ விரும்புவோர் தம்மை அடைக்கலம் புகுந்தவரைப் பாதுகாக்க வேண்டும் என்னும் அறநெறியை மறந்துவிட்டார்கள் போலும். அவர் மிகச் சிறந்தவர்தான் என்று சொல்லி மறுக்கும் (337) அழகும் காணத் தகுவதே.

பிரிய எண்ணிய தலைவன் தானே பிரியத் தாமதித்தலும் நிகழ்கிறது. தலைவியையும், தன் நெஞ்சையும் தேற்றிப் பிரியவே இச் செலவினங்கள் நிகழ்கிறது என்று இலக்கணம் கூறும்.

நெஞ்சே! புணரில் பொருள் சேராது; பொருள்வயின் பிரியின் புணர்ச்சியில்லை பிரிந்து சென்றாலும் செல்லாவிட்டாலும் நல்லதற்குரியை. பொருளோ நீரில் ஓடுகின்ற மீன் வழி மறைவது போல அழியக்கூடியது. உலகத்தை மரக்காலாக வைத்து ஏழுமுறை அளக்கும் செல்வம் கிடைத்தாலும் நான் நின்னொடு வாரேன். தலைவியின் நோக்கத்தொடு செருக்கப்பட்டேன். பொருள் எப்படியாவது ஆகட்டும் வாழ்க. (16)

நெஞ்சே! அத்தத்தில் கடந்து சென்று செய்யப்படும் பொருளும் இன்பம் தரும் என்பாய் ஆயின் இளமையைக் காட்டிலும் சிறந்த செல்வம் வேறு எது? இளமை கழிந்த பிறகு செல்வத்தால் பயன் இல்லை. செல்வம் காமத்தைத் தருதல் இல்லை. அதனால் நிலையில்லாத பொருளை நீ ஆசைப்பட்டுச் செல். நான் வாரேன் (126)

இங்ஙனம் நெஞ்சை நோக்கிக் கூறுவதில் மற்றொரு புதுமை உறழ்ந்து கூறுவது ஆகும். நெஞ்சு உள்ளத்தைப் பிணித்துக் கொண்ட தலைவியிடம் துன்பம் தீர்க்கச் செல்வோம் என்று சொல்கிறது. ஆனால் அறிவோ பொருள்வயிற் பிரிந்து புறப்பட்டு செய்வினை முடியாமல் திரும்புதல் அறியாமையோடு இகழ்ச்சியும் தரும் என்று சொல்லி வீட்டுக்குப் போகாமல் தடுக்கிறது. நெஞ்சுக்கும் அறிவுக்கும் இடையில் என் உடம்பு அகப்பட்டு அழிகிறது. இரண்டு வலிய களிறுகள் மாறாகப் பற்றிய தேய்புரிப் பழங்கயிறுபோல என் உடம்பு இற்றொழியப் போகிறது என்று உவமை வைத்துப் பேசுகிறபோது நெஞ்சு இல்லத்துக்குச் செல்ல விழைகிறது என்று சொல்லப் பெறுதல் காண்க. (284)

கோடைத்திங்களிலும் நடுங்குவள், நாம் பிரிய வாடைப் பெரும்பனிக் கென்செய்வாள் என்று வருந்திப் பிரிய மறுக்கும் தலைவன் (312), இவளை விட்டுப் பிரிந்து முயற்சி உறுத்தப் பிரிவேன் என்று என் நெஞ்சு கருதும் ஆயின் இன்மையது இகழ்ச்சி மிகக் கொடிது என்று அவலிக்கும் தலைவன் (292) முன்னர்ப் பிரிந்த காலத்து இடைவழியில் மதியைப் பார்த்து, "என்னுடையது ஒரு மதி இம்மலைக்கப்பால் இல்லத்தில் உள்ளது. என்று நான் நினைத்தேன் அல்லவா என்றுரைத்துப் பிரிதல் அரிது என்று சொல்கிற தலைவன் (62) நற்றிணையில் பல்வேறு இடங்களில் வருகிறான்.

பிரிந்த தலைவன் பருவம் கண்டு வருந்துவதும் உண்டு. (187) மீண்டுவந்து தலைவியைக் கண்டபோது தலைவி வருந்துவதும் நிகழ்கிறது. (174)

தலைவன் பிரிய அப்பிரிவன்கண் தலைவி வருந்தல் பல்லாற்றானும் வரும் பாலைத்திணைப் பாடற்பகுதிகளாகும். "என்னைக் கொண்டு தன்கண் புதைத்தும் தன்கைக்கொண்டு என் நெற்றியைத் தடவியும், அன்னைபோல இனிய சொல்லியும் கள்வர்போலக் கொடியவன்'' என்று வருந்துவள் (28) "என் நெஞ்சு சென்றது அவன் செயலினைக்குகாத்துணையாகி அவனோடு சேர்ந்து வரலாம் என்னும் விருப்பத்தோடு தங்கி வருந்துமோ பிறகு அவன் அருளாமையில் மீண்டு இங்கே வந்து மேனி இளைத்த என்னைப்பார்த்து இவள் வேறொருத்தி என்று அறியாது வருத்தத்துடன் போய்விட்டதோ ''என்பதில் எத்தகைய சோகம் இழையோடுகிறது (56) "பிறர்க்கென முயலும் பேரருள் நெஞ்சமொடு பொருள்தேடக் காதலர் சென்றார்" என்று ஓரிடத்தில் தலைவி சொல்லது (183) பாராட்டுக் குரியதாக உள்ளது.

"குறித்த பருவத்து வாராதொழிந்த தலைவனை எண்ணித் தலைவி என்னைக் காதலன் பிரிந்து கைவிடுதலின் யான் அறிவு மயங்கி மாறுபட்டது. நோயை வைத்து உயிர் நீங்காது ஆகலின் நோயும் பேரும் மாலையும் வந்தது. இறந்து படுதற் கஞ்சினேன் இல்லை; இறந்தால் வேறொரு பிறப்பாய் விடுவேன். அப்போது காதலனை மறக்க நேரிடுமோ என்று அஞ்சுகின்றேன்'' என்று கூறும் தலைவியின் சோகவுரை பாலைத்திணைக்குரிய பிரிவும் சோகமும் பின்னிநிற்கும் சிகரமானபகுதி எனக் கருதலாம். (397)

பிரிவிடைத் தூதுவிடுகிறாள் தலைவி. வண்டே! நீ கொடியை உன் உடம்புதான் கருமை. அறிவும் கரிதோ? அறனில்லாதாய்!

யானுற்ற நிலையைத் தலைவற்கு உரைத்தாயும் இல்லை. கொடிய உன்னிடம் என் துன்பத்தைக் கூறியதனால் நான் இறப்பேனாக. நீ நெடிது வாழ்க என்று (277) கூறுவது அறிந்து இன்புறத்தக்கது.

பிரிவிடைத் தோழி தலைவியைத் தேற்றுகிறாள். "குன்றம் கடந்து சென்றார். என் உயிர்போக என்று அழுது வருந்தாதே யோசித்துப்பார். அவர் எதற்காகச் சென்றார்? தம்மை நட்புக் கொண்டவர்கள் செல்வம் அடைய வேண்டியதற்காகவும், அடைக்கலமாக அவரை அடைந்த நின் தோள்கள் நல்ல அணிகலன்களை அணியப் பெறுவதற்காகவும் அன்றோ அவர் சென்றது" (286) என்று அன்பாக அணைத்துத் தோழி தேற்றத் தேறுவாள் தலைவி.

பிரியப் புகும் தலைவன் உடன்போக்கில் சென்று பாலை நிலமாகிய அருவழியின் இயல்புகளை அறிந்த தலைவி அவற்றை எடுத்துக்கூறி அத்தகைய கொடிய அருவழியிற் சென்று பொருள் தேட முயலற்க எனத் தடுத்தல் (318) உண்டு.

உடன் போக்குப்பற்றிய பல அகப்பொருள் மரபுகளை நற்றிணையில் பாலைத்திணை விளக்குகிறது.

வைகறைக்காலத்தே உடன்போக்கு நிகழும் என்று அறிகிறோம். வைகு புலர்விடியலில் வெளிப்படாது தன் வடிவம் மறைத்து தன்கால் சிலம்பு ஒலிக்கும் எனப்பயந்து கழற்றிப் பந்தொடு வைத்துச் செல்லும் தலைவி உம்மொடு வருதலை விரும்பிப் புறப்படவும் இவைகளை (சிலம்பு - பந்து)க் காணும் தோறும் என் தோழியர் வருந்துவர்; இரங்கத்தக்கார் ஐயோ! என்று தன்னெல்லையால் தடுக்க இயலுலாது கண்கள் கலங்கப் பெற்றாள் தலைவி என்று தோழி தலைவனிடம் (12) கூறுவது அறியத் தகுவது. 'உடன் போக்கில் சேர்த்து அனுப்பும்போது தோழி "பூக்கேழ் ஊர! நின் தவறாத வாய்மைச் சொல்லை நம்பி உன்னொடு புறப்பட்ட இவளுக்கு நிமிர்ந்து உயர்ந்த அழகிய முலைகள் தாழ்ந்து தொங்கினும், நீலமணிபோலும் கரிய கூந்தல் நரையொடு முடிப்பினும் (இளமை மாறி முதுமை வந்தாலும்) கைவிடாது பாதுகாப்பாயாக (10) எனக் கையடை கொடுத்து அனுப்புகிறாள். உடனழைத்துச் செல்கிற தலைவன் "வாலெயிற்றோயே! வழிபடு தெய்வம் கண்ணாற் கண்டோர் துன்பம் நீங்குமாறுபோல நின் வருத்தம் தீர என்னோடு இணைந்தனை ஆகலின் நிழலில் நெடிது தங்கி, மணல் கண்ட வழிச் சிற்றிலிழைத்து விளையாடி வருந்தாது செல்க. நறிய சோலைகளையுடையது காடு. நாம் செல்லும் வழி குறிய பல ஊர்களையுடையது" (9) "மழைமாறிய காட்டில் ஆலமரத்து நீழலில்

இளைப்பாறி புன்னை மலர் உதிர்ந்த கடற்கரை மணலில் (கல்லுறச் சிவந்த மெல்லடி உயற்கு) மிதித்து வருந்தாமல் செல்க" (76) "இதோ உன்னுடைய தந்தையின் காடு கோங்க மலர்களை அணிந்து அழகாகத் தோன்றுகிறது காண்க" (202) "தோகைவிரித்த மயிலைப்போல் நின் கூந்தலைக் காற்று கோதிவிடச் செல்வாயாக. பொழுது போயிற்று. இதோ தோன்று கிறது எம்சிறு நல்லூரே" (264) என்றெல்லாம் சொல்லித் தேற்றி மென்மையாக அழைத்துச் செல்வன்.

ஒரோ வழித் தலைவியின் சுற்றத்தார் பின்தொடர்ந்து வருவர் அதனை எதிர்பார்த்த தலைவன் தலைவியை நோக்கி, "மாயோளே! பொறித்தொழில் புனைந்த பதுமைபோல அசைந்து உன் தந்தை வீட்டைவிட்டு வந்தனையானால் மழைக்காலத்துக் காட்டில் பரந்த சிவந்த இந்திரகோபப் பூச்சிகளைக் கண்டும் கொண்டும் நீ சிறிது விளையாடுக. நான் வேங்கையைச் சுற்றிய மணல் மேட்டில் மறைந்து போர் வந்தால் பொருபவர்களை ஓட்டுவேன். உன் உறவினர்கள் வந்தால் அவர்கள் கண்ணிற் படாது மறைவேன்." என்று தலைவி மகிழச் (362) சொல் கிறான்.

உடன் போக்கில் கண்டார் "இக்கொடுஞ் சுரத்தில் இம்மெல்லியலாளைக் கொண்டு செல்லும் இல் இளைஞன் உள்ளம் பெரிய மலைமேல் பளீரென வீசும் இடியினும் கொடிது" என்று (2) பரிந்து கூறுதல் உண்டு.

மகட்போக்கிய செவிலித்தாய் கூற்றாக வரும் பாடல்கள் நற்றிணையில் 12 உள்ளன. அவை அனைத்தும் நயம் மிக்கவை. தலைவியின் (தன் மகளது) மென்மைத் தன்மைக்கு இரங்குவாள் தாய். "வீட்டில் இருக்கும்போது இளமுலை நோகும் என்று நினைந்து நான் இறுகத் தழுவிய கையை நெகிழ்ந்த அளவிற்கே பொருது கண்கலுழ்ப் பெருமூச்சு விடும் மென்மையுடையாள், வேனில் நிழல் பெறாது, ஈன்ற பெண்புலியின் பசிபோக்க வழிப் போவாரைக் கொல்லப் புலிபார்த்துத் தங்கும் கல்வழியில் எங்ஙனம் செல்ல வல்லள் (29) என்று ஏங்குகிறாள். "பூமாலை சிக்குண்டாலும், கைவளை கழன்றாலும், அல்குலில் அணிந்த பொற்காசு முறைபிறழ்ந்தாலும் இவற்றைத் திருத்தத் தெரியாமல் அழகு போயிற்று என்று அழும் என் மகள் கண்கள் விரும்பிய காதலனோடு சென்றாலும் இவரது ஒளி மழுங்கிப் பொருந் தினவோ" (66) என்று அழுகிற தாயின் அவலம் படமாகிறது. "திருமணக் காலத்துச் செய்யப்படும் சிலம்புகழற்றும் விழாவழகு பிறர்காணச் சென்ற (நான் காண மாட்டாமல்) என் மகள் அடி,

காட்டு வழியில் வருந்துமோ" (279) என அவலிக்கின்ற தாய் அவள் திருமணத்தைக் காணும்பேறு தனக்குக் கிட்டவில்லையே என்ற ஏக்கத்தைப் புலப்படுத்துகிறாள்.

முன்னாள் நடந்த நிகழ்ச்சியை ஒப்பிட்டுப் பார்க்கும் தாயரும் உளர் "என் மகள் பாலூட்டவும் உண்ணாது உளம் மெலர்ந்திரங்கு கின்றாள்: இன்று ஒருவன்பின் அரநெறியில் சென்றனள் பிரித்தவாறு; என்னால் ஆற்றுதற் கரிது" (179) "அவள் பிரிந்து செல்ல அவள் ஆடிய பந்தும், வயலைக் கொடியும், நொச்சியும் இம்மனையில் காண்வரத் தோன்றி அவள் நினைவு வரச்செய்து என்னை வருத்துகின்றன. இலையில்லாத கிளையில் புறா இருந்து கூவும் குரல் கேட்டுப்பயத்தால் அவள் அமர்த்து நோக்க அந்நோக்கம் அவள் காதலனைக் காட்டகத்து வருத்துமோ என்று வருந்துகின்றேன் என்றதாய் (305) உடன் கொண்டு சென்ற ஆடவனுக்காகவும் வருந்துவது காண்கிறோம்.

துயர் தாங்காத தாய் என் மகள் தவறிலள் அவள் காதல் வியப்பே முன்னமே அயலார் கூறும் பழிமொழியை அறிந்தும் அறியாதேன்போல இருந்த நானே தவறுடையேன் என்று வருந்துகிறாள் (143) இன்னொரு தாய்" என்மகளை நயப்புரையால் வயப்படுத்திக் கொண்டு சென்ற வன்கண் காளையைப் பெற்ற தாய் தலைவியின் தோழியரைக் காணும்போதெல்லாம் யாம் நடுக்க முறுகல்போல நடுக்குற்றுத் துன்புறுக என்று சம்பந்திக்குச் சாபம் இடுகிறாள் (293) என்னே! அவலம்.

செல்வி கண்டாரை நோக்கிக் கூறலும் (198) கண்டோர் தாயை நோக்கிக் கூறுதலும் (324) படித்து இன்புறத் தக்கன. இவ்வாறு பாலைத் திணைக்குரிய உரிப்பொருட் செய்திகள் நற்றிணையில் பேசப் பெறுவது காண்கிறோம்.

முல்லை: பிரிந்து மீள்கின்றான் திறம் கூறுவன முல்லை என்கின்ற முறையில் பிரிந்து வரும் தலைவனைப் பற்றியும், இல்லிருந்து நல்லறம் செய்யும் தலைவியின் நிலைபற்றியும் இத் திணைப் பாடல்கள் எடுத்துக் கூறும்.

குறித்த பருவம் கண்டு ஆற்றியிருக்கும் தலைவி பேசுவன முல்லைத்திணையே. ஏ மேகமே! அவர் நிலையைக் கூறக்கேள் என்று எனக்குச் சொல்வதுபோல ஈங்கு வருதல் சால்புடைத் தன்று; தலைவரது நெஞ்சைக் கனியச் செய்யவல்லனவல்ல நின் இடிக்குரல் இனிய வல்ல" (238) என்கிறாள். கதிரவன் மறைய, இரலை பிணை தழுவ, முல்லை மலர, தோன்றி விளக்கெடுப்ப, ஆன்மணி குழலோடிசைப்ப மெல்லவரும் மாலை பிரிந்து

பொருள் தேடுவார் நாட்டும் இப்படியே தோன்றுமானால் வினைவலித்து அங்கே தங்கலாற்றாதவராய் வருவர்; இது அவ்வாறு அங்கே தோன்றவில்லை போலும்'' என்கிறாள் (69)

குறித்த பருவம் கண்டு ஆற்றாளாய்ச் சிறிது வருந்துதலும் முல்லையாகும். பருவம் வாராமுன்னர் வருந்தினால் பாலை யாம் - (97, 389, 364) அவ்வாறு குறித்த பருவம் வந்துழியும் தலைவியைத் தேற்றும் தோழி, "கார்ப்பருவம் இப்போது தான் தொடங்குகின்றது. அவர்மிகவும் சேய் நாட்டில் இருந்தார் ஆயினும் இன்னே வருவர்'' (115) என்று கூறித் தேற்றலும், "அவர் கூறிய கார்ப்பருவம் இதுவோ என்கிறாய் மடந்தை, பருவகாலம் மறந்து கடல் நீருண்ட மேகம் சூல்தாங்காது கொட்டிய மழையைக் கார்ப்பருவம் என்று அறிவில்லாமல் கருதி பிடவும், கொன்றையும் கோடலும் மலர்ந்தன'' (99) என்றுகூறலும், "முல்லை அரும்பும் பொழுது வருவேன்'' என்று சொல்லிச் சென்ற தலைவர் வரும்முன் மேகம் முல்லை அரும்பும் படி மழையைப் பெய்து இடித்தது. இது மடலது'' என்று மேகத் தின் மேல் வைத்துக்கூறலும் (316) நயமான தேற்றல் ஆகும். இன்னும் ஒருபடிமேல் சென்று "ஏ மேகமே! கார்ப்பருவத்தில் வருவேன் என்றார் தலைவர். அதற்குள்ளாக நீ இவள்பால் அன்பின்மையால் இடையில் பெய்யத் தொடங்கினாய். நின் பொய்யை மெய்யாகக் கருதும் மடத்தனம் உடைய மயில்போல நானும் மயங்கி விடுவேனோ'' என்று (248) சமத்காரமாகக் கூறும் தோழி கூற்று பலமுறை படித்து இன்புறத்தக்கது. தலைவன் குறித்த பருவம் வந்தும் வரவில்லையே என்று வாயில்கள் துவன்ற பொழுது "அவன் தேரைக் குதிரைகள் கொணர்ந்தன; அதுகண்ட இறைவி துன்பம் நீங்கி விருந்தயர் விருப்பினள் என்று தோழி (361) மகிழ்ந்து கூறுவதும் காண் கிறோம்.

வினைமுடித்து மீளும் தலைவன இப்பொழுது நாம் வருவதனை நம்முடைய மாளிகையின் சுவரின் கண்ணுள்ள பல்லி பலபடியாக ஒலித்து அறிவுறுத்துமோ தலைவிக்கு ஏனக்கருதிக் கூறுவதைக் (169) காண்கிறோம்.

வினைமுற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகனுக்குச் சொல்வது என்கின்ற கூறுபாட்டில் 11 பாடல்கள் வருகின்றன. "அரிவை விருந்தயர் விருப்பொடு வருந்தினளாய் சமைத்து முடித்து முறுவல் குறிப்பைக்காண்போம் பூண்க தில் பாக நின் தேரே'' என்று கூறும் தலைவன் (81), ஏதோ பார்பாக! காட்டுக்கோழி காட்டு நிலத்து ஈரமணலைக் கிளறி தன் புழுவாகிய இரையைக் கவர்ந்து

அன்னனக் கொன்று தன் பெடைக்கு ஊட்ட வேண்டி அப் பெடையை நோக்கி எடுப்பாகப் பார்க்கின்ற நிலை என்னைத் தூண்டுகிறது. நீ தேரை விரைந்து செலுத்து (21) என்கிறான். வருந்தி விருந்தை வரவேற்க விருப்புற்ற என் காதலி, புதல்வன் தூங்குமிடத்திலே நெருங்கி நோக்கி "எந்தாய் வருக" என்னும் அவ்வினிய மொழியைக் கேட்க நான் ஆசைபடுகிறேன். நின் தொழிற் சிறப்பமைந்த தேர் செல்வதாக என்று (221) கூறுகிறான். "கார் தொடங்கிவிட்டது வல்விரைந்து செல்க நின் தேர் என்று பாகனைத் தூண்டுவதையும் (242) காண்கிறோம். முல்லை மலரைப் பார்ப்பன மகளிர் சூடாநிற்ப, மாலைக் காலத்தே யான் இன்மையால் புல்லென்ற வறுமனை நோக்கி என் காதலி வருந்து வாள் தேரை விரைந்து செலுத்துக (321) என்று வரைவு படுத்துகிற அழகையும் முல்லைத் திணைப்பாடல் தெரிவிக்கும்.

பாகனிடம் தலைவன் "மழை பொழிந்தது, தவளைகள் ஒலித்தன; அதனால் நம் தேர் மணி ஒலியைத் தலைவி கேளாள். நீங்கள் சென்று அவள் நிலை அறிதிர் என்று அனுப்பப் பெற்ற ஏவல் இளையர் விரைந்து வீட்டுக்கு புகுந்து அறிவிக்க, அலங்கரிக்காத தன் கூந்தலைக்கழுவி அழகு செய்து சில பூக்களை அணிந்த முடியினளாய் என்னை வந்து அணைத்துக் கொண்ட அம்மகிழ்ச்சி நிலை மறத்தற்கரிது என்று தன் மகிழ்ச்சியைப் (42) புலப்படுத்தும் பாடலும் உள்ளது.

தேரோட்டும் பாகனுக்குத் தன் காதலி மனை வன்புலக் காட்டு நாட்டதுவே (59) என்றும், புறவினதுவே (142) என்றும் கூறுதலும் காண்கிறோம்.

தலைவன் தேர்ப்பாகனுக்குச் சொல்வதுபோல தேர்ப்பாகன் தலைவனுக்குச் சொல்வதாக ஒரு பாடல் நற்றிணையில் அருமையாக உள்ளது. அகப்பொருள் இலக்கியங்களில் இத்தகைய கூற்று அதிகம் பயின்று வருவது இல்லை எனலாம். வினை முடித்து மீண்டு வருவதால் காதலியை நினைத்துக் கவன்ற தலைமகனைத் தேர்ப்பாகன் நோக்கி, "விருந்தயரும் மனைவியின் மெல்லிய பணைத்தோளில் துயிலுதல்ல விரும்பிய தலைவனே! வருந்தாதே! நின் கண்ணி வாழ்க. நின் காதலியின் ஊர் புறவில் இருக்கின்றது. விரையச் சென்று காணும்படி இன்னே தேரைச் செலுத்து கின்றேன்'' என்று கூறுவதாக வரும் இப் பாடல் இலக்கிய வரிசையில் ஒரு புதுமையாகும்.

வினைமுற்றி வந்து இல்லத்திடத்துத் தன் காதலியோடு பன்னியிடத்தான் ஆகின்றான தலைவன். கார்ப்பருவத்திலே பெய்த மழையைநோக்கி "மேகமே! தலைவியை முயங்கி

அவளது நலனை இனிதாக நுகர்ந்து யான் தங்கியுள்ள இந் நல்ல ஊரின் கண்ணே இரவில் மழை பொழிந்த உதவியை உடையாய்! நீ உலகத்துக்கு ஆதாரமாக யாவரும் தொழுமாறு குன்றின் கொடுமுடிகளிலே பொருந்தி உலவுவாயாக'' என்று வாழ்த்துகிறான் (139) இயல்பாக மலைச் சிகரத்துச்சியில் உலாவும் மேகத்தைத் தலைவன் வாழ்த்தில் உலாவுவதாகச் சொல்லியது மிகவும் அழகாகப் பொருந்திய கற்பனை வளமன்றோ.

இங்ஙனம் முல்லைத் திணைப் பாடல்கள் பல்வேறு அகப் பொருள் மரபு வழாமல் நற்றிணையில் அழகு செய்து நிற்கின்றன.

நெய்தல் : கடலும் கடல் சார்ந்த இடமும் முதற்பொருளாகிய நிலமாக, எற்பாடு பொழுதாக, அதற்குரிய கருப்பொருள்கள் வரப் பெரிதழிந்து இரங்கலாகிய உரிப்பொருள்கொண்டு வருவது நெய்தலாகும். நற்றிணையில் நெய்தல் திணைப் பாடல்கள் அனைத்திலும் கடல், கானல், பரதவர், புன்னை முதலிய மரங்கள் இவையெல்லாம் நிரம்பிக் காணப்படுகின்றன. இரங்கலும் இரங்கல் நிமித்தமுமாகிய ஒழுக்கம் இப் பாடற் பகுதிகளிற் புனைந்துரைக்குமாறு காண்போம். எப் பகுதியினும் ஆற்ற வொண்ணாது பெரிதிரங்கலே நெய்தலாகும் ஆதலின் மற்ற திணைக்குரிய பொருள்களின் மேற் சென்று நெய்தல் ஒழுக்கம் வரும் என்க.

''சேர்ப்ப! நெடுந்தேர் பாகன் இயக்க நின் மனைக்குப் பிரிந்து செல்வையானால் நீ வருவதாகிய சிலநாளில் இவள் வாழ மாட்டாள் என்பதை நன்கு அறிந்து செல்க'' (19) என்னும் தலைவியின் உயிர் செல ஒழியும் இரக்கம் காட்டித் தலைவனை வரையத் தூண்டுகிறது.

பொருள்வயின் பிரியும் தலைவனை ''கொண்க! உப்பு விற்பார் அத் தொழில் முடிந்து குழுவுடன் சென்றவழி ஊர் இன்னாமை அடைவதுபோல, நீ பிரிதலால் இன்னாமை தோன்றும்; அவ்வின்னாமை தோன்றவே ஊதைக் காற்றோடு மாலையும் தோன்றும்; பிரியின் இவள் உயிர் வாழாள். அதனை நினையாமல் பிரியும் நீ மடவை'' (183) என்று தோழி கூறுவதும் காண்க.

காமம் மிக்க கழிபடர் கிளவியாகத் தலைவி கூறுவன பல வகையில் வருகின்றன. ''கருங்கால் வெண் குருகு'' என் சொல் கேள்! மாலை புலம்பின்று அது நீ அறியின் அன்பு உடையையாய் நும் துறை கிழவோனுக்கு என் குறை நன்கு உணர உரைப்பாய்'' (54) என வேண்டுவாள் தலைவி.

"மாமரத்து வௌவால் தூங்கும் பொழுதில் நெல்லியம் புளிச் சுவைக் கனவு கண்டாற்போல, யானும் அவர் நாட்டுப் பரதவர் மகிழ்ச்சியும், பெருந்தண் கானலும் நினைந்தபொழுது கனவு காண அதுவும் ஒழிந்து போயிற்று" என்று தோழியிடம் (87) கனவு மருட்சி கூறலும் உண்டு.

"காம நோயால் கலங்கி வருந்தும்பொழுது அன்போடு அருகிருந்து நயவுரை கூறித் தணித்தல் ஆண்மகனுக்கு இயையும்; யான் என் பெண்மை தடுத்தலான் நுண்மையாகத் தாங்கி நிற்கிறேன். தன்னிடத்து ஆர்வம் உடையவராகித் தன் மார்பால் வருத்தமுற்றவரை அறிந்து பரிகரியாது நிற்கும் அவன் என்ன மகன் தோழி! என்று (94) வெறுத்துரைத்தலும் செய்கிறாள் தலைவி. "நினையும் தொறும் நினையும் தொறும் உருகி மெல்ல மெல்லப் பசந்து காட்டினாய்'' என்று தலைவியின் (96) மெலிவு புலப்படுத்தப்படுகின்றது. "அழகிழந்த நுதலும் நில்லாதவளையும். ஊரலர் தூற்றும் அலரும் நாணம் மேலிட்டு நாம் சொல்லா தொழிந்தோம். ஆனாலும் தலைவனைக் கண்டபொழுது நம்முடைய கண்ணீரே நாம் மறைக்கவும் கைமிக்கு உரைத்தன, (263) என்பதில் பெண்மையும், துயரமும் பின்னிடும் காட்சியைக் காணலாம். "நிலவு ஒளி வீசிக் கடல்போல் பரந்தது; ஊர் ஆரவாரமாய் விழா அயர்கின்றது; காடு பூச் சோலைகளில் துணையொடு கூடிய வண்டுகளிற் பாடல் பரவுகிறது; யானே அணி இழந்த அவலமொடு கங்குலும் உறங்கேன்; உலகிற்கு மாறுபாடாக நான் இருத்தலால் என்னோடு உலகம் போர் செய்து என்னை அழிக்குமோ? என் நெஞ்சம் உலகத்தோடு போர் செய்ய எழுமோ'' என்று சொல்கிறபோது (348) சோகத்தின் உச்சியைத் தொடுவது காணலாம்.

தலைவ! அளிய பெரிய கேண்மையுடைய நும்போல் சால்பு கொண்ட செம்மையோடும் தம்மை அடைந்தாரைப் பாதுகாப்பேம் என்று சூள் செய்து தெளிவில் நெஞ்சுடன் வாடும்படி கைவிடின் வாழ்தல் எவ்வாறு? சத்தியமே கெடுக என்று சீறுகிற தோழியைக் காணுங்கள் (345)

"முன்பு அன்னைக்கு அஞ்சுதலின், போவாய் என்று கூறினும நம்மைவிட்டு நீங்கான் தலைவன்; இப்பொழுது ஆயம் அறிந் தாலும் என்ன ஏதம் வருமோ என்று நடுங்குகின்றான். நம்பால் அவன் வைத்த நட்பு இனி ஒழியும் என்று யான் அஞ்சுகிறேன் என்று தோழி தலைவிமாட்டுக் (72) கவன்றுரைக்கிறாள்.

"கொண்கன் துறந்தனன் என யாரிடத்தில் நொந்து உரைப்பேன்'' என்ற ஏக்கறவை (211)யும் பார்க்கிறோம். "பிரிந்தவரை நினைத்து வருந்தலால் உயிர் போவது ஆயினும் தலைவன் நாணும்படி அலர் எழுந்து அவனுக்குப் பழியாகும் ஆதலின் எப்பாடுபட்டாயினும் நம் துயரை வெளித் தோன்றாது காத்தல் வேண்டும் என்று அதற்கே வருந்துகிறேன்'' என்ற கூற்றில் (382) பெண்மையின் சிறப்பைத் தெரியலாம்.

"நண்பனே! நீ யாரை? எமக்கு யாரையும் அல்லை; நீ அயலான் நம் இடை உறவு அவ்வளவே கொண்க! எம்மை விரும்பி ஒழுகுபவன் அல்லை; ஆதலின் நின்னால் இழந்த எம் நலனைக் கொடுத்துவிட்டு அப்பாற் செல்லுக'' என்ற தலைவி பேச்சில் (395) பேதலிப்பைக் காண்கிறோம்.

அலர் அச்சம் கருதியும் (63, 223, 227, 272) காப்பு மிகுதி கருதியும் (319) தனிமைத் துயர் மிகுதி பற்றியும் (38, 124, 218, 219, 237) தலைவி புலம்பிப் பேசுகின்ற பாடற்பகுதிகள் நெஞ்சை உருக்கும் தன்மைய.

தோழி "தலைவன் தேரிடைப் பூட்டப் பெற்ற குதிரைகள் பெருமுது செல்வர் வீட்டுச் சிறுவர்களின் சிறுபறையின் கண்ணில் எழுதிய குருவிபோலக் கோல்கொண்டு அடிக்கப்படுவதாக; தலைவி துயர் அடையும்படி தலைவனைக்கொண்டு சென்று விட்டன'' (58) என்று கூறுவது நயமாக உள்ளது.

நெய்தல் திணைப் பாடல்களில் தலைவன் புலம்பலும், துயர மிகுதியும் வருவது நற்றிணையின் தனித் தன்மையாகும். பிற அக நூல்களில் விரிவாகக் காண்டல் அரிது. பாகனைப் பார்த்துக் கூறுவான்! "பாக! முன்பு பிரியும்பொழுது நான் தலைவிபால் சென்று பிரிவு உரைப்ப, அவள் மறுமொழி கூறலாற்றாளாய் ஞாழலினது பூங்கொத்தும் தளிரும் சேர்த்துப் பொடி செய்து உதிர்த்த கையளாய் அறிவு மயக்கம் அடைந்த நிலையை நீ அறிதியோ'' என்று கேட்கும்பொழுது தலைவியின் துயர் நிலையைத் தலைவன் அறிந்துள்ளான் என்பதை (106) அறிகிறோம்.

அடுத்து, "தேரில் ஏறியும், காலால் நடந்து சென்றும், அடும்பு மலரைப் பறித்தும், தாழை மலர் கொய்ய இவளைத் தூக்கியும், நெய்தற் பூவைக் கழியில் கொய்தும், இவ்வாறு செய்து புணராமலே புணர்ந்ததுபோல உணர்ந்த நெஞ்சத்தோடு நாள்தோறும் நாம் வருந்தவும், புண் உற்றவர்க்குப் பேய் காத்ததுபோல நம் காதலியாகிய பரதவர் மகள் என் நினைக்கின்றாளோ'' என்று தன் (349) ஏக்கத்தைப் புலப்படுத்துதல் நிகழ்கிறது.

கலித்தொகையில் ஒரு பெண் பித்தேறித் தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறத்தால், ஞாயிறு, திங்கள் முதலியவற்றை நோக்கிப் புலம்பல் வருகிறது. அவ்வாறே நற்றிணையில் ஓர் தலைவி திங்களை நோக்கிக் கூறுவது நினையத் தகுவது. "திங்களே நீ! சால்பும் செம்மையும் உடையை. நின்னை மறைத்து உறையும் உலகம் இல்லை. உனக்கு எல்லா இடங்களும் தெரியும். எனக்குத் தோன்றாது மறைந்த காதலர் உள்வழி காட்டாய். ஆதலின் அழகிழந்த என் தோள்போல் நீயும் அறிந்த அளவு சான்று கூறாமல் பொய்த்தலின் வாடிச் சிறுகிச் சிறுகிக் குறைந்து கெடுக என்று சாபமிடுகிறாள் (196) மதியின் இயற்கைத் தேய்வை இவளுக்கு கரி பொய்த்தலின் ஆகியது என்ற கற்பனை உணரத் தக்கது.

தலைவியின் பார்வையைக் காணா முன்பு எல்லாம் இனிது; இன்று எல்லாம் இன்னாது (101) என்று தலைவன் கூறலும், தலைவன் நம்மொடு கூடி நகைப்பதற்கு முன்னே நற்குடிமக்கள் வாழும் சீறூர் மிகவும் இனிதாயிருந்தது. இப்போது அவர் அருகில் இன்மையால் இன்னாது (135) என்று தலைவி கூறலும் தலைவன் தலைவி இருவர்க்கும் துயரமனம் ஒன்றாயிருத்தலைக் காட்டி அழகுசெய்கின்றன.

துயரம் அன்றித் துயர் காண்பதும் நெய்தலாகிறது. "தேர் மணி ஒலிக்கிறது, இளையரும் ஒலிப்பர், நம் அல்குல் நலம் பாராட்டச் சேர்ப்பன் வருகின்றான்; புன்னை மரத்தின் பெரிய அடிப்பகுதியில் மறைந்து கொள்வோம் - வா. சோலையில் நம்மைப் புணரும் குறியிடத்தே வந்து காணாமல் அவன் படுகின்ற அல்லல் அரும்படர் வேடிக்கையைச் சிறிது காண்போம்'' என்பதால் (307) இப்படியும் நெய்தல் உரிப்பொருள் வருதல் உண்டு என அறிகிறோம்.

"பிரியேன் என்று தெய்வம் நோக்கிச் சூள் செய்த தலைவன் பிரிந்து வாராதிருந்த வழி, சூள் பிழைத்தவன் தெய்வம் வருத்துமோ என்று கருதி சிறிதளவும் தலைவரை வருத்தாதே என்று. கடவுளுக்குப் பலி தூவிப் பரவி வருவோம் வா'' என்று (358) அழைக்கும் பாடலில் தலைவி, தோழியர்க்குத் தலைவன் மாட்டுக் கொண்ட பொறுப்பும் கடமையும் புலனாகின்றன.

துயரத்திலும்கூட வாழ்க்கை முதிர்ச்சியும், அன்பின் செறிவும், இல்வாழ்க்கைத் திறமும், கற்பும், குடிப்பிறப்பும், நாணமும் இறந்து விளங்குதலை நற்றிணை நெய்தற் பாடல்களிற் பரக்கக் காண்கிறோம்.

மருதம் : ஊடலும், ஊடல் நிமித்தமும் மருதத் தொழுகலாறு என்பர். "இல்லை தவறவர்க்காயினும் ஊடுதல் வல்லது அவர் அளிக்குமாறு" என்று குறள் கூறுமாறுபோல இவ்வூடல் இன்பத்திற்கு உரம் தருவதாதலின் அகப்பொருள் இலக்கியத்தில் பெரிதும் வேண்டப்படுவதாகும்.

ஒரு தலைவி சொல்கிறாள் : "குன்ற நாடன் மிகப் பெரிது இனியவன் ஆயினும் யான் வருத்தமேற் கொண்டேன் போல ஊடா நிற்பேன். ஏன்? பிரிந்து சேண் அகன்றதனால் உண்டாகிய வருத்தமெல்லாம் நீங்கும்படி வந்து கூடி, யான் கொண்ட புலவியைப் போக்க என்னைப் பணிந்துரைத்தல் முதலாகிய வண்மையைச் செய்தல் கண்டு மகிழவே" (217) என்கிறாள். (இது முதற் பொருள், கருப்பொருளில் குறிஞ்சியாயினும் உரிப்பொருளால் மருதம் என்க.)

இங்ஙனம் ஊடல் சிறந்து விளங்கத் தலைவன் பரத்தமை பயன்படுமாறு இத்திணைக்கண் பெரிது விளக்கப்படும்.

தலைவன் பெண் வேடம்புனைந்து துணங்கையாடச் செல்கின்றான். அவனை அங்கே கையும் களவுமாகப் பிடிக்கத் தலைவி செல்கிறாள். அப்போது தலைவன் வேறொரு வழியாக வந்து தலைவியை முட்டினான். இவ்வாறு செய்யும் நின்னைக் கேட்பார் உண்டோ? இல்லையோ? அறிந்துகொள் என்று தலைவி கூறினாள். அவனோ நின் பசலை அழகிது என்று கூறினான். அதுகேட்ட தலைவி அவன் பெருந்தகை அறியாது "எலுவ! நீ நாணம் கெட்டவன்" என்று வைதுரைத்தாள் என்று சுவைபடத் தோழி இந் நிகழ்ச்சியைச் (50) சார்த்துவகையால் கூறுகிறாள்.

பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகன் யாரையும் அறியேன் என்பான். அதுபோது தலைவி அவனை நோக்கி "ஐய! நின் மார்பில் தூங்கி இப்பொழுது அவ்வின்பம் பெறாது, கூந்தல் அசைய, ஆடை தொங்க, வளை ஒலிப்ப வீசித் தெருவில் தன் கண்களைத் திருப்பித் திருப்பிப் பார்த்துச் சென்ற குறுமகளைக் கண்டேன். அவள் நின்னோடு நீடு வாழ்க" (20) என்கிறாள். "மகிழ்ந! நீ எழுந்து வருகின்ற தெருவிலே நின் வரவு எதிர்பார்த்து பரத்தையர் பலரும் வெப்பமாய் வடிகின்ற கண்ணீருடனே ஓடி வந்து நின் கைகளைப் பற்றி அவரவர் கருத்துமுற்ற இழுத்தலாலே, நீ அவரிடைப்பட்டு மிக வருந்துகின்ற நிலைமையை யான் நேரில் கண்டேன். கண்டும் நின்னை யாது செய்யற்பாலேன்" என்று தன்னிலை புலப்படுத்தும் (30) தலைவியரும் உளர்.

'ஊரனே! நீ இப்பொழுது விருப்பமுற்றாய்போல முயங்குதி; முன்பு என் கோதை வாடுமாறு பரத்தைமாட்டுப் பிரிந்த பண்பினன் நீ; நான் அதனை மறக்கவில்லை; என்னைத் தொடாதே'' என்கிறாள் ஒரு தலைவி. (260)

''என் அழகு தொலைந்தாலும் தொலைக. என்னருகில் நீ நெருங்க விடேன். விட்டால் என் வாய் நின்னை விலக்கும்; என் கைகள் உன்னை அணைக்கத் தொடங்கும். நீயோ பரத்தை கொங்கையால் சாடப்பட்ட சந்தனத்தை உடையாய்! அவள் முயங்க வாடிய மாலையை உடையாய். ஆதலால் நின்னைத் தீண்டுதல் கலங்கழித்தெறிந்த தாழியைத் தீண்டல் போலாம். என் மனையின்கண்ணே வாராதே; நின்னை அணைத்து முயங்கும் அப் பரத்தை நெடிது வாழ்க'' என்று (350) சினவிக் கூறும் செம்மையும் காண்க.

தலைவன் பிறமகளிர் கோலமும், அழகும் கண்டு அவர்பால் சார்ந்து விடாதபடி தலைவியரோ, காமக் கிழத்தியரோ முற்பட்டுத் தாம் அணி செய்து சென்று தலைவனைப் பற்றலும் (390) பாதுகாத்துக் கோடலும் மருதத்தில் நிகழ்வனவே.

பரத்தையிற் பிரிந்து வரும் தலைவனுக்குத் தோழி அறிவு கொளுத்தல் உண்டு ''ஊர! நெடிய மொழிதலும், குதிரை, யானை, தேர் முதலிய ஊர்தலும் செல்வமெனப்படுவதன்று; சான்றோர்க்குச் செல்வம் என்பது தம்மை அடைக்கலமாகக் கைப்பற்றியவர்க்கு உண்டாகிய துன்பத்தை அஞ்சி அத்துன்பு போக்கி அவரைக் கைவிடாது ஆளுகின்ற இனிய இயல்புடனே, வன்கண்மை இன்றி இன்தன்மை உடையராதலே; அது நின்பால் இல்லை. யாது கூறி என்ன பயன்'' (210) என்பாள் தோழி. ''ஊர! நின் பரத்தையரை எம் வீட்டிலே கொண்டு வந்து மதிப்பாக வைத்து நீ தழுவினாலும் குலமகளிர்போல அவர் புன்மனத்தில் சத்தியம் இராது. தங்கள் கரவொழுக்கத்தை அவர்கள் விடார். அன்றி அவரும் மகளிரொடு சிறுவர்ப் பயந்து நன்மையமைந்த கற்போடு எம் பக்கத்து அமர்தல் அதனினும் அரிதாகும். அது நீ அறியாய் போலும்'' என்பது சிறந்த அறிவுரையாகும் (330) இதனுள் ''மகளிரொடு சிறுவர்ப் பயந்து'' என்பது நற்றிணைச் சிறப்பாகும். பெண் குழந்தைகள் பெறுதல் பற்றி வேறு சங்க நூல்களில் சொல்லப் பெற்றுள்ளதா இதுபோல என்பதை ஆய்ந்துணரின் அச் சிறப்பு புலப்படும் என்க.

விறலியைப் பார்த்தும், பாணனைப் பார்த்தும் பரத்தைமை இகழ்ந்து பேசிய பாடல்கள் (310. 380, 170) மருதத் திணைக்கு மேலும் அழகு செய்கின்றன.

பரத்தையிற் பிரிந்த தலைவன் புதல்வன் பிறந்தமை கேட்டுத் தலைவியின் இல்லத்துக்கு வருதலைச் "சிறந்தோன் பெயரன் பிறந்தமாறே, நள்ளென் கங்குற் கள்வன்போல ஊரன் வந்தனன்" என்று ஒரு பாடல் (40) சொல்கிறது.

பரத்தை தலைவியின் ஊடல் தணிப்பது உண்டு. "தலைவனது தொடர்பை நீ விரும்பினாய். ஆனால் என் சொல்லைக் கொள்வாயாக. நீயோ பேரழகும் தகுதிப்பாடும் உடையாய் ஆதலின் "அவள் அவனோடு கட்டில் வரை எய்தினாள்" என்று என் போலப் புலவிக் கூறுதல் தக்கதன்று; அன்றியும் அவனோ நாள்தோறும் பொய்கையிற் புதுமலர் ஊதும் வண்டு என மொழிவர் மகன் என்று கூறுவார். ஆதலின் அது அவர் இயல்பு என்று கைவிடுக என்கிறாள். (290)

பரத்தை தலைவனை மிரட்டுகிற பாடல்கள் உண்டு. "தலைவன் என் கூந்தல் பற்றி என் வளையைப் பிடித்த பூசலால் சினவிய முகத்துடன் அவனை நோக்கி 'நான் சினவாது சென்று நின் மனைக்கு இதனை உரைப்பேன்' என்றவுடன் அவன் நடுங்கிய நிலை நினைக்கும்தோறும் நகைப்புத் தருகிறது" எனப் பாங்காயினார் கேட்பக் கூறுவதுதான் என்ன அழகாய் உள்ளது. (100)

"ஒருநாள் தழையணிந்து இளையோள் ஒருத்தி தெருவிடைச் சென்றாள். அது காரணமாக ஊர் கல்லென்றது. மகளிர் அனைவரும் தத்தம் கணவரைப் புறம் போகாமற் காவல் பலமாகச் செய்து காத்து நன்மையடைந்தார்கள்" என்னும் பாடல் மிக அழகான கற்பனை யூற்றாகும் (320)

"தலைவனோ பலரைப் புணர்தல் விரும்பி இல்வாரலன்; தலைவியோ அவன் நலத்தை நம்பி தன் வெறுப்பை விடமாட்டாள்; இந் நிலையில் இருவரதுபகையும் என் உயிர் போனால் தான் போகும் போலும்" என்று தோழி சொல்லும் போது தோழியின் அகத்துறைக் கடமை நமக்குப் (180) புலனாகிறது.

சுவைபயக்கும் மருதப்பாடல்கள் இரண்டு தலைவன் கூற்றாக வருகின்றன. "தெருவில் தேர் நடையழகும் சிறுவனைத் தூக்கியதால் அவன் வாய் சிதைத்த சந்தனத்தோடு, ஆசை செலுத்த, தலைவியை முயங்கக் குறுகினேன். அவன் பரத்தமை யால் காந்தம் சிதைந்ததாகக் கருதி அஞ்சிய பெண்மான்போல நீங்கி யார் நீ என்று ஒதுங்கி நின்றதை நினைத்துச் சிரிக்கலாம் வா" என்று பாணனை (250) அழைப்பது ஒன்று.

"நம்குடிக்கு உதவி முதுபெண்டாகி புதல்வன் பெற்றுத் தாய் எனப் புதுப்பெயர் பெற்று, தூங்குகிறாயோ என்று அவள் அழகிய வயிற்றில் குவளைப் பூவால் ஏற்றி நினைத்துத் தங்கிய என்னைப் பார்த்து, புன்சிரிப்புச் செய்து கண்புதைத்தாள். காதலி அக் காட்சியை நினைத்து சிரிக்கலாம் வா!" என்று பாணனைத் (370) தலைவன் அழைப்பது மற்றொன்று.

இவை எல்லாவற்றுக்கும் மேலாகப் பரத்தை தலைவனைப் புகழும் ஒரு பாடல் வருகிறது. "ஊர! நீயின்றி யான் பொருந்தியிருந்தால் இங்கே இன்னா நோக்கமொடு என்ன பிழைப்புண்டு. சோழர் உறந்தை அவையில் அறம் நின்றாற்போல நீ தான் சிறந்த நட்புடனே அளாவி என்னெஞ்சில் நின்று நீங்குந்தன்மை இல்லையாய் இருந்தாய்; அதனால் நீ உளனாயிருப்பின் யானும் உளனாவேன்" என்னும் (400) பரத்தைமொழி அவர்களுள்ளும் அன்பினாற்செறிந்தார் உளர் எனப் புலப்படுத்துகின்றது.

மருதத்திணைப்பாடல்கள் பலவும் 10, 20, 30 என்றாற்போல அடுக்கிய வரிசையில் நற்றிணையில் அமைந்துள்ளன, 216 ஆம் பாடல் ஒன்று நீங்கலாக ஏனைய மருதப்பாடல்கள் அனைத்தும் இவ்வகையினவே.

ஐந்திணைக்குரிய அகப்பொருள் ஒழுகல் ஆற்றினைப் பல்வேறு கற்பனை நயம்படப் புலவர் பெருமக்கள் இயற்றிய பாடல்கள் நற்றிணையிற் செறிந்து இத்தொகை நூலுக்கு வலிவும் பொலிவும் தந்து நிற்கின்றன எனல் மிகையாகாது.

## காலம்

பெரும் பொழுதாகிய கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்னும் ஆறுபொழுதுகளும் நற்றிணையில் புனைந்துரைக்கப்பட்டுள. கார்ப்பருவ வருணனை முல்லைத் திணைப்பாடல்களில் நிறைய வருகின்றது. (214, 316) கூதிர்ப் பருவம் குறிஞ்சித் திணைப்பாடல்களில் வருகின்றது. (244, 341) அக்காலத்திற்குறிய வாடையும் அங்கே வருதல் (89, 229, 364, 366) காணலாம். முன்பனிக்காலம் இரவு அரும்பும் காலம் எனவும், பின்பனி பின்தொடரும் என்பதை அறிவுறுத்துகிறது எனவும் பேசப்பெறுகிறது. பாலைப்பாடலில் வருகிறது (224) கூதிரை முன்பனியும், வேனிலைப் பின்பனியும் தொடரும் என்பது இலக்கணம். இம்முன்பனி அற்சிரம், அற்சிரக்காலை, எனவும் பேசப்பெறுகிறது. (86, 312, 5) இளவேனிலை அழகாக முதிராவேனில் என்று அழைப்பர் நற்றிணையாசிரியர் (337)

மாநனை கொழுதி மயில் குயில் ஆலும் இளவேனில் காதலர்க்கு இன்பம் தருவதொன்றன்றோ - வேனில் நின்ற வெம்பத வழிநாள் பாலைத்திணையை மிகவும் சிறப்பிக்கும் காலமாகும். (157) இதனை "யாற்று அறல் நுணங்கிய நாட்பத வேனில்" என்று இளவேட்டனார் பாடுவர்.

சிறுபொழுதுகள் ஆறு, ஐந்து என்று இருவகையாகும். மாலை, யாமம், வைகறை என்ற மூன்றும் நற்றிணையில் வருகின்றன. காலை, நண்பகல், பிற்பகல் சார்த்து வகையால் சொல்லப் பெறுவதாகக் கொள்ளலாம் - மாலையைப் பற்றி நிறைய விரிவாகச் சொல்லப்பெறுகிறது. (3, 37, 54, 69, 73, 78, 89, 117, 181, 369, 396, 397) மாலை அந்தி என்று (238) என்று இரவின் முற்பகுதியைச் சுட்டி வேறு பிரித்தும் சொல்லப் பெறுகிறது. யாமம் (303, 378, 132) குறிஞ்சித்திணைக்கு ஏற்புடைச் சிறு பொழுது. நள்ளென் யாமம் என்றும் சொல்லப்பெறும். ஊர்துஞ்சு யாமம் என்பதும் வருகிறது. நடுநாள் என்று (290) ஒருபாடல் இதனைச் சொல்கிறது. நாளின் நடுப்பகுதியாக யாமத்தைக் குறிப்பிடுவது' பண்டைய மரபு - வைகறைப் பொழுது மருதத் திணைக்கு ஏற்புடையதாகும் - "பெரும்புலர் விடியல்" (80) என்று வைகறையும் வைகறைப் பின்னர் விடியலும் வருகின்றன. பரத்தையிற் பிரிந்த தலைவன் மீண்டுவருங்காலம் அதுவாதலின். நற்றிணை மருதப்பாடல்களில் வைகறை விரிவாக இல்லை. குறிஞ்சிப்பாடல் (247) ஒன்றில் சார்த்து வகையால் வைகறை வருகிறது.

மலைநிலம், காடு, கழனி, கடல்நிலம், அருஞ்சுரமாகிய பாலை ஐவகை நிலமும் ஆங்காங்கே விரிவாகப் பேசப் பெற்றுள்ளன.

இனிக் கருப்பொருள்களும் அவ்வாறே அவ்வத்திணைப் பாடல்களில் நன்கு புனையப் பெற்றுள்ளனவாயினும் பல்வேறு வகையான மரம், செடி, கொடிகள், விலங்குகள், பறவைகள், உயிர் வருக்கங்கள் அனைத்தையும் நற்றிணையில் காண்கிறோம். இவை எல்லாம் இன்னதிணைப் பாடலில் தான் இது வரவேண்டும் என்னும் வரையறை உண்டு ஆயினும் மாறி மயங்கி வருதலும் உண்டு.

## மரங்கள்

மா, (கொக்கு) (87, 118, 243, 280, 381), முருக்கு (73), மூங்கில் (28), யா (198), வழை (சுரபுன்னை) (222), வெதிரம் (62), தில்லை (195), தோன்றி (59, 221), நெல்லி (87, 271),

புளி (374), புன்கு (9), மராஅம் (20, 148), இல்லம் மரம் (376), இலவம் (160), இற்றி (162), ஈந்து (2, 174) ஈங்கை (205), உடை (286), ஓமை (84, 107, 137, 198, 252, 279, 318), கடம்பு (34), ஞெமை (394), குருந்து (321), செயலை (அசோகு) (244, 376), ஞாழல் (31, 54, 74, 96, 106, 167, 191, 311), உகாய் (66), குரவு (266), குறிஞ்சி (268, 301 செடி எனலும் ஆம்), கொன்றை (221, 242, 246, 302) கோங்கம் (202), சந்தனம் (7, 55, 64, 261), தாழை (235, 299, 335, கண்டல் 54, 74, 123, 345, 363, கைதை 163, 349 இவை ஒன்றே), பலா (353), பாதிரி (337, 52, 118), பாலை (107), பிடவம் (1), புன்னை (31, 94, 167, 231, 278, 311), பெண்ணை (பனை? (372) வாழை (225, 251), விளா (24, 12) வேங்கை (151, 168, 217, 222, 257, 368, 384), வேம்பு (3, 103, 218, 279), அதவம் (95) ஆசினி (44 பலாவில் ஒருவகை), ஆல் (76), இரத்தி (இலந்தை மரம் 113), இடுப்பை (111, 279, 350), வேலம் (256, 302) என்ற 47 மரங்களின் குறிப்பு நற்றிணையில் கிடைக்கிறது.

## செடிகள் - கொடிகள்

ஆம்பல் (6, 100, 280, 230, 290, 300, 345), காந்தள் (294, 359, 399), காயா (242), குமிழ் (6, 274), செங்காந்தள் (176), தாமரை (310), தினை (104, 317, 376), நொச்சி (293), பகன்றை (86), முல்லை (61), அதிரல் (52, 124, 337), அடும்பு (145, 272, 338, 349), இண்டு (2), முண்டகம் (முள்ளிச் செடி (191, 207, 245, 311), வயலை (179, 305), வரகு (121), வள்ளி (269), வெள்ளாம்பல் (390), தமாலம் (292), தளவு (61, 242), நெய்தல் (23, 27. 60, 78, 96), பித்திகை (97), பீரம் (277, 326), மஞ்சள் (101), மரல் (92), எருக்கு (152), கரும்பு (366), கருவிளை (221, 262), கழுநீர் (260), கள்ளி (169, 314, 384), குருக்கத்தி (97), குல்லை (376), குவளை (6, 34, 105), கூதளம் (119, 349), சாய் (60), வேழம் (24) என்று 36 செடி கொடிகளைப் பற்றிய செய்திகளை அறியலாம்.

## விலங்குகள்

எய் (98), குதிரை (249, இவுளி 63), பன்றி (82 98), உழுவை (47, 104, 144, 154, 205), மந்தி (334, கடுவன் 22, 151), யானை (7, 18, 89, 105, 141, 151, 186, 194, 287. 296, 318, 395) அத்திரி (கோவேறு கழுதை 278), அரிமா (112), ஆ (395) ஆ மான் (57, 165), இரலை (256, மான் 64, 274)

முளவுமான் (85, 285), எருமை (60, 260, 271, 330) எலி (83), எண்கு (கரடி 125, 192, 325) செந்நாய் (43, 103) ஞமலி (285, நாய் 82, 212, 252, 276) நரி (164, 352) நீர்நாய் (108, 390), புருவை (ஆடு 321), புலி (29, 36, 39, 148, 158, 174, 274, 322, 332), முயல் (59, 252) வருடை (119, 359) என இருபத்தி மூன்று விலங்குகள் நற்றிணையில் கையாளப் பெற்றுள்ளன.

## பிராணிகள்

விலங்குகளையன்றிப் பல்வேறு வகையான பிராணிகளைப் பற்றிய செய்திகளும் இத்தொகை நூலுள் இடம் பெற்றுள்ளன. அலவன் (219, 11, 55, 106, 123 239, 363, 385), இறவு (111, 19, 67, 101, 211, 358), இறாஅல் (168, 185) அசுணம் (244), இப்பி (87), ஈயல் (59), உடும்பு (24, 59), ஓதி (92, 186), கடல்மீன் (388), காரஅம் (292), கிளிஞ்சில் (175), செளிறு (70), முதலை (325), சிலம்பி (12, 363), சிள்வீடு (252), சுறா (78, 303, 392), ஞெண்டு (267), தேரை (347), தவளை (42), பல்லி (98), பாம்பு (51, 75, 104, 238, 264), மின்மினி (44), முதலை (287), முயிறு (180), யாமை (280), மூதாய் (இந்திர கோபம் 362) என்று 26 பிராணிகளைப் பார்க்கலாம். இவற்றுள் ஊர்வன, பறப்பன, நீர்வாழ்வன, நடப்பன எனப்பலவகையான உயிர் வகைகள் உள்ளன.

## பறவைகள்

பறவைகள் கருப்பொருளாகவும், உவமமாகவும், திணைக் குறிப்பொருளில் பயன்படுவனவாகவும் இத்தொகைப் பாடலில் வந்துள்ளன. அன்றில் (124, 152, 218, 303, 335), அன்னம் (356), எகினம் (132), கணந்துள் (212), கிள்ளை (கிளி) (102, 147, 259, 317), குயில் (9, 97, 118, 157, 224, 243, 246), குரீஇ (குருவி 181), குருகு (4, 54, 91, 211), கூகை (83), குடிஞை (394), நாரை (178), புறா (71, 384), மயில் (264), 288, 357), தும்பி (வண்டு 17, 25), வாவல் (வெளவால் 279), எருவை (298), காக்கை (367), கடல்காக்கை (272), குளவி (119, 232, 346), கொக்கு (280, 326), சிரல் (மீன்கொத்தி 61) பருந்து (3), வாரணம் (காட்டுக்கோழி 297, 389) வெள்ளாங் குருகு (70) என அந்த இருபத்து நான்கு பறவையினங்களைப் பற்றிய செய்திகளைப் பரக்கக் காண்க.

## நகரங்கள்

பல்வேறுவகையான நகரங்கள், அம்பர் (141), ஆர்க்காடு (190, 227), ஆலங்கானம் (387), உறந்தை (400), ஊணூர் (300), காண்டவாயில் (38), குடந்தைவாயில் (379), குட்டுவன் குடவரை (105), கொன்கானம் (391), சாய்க்காடு (73), தொண்டி (8, 18, 195) பாரம் (265), பொறையாறு (131), இருப்பை (260), கொற்கை (23), மாந்தை (35, 395), முள்ளூர் (170, 291), என்று அப்பழந்தமிழகத்து நகரங்களை நற்றிணைப் பாடல்களில் காணும்போது நம் தமிழர் நகரமைப்பு இயலைத் தெரியலாம்.

இனி இமயமும் (356, 369), கங்கையும் (189, 363) கூட இதன் கண் வருகின்றன.

## பழந்தமிழர் வாழ்வியல்

நற்றிணை மூலம் அறியலாகும் பழந்தமிழர் வாழ்வியற் குறிப்புகளைத் தொகுத்துக் காணலாம். நாடு, நகர் அமைப்புகள் அவர்களிடத்தில் திறம்பட இருந்தன. தொழில் பற்றிய சாதிப் பிரிவினைகள் பரக்க உள்ளன. கிணையர் (108), இடையன் (142, 169), உமணர் (4, 138, 83, 254, 331), கம்மியர் (153), கானவன் (75, 282), குறவர் (5, 44, 64, 108, 209), கொல்லன் (13, 125, 133), சென்னியர் (பாணர் 189), பரதவர் (4, 38, 145), பாணன் (30, 127, 167, 200), பார்ப்பனர் (321), புலையன் (77, 347, 49) வடுகர் (212) என்று அந்த சாதிப் பிரிவுகள் வருகின்றன. இவற்றால் பல்வேறு வகையான தொழிற் சிறப்பும் தமிழகத்தில் பொலிந்திருந்தன எனலாம்.

அறுவை மெல்லணை (40), அறுவைத் தூமடி (70), மென் துகில் என்பன அவர்தம் நெசவுத் தொழில் மாட்சி தெரிவிப்பன. கலிங்கம் என்ற (10, 380), மெல்லிய ஆடையின் பெயர் வருகிறது கம்பலத்தையும் (24) காண்கிறோம். துகிலிகை (18), ஓவியம் (268) முதலியன ஓவியக்கலை மாட்சியைக் காட்டுகின்றன. எறிஉளி (388), தூண்டில் (199), கணிச்சி (240), வேல், வாள், இடுகு முதலிய கருவிகள் தொழிற்சிறப்பை நமக்கு எடுத்துக் காட்டும். கடவுளாகச் செய்யப் பெற்ற கொல்லிப்பாவை (185, 192, 201), பண்டைத்தமிழர் பொறியியல் நுட்பத்தைக் காட்டும்.

தானிய வகைகளுள் உப்பு (138, 331), செந்நெல், வெண்ணெல், உழுந்து (83), ஐயவி (370), நெய் (380), பால் (110), மிளகு (66), முதலியன வருகின்றன. கருனைச் செந்நெல் வெண்சோறு (367) கருனை என்பது பொரித்தகறி,

"வராஅல் பெருந்தடி மிளிர்வையொடு புகர்வை அரிசிப் பொம்மல் பெருஞ்சோறும்" (60), விடக்குடைப் பெருஞ்சோறும் (281) உணவு வகைகளாகக் குறிப்பிடப்படுவதால் சைவ, அசைவ உணவுகள் உண்ணும் பழக்கம் தெரிகிறது.

கச்சை (21), சிலம்பு (110), கிண்கிணி (250), குழை (286) தொடி (66, 197) என்கின்ற பல வகையான அணிகலன்கள் நற்றிணையில் வந்துள்ளன. மோசை என்னும் (188) பெயரில் பெண்கள் விரலில் அணியும் ஒருவகை அணி பேசப்படுகிறது. (இது மோதிரம் என்பதன் தமிழ்ப்பெயர் ஆகலாம்).

## இசை

பண்டைத் தமிழகம் இசைத் தமிழில் சிறந்து விளங்கியது. அதன் எதிரொலி நற்றிணைப் பாடல்களிலும் உள்ளன. இசைக் கருவிகள் பலவற்றை நற்றிணை நமக்குத் தருகிறது. குழல் (69), சீறியாழ் (30, 189, 380), படுமலை நின்ற நல்யாழ் (139) படுமலை என்பது பாலைப்பண் வகை), யாழ் (335), தொண்டகச் சிறுபறை (104), தண்ணுமை (130), முழவு (360), துடி (77), முரசு (93, 197). இத்தனை வாத்தியக் கருவிகள். தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி அத்தனையும் வருவதோடு கஞ்சக் கருவியாகிய தாளமும் (95) இதனுள் வந்துள்ளது. இவற்றோடு மிடற்றுக் கருவி சேர்ந்த வழி இசை நிரம்புமன்றோ. இசைத்தமிழுக்கு ஈடும் எடுப்புமற்ற இலக்கியம் நற்றிணையாகும்.

## கூத்து

நாடக நாட்டியத் தமிழையும் நற்றிணை விடவில்லை. குரவை (276) எழுவர் மகளிரேனும் ஒன்பதின்மரேனும் கைகோத்தாடும் முல்லை நிலக் கூத்தும், இருகை முடக்கிக் கால் மாற்றிக் கோண வைத்து ஒருவர் ஆடும் துணங்கை (50) என்னும் நாட்டிய நாடக வரிசையில் சேர்ந்தவையன்றோ.

இயலிசை நாடகம் என்னும் முத்தமிழ்ச் சுரங்கமாகிய அரும் பொருள் வரிசைகள் அனைத்தும் பொதிந்து தன்னேரில்லாச் சங்க இலக்கிய வரிசையில் தலைநிமிர்ந்து எட்டுத் தொகையில் முதலாவதாக வைத்தெண்ணப்படும் சீரும் சிறப்பும் பெற்று நிற்கிறது நற்றிணை.

## பழக்க வழக்கங்கள்

பண்டைத் தமிழகப் பழக்கவழக்கங்கள் பலவும் அறிந்து காணப்படும் நற்றிணையில். அவற்றுள் ஒருசில. ஆடைகளுக்கு புகை ஊட்டல் (280), இராக்காவலர்கள் மணி அடித்தல் (132), கட்டுக்குறி கேட்டல் (288), கப்பல் கவிழப் பலகையைப் பிடித்துத் தப்புதல் (30). கலங்கரை விளக்கம் (219) கழைக் கயிற்றில் ஏறி மகளிர் ஆடுதல் (95) காக்கைக்குப் பலி இடுதல் (343, 281) காலம் தவறி மகளிர் உண்ணுதல் (கணவன் வறுமை கருதி) (110), சமையல் முறை (41), திருமணத்திற் சிலம்பு கழித்தல் (279), சிறுவர் பறையில் குருவிமேல் அடித்தல் (58), செந்நிற ஆடையை மறவர் அணிதல் (33) தகாத செயல் நிகழ்ந்த இடத்துத் தலை தாழ்த்தல் (147), தாழியில் இட்டுப் பிணங்களை புதைத்தல் (271), தெய்வம் பலி பெறல் (251), பண்டமாற்று முறையில் பொருள் பெறல் (183), பல்லி சொல் அறிதல் (333), பானைகளில் வாசனைக்காக விளாம்பழம் இட்டு வைத்தல் (12), மகப்பெற்ற மகளிர் நீராடுதல், நெய்யாடுதல் (40, 370), மகளிர் சகுனம் பார்த்தல் (40), மகளிர் தைந்நீராடல் (80), மகளிர் மாலைக் காலத்தில் விளக்கு வைத்தல் (3), பெண் பேசிக் கொள்ளுதல் (வதுவை) (393), விருந்தோம்புதல் (41), வேலன் கழங்குக் குறிபார்த்தலும், வெறியாடுதலும் (268, 282, 322), இப்பழைய பழக்க வழக்கங்கள் நற்றிணையில் வருகின்றன. இவற்றுள் "சிலம்பு கழிநோன்பு" என்பது திருமணக் காலத்துப் பெண்கள் அதுகாறும் அணிந்திருந்த சிலம்பைக் கழற்றி விடுதலாகிய சடங்கு ஆகும். இது பற்றிய குறிப்பு அருமையாக நற்றிணை 279 ஆம் பாடலிலும், குறுந்தொகையிலுமே காணப் படுகின்றன. கிடைத்தற்கரிய இக் குறிப்பால் பண்டைத் தமிழர் வதுவைச் சடங்குமுறை ஒன்று தெளிவாகிறது.

## கடவுள்

நற்றிணைக் கடவுள் வாழ்த்து திருமாலைப் பற்றியது. நற்றிணைப் பாடல்களில் செங்கதிரோன் (283), மாயோன் (32), உலகு படைத்தோன் (240), உருகெழு தெய்வம் (398), நெடுவேள் (173, 288), முருகன், பூதம் (192), வாலியோன் (பலராமன் 32), எனத் தெய்வப் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன.

தெய்வங்களுள் உரைத்தார் தவறியவழி அவர்களுக்குத் தீங்கு செய்யும் ஆதலின் அது நீங்கக் கடவுளைப் பரவுதல் வழக்கம் என்பதும் அதனால் அத் தெய்வங்கள் சீற்றம் தணிந்து

நலம் செய்யும் என்பதும் பண்டைத் தமிழர் தம் தெய்வ வழிபாட்டு நம்பிக்கை என்பதை நற்றிணையும் உறுதிப் படுத்துகிறது (358)

## வள்ளல்கள்

அகப்பாடல்களில் பாடினோர் உளர், பாடப்படுவோர் என்று யாரும் இல்லை. ஆயினும் உவமை வகையிலும் கருப்பொருள் வகையிலும் பலரைப் புலவர் இப்பாடல்களில் பாராட்டுவது. உண்டு. அவர்களைப் பாராட்டும் வாய்ப்புக்காகவே இவர் அகப் பாடல்கள் எழுதினார் என்று கொள்ளவும் சில பாடல்கள் இடம் தருகின்றன.

நெடுமான் அஞ்சி 381), அண்டிரன் (237), அருமன் (367), அழகி (87, 190), அன்னி (180), ஆஅய் (167), உதியன் (113), ஓரி (6), காரி (320), கிள்ளி (141, 390), குட்டுவன் (14, 105), கொங்கர் (10), சேந்தன் (190), தழும்பன் (300), தித்தன் (58), நன்னன் (270), பழையன் (10), புல்லி (14), பெரியன் (131, 180), பொறையன் (8), மலையன் (77), மிஞிலி (265), முடியன் (390), மூவன் (18), வாணன் (340), விராஅன் (350), வேளிர் (280), இவர் தவிர செம்பியன், சோழன், வழுதி என்று சேர சோழ பாண்டியர்களாகிய முடியுடை மன்னர்களும் பொதுவாகப் பாராட்டப் பெற்றுள்ளனர். பண்டைத் தமிழக வரலாற்றை அறிதற்கு இக்குறிப்புக்கள் நமக்குப் பெரிதும் பயன்படுகின்றன. "ஒரு முலை அறுத்த திருமாவுண்ணி" என்னும் பெயர்க்குறிப்பும், அதுபற்றி வரலாற்றுக் குறிப்பும் இதனுள் வருகின்றன. இது சிலப்பதிகாரக் கண்ணகிக் கதையாகலாம் என்று எண்ண இடம் தருகிறது.

## உவமைகள்

உவமைகள் இலக்கியத்திற்கு மேலும் அழகூட்டுவன. உவமை இல்லாத இலக்கியம் வண்ணம் பூசாத சுவர் போல ஆகும். பொருளை விளக்க வந்த உவமை பின்னர்ப் பொருளைப் புனைய வும் பயன்பட்டது. தொல்காப்பிய உவமவியல் பின்னர் உவமை அணியாயினதறிக. சிறந்த உவமைகளைச் சங்கப் புலவர்கள் நற்றிணையில் தேர்ந்து சொல்லியுள்ளமை அறிந்து இன்புறற் குரியது.

நல்லோர் நட்புக்கு "தாமரைத் தண்தாது ஊதிச் சாந்தில் தொடுத்த தீந்தேன்" (1), தலைவன் தலைவியைப் பெற்றமை "அழிவிலர் முயலும் ஆர்வமாக்கள், வழிபடு தெய்வம் கண்

கண்டது போல்'' (9) உள்ளதாம். காட்டுக்கோழியின் உடம்பில் "அம் நுண் பல்பொறி" உருக்குறு நறுநெய்யில் பால் விதிர்த்தது போலும் என்பது எவ்வளவு (21) பொருத்தம், வெயில் "துகில் விரித்தது'' (43) போல உள்ளதாம். கோங்கின் குடைப்பூவுக்கு (48) விடிகாலை விண்மீன் உவமையாகிறது. வெண்ணெய் வெப்பத்தில் கிடந்ததுபோக உவர் (84) நிலம் உள்ளது. வில்எறி பஞ்சு போல அலை கடல் அலை நுரை (300) உள்ளது. கொக்கின் கூரல்போல ஆம்பல் (100). இறவு என்னும் மீனின் சொரசொரப்பான மேல்தோல் "முற்றா மஞ்சள் பசும்புறம் கடுப்ப'' (101) உள்ளது. நொச்சி இலைக்கு மயில் அடி உவமை (115) மைஇருள் வரை கிழித்தது போல் உள்ளது என்பது (154) எவ்வளவு அருமை. முயப்பிடிச் செவிபோலப் பாசடை (230) உள்ளது. கொறுக்கரு தட்டையின் வெள்ளைப் பூ விரிவன வேந்து வீசு கவரிபோல உள்ளது (241) என்பது மிக அழகாகப் பொருந்துகிறது தலைவியை உடன் அழைக்கிற தலைவன் "முருகு புணர்ந்து இயன்ற வள்ளி'' போல (82)ப் போகலாம் என்கிறான். புராணக்கதையும் உவமை ஆகிவிடுகிறது... இன்பமும் துன்பமும் "தீயும் வளியும் விசும்பு பயந்ததுபோல'' (294), இதுவே ''அசுணம் சொல்பவர் கையே போல'' உள்ளது என்று (304) ஒரு பாடல் சொல்கிறது. தலைவி வருவது "கணி வாழ் பாவை நடைகற்றது'' போல உள்ளதாம். இது (184) தற்குறிப்பேற்றம். வாழைக் குவிமுகை காந்தள் வள்ளிதழ் தோயும் காட்சி. ''மகளிர் இலங்கு வளைத்தொடும் மெல்விரல் மோசை (மோதிரம்) போல உள்ளது (188) என்கிறார் ஒரு புலவர். மற்றோரிடத்தில் காத்தள் குலை வாயில் தோயும் கொழு மடல் வாழைக்கு "புதல்வன் ஈன்ற மடந்தை முலைவாய் உறுக்கும் கை'' உவமை (355) ஆகிறது. அறிவு நெஞ்சும் பிரிவிடை செல்லவும் தடுக்கவும் முரண்படற்கு இடைஉயிப் அழிவுக்கு உவமை இரண்டு யானைகள் இழுக்கும் தேய்புரிய பழங்கயிறு ஆகும். இதனால் இவ்வாசிரியர் பெயர் பெற்றமை அறிக. தலைவியின் இனிமைக்கு ஒரு மனோபாவத்தை உவமையாக்கிப் பார்க்கிறது நற்றிணை. "உன்னிய வினைமுடித்தால் எப்படி இருக்குமோ'' அதுபோல (3) இனியவளாகும் - நினைத்த காரியம் நினைத்தபடி முடிவதினும் பெருமகிழ்ச்சி உண்டோ? இதனினும் சிறந்த உவமை வேறு உண்டோ. இப்படி பலப்பல உவமைகளைச் சொல்லித் தருகிறது இத்தொகை நூல்.

## அரிய நீதிகள்

முடிவாக வாழும் இலக்கியம் என்பது ஒன்று கவிதை, கற்பனை, சொல்வளம் முதலிய அனைத்திற்கும் மேலாக என்றும் சமுதாயத்துக்குப் பயன்படும் அரிய கருத்துக்களை அள்ளித் தருவதாக இருத்தல் வேண்டும். நற்றிணை தரும் நல்ல கருத்துக் கள் சிலவற்றைக் காண்போம்.

"புரைய மன்ற புரையோர் கேண்மை" (1)

"உயிரினும் சிறந்த நாண்" (17)

"பெரியோர், நாடி நட்பின் அல்லது
நட்டு நாடார் தம் ஒட்டியோர் திறத்து" (32)

"இரந்தோர் மாற்றல் இல்லின் வாழ்க்கை" (84)

"பழகிய பகையும் பிரிவு இன்னாதே" (108)

"தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்
தாம் அறிந்துணர்க என்ப" (116)

"இளமையிற் சிறந்த வளமை இல்லை
இளமை கழிந்த பின்றை வளமை
காமம் தருதலும் இன்று" (126)

"இனிதின் இனிது தலைப்படும்" (134)

"தமதுசெய் வாழ்க்கையின் இனியது உண்டோ" (130)

"அரும்பிணி உறுநர்க்கு வேட்டது கொடாது
மருந்து ஆய்ந்து கொடுத்த அறவோன்" (136)

"நயனும் நண்பும் நாணு நன்குடைமையும்
பயனும் பண்பும் பாடறிந் தொழுகலும்" (160)

"நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்
செல்வம் அன்று தன் செய்வினைப் பயனே
சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்
புன்கண் அஞ்சும் பண்பின், மென்கண் செல்வம்" (210)

"இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்
அசையுநர் இருந்தோர்க்கு அரும்புணர்வு இன்ம்" (214)

"துனிதீர் எவ்வமொடு துன்னார் ஆயினும்
இனிதே காணுநர்க் காண்புழி வாழ்தல்" (216)

"இசைபட வாழ்பவர் செல்வம் போலக்
காண் தொறும் பொலியும்" (217)

"மரம் சா மருந்தும் கொள்ளார்; மாந்தர்
உரம்சாச் செய்யார் உயர்தவம்" (226)

"முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்" (355)

"செய்வினை முடியாது எவ்வம் செய்தல்
எய்யாமை யோடு இழிவு தலைத்தரும்" (284)

"பிறர்க் கென முயலும் பேரருள் நெஞ்சம்" (186)

இன்ன பல அரிய கருத்துக்களைத் தன்கண் தாங்கி நின்று விழுமியது பயந்த நூலாகச் சிறந்து விளங்குகிறது நற்றிணை.

இந் நற்றிணையைப் பதிப்பிக்கும் முயற்சியில் ஈடுபட்டோர் பலர்.

இவ்வரிசையில் ஐயரவர்கள் பதிப்பு முறையில் நூல்நிலைய வெளியீடாக இது வருவது பெரும் மகிழ்விற்குரியது. இதற்கு மூல காரணமாக விளங்கிய தமிழ்த் தாத்தாவின் பேரர் திரு. க. சுப்பிரமணிய அய்யர் அவர்களுக்கு என் நன்றியும் அன்பும் வணக்கமும் என்றும் உரியன.

இவ்வாராய்ச்சி முன்னுரையை எழுத ஊக்கமும் ஆக்கமும் தந்து என் உள் நின்று உணர்த்தும் என் குருநாதராகிய வாகீச கலாநிதி. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் திருவடிகளை மனம் மொழி மெய்களால் வணங்குகின்றேன்.

இதிற் சுருக்கம் கருதிப் பல செய்திகளை விடவேண்டியவனாக ஆகிய நிலைமையில் யான் செய்துள்ள குற்றங்களை என்பாற் சார்த்தியமைக. குணங்களைக் குணக் கடலாகிய என் குருநாதர் அவர்கள் திருவருளால் விளைந்தன என்று கொள்ள வேண்டுகிறேன்.

என்னையும் ஓர் தமிழ்ப் புலவனாக ஆக்கி அதில் இன்பம் கண்ட தவச் செம்மல் மயிலம் - பொம்மபுரம் - ஆதீனம் பதினெட்டாம் பட்டம் ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் திருவடிகளை மனமொழி மெய்களாற் சிந்திக்கின்றேன். மயிலம் முருகப் பெருமான் திருவருள் மேலும் மேலும் சிறப்பதாக என்று வாழ்த்தி வணங்கி இதனை நிறைவு செய்கின்றேன்.

வாழ்க வையகம்

# பாடலாசிரியர்கள் வரலாறு

## 1. அகம்பன்மால் ஆதனார் (81)

ஆதன் என்னும் இயற்பெயருடைய இப்பாவலர் 'ஆர்' என்றும் சிறப்பு விகுதி பெற்று ஆதனார் என்று அழைக்கப் பட்டனர். அகம்பல் என்பது ஓரூர் போலும். அகமலை என்னும் ஊரின் திரிபே இஃது என்பர். மால் - தலைவன். அகம்பல் எனும் ஊருக்குத் தலைவன் என்று பொருள் கோடல் தகும். முல்லைத் திணையைப் பற்றிச் சிறப்பித்துப் பாடியுள்ளார். அதில் வரும் தலைவன் வினைவல் பாங்கானாகக் காணப்படுகின்றான். இவர் பாடலில் உவகைச் சுவையைக் காணலாம்.

## 2. அஞ்சில் அஞ்சியார் (90)

அஞ்சி என்பது இவர்தம் இயற்பெயராகும். அஞ்சில் என்னும் ஊரைச் சார்ந்தவராதலின் அஞ்சில் அஞ்சியார் எனப்பட்டார். ஊர் பற்றிப் பெற்ற பெயர். ஊடற்சுவையமைய இவர் பாடிய பாடல் படித்து இன்புறத்தக்கது.

## 3. அஞ்சில் ஆந்தையார் (233)

இவர் ஆதன் என்பவனின் தந்தையார் ஆவார். அஞ்சில் என்னும் ஊரினர். இஃது அஞ்சி எனவும் வழங்கப்படும். குறுந் தொகை 294ஆம் செய்யுளும் இவருடையதே. வேறு தொகை நூல்களில் இவர் பாடல்கள் காணப்படவில்லை. குறிஞ்சி, நெய்தல் திணைகளைப் பாடுதலில் வல்லவர். "நாருடை நெஞ்சத்து ஈரம் பொத்தி, ஆன்றோர் சென்னெறி வாழ்தலே" சான்றோனாதற்குரிய வழி என்று கூறுவது இவர்தம் உளப்பாங்கினை உணர்த்தும்.

## 4. அம்மள்ளனார் (82)

இவர் பாடிய குறிஞ்சித்திணைப் பாடலில் தலைவனை முருகனாகவும் தலைவியை வள்ளியாகவும் உவமித்துள்ளார். முருகனுடன் வள்ளியம்மை உடன் சென்றதுபோல தன்னுடன்

வருமாறு தலைவியை விளித்துள்ள நயம் சுவைக்கத்தக்கது. மள்ளர் என்னும் பெயரினர் பலரினின்றும் வேறுபடுத்தறிதற்கு இவர் அம்மள்ளனார் என அழைக்கப்பட்டனர்.

## 5. அம்மூவனார்
## (4, 35, 76, 138, 275, 307, 315, 327, 395, 397)

மூவன் என்னும் இயற்பெயரினர். அடைமொழி பெற்று அம்மூவனார் எனப்பட்டனர். ஆர் சிறப்பு விகுதி. நெய்தல் நிலத்தைச் சிறப்பித்துப் பாடுதலில் வல்லவர். பாடல்களில் உள்ளுறை அமைத்துப் பாடும் தன்மையர். பாண்டி நாட்டு முத்து விளையும் கொற்கை நகரும், நடுநாட்டில் விளங்கும் திருக்கோவலூரும், பெண்ணையாறும், சோழநாட்டுக் கோயில் வெண்ணியும் இவர் பாடல்களில் இடம் பெற்றுள்ளன. பலநாடுகளிலும் இவர் புலமை பாவியிருந்தமை இதனாற் புலப்படும். இவர் பாடியனவாக நற்றிணையிற் பத்துப் பாடல்களும், குறுந்தொகையில் பதினொன்றும், ஐங்குறு நூற்றில் நெய்தற் பாட்டு நூறும், அகநானூற்றில் ஆறுமாக 127 பாடல்கள் கிடைத்துள்ளன. தலைவனாற் கைவிடப்பட்ட தலைவிமேல் ஊரார் அலர் தூற்றுவதற்கு உப்பு வாணிகர் வழியில் ஒழித்துப் போகட்ட பழைய வண்டிப் பாரின்கண் வெண்குருகு முட்டையீனுதலை உவமை காட்டியுள்ளார். (138) தலைவியை அடைய, தலைவன் அடிமைத் தொழில் செய்யவும் முற்படுவான் என்று அகத்தில் இவர் கூறியிருப்பது அறியத்தக்கது (அகம் 280) இவர் மேற்குக் கடற்கரையைப் பற்றிப் பல பாடல்களில் பாடியுள்ளமையால் சேரநாட்டினர் போலும்.

## 6. அம்மெய்யன் நாகனார் (252)

நாகன் என்னும் இயற்பெயருடைய இப்பாவலர் அப்பெயருடையார் பலராதலின் அவரின் இவர் வேறு என்பது தெரிய 'அம்மெய்யன்' என்னும் பெயரொடு சேர்த்து அழைக்கப்பட்டார். அழகிய தோற்றமுடையார் போலும். அன்றி அம்மெய்யன் என்பது தந்தை பெயராகவும் இருக்கக்கூடும். இவர் பாலைத் திணையைப் புனைந்து பாடியுள்ளார். தலைவர் செய்யும் வினைக்குத் தலைவியர் உறுதுணையாய் நிற்றல் வேண்டும் என்பதும், வீட்டின்கண் சோம்பியிருப்போர்க்குப் பொருளின் பயன் துய்த்தற்கு அரிது என்பதும், இவர் பாடலிற் புலனாகின்றது. முயல் வேட்டு எழுந்த முடுகு விசைக்கத நாயின் நாவினைத் தலைவியின் சீறடிக்கு இவர் உவமைகாட்டியிருக்கும் நயம் உணரத்தக்கது.

## 7. அல்லங்கீரனார் (245)

கீரன் என்பார் பலராதலின் வேறுபடுத்துணர அல்லங் கீரனார் எனப்பட்டார். அல்லம் என்பது ஓரூர் போலும். சேர நாட்டில் அல்லனம் என ஓர் ஊருளது. இவர் நெய்தலை வருணித்துப் பாடியுள்ளார். பெருங்கடற் சேர்ப்பன் தொழுது நின்றது நகையாகின்றது' என்று தோழி முகம்புகு கிளவியாகப் பாடிய பாடலில் நகைச்சுவை பேதைமை பொருளாகப் பொருந்தி நிற்றலைக் காணலாம்.

## 8. அறிவுடை நம்பி (15)

இவர் அரச புலவர். பாண்டியர். பிசிராந்தையாராற் பாடப் பட்டவர். புறம் 184. நெய்தல் குறிஞ்சி இவ் விருதிணைகளையும் புனைந்து பாடியுள்ளார். மக்களையில்லோர்க்கு எப்பயனும் இல்லை என்று புதல்வர்ப்பேற்றின் சிறப்பைப்புறம் 188 ஆம் செய்யுளில் அழகுறக் கூறியுள்ளார். நற்றிணை, அகநானூறு, குறுந்தொகை, புறநானூறு ஆகிய நூல்களில் இவர் பாடியனவாக ஒவ்வொரு செய்யுள் காணப்படுகிறது.

## 9. ஆலங்குடி வங்கனார் (230, 330, 400)

ஆலங்குடி என்னும் பெயரில் பல ஊர்கள் உள்ளன. இவர் எதனைச் சார்ந்தவரோ அறியேம். வங்கன் என்பது இவர் இயற் பெயர் போலும். ஊர் அடைமொழி பெற்று 'ஆர்' என்னும் சிறப்பு விகுதி இறுதியிற் பெற்று ஆலங்குடி வங்கனார் எனப்பட்டனர். 'மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து, அறங்கெட அறியாது' என்று உறையூரைச் சிறப்பித்தலின் இவர் சோழ நாட்டினராய் இருத்தல் கூடும். இவர் பாடியுள்ள நற்றிணைச் செய்யுட்கள் மூன்றும் மருதத் திணையைப் பற்றியனவே. இவர் பாடிய 330ஆம் பாடலில் அமைந்துள்ள உள்ளுறை உள்ளுந்தொறும் இனிப்பதாம். பரத்தையர் பண்பும் தலைவியர் நிலையும் இவர் பாடல்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இவர் பாடிய பாடல்கள். நற்றிணை யில் 3, குறுந்தொகையில் 2, அகம் 1. புறம் 1; திருவள்ளுவ மாலை 1, ஆக எட்டாகும்.

## 10. ஆலம்பேரி சாத்தனார். (152, 255, 303, 338)

இவர் ஆலம்பேரி என்னும் ஊரினர். மதுரையைச் சார்ந்த அ நலவிய நாட்டினர். சாத்தன் என்னும் இயற்பெயரினர். பாலை, நெய்தல் இவ் விருதிணைகளிலும் நன்கு பழகியவர். அழுகை

யென்னும் மெய்ப்பாடுற இவர் பாடிய 'மடலே காமம் தந்தது' என்னும் நற்றிணைப் பாடல் (152) சுவைக்கத்தக்கது. கடலன் என்பானது 'விளங்கில்' என்னும் ஊரையும் பிட்டனின் குதிரை மலையையும், நெடுஞ்செழியன் போர் வென்ற திருத்தலையாலங் கானத்தையும், நெவியன் என்னும் வள்ளலையும் அகத்தில் இவர் பாடியிருத்தலால் அவர்களால் இவர் சிறப்பிக்கப்பட்டவர் என்று தெரிய வருகிறது. (அகம் 81, 143, 175). இவர் பாடியனவாக நற்றிணையில் நான்கு பாடல்களும், அகத்தில் நான்குமாக எட்டுப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## 11. ஆவூர்க் காவிதிகள் சாதேவனார் (264)

சங்கப் பாவலர்கள் பெரும்பாலோர் தத்தம் பாடல்களில் தத்தம் ஊரைச் சிறப்பித்துக் கூறும் வழக்கத்தைக் கொண்டிருந் தனர். இப் புலவர் சேர நாட்டு ஆமூர் என்பதனைத் தம் பாடலிற் சிறப்பித்துள்ளார். எனவே இவர் பெயர் ஆமூர்க் கௌதமன் சாதேவனார் என்றிருத்தலே தகும். இவர் சேரநாட்டு ஆமூரிலுள்ள கௌதம கோத்திரத்துப் பிறந்த ஸஹதேவன் என்னும் அந்தணராவர் குறும்பொறை என்னும் மலையின் கீழுள்ள பாலை நிலத்தில் ஆமூர் உள்ளது. இவர் பாடல் களில் பாலைத் திணை பற்றிய செய்திகளைக் காணலாம். இவர் ஆவூரினர் என்றும் உழுவித்துண்ணும் வேளாளர்க்குப் பண்டைய மன்னர் அளிக்கும் காவிதிப் பட்டத்தைப் பெற்றனர் என்றும், ஸஹதேவன் என்னும் சொல்லின் திரிபே சாதேவன் என்று வழங்கலாயிற்று என்றும் கோடல் தகும். தலைவியை உடன் போக்கில் அழைத்துச் செல்லா நின்ற தலைவன் "வீபெய் கூந்தல் வீசுவளி உளர" வருக என்று கூறியதன் நயம் சுவைக்கத் தக்கதாம். "கொண்டை மேல் காற்றடிக்கச் செல்" என்பது பழமொழி. இவர் பாடியதாக நற்றிணையில் ஒன்றும், அகத்தில் ஒன்றும் ஆக இரண்டு பாடல்கள் கிடைத்துள்ளன.

## 12. இடைக்காடனார் (142, 221. 316)

பட்டுக்கோட்டைக்கு அண்மையில் இடைக்காடு என்னும் ஓர் ஊருளது. மலையாளம் மாவட்டத்திலும் இப் பெயரில் ஒன்றுளது. இவர் பாடல்கள் முல்லைத் திணையைப் பற்றியனவாக இருத்தலின் பட்டுக்கோட்டையைச் சார்ந்த இடைக்காட்டினராக இருத்தல் வேண்டும். ஊர் பற்றிப் பெற்ற பெயர். இவர் தம் பாடல்களில் ஆயர்களின் இயல்பு பலவாறாகப் பேசப்பட்டிருத்தலின் இவர்

இடையர் பிரிவைச் சேர்ந்தவர் என எண்ணல் தகும். நற்-142. இராப்பொழுதாயினும் வந்த விருந்தை வரவேற்று உபசரிக்கும் காதலியின் குணநலனைச் சிறப்பித்துத் தலைவன் கூறியதாக இவர் பாடியிருத்தலின் விருந்தோம்பும் பெற்றியர் இவர் என்பதும் தெரிய வருகிறது. குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் காலத்தவர். கார்ப் பருவம் கண்டு கவன்ற தலைவியை இது வம்பமாரி என்று தோழி கூறி ஏமாற்றியதும், நற்-316, முயற்கண்ணுக்கு நெல்லிக்காயை உவமித்திருக்கும் சிறப்பும், அகம் 384, படித்துச் சுவைக்கத்தக்கன. இடைக்காடர் ஊசி முறியென்று பழைய உரைகளிற் காணப்படுவதால் ஊசிமுறி என்னும் பெயர் கொண்டதொரு நூல் இவர் இயற்றியிருக்கக் கூடும். பிற்காலத்து இடைக்காட்டுச் சித்தர் என்றொரு புலவர் இருந்தமை அறியத்தக்கது. இவரைப் பற்றிய பல்வேறு செய்திகள் இருவகைத் திருவிளையாடல்களிலும் காணப்படுகின்றன. இவர் பாடியன நற் 3, அகநா 5, புறநா 1, குறுந் 1, திருவள்ளுவ மாலையில் 1 ஆக 11.

## 13. இளங்கீரனார் (3, 62, 113, 269, 308, 346)

இவர் தந்தை எயினந்தை எனப்படுவர். வேடர் மரபினர். இஃது இவர் தம் பாடல்களால் அறியக் கிடக்கின்றது. தந்தை பெயருடன் இணைத்து எயினந்தை மகனார் இளங்கீரனார் என்று இவர் அழைக்கப்பட்டார். பாலைத் திணையையும் அந் நிலத்து வாழ் வேடுவரையும் பலவாறாகத் தம் பாடல்களிற் சிறப்பித்துள்ளார். மகளிர் பிறைதொழுது ஏத்தும் பண்பினர் என்பது இவர் பாடலால் தெரிய வருகிறது; அகம் 239. அன்புடைய நெஞ்சம் ஒன்றுபட்டுக் கரைவதற்கு பசுமட்கலம் மழையிற் கரைந்து போதலை இவர் உவமை காட்டியுள்ளார்; நற் 308. தலைவன் பிரிந்த நாளைச் சுவரிலே கோடிட்டுத் தலைவியர் எண்ணிக் கவல்வர் என்பதும், யாக குண்டத்தின் கீழ்யாமையை வைத்து மூடும் வழக்கு உண்டென்பதும் இவர் பாடல்களால் அறியக் கிடக்கின்றது. (அகம் : 239, 351.) காதலனது முயக்கம் வேண்டாது புதல்வன் முகத்தை நோக்கியே பண்டைய தலைவியர் ஆறியிருப்பர் என்னும் உண்மையும் இவர் பாடல் தெரிவிக்கின்றது. நற் : 269. சோழரின் உறையூரையும் சேரரின் கொல்லி மலையையும் உதியன் நிகழ்த்திய போரினையும் இவர் பாடியிருத்தலின் முடியுடைப் பேரரசரால் பாராட்டப்பட்டவர் என்று தெரிகிறது. பொருந்தில் இளங்கீரனார் என்னும் பெயருடன் புறத்தில் வரும் பாவலர் இவரின் வேறானவர். எட்டுத் தொகையில் இவர் இயற்றிய செய்யுட்கள் 15. (நற் : 6, குறுந் : 1, அகநா : 8)

## 14. இளந்திரையனார் (94, 99, 106)

அரச புலவர். தொண்டைமான் இளந்திரையன் எனப்படுவார். குறுநில மன்னர். எனினும் மூவேந்தர் போல் பெருமை மிக்கவர். இவனைத் தலைவனாகக்கொண்டு கடியலூர் உருத்திரங் கண்ணனார் பெரும்பாணாற்றுப் படையைப் பாடியருளினர். களவியல் உரை மூலம் இளந்திரையம் உன்னும் ஒரு நூலை இவன் செய்ததாகத் தெரிகிறது. இவன் தன் பெயரில் திரையனூர் என்றொரு ஊரை நிருமித்தான். பொய்கையார் இவனை "ஆழி இழைப்ப" என்னும் பாவாற் பாராட்டிச் சென்றனர். "நோயலைக் கலங்கிய மதனழி பொழுதிற், காமம் செப்பல் ஆண் மகற்கு அமையும்" என்று தலைவி கூற்றில் இவர் பாடியிருப்பது அரிய செய்தியாகும். புணர்ச்சியால் ஏற்பட்ட நலனை மறைத்தொழுகும் தலைவிக்கு, கழுவித் தூய்மை செய்யாத பசிய முத்து தனது ஒளியை மறைத்துக் காட்டுவதை உவமையாகக் கூறியுள்ளார். (நற் : 94) இவர் பாடியன நற் : 3. புறம் : 1. ஆக 4. நக்கண்ணையார் என்னும் பாவலரும் இவர் காலத்தவரே.

## 15. இளந்தேவனார் (41)

இவர் ஒரு வணிகப் பாவலர். மதுரைப் பண்டவாணிகன் என்று அழைக்கப்பட்டனர். பாலையும் குறிஞ்சியும் இவராற் சிறப்பிக்கப்பட்டன. விருந்து புறந்தருதற்கே தலைவன் பொரு ளீட்டுவான் என்னும் உண்மை இவர் பாடலால் அறியக் கிடக் கின்றது. நற் 41. அகத்தில் மூன்றும் நற்றிணையில் ஒன்றுமாக நான்கு பாடல்கள் இவர் பாடியுள்ளார்.

## 16. இளநாகனார் (151, 205, 231)

நல்லிசைப் புலவர் பலர் நாகனார் என்னும் பெயர் கொண் டிருத்தலின் அவரினின்றும் வேறுபடுத்தி இளநாகனார் என்றழைக் கப்பட்டார். நெய்தலையும் பாலையையும் புனைந்து பாடியுள்ள இவர் குறிஞ்சித் திணைப் பாடலொன்றில் களவிற் புணர்ந்த தலைவி தன் புணர்ச்சி வேறுபாட்டைப் பிறரறியாதவண்ணம் தன் உடம்பைத் திருத்திக்கொள்வாள் என்னும் கருத்தை உள்ளுறை யில் அமைத்துப் பாடியிருக்கும் நயம் உவகை தருவதொன்றாம் (151.) நீர்க்காக்கைகள் பல ஒன்று சேர்ந்து நீரிற் குடைந்தெழுவ தற்கு ஸப்தரிஷி மண்டலத்தை உவமை காட்டியுள்ளார். (231.)

## 17. இளம்புல்லூர்க் காவிதி (89)

இவர்தம் இயற்பெயர் அறியேம். காவிதிப் பட்டம் உடைமையால் இவர் பாண்டிநாட்டு உழுவித்துண்ணும் வேளாண் மரபினராவர் என அறிகிறோம். யானை பெருமூச்சு எறிதலை வாடைக் காற்றுக்கு உவமையாகக் கூறியிருத்தல் மகிழத்தக்கது. இளம் புல்லூர் இவர் தம் ஊரே. இவ்வூர் பற்றிய விவரம் கிடைக்கப் பெறவில்லை.

## 18. இளம்போதியார் (72)

போதி என்பது அசோகினைக் குறிக்கும். அதன் பெயரைக் கொண்டிருத்தலின் இவர் போதியார் எனப்பட்டார் போலும். இவர் பாடியுள்ள நெய்தல் திணைப்பாடலில் "பேணுப பேணார் பெரியோர் என்பது நாணுத்தக் கன்றது காணுங்காலை" என்று தோழி கூற்றில் அமைத்துப் பாடியிருப்பது அழியாத உண்மையாகும். களவு நீட்டித்தலைத் தலைவன் வேண்டான் அஞ்சுவான் என்று இவர் கூறியிருப்பது வியக்கத்தக்கது.

## 19. இளவெயினனார் (263)

இவர் வேடமரபினர். எயினர் - வேடர். இவர் பாடிய நெய்தல் திணைச் செய்யுளில் வயலிலே தங்கிய சூல்கொண்ட பேடைக்கு நாரைப் போத்து, கடலின் மீனைக் கொண்டுவந்து வாயிற் சொரியும் என்று உள்ளுறைப் பொருளமையக் கூறியிருப்பது சுவைத்து இன்புறத்தக்கதாகும்.

## 20. இளவேட்டனார் (33, 157, 221)

மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனாரின் இவர் வேறாவர். பாலை, முல்லைத் திணைகளைச் சிறப்பித்துள்ளார். உறங்கும் புதல்வனை உவகையுடன் தலைவி எழுப்பும் கிளவியைத் தலைவன் கேட்டு மகிழ்வான் என்று இவர் கூறியுள்ளார். (221.) தலைவன் பிரிவை நோக்கிப் பசலை ஒளிந்திருக்கும் என்பதற்கு ஆறலை கள்வர் வணிகர் வரும் வழிபார்த்து ஒளித்திருத்தலை உவமை காட்டியுள்ளார். (33.) இவர் பாடிய முல்லைத் திணைப்பாடலை (226) இடைக்காடினார் பாடினர் என்று கருதுவோரும் உண்டு.

## 21. இனிச்சந்த நாகனார் (66)

இவர் தம் அடைமொழியால் இன்குரலுடையார் என அறிகின்றோம். நாகன் என்னும் பெயரினராகிய இவர் நற்றிணையிற் பாலைத் திணையைப் பற்றியொரு பாடல் பாடியுள்ளார். உகாய் மரத்தின் காய் நல்ல காரமுடையது என்பது இவர் கூற்றால் அறியக் கிடக்கின்றது. அக்காயைப் புறாத்தின்று மயங்கி வருந்துவதனைத் தலைவி தலைவனின் மாய இன்பத்தால் மயங்கி வருந்தும் நிலைக்கு ஒப்பிட்டுக் கூறியிருக்கும் நயம் இன்பம் பயக்கின்றது.

## 22. உக்கிரப்பெருவழுதி (98)

கடைச் சங்கம் நிறுவினோன். சேரன் மாவெண்கோவும், சோழன் பெருநற்கிள்ளியும் இவனுடைய நண்பர்கள். அகநானூற்றைத் தொகுப்பித்தோன். வேங்கை மார்பனை வென்றவன். அவனுக்குரிய கானப்பேரரணைக் கைப்பற்றியவன். ஆவூர் மூலங்கிழார், ஔவையார் போன்றவர்களாற் பாராட்டப் பெற்றவன். திருக்குறள் இவன் முன்னிலையில் அரங்கேற்றம் செய்யப்பட்டது என்பர். அரச புலவன். தினையை மேயச் சென்ற பன்றி பல்லி சொல் கேட்டு மீளும் என்று இவர் கூறியிருப்பது வியப்புடையதாகும். அகத்தில் 26ஆம் பாடலும் திருவள்ளுவ மாலையில் ஒன்றும் இவர் பாடியனவாம்.

## 23 . உரோடகத்துக் கந்தரத்தனார் (116, 146, 238, 306)

காஞ்சீபுரம் தாலுக்காவிலுள்ள ஓரகடம் என்னும் ஊர் இதன் திரிபாகும். உரோடோகம் - ஒரூர். குறிஞ்சியும் பாலையும் இவராற் பாடப்பட்டன. அறுவடை செய்யப்பட்ட தினைப்புனம் பொலிவு குன்றி நிற்கும் என்பதை, திருவிழாச் செய்தொழிந்த விழவுக்களம் போல என்னும் உவமையால் விளக்கியுள்ள நயம் சீரிது. (306.) இவர் பாடியன நற். 4, குறுந். 1, அகம் 3 ஆக 8. இவர் படைத்த தலைவி பழி தூற்றும் பெண்டிரை நரகத்திற்கு உரிமையாக்குவள். கந்தரத்தன் என்பது இவர் இயற்பெயர்.

## 24. உலோச்சனார்
## (11, 38, 63, 64, 74, 131, 149, 191, 203, 223, 249, 254, 278, 287, 311, 331, 354, 363, 372, 398)

இவர் பாடல்கள் இவரைப் பரதவ மரபினர் என்று எண்ண இடந்தருகின்றன. இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியைச் சிறப்பித்துள்ளார். பெரியன் என்னும் கொடை வள்ளலையும் அவனுக்குரிய பொறையாற்றையும் புகழ்ந்து பாடியுள்ளார். காண்ட வாயில் என்னும் ஊரினர், நற்:38 இவர் பாடல்களில் உரிப்பொருண் மயக்கம் பல காணலாம். புன்னைக்காயிலிருந்து நெய்யெடுப்பர் என்பர். நற்:278. உப்புக் குவியலின் மேலேறி நின்று மீன்பிடி படகுகளை மகளிர் எண்ணி மகிழ்வர் என்று கூறியுள்ளார். நற்:331. நால்வகை நிலங்களில் நெய்தலே பொருள் வளம் செறிந்தது என்று பாடுவர். நற்:311. இவர் பெரும்பாலும் தம் பாடல்களிற் களவொழுக்கத்தையே சிறப்பித்துப் பாடியுள்ளார். வியப்பைப் புலப்படுத்த மகளிர் பலரும் கூடி மூக்கின் உச்சியிற் சுட்டுவிரற் சேர்த்து நகைக்கும் பண்பினர் என்கிறார். நற்:149. இவர் பெயர் கொண்டு இவரைச் சைனர் என்பாரும் உளர். இவர் பாடியன 35. (நற்:20, குறுந்:4, அகநா:8, புறநா:3)

## 25. உறையூர்க் கதுவாய்ச் சாத்தனார் (370)

உறையூரினர். கதுவாய் என்னும் அடைமொழியின் பொருள் விளங்கவில்லை. இவர்வசித்த பகுதியாக இருக்கக் கூடும். மருதத்திணை பாடுவதில் வல்லவர். புதல்வனை ஈன்ற தலைவி தன்னைத் தலைவன் அவ்வமயம் காண வந்தவிடத்து நாணத்தினால் கண்புதைத்து மகிழ்வள் என்று கூறியுள்ளார்.

எயினந்தை மகன் இளங்கீரனார் (269, 308, 345) இளங்கீரனார் (13) என்பவரும் இவரும் ஒருவரே. அக் குறிப்பையே இவணும் கொள்க.

## 26. எயினந்தையார் (43)

எயினனைத் தந்தையாகக் கொண்டவர். வேடர் மரபினர். இளங்கீரனாரின் (13) தந்தை. பாலையை வருணிப்பதில் வல்லவர். பரவியிருக்கும் வெயிலை வெளிய ஆடையை விரித்தாற் போன்றுள்ளது என்று கூறுகின்றார். தலைவன் உண்டு எஞ்சிய தலைவியின் நலனைப் பசலை தின்றொழுக்கும் என்பதனை

பாலையில் செந்நாய் தின்ற மரையாவின் தசையை வழிச் செல்வோர் உண்டார் என்று கூறும் வாயிலாகப் பெற வைத்தார்.

## 27. ஐயூர் முடவனார் (206, 334)

முடவனார் என்பது சினையாற் பெற்ற பெயர். பாண்டி நாட்டும் சோழ நாட்டும் ஐயூர் என்னும் பெயர்களில் ஊர்கள் உள்ளன. குறிஞ்சித் திணையில் முகம்புகு கிளவி அமைத்துப் பாடுவதில் ஆர்வம் கொண்டவர். பாண்டியன் கூட காரத்துத் துஞ்சிய மாறனையும் (புறம் 51) தாமான் தோன்றிக்கோன் என்னும்சிற்றரசனையும், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை யும் புறத்திற் சிறப்பித்துள்ளார். உறையூர் முடவனார் என்பவரும் ஐயூர்கிழார் என்பவரும் இவரே என்பாரும் உண்டு. அகம் 216-ஆம் பாட்டில் ஆதன் எழினி போரிற்பட்டதைப் பாராட்டிப் பாடியுள்ளார். தாமான் தோன்றிக்கோன் தனக்கு அளித்த உணவினை வேண்டாது, வண்டி இழுத்தற்குப் பகடு பெற்று உவந்தார். இறந்தோருடம்பைத் தாழியிற் கவித்து வைக்கும் பண்டைய வழக்கம் இவர் பாடலிலிருந்து தெரிய வருகிறது. மந்தி ஊசலாடிக் கலையொடு திளைக்கும் செயலை 334 ஆம் பாடலில் அழகுறப் பாடியுள்ளார். நீர் மிகிற் சிறையும் இல்லை, தீமிகின் நிழலும் இல்லை, வளிமிகின் வலியும் இல்லை என்று இவர் கூறும் மெய்ம்மை மெய்ம்மை. எட்டுத் தொகையுள் இவர் செய்தனவாகப் பத்துப் பாடல்கள் உள்ளன. (நற் : 2, புறநா : 4, குறுந் : 3, அகநா : 1)

## 28. ஒரு சிறைப் பெயரியனார் (121)

இயற்பெயர் தெரியவில்லை. ஒரு சிறையென்பது இவர் வாழ்ந்த ஊரின் ஒரு பகுதி போலும். நாஞ்சில் வள்ளுவனைப் பாடியுள்ளார். முல்லையும் குறிஞ்சியும் இவராற் சிறப்பிக்கப் பட்டன. வினைவல பாங்கனைத் தலைவனாக வைத்து இவர் பாடிய நற்றிணைச் செய்யுளில் அமைந்துள்ள இறைச்சி உவமை தருவது ஒன்றாம். இவர் பாடியன மூன்றாம். (நற் : 1, குறுந் : 1, புறநா : 1)

## 29. ஓரம் போகியார் (20, 360)

கடைச்சங்கப் பாவலருள் ஒருவர். மருதம் பாடுவதில் வல்லவர். இவராற் பாடப்பட்டோர் ஆதன் அவினி, கடுமான்

கிள்ளி, பாண்டியன், விரான், மத்தி போன்ற பெருநில வேந்தரும் குறுநில மன்னரும் ஆவர். காவிரி, வையை போன்ற நதிகளைச் சிறப்பித்துள்ளார். தேனூர், ஆமூர், இருப்பை, கழார் போன்ற ஊர்களைத் தம் பாடல்களில் புனைந்துள்ளார். தேனூரைப் பலவாறாகச் சிறப்பித்திருத்தலின் இவர் ஊர் அதுவாக இருத்தலும் கூடும். மருதத்திணைப்பாக்கள் இவருக்குக் கைவந்த கலை. இவர் பாடிய நற்றிணை இருபதாம் பாடலில் பல்வேறு மெய்ப்பாடுகள் செறிந்து நிற்றலைக் காணலாம். யானைக் கன்று தன் உணவினைத் தன் தலையில் வாரி இறைத்துக்கொள்வதைப் போல, தலைவன் வெட்கம் இன்றி தன் மேலே பரத்தையிற் பிரிவென்னும் பழிச் சொல்லை ஏறிட்டுக்கொள்வான் என்று நயம் படக் கூறியுள்ளார். இவர் பாடியன, நற் : 2. குறுந் : 4, ஐங் : 100, அகம் 2, புறம் 1 ஆக 109 பாடல்கள்.

## 30. ஔவையார்
## (129, 187, 295, 371, 381, 390, 394)

பெண்பாற் புலவர். இப் பெயரிற் பலர் இருந்தனர் என்று தெரிகிறது. தமிழ் மூதாட்டி என்று அழைக்கப்படும் இவர் சங்ககாலத்தவராகும். இவர் பாடியன நற் : 7, குறுந் : 15, அகம் 4, புறத்தில் 33, திருவள்ளுவ மாலையில் 1 ஆக அறுபது பாடல்களாகும். அதியமான் நெடுமான் அஞ்சியிடம் சாதல் தவிர்க்கும் நெல்லிக்கனி பெற்றுப் பாராட்டினர். பரிமேலழகர் தாம் எழுதிய குறளுரையில் "இனிய கனிகள் என்றது ஔவையுண்ட நெல்லிக் கனிபோல் அமிழ்தானவற்றை" என்று எழுதியுள்ளார். குறள் 100. ஆத்திசூடி போன்ற நீதி நூல்களைப் பாடிய ஔவையார் இவரின் வேறாவர். அதியமான் நெடுமான் அஞ்சியின் வீரத்தைத் தூதாகச் சென்று தொண்டைமானிடம் இவர், தெரிவிக்கும் செய்தி மிகவும் அழகியதாகும் (புறம் 95.) இவராற் பாடப்பட்டோர் : அஞ்சி, தொண்டைமான், பொகுட்டெழினி, நாஞ்சில் வள்ளுவன். சேரமான் மாவெண்கோ, உக்கிரப் பெருவழுதி, பெருநற்கிள்ளி, இவரைப் பற்றிக் கூறும் பல கதைகள் நம்பத் தக்கனவாக இல்லை. தன் கணவனைத் தேடி வெள்ளி வீதியார் சென்றதைப் பாடியுள்ளார். அகம் 147. பாரி வள்ளலால் ஆதரிக்கப்பட்டவர். பாரியின் மகளிராம் அங்கவை சங்கவையரைத் திருக்கோவலூர் மன்னன் தெய்வீகன் என்பானுக்கு மணம் செய்துத்தனர். குளிரினின்றும் பாதுகாத்துக் கொள்வதற்குப் பாரியின் மகளிர் தந்த சிற்றாடையைப் பெற்று உள்ளம் நெகிழ்ந்து "பாரி பறித்த

கலனும் பழையனூர்க், காரியன்றளித்த கழைக்கோலும், சேரமான் வாராயோ என்றழைத்த வார்த்தையும், இம் மூன்றும் நீலச் சிற்றாடைக்கு நேர்'' என்று பாடிச் சிறப்பித்தனர். அஞ்சி துஞ்சிய காலை இவர் அழுது புலம்பிய பாடல் நெஞ்சைநெகிழ்விப்ப தாகும். கபிலர் என்னும் சங்கப் புலவரிடம் பேரன்பு கொண்டவர்.

## 31. கச்சிப்பேட்டு இளந்தச்சனார் (266)

கச்சிப்பேடு என்பது காஞ்சீபுரத்தைச் சார்ந்த ஓரூர். இவர் கம்மாளர் பிரிவினர். முல்லைத் திணையைச் சிறப்பித்துள்ளார். பிரிந்த தலைவன் வருந்துணை இல்லின்கண் ஆற்றியிருத்தல் கற்புடை மகளிர் கடன் என்பர்.

## 32. கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார் (144, 213)

இளந்தச்சனாரின் முதியவராதலின் பெருந்தச்சனார் எனப் பட்டார். குறிஞ்சித் திணையைச் சிறப்பித்துள்ளார். ஆற்றது ஏதத்தால் தலைவன் தாக்கப்படுவனோ என்னும் கருத்தை புலியால் களிறு தாக்கப்பட பிடி புலம்பும் என்று கூறிப் பெற வைத்தார். குறிஞ்சித் திணையில் மதியுடன் படுக்கும் என்னும் துறைச் செய்யுளில் இவர் கூறியுள்ள உள்ளுறை படித்துச் சுவைக்க தக்கது. (213)

## 33. கடுவன் இளமள்ளனார் (150)

மள்ளன் என்பது இவர் இயற்பெயர். கடுவன் இவர் வாழ்ந்த ஊர் போலும். மதுரைத் தமிழ்க் கூத்தன் கடுவன் இளமள்ளனார் என்றும் அழைக்கப்பட்டனர். பாண்டியன் மாறன் வழுதியைச் சிறப்பிப்பர். அகம் 170ஆம் பாடலில் இராமபிரான் கடலுக்கு அணைகட்ட முற்பட்ட செயலைக் கூறியுள்ளார். முல்லை, குறிஞ்சி, மருதமாகிய திணைகளைத் தம் பாடல்களிற் சிறப்பிப்பர். மள்ளனார் என்ற பெயரால் இவர் படைத் தலைவராக இருந் திருக்கக் கூடும் என்று தெரிகிறது. தாரும்கண்ணியும் காட்டிப் பரத்தையைத் தலைவன் புணர்வன் என்னும் வழக்கு இவர் பாடலால் அறியக் கிடக்கின்றது. இவர் பாடியன அகம் 2; குறுந் 1 நற்றிணை 1 ஆக நான்கு பாக்களாம்.

## 34. கண்ணகனார் (79)

இவர் இயற்பெயர் நாகன் என்றும் கண்ணன் என்பார் இவரின் தந்தையென்றும் கருதப்படுகிறது. கோப்பெருஞ் சோழன் பிசிராந்தையார், பொத்தியேள் போன்றோர் சமகாலத்தவர். பரிபாடலில் 21ஆம் செய்யுட்கு இசை வகுத்தவர் இவரே. இசைப் புலமை வாய்ந்தவர். பாலைத் திணை இவராற் சிறப்பிக்கப்பட்டது. "என்றும், சான்றோர் சான்றோர் பாலராப, சாலார் சாலார் பாலரா குபவே" என்று புறத்தில் இவர் பாடியிருப்பது அழிவில்லுரையாகும். புறம் (218.) இவர் பாடியன நற் 1, புறம் 1 ஆக இரண்டு பாடல்கள்.

## 35. கண்ணகாரன் கொற்றனார் (143)

கொற்றன் இயற்பெயர். ஆர்சிறப்பு விகுதி. கண்ணகாரன் என்பது தந்தை பெயரோ ஊர்ப் பெயரோ அறியேம். பாலைத் திணையைப் பாடியுள்ளார். தலைவி உடன் போக்கிற் சென்றாள் என்பதை அறிந்த நற்றாய் அதனை அறநெறியென்று கூறி மகிழ்ந் தனள் என்கின்றாள்.

## 36. கண்ணங் கொற்றனார் (156)

கண்ணன் என்பாரின் மகனாவார். குறிஞ்சியைச் சிறப்பித் துள்ளார். இரவு வருவானைப் பகல் வருகவென்று தோழி கூறுவ தாக இவர் பாடியுள்ள பாட்டின் நயம் பெருஞ்சுவை தருவது ஒன்றாம்.

## 37. கண்ணம் புல்லனார் (159)

புல்லன் என்பது இயற்பெயர். கருவூரினர். தந்தை பெயர் கண்ணன். நெய்தலும் பாலையும் இவராற் பாடப்பட்டன. இவர் பாடியன நற் : 1. அகம் : 1 ஆக இரண்டு. நீலமணியின் நிறத்தை ஒத்த கடல் என்றும், நிலவினைக் குவித்து வைத்தாற் போன்ற மணல் மேடு என்றும், சங்குகளைத் தொடுத்து விட்டாற் போன்ற குருகுகளின் வரிசை என்றும் இயற்கையை வருணித் துள்ளார்.

## 38. கணக்காயனார் (23)

கல்வி கற்பிக்கும் ஆசிரியர்களைப் பண்டைக் காலத்தில் கணக்காயர் என்று கூட்டுவர். இவர் ஓர் ஆசிரியர். பொதுச்

சொல்லாகிய கணக்காயர் என்பது சங்ககாலத்து இவர் ஒருவருக்கே சிறப்பாய் அமைந்திருத்தலின் இவர் பெருமை புலனாகும். குறுந்தொகையில் வரும் கணக்காயன் தத்தன் என்பவரும் (304) அகத்தில் வரும் கூரைக்கணக்காயர் என்பவரும் இவராகவே இருத்தற்கூடும். மதுரை என்பதன் திரிபே கூடை என்பதாகும். திருமுருகாற்றுப் படையைச் செய்தருளிய நக்கீரனாரின் தந்தை இவர். கொற்கையில் விளையும் முத்துக்களையும் திருமாலுறையும் வேங்கட மாலையையும் சிறப்பித்துள்ளார். பாண்டிய நாட்டுப் பொதிய மலையையும், சேரநாட்டுக் கொல்லி மலையையும் சோழரது காவிரியையும் இவர் தம் பாடல்களிற் புகழ்ந்துள்ளமையால் அம் மூவேந்தராலும் சிறப்பிக்கப்பட்டவராவார். எறியீட்டி எறிந்து திமிங்கலத்தைப் பரதவர் பிடிப்பர் என்பர். குறிஞ்சியும் நெய்தலும் இவராற் பாடப்பட்டன. நற்றிணை 23ஆம் பாட்டில் கொற்கை நீரில் முத்து விளையும் என்று கூறி தலைவன் வதுவையால் தலைவி இல்லகத்தார் மகிழ்ச்சியடைவர் என்பதைக் குறிப்பித்த நயம் அறியத்தக்கது.

## 39. கணிபுன்குன்றனார் (226)

சோதிடர் பூங்குன்றனார் என்பது புன்குன்றனார் என்று பிழைபட வழங்கலாயிற்று. பூங்குன்ற நாட்டுப் பூங்குன்றம் என்று சாசனங்களில் பொறிக்கப்பட்டுள்ளது. தொழிலாலும் இடத்தாலும் இவர் இப் பெயர் பெற்றனர். 'யாதுமூரே யாவரும் கேளிர்' என்னும் பொது நோக்குப் புறச்செய்யுள் இவருடையதே. பொது நோக்குள்ளம் படைத்தவர். இவர் பாலையைப் பாடியுள்ளார். "மரம் சாக மருந்தும் கொள்ளார் மாந்தர், உரம் சாகச் செய்யார் உயர்தவம், வளம் கெடப் பொன்னும் கொள்ளார் மன்னர்" என்ற நற்றிணை அடிகளின் உயர்ந்த கருத்துகள் உன்னத்தக்கன. இவர் பாடியன நற்:1, புறம் 1 ஆக இரண்டாம்.

## 40. கதப்பிள்ளைச் சாத்தனார் (135, 343)

இவர் இயற்பெயர் சாத்தன் என்பதே. இஃதொரு தெய்வத்தின் பெயர். கருவூரினர். கதப்பிள்ளை என்வும் அழைக்கப்பட்டார். நாஞ்சில் வள்ளுவனையும் பிட்டங் கொற்றனையும் பரிசில் வேண்டிப் பாடியவர். கருவூர்க் கந்தப்பிள்ளைச் சாத்தனார் என்ற புலவர் இவருடைய மகனாராவார். பாலையைச் சிறப்பித்துள்ளார். தலைவனைப் பிரிந்ததனால் தான் வாழும் ஊரின் தோற்றத்தையே தலைவி வெறுப்பாள் என்னும் உண்மை இவர் பாடலாற் புலனாகிறது. நற்:343ஆம் பாடலில் இவர்

வருணித்துள்ள மாலைப்பொழுது மிகவும் இன்பம் தருவது ஒன்றாம். ஆலமரத்தின் கீழ் அன்பர்களால் இடப்படும் பலியுணவைத் தின்ற காக்கை சுற்றத்திடத்தே சென்று தங்கும் செயலைக் கூறி தலைவியின் நலன் எல்லாம் உண்ட பசலை அவள் நெற்றியிலே தங்கிற்று என்று கூறியுள்ள நயம் உவகை தருகின்றது. இவர் பாடியன நற்:2, குறுந்:3, அகம்:1, புறம்:2 ஆக எட்டுப் பாடல்களாகும்.

## கந்தரத்தனார் (116, 146, 238, 306)

உரோடோகத்துக் கந்தனாரின் இவர் வேறல்லர். மேலே (23) பார்க்க. குறிஞ்சி, முல்லைத் திணைகளைச் சிறப்பிப்பர். "தீமை கண்டோர் திறத்தும் பெரியோர், தாமறிந்துணர்க" என்று இவர் கூறியுள்ளது அழிவில் உண்மையாகும். மரத்தின் தண்ணென்ற நிழற்குக் கடனறி மன்னரின் குடைநிழலை உவமித்துள்ளார். நற்:146.

## 41. கபிலர்
## (1, 13, 32, 59, 65, 77, 217, 222, 225, 253, 267, 291, 309, 320, 336, 353, 359, 368, 373, 376)

"வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க்கபிலன்" "பொய்ய நாவிற் கபிலன்" என்று இவரைப் புலவர்கள் பாராட்டுவர். உம்மைத் தொகைக்கு உரைகாரர்கள் 'கபில பரணர்' என்னும் தொடரைக் காட்டுவர். ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவர். பரணர் ஔவையார், இடைக்காடர் போன்றோரின் அரிய நண்பர். பாரியின் அவைக்களப் புலவர். இவர் அந்தணர். பெரும் பேகனிடம் சென்று அறிவுரைகள் கூறி அவனாற் கைவிடப்பட்ட அவன் மனைவி கண்ணகியை மீண்டும் அவன் ஏற்று இல்லறம் புரியுமாறு செய்த அருளாளர். ஆரிய அரசன் யாழ்ப்பிரம தத்தனுக்குத் தமிழின் சுவையைப் பத்துப்பாட்டுள் ஒன்றாகிய குறிஞ்சிப் பாட்டின் வாயிலாக உணர்த்தியவர். இன்னா நாற்பது பாடியவர். அஞ்சாநெஞ்சர். பாரியிடம் பகைமை கொண்ட மூவேந்தரிடம் சென்று நீவிர் ஆடிப்பாடிச் செல்லின் பாரி பறம்பு மலையைப் பரிசிலாகத்தருவன்; மாறாகப் படையெடுப்பின் தோற்பது திண்ணம் என்று பெருமிதத்துடன் கூறியவர். பாரியின் மகளிரை மணக்க என்று விச்சிக்கோன் என்பானையும், இருங்கோவேளையும் வேண்டினர். அவர்கள் மறுக்கவே அம்மகளிரைப் பார்ப்பாரப் படுத்தனர். ஐங்குறு நூற்றில் மூன்றாம் நூறு இவருடையதே. பதிற்றுப்பத்து 7ஆம் பத்தில் செல்வக்

கடுங்கோவாழியாதனைப்பாடி அவனிடம் நூறாயிரம் காணமும், கண்ணிற் கண்ட நாடும் பெற்றவர். குறிஞ்சித் திணையைச் சிறப்பித்துப் பாடுவதில் வல்லவர். குறிஞ்சிக்கலி இவருடையதே. குறிஞ்சிக் கபிலர் என அழைக்கப்பட்டார். கபிலரது பாட்டு என்று ஆறாம் வேற்றுமை விரிக்கு உரைகாரர்கள் காட்டும் உதாரணத்தால் இவர் புலமை புலனாம். இவரை முனிவர் என்பர். பாண்டிய நாட்டுத் திருவாதவூரே இவர்தம் ஊர் எனவும் கூறுவர். சிவன், விநாயகன், முருகன், பலதேவர், திருமால் போன்ற கடவுளரை இவர்தம் பாடல்களிற் போற்றியுள்ளமையால் இவரைப் பெரும் சமயப் பற்றுள்ளவர் என்று கருதலாம். கபிலர் என்னும் பெயரிற் பல புலவர்கள் இருந்தனர் என்று தெரிகிறது. கபிலம் என்றதொரு நூல் இவராற் செய்யப்பட்டது என்பர்.

"முரணில் பொதியின் முதற் புத்தேள் வாழி, பரணர் கபிலரும் வாழி" என்ற அங்கதப் பாட்டில் அகத்தியரோடு ஒருங்கு வாழ்த்தப் பெற்றுள்ளார்.

இவராற் பாடப்பட்டோர்: அருதை, இருங்கோவேள், ஓரி, சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதன், நள்ளி, பாண்டியன், மலையமான் திருமுடிக்காரி, விச்சிக்கோ, பாரி, பேகன் போன்றோர். அயிரைமலை, கொல்லிமலை, பறம்புமலை, முள்ளூர் மலை, பறம்புநாடு, கிடங்கில், கொடுமணம், பந்தர், மதுரை, முள்ளூர்க்கானம், வாரணவாசி என்பனவற்றைத் தம் பாடல்களிற் சிறப்பித்துள்ளார்.

இவரைப் பாராட்டிய பாவலர்கள்: பெருங்குன்றூர் கிழார், (பதிற் - 85) பொருந்தில் இளங்கீரனார் (புறம் 53) மாறோக்கத்து நப்பசலையார் (புறம் 126) போன்ற பலராவர்.

"சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே" (குறுந்:18)

என்று தலைவியின் காமத்தைச் சிறப்பித்துள்ளார். பிற்காலத்தில் இவர் பெயரில் கபில தேவ நாயனார் என்பார் பல பிரபந்தங்களைச் செய்துள்ளதை 11ஆம் திருமுறை வாயிலாக அறிகிறோம். இவர்பெருமை விரிப்பிற் பெருகும். சுருக்கிற் குறையும். விரிவஞ்சி விடுத்தோம். இவர் பாடியன: நற்:20, குறுந்:29, கலி:29, ஐங்:100, பதிற்:10, அகம்:16, புறம்:30, திருவள்ளுவ மாலை 1, 'நெட்டிலை இருப்பை' என்ற தனிப்பாடல் 1, இன்னா நாற்பது:41, குறிஞ்சிப்பாட்டில் 1, (ஆக 278).

## 42. கயமனார்
## (12, 198, 279, 293, 305, 324)

நெய்தல் மலரைக் 'கயமுழ்கு மகளிர் கண்ணின் மானும்' என்று உவமித்தமையால் இப்பெயர் பெற்றார் போலும். இவர் பாடல்களிற் பெரும்பாலும் அவலச்சுவையே அமைந்துள்ளதைக் காணலாம். செவிலி புலம்பல், நற்றாய் புலம்பல், மனைமருட்சி கண்டோர் இரக்கம், முதலியன இவர் புலம்பிய புலம்பல்களாம். இவை நெஞ்சை நெகிழ்விப்பன. தலைவன் இறப்ப ஏனையோர் புலம்பும் முதுபாலையைப் புறத்திற் சிறப்பித்துள்ளார். புறம் 254. அன்னி, திதியன் இவர்களின் போர்த்திறனைச் சிறப்பித்துள்ளார். அகம் 145. உடன்போக்கு நிகழும் காலை அறத்தொடு நின்று செலவினை நீக்கி அஞ்சுவித்ததாகச் செய்யுள் செய்தவர் இவரே நற்:12. புண் + தாள் = புட்டாள் எனப் புதுவிதி வகுத்தவர் இவரே நற்:279. வேப்பம்பழத்தை வெறுத்து இருப்பையின் பழத்தை விரும்பி வௌவால் வெய்யபனியுறைப்ப இருக்கும் என்று கூறி தந்தை செல்வத்தை வெறுத்து தலைவனது செல்வத்தை விரும்பி இரவிலே சென்ற என் புதல்வி அங்கு மாமி, நாத்தனார் செறிந் திருப்ப எங்ஙனம் இருக்குமோ என்று நற்றாய் வருந்துவதாகச் செய்யுள் செய்துள்ளார்: நற் 279. தலைவன் தலைவி இருவரின் பெற்றோர்கள் ஒருவரை ஒருவர் கடிந்து கூறும் வழக்கு இன்று போல் பண்டும் இருந்தது என்பதை இவர் பாடலால் அறியலாம். நற் 293. முன்னாளிற் காலால் பந்துருட்டும் வழக்குளது என்பது நற். 324ஆம் பாடலால் அறியலாம். இவர் பாடியன: நற்:6, குறுந்:4, அகம் 12, புறம் 1 ஆக 23 ஆம்.

## 43. கருவூர்க் கோசனார் (214)

பாலைத் திணைபாடுவதிற் சிறந்தவர். கௌசிகனார் என்ற பெயர் கோசனார் என்றும் மருவியிருக்கலாம். ஒன்று மொழிக் கோசர்இனத்தில் வந்தவராக இருத்தலும் கூடும். இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும் சோம்பியிருப்பார்க்கு இல்லையாகும் என்று நற்214 ஆம்பாட்டில் தெளிவாகக் கூறியுள்ளார். வஞ்சினங் கூறிப்பிரியேன் என்ற தலைவர் பிரிந்தவிடத்து வஞ்சினத்தான் துன்பம் உறுவரோ என வருந்தி நிற்கும் தலைவியை இவர் பாடலிற் காணலாம்.

## 44. கழார்க் கீரன் எயிற்றியனார் (281, 312)

பெண்பாற்புலவர். எயிற்றி என்னும் பெயரினர். வேடர் மரபினர். கீரன் என்பாரின் மனைவியார் மயிலாடுதுறைக்குக் கீழ்பாலுள்ள கழார் என்னும் ஊரினர். இவர் கணவர் படைவீரர். பிரிவினைத் தலைவி பொறாள் என்றெண்ணிப் பெரும்பாலும் பிரிவு தவிர்த்தவர். பலியுண்ணும் காக்கை மழையில் நனைந்து வருந்தியும், இறைச்சிச் சோற்றைக் கருதியிருக்கும் செயலைக் கூறி, தலைவன் காட்டிய அன்பால் மகிழ்ந்த தலைவி பனியால் வருந்திய விடத்தும் ஒருநாள் தலைவர் வந்து கூடுவர் என்னும் ஆசையால் உயிர் துறவாமல் இருப்பள் என்னும் கருத்தை நற் : 281 ஆம் பாடலிற் பெறவைத்தார். பாலைத்திணை பாடுவதில் வல்லவர். கோடைத் திங்களிலும் பனிப்போள் வாடைக் காற்றில் என்னாவளோ என்று தலைவன் கூறுவதாக நற் : 312 - ஆம் பாடலில் இவர் பாடியிருக்கும் பண்பு சுவைக்கத்தக்கதாம்.

## 45. கள்ளம் பாளனார் (148)

கருவூரினர். கண்ணம் பாலனார் எனவும் வழங்கப்படுவார். வஞ்சிமா நகரையும் சேரமான் கோக்கோதையையும் பாராட்டியுள்ளார். தலைவியை விட்டுப் பிரியுங்கால் தலைவனும் உள்ளம் வருந்தி உரையாடல் செய்யான் என்பதை "மென்மொழி கூறியும்" என்னும் தொடராற் பெற வைத்தார். இவர் பாடியன: நற்.1 அகம் 3.

## 46. கள்ளிக்குடிப் பூதம்புல்லனார் (333)

புல்லன் என்னும் இயற்பெயரினர். இவர் தந்தை பெயர் பூதனை என்பது. பூதன் புல்லனார் என்பது நாளடைவில் பூதம் புல்லனார் எனப்பட்டது போலும். ஊர் கள்ளிக்குடி. இப்பெயருடைய ஊர்கள் பல உள்ளன. இவர் எதனைச் சார்ந்தவரோ அறியேம். பாலை பாடுவதில் தேர்ந்தவர். இவர் பாடியன நற்:1, குறுந் : 1.

## 47. காசிபன் கீரனார் (248)

காசிப கோத்திரத்தார். அந்தணர். கீரன் என்னும் பெயரினர் நக்கீரர் இவரின் வேறாவர். முல்லைத் திணையைப் பாடியுள்ளார். கார்ப்பருவம் கண்டு வருந்திய தலைவியை, இஃது அவர் கூறிய காரன்று; வம்பமாரி என்று தோழி கூறித் தேற்றுவதாகப் பாடியுள்ளது நயமுடையதாகும்.

## 48. காஞ்சிப் புலவனார் (123)

மாங்குடி மருதனார் என்னும் புலவரே காஞ்சிப் புலவர் எனப் பட்டனர். நிலையாமையை உணர்த்தும் காஞ்சித் திணையைப் பாடியமையால் காஞ்சிப் புலவர் எனப்பட்டனர். இவரே மாங்குடி கிழாராவார். வேளாளர். பாண்டியன் நெடுஞ்செழியனின் அவைக் களப்புலவர் மாங்குடி மருதன் உள்ளிட்ட புலவர் என்னைப் பாடாதொழிவாராக என்று ஒரு சமயம் நெடுஞ்செழியன் வஞ்சினம் கூறியதால் இவர் பெருமை நன்கு தெரியும். சிவன்பால் ஈடுபாடு கொண்டவர். வாட்டாற்று எழினியாதனைப் பாடியுள்ளார். வேள் எவ்வியினது மிழலைக் கூற்றமும் வேளிரது முத்தூற்றுக் கூற்றமும் குன்றூரும் இவராற் சிறப்பிக்கப்பட்டன. எல்லாத்திணைகளையும் பாடுதலில் வல்லவர். போர்மேல் நாட்டங்கொண்ட நெடுஞ்செழியனை நன்னெறிப்படுத்தியவர் இவரே. மகளிர் கடற்கரையில் விளையாட்டயர்வதனை நற் : 123 ஆம் பாடலில் விளங்கக் கூறியுள்ளார். தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த திருத்துறைப் பூண்டிப்பகுதியில் உள்ள மாங்குடி இவரூர் போலும். இவர் பாடியன நற் : 1, மதுரைக்காஞ்சி : 1, குறுந்: 1, அகம் 1,: புறம் : 6, திருவள்ளுவமாலை 1 ஆகப்பதினொரு பாடல்களாம்.

## 49. காப்பியஞ் சேந்தனார் (246)

சேந்தன் என்னும் இயற்பெயரினர். காப்பியக் குடியினர் போலும். ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியரையும் அக்குடியினர் என்பர். காப்பியம் செய்தமையாலும் இப்பெயர் பெற்றிருக்கக் கூடும். காப்பியக்குடியை ஓரூர் என்பாரும் உளர். இவர் பாடியது பாலைத்திணையைப் பற்றி. "நெடுஞ் சுவர்ப் பல்லியும் பாங்கில் தேற்றும்" என்றமையால் நிமித்தங்களில் இவருக்குள்ள நம்பிக்கை புலனாம்.

## 50. காமக்கணிப் பசலையார் (243)

பெண்பாற்புலவர். விரும்பப்படும் கண்களை உடையவர் என்பது இதன்பொருள். காமாக்ஷி என்பதன் தமிழாக்கம். பசலை நோயைச் சிறப்பித்தமையின் இப்பெயர் பெற்றார் என்னலாம். மதுரைக் காமக்கணிப்பசலையார் என்று பிறவிடங்களிற் காணப் படுதலின் இவர் ஊர் மதுரையென்று கருத இடம் தருகின்றது. பாலை முல்லை முதலியவற்றைச் சிறப்பித்துள்ளார். நிலையற்ற பொருளை வேண்டித் தலைவியரைப் பிரியாதீர் என்று குயில் கூவா நிற்கும் என இளவேனிலைத் தற்குறிப்பேற்றம் படப்பாடி யுள்ளார் இவர் பாடியன நற் : 1, அகம் 1.

## 51. காரிக் கண்ணனார் (237)

காவிரிப் பூம்பட்டினத்தில் வாழ்ந்தவர், வணிக மரபினர். "கழைமாய் காவிரிக் கடல் மண்டு பெருந்துறை" எனத் தம் ஊரைச் சிறப்பித்தனர். இவரால் பாடப்பட்டோர் 1. பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன். 2. சேரலன்சேனாபதி பதி பிட்டங்கொற்றன். 3. சோழன் பெருந்திருமாவளவன். 4. பாண்டியன் பெருவழுதி 5. நடு அய் அண்டிரன். பாலைத் திணையைப் பலவாறகப் புனைந்து பாடியுள்ளார். கார்ப்பருவத்தில் வெவ்வேறாகிய பற்பல உருவத்தோடு எழுகின்ற மேகங்களுக்கு இரவலர்க்குப்பரிசளிக்க அண்டிரன் தொகுத்து வைத்த யானைத் திரளைத் தம்பாடலில் இவர் உவமை காட்டியுள்ள திறம் நயமுடையது. இவர் பாடியன நற்:1, குறுந்:1 அகம் 2, ஆக நான்கு.

## 52. காவன் முல்லைப் பூதனார் (274)

பூதன் என்னும் பெயரினர். காவல்முல்லை என்று ஓர் புறத்துறை உண்டு. அத்துறை பாடுவதில் வல்லவர்போலும். அதனால் அவ்அடைமொழி பெற்றனர் மிகுபொருள் தொகுப் போரிடம் அருள் உள்ளம் இராது என்கிறார். 'கணிவாய்ப் பல்லி' என்றிவர் பாடியிருத்தலின் சோதிடத்தில் நம்பிக்கை உடையார் போலும். அதிரற்பூ காட்டுப் பூனையின் எயிறு போன்றிருக்கும் என்கின்றார். நெல்லிக்காயைக்கொண்டு மந்திவட்டாடும் என்றனர். இவர் பாடியன:1, குறுந்:3, அகநா:5, ஆக எட்டுப் பாடல்கள்.

## 53. காவிரிப் பூம்பட்டினத்துச் செங்கண்ணனார். (389)

ஊராலும் உறுப்பாலும் இப்பெயர் பெற்ற இப்பாவலர் அகநானூற்றில் இரண்டு பாடல்கள் பாலைத்திணையைப்பற்றி யும், (103, 271), குறிஞ்சியைப்பற்றி நற்றிணையில் ஒரு பாடலும் பாடியுள்ளார். அஃியன் என்பானையும் அவன் மலையையும் சிறப்பித்துள்ளார். அகம். 271. மயிலின் குடுமிக்கு வாகைப் பூவை உவமை காட்டியுள்ளார். பாலைத்திணை பாடுவதில் வல்லவர். கோழி கிளறிய மண்ணிடத்து நன்பொன் இமைக்கும் என்றுகூறி, தலைவன் செல்வக்குறைபாடற்றவன் என்பலதப் பெறவைத்தார். இவர் பாடியன நற்:1 குறுந்:1, அகம் 2 ஆக 4.

## 54. கிடங்கில், காவிதிக் கீரங்கண்ணனார் (218)

கண்ணனார் என்னும் பெயரினர். கீரன் என்பாரின் மகன் போலும். காவிதி இவர் பெற்ற பட்டம். உழுவித்துண்ணும் வேளாளர். கிடங்கில் என்பது தற்போது திண்டிவனம் எனப்படும். இவர் நெய்தல், குறிஞ்சித் திணைகளைப் பாடிச் சிறப்பிப்பர். மாலைப் பொழுதை இவர் புனைந்துரைக்கும் அழகு சுவை தருவது ஒன்றாம். இவர் பாடியன நற் 1, குறுந்: 1

## 55. கிடங்கில், காவிதிப் பெருங்கொற்றனார் (364)

ஏனையோரினின்றும் வேறுபடுத்துணர்தற்குப் பெருங் கொற்றன் எனப்பட்டனர். கிடங்கில் - திண்டிவனம். காவிதி - பட்டம். முல்லைத்திணையைச் சிறப்பித்துள்ளார். "பல்லா தந்த கல்லாக் கோவலர் "என்று இவர்கூறுவதன் நயம் அழகிது.

## 56. கிள்ளி மங்கலங் கிழார் மகனார் சோகோவனார் (365)

கோவன் என்பதே இவரியற்பெயர். சோ என்னும் அடை மொழியின் காரணம் அறியக் கூடவில்லை. வேளாளர் கிள்ளி மங்கலம் - ஊர்ப் பெயர். பாண்டி நாட்டிலுள்ளது. கிள்ளி மங்கலம் கிழார் என்பது இவர் தந்தை பெயர் போலும். குறிஞ்சித் திணையைச் சிறப்பிப்பர். வரையாது ஒழுகும் தலைவனைச் "சான்றோய் அல்லை" என்று இயற்பழித்து, தோழி கூறியதாகச் செய்யுள் செய்திருக்கும் நயம் சுவைக்கத்தக்கது.

## 57. கீரங்கீரனார் (78)

நெய்தலைப் புனைந்து பாடியுள்ள இவர் கீரன் என்பாரின் புதல்வராவர். வரைய வரும் தலைவனின் தேர் மணி ஓசை எல்லோரும் கேட்கும்படி அமையும் என்கிறார். தந்தை பெயர் மைந்தனுக்கிடுதல் இன்றும் வழக்கிலுளது.

## 58. கீரத்தனார் (42)

கீரன் என்பது இயற்பெயர். அத்தன் தலைமை பற்றி வந்திருக் கலாம். அன்றிக் கீரத்தன் என்றே அழைக்கப்பட்டிருக்கலாம். முல்லைத் திணையைச் சிறப்பித்துள்ளார். தலைவன் பிரிந்த விடத்து, தலைவியை 'மண்ணாக் கூந்தல்' என்று கூறி மகிழ்விக் கிறார்.

## 59. குடவாயிற் கீரத்தனார் (27, 212, 379

மேலே கண்ட கீரத்தனாரே இவர். குடவாயிலே இவர் ஊர். இவ்வூர் தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த நன்னிலந் தாலுக்கா விற்கு அண்மையில் உள்ளது. சோழரது நிதிக் குவியல் குடவாயி லின்கண் இருந்தது என்று தெரிகிறது. அகம் 60. குடந்தை வேறு குடவாயில் வேறு. "தேர்வண் சோழர் குடந்தை வாயில்" என்று மிடத்து குடந்தை என்றது குட வாயிலே. நற் 379. சோழன் செங்கணான் சேரன் கணைக் காலிரும் பொறையைச் சமரில் வென்று அவனைச் சிறையில் வைத்ததும் இக் குடவாயிலின் கண்ணேயாம்.

இவர் தம் பாடல்களால் தமிழக வரலாற்றுச் செய்திகள் பற்பல புலனாகின்றன. அகம் : 44, 60, 345, 366. உறையூரும் காவிரி யும் இவராற் சிறப்பிக்கப்பட்டன. மற்றும் சேரனுடைய தொண்டி, பாண்டியரின் கூடல் நகர், கொற்கைத் துறை முதலியனவும் இவராற் பாராட்டப்பட்டன. முடிமன்னர் மூவராலும் நன்னன் என்பவனாலும் இவர் ஆதரிக்கப்பட்டனர். பெரும்பாலும் பாலைத் திணையையே பாடிச் செல்வர். இவர் இயற்றிய பாடல்கள் 18. நற் : 4, புறநா : 1, குறுந் : 3, அகநா : 10. இவர் பாடலில் திணை மயக்கம் காணலாம். வினைவயிற் சென்று மீண்டு வந்த தலைவனைக் கண்ட தலைவி தன்னை நன்கு அலங்கரித்துக் கொள்ளாது ஓடி வந்து ஆர்வ மிகுதியால் தழுவிக்கொண்ட செயல் மிகவும் சுவை பயப்பது ஒன்றாம்.

## 60. குண்டுகட் பாலியாதனார் (220)

பாலி என்பது ஓரூர். ஆழமான கண்களை உடையவர்; கூர்மையான பார்வை கொண்டவர் என்றும் பொருள் கோடல் தகும். சினையாலும் இடத்தாலும் இப் பெயர் பெற்றனர். பகைவர் தரும் திறைப் பொருள்களை அரசர் இரவலர்க்குக் கொடுத்துவிடும் வழக்கம் உண்டென்பது இவர் பாடலால் தெரிய வருகின்றது. இவர் குன்று கேட் பாலீகனார் எனவும் வழங்கப்படுவர். இவர் பாடியன : நற் : 1, புறநா 1.

## 61. குதிரைத் தறியனார் (296)

குதிரைத் தறி என்பது ஓரூர் போலும். குதிரை மலைப் பக்கத்து இருத்தல் கூடும். பாலைத்திணை பாடியவர். குதிரைத் தீயனார் என்றும் வழங்கப்படுவார். சரக்கொன்றைக்கு யானை யின் நெற்றிப் பட்டத்தை உவமை காட்டியுள்ளார்.

## 62. குளம்பனார் (288)

குளம்பு என்னும் ஊரினர். ஊர் பற்றி வந்த பெயர். குளம்பா தாயனார் என்னும் பெயரில் புறத்தில் ஒருவர் காணப்படுகின்றார். "செம்முது பெண்டி ரொடு நெல் முன் நிறீஇக் கட்டிற் கேட்கும்" பண்பு பண்டு உண்டென்பது இவர் பாடலால் அறியத்தகும்.

## 63. குறமகள் குறியெயினி (357)

இவர் பெண் பாலினர். எயினி இயற்பெயர். இதனால் இவர் சாதி பற்றி இப் பெயர் பெற்றனர். தம் சாதிக்கேற்ப இவர் குறிஞ்சித் திணையைப் பாடினர். புறத்திற் குறமகள் இளவெயினி என்று ஒருவர் காணப்படுகின்றார். புறம் 157. "நின் குறிப்பு எவனோ தோழி என் குறிப்பு" என்று பாடியிருத்தலின் குறியெயினி எனப் பட்டார் போலும். அன்றிக் குறி கூறுவதில் வல்லள் போலும்.

## 64. குன்றியனார் (117, 239)

இவர் சேர நாட்டினர். தொண்டியைச் சிறப்பித்தனர். குறுந் : 238. களவு கற்பு என்னும் இரண்டும் இவராற் பாடப் பட்டன. மாலைப்பொழுது இவர் பாடலில் நன்கு வருணிக்கப் பட்டுளது.

## 65. குன்றூர் கிழார் மகனார் கண்ணத்தனார் (332)

கிழார் எனவே வேளாளராம். கண்ணன் என்பது இயற்பெயர். அத்தன் தலைமைபற்றி வந்தது. கண்ணன் + அத்தன் = கண்ணத் தனாயிற்று என்னலாம். குறிஞ்சித் திணையைப் பாடியுள்ளார். தலைவனைத் தழுவும் காலும் தலைவிக்கு வளையல்கள் நெகிழ்ந்து போதலைக் 'குவளைக் குறுநர் நீர் வேட்டாங்கு' என்னும் உவமை வாயிலாகக் குறிப்பிட்ட நயம் உணரற்பாலது.

## 66. கூடலூரப் பல்கண்ணனார் (200, 380)

கூடலூர் ஒரூர். நீர் நாட்டின் கண்ணுள்ளது. கூடலூர்ப் பல்கண்ணனார் என்றும் அழைக்கப்படுவார். கண்ணன் இயற் பெயர் ஊடல், சுவைபட இவர் பாடிய மருதத்திணைப் பாடல் சுவைத்தின்புறத்தக்கது.

## 67. கூற்றங் குமரனார் (244)

குமரன் என்னும் இயற்பெயரினர். இவர் தந்தை கூற்றன் என்பார். முகம் புகு கிளவி பாடுவதில் சிறந்தவர். வண்டு பாடும் ஓசையை யாழோசையென்று அசுணம் மயங்கும் என்றது. தலைவனால் ஏற்பட்ட வேறுபாட்டை முருகு அணங்கிற்றென்று நற்றாய் மயங்கின செயற்கு உவமையாகக் காட்டப்பட்டது.

## 68. கொள்ளம் பக்கனார் (147)

பக்கன் என்பது இவர் இயற்பெயர். அல்லது அனைவரிடமும் அன்பு செலுத்தி இப்பெயர் பெற்றார் போலும். இவராற் பாடப் பட்டது குறிஞ்சித்திணை. கோளம் பக்கனார் என்றும் வழங்கப் படுவர். கோளம் என்பது ஓர் ஊர். திருச்கோழம்பம் என்னும் இடத்தைக் குறிக்கும். இவர் பாடலில் நகைச்சுவையைக் காணலாம்.

## 69. கொற்றங் கொற்றனார் (259)

வேளாளர். மாற்றூர் கிழார் மகனார் கொற்றங் கொற்றனார் என்பர். கொற்றன் என்னும் நிலைமொழி அன்கெட்டு அம்முப் புணர்ந்தது. பண்ணன் என்பானையும் அவன் ஆண்ட சிறுகுடியையும் சிறப்பிப்பர். அகம். 54. சிறுகுடி காவிரியின் வடபாலுள்ளது. குறிஞ்சியைப் புனைந்து பாடுவர். இவர் பாடியன : நற் 1, அகம் 1.

## 70. கொற்றனார் (30)

இவர் செல்லூர் கிழார் மகனார் பெரும்பூதங் கொற்றனார் எனவும், நக்கீரருடைய புதல்வர் எனவும் இருவகையாகக் கூறுவர். கீரங் கொற்றனார் என்றும் அழைக்கப்பட்டனர். செல்லூர் என்பது கீழ்க் கடற்கரையில் உள்ளது. பரசுராமர் வேள்வி செய்த ஊர் இதுவே. வணிக மரபினர். பரத்தையர் பலர் தலைவனைச் சூழ்ந்து அவன் கைகளைப் பிடித்து இழுக்கும் செய்தியைத் தம்பாடலில் கூறியுள்ளார். இவர் பாடிய மருதத் திணைப்பாடல் சுவைக்கத்தக்கது. இவர் பாடியன : நற்:40, குறுந்:1, அகம் 1 ஆக மூன்றாம்.

## 71. கோட்டம்பலவனார் (95)

இவரூர் கொட்டம்பலம்; கோட்டம்பலம் எனவும் வழங்கும். இவர் பாடலிற் 'குறக்குறு மாக்கள் தாளம் கொட்டும்' என்னும் தொடரிற் 'கொட்டும்' என்னும் சொற் சிறப்பான் இப்பெயர்

பெற்றார். சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை என அகத்தில் வருவதால் கோட்டம்பலமே கொட்டம்பல மாயிற்றுப் போலும். கயிற்றின்மேல் கழைக் கூத்தி நடந்து செல்லும் ஆட்டத்தைத் தம்பாடலிற் குறிப்பிட்டுள்ளார்.

## 72. கோக்குள முற்றனார் (96)

கோக்குள முற்றம் என்பது ஒரூர். வெண்காடென்பர். நெய்தலும் முல்லையும் இவராற் பாடப்பட்டன. "குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்" என்று வருவதால் குளமுற்றம் என்னும் ஊரில் வாழ்ந்தவர் என்று தெரிகிறது. கோ - தலைமை பற்றி வந்தது. வேளாண் சாதியினர். நெய்தலும் முல்லையும் இவராற் சிறப்பிக்கப்பட்டன. துன்பத்துப் புலம்பல், ஆங்கு நெஞ்சழிதல், பசலை பாய்தல் போன்ற மெய்ப்பாடுகளை இவர் பாடலிற் காணலாம். இவர் பாடியன : நற் 1, அகம் 1.

## 73. கோட்டியூர் நல்லந்தையார் (211)

நல்லன் என்பானின் தந்தை நல்லந்தையார் எனப்பட்டனர். பாண்டி நாட்டிலுள்ள திருக்கோட்டியூர் இதுவே. நெய்தல் திணையைச் சிறப்பித்துள்ளார். குருகிற்கு அஞ்சி ஓடிய இறாமீன் தாழம்பூவைக் குருகெனக் கருதி அஞ்சும் என்று மயக்க அணி அமையப் பாடியுள்ளார்.

## 74. கோண்மா நெடுங்கோட்டனார் (40)

நெடுங்கோடு ஊர் போலும். மருதத்திணையைச் சிறப்பித்துள்ளார். புலி, சிங்கம் போன்ற ஆற்றலுடையார் போலும். அது பற்றி இவ் அடைமொழி பெற்றிருக்கக்கூடும் என்பாரும் உண்டு. மருதத்திணையைப் பாடியுள்ளார். புதல்வன் பிறந்துள்ளான் என்பதை அறிந்து பரத்தையர் சேரியில் தங்கிய தலைவன் பகலில் வர நாணமுற்று கள்வன்போல இரவில் வந்தனன் என்று வியக்குமாறு தம்பாடலிற் கூறிச் செல்வர்.

## 75. கோவூர் கிழார் (393)

வேளாளர். ஊர் பற்றி வந்த பெயர். அருளாளர். ஒற்றுமை விரும்பி. கிள்ளிவளவன் பகைமை முற்றி மலையமான் மக்களை யானைக் காலில் இடறச் செய்தபொழுது இவர் அவனைப்பாடி அம் மக்களை உய்வித்தார். புறம் 46. இளந்தத்தன் என்பானை

ஒற்றன் என்று கருதிக் கொல்லத் துணிந்த நெடுங்கிள்ளியிடம் அறிவுரைகள் கூறிச் சினம் தணிவித்து தத்தனை உய்வித்தனர். புறம் 47. சோழ மன்னர்களால் ஆதரிக்கப்பட்டவர். நன்றி மறவாப் பண்பினர், கனாநூல், சோதிடநூல், இசைநூல் ஆகிய வற்றில் வல்லுநர். அஞ்சாநெஞ்சர். "சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும், அறத்து வழிப்படூஉம் தோற்றம்போல" "உடும்புரித் தன்ன என்பெழு மருங்கிற் கடும்பின் கடும்பசி" "புனிறுதீர் குழவிக் கிளிற்றுமுலை போலச் சுரந்த நீர் காவிரி" "தைஇத் திங்கட் டண்கயம் போலக் கொளக்கொளக் குறைபடா கூழுடை வியனகர்" "வெய்துண்ட வியர்ப்பல்லது செய்தொழிலால் வியர்ப்பு அறியோம்" போன்ற உவமைகளும் தொடர்களும் இவர் தம் சுவையறி பெற்றியை விளக்குவனவாம். குறிஞ்சித் திணையைச் சிறப்பிப்பார். இவர் பாடியன நற்:1, குறுந்:1, புறம். 15 ஆகப் பதினேழு பாடல்களாம். யானையை வாலா வேழம் என்ற தொடராற் குறிப்பிட்ட நயம் அறிக.

## 76. கோளியூர் கிழார் மகனார் செழியனார் (383)

செழியன் என்னும் பெயரினர். வேளாண் மரபினர். இவரூர் கோளியூர். இவர் தந்தையார் கிழாராவர். இவரும் குறுங் கோழியூர் கிழார் என்பவரும் ஒருவரே என்பர். யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையைப் பற்றிய வீரவரலாறு இவர் பாடல்களால் விளங்கும். 'சோற்றை ஆக்கும் தீயாலும் வெயிலா லும் உண்டாகும் வெம்மையைத் தவிர உள் நாட்டில் வேறு வெம்மையில்லை" என்று ஒரு பாட்டில் நயம்படக் கூறியுள்ளார். குறிஞ்சித் திணையைச் சிறப்பிப்பர். பெண்புலி பசியுடையதென்று கருதி ஆண்புலி களிற்றை அட்டு முழங்கும் என்று கூறி, அதனால் தலைவியின் வரைதல் வேட்கையை அறிந்து தலைவன் அயல் நாடு சென்று பகைவென்று பொருள்கொண்டு வலம்புரி முழங்க வரல் வேண்டும் என்னும் கருத்தைப் பெறவைத்தார்.

## 77. சல்லியங் குமரனார் (141)

சல்லியன் என்பார் இவரின் தந்தையாவர். உறையூர்ச் சல்லியங்குமரனார் என்று அழைக்கப்பட்டார். கிள்ளிவளவன் காலத்தவர். அம்பல் என்னுமூரையும் அரிசிலாற்றையும் சிறப்பித் துள்ளார். பாலையும் மருதமும் இவராற் பாடப்பட்டன. இவர் பாடியன நற் 1, குறுந்:1. நீண்ட சடையையும் அசையாத மெய்யையுமுடைய தவஞ் செய்பவர் போல கொன்றை மரங்கள் விளங்கின என்று இவர் கூறும் உவமையின் சிறப்பை ஓர்க.

## 78. சாத்தந்தையார் (26)

சாத்தன் தந்தையார் சாத்தந்தையார் ஆனார். (தொல்: எழுத்து:347) போர்வைக் கோப்பெரு நற்கிள்ளியின் வீரத்தைப் புனைந்து பாடியுள்ளார். புறம் 80. திணை மொழி ஐம்பது பாடிய கண்ணஞ் சேந்தனாருடைய தந்தை எனவும் கருதப்படுவர். மற்போரியல்புகளை இவர் பாடலிற் காணலாம். பாலைத் திணை இவராற் பாடப்பட்டது. இவர் பாடியன. நற்:1, புறம் 4, ஆக 5. தாய்வீடு செல்வம் முதலியவற்றாற் குறைவின்றியிருந்தாலும் அவற்றை ஒருவி தலைவன் பாற்பெறும் இன்பம் ஒன்றையே கருதி மகளிர் புக்ககம் செல்வர் என்னும் கருத்தை இவர் பாடலால் அறியலாம்.

## 79. சிறுமோலிகனார் (61)

சங்கப்பாவலர். சிறுமை ஈண்டு இளமை. மோலீகன் காரணப் பெயராயிருத்தல் கூடும். மோலிகன் என்பாரும் உண்டு. குறிஞ்சியைப் பாடியுள்ளார். உறங்காதிருத்தற்குக் காரணம் என்னை என்று அன்னை கேட்ட வினாவிற்குத் தலைவனை நினைந்தோர்க்குத் தூக்கமும் வருமோ என்று தலைவி கூறிய விடையில் அமைந்துள்ள நயம் உணரற்பாற்று.

## 80. சிறைக்குடியாந்தையார் (16)

சிறைக்குடி என்னும் ஊரினர். ஆதன் தந்தை ஆந்தை. புணர்ந்து இருப்பின் பொருள் புணராது; பொருள் வயிற் பிரியன் புணர்ச்சி நிகழாது என்று தலைவன் வருந்துவதாகக் கூறியுள் ளார். தலைவி பூப்பெய்திய மூன்றுநாட் பிரிந்துறைதலை ஓர் யாண்டளவு பிரிந்தோர் போன்றுளது என்கின்றார். "பூவிடைப் படினும் யாண்டு கழிந்தன்ன" என்னும் குறுந்தொகைப் பாடலைக் காண்க. குறுந்: 57. தலைவன் உயிர்த் தோழியை அறியுமாற் றினை குறுந்: 222ஆம் பாடலால் நன்கு விளக்கினார். இவருடைய பாடல்கள் யாவும் கற்போருள்ளத்தை ஈர்க்கும் தன்மையன. இவர் பாடியன நற் : 1, குறுந் : 8

## 81. சீத்தலைச் சாத்தனார் (36, 127, 339)

சீத்தலை என்பது ஒரூர். ஏனைய சாத்தர்களின்றும் வேறு படுத்தி உணர சீத்தலைச் சாத்தனார் எனப்பட்டனர். திருச்சி மாவட்டத்தில் உள்ள பெருமளூர்த் (பெரம்பலூர்)

தாலுக்காவில் உள்ளது. பலசரக்கு வாணிபஞ் செய்தனராதலின் கூலவாணிகன் சாத்தனார் எனவும் அழைக்கப் பட்டனர். மணிமேகலையென்னும் ஐம்பெருங் காப்பியத்துள் ஒன்றைச் செய்தவர் இவரே. பௌத்த மதத்தினர். வணிக மரபினர். பாண்டியன் சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறனைப் புகழ்ந்துள்ளார். மழைக்காலத்தில் அடிமரங்களில் அட்டைகள் ஏறி ஒட்டிக்கொள்ளுதலையும், வெளிமான் கொம்பினை வாழைப்பூ உதிர்ந்த நாற்றிற்கு உவமம் காட்டியிருத்தலையும் இவர் பாடலிற் காணலாம். முல்லையொழிய ஏனையன இவராற் பாடப்பட்டன. இவர் பாடியன : நற் : 3, குறுந்தொகை 1. அகம்:5, புறம்:1, திருவள்ளுவ மாலையில் 1 ஆக 11.

## 82. செங்கண்ணனார் (122)

மதுரைச் செங்கண்ணனார் என்று அகத்தில் கூறப்படுபவர் இவரே. செயலூர்க் கொடுஞ் செங்கண்ணனார் என்ற கடைச் சங்கப் புலவரும் இவரும் ஒருவரோ அன்றி வேறானவரோ அறியேம். குறிஞ்சியே இவர் பாடியது. இவர் பாடியன அகத்தில் 1. நற்:1 ஆக இரண்டு.

## 83. செம்பியனார் (102)

சோழர் மரபினர். குறிஞ்சியைப் பாடியுள்ளார். கிள்ளை விடு தூது பட இவர் பாடிய நற்றிணைப் பாட்டு மிகவும் பாராட்டற் பாலது.

## 84. சேகம் பூதனார் (69, 261)

சேந்தம் பூதனாரின் இவர் வேறலர். மதுரை எழுத்தாளன் சேந்தம் பூதனார் என்பவரும் இவரே. கடைச் சங்கத்தில் ஏடெழுதுவோராய் இருந்தனர். சேந்தன் என்பாரின் மகனாவார். இவரையே சேகம் பூதனார் என்று வழங்கினர். சேந்தங் கண்ணனார், சேந்தன் கொற்றனார், சேந்தன் ரேனார், சேந்தன் கூத்தனார் என்ற பெயர்களிற் பல புலவர்கள் இருந்தனர். 'திறவோர் செய்வினை அறவதாகும்' என்று இவர் பாடுவதால் பெரியோர்பால் பெருமதிப்புள்ளவர் என்பது புலனாகும். மலைப் பாம்பு யானையைப் புரட்டுவதாகக் கூறுவர். குறிஞ்சி, நெய்தல், முல்லைத் திணைகளைப் பாடியுள்ளார். உமணர் கழுதைகளின் மேல் உப்புப் பொதிகளைச் சுமந்து செல்வர் என்பர். இவர் பாடியன. நற் :2 குறுந் : 3, அகம், 2 ஆக 7.

## 85. சேந்தங் கண்ணனார் (54)

சேந்தன் என்பாரின் மகனார் சேந்தங் கண்ணனார் எனப்பட்டார். இயற்பெயர் கண்ணன். நெய்தல் இவராற் சிறப்பிக்கப்பட்டது. இவர் பாடிய அழுகைச் சுவை அமைந்த நற்றிணைப் பாடல் நனிபேரின்பம் நல்குவதாம்.

சேந்தம் பூதனார்.

மேலே சேகம் பூதனாரின் குறிப்பைப் பார்க்க.

## 86. தங்கால், ஆத்திரேயன் செங்கண்ணனார் (386)

"ஊரும் பெயரும் உடைத்தொழிற் கருவியும், யாரும் சார்த்தி அவை அவை பெறுமே" என்ற விதிப்படி (தொல்:பொருள்:630) ஊரும் குலமும் கூட்டித்தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார் எனப்பட்டார். தற்காலத்தில் வழங்கப்படும் திருத்தண்கால் என்பதே பண்டு தங்கால் என வழங்குவதாயிற்று. திருவில்லிபுத்தூருக்கு அண்மையில் உள்ளது. ஒரு விட்டுணுத்தலம். இவர் அந்தணர். ஆத்திரேய கோத்திரத்தார். முகம்புகு கிளவி பாட வல்லவர். பன்றி குறவருடைய தினைக் கதிரைத் தின்று வேங்கைக்கு அஞ்சாது சாரலிலே உறங்கும் என்று கூறி, தலைவன் பரத்தையர்பால் இன்பம் துய்த்து உலகம் இகழும் இகழ்ச்சிக்கு அஞ்சாது தலைவியின் வீட்டு முன்றிலிற் காத்து வைகினான் என்னும் குறிப்பைப் பெற வைத்த இவர் தம் நுண் மதியை என்னென்பேம்.

## 87, தங்கால், பொற்கொல்லன் வெண்ணாகனார் (313)

இவர் கம்மாளர். தட்டார் என்பர். தங்கால் என்பது திருத்தண் கால் என்னுமூர். பூட்கொல்லன், பூட்கொற்றன், பூட்கோலவன் என்றெல்லாம் ஏடெழுதுவோர் பிழைபட எழுதினர். நற் : 313ஆம் பாடலில் 'பொன்செய் கம்மியன் கைவினை கடுப்ப' என்று கூறியிருத்தலின் இவர் பணித்தட்டாரே. மதுரைப் பொற்கொல்லன் வெண்ணாகன் என ஒருவர் அகத்திற் காணப்படுகின்றார். இவர் தாம் அவரோ அன்றிப் பிறரோ அறியேம். குறிஞ்சியும் பாலையும் இவராற் பாடப்பட்டன. விடியற் காலையில் வேங்கை மரத்திற் பூத்த புதிய பூக்கள் பொன்னைப் பணி செய்யும் பொற்கொல்லனுடைய கைவினையை ஒத்திருக்கும் என்கின்றார். இவர் பாடியன : நற் : 1, குறுந் : 1, அகம் : 2, புறம் : 1 ஆக 5 பாடல்கள்.

## 88. தனி மகனார் (153)

இவர் பாடிய நற்றிணைப் பாடலில் (153) 'பாழ்காத்திருந்த தனி மகனை' உவமைகாட்டிய முகத்தால் இப் பெயர் பெற்றார் போலும். இயற்பெயர் அறியேம். பாலைத் திணையைப் புனைந்துள்ளார். என் நெஞ்சம் தலைவர்பாற் சென்றது. என் உடம்பு மாத்திரம் பாழ் காத்திருந்த தனி மகன் போன்று இங்கு இருக்கின்றதுஎன்று தலைவி கூற்றாக வியக்கும்வண்ணம் கூறியுள்ளார்.

## 89. தாயங் கண்ணனார் (219)

சோழ நாட்டினர். எருக்காட்டூரினர். இவ்வூர் தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த நன்னிலந் தாலுக்காவில் காவலகுடிக்குக் கீழ் பாலுள்ளது. தாயங்கண்ணியார் என்னும் பெயரில் புறத்தில் ஒரு பெண்பாற் புலவர் காணப்படுகின்றார். இவருக்கு அவர் உறவினராக இருக்கவும் கூடும். மயானத்தையும் அதன் தொன்மையையும் எவருக்கும் புறங்காட்டாத அதன் வன்மையையும் பாடியுள்ளார். காடு வாழ்த்துப் பாடியவர் இவரொருவரே. யவனர் வந்து பொன் கொடுத்து மிளகுப்பொதி வாங்கிச் செல்லும் வணிகத்தை இவர் பாடலிற் குறிப்பிட்டுள்ளார். திருப்பரங்குன்றம் இவராற் பாடப்பட்டது. வேங்கடமும், கொல்லியும், காவிரியும் உறையூரும் இவராற் சிறப்பிக்கப்பட்டன. எழினி என்பான் இவராற் பாராட்டுப் பெற்றான். குராவின் அரும்பைப் பாம்பின் பல்லிற்கு உவமித்தார். இதனையே கம்பரும் பின்பற்றி, "குரா வரும்பு அனைய கூர்வாள் எயிற்று வெங்குருளை நாகம்" என்று பாடிச் சென்றனர். இவர் பாடியன நற் : 1, அகம் : 7, புறம் : 1, குறுந் : 1 ஆகப் பத்துப் பாடல்கள்.

## 90. தும்பி சேர்கீரனார் (277)

இவர் தும்பி சொகினனார் என்றும் கூறப்படுவார். தும்பி - ஒருவகை வண்டு. சொகினம் - நிமித்தம். தும்பியை நோக்கிச் செய்தி கூறிய சிறப்பால் இப் பெயர் பெற்றார் போலும். தும்பி சேர் கீரனார் என்றும் பாடபேதமுண்டு. 'தச்சன் செய்த சிறுமா வையம், ஊர்ந்து இன்புறார் ஆயினும் கையின், ஈர்த்து இன்புறூஉம் இளையோர் போல' குறுந் : 61 என்று இவர் கூறிய உவமையின் நயம் உள்ளுதொறும் உவகை தருவதொன்றாம். கைம்மை நோன்பினை இவர் பாடலிற் காணலாம். அமுகை ததும்பும் எல்லாத் திணைகளையும் பாடியுள்ளார். இவர் பாடியன நற் : 1, குறுந் : 4 ஆக ஐந்து பாடல்கள்.

## 91. துறைக்குறுமாவிற் பாலங் கொற்றனார் (286)

பாலைத் திணையைப் பற்றிப் பாடிய இவரின் வரலாறு ஒன்றும் அறியக்கூடவில்லை. வணிகர். மகளிரணியும் சிமிக்கியைப் போன்று குமிழம்பூ விளங்கும் எனகின்றார்.

## 92. தூங்கலோரியார் (60)

இவர் தழும்பனையும் அவனது ஊணூரையும் பாடியதாக நக்கீரனார் அகம் 239-ல் "தூங்கல் பாடிய ஓங்குபெரு நல்லிசை... ஊணூர்" என்று சிறப்பித்துள்ளார். அப் பாடல் இப்பொழுது கிடைக்கப் பெறவில்லை. மருதமும் பாலையும் இவராற் சிறப்பிக்கபட்டன. மலை கண்டன்ன நெற்குவியல் என்கிறார். செல்வக் குறைபாடுள்ள ஒருவனது வாழ்க்கையை "ஓரான் வல்சிச் சீரில் வாழ்க்கை' என்று குறிப்பிடுகின்றார். ஒரு பசுவை மட்டும் கொண்டு வாழும் வாழ்க்கை வறுமை வாழ்க்கை எனப்பட்டது. இவர் பாடியன : நற் : *1*, குறுந் : 2 ஆக 3 பாடல்கள்.

## 93. தேய்புரிப் பழங்கயிற்றினார் (284)

"தேய்புரிப் பழங்கயிறுபோல" என்று கூறிய அருந்தொடர் மொழியாகிய உவமையே இவர்க்குப் பெயராயிற்று. நெஞ்சமும் அறிவும் மாறுகொண்டிருந்தலால் என் உடம்பு யானையால் இழுக்கப்பட்டுத் தேய்புரிப் பழங்கயிறு இற்றொழிவதுபோல அழிய வேண்டியதுதானே என்று தலைவன் வருந்துவதாக நற் : 284ல் கூறியுள்ள நயம் சுவை பயப்பதொன்றாம்.

## 94. தேவனார் (227)

நெய்தல் திணையைச் சிறப்பிக்கும் இவர் சோழரது ஆர்க்காட்டைப் பாடியுள்ளார்.

தொண்டைமான் இளந்திரையன் இளந்திரையன் என்பாரும் இவரே யாகலின் அவர் வரலாற்றுக் குறிப்பே இவருக்கும் பொருந்தும், மேலே *(14)* இளந்திரையன் குறிப்பைப் பார்க்க.

## 95. தொல்கபிலர் (114, 276, 328, 399)

பத்துப்பாட்டுள் ஒன்றாகிய குறிஞ்சிப்பாட்டைப்பாடிய கபிலரினும் வேறானவர். நற் : 114ல் மழைபெய்தலாற் பொறிக்கப்பட்ட புள்ளிகளை உடைய கான்யாற்றங் கரையைப் "புள்ளித்

தொல்கறை'' என்றமையால் தொல்கபிலர் எனப்பட்டனர். எம்மாளிகையை நின்னுடையதாகக் கருதி நீ தங்குவாயாக என்னும் கருத்தை உள்ளடக்கிக் கட்டுப்பரணைத் தன்னுடைய தாகக்கொண்டு மயில் தங்கும் என்று நற் : 276ல் தோழிகூற்றாக இவர் கூறிச்செல்லும் நயம் சுவையுடையதாம். மடலேறுவேன் என்னும் தலைவன் கூற்றாக இவர்பாடிய குறுந் 14 ஆம்பாடல் வியப்புடையதாம். இவர் பாடியன : நற்:4, குறுந்:1, அகம்1. ஆக 6.

## 96. நக்கண்ணையார் (19, 87)

பெண்பாற் புலவர். தந்தை பெயர் பெருங்கோழி நாய்கன். சிறந்த கண்களை உடையவர் என்று பொருள்படும் நக்கண்ணை என்பது சுலோசனை என்னும் வடசொல்லின் தமிழாக்கம் என்பர். வணிக மரபினர். அரசர்க்கு மகட்கொடை தரும் பெருஞ் சிறப்பினர். நெய்தலும் குறிஞ்சியும் இவராற் பாடப்பட்டன. ஆமூர்மல்லனைப் போரில் வென்ற போர்வைக்கோ பெருநற் கிள்ளியை மணக்க விரும்பினர். இவர் தம் காதல் மிகுதியைப் புலப்படுத்திப் புறத்தில் 83, 84, 85 ஆம் பாடல்களிற் கூறியுள்ள செய்திகள் நனிபேரின்பம் நல்குவனவாம். அழிசியென்னும் சோழ மன்னனின் ஆர்க்காட்டைச் சிறப்பித்துள்ளார் நற்:87 இவர் பாடியன நற்:2, அகம்:1 புறம்:3 ஆக ஆறுபாடல்கள்.

## 97. நக்கீரர் (நக்கீரனார்) (31, 86, 197, 258, 340, 358, 367)

மதுரை ஊரினர். தந்தையார் கணக்காயனார். இயற்பெயர் கீரன். ந - சிறப்புணர்த்தும் இடைச்சொல். இவர் மதுரை, கணக்காயனார் மகனார் நக்கீரனார் என்று அழைக்கப்பட்டனர். அந்தணர். கடைச்சங்கப்புலவர் குழுவிற்குத் தலைமை தாங்கியவர். களவியலுக்கு உரை செய்தவர். பத்துப்பாட்டில் முருகாற்றுப்படையும், நெடுநல் வாடையும் இவரே இயற்றினார். எல்லாத் திணைகளின் இயற்கை நலன்களை நன்கறிந்த நல்லோர். கீரங்கொற்றனார் என்பவர் இவர் மகனார். புறத்தில் இவர் பாடியுள்ள பூவை நிலைப்பாடலும் (56) பொருண் மொழிக் காஞ்சிப் பாடலும் (189) மிக அழகு வாய்ந்தவை. நக்கீரர் நாலடி நாற்பது என்னும் நூலும் இவரதே. கைலைபாதி காளத்தி பாதியந்தாதி முதலியன இவர் பாடியன என்பர். ஆய்விற் குரியது. தமிழை இழித்துரைத்த குயக்கொண்டானை இறக்கப்பாடிப் பலர் வேண்ட மீண்டும் பிழைக்கப் பாடினர். அருமன் என்பானையும்

சிறுகுடி என்னும் ஊரையும் சிறப்பிப்பர். பாண்டியன் நெடுஞ் செழியனின் போராற்றலைப் புனைந்துள்ளார். இவர்பாடல்கள் உணர்த்தும் அரிய செய்திகளாவன.

1. கார்த்திகை மாதத்துக் கார்த்திகை அன்று மருமகளை வீட்டிற்கு அழைத்து வந்து அவளாற் பால் காய்ச்ச வைப்பது.
2. தூய்மையுடன் கார்நெல்லைக் கொண்டு வந்து அவல் இடித்துப் பொரித்து நிவேதிக்கும் படிச்செய்தல்.
3. கார்த்திகையன்று வீடுகளிலும் தெருக்களிலும் விளக்குகளை ஏற்றிவைத்து வழிபடுதல். அகம். 141.

நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே என்று சிவபெருமானோடு வாதிட்டவர். இவராற் பாடப்பட்டோர்.

1. கிள்ளிவளவன். 2. இடையர் தலைவன் கழுவுள் என்பான்.
3. வடுகர் தலைவன் எருமை. 4.குட்டுவன் சேரல் 5. திரையன்.
6. பழையன் மாறன். இவராற் சிறப்பிக்கப்பட்ட இடங்கள்.

1. காவிரிப் பூம்பட்டினம் 2. மருங்கூர்ப்பட்டினம் 3. தொண்டி 4. குடநாடு 5-மதுரை 6-தழும்பனுக்குரிய ஊணூர். இலவந்திகைத் துஞ்சிய நன்மாறனையும், (புறம் 56) பெருஞ் சாத்தனையும் (395) புகழ்ந்துள்ளார். இவர்பாடியன: நற்:7, குறுந்:8, அகம் 17, திருவள்ளுவமாலை 1, புறம் 3, பத்துப் பாட்டில் 2 ஆக 38. உள்ளுறை அமைத்துப்பாடுதலில், வல்லவர். நெய்தல், பாலை, மருதம், முல்லை ஆகிய திணை களைப் பாடியுள்ளார்.

## 98. நப்பாலத்தனார் (240)

பாலத்தன் இயற்பெயர். ந-சிறப்பிடைச் சொல் பாலத்தனார் என்றே வழங்கவும் படுவர். யாப்பிலைக் கணச் சூத்திரங்களும் செய்துள்ளார். வல்வில்லோரி இவராற் பாடப்பட்டவன். பாலை நிலத்தைப் படைத்த கடவுள் அதிற் சற்று நடந்து பார்ப்பானாக என அதன் கொடுமையைக் குறிப்பிடுவார். இவர் பாடியன நற்:2 வள்ளுவமாலை 1. ஆக 3.

## 99. நம்பிகுட்டுவனார் (நம்பிகுட்டுவன்) (145, 236, 345)

சேரர்மரபினர். குட்டுவர் என்பர் சேரர். குட்ட நாட்டை ஆண்டவர். நெய்தலும் குறிஞ்சியும் இவராற் பாடப்பட்டன. தலைவனின் மலையிலிருந்து வரும் காற்றுப்பட்ட விடத்து தலைவியின் பசலை நீங்கும் என்று இவர் கூறியுள்ளது சுவை

யுடையதாகும். நற்:236. ஆம்பல் மலர்வது காக்கை கொட்டாவி விடுதல் போலும் என்று குறிப்பிட்டுள்ளார் (345) நம்பி என்னும் சிறப்புப் பெயர் பெற்ற இவர் பாடியன: நற்:3, குறுந்:2, ஆக 5.

## 100. நல்லந்துவனார் (88)

அந்துவன் என்னும் இயற்பெயரினராகிய இவர் நல்லந்துவனார். அடைமொழியும் சிறப்பிடைச் சொல்லும் பெற்று அழைக்கப் பட்டார். மதுரை மருதனிளநாகனாரால் 'அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை' என்று புகழப் பெற்றவர். இப்பெயரினர் பலருளர். அவரினின்றும் வேறுபடுத்தறிதற்கு 'ஆசிரியர் நல்லந்துவனார்' எனப்பட்டனர். அந்தணர். மதுரை ஊரினர். கலித்தொகையைத் தொகுத்தருளிய கவிஞர். நெய்தற்கலி பாடிய நல்லோர். நெய்தல் நிலப்பழக்க வழக்கங்களும், வைதிக ஒழுக்கங்களும் நன்கெடுத்து விளக்கிச் சென்றனர். பரிபாடலில் நீர் விளையாட்டணி பற்றி இவர் பாடியவை பயிலுந்தோறும் பரவசப்படுத்தும். நெய்தற்கலி பயில்வார் கல்மனத்தராயினும் நெஞ்சுருகுவர். நாழிகை வட்டிலாற் பொழுதறியுந்திறன் இவர் பாடலிற் கூறப்பட்டுள்ளது. அகம் 43. யாஞ்செய் தொல்வினைக் கெவண் பேதுற்றனை'' என்று தோழி தலைவியைத் தேற்றிக் கூறுவதில் உள்ள அழுத்தம் உணர்க. இவர் பாடியன நற்:1. அகம்:1, பரிபாடல் 4, திருவள்ளுவமாலை 3, நெய்தற்கலி 33.

## 101. நல்லாவூர் கிழார் (154)

ஊர் பற்றி வந்த பெயர். கிழார் என்றமையின் வேளாளர் ஆவார். பண்டைக் காலத்தில் நடந்த திருமணச் சடங்கின் விளக்கம். இவர் பாடிய 'உழுந்து தலைப் பெய்த' என்னும் அகச் செய்யுளால் நன்கு அறியலாம். (அகம் 86) குறிஞ்சியும் மருதமும் இவராற் பாடப்பட்டன. இவர் பாடியன நற்:1, அகம் 1.

## 102. நல்லூர்ச் சிறுமேதாவியார் (282)

அந்தணர் என்பர். நன்பலூர்ச் சிறுமேதாவியார் எனவும் கூறப்படுவர். முல்லையும் குறிஞ்சியும் இவராற் சிறப்பிக்கப் பட்டன. வாயை மடித்து எழுப்பிடும் வீளை ஓசைக்கு முயல் அஞ்சிப் புதரில் மறையும் செயலும், நரியினது ஊளை காவலர் ஊதும் கொம்பின் ஒலியோடிணைந்து ஒலிக்கும் என்பதும் இவர் பாடல்களால் அறியக் கிடக்கின்றது. இவர் பாடியன நற்:1, அகம்:1, திருவள்ளுவமாலை 1.

## 103. நல்விளக்கனார் (85)

நல் விளக்கு என்னும் ஊரினர். ஊர் பற்றி வந்தது. குறிஞ்சியைப் சிறப்பிப்பர். இவர் பாடலிற் காணப்படும் உள்ளுறைப் பொருளும் இறைச்சியும் நனிபேரின்பம் பயக்கும். புலிக்கு அஞ்சிப் பிடியானை தன் கன்றைப் பாதுகாக்கும் என்று கூறி அதனால் தலைவிக்கு வரும் ஏதம் அஞ்சி தோழி தலைவியைப் பாதுகாப்பாள் என்னும் கருத்தைச் சுட்டிய இவர் பாடல் பெருஞ்சுவை தருகின்றது.

## 104. நல்வெள்ளியார் (7, 47)

பெண்பாற்புலவர். ஏடெழுதுவோர் நல்லொளியார் என்று பிழைபட எழுதினர். மதுரை ஊரினர். குறிஞ்சியும் பாலையும் இவராற் பாடப்பட்டன. 'வெண்ணெல் அருந்திய வரிநுதல் யானை, தண்ணறுஞ் சிலம்பில் துஞ்சும்' என்று கூறி அதன் வாயிலாக காதலனோடு இன்பம் நுகர்ந்து கவலையின்றித் தூங்குக என்று தலைவிக்குத் தோழி மகிழ்வூட்டினாள் என்று பாடுவர். இவர் பாடியன : நற்:2, குறுந்:1, அகம் 1.

## 105. நல்வேட்டனார் (53, 210, 292, 349)

வேளாண் மரபினர். மிளை கிழான் நல்வேட்டனார் எனவும் கூறப்படுவர். மிளை - ஓரூர். செல்வம் என்பது தம்மை வந்து அடைந்தவர்க்கு உதவுவதே என்பர். பிறர் துன்பம் துடைப்பதே செல்வம் என்ற இவர் பொதுநலம் போற்றற்பாலது. நற்:210. இவர் பாடியன நற்:4, குறுந்:1.

## 106. நற்சேந்தனார் (128)

வாதுளகோத்திரத்தினர். அந்தணர். கோடி மங்கலத்து வாதுளி நற்சேந்தனார் என்று குறிப்பிடப்படுவதால் இஃது அறிய லாயிற்று. பாலையும் குறிஞ்சியும் இவராற் பாடப்பட்டன. 'கண்ணியல் கழலன் தாரன் தண்பெணனச் சிறுபுறங் கவை யினன்' என்று தலைவி அறத்தொடு நிற்குந்திறனை அழகுறப் பாடியுள்ளார். இவர் பாடியன நற்:1, அகம் 2. ஆக மூன்று.

## 107. நற்றங்கொற்றனார் (136)

நத்தம் என்பது நற்றம் என்றாயிற்று. இப்பெயரிற் பலவூர்கள் உள்ளன. இவர் இயற்பெயர் கொற்றன் என்பதே. "அரும்பிணி

உறுநர்க்கு வேட்டது கொடாஅது, மருந்து ஆய்ந்து கொடுத்த அறவோன் போல" என்றவர் கூறிய உவமையின் நயத்தினை என்னென்பேம்.

## 108. நற்றமனார் (133)

இவராற் பாடப்பட்டது குறிஞ்சித்திணை. பிரிவிடைத் தோழி ஆற்றுவிப்பது, இரும்பினைப் பழுக்கக் காய்ச்சிய உலையிற் கொல்லன் பனைமடற் சின்னீர் தெளித்து நெருப்பைத் தணிப்பது போலாகும் என்று கூறியுள்ளார்.

## 109. நிகண்டன், கலைக்கோட்டுத் தண்டனார் (382)

இவர் கைத்தடிக்கு மான் கொம்பை நிமிர்த்திக் கொண்டமையால் இப்பெயர் பெற்றனர் போலும். இவர் கலைக் கோட்டுத் தண்டென்னும் பெயரில் நிகண்டு ஒன்று செய்தனர் என்று தெரிகிறது. களவியலுரைகாரர் இதனை இடுகுறிப் பெயர் என்றனர். நெய்தலைச் சிறப்பிப்பர். மாலைப் பொழுதை நன்கு வருணித்துள்ளார்.

## 110. நெய்தல் தத்தனார் (49)

இயற்பெயர் தத்தன். இப்பெயருடையார் பலர். அவரினின்றும் பகுத்துணர நெய்தல் தத்தனார் என அடைமொழி கொடுக்கப்பட்டனர். நெய்தல், பாலை இரண்டும் இவராற் பாடப்பட்டன. நீ படுந்துயரைத் தலைமகனூர்க்குச் சென்று அவனறியும்படிக் கூறுவோமோ என்று தோழி தலைவியை நோக்கிக் கூறியதாகக் கூறி மகிழ்விக்கிறார்: இவர் பாடியன நற்:1. அகம்:1.

## 111. நொச்சி நியமங்கிழார் (17, 208, 209)

நொச்சி நியமம் - ஓரூர். வேளாளர். இவரூர் நொச்சியம் எனப்படுகின்றது. நொச்சி நீயக்கிழார் என்று சிலர் பிழைபட எழுதினர். பூக்கோட் காஞ்சி இவர் இயற்றியதே. குறிஞ்சியைச் சிறப்பிப்பர். நீ படும் துயர் யாதென்று வினவிய தாய்க்குத் தலைவன் மார்பு அணங்கிற்றென்று தவறியுரைக்கத் தொடங்கினேன் என்று தலைவி கூறுவதாகப் படிப்போர்க்கு இன்சுவை யூட்டுகின்றார். புதுவதாகப் பூத்த வேங்கை மலரைப் பெற வேண்டி மகளிர் புலி புலி என்று பூசலிடுவதையும் அதனைக் கேட்டு உண்மையிற் புலி போந்தது போலும் என்று ஆடவர்

கருதி வில் அம்புடன் வருவதையும் விரித்துக் கூறியுள்ளார். (புலி (புலி என்று கூவினால் வேங்கையின் கிளை தாழ்ந்து மலர்கள் தரும் என்பது வழக்கு.) இவர் பாடியுன நற்:3, அகம் 1, புறம்:1, ஆக 5.,

## 112. பரணர்
## (6, 100, 201, 247, 260, 265, 270, 280, 300, 310, 350, 356)

கடைச் சங்கப் பாவலர். இவர் நண்பர் கபிலர். கபில பரணர் என உம்மைத் தொகைக்கு உதாரணம் காட்டுவர். வன்பரண ரினும் வேறானவர். பதிற்றுப்பத்தில் ஐந்தாம் பத்தைப் பாடியவர். அப்பத்திற்குரிய கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனிடம் உம்பல் (யானை) காட்டு வருவாயையும், அவன் மகன் குட்டுவன் சேரலையும் பரிசாகப் பெற்றனர். இவராற் பாடப்பட்டோர் :

1. சோழன் உருவப் பஃதேர் இளஞ்சேட் சென்னி.
2. சேரமான் குடக்கோ நெடுஞ் சேரலாதன்.
3. சோழன் வேற் பஃறடக்கைப் பெருநற்கிள்ளி.
4. வையாவிக் கோப்பெரும் பேகன்.
5. சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன்.

'பரணன் பாடினன் மற்கொல்' என்று ஔவையாராற் பாராட்டப்பட்டனர். 11-ஆம் திருமுறையில் வரும் பரணதேவ நாயனார் இவரின் வேறானவர். தன்னாற் புறக்கணிக்கப்பட்ட கண்ணகி என்பாளை மீண்டும் பெற்று வாழுமாறு பேகனுக்கு அறிவுறுத்திய அருளாளர். தழும்பனையும் அவன் ஊணுரையும் சிறப்பித்துப் பாடியுள்ளார். புறம் 348. தித்தனையும் அவனூரை யும், முசிறியையும் புகழ்ந்துள்ளார். வல்வில் ஓரி இவராற் சிறப்பிக் கப்பட்டான். தமிழக வரலாற்றின் அரிய பெரிய செய்திகள் இவர் பாடல்கள் வாயிலாக அறியப்படுகின்றன. கரிகாற் சோழனின் மகள் ஆதிமந்தியின் வரலாற்றை இவருடைய பாக்கள் விரித்துரைக் கின்றன. இவர் பாடிய பாடல்கள் ஒவ்வொன்றிலும் யாரையேனும் புகழாமலும், அக்கால நிகழ்ச்சிகளில் ஒன்றையேனும் புகுத்தா மலும் இருந்ததில்லை. தமிழ் மன்னர்களின் வரலாற்றை உணர் தற்கு இவர் தம் பாடல்கள் துணை நிற்கின்றன. இவர் பாடியன : நற்றிணையில் 12. குறுந் : 15, பதிற்றுப்பத்தில் 10, அகம் 32, புறம் 12, திருவள்ளுவ மாலையில் 1 ஆக 82.

## 113. பராயனார் (155)

தலைவன் தலைவியைப் பராவிய காரணத்தால் இப்பெயர் பெற்றனர் போலும். சுவை மிகத் தோன்ற நெய்தலைப் பாடியுள்ளார். இடந்தலைப் பாட்டில் தலைவியைக் கண்டு ஐயுற்றுத் தலைவன் கூறியதாக இவர் செய்த நற்றிணைச் செய்யுள் சுவைக்கத்தக்கது.

## 114. பாண்டியன் மாறன் வழுதி (97, 301)

பாண்டியர் மரபினன். குறிஞ்சியும் முல்லையும் இவனாற் சிறப்பிக்கப்பட்டன. பூவிலை மடந்தையைக் காண்டலும் பருவ வரவறிந்து தலைவன் பிரிவிற்கு இரங்குவது படிப்போர்க்கு உளம் நெகிழ்விக்கும். 'வெந்த புண்ணில் வேல் புகுந்தாற் போல' என்னும் பழமொழிக் கருத்தை இவர் எடுத்தாண்டுள்ளது நயமுடையது. நற் 97. "அழுந்துபடு விழுப்புண் வழும்புவாய் புலரா, எவ்வ நெஞ்சத்து எஃகுஎறிந் தாங்கு" என்னும் தொடர்களைக் காண்க. இவருடைய 801 ஆம் பாடலில் 'யாய் மறப்பறியா மடந்தை' என்னும் தொடரில் அமைந்துள்ள சுவையை அறிந்து இன்புறுக.

## 115. பாரதம் பாடிய பெருந்தேவனார்
### (நற் : கடவுள் வாழ்த்துப் பாடல்)

பெருந்தேவனார் - இயற்பெயர். பாரதம் பாடியமையால் இவ் அடைமொழி பெற்றனர். தொகை நூல்களிற் கடவுள் வாழ்த்துப் பாடிய தனிப் பெருஞ் சிறப்பினர். கடைச்சங்கப் பாவலர். தொண்டை நாட்டினர்: சிவன், திருமால், முருகன் போன்ற கடவுளரைப் பாடியுள்ளமையால் அக் கடவுளரையும் வழிபடும் பொது நோக்கு உடையவர் எனத் தெரிகிறது. இவர் பாடியன : நற் : 1. குறுந் : 1, ஐங்குறு : 1. அகம் 1, புறம் 1, திருவள்ளுவ மாலை 1, ஆக ஆறு. இவர் மதம் அத்வைதம். பெருந்தேவனார் என்று சங்க நூல்களில் மற்றொருவர் காணப்படுகின்றார். அவரின் இவர் வேறானவர் என்பதை அடைமொழியால் அறியலாம்.

## பாலத்தனார் (52 )

இவர் வரலாற்றை 98ஆம் பிரிவிற் காண்க. பொருள்வயிற் பிரியக் கருதிய நெஞ்சை நோக்கித் தலைவன் மழவர் பெருமகன் மாவள் ஓரியின் பெருஞ்செல்வம் கிடைப்பதாக இருப்பினும் பிரியேன் என்று கூறுவதாகச் செய்யுள் செய்துள்ளார்.

## 116. பாலை பாடிய பெருங்கடுங்கோ (9, 48, 118, 202, 224, 258, 318, 337, 384, 391)

சேரர் மரபினர். பாலை பாடுவதில் வல்லவர். சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ என்றும், பெருங்கடுங்கோ என்றும் அழைக்கப்படுவர். நன்னனையும் அவனது ஏழில் மலையையும் சிறப்பிப்பர். பேய்மகள் இளவெயினியாற் பாடப்பட்டவர். வீரமும் கொடையும் செறிந்தவர். "நிற்றுறந்து அமைகுவென் ஆயின் எற்றுறந்து, இரவலர் வாரா வைகல், பலவாகுக யான் செலவுறு தகவே" (குறுந் 137) என்றதனால் இவரின் கொடையுள்ளம் நன்கு புலனாம். தலைவியைத் தலைவன் பெற்றமைக்கு "வழிபடு தெய்வம் கட்கண் டாங்கு" என்று உவமை காட்டுகிறார். 'கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தாற்போல' என்னும் பழமொழியின் சாயலை ஈண்டு ஓர்க. பிரிவு உண்மையறிந்த தலைவி காதலனை மயக்குந் தன்மையுடன் ஒப்பனையுடன் வந்து அவன் மீது சாய்ந்து முயங்கி வருந்துவதாக இவர் கூறியுள்ளது பெருஞ்சுவை பயப்பது ஒன்றாம். இவர் தம் பாடல்களில் பல்வேறு அரிய பெரிய செய்திகள் காணப்படுகின்றன. இவர் பாடியன நற் : 10. குறுந்:10, அகம்:11, புறம்:1 ஆக32.

## 117. பிசிராந்தையார் (91)

பிசிர் என்னும் ஊரினர். இது பாண்டி நாட்டில் உள்ளது. ஆதன் என்பாரின் தந்தை. கோப்பெருஞ் சோழனைக் காணாமலேயே அவன்பாற் பேரன்பு கொண்டவர். (அப்பூதியடிகளும் நாவுக்கரசரும் போல) "புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான், நட்பாம் கிழமை தரும்" (குறள் 785) என்னும் குறட்கு உதாரணமாக விளங்கியவர். தன் நண்பன் கோப்பெருஞ் சோழன் என்பான் வடக்கிருந்து உயிர் துறந்தது அறிந்து பாண்டி நாட்டிலிருந்து வந்து அவன் புதை குழிக்கு அருகிலிருந்து உயிர் துறந்தனர். நரை திரையின்றி நெடுங்காலம் தாம் வாழ்ந்ததற்கு இவர் கூறும் காரணம் அனைவரும் அறியத்தக்கது. பாண்டியன் அறிவுடை நம்பி இவராற் பாராட்டப்பட்டவன். நெய்தலையும் குறிஞ்சியையும் இவர் சிறப்பிப்பர். இவர் பாடியன நற். 1, அகம்: 1, புறம்: 4, ஆக 6.

## 118. பிரமசாரி (34)

மணம் புரியாது பிரமசரியம் காத்திருந்த அந்தணர். அன்னையும் செவிலியும் வெறியாடிய வழி "கடவுளாயினுமாக, மடவை மன்ற வாழிய முருகே" என்று முருகவேளைக் கடிந்து கூறிய இவரின் மனத்திட்பம் வியக்கத்தக்கது. இவர் குறிஞ்சியைப் பாடியுள்ளார்.

## 119. பிரான் சாத்தனார் (68)

பிரான்மலை என்னும் ஊரினர். குறிஞ்சியே இவர் பாடியது. மகளிர் விளையாடாது இல்லின்கண் சோம்பியிருத்தல் அறனும் அன்று; செல்வமும் சுருங்கும் என்று இற்செறிப்புற்ற தலைவி கூற்றிற் காணும் நயம் நன்று.

## 120. புதுக்கயத்து வண்ணக்கன் கம்பூர் கிழான் (294)

வேளாளர். கம்பூர் என்னும் ஊரினர். நாணய சோதகரை வண்ணக்கர் என்பர். நோட்டம் காண்பவர். புதுக்கயம் என்ற ஊரில் நோட்டக்காரராய் வந்து தங்கியவர். குறிஞ்சித் திணையைச் சிறப்பிப்பர். தலைவனின் மலர்ந்த மார்பு "தீயும் வளியும் விசும்பு பயந்தாங்கு, நோயும் இன்பமும் ஆகின்று" என்று தோழி கூறும் கூற்றின் நயம் சுவைக்கத்தக்கது.

## 121. பூதங் கண்ணனார் (140)

பூதன் என்பாரின் மகனார். இயற்பெயர் கண்ணன். பூங்கண்ணனார் எனவும் அழைக்கப்படுவார். குறிஞ்சித் திணையைப் பாடியுள்ளார். தோழியாலே குறை மறுக்கப்பட்ட தலைவன் தன் நெஞ்சை நோக்கி, அருளினும் அருளாள் ஆயினும் தலைவி தந்த நோய்க்கு மருந்து பிறிதில்லை என்று கூறிய கருத்து மகிழ்ச்சி தருவது ஒன்றாம்.

## 122. பூதன் தேவனார் (80)

ஈழத்துப் பூதன் தேவனாரினும் இவர் வேறானவர். ஈழத்துப் பாவலர் பாடியன எல்லாம் குறிஞ்சித்திணையே. இவரோ மருதத்திணையைப்பாடி அத்திணையிற் களவும் கூறா நிற்பர். விடியற் காலையில் எருமையை மேய்க்க ஓட்டிச் செல்லும் இடைச் சிறுவர் அவ்வெருமையின் முதுகிலேறிச் செல்வர் என்று இவர் கூறுவர். சிற்றூர்களில் இந்நிகழ்ச்சியை இன்றும் காணலாம். தைந்நீராடும் தலைவியல்லது தான் பெற்ற நோய்க்கு மருந்து பிறிதில்லையென்று தலைவன் கூறுவதாகச் செய்யுள் செய்வர். இவர் பாடியன நற்:1, குறுந்:1 ஆக இரண்டு பாடல்கள்.

## 123. பூதனார் (29)

இவரைப் பற்றிய விவரம் ஒன்றும் அறியக்கூடவில்லை. பூதன் இயற்பெயர். பாலைத் திணையைப் பாடியுள்ளார். மகட்போக்கிய தாய் தலைவி செல்லும் ஆற்றது அருமை நினைந்து அச்சமுற்றுக் கூறுவதாக இவர் பாடிய செய்யுளின் நயமுணர்ந்து சுவைக்கலாம்.

## 124. பெருங்கண்ணனார் (137)

மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார் எனவும், விழிக்கட்பேதைப் பெருங்கண்ணனார் எனவும் இருவருளர். அவரினின்றும் இவர் வேறானவர் என்பதைத் தெரிய அடைமொழி கொடாது பெருங்கண்ணனார் எனவாளாகவே கூறப்பட்டார். பாலையும் நெய்தலும் இவராற் பாடப்பட்டன. வடிவால் அல்லது அருட் பார்வையால் இப்பெயர் பெற்றிருக்கலாம். இயற்பெயர் எனற்கும் இடமுண்டு. இவர் பாடின நற் : 1, குறுந் : 2 ஆக மூன்றாம். காமநோயின் வளர்ச்சிக்கு வளர்பிறையின் வளர்ச்சியை உவமை காட்டியிருக்கும் நயமும், தலைவன் பிரிய தலைவி புல்லென்று பொலிவு குன்றியிருத்தற்கு வானம் புல்லென்று இருத்தலையும் உவமை காட்டியிருக்கும் அழகே அழகு.

## 125. பெருங்குன்றூர் கிழார் (5, 112, 119, 347)

இவர் வேளாண்மரபினர். ஊர்பற்றி வந்த பெயர். பதிற்றுப்பத்தில் ஒன்பதாம் பத்தைப்பாடியவர். அதற்குப் பரிசிலாக இளஞ்சேரல் இரும்பொறை என்னும் சேரமன்னனிடம் முப்பத்திராயிரம் பொற்காசுகளைப் பெற்றனர். வையாவிக்கோப் பெரும் பேகனால் துறக்கப்பட்ட கண்ணகியை அவனுடன் சேர்த்தற்கு அவனைப்பாடி அதனையே பரிசிலாகக் கேட்ட பெருந்தகையாளர். இவராற் பாடப்பட்டோர் (1) வையாவிக்கோப்பெரும் பேகன் (2) சேரமான் குடக்கோச்சேரல் இரும்பொறை (3) குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறை (4) சோழன் உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னி என்போர். கபிலரை நல்லிசைக் கபிலன் என்று பாராட்டியவர். குறிஞ்சித் திணையைப் பலவாறு பாராட்டியுள்ளார். சந்தன மரத்தவேர் தனித்தன்றிப் பிறவேர்களோடு கலந்தாற்றான் நறுமணம் கமழும் என்னும் நுட்பம் அறிந்தவர் நற் : 5. இவர் 119ஆம் பாடலில் வேற்று வரைவு கூறியுள்ள நயம் சுவைக்கத் தக்கது. கேழல் அகப்பமொன்று வைத்த பொறியின் கண் புலிபடும் தன்மையுள்ள நாடன் என்று கூறிப்

பெறவைத்தார் கலைமான் பாட்டினத்தோடு தாவித்திரியும் என்று புப்பாட்டிற்கூறி வேற்று வரைவு நேரினும் அது கலையோடு ஆடு சேர்ந்தாற்போன்று இருக்குமேயன்றிச் சிறவாது என்கிறார் தலைவிமேல் படர்ந்த பசலை நிறத்தைத் தேரையோடு. மிக்கிறார். நற் : (347) இவர் பாடியன நற் : 4, குறுந் : 1, அகம் 1, புறம் 5, பதிற் : 21 ஆக 32, இவர் காலத்துப் புலவர்கள் : சிறுமேதாவியார் சேந்தம் பூதனார், அறிவுடையரனார், இளந் திருமாறனார், மதுரையாசிரியர் நல்லந்துவனார், நக்கீரர், பரணர்.

## 126. பெருங்கௌசிகனார் (44, 139)

அந்தணர். கௌசிக கோத்திரத்தினர், மலைபடுகடாம் பாடியவர் (பத்துப்பாட்டில் இறுதிப்பாட்டு) தொண்டை நாட்டினர். இரணிய முட்டம் என்னும் பகுதியைச் சார்ந்த பெருங்குன்றூரினர். நன்னனைப் பாடியவர் நச்சினார்க்கினியரால் பாராட்டப்பட்டவர். குறிஞ்சி, முல்லை இரண்டையும் சிறப்பித்தனர். எடுத்தவினையை முடித்து மீண்டதலைவன் தலைவியுடன் இருந்த போழ்து மழையைப் போற்றியதாகக் கூறி யுள்ளார். நற் : 139

## 127. பெருந்தலைச் சாத்தனார் (262)

சாத்தன் என்பது இயற்பெயர். தெய்வத்தின் பெயரை மக்கட்டு இட்டு வழங்குவது பண்டுமுண்டு. சாத்தன் - தெய்வம். குமணனது தலையைப் பாதுகாத்தமை பற்றியோ நுண்மாண் நுழை புலமுடைமை பற்றியோ இப்பெயர் வந்திருக்கக் கூடும். உறுப்புப் பற்றியும் வந்திருக்கலாம். இவராற் பாடப்பட்டோர் (1) இளங்கண்டீரக்கோ (2) இளவிச்சிக் கோ (3) குமணன் (4) இளங்குமணன் (5) மூவன் (6) கடிய நெடுவேட்டுவன். ஆவூர் மூலங்கிழார் இவர் தந்தையாவர் (அகநா : 224) இளங்கண் டீரக்கோவும் இளவிச்சிக்கோவும் ஒருங்கிருந்த வழி கண்டீரக் கோவைத் தழுவி நன்னன் வழிவந்த விச்சிக்கோவைத் தழுவாரா யினர் (புறம் 151) வேளாண் மரபினர். பாலையும் முல்லையும் இவராற் பாடப்பட்டன. அண்ணனுடன் பகைமை கொண்ட இளங்குமணனைத் தெருட்டி அண்ணனுடன் ஒன்றுபடுவித்தனர் இவர் பாடியன : - நற் : 1, அகம் 2 புறம் - 6 ஆக 9.

## 128. பெருந்தேவனார் (83)

பெருந்தேவனார் என்னும் பெயருடைய பல புலவர்களைப் பண்டையோர் அடைமொழி கொடுத்து வழங்கி இவர்க்கு மட்டும் அடைகொடாது சென்றமையால் இவர்பெருமை புலனாம்.

தலைவி கூகையை விளித்து என் தலைவன் வருங்கால் நீ கூவி யாரையும் எழுப்பாதே. உனக்கு வெள்ளிய சோற்றினை வெள்ளெலியின் சூட்டிறைச்சியோடு தருகுவேன் என்று கூறுவதாகச் செய்யுள் செய்துள்ளார். குறிஞ்சியும் பாலையும் இவராற் பாடப் பட்டன. இவாாற் பாடப்பட்டன நற் : 1, அகம் 1 ஆக 2.

## 129. பெரும்பதுமனார் (2, 109)

மீளிப்பெரும்பதுமனார் என்பவரும் இவரும் ஒருவரே. பாலைத்திணையைப் பாடியுள்ளார். மீளி - ஒரூர் மணவினைக்கு முன்னர் மகளிர் சிலம்புகழி நோன்பு இயற்றுவர் என்னும் செய்தி இவர் பாடலால் தெரிய வருகின்றது. ஒருவர் பால் பரிசு பெற்றோர் மீண்டும் மீண்டும் அவரிடமே பரிசுபெற விரும்பிச் செல்வர் என்பதை,

"கடவுள் ஆலத்துத் தடவுச்சினைப் பல்பழம்
நெருநல் உண்டனம் என்னாது பின்னும்
செலவா னாவே கலிகொள் புள்ளினம்''

என்ற வரிகளால் உறுதிப்படுத்தினர். (புறம்:199)
காமநோய் மேலீட்டால் இயக்கமின்றி நிற்கும் தலைவி தனக்கு அசையாது பிணித்த ஆவை உவமித்தாள். இஃது அவலவுவமை இவராற்பாடப்பட்டன. நற்:2 குறுந்:1, புறம்:1 ஆக 4.

## 130. பெருவழுதி (55, 56)

இவர் கடலுண்மாய்ந்த இளம்பெருவழுதி, இளம் பெருவழுதி எனவும் கூறப்படுவர். திருமாலிருஞ்சோலையில் எழுந்தளியிருக் கும் வாசுதேவனையும் பலதேவனையும் பரிபாடலில் பரவிப் பாடி யவர். பாண்டியர் 'உண்டாலம்ம' என்னும் புறப்பாடல் சொல்லா லும் பொருளாலும் இனிமை சான்றது. வைணவர். கடல்மேற் சென்றவிடத்து எக்காரணத்தாலோ இறந்தமையின் கடலுள் மாய்ந்த என்று அடைமொழி கொடுக்கப்பட்டார். குறிஞ்சியையும் முல்லையையும் நயந்தரப்பாடினர். தலைவனின் கூட்டத்தால் தலைவியின் தோள்களில் வண்டுகள் மொய்க்க நறுமணம் வீசுவதைக் கண்டு இந்த மணம் எதனால் எழுந்தது என்று அன்னை கேட்க, அதற்குத் தலைவியின் சார்பில் தோழி "நீவிர் அடுப்பிலட்ட சந்தனக் விறகின் சுரும்புகள் இவளின் தோள்பால் வந்து மொய்க்கலாயின என்று படைத்து மொழி கிளவியாக நயம் பட நவின்றதாகத் தெரிவிக்கும் பாடல் சுவைக்கத் தக்கது. இவர் பாடியன நற் 2, பரிபாடல் 1, புறம் 1 ஆக 4.

## 131. பேராலவாயர் (51, 361)

ஆலவாய் என்பது மதுரைக்கொரு பெயர். மதுரை மாநகரும் இதுவே. இவ்விரண்டனையும் இணைத்து மதுரைப் பேராலவாயர் என்று இவர் கூறப்படுவார். சிவபிரானின் பெயர். மதுரையையும் செழியனையும், கொற்கையையும், வையையாற்றையும் சிறப்பித்துள்ளார். இவரால் எல்லாத் திணைகளும் பாடப்பட்டுள்ளன. ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் இறந்தவிடத்து அவன் தேவி பெருங்கோப்பெண்டு தீப்பாய முற்படுகையில் இவர் வருந்திப் பாடிய பாடல் உள்ளத்தை நெகிழ்விக்கின்றது. புறம் 247. இவர் பாடியன நற்:2, அகம் 2, புறம்;2 ஆக ஆறு பாடல்கள்.

## 132. பேரிசாத்தனார் (25, 37, 67, 104, 199, 299, 323, 378)

சாத்தன் இயற்பெயர். வடமவண்ணக்கன் பேரிசாத்தனார் வடமவண்ணக்கன் பேரிசாத்தன் எனவும் அழைக்கப்பட்டனர். கடலோசைக்கு முழவோசையை உவமித்தலின் பேரி-முழவு என்னும் அடைமொழியைப் பெற்றனர். நற்:378. நாணய சோதகர். இவர் காலத்து மன்னர்கள்.

1. பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்.
2. சேரமான் யானைக் கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை.
3. சோழன் இராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளி முதலானோர்

சோழனின் நண்பன் தேர்வண் மலையனைப்பாடி மகிழ்வித்தவர். நெய்தலையும் குறிஞ்சியையும் சிறுபான்மை பாலையையும் பாடியுள்ளார். தலைவியைத் தோழி குறை நயப்புக் கூறியதாக இவர் பாடிய நற்றிணைப் பாடல் (25) படிக்கப் படிக்கப் பெருஞ் சுவை தருவது ஒன்றாம். இவர் பாடியன நற்:8, குறுந்:4, அகம்: 5, புறம்:2, ஆக 19.

## 133. பொதும்பில் கிழார் (57)

பொதும்பில்—ஊர். மதுரைப் பகுதியைச் சார்ந்தது. வேளாளர். இவரூர் தற்போது பொதும்பு என்றே வழங்கப்படுகிறது. குறிஞ்சி இவராற் சிறப்பிக்கப்பட்டது. இவர் பாடியது நற்றிணைப் பாடல் ஒன்றே. இப்பாட்டில் அமைந்துள்ள உள்ளுறை யுவமம் வியப்புடைத்து.

## 134. பொதும்பில் கிழார் மகனார் வெண்கண்ணியார் (375, 387)

பொம்பில் கிழாரின் மகனார். இயற்பெயர் வெண்கண்ணி. பெண்பாற் புலவர் போலும். கிழார் மகனார் என்றிருத்தலின் பெண்பால் என்பதற்கு இல்லை. கவண்கண்ணியின் விளக்கம் அறியக் கூடவில்லை. வெண்கண்ணன் என்றொரு புலவர் அகத்திற் காணப்படுகின்றார். அவர்தாமோ இவர் அறியேம். தலையாலங்கானத்து நெடுஞ்செழியன் இவராற் பாடப்பட்டோன். நெய்தலும் பாலையும் இவராற் பாடப்பட்டன.

## 135. பொய்கையார் (18)

பொய்கை:ஓரூர், சேரன் கணைக்கால் இரும்பொறையின் அவைக்களப் புலவர். மலைநாட்டிலுள்ள தொண்டி என்னும் ஊரினர். இரும்பொறை மூவன் என்பானை வென்று அவன் பல்லைப் பிடுங்கித் தன்னுடைய தொண்டி நகரத்துக் கோட்டை வாயிற் கதவிலே அழுத்தி வைத்த செய்தி இவர் பாடலில் வந்துள்ளது. சோழன் செங்கணான் அச் சேரமானைச் சிறை வைத்த காலை இவர் அச் சோழன்மேல் களவழி நாற்பது பாடி விடுவித்தார். இவர் வேறு, பொய்கையாழ்வார் வேறு. பன்னிருபாட்டியலில் சில நூற்பாக்களையும், யாப்பருங்கல விருத்தியிற் சில வெண்பாக்களும் இவர் செய்தனவாக காணப் படுகின்றன. கிடங்கில் என்னும் ஊரைச் சிறப்பிப்பார். இவர் பாடியன நற்:1, புறம்:2, களவழி:40, இயற்பா முதல் திருவந்தாதி

"ஆழி யிழைப்பப் பகல்போம் இரவெல்லாம்
தோழி துணையாத் துயர்தீரும்—வாழி
நறுமாலை தாராய் திரையவோஒ என்னும்
சிறுமாலை சென்றடையும் போது" என்ற பாடல் இவருடையதே.

## 136. போதனார் (110)

பதின்மூன்றடி கொண்ட நற்றிணைப்பாடல் இவருடையதே. பாலையைச் சிறப்பிப்பர். போத்தனார் எனவும் படுவர். இவரைப் பற்றிய செய்திகள் கிடைக்கப்பெறவில்லை. பாலுணவையும் வெறுப்பவள் பொழுது மறுத்து உண்பாளாயது அதனினும் தலைவன் இன்பம் சிறந்தது போலும் என்று எண்ணினளே என நற்றாய் வியந்ததாம்.

## 137. பாடல் பாடிய மாதங்கீரனார் (377)

மடலேறுதல் பற்றிய செய்திகளையே இவர் பாடியிருத்தலால் இவ் அடைமொழி கொடுத்து அழைக்கப்பட்டார் "மடலேறித் தெருவில் வந்து பலரால் நகைக்கப்பட்டு அவமான முற்றுச். சிறுமையுறுவதினும் காமநோயால் இறந்து போகேமோ" என்று தலைவன் நொந்து கூறுவதாகச் செய்யுள் செய்துள்ளார். குறிஞ்சித் திணையே இவராற் பாடப்பட்டது இவர் பாடியன. நற் : 1, குறுந் - 1 ஆக 2 "அகலிரு விசும்பின் அரவுக் குறை படுத்த, பசுங்கதிர் மதியத்து அகல் நிலாப்போல" என்று தலைவியின் நெற்றிக்கு உவமை காட்டியுள்ள பகுதி வியக்கத்தக்கது. (நற்:377)

## 138. மதுரைஅளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் (297, 321)

ஞாழார் என்பது தந்தை பெயர் போலும். அளக்கர் என்பது விளங்கவில்லை; ஊர்போலும். மன்னர் - வீரர் ஒருகால் வண்க மரபினர் போலும். இவர் காலத்தவர் : - (1) சிறுகுடி கிழான் பண்ணன் (2) சோழன் முற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் (3) கோவூர் கிழார். கொல்லி மலை இவராற் சிறப்பிக்கப்பட்டது. குறிஞ்சியையும் முல்லையையும், பாலையையும் சிறப்பித்துள்ளார். பார்ப்பன மகளிர் தீ ஓம்பும் கணவரை, உடைமையின் பிரியப் பெறார் என்னும் உண்மையும், அம் மகளிர் மாலைப் பொழுதில் தவறாது கற்பிற்குரிய முல்லை மலரை அணிவர் என்பதும் இவர் பாடலால் அறியக் கிடக்கின்றது. இவர் பாடியன : நற் : 2, குறுந்: 2, அகம் 5, புறம் 1 ஆகப் பத்துப் பாடல்கள்.

## 139. மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் (344)

அறுவை வாணிகன் - ஆடைகள் விற்போர். வணிகர் வேட்டனார் என்றதன் பொருள் விளங்கவில்லை. வேள்வி செய்தவரோ செய்வித்தவரோ அறியேம். புலி முழங்குவதை இடி முழக்கம் என்று மயங்கி, குறவர் தினையைக் குவிப்பர் என்கிறார். புறாவோடு விளையாடும் சிறுவரை நோக்கிக் காதலி வருந்துவது போன்று பாடியுள்ளார். இவர் பாடியன : நற் : 1, குறுந் : 1, அகம் 6, புறம் 1, வள்ளுவ மாலை 1 ஆகப் பத்துப் பாடல்களாம்.

மதுரை, ஆருலவிய நாட்டு ஆலம்பேரி சாத்தனார். (255, 303)

மேலே பத்தாம் அடிக் குறிப்பைப் பார்க்க.

## 140. மதுரை, இளம்பால் ஆசிரியன் சேந்தன் கூத்தனார் (273)

இளம்பால் என்னும் ஊரினர். ஆசிரியன் எனப்படுதலால் இவர் அந்தணர் என்பர். சேந்தன் - தந்தை பெயர். சேந்தனாகிய கூத்தன் என்றும் விரிப்பர். குறிஞ்சியே இவர் பாடியது. இவர் பாடிய நற்றிணைப் பாடலில் யானை தலைவனாகவும், சுனை நமது குடியாகவும், நீர் தலைவியாகவும், அவ் யானை உண்ணுதல் தலைவன் தலைவியை மணந்து நலனுகர்தலாகவும், நீலம் மலர்தல் இருமுது குரவரும் மகிழ்வதாகவும் உள்ளுறை யமைத்து நயமுற 273-ஆம் பாடலிற் கூறியுள்ளமை அறிந்து மகிழத்தக்கது.

## 141. மதுரை, ஈழத்துப் பூதன் தேவனார் (366)

ஈழ நாட்டினர். மதுரையில் தங்கியிருந்தவர். தந்தையார் பூதனார். தேவன் இவர் இயற்பெயர். குளிர் காலத்தில் தலைவியைப் பிரிவோர் மடமையுடையர் என்கிறார். பாலையும் குறிஞ்சியும் இவராற் பாடப்பட்டன. தந்தத்தினாற் செய்த தேருருளை மண்ணிற் புதைந்தது போக எஞ்சிய பகுதியின் தோற்றம் பிறையை ஒத்திருக்கும் என்று பாடியுள்ளார். பயிரைத் துண்டிக்கும் தேரின் உருளைக்கு விண்வீழ் கொள்ளியை உவமை காட்டுவர். இவர் பாடியன : நற் : 1, குறுந் : 3, அகம் 3. ஆக ஏழு.

## 142. மதுரை, ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார் (250, 369)

பெண் பாலார் போலும். மதுரையைச் சார்ந்த ஓலைக் கடைப் பகுதியினர். நிறைய காமத்தைச் சிறையடு கடும்புனல் போன்றது என்கிறார். இமயமும் கங்கையும் இவராற் சிறப்பிக்கப் பட்டன. மருதம், நெய்தல் இரண்டனையும் நயந்தோன்றப் பாடினர். இவர் பாடிய 'நகுகம் வாராய் பாண!' என்ற மருதத்திணைப் பாடல்பெருஞ் சுவை தருவதொன்றாம்.

## 143. மதுரைக் கண்ணத்தனார் (351)

இவர் கண்ணத்தனார் எனவும் வழங்கப்படுவர். குறிஞ்சியும் நெய்தலும் இவராற் பாடப்பட்டன. அந்தி மாலையில் மேலைக் கடலின் தோற்றம் சங்கர நாராயணர் போன்றிருந்தது என்றுஇவர் கூறுவது வியப்புடையது. இவர் பாடியன நற் : 1, அகம் 1 ஆக 2.

வெறியாடிய அன்னையிடம் தோழி "வெறியாடேல். இவளைத் தினைப் புனங்காவற்கு மீண்டும் அனுப்புவை; அவள் நோய் நீங்கும்" என்று சதுரப்படக் கூறியதை எண்ணி மகிழலாம்.

## 144. மதுரைக் காருலவியங் கூத்தனார் (325)

கூத்தன் என்பது சிவனுக்குரிய பெயர். அதனையே வைத்துக் கொண்டார் போலும். சிவபக்தர். தோழி தலைவனை நோக்கி அவன்பால் எழுந்த வேட்கை நோய் தலைவியின் உயிரை உண்ணும் என்பதைப் புலப்படுத்த, "கரடி இரை வேட்கையாற் புற்றைப் பெயர்த்து இரவில் உண்ணும் என்று கூறிச் சென்ற நயம் சுவைக்கத்தக்கது.

## 145. மதுரைக் கொல்லன் வெண்ணாகனார் (285)

பொற் கொல்லர். பொன் செய் கொல்லன் வெண்ணாகனார் என்றும் கூறப்படுவார். இவராற் குறிஞ்சியும் பாலையும் சிறப்பிக்கப் பட்டன. இவர் தமது பாடலில் பொன்செய் காசெனக் கூறிய தொடர் மொழியால் இவ்வாறு அழைக்கப்பட்டனர். உடன்போக்கில் அழைத்துச் சென்ற தலைவியைத் தலைவனின் வெறாது மகிழ்ந்து வரவேற்பர் என்னும் அரிய செய்தி இவருடைய பாடலிலிருந்து புலனாகும். இவர் பாடியது நற் : 1 அகம் : 1 ஆக 2.

## 146. மதுரைச் சுள்ளம் போதனார் (215)

சுள்ளம் போது என்னுமூரினர். மதுரையில் வாழ்ந்தவர். நெய்தலைப் பாடியவர். மீன் எண்ணெயால் விளக்கு எரிக்கும் வழக்கம் பண்டு இருந்தது என்பதை இவர் பாடல் தெரிவிக்கும்.

## 147. மதுரைப் பள்ளி மருதங்கிழார் மகனார் சொகுத்தனார் (329, 352)

இவர் மருதங்கிழார் மகனார் சொகுத்தனார் எனவும், மதுரை மருதங்கிழார் மகனார் சொகுத்தனார் எனவும் கூறப்படுவர். இளம் போத்தனார், பெருங்கண்ணனார் என்போர் இவருடன்பிறப் பினர். இவர் பாலையைச் சிறப்பித்தனர். இடைச்சுரத்துத் தலைவன் தலைவியது உருவெளித் தோற்றங் கண்டு மருளுவதாக இவர் கூறியது சிறப்புடைத்தாகும். (352) இவர் வேளாளர். மருதங்கிழார் தந்தை போலும்.

## 148. மதுரைப் பூவண்டநாகன் வேட்டனார் *(317)*

பூவண்டல் - ஒரூர். அவ்வூரில் வாழ்ந்தவர் போலும். குறிஞ்சி இவராற் பாடப்பட்டது. திரண்டு நீண்டு வளைந்த பசிய தினைக் கதிருக்கு களிற்றியானையின் தூக்கிய கையை உவமை காட்டிச் செல்லும் நயம் வியப்புடையது.

## 149. மதுரைப் பெருமருதனார் *(241)*

மருதன் இயற்பெயர். மதுரையில் வாழந்தவர், பாலையைப் பாடினார். நிலை பெற்ற இன்பத்தை ஒருவி நிலையில்லாத ஒரு பொருளைத் தேடிச் செல்லும் தலைவரை அறவரல்லர் என்றும் செய்ந்நன்றி மறப்பவர் என்றும் தலைவி கூறியதாகப் பாடிச் சென்றது நயமுடைத்தாம்.

## 150. மதுரைப் பெருமருது இளநாகனார் *(251)*

இவர் பெருமருதனுக்கு மகனார் போலும். தினையை நோக்கிக் காலம் நீட்டித்துக் கதிர் ஈன்று விளைவாயாக என்று அதற்குரிய காரணத்துடன் தோழி கூற்றாக இவர் கூறுவது ஆராய்ந்து மகிழ வேண்டியது ஒன்றாம். குறிஞ்சியைப் பாடியுள்ளார்.

## மதுரைப் பேராலவாயர் *(51, 361)*

மேலே *(131)* என்ற தலைப்பின் கீழ் பார்க்க.

## 151. மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார் *(388)*

இவர் வேளாளர். இளம் போத்தனார், சொகுத்தனார் என்பவர்களின் சகோதரர். நெய்தல், குறிஞ்சி, முல்லைத் திணைகளைப் பாடியுள்ளார். இவர் பாடியன நற்: 1, அகம் 3 ஆக 4.

## 152. மதுரை மருதனிள நாகனார் (21, 39, 103, 194, 216, 283, 290, 302, 326, 341, 362, 392)

இளநாகனார் என்னும் பெயரினர். மருதக்கலி பாடினமையால் மருதன் இளநாகன் எனப்பட்டனர். மருதன் என்பது இவர் தந்தை பெயர் என்பாரும் உளர். இறையனார் அகப்

பொருட்கு உரை கண்டவர். இவருரை நக்கீரர் உரைக்கு அடுத்த நிலையிற் சிறப்பு வாய்ந்தது என்பர். இவர் சைவ சமயத்தவர். சிவபெருமான் திரிபுரத்தை எரித்த செயலையும், முருகப்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருச்செந்தூரையும் பாராட்டிப் பாடியுள்ளார். இவராற் பாடப்பட்டோர். 1. பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன். 2. பாட்டன். 3. கோசர். 4. வாணன். 5. கழுவுள். (அகநா. 90, 220, 269, 365) செல்லூர், ஊணூர், முனைப் பாக்கம், காமூர் முதலிய ஊர்களைப் பாடியுள்ளார். நற்றிணை 216 ஆம் பாட்டில் "ஒருமுலை அறுத்த திருமா வுண்ணி" என்று இவர் சுட்டுவது கண்ணகியைப் போலும். இவர் ஐந்நிலங் களிலும் பலகாறும் பழகி அவற்றின் இயல்புகளை நன்கு அறிந்து அவ்வத் திணைகட்கேற்ற பொருள்களைப் புலப்படுத்திப் பாடியுள்ளார். இவர் பாடல்கள் கற்பனை செறிந்தும், உள்ளுறை அமைந்தும் அணிபடச் செல்கின்றன. "அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை' என்று அந்துவனாரைச் சிறப்பித்துள்ளார். யமுனையாற்றில் வாசுதேவன் குருந்த மரத்தை முறித்த செய்தி இவர் பாடலிற் காணப்படுகின்றது. திதியன் என்பானுக்குரிய செல்லூரில் பரசுராமர் வேள்வி செய்தமை கூறியுள்ளார். உள்ளி விழாவின் சிறப்பும் கொங்கர் மணிகளை அரையிற்கட்டி ஆடும் சிறப்பும் இவராற் கூறப்பட்டுள்ளன. இவர் பாடியன, நற்: 12, குறுந்தொகை: 4, அகம்: 23, புறம்: 3 மருதக்கலி: 35.

## 153. மருங்கூர்ப் பட்டினத்துச் சேந்தன் குமரனார் (289)

இவரைச் சேந்தன் என்பவரின் மகனார் என்பர். மருங்கூர்ப் பட்டினம் என்பது ஒரூர். பாண்டி நாட்டில் உள்ளது. திருவாடானைத் தாலுக்காவைச் சார்ந்தது. முல்லைத் திணையைப் பாடியுள்ளார். 'நிலம்புடை பெயர்வதாயினும் கூறிய சொற்புடை பெயர்தலோ அரிது' என்று தலைவி தலைவனுரை யில் நம்பிக்கை வைத்துள்ளதாகக் கூறிய பகுதி அழகிது.

## 154. மருதம் பாடிய இளங்கடுங்கோ (50)

இவர் சேரர். பாலைபாடிய பெருங்கடுங்கோவின் தம்பியாக இருத்தற்கூடும். மருதத் திணையைச் சிறப்பித்துப் பாடியமை யால் இவ் அடைமொழி பெற்றனர். அகுதையின் தந்தைக்குரிய

சோழரது பருவூரைச் சிறப்பித்து ஆங்குச் சேரபாண்டியர் வந்து போர்புரிந்து தோற்ற கதையை விளக்கிக் கூறுகின்றார். தோழி பாணற்கு வாயில் மறுத்ததாக வெகுளிச் சுவைபட இவர் பாடிய மருதத்திணை பாடல், நனி பேரின்பம் பயவா நிற்கும். இவர் பாடியன நற்: 1 அகம் 2 ஆக 3.

## 155. மலையனார் (93)

"மல்லற்றம்ம இம் மலைகெழு வெற்பு" என்று மலை வளம்பாடிய சிறப்பான் இவர் இப் பெயர் பெற்றனர். குறிஞ்சியைப் பாடுவர். நின்னையே நம்பினோரைக் கைவிடுகின்ற நினதுமலை இன்னும் வளமுடைத்தாயிருக்கின்றது என்ன வியப்பு என இறைச்சிப் பொருள் தோன்றப் பாடினர்.

## 156. மள்ளனார் (204)

மள்ளர் - வீரர். இஃது இவர் இயற்பெயராக இருத்தற்கூடும். சுள்ளூரில் இளமகளொருத்தியின் கற்பழித்தானொருவனைச் சான்றோர் பற்றி நீற்றறையில் இட்ட கதையையும், வையை நீராடற் சிறப்பையும் கூறுகின்றார். நெஞ்சை நோக்கி நின்வயப் பட்ட ஒருத்தியை நீ கைவிட்டு ஏமாந்திருக்கலாமோ என்றது வியப்புடையதாகும். குறிஞ்சியும் மருதமும் இவராற் பாடப் பட்டன. இவர் பாடியன நற்: 1, அகம் 1 ஆக 2.

### மாறன் வழுதி

மேலே (115) பாண்டியன் மாறன் வழுதி என்றதன் அடிக் குறிப்புப் பார்க்க.

### மாங்குடி கிழார்

மாங்குடி மருதனார் என்பவர் இவரே. இவர் மதுரைக் காஞ்சி பாடினமையில் காஞ்சிப் புலவர் எனவும் கூறப்படுவர் மேலே (48) காஞ்சிப் புலவன் அடிக்குறிப்பைப் பார்க்க.

## 157. மாமூலனார் (14, 75)

அந்தணர் மரபைச் சார்ந்த இவர் முக்காலமும் அறிந்த யோகியர். தொல் - பொருள் - 75 - ம் சூத்திரவுரையில் 'பார்ப்பனப் பக்கத்து வகையாவன' என்பதன் கீழ், நச்சினார்க்கினியர், 'யோகிகளாய் உபாயங்களால் முக்காலமும் உணர்ந்த மாமூலர் முதலியோர்' என்று கூறுவதால் அறியலாம். அகத்தியரோடு

ஒத்த மாண்புடையவர். இவர் யோகியர் என்றாலும் அகப் பொருட்சுவையை அளவு கடந்து தெளியக் கூறுவது பெரிதும் வியப்பாயுளது. திருமந்திரம் எழுதிய திருமூலர் வேறு. இவர் வேறு. இவர் பாடலால் உணரப்படும் சில அரிய செய்திகளாவன.

1. உதியஞ்சேரல் பாரதப் போரில் பெருஞ்சோறு அளித்தபோது கூளிச்சுற்றம் சூழ்ந்திருந்த என்று கூறியுள்ளது. அகம் 233.

2. பெருஞ் சேரலாதன் மாந்தை நகர் முற்றத்து நிதிகுவித்து இரவலர்க்கு அளித்தமை. அகம்: 127.

3. அகம் 186ல் பண்டு ஆயுதபூசை செய்தமையைக் கூறியிருத்தல்.

4. பாண்டியனது கொற்கையில் முத்தும் சங்கும் எடுத்தல்.

5. சந்திரகுப்தன் மகன் துளு என்பான் நிறுவிய துளுநாட்டைக் கூறியது. இன்னோரன்ன பலவாம். பாலைத்திணையையே பெரும்பாலும் பாடியுள்ளனர். இவர் பாடியன: அகம் 26, குறுந்: 1, நற்: 2, திருவள்ளுவமாலை 1 ஆக 30.

இவர் நந்தமன்னரையும், மோரியரையும் (அகம் 251, 281) பாராட்டியுள்ளமையால் அவர்கள் காலத்தவர். கி. மு. 260 ஆண்டுகட்கு முன் இருந்தவர். இவர்தம் கவிகளில் வரலாறுகளே பெரிதும் காணப்படுகின்றன. பண்டைத் தமிழக வரலாறுணர்வதற்கு இவர் கவிகள் உறுதுணையாக நிற்கின்றன என்னின் மிகையன்று.

## 158. மாறோக்கத்து நப்பசலையார் (304)

மாறோக்கம் கொற்கையைச் சூழ்ந்த ஒரு நாடு. இவர் பாடலில் பசலையின் இயற்கையைத் தெளியக் கூறியவதனால் நப்பசலையார் எனப்பட்டனர். ந. சிறப்பிடைச்சொல். பெண்பாற் புலவர். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனது போர்வென்றி, கொடைத்திறன் முதலியவற்றை இயன்மொழியில் அமைத்துப் பாடினர். அவனிறந்துழி கையறு நிலையும் பாடினர். கபிலர் பெருமானைப் புகழ்ந்துள்ளார். திருமுடிக் காரியைப் பாடியதோடன்றி அவன் மகன் திருக்கண்ணனை அரசவாகை அமையவும் பாடிச்சென்றனர். குறிஞ்சியும் பாலையும் இவராற் சிறப்பிக்கப்பட்டன. இவர் பாடியன நற்: 1, அகம் 1, புறம் 7, ஆக 9,

மிளைகிழான் நல்வேட்டனார்
மேலே (105) நல்வேட்டனார் பார்க்க.

மீளிப் பெரும்பதுமனார்
மேலே (129) பெரும்பதுமனார் பார்க்க.

## 159. முக்கல், ஆசான் நல்வெள்ளையார் (272)

இவர் அந்தணர். இவரூர் முக்கல். இவர் நெய்தலைச் சிறப்பித்துள்ளார். நீர்க்காக்கைச் சேவல் சூலொடு வதிந்த பேடைக்கு அயிரை மீனைத்தேடும் என்று தலைவி கூற்றில் அமைத்து அதனால், தன்னை மணஞ் செய்துகொண்டு இல்லறம் நடத்தியான் இல்லிடம் இருக்குமாறு செய்து "தாயத்தால் அடைந்த பொருளைக்கொண்டு செய்யும் அறத்தைத் தேவரும் பிதிரரும் ஏலார்" ஆதலின் அவரை இன்புறுத்துமாறு வேற்று நாட்டுக்குச் சென்று பொருள் ஈட்டி வந்து இல்லறம் நிகழ்த்தற் பாலன் தலைவன் என்னும் பொருள் தோன்றும் வண்ணம் உள்ளுறை உவமம் பாடிய இவர் பாடல் சுவை மிக்கது.

## 160. முடத் திருமாறன் (105, 228)

இவர் பாண்டிய மன்னர். இடைச்சங்க இறுதியிற் பாண்டி நாட்டை ஆண்டவர் கபாடபுரம் கடலால் அழிக்கப் பட்டுச்சங்கம் அழிந்ததும் இவர் காலத்திலேயாம். உடனே இத்திருமாறனார் கடைச் சங்கத்தை நிறுவினார். சேரமான் கடல் பிறக்கு ஓட்டிய வேல்கெழு குட்டுவன் மகனாகிய குட்டுவன் சேரலைப் பாராட்டியுள்ளார். பாலையும் குறிஞ்சியும் இவராற் சிறப்பிக்கப்பட்டன. 'வெறிகொள் சாபத்து' என்னுமிடத்துச் சாபம் என்னும் வட சொல்லை இவர் எடுத்தாண்டிருப்பதால் வடசொல் கடைச் சங்கத் தொடக்கத்து தமிழிற் கலந்தது அறியலாம். இவர் பாடியன நற்:105, 228 ஆக இரண்டு பாடல்கள்.

## 161. முது கூற்றனார் (28, 58)

இவர் உறையூர் முதுகூற்றனார் எனவும் முதுகூத்தனார் எனவும் அழைக்கப்பட்டனர். இவர் சோழன் போர்வைக் கோப்பெருநற் கிள்ளியின் தந்தையாகிய வீரைவேண்மான் வெளியன் தித்தனைப் புகழ்ந்து பாடியிருத்தலால் அவன் காலத்தினராகக் கருதப்படுகின்றார். உறையூரும் காவிரியும் இவராற் பாராட்டப்பட்டன. பாலைத்திணையையே பெரும்பாலும் பாடினர். சிறுபான்மை குறிஞ்சியும் நெய்தலும்

பாடிச் சென்றனர். நற்றிணை 28 ஆம் பாட்டில் தோழி கூற்றில் தலைவனைக் 'கள்வன்போலக் கொடியன்' என்று குறை நயப்பிற் கூறியது மகிழப் பண்ணுவதொன்றாம். இவர் பாடியன : - நற் : 2, குறுந் : 4, அகம் : 2, புறம் : 1, திருவள்ளுவமாலை : 1 ஆகப் பத்துப்பாடல்களாம்.

## 162. முது வெங்கண்ணனார் (232)

இவர் வெங்கண்ணனார் எனவும் படுவர். குறிஞ்சித் திணையைப் பாடியுள்ளார். இவர் பாடலிற் காணப்படும் உள்ளுறை வியக்கத் தக்கதாக அமைந்துள்ளது. இவர் பாடியன நற் : 1 அகம் 1 ஆக 2

## 163. முப்பேர் நாகனார் (314)

முப்பேர் என்பது ஒரூர். முப்பையூர் என்னும் பெயரில் திருவாடனைத் தாலுக்காவில் ஒரூர் உளது. நாளது சின்மையும் இளமையது அருமையும் இவர் பாடிய நற்றிணையில் விரித்துக் கூறப்பட்டுள்ளது. "முதிர்ந்தோர் இளமை அழிந்தும் எய்தார், வாழ்நாள் வகையளவு அறிஞரும் இல்லை'' என்னும் இவர் தம் மொழிகள் என்றும் நினைவில் இருக்க வேண்டியனவாம்.

## 164. மூலங்கீரனார் (73)

கீரன் என்பது இயற்பெயர். மூலம் என்பது நாள்மீன். இதற் பெயர் பெற்றிருக்கக் கூடும். பேய்களைப் பற்றிப் பாடுவதில் வல்லவர். சோழ நாட்டின் கண்ணுள்ள திருச்சாய்க் காட்டைப் [சாயாவனம்] புகழ்ந்து பாடியுள்ளார். "வேனின் முருக்கின் விளைதுணர் அன்ன, மாணா விரல வல்வாய்ப் பேய்'' என்ற இவர் பாடல் வரிகளைக் கண்டு களிக்க.

## 165. மோசி கண்ணத்தனார் (124)

மோசி ஒரூர். திருப்பூவணந்தாலுக்காவில் மோசிப் பட்டி என்று ஒரூர் உள்ளது. மோசு குடியென்று பரமக் குடித்தாலுக்கா விலும் ஒன்றுளது. மோசி என்றே ஒரு புலவரும் அழைக்கப் படுவார். 'மோசி பாடிய ஆயும்' என்றார் புறத்திலும் மோசி கீரனார், மோசி சாத்தனார், முடமோசியார் என்னும் பெயரிற் பல புலவர்கள் உள்ளனர். நெய்தல் வளத்தைச் சிறப்பித்துப் பாடும் இக்கண்ணத்தனார், தலைவன் பிரியிற் காமந்தாங்காது இறந்து படுவது உண்மை என்பதைக் காரணத்தோடு விளக்கியுள்ளார்.

## 166. மோசி கீரனார் (342)

மோசியென்னும் ஊரிலே தோன்றியவர். கீரன் - இயற்பெயர். படுமாற்றூர் மோசிகீரனார் என்பவரும் இவரே. படுமாற்றூர் மதுரையைச் சார்ந்ததோர் ஊர். ஓரமயம் தகடூர். எறிந்த பெருஞ் சேரல் இரும்பொறையிடம் பரிசுபெறச் சென்ற இப் பாவலர், வழி நடை வருத்தம் மேலிட்டதனால் முரசு இருந்த கட்டிலிற் படுத்து உறங்குவாராயினர். இஃது அரச குற்றமாகும். ஆனால் படுத் திருப்பவர் புலவர் பெருமான் என்பதை அறிந்த அரசன் தமிழின் சுவையுணர்ந் தோனாகையால் சாமரம் வீசிப்புலவலரைச் சிறப் பித்தனன். இவர் தம் பெருமையை என்னென்போம். கொண்கானங் கிழானை பாடிப் பரிசில் பெற்று உவந்தனர். பரதவர்கோமான் அதலை என்பானது மலையையும், ஆஅய் அண்டிரனது பொதிய மலையையும் பாராட்டியுள்ளார். நெய்தலையும் குறிஞ்சியையும் சிறப்பிப்பர். முகம்புகு கிளவி பாடியவர். அரசரின் இயல்புகளை இவர்பாடல் சிறக்கப் பேசும். இவர்பாடியன நற் : 1, குறுந் : 3, அகம் 1, புறம் 5, திருவள்ளுவ மாலை - 1 ஆக 11 "நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே. மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்னும் இவர் கூற்று முக்காலத்தும் உண்மையன்றோ. (புறம்: 186)

### வடம வண்ணக்கன் பேரி சாத்தனார்

மேலே (132) பேரி சாத்தனார் பார்க்க.

## 167. வண்ணக்கன் சொரு மருங்குமரனார் (257)

நாணயப் பரிசோதகர். சொரு மருங்குமரனார் என்பதன் பொருள் விளங்கவில்லை. இவர் பாடியது குறிஞ்சித் திணை. இவர் பாடலில் தலைவன் இரவில் வரும் வழியில் ஏற்படும் இடர்ப் பாடுகளை விவரித்துள்ள பகுதி சுவையான தொன்றாம். சூடுவா ரின்றி வேங்கை மலர் கற்பாறையில் உதிர்தல் போல, நீ வரைந்து கொண்டு அருகிருந்து நலன் நுகர்ந்திலையாகையால் தலைவியின் நலம் குன்றியது என்று உள்ளுறை முகத்தான் தலைவன் உணரு மாறு செய்தமை சிந்திக்கத்தக்கது.

## 168. வண்ணப் புறக் கந்தரத்தனார் (71)

இயற்பெயர் கந்தன். இப் பெயருடையார் பலர். அவர்களி னின்றும் இவரை வேறுபடுத்துணர்தற்கு இவ் அடைமொழி தரப் பட்டது. 'வண்ணப் புறாவின் செங்காற் சேவல்' என்ற அடியில்

புறாவினை வண்ணப்புறவு என்று கூறிய சொற்சிறப்பு நோக்கி அதனையே இவர்க்கு அடைமொழியாகத் தந்தனர். பாலையைச் சிறப்பிப்பர். செவிலி மனையிருந்து வருந்தியதாக இவர் பாடிய பாடல் சுவையுடையதாகும். இவர் பாடியன நற் : 1, அகம் 1 ஆக இரண்டு.

## 169. வன்பரணர் (374)

வன்பரணர் என்று அழைக்கப்பட்டார் நெடுங்கழுந்துப்பரணர், பரணர் என வேறு புலவர்களும் உள்ளமையால். கடையெழு வள்ளலில் ஒருவனாகிய கண் பீரக்கோப் பெருநள்ளியைப் பரிசில் வேண்டிப் பாடினர். இவராற் பாடப்பட்டோர் வல்விலோரியும், பெருநள்ளியுமாவர். கணவனைக் கானகத்தே இழந்து காதலி புலம்பும் முதுபாலைத் துறையில் இவர் பாடிய புறச் செய்யுள் உள்ளம் உருகுவிக்கும். வினை முற்றி மீள்வோன் நெறியிடைக் கண்டவரை நோக்கிக் கூறியதாக ஒரு துறை புதுவதின் அமைத்தவர் இவரே. வல்வில் ஓரியின் வீரத்தை 'வேழம் வீழ்த்த' என்னும் புறச் செய்யுளால் இவர் புகழ்ந்து பாடிய அருமை நுணுகி அறிதற்பாலது. "செய்யா கூறிக் கிளத்தல் எய்யாது ஆகின்று எம் சிறு செந்நாவே" என்ற இவர் கூற்றில் அமைந்திருக்கும் நன்றியுணர்ச்சியும், பெருமிதமும், தன்மானமும் கண்டு சுவைக்கலாம். இவர் பாடியன : நற் : 1, புறம் 6 ஆக 7.

## 170. விழிக்கட் பேதைப் பெருங்கண்ணனார்

பெருங்கண்ணனார் என்பதே இவர் இயற்பெயர். தாம் பாடிய பாடலில் மான் குட்டியை விழிக்கட் பேதை என்று கூறிய சொற்சிறப்பான் இந்த அடைமொழி கொடுக்கப்பட்டனர். முல்லைத் திணையைச் சிறப்பித்துள்ளார். இவர் பாடியன நற் : 242, திருவள்ளுவ மாலை 1 ஆக 2. "கார் தொடங்கின்று" என்று இவர் பாடிய கார்கால வருணனை வியக்கத்தக்கது.

## 171. விற்றூற்று வண்ணக்கன் தத்தனார் (298)

விற்றூறு என்பது ஓரூர். வண்ணக்கன் - நாணயப் பரிசோதகன். தத்தன் இவர் இயற்பெயர். பாண்டியனையும் மதுரையையும் இவர் தம் பாடலிற் பாராட்டியுள்ளார். பாலைத் திணையைச் சிறப்பிப்பர். பொற்றேர்ச் செழியனைப் பாடிய இவருடைய முல்லைப் பாடலில் பாலை நிலத்து மறவர் அடிக்கும் தண்ணுமை ஓசை கேட்டு எருவைச் சேவல் பறந்து ஓடும் என்று கூறப்பட்டுள்ளது. இது பாலையின் கொடுமையை உணர்த்திற்று.

## 172. வினைத்தொழிற் சோகீரனார் (319)

நெய்தலைப் பாடிய நல்லிசைப் பாவலர். நள்ளிரவில் கடற்கரையூரின் நிலையைத் தம் பாடலில் கூறியுள்ளது சுவைக்கத் தக்கது. மீன்கண் துஞ்சும் பொழுதும், யான் கண் துஞ்சிலன் என்ற இவர் பாடலில் தலைவன் கூறுவதன்கண் அமைந்துள்ள ஆதங்கத்தை அறிந்து மகிழ்க.

## 173. வெள்ளியந் தின்னனார் (101)

நெய்தலைச் சுவைபடப் பாடுவதில் வல்லவர். பாக்கத்தில் பரதவர் இறா மீனைப் பிடித்துப் புன்னையின் நிழலிலே புலர்த்தும் செயலைத் தம் பாடலிற் கூறியுள்ளார்.

## 174. வெள்ளி வீதியார் (70, 335, 348)

பெண்பாற் பாவலர். மதுரை வெள்ளியம்பலத் தெருவில் வாழ்ந்தவர் போலும். இயற்பெயர் அறியேம். யாது காரணத்தாலோ கணவனை விட்டுப் பிரிந்து வாழ்ந்தவர். தம்மைப் பசலை தின்னுக என்று நொந்து கூறினார். கணவனைத் தேடிச் சென்று நொந்த ஆதிமந்தியாரும் இவரும் ஒரே காலத்தவர். "கன்றும் உண்ணாது கலத்தினும் படாஅது, பசலை உணீஇயர் வேண்டும்" என்று இவர் கூறும் பாடல் பெரிதும் கழிவிரக்கம் தருவது ஒன்றாம். 'ஆதி மந்தி போல' யான் வருந்தா நின்றேன் என்று புலம்புவர் பிரிந்த தலைவரை அழைத்து அறிவுரைகள் கூறித் தலைவியரோடு சேர்த்து வைக்கும் அவையோர் பண்டு இருந்தனர் என்னும் செய்தி இவர் பாடலால் அறியக் கிடக்கின்றது. இவர் கேள்வனை நாடிச் சென்றதனை ஔவையார் "வெள்ளி வீதியைப் போல நன்றும், செலவு அயர்ந்திசினால் யானே" என்று தம் பாடலிற் குறிப்பிட்டனர். "ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற், கையில் ஊமன் கண்ணிற் காக்கும், வெண்ணெய் உணங்கல் போல" என்று கழற்றெதிர மறையில் இவர் கூறும் உவமை உள்ளத்தை உருக்குவதொன்றாம். சான்றோரைத் திருமணம் பேசவிடுத்தலும், மங்களகரமான இடங்கட்குத் தலைப்பாகை அணிவித்துச் செல்லலும் தமிழ் மரபு என்பது இவர் பாடலால் அறியக் கிடக்கின்றது. இவர் வாழ்க்கை அளிக்கத்தக்கது. இவர் பாடியன நற்:3, குறுந்:8, அகம் 2, திருவள்ளுவமாலை 1 ஆக 14.

## 175. வெள்ளைக்குடி நாகனார் (158, 196)

வெள்ளைக்குடி என்னும் ஊரினர். நாகன் இயற்பெயர். சோழநாட்டினர் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் காலத்தவர். நிலவரி கொடுக்க இயலாமையால் அரசன்பாற் சென்று அறிவுரை கூறி உழவர் பெருமைகளை உணர்த்திச் செலுத்த வேண்டிய வரியைத் தள்ளி விடுமாறு செய்தார். நிலவினை நோக்கித் தலைவி வெகுண்டுரைக்கும் நற்றிணைப்பாடல் தனி பேரின்பம் நல்குவதாகும். யானையின் குருதியைப் பருகிய புலி வேங்கை மரத்திலேசென்று தன் நாவைத் துடைக்கும் என்று கூறியுள்ளார். பாட்டில் படிப்பதற்கே அச்சம் ஏற்படுத்துகின்றது. இவர் பாடியன நற் 2, புறம் 1. ஆக 3.

## 176. வெறி பாடிய காமகண்ணியார் (268)

பெண்பாற் புலவர். காமக்கண்ணியென்பது காரணற் பெயர். விருப்பத்தைத் தரும் கண்களை உடையவள் என்பது பொருள். சிலர் இயற்பெயர் என்பர். காமாக்ஷி என்ற சொல்லின் தமிழாக்கம் என்பாரும் உளர். வெறியாவது தலைவன் கூட்டத்தால் தலைவிக்கு ஏற்பட்ட நிறவேறுபாட்டை முருகனால் அணங்கப் பட்கிது என்று மயங்கி வேலனை (பூசாரி) வீட்டிற்கு அழைத்துப் பராவுதலாம். ஆண்டு அறத்தொடு நிலை நிகழும். வெறியாட்டாடலை விரிவாகப் பாடியமையால் வெறிபாடிய என்னும் அடைமொழி பெற்றார். செருவிடை வீழ்தலும் குதிரை மறமும் புறத்தில் இவராற் பாடப்பட்டன: இவர் பாடியன: நற்:1, அகம்:2 புறம்:2 ஆக ஐந்து பாடல்கள்.

# பாடலாற் சிறப்பிக்கப்பட்டோர்

| | | பாடல் எண் |
|---|---|---|
| 1, | அஞ்சி (நெடுமான்) | 381 |
| 2. | அண்டிரன் | 237 |
| 3. | அருமன் | 367 |
| 4. | அழிசி | 87, 190 |
| 5. | அன்னி | 180 |
| 6. | ஆஅய் | 167 |
| 7. | உதியன் | 113 |
| 8. | ஓரி | 6, 52, 265, 320 |
| 9. | காரி | 320 |
| 10. | கிள்ளி | 141, 390 |
| 11. | குட்டுவன் | 14, 105, 395 |
| 12. | கொங்கூர் | 10 |
| 13. | கொல்லிப்பாவை | 185, 192, 201 |
| 14. | செம்பியன் | 14 |
| 15. | செழியன் | 39. 298, 340, 387 |
| 16. | சென்னி | 265 |
| 17. | சேந்தன் | 190 |
| 18. | சோழர் | 10, 87, 281, 379, 400 |
| 19. | தழும்பன் | 300 |
| 20. | தித்தன் | 58 |
| 21. | திருமாவுண்ணி | 216 |
| 22. | நன்னன் | 270, 391 |
| 23. | பசும்பூட் சோழர் | 227 |
| 24. | பசும்பூண் வழுதி | 358 |
| 25. | பசும் பூண் வேந்தர் | 349 |
| 26. | பழையன் | 10 |
| 27. | புல்லி | 14 |
| 28. | பூழியர் | 192 |
| 29. | பெரியன் | 131, 180 |
| 30. | பொறையன் | 8, 18. 185, 346 |
| 31. | மலையன் | 77, 100, 170 |
| 32. | மழவர் | 52 |
| 33. | மாயோன் | 32 |

| | | |
|---|---|---|
| 34 | மிலிஞி | 265 |
| 35. | முடியன் | 390 |
| 36. | முள்ளூர் மன்னன் | 291 |
| 37. | மூவன் | 18 |
| 38. | வடுகர் | 212 |
| 39. | வழுதி | 150 |
| 40. | வாணன் | 340 |
| 41. | வாலியோன் | 32 |
| 42. | விராஅன் | 350 |
| 43. | வீரை | 58 |
| 44. | வேளிர் | 280 |

மற்றும் பலர்.

உ

கணபதி துணை

## எட்டுத் தொகையுள் முதலாவதாகிய

# நற்றிணை

## மூலமும் உரையும்

### கடவுள் வாழ்த்து

நேரிசையாசிரியப்பா

மாநிலஞ் சேவடி ஆகத், தூநீர்
வளைநரல் பௌவம் உடுக்கை ஆக,
விசும்புமெய் யாகத், திசைகை ஆகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ஆக,
5 வியன்ற எல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வன் என்ப
'தீதற விளங்கிய திகிரி யோனே.'

பாரதம் பாடிய பெருந்தேவனார்.

பதவுரை : மாநிலம் சேவடியாக - பெரிய நிலம் தன் சிவந்த அடிகளாகவும், தூநீர் வளைநரல் பௌவம் உடுக்கையாக - தூய நீரையுடைய சங்குகள் ஒலிக்கின்ற கடல் ஆடையாகவும், விசும்பு மெய்யாக - ஆகாயம் மெய்யாகவும், திசை கையாக - திசைகள் கைகளாகவும், பசுங்கதிர் மதியமொடு சுடர் கண்ணாக - தண்ணிய கதிர்களையுடைய திங்களும் ஞாயிறுமாகிய இரண்டும் இரண்டு கண்களாகவுங்கொண்டு, வியன்ற எல்லாம் - அமைந்துடைய எல்லா உயிர்களிடத்தும், பயின்று அகத்து அடக்கிய - தான் பொருந்தியிருப்பதன்றி நிலம் முதலாய எல்லாப் பொருள்களையும் தன்னுறுப்பகத்து அடக்கிய, வேதமுதல்வன் - வேதங்களாற் கூறப்படும் முதற்கடவுள் [யாரென்னில்] தீது அற விளங்கிய - குற்றந்தீர விளங்கிய, திகிரியோனே - சக்கரத்தை யேந்திய மாயோனே, என்ப - என்று ஆன்றோர் கூறாநிற்பர்.

ஆதலின் யாமும் அவனையே கடவுளாகக்கொண்டு வணங்குவோம் என்றவாறு.

முடிபு : ஆக, ஆக, ஆக, ஆக, ஆகப் பயின்று அடங்கிய முதல்வன் எனக் கூட்டுக. ஆன்றோர் - தோன்றா எழுவாய். இருவகை வாழ்த்தினுள் இது தனக்குப் பயன்பட வாழ்த்தியது

கருத்து : திகிரியேந்திய திருமாலே வேதமுதல்வன். எனவே அவனைப் போற்றி வழிபடுவோம்.

6. "வேதமுதலிவன்" என்றும் பிரதிபேதம்.

அருஞ்சொற் பொருள் : மா - பெருமை. வளை - சங்கு நரலுதல் - ஒலித்தல். பௌவம் - கடல். திகிரி - சக்கரம்

விசேடவுரை : இதனுள் ஐம்பெரும் பூதங்கள் முதலியன எல்லாம் திருமாலின் ஒரு வடிவமாகச் சிறப்பிக்கப்பட்டது. அவனே முழுமுதற் கடவுள் என்றும் இவ்வுண்மையை உணர்வோரே ஆன்றோரென்றும் கூறினார்.

மெய்வணக்கம் திருவடியைப் பற்றியதாகலின் அதனை முற் கூறினார். மனத்தால் நினைத்தலும் கண்களாற் காணலும் அரியான் என்பார் விசும்பு மெய்யென்றார். 'விசும்பு நீலநிற முடையது' ஆகையால் அவன் மேனியையும் குறிப்பித்தார். எங்கும் நிறைந்து உயிர்களின் நன்மை தீமைகளை உணர்ந்து அவற்றிற்குச் சாட்சியாய் நின்று உதவுவான் என்பார் 'எல்லாம் பயின்று' என்றார். 'வேதமுதல்வன்' என்றமையால் இறைவனது பரத்துவம் கூறினார். தீங்குகளை ஒழிக்கும் திறனுடையோன் என்பார் 'திகிரியோன்' என்றார்.

# 1. குறிஞ்சி

## தலைவி கூற்று

(தலைவன் பிரியக் கருதியது அறிந்த தோழி அதனைத் தலைவியிடங் கூறினாள். அதற்குத் தலைவி அவரையின்றியமையாத என்னை வருந்தும்படி விட்டுப் பிரிகின்ற குணக் குறைபாடிலரெனத் தலைவனைப் புகழ்ந்து கூறியது.)

நின்ற சொல்லர் நீடுதோன் (று) இனியர் ;
என்றும் என்தோள் பிரிபறி யலரே
தாமரைத் தண்தாது ஊதி மீமிசைச்
சாந்தில் தொடுத்த தீந்தேன் போலப்,
5 புரைய மன்ற, புரையோர் கேண்மை

நீரின்(று) அமையா உலகம் போலத்
தம்மின்(று) அமையா நம்நயந்(து) அருளி;
நறுநுதல் பசத்தல் அஞ்சிச்
சிறுமை யுறுபவோ? செய்பு அறியலரே.

எ-து : பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைவி சொல்லியது.

**கபிலர்**

ப-ரை : தோழீ! நம் காதலர், நின்ற சொல்லர் - நிலைமை தவறாத வாய்மையுடையவர், நீடு தோன்று இனியர் - நெடிதாக தோன்றுகின்ற இனிமையுடையவர், என்றும் என்தோள் பிரிபு அறியலர் - எப்பொழுதும் என் தோள்களைப் பிரியும் அன்ன தொரு குணக்குறைபாடிலர், புரையோர் கேண்மை - அத்தகைய சான்றோருடைய நட்பு, தாமரைத் தண் தாது - தாமரையின் தண்ணிய மகரந்தத்தினையும், மீமிசை - மேலோங்கிய, சாந்தின் (தாது) - சந்தனத்தின் பொடியையும், ஊதி - குடைந்தெடுத்து, தொடுத்த - அந்தச் சந்தன மரத்தில் வைத்த, தீந்தேன்போல - இனிய தேன்போல, மன்ற புரைய - திண்ணமாகச் சிறந்தன. (ஆதலின்) நீர் இன்று அமையா உலகம்போல - நீரை இன்றியமை யாத உலகியல்போல, தம் இன்று அமையா - அவர் தம்மையின்றி அமையாத, நம் நயந்து அருளி - நம்மிடம் முன்பு விருப்பம் மிக வைத்தருளி, நறு நுதல் பசத்தல் அஞ்சி - (பின்பு பிரிதலால்) நம் நறிய நுதல் பசலையூர்தற்கு அஞ்சி, சிறுமை உறுபவோ - (செய் வது அறியாராய்த்) தடுமாற்றம் அடைவாரோ? செய்பு அறியலர் - அங்ஙனஞ் செய்யார் காண்.

முடிபு : பிரிவு அறியலர், புரையமன்ற, அஞ்சிச் சிறுமை யுறுபவோ, செய்பு அறியலர் என முடிக்க.

கருத்து : தலைவர் சான்றோர் ஆகையால், பிரிவால் நாம் படுந்துன்பம் கண்டு அஞ்சி நம்மை விட்டுப் பிரியார்.

1. பி-ம். 'நின்ற சொல்லொடு'

அ-ள் : தாது - மகரந்தம். மிசை - மேல், புரை - உயர்ச்சி, கேண்மை - நட்பு.

நயம்: தாமரைத்தாது தலைவனுள்ளத்திற்கும், சந்தனத் தாது தலைவியுள்ளத்திற்கும் உவமையாயிற்று. இருவருள்ளமும் ஒன்றுபட்டவழி சந்தன மரத்திலே தீந்தேன் இறால் வைத்தது போலத் தலைவன் தலைவிபால் அன்பு வைத்தான் எனப் பொருள் நயம் காண்க.

பசலை பாய்தல் - வாயினால் ஊதியவழிக் கண்ணாடியில் ஆவி படர்வதுபோலத் தலைவன் பிரிவினால் தலைவியின் நெற்றியில் ஒளி குன்றி நிறம் மாறுபடுதல். இதனைப் பசலை எனவும் பீர் எனவும் உரைப்பர்.

இது கற்பு என்னும் ஒழுக்கத்தின் பாற்படும்.

இதன்கண் உவகை என்னும் மெய்ப்பாடு அமைந்துள்ளது காண்க.

பயன் - ஆற்றியிருத்தல்.

ஒப்புமைப் பகுதி

தலைவனது இன்றியமையாமை.

7. "நின்னின்று அமைதல் வல்லா மாறே" (குறுந் : 309:8)
"நின்னலது இல்லா இவள்" (ஐங் . 179:14)
"நின்னின்று இமைப்புவரை வாழாள் மடவோள்"
(கலித். 21:12-3)

6. "நீரின்று அமையாது உலகு" (குறள் : 20)

7. தலைவரையின்றித் தலைவி யமையாமை
"உயிர்க்குயிரன்ன ராகலின் தம்மின்று
இமைப்புவரை யமையா நம்மின்" (குறுந். 218:5-6)
"தம்மின்றி யாமுயிர் வாழு மதுகையிலே மாயின்"
(கலித். 24:13-4)
"தம்மலதில்லா நம்மிவ ணொழிய" (அகநா. 313:8)

1-7 தலைவி தலைவனையன்றிப் பாதுகாப்பார் பிறரிலள்.
"பெருநன் றாற்றிற் பேணாரும் உளரே
........................
நன்மலை நாட நின்னல திலளே" (குறுந். 115:6)
"இவளே நின்னல திலளே" (இறை. 23:மேற்)

## 2. பாலை

### கண்டோர் கூற்று

அழுந்துபட விழ்ந்த பெருந்தண் குன்றத்து,
ஒலிவல் ஈந்தின் உலவைஅம் காட்டு,
ஆறுசெல் மாக்கள் சென்னி எறிந்த
செம்மறுத் தலைய, நெய்த்தோர் வாய,
5 வல்லியம் பெருந்தலைக் குருளை, மாலை,

மரனோக்கும் இண்டுஇவர் ஈங்கைய சுரனே
வையெயிற்று ஐயள் மடந்தை முன்னுற்று
எல்லிடை நீங்கும் இளையோ உள்ளம்,
காலொடு பட்ட மாரி
10 மால்வரை மிளிர்க்கும் உருமினும் கொடிதே.

எ-து : உடன்போகாநின்றாரை இடைச்சுரத்துக் கண்டார் சொல்லியது.

## பெரும்பதுமனார்

ப-ரை : சுரனே - பாலைவனமோ, அழுந்துபட வீழ்ந்த பெருந்தண்குன்றத்து - ஆழ்ந்துபடக்கிடந்த பெரிய குளிர்ச்சியை யுடைய குன்றத்தின்கண், ஒலிவல் ஈத்தின் உலவை அம்காட்டு - தழைத்த வலிய ஈச்சமரங்களையுடைய காற்றுச் சுழன்று வீசும் அழகிய காட்டிடத்து, ஆறு செல் மாக்கள் - வழிநடை செல்லும் மக்களுடைய, சென்னி - தலையை, எறிந்த - மோதியதனாலே, செம்மறுத்தலைய - குருதிபடிந்த சிவந்த மாறுபட்ட தலையை யுடையனவும், நெய்த்தோர் வாய - இரத்தம் ஒழுகும் வாயை யுடையனவுமாகிய, பெருந்தலை - பெரிய தலையை உடைய, வல்லியக் குருளை - புலிக்குட்டிகள், மாலை - இம் மாலைப் பொழுதில், மரல் நோக்கும் - (தாம் பதுங்கியிருக்கும்) மாலின் (புதர்) தூறுகளை நிமிர்ந்து நோக்கும், இண்டு இவர் - இண்டங் கொடியுடனே ஒரு சேரப் படர்கின்ற, ஈங்கைய - ஈங்கையை உடையனவாகும். (இத்தகைய கொடிய பாலையின்கண்) வையெயிற்று - கூரிய பற்களையுடைய, ஐயள் - மெல்லியளாகிய, மடந்தை - தலைவியை, முன்னுற்று - முன்னால் செல்லவிடுத்து, எல்லிடை - இவ்விராப் பொழுதில், நீங்கும் - பின்னால் செல்லா நிற்கும், இளையோன் உள்ளம் - இவ் இளைஞனின் மனமானது, காலொடு பட்ட மாரி - காற்றொடு கலந்த மழை பெய்யுங் காலத்தில், மால்வரை மிளிர்க்கும் - பெரிய பாறைகள் புரண்டு விழுமாறு மோதுகின்ற, உருமினும் கொடிது - இடியைக் காட்டி லும் கொடியதாம்.

முடிபு : சுரத்திடை மடந்தையை முன்னுற்று எல்லிடை நீங்கும் இளையோன் உள்ளம் கொடிது.

கருத்து : புலிகள் உலாவும் கொடிய சுரத்தின் கண் நள்ளிரவில் தலைவியை அழைத்துச் செல்லும் தலைவன் மிகவும் கொடியவன் என்பதாம்.

அ-ள் : ஒலித்தல் - தழைத்தல், உலவை - காற்று, நெய்த்தோர் - இரத்தம், வல்லியம் - புலி, இவர்தல் - படருதல், மரல் - பாலைவனத் தாவரம். வை - கூர்மை. எல் - இரவு. மிளிர்க்குதல் - புரட்டுதல், ஐயள் - மெல்லியள்.

இதனுள் அழுகை என்னும் மெய்ப்பாடு அமைந்துள்ளது.

பயன் - தமக்குள் உரையாடி ஆறுதல்.

ஒப்புமைப் பகுதி

9. காலொடு வந்த மழை

"காலொடு வந்த கமஞ் சூல் மாமழை" (குறுந். 158:3)
"காற்றுடைக் கனைபெயல்" (கலி. 45:4)
"பட்டமாரிபடாஅக் கண்ணும்" (குறுந். 289:6)
"பட்டமாரி ஞான்ற ஞாயிற்று" (புறநா. 82:2)

# 3. பாலை

## தலைவன் கூற்று

ஈன்பருந்து உயவும் வான்பொரு நெடுஞ்சினைப்
பொரியரை வேம்பின் புள்ளி நீழற்;
கட்டளை அன்ன வட்டரங்கு இழைத்துக்
கல்லாச் சிறாஅர் நெல்லிவட்டு ஆடும்
5 வில்லேர் உழவர் வெம்முனைச் சீறூர்ச்
சுரன்முதல் வந்த உரன்மாய் மாலை
உள்ளினென் அல்லனோ யானே—உள்ளிய
வினைமுடித்து அன்ன இனியோள்
மனைமாண் சுடரொடு படர்பொழுது எனவே.

எ-து : முன்னொரு காலத்துப் பொருள் வயிற் பிரிந்த தலைமகன் பின்னும் பொருள் கடைக் கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.

இளங்கீரனார்

ப-ரை : நெஞ்சே! ஈன் பருந்து உயவும் - குஞ்சுகளைப் பெற்ற பருந்து வருந்தி வாழும், வான் பொரு நெடுஞ்சினை - ஆகாயத்தை அளாவும் நெடிய கிளைகளையும், பொரி அரை வேம்பின் - பொரிந்த அடியையுமுடைய வேம்பினது, புள்ளி நீழல்

- புள்ளி போன்ற நிழலின் கண்ணே, கட்டளை அன்ன வட்டு அரங்கு இழைத்து - கட்டளைக் கற்போன்ற அரங்கை வட்டினால் கீறி, கல்லாச் சிறார் - இது தவிர ஏனைய தொழிலொன்றும் அறியாத சிறுவர்கள், நெல்லி வட்டாடும் - நெல்லிக்காயை வட்டாகக் கொண்டு பாண்டில் ஆடிக் கொண்டிருக்கும். வில்ஏர் உழவர் - விற்போரால் வழிப்போவாரைத் துன்புறுத்தி உண்ணும் வேடரின், வெம்முனைச் சீறூர் - கொடிய குடியிருப்பினை உடைய சிறிய ஊர்களைக் கொண்டிருக்கும், சுரன் முதல் வந்த - அழற் சுரத்தின் கண்ணே முற்பட்டு வந்த, உரன் மாய் மாலை - நம் வலியனைத்தையும் குறைக்கின்ற மாலைப் பொழுதைக் கண்டு, உள்ளிய - கருதிய, வினை முடித்தன்ன - வினையை முடித்தாற் போன்ற, இனியோள் - இனிமையை உடைய நமது காதலி, மனை - மனையகத்து, மாண் - மாட்சிமைப்பட்ட, சுடரொடு படர் பொழுது என - விளக்கையேற்றி அதன்முன் நின்று அவர்தாம் இன்னும் வந்தார் இல்லையே என்று அவ் விளக்கொடு வெறுத்துத் துன்புற்றுக் கருதுகின்ற பொழுதாகும் என்று, யான் உள்ளினென் அல்லனோ - யான் முன்னொரு காலத்து நினைத்தேன் அல்லேனோ? அங்ஙனமாக இப்பொழுதும் பொருளீட்டுமாறு ஒருப்படுத்தி என்னை வருத்தாதே கொள்: இனி யான் வாரேன்.

முடிபு: யான், மாலை மனைமாண் சுடரொடு படர் பொழுது என உள்ளினென் அல்லனோ; எனவே பிரியேன் என்றவாறாம்.

கருத்து: நெஞ்சே! மாலைவரின் என்பிரிவு கருதித் தலைவி துன்புறுவள். எனவே பொருள் வயிற் பிரியேன் என்று தலைவன் கூறினான்.

வி-ரை: தலைவன் முன்பு பொருள் ஈட்டிப் பெற்ற மகிழ்ச்சியன். அதனால் வினை முடித்தன்ன இனியோள், என்றான். இவளை நோக்குழியே அம் மகிழ்ச்சியுறுகின்றானாதலின் பொருளை விரும்பிப் பிரியேன் என்றானாம்.

பருந்து வருந்தியிருக்கும் வேம்பின் நிழலில் அப் பருந்தின் வருத்தத்தைச் சிறிதும் பாராது சிறுவர்கள் நெல்லிவட்டு ஆடி மகிழ்வர் என்றது யான் இவளைப் பிரிதலால் வருந்துன்பத்திற்கு அஞ்சி வருந்தவும், அதனைப் பாராது என் நெஞ்சே! நீ பொருள் மேற்செல்லும் மகிழ்ச்சியை உடையை, என்னே நின்செயல் என்று இரங்கிக் கூறியதாம்.

மெய்ப்பாடு : "பிறன் கட்டோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் : இல்லத்தழுங்கல்.

அ-ள் : உயவு - வருத்தம், கட்டளை - பொன் தேய்க்கும் கல், சுரன் - பாலை, படர்தல் - நினைத்தல், வில்லேருழவர் - வேடர்.

ஒப்புமைப் பகுதி

7. உள்ளினெனல்லெனோ யோன
"உள்ளினெனல் லெனோ யானே உள்ளி" (குறுந்—99: 1)

6-9. மகளிர் மாலையில் விளக்கேற்றுதல்
"சுடர்துயர் எடுப்பும் புன்கண் மாலை" (குறுந். 398:3-5)
"மங்கையர் நெய்யுமிழ் சுரையர் நெடுந்திரிக்
கொளீஇக்கையமை விளக்க நந்துதொறு மாட்ட"
(முல்லை. 47-9)

"எல்வளை மகளிர் மணிவிளக்கெடுப்ப,
மல்லல்மூதூர் மாலை வந்திறுத்தென" (சிலப். 4:19-20)
"மாலை மணி விளக்கங்காட்டி இரவிற்கோர்
கோலங் கொடியிடையார் தாம் கொள்ள" (சிலப். 9:3-4)
"பைந்தொடி மகளிர் பலர் விளக்கெடுப்ப" (மணி. 5:134)
"அகில்நாறு அங்கை சிவப்ப நல்லோர்
துகிலின் வெண்கிழித் துய்க் கடைநிமிடி
உள்ளிழு துறீஇய வொள்ளடர்ப் பாண்டில்,
திரிதலைக் கொளீஇ எரிதரு மாலை" (பெருங். 1.33;91-4)

8. வினை முடித்தமையால் தலைவனுக்கு இன்பம் உண்டாதல்
"செய்வினை முடித்த செம்மல் உள்ளமோ"
(குறுந். 270:5; 275:5) (அகநா. 184:5)

# 4. நெய்தல்

## தோழி கூற்று

கானலஞ் சிறுகுடிக் கடன்மேம் பரதவர்
நீனிறப் புன்னைக் கொழுநிழல் அசைஇத்,
தண்பெரும் பரப்பின் ஒண்பதம் நோக்கி,
அங்கண் அரில்வலை உணக்கும் துறைவனொடு,
5 'அலரே, அன்னை அறியின் இவணுறை வாழ்க்கை

அரிய ஆகும் நமக்'கெனக் கூறிற்
கொண்டுஞ் செல்வர்கொல்—தோழி!—உமணர்
வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றிக்
கணநிரை கிளர்க்கும் நெடுநெறிச் சகடம்
10 மணல்மடுத்து உரறும் ஓசை கழனிக்
கருங்கால் வெண்குருகு வெரூஉம்
இருங்கழிச் சேர்ப்பின்தம் உறைவினூர்க்கே.

ஏ-து : தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி அலரச் சந்தோன்றச் சொல்லி வரைவு கடாயது.

(சிறைப்புறம் - வேலிப்புறம். வரைவு கடாயது - மணம் வேண்டியது.)

## அம்மூவனார்

ப-ரை : தோழீ, கானல் அம் சிறுகுடி - கடற்கரைச் சோலையிலுள்ள சிறுகுடியிலிருந்து, கடல் மேம் பரதவர் - கடலின்மேல் மீன் வேட்டையாடச் செல்லும் பரதவர், நீல்நிறப் புன்னைக் கொழு நிழல் - நீலநிறத்தையுடைய புன்னையின் கொழுவிய நிழலிலே, அசைஇ - தங்கி, தண் பெரும் பரப்பின் - குளிர்ந்த பெரிய கடற்பரப்பில் செல்லுதற்கு, ஒஎ்பதம் நோக்கி - நல்ல சமயம் பார்த்து, அங்கண் - அவ் விடத்து, அரில் வலை உணக்கும் - முறுக்குண்டு கிடந்த வலையைப் பிரித்துப் புலர்த்தும், துறைவனொடு - துறையை உடைய நமது தலைவரிடம் சென்று, அலரே - நமக்குண்டாகிய பழிச்சொல்லையே, அன்னை அறியின் - தாய் அறிந்தால், இவணுறை வாழ்க்கை - இனி இங்குத் தங்கிக் களவொழுக்கத்து வாழ்தல், நமக்கு அரிய ஆகும் எனக் கூறில் - நமக்கு இயலாமற்போகும் என்று கூறினால், உமணர் - உப்பு வாணிகர், வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி - வெளிய கல்லுப்பின் விலை கூறி, கணம் நிரை கிளர்க்கும் - கூட்டமாகிய ஆனிரையை எழுப்புகின்ற, நெடுநெறிச் சகடம் - நெடிய வழியிற் செல்லும் வண்டிகள், மணல் மடுத்து உரறும் ஓசை - மணலில் மடுத்து முழங்கும் ஓசையைக் கேட்டு, கழனி - வயலிலுள்ள, கருங்கால் வெண்குருகு - கரிய காலையுடைய வெளிய நாரைகள், வெரூஉம் - அஞ்சும், இருங்கழிச் சேர்ப்பில் - கரிய கழி சூழ்ந்தநெய்தல் நிலத்தின் கண்ணுள்ள, தம் - தம்முடைய, உறைவு இன்ஊர்க்கு - உறைவிடமாகிய இனிய ஊர்க்கு, கொண்டும் செல்வர்கொல் - நம்மை அழைத்துக் கொண்டும் போவரோ?

முடிபு : தோழி! அலர் அன்னை அறியின் இவணுறை வாழ்க்கை அரிது என்று கூறில் தலைவர் கொண்டுஞ் செல்வர் கொல், என முடிக்க.

கருத்து : அலரெழுக்கை நம் களவிற்கு இடையூறாம் என்பதைத் தலைவன் உணர்ந்து விரைந்து வந்து தலைவியை மணந்துகொள்ள வேண்டும் என்று தோழி கூறினாள்.

தோழி தலைவியைத் தோழியென்று விளித்தலும் உண்டு.

அ.ள் அசைதல் - தங்குதல், நிரை - ஆனிரை, உரறுதல் - முழங்குதல்.

வி-ரை : அன்னை அறியின் வாழ்க்கை அரியதாகும் என்றல் - ஏதம் ஆய்தல் என்னும் மெய்ப்பாடாம். பெருமிதமும் காண்க.

பயன் - வரைவுகடாதல்.

பரதவர் புன்னையின் கீழிருந்து கடலிற் செல்லுதற்குச் சமயம் நோக்கி அது காறும் வலையை உலர்த்தும் துறைவன் என்றது, தலைவன் வேலிப்புறத்து இருந்து தலைவியைக் கூடுதற்கு யாரும் இல்லாத பதம் பார்த்து இதுகாறும் காத்திருப்பன் என்னும் பொருளையும்,

சகடம் மணலில் மடுத்து முழங்கும் ஓசைக்குக் கழனி நாரை வெருவும் என்றது, தலைவன் சான்றோரை முன்னிட்டு அருங்கலன் தந்து வரைய வரும் மணமுரசொலி கேட்பின் அலர் கூறுவார் வாய்வெருவி ஒடுங்குவர் என்னும் பொருளையும் தந்தன.

ஒப்புமைப் பகுதி

1. கானல் நண்ணிய சிறுகுடி

"கானல் நண்ணிய சிறுகுடி முன்றில்" (குறுந். 288:3)

# 5. குறிஞ்சி

## தோழி கூற்று

நிலம்நீர் ஆரக், குன்றம் குழைப்ப
அகல்வாய்ப் பைஞ்சுனைப் பயிர்கால் யாப்பக்,
குறவர் கொன்ற குறைக்கொடி நறைப்பவர்
நறுங்காழ் ஆரம் சுற்றுவன வகைப்பப்
5 பெரும்பெயல் பொழிந்த தொழில எழிலி
தெற்கேர்பு இரங்கும் அற்சிரக் காலையும்
அரிதே, காதலர்ப் பிரிதல்—இன்றுசெல்
இகுளையர்த் தரூஉம் வாடையொடு
மயங்கிதழ் மழைக்கண் பயந்த, தூதே.

எ-து : தலைவன் செலவுக் குறிப்பறிந்து வேறுபட்ட தலைவிக்குத் தோழி சொல்லியது.

### பெருங்குன்றூர் கிழார்

ப-ரை : தோழீ!, இன்று செல் இகுளையர்த் தரூஉம் வாடையொடு - இன்று பிரிந்து செல்லுகின்ற தோழியரை மீட்டும் நின்னை ஆற்றுவிக்குமாறு கூட்டுகின்ற வாடைக்காற்றினால், மயங்கு - வருந்திய, இதழ் - இமைகளையுடைய, மழைக் கண் - மழைபோல நீர் வடிக்கின்ற நின் கண்கள்தாம், பயந்த தூது - அவர் செல்லாதவாறு ஒரு குறிப்பாகிய தூதைத் தோற்றுவித்து விடுத்தன. (அங்ஙனம் விடுத்த தூதின் காரணமாக) நிலம் நீர் ஆர - இனி மிக்கமழை பெய்தலால் நிலம் நீரால் நிரம்பப் பெற்று நிறையவும், குன்றம் குழைப்ப - மலைமேலுள்ள மரம் முதலாயின தழைப்பவும், அகல் வாய் - அகன்ற வாயையுடைய, பைஞ்சுனை - குளிர்ந்த சுனையில் நீர் நிறைதலால், பயிர் - அங்கு முளைத்தெழுந்த குளநெல் முதலிய பயிர்கள், கால் யாப்ப - நெருங்கி வளரவும், குறவர் - குறவர்கள், கொன்ற - வெட்டியதனால், குறை - குறைபட்ட, நறைப்பவர் - நறைக் கொடி மீண்டும் தளிர்த்துக் கொடியாகி, நறுங்காழ் ஆரம் - நறுமணம் வீசுகின்ற வயிரமுற்றிய சந்தனமரத்தின்மீது, சுற்றுவன அகைப்ப - படர்ந்து சுற்றியேறவும், பெரும்பெயல் பொழிந்த - பெருமழையைப் பொழிந்த தொழிலையுடைய, எழிலி - மேகமானது, தெற்கு ஏர்பு இரங்கும் - தென்றிசையின் கண்ணே எழுந்து செல்லுதலாலே பிரிந்தோர் வருந்துகின்ற, அற்சிரக் காலையும் - முன்பனிக் காலத்தும், காதலர்ப் பிரிதல்

அரிது - நின் காதலரைப் பிரிந்து வாழ்தல் இல்லை; ஆகையால் மகிழ்வொடு முயங்கி இருப்பாய்.

முடிபு : தோழீ! நின் கண் பயந்த தூதால் அற்சிரக்காலையும் காதலரைப் பிரிந்து வாழ்தல் அரிது என முடிக்க.

கருத்து : தலைவீ! பிரிவினால் படும் துன்பங்களை நின் கண்கள் தெரிவித்தன. அதுகண்டு தலைவர் முன் பனிக்காலத்தும் நின்னைப் பிரியார் என்றவாறு.

அ-ள் : கால் யாத்தல் - நெருங்கல், நறை - வாசனை, பவர் - கொடி, கொடிப்பவர் - இருபெயரொட்டு, அற்சிரம் - முன்பனிக்காலம். இதழ் - இமை, காழ் - வயிரம், ஆரம் - சந்தன மரம், அகைத்தல் - உயர்ந்து படர்தல், ஏர்பு - எழுந்து. இகுளை - தோழி.

வி-ரை : மெய்ப்பாடு - பெருமிதம், பயன் - தலைவியை ஆற்றுவித்தல், மழைக்கண் பயந்த தூதாவது பிரிவாற்றாமை.

ஒப்புமைப் பகுதி

மழை தென்புலம் படர்தல்

"வடபுல வாடைக் கழிமழை
தென்புலம் படரும் தண்பனி நாளே," (குறுந். 317:6,7)
"தெற்கேர்பு, கழிமழை பொழிந்த பொழுதுகொள்
அமையத்து"
"வாடை வைகறை விசும்புரிவதுபோல் வியலிடத் தொழுகி,"
"மங்குல் மாமழை தென்புலம் படரும்" (அகநா. 13:12-3
24. 6-6)

பிரிவரிதாகிய காமம்

"பூ விடைப்படினும் யாண்டு கழிந்தன்ன
..................
பிரிவரிதாகிய தண்டாக் காமமொடு" (குறுந். 57:3)
"தணப்பருங் காமம் தண்டியோரே" (குறுந். 177:7)
"நூலிடை விலங்கினும் கவவுப்புலந்து உறையும்
கழிபெருங் காமம்" (அகநா. 361.5:6)

5. நறைக்கொடி

"நறையும் நாணமும் நாறும் நறும்புகை" (சீவக. 131)
"நறைக்கொடி கொண்டு" (ஐங். 276)
"தண்கமழ் நறைக் கொடி கொண்டு" (ஐங். 273)

# 6. குறிஞ்சி

## தலைவன் கூற்று

நீர்வளர் ஆம்பல் தூம்புடைத் திரள்கால்
நாருரித்து அன்ன மதனில் மாமைக்
குவளை அன்ன ஏந்தெழில் மழைக்கண்
திதலை அல்குல் பெருந்தோள், குறுமகட்கு
5 எய்தச் சென்று செப்புநர்ப் பெறினே,
'இவர்யார்?' என்குவள் அல்லள்; முனாது
அத்தக் குமிழின் கொடுமுக்கு விளைகனி
எறிமட மாற்கு வல்சி ஆகும்
வல்வில் ஓரி கானம் நாறி,
10 இரும்பல் ஒலிவரும் கூந்தல்
பெரும்பேது உறுவள்யாம் வந்தனம் எனவே.

எ-து: இரவுக்குறி விரும்பிச் சென்ற தலைமகன் ஆற்றானாய்த் தோழிகேட்பத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

பரணர்

ப-ரை: நீர் வளர் ஆம்பல் - நீரில் வளர்ந்த ஆம்பலின், தூம்புஉடை - உள்ளே துளையை உடைய, திரள்கால் - திரண்ட தண்டை, நார் உரித்தன்ன - நார் உரித்தாற்போன்ற, மதன் இல் மாமை - அழகு குறைந்த மாமையையும், குவளை அன்ன - கருங்குவளை மலரைப் போன்ற, ஏந்து எழில் - அழகு தங்கப்பெற்ற, மழைக்கண் - குளிர்ச்சியுடைய கண்ணையும், திதலை அல்குல் - திதலையுடைய அல்குலையும், பெருந்தோள் - பெரிய தோளையுமுடைய, குறுமகட்கு - இளமகளாகிய நம்மாற் காதலிக்கப்பட்ட தலைவியிடத்து, எய்தச் சென்று - நெருங்கச் சென்று, செப்புநர்ப் பெறின் - எமது வருகையை முன்னாடிக் கூறுவாரைப் பெறின், (நெஞ்சே!, அவரை நோக்கி) இவர் யார் என்குவள் அல்லள் - வந்திருக்கும் இவர் யாரென்று நம் தலைவி

கேட்பாள் அல்லள்; (மாறாக) முணாது - வெறுப்படையாது அத்தம் - சுரத்திலுள்ள, குமிழின் - குமிழ மரத்தின், கொடுமூக்கு - வளைந்த மூக்கினையுடைய, விளைகனி - முற்றிய கனிகள் கீழே உதிர்ந்து, எறி மடமாற்கு - ஆங்குக் குதித்து விளையாட்டயர்கின்ற இளமானுக்கு, வல்சி ஆகும் - விரும்பி உண்ணும் உணவாகும், வல்வில் ஓரி கானம் - வலிய வில்லையுடைய ஓரியென்பவனது காடுபோல, நாறி - நல்ல வாசனை உடையவாகி, இரும்பல் கூந்தல் - கரிய பலவாகிய தாழ்ந்த கூந்தலையுடைய தலைவிதான், யாம் வந்தனம் என - "யாம் வந்திருக்கின்றேம்" என்பதைக் கேட்டவுடன், பெரும் பேதுறுவள் - மகிழ்ச்சியால் மிகவும் மயங்குவள்

முடிபு : நெஞ்சே! குறுமகட்குச் செப்புநர்ப் பெறின், இவர் யார் என்னாள்; பெரும் பேதுறுவள் (எ-று).

கருத்து : இரவுக்குறி வேண்டிச் சென்ற தலைமகன், தன் வரவை முன்னால் தலைவி அறியின் பெருமகிழ்ச்சி அடைவள். அவ்வாறு கூறுவாரைப் பெற்றிலனே என்று நெஞ்சிற்கு நொந்து கூறியது.

அ-ள் : தூம்பு - துளை. மதன் - அழகு. மாமை - மாந்தளிர் போன்ற நிறம். வல்சி - உணவு. ஒலிதல் - தாழ்தல். பேது - மயக்கம். முணாது - வெறுப்படையாது.

வி-ரை : மதன் இல் மாமை என்றது பசலை பாய்தல் என்னும் மெய்ப்பாடு.

பெரும் பேதுறுவள் என்றது கண்டவழி உவத்தல் என்னும் மெய்ப்பாடு. அழுகை என்னும் மெய்ப்பாட்டையும் இவண் காண்க. பயன் - அயர்வுயிர்த்தல்.

குமிழின் கனி மானுக்கு உணவாவதுபோல, எம் வருகையைத் தெரிவிக்குஞ் சொல்லானது நமது தலைவிக்குப் பெருமகிழ்வு அளிக்கும் என்னும் குறிப்புப் பொருளும் பெறப்படும்.

ஓரியென்னும் கடையெழு வள்ளலது காடு பன்மணம் வீசும் பெற்றியது என்று இங்கு உணரக் கிடக்கின்றது.

ஒப்புமைப் பகுதி

1. தூம்புடைத் திரள்கால் ஆம்பல்

"ஏந்தெழில் மலர தூம்புடைத் திரள் கால் ஆம்பல்"

(குறுந். 178: 2)

"புழைக்கால் ஆம்பல்" (ஐங். 34.)

"பொய்கை ஆம்பல் நாருரி மென்கால்" (ஐங். 35)

1-2. மாமைக் கவின்

"திதலை அல்குல் என் மாமைக் கவினே" (குறுந். 27:5)
(குறுந். 331) (ஐங். 35)

"ஈங்கையென்னும் கொடியின் தளிர்" (அகநா. 75:17-8.)

"அசோகந் தளிர்." (கலி. 15:12.)

9. வல்வில் ஓரி கானம்

"கைவள்ளோரி கானம் தீண்டி" (குறுந். 199:3 )

"வல்வில் ஓரி கொல்லி குடவரைப்" (குறுந். 100-5.)
(அகநா. 209: 13-4.) (புறநா. 158:5.)

10. ஒலிமென் கூந்தல்

"ஒலிமென் கூந்தல் உரியவா நினக்கே" (குறுந். 225-7)
(குறிஞ்சிப். 2) (கலித். 64:6)
(புறநா. 109: 16306:3.)

11. பெரும் பேதைமை

"சென்றே நிற்கும் பெரும் பேதைமைத்தே"
(குறுந். 78: 6,391:9.)

12. மாமை

"மறைந்த மாதவி மாமை நிழற்றலின்" (சீவக. 1325.)
(ஐங். 35:2-4.)

# 7. பாலை

## தோழி கூற்று

சூருடை நனந்தலைச் சுனைநீர் மல்கப்
பெருவரை அடுக்கத்து அருவி ஆர்ப்பக்
கல்லலைத்து இழிதரும் கடுவரற் கான்யாற்றுக்
கழைமாய் நீத்தம் காடலை ஆர்ப்பத்
5 தழுங்குகுரல் ஏறொடு முழங்கி வானம்
இன்னே பெய்ய மின்னுமால்—தோழி
வெண்ணெல் அருந்திய வரிநுதல் யானை
தண்ணறும் சிலம்பில் துஞ்சும்
சிறியிலைச் சந்தின வாடுபெருங் காட்டே.

எ-து : களவொழுக்கம் வெளிப்பட்ட பின்பும் தலைமகன் வரையாது பொருள் வயிற் பிரிந்து நெடுந்தூரம் சென்றான். அதனால் ஆற்றாளாகிய தலைவியைத் தோழி அவர் குறித்த கார் காலம் வந்துற்றது; இப்பொழுதே வந்து நின்னை வரைந்து கொள்வர்; வருந்தாதொழியென ஆற்றுவித்தது.

## நல்வெள்ளியார்

ப-ரை : தோழீ; வெண்ணெல் அருந்திய - மூங்கிலின் வெள்ளிய அரிசியைத் தின்ற, வரி நுதல் யானை - புள்ளிகள் பொருந்திய நெற்றியையுடைய யானை, தண் நறும் சிலம்பில் - குளிர்ந்த நறுமணம் கமழும் மலைப் பக்கத்திலே, துஞ்சும் - தூங்கும், சிறியிலை - சிறிய இலைகளையுடைய, சந்தின - சந்தன மரங்களைத் தன்னிடம் கொண்டிருக்கின்ற, வாடு - வாடிய, பெருங்காட்டு - பெரிய காட்டினிடத்து, சூர் உடை - அச்சத்தை உடைய, நன்தலை - இடமகன்ற, சுனை - சுனைகளில், நீர் மல்க - நீர் நிறையவும், பெருவரை அடுக்கத்து - பெரிய மூங்கில்களை யுடைய மலைப் பக்கத்தில், அருவி ஆர்ப்ப - அருவிகள் ஆரவாரிக்கவும், கல் அலைத்து - கற்களைப் புரட்டிக்கொண்டு, இழிதரும் - ஓடி வருகின்ற, கடுவரல் - மிக்க வேகத்தினையுடைய, கான் யாறு - காட்டாற்றின் கண்ணே, கழை மாய் நீத்தம் - ஆதாரமாகிய மூங்கிலும் முழுகுமாறு பெருகிய வெள்ளத்தின், அலை காடு ஆர்ப்ப - அலை காட்டிற் சென்று மோதவும், தழங்கு குரல் ஏறொடு - ஒலிக்கின்ற இடியேற்றொடு, முழங்கி - முழக்கஞ் செய்து வானம் - மேகங்கள், இன்னே - இப்பொழுதே, பெய்ய - மழை பெய்ய, மின்னுமால் - மின்னாநிற்கும். இது கண்டு அவர் இன்னே வந்து நின்னை மணம் செய்து கொள்வர்; வருந்தாதே! என்று தேற்றியவாறு.

முடிபு : தோழி, காட்டில் சுனைமல்க, அருவி ஆர்ப்ப, அலை ஆர்ப்ப, வானம் மின்னும் என முடிக்க.

கருத்து : கார் காலம் வந்துற்றது. காதலர் விரைந்து வருவார், கவலற்க என்று தோழி தலைவியைத் தேற்றினாள்.

அ-ள் : சூர் - அச்சம். வரை - மூங்கில்.

வி-ரை : வாடுகின்ற பெருங்காட்டில் அக்காடு கவின்பெற மழை பெய்யத் தொடங்கும் என்றதால், வருந்திய நின்னை அருள் செய்யவேண்டி இப்பொழுதே தலைவன் வருவான் என்னும் குறிப்பும், நெல்லருந்திய யானை கவலை கெடகி

தூங்கும் என்றது தலைவனோடு இன்பம் நுகர்ந்த நீ துன்ப.. இன்றித் தூங்கப் பெறுவாய் என்னும் குறிப்பும் போந்தன.

மெய்ப்பாடு - பெருமிதம்

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

# 8. குறிஞ்சி

## தலைவன் கூற்று

அல்குபடர் உழந்த அரிமதர் மழைக்கண்,
பல்பூம் பகைத்தழை நுடங்கும் அல்குல்,
திருமணி புரையும் மேனி மடவோள்
யார்மகள் கொல்? இவள் தந்தை வாழியர்
5 துயரம் உறீஇயினள் எம்மே; அகல்வயல்
அரிவனர் அரிந்தும் தருவனர் பெற்றும்
தண்சேறு தாஅய, மதனுடைய நோன்றாள்
கண்போல் நெய்தல் போர்விற் பூக்கும்
திண்தேர்ப் பொறையன் தொண்டி—
10 தன்திறம் பெறுக,இவள் ஈன்ற தாயே!

எ-து : இயற்கைப் புணர்ச்சி இறுதிக்கண் தலைமகளை ஆயத்தொடுங் கண்ட தலைமகன் சொல்லியது.

பாடினோர் பெயர் அறியவில்லை.

ப-ரை : அல்குபடர் உழந்த - மிக்க துன்பம் உழந்த, அரிமதர் மழைக்கண் - செவ்வரி பரந்த மதர்த்த குளிர்ச்சியான கண்களை யும், பல் பூம் - பலவாகிய பூக்களுடனே, பகைத் தழை - மாறுபடத் தொடுக்கப்பட்ட தழையுடையை, நுடங்கும் -அசையும் படி உடுத்த, அல்குல் - அல்குலையும், திருமணி புரையும் மேனி - அழகிய நீலமணியை ஒத்த மேனியையும் உடைய, மடவோள் - இவ் இளமகள், யார் மகள் கொல் - யாருடைய பெண்ணோ? எம்மே துயரம் உறீஇயினள் - அசையாத உள்ளத்தை உடைய எம்மையே துயரம் செய்தனளே; இவள் தந்தை வாழியர் - (இத் திறமுள்ள இவளைப் பெற்று, எமக்கு உதவிய) இவளது தந்தை நெடுங்காலம் வாழ்வானாக; இவள் ஈன்றதாயும் - இவளைப் பெற்ற தாயும், அகல் வயல் - அகன்ற வயலின்கண், அரிவனர் அரிந்தும் - உழவரால் அரியப்பட்டும், தருவனர் பெற்றும் - நெற்

கதிரை எடுப்போராற்கொண்டு வரப்பட்டும், தண்சேறு தாஅய - தண்ணிய சேறு பரவ, மதன் உடை - அழகுடைய, நோன்தாள் - வலிய தண்டினையுடைய, கண்போல் நெய்தல் - கண்ணைப் போன்ற நெய்தல், போர் வில் - நெற்போரின் கண்ணே, பூக்கும் - மலரும், திண்தேர்ப் பொறையன் - திண்ணிய தேரையுடைய பொறையன் என்பானது, தொண்டி தன்திறம் - தொண்டி நகர் போன்ற பெருஞ்சிறப்பினை, பெறுக - பெறுவாளாக. எ-று.

முடிபு: மடவோள் தந்தை வாழியர்; தாய் தொண்டி தன் திறம் பெறுக என முடிக்க.

கருத்து: கவின்மிகு காதலியைப் பெற்று எமக்குத் தந்த இரு முதுகுரவரும் நெடுங்காலம் வாழ்ந்து இன்புறுக.

அ-ள் அல்கல் - மிகுதல். பொறை - மலை.

வி-ரை: தலைவிபால் பெரும் பயன் பெற்றானாகையால் பெற்றோரை வாழ்த்தினன். எனவே இது இயற்கைப் புணர்ச்சி யின் இறுதியில் எழுந்த கூற்றாம்.

தொண்டி எல்லா வளனும் பெற்றுச் சிறந்துளதுபோல் தாய் எல்லா நன்மைகளும் பெற்று அனுபவிக்க என்றானாம்.

மெய்ப்பாடு - உவகையைச் சார்ந்த மருட்கை.

பயன் - பயந்தோர்ப் பழிச்சல்.

ஒப்புமைப் பகுதி

8. நெய்தற் பூவிற்குக் கண் உவமை.

" யா யாகியளே மாஅ யோளே.
பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்.
கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும் (குறுந். 9: 4-6)
" கண்போல் நெய்தல் " (ஐங். 151:4)
" இருங்கழி மலர்ந்த கண்போல் நெய்தல்"
(அகநா :170 4.)
" கண்விழி நெய்தலும் " (சிலப் : 14: 77.)

# 9. பாலை

## தலைவன் கூற்று.

அழிவில முயலும் ஆர்வ மாக்கள்
வழிபடு தெய்வம் கட்கண் டாங்கு,
அலமரல் வருத்தம் தீர, யாழநின்
நலமென் பணைத்தோள் எய்தினம்: ஆகலின்,
5 பொரிப்பூம் புன்கின் எழில்தகை ஒண்முறி
சுணங்கணி வனமுலை அணங்குகொளத் திமிரி
நிழல்காண் தோறும் நெடிய வைகி,
மணல்காண் தோறும் வண்டல் தைஇ
வருந்தாது ஏகுமதி—வாலெயிற் றோயே
10 மாநனை கொழுதி மகிழ்குயில் ஆலும்
நறுந்தண் பொழில கானம்;
குறும்பல் ஊரயாம் செல்லு மாறே.

எ-து: உடன் போகாநின்ற தலைமகன் தலைமகட்கு உரைத்தது.

பாலை பாடிய பெருங்கடுங்கோ

ப-ரை: வால் எயிற்றோய் - வெள்ளிய பற்களை உடையாய், யாம் செல்லும் ஆறு - யாம் போகும் வழியிலுள்ள, கானம் - காடெல்லாம், மா நனை கொழுதி - மாமரத்திலுள்ள அரும்பைக் கோதி, மகிழ் - மகிழ்கின்ற, குயில் ஆலும் - குயில்கள் கூவி விளையாடும், நறும் தண் பொழில - நறிய தண்ணிய சோலை களை உடையன; குறும்பல் ஊர - மேலும் வழியில் அடுத்து அடுத்துப் பலவூர்களை உடையன, அழிவில முயலும் ஆர்வ மாக்கள் - சிதைவில்லாத செயலை முயல்கின்ற ஊக்கமுடைய மக்கள், வழிபடு தெய்வம் கண் கண்டாங்கு - அச் செயல் முற்றுப் பெற தாம் வணங்கும் கடவுளைக் கண்ணுக்கு எதிரில் கண்டாற் போல, அலமரல் வருத்தம் தீர - யாம் நெடுங்காலம் நின்னைப் பெற முயன்றதனால் ஏற்பட்ட சுழற்சியையுடைய வருத்தம் எல்லாம் நீங்கும்படியாக, நின் - உன்னுடைய, நலம்மென்பணைத் தோள் - அழகிய மெத்தென்ற பருத்த தோள்களை, எய்தினம் - அடைந்தனம், (ஆகையால் இனி நீ), பொரிப்பூம் . புன்கின் - பொரியை ஒத்த பூக்களையுடைய புன்னையினது, எழில்தகை ஒண்முறி - அழகு நிறைந்த ஒள்ளிய தவிரை, சுணங்கணி

வனமுலை - சுணங்கு நிரம்பிய அழகிய முலையிலே, அணங்கு கொள - அதன் அழகு மேன்மையுறுமாறு, திமிரி - அப்பி, நிழல் காண்தோறும் - நிழலைக் காணும் இடங்களில் நெடும்பொழுது தங்கி, மணல் காண் தோறும் - மணல்களைக் காணும் இடங்களில், வண்டல் தைஇ - சிற்றில் இழைத்து விளையாடி, வருந்தாது - வழிநடை வருத்தத்தைப் போக்கி, ஏகுமதி - மெல்ல மெல்ல வருவாயாக.

முடிபு : வாலெயிற்றோய், எய்தினமாகலில் திமிரி, வைகி, தைஇ ஏகுமதி என்றவாறு.

கருத்து : தலைவியே! அன்பால் ஒன்றுபட்டு உடன்போக்கில் நின்றேம். வழிநடை வருத்தம்தீர நிழலில் தங்கி வண்டலயர்ந்து வருவாயாக.

அ-ள் : அலமரல் - சுழற்சி. யாழ - அசை. முறி - தளிர், சுணங்கு - தேமல். வால் - வெண்மை. நனை - அரும்பு.

வி-ரை : முயற்சியுடையோர் தெய்வத்தைக்கண்டு தாம் முயன்று வைத்த பொருளைப் பெற்றாற் போல, தலைவன் தலைவியைக் கண்டு இன்பம் அடைந்தான் என்க.

இதன் இரண்டாவது அடி 'கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தாற் போல' என்னும் பழமொழியை நினைவுறுத்து கின்றது.

மெய்ப்பாடு - உவகை. பயன் - தலைமகளின் வருத்தம் போக்கல்.

**ஒப்புமைப் பகுதி**

5. புன்கின் மலருக்குப் பொரி

" நனை முதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்
செந்நெல் வான்பொரி சிதறி யன்ன " (குறுந். 53:2-4.)
(குறுந். 341:2.) (ஐங். 347:3. 368:2.)

"பொரியுரு உறழப் புன்குபூ உதிர " (கலித்.33:11)

"பொரிஎனப் புன்சவிழ கன்றுறை " (அகநா. 116; 5-7.)

" புன்கு பொரிமலரும் பூந்தண்பொழில் எல்லாம்"
(திணைமொழி. 14:4)

"செம்பொன், பொங்கர் வெண்பொரி சிந்தினபுன்கு"
(சிலப். 12)

"பேசிற் செந்தலைய வெண்கறைய புன்கம்பொரி
அணிந்தனவே"
(சீவக. 1649)

"பொரியணிந்து புன்குதிர்ந்து பூநாறும் துறையெல்லாம்"
(சூளா. 4:56)

"பொரிவிரிவன புதுமலரன புன்குதிர்வன புறனே"
(சூளா.6:1)

"மிகவுடைய புன்மலர்ப் பொரியட்ட மணஞ்செய்யும்
மிழலையாமே."
(தே. திருஞா)

" பொரியோர் புன்குசொரிப் பூஞ்சோலைப் புத்தூரே "

10. குயில் மாவின் தாதைக் கொழுதல்

" ஈங்கே வருவர் இனையல் அவரென
மின்னின் தூவி இருங்குயில் பொன்னின்
உரைதிகழ் கட்டளை கடுப்ப மாச்சினை
நறுந்தாது கொழுதும் பொழுதும்
வறுங்குரற் கூந்தல் தைவரு வேனே " (அகநா. 25:6)
(அடி. 5-6. முறி)

பேரூர் கொண்ட வார்கலி விழவிற்
தழலும் தட்டையும் முறியும் தந்திவை
என்னை கொண்டான்யாம் இன்னமால் இனியே "
(குறுந். 223:4)

"வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியா " (முருகு. 37)

"எழில்தகை இளமுலை பொலியப் பொரிப்பூம் புன்கின்
முறி திமிர் பொழுதே"
(ஐங். 341: 2-3)

## 10. பாலை

### தோழி கூற்று

அண்ணாந்து ஏந்திய வனமுலை தளரினும்,
பொன்னேர் மேனி மணியில் தாழ்ந்த
நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்,
நீத்தல் ஓம்புமதி—பூக்கேழ் ஊர
5 இன்கடுங் கள்ளின் இழையணி நெடுந்தேர்க்
கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்,
வெண்கோட்டு யானைப் பேளர் கிழவோன்
பழையன் வேல்வாய்த்து அன்னநின்
பிழையா நன்மொழி தேறிய இவட்கே.

எ-து : உடன்போக்குந் தோழி கையடுத்தது.
(கையடுத்தல் - பாதுகாப்பாயாக என ஓம்படுத்தல்)

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : பூக் கேழ் ஊர - மலர்கள் விளங்கிய பொழில் சூழ்ந்த ஊரை உடையவனே; இன் கடுங் கள்ளின் - இனிய கடுப்பு உடைய கள்ளுணவையும், இழையணி நெடுந்தேர் - அணிகலன் அணிந்த நெடிய தேர்களையும் உடைய, கொற்றச் சோழர் - வலிமை வாய்ந்த சோழமன்னர், கொங்கர்ப் பணீஇயர் - கொங்கரை அடக்கும் பொருட்டு, வெண்கோட்டு யானை - வெளிய கோட்டினையுடைய யானைகளை உடைய, போஒர் கிழவோன் - 'போஒர்' என்னும் ஊரின் தலைவனாம் பழையன் - 'பழையன்' என்னும் சேனாதிபதியிடத்து, வேல் வாய்த்து அன்ன - தப்பாத வேற்படையைப் பெற்று வைத்திருந்தாற் போன்ற, நின் - உன்னுடைய, பிழையா - பிழைபடாத, நன்மொழி - நல்லமொழியைக் கேட்டு, தேறிய இவட்கு - உண்மையெனத் தெளிந்த இவளுக்கு, அண்ணாந்து - நிமிர்ந்து, ஏந்திய - உயர்ந்த, வனமுலை - அழகிய முலைகள், தளரினும் - தளர்ந்தாலும், பொன் ஏர் மேனி - பொன் போன்ற மேனியிலே, மணியில் - கருமணி போல, தாழ்ந்த - தாழ்ந்து தொங்கிய நன்னெடுங் கூந்தல் - நல்ல நெடிய கூந்தல், நரையொடு முடிப்பினும் - நரையுடனே முடிக்கப் பெற்றாலும், நீத்தல் ஓம்புமதி, (அக் காலத்து இவள் நம் முயக்கத்துக்குப் பயன்படாது முதுமை யடைந்தாள் என்று கருதி) விட்டுப் பிரியாது பாதுகாப்பாயாக.

முடிபு : ஊர, இவட்கு முலைதளரினும் நரைமுடிப்பினும் நன்மொழி தேறியமையால் நீத்தல் ஓம்புமதி என்று முடிக்க.

கருத்து : தலைவ! உன் சொல் நம்பி நட்பு கொண்ட தலைவியை அவள் முதுமையடைந்தவிடத்தும் விட்டுப்பிரியாது ஒழுகுவாயாக என்றபடி.

அ-ள் : அண்ணாத்தல் - நிமிர்தல். வனம் - அழகு. மதி - அசை. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - பாதுகாப்பு உரைத்தல்

ஒப்புமைப்பகுதி

2. பொன்போல் மேனி

பூப்போல் உண்கண் பொன்போல் மேனி (ஐங். 230:4)
(குறுந் 101:4; 319:6) (அகநா. 212:1-2)

5 "இழையணிந்த தேர்"

இழையணிந் தியல் வரும் கொடுஞ்சி நெடுந்தேர்

(குறுந். 345-1) (கலித். 99:7)

(அகநா. 238:12), (புறநா.123:4; 123:15).

5. இன்கடுங்கள்

இன்கடுங் கள்ளின் அகுதை பின்றை (குறுந். 298:5)

"இன்கடுங் கள்ளின் ஆமூர் ஆங்கண்" (புறநா. 80:1)

(அகநா. 76-3, 137-6)

"பொன்போல் விறற் கவின் தொலைத்த" (ஐங்.230)

# 11. நெய்தல்

## தோழி கூற்று

பெய்யாது வைகிய கோதை போல
மெய்சாயினை, அவர்செய் குறி பிழைப்ப
உள்ளி நொதுமலர் நேர்புஉரை தெள்ளிதின்
வாரார் என்னும் புலவி உட்கொளல்
5 ஒழிகமாஎ, நின் நெஞ்சத் தானே
புணரி பொருத பூமணல் அடைகரை,
ஆழி மருங்கின் அலவன் ஓம்பி
வலவன் வள்பு ஆய்ந்து ஊர,
நிலவு விரிந்தன்றால், கான லானே.

என்பது - காப்பு மிகுதிக்கண் இடையீடுபட்டு ஆற்றாளாய தலைமகட்குத், தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது.

### உலோச்சனார்

ப-ரை : தோழி! அவர் - தலைவர், செய்குறி - செய்தகுறியானது, பிழைப்ப - தவறுபட்டதனால், பெய்யாது - சூடப்படாது, வைகிய - பயன் இன்றிக் கிடந்த, கோதைபோல - பூமாலையைப்போல, மெய் - உடல், சாயினை - வாடினை, நொதுமலர் - அயலவர், உள்ளி - நினைத்து, நேர்பு உரை - பழிச்சொல்லைக்கூற, தெள்ளிதின் - அதன் காரணமாக, வாரார் என்னும் புலவி உட்கொள - அவர் வருவாரல்லர் என்னும் புலவியை நீ உட்கொள்ளாது, நின்நெஞ்சத்தான் - உன்மனத்தின் கண், ஒழிக - கவலையை விடுக, புணரி - அலைகள், பொருத - வந்து மோதியதனால், பூ மணல் - குவிந்த இளமணலைச்

சார்ந்த, அடைகரை - கடற்கரையின்கண், ஆழி மருங்கின் - தலைவர் தாம் ஏறி வருகின்ற தேரின் சக்கரங்கள் படாதவாறு, அலவன் - நண்டுகளை, ஓம்பி - பாதுகாத்து, வலவன் - தேர்ப் பாகன், வள்பு - குதிரைகளின் வாரை, ஆய்ந்து - நன்கு பிடித்துக் கவனமாக, ஊர - ஓட்டுமாறு, கானல் - கடற்கரையிடத்து, நிலவு - நிலவின் ஒளியானது, விரிந்தன்று - நன்கு பரவியிருக் கின்றது.

முடிபு : தலைவி மெய்சாயினை, புலவி ஒழிக, கானல் நிலவு விரிந்தன்று என முடிக்க.

கருத்து : குறி பிழைத்தமையால் தலைவன் வாரான் என்று தலைவியே! நீ கவலற்க. கானலில் நிலவு பிரகாசிக் கின்றது. அலவன் பாதுகாத்துவரும் தலைவன் தேர் நின்னை யும் பாதுகாக்கும்.

அ-ள் : வள்பு - வார். வலவன் - தேர்ப்பாகன். மா - திசை மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

1.2 பெய்யாப் பூவைப்போல மெலிதல்
"பெய்யாப்பூவின் மெய்சாயினளே" (குறுந். 9:3)
"பெய்யா மலரிற் பிறிதாயினளே" (சீவக. 1960)

## 12. பாலை

### தோழி கூற்று

விளம்பழம் கமழும் கமஞ்சூல் குழிசிப்
பாசம் தின்ற தேய்கால் மத்தம்
நெய்தெரி இயக்கம் வெளில்முதல் முழங்கும்
வைகுபுலர் விடியல் மெய்கரந்து, தன்கால்
5 அரிஅமை சிலம்பு கழீஇ, பல்மாண்
வரிபுனை பந்தொடு வைஇய செல்வோள்,
"இவைகாண் தோறும் நோவர் மாதோ
அளியரோ அளியர் என் ஆயத்தோர்!" என
நும்மொடு வரவு தான் அயரவும்
10 தன்வரைத்து அன்றியும் கலுழ்ந்தன கண்ணே"

எ-து : தோழி உடன்போக்கு அஞ்சுவித்தது. (அஞ்சுவித்த லால் செலவு தவிர்ந்து வரைய முயல்வானாம்)

கயமனார்

ப-ரை : தலைவ! விளம்பழம் கமழும் கமம் சூல் குழிசி - தன்னிடத்திற் படிந்த முடை நாற்றம் நீங்கும்படியாக விளாம் பழத்தைக் கொண்ட வாசனை பொருந்திய நிறைந்த பெரிய தயிர்ப் பானையில், பாசம் - படிந்துகிடந்த பாசியாம் அழுக்கை, தின்ற - போக்கிய, தேய்கால் மத்தம் - கயிறு ஆடித் தேய்த்த லால்போன அடியினையுடைய, மத்தம் - மத்தானது, நெய்தெரி இயக்கம் - வெண்ணெய் உண்டாகும்படிக் கடைதலால் எழும் ஓசை முழங்குகின்ற, வைகுபுலர் விடியல் - இருளொழியும் விடியற்காலையில், மெய்கரந்து - (உடன்போக்கிற்கு இணங்கிய தலைவி) எவரும் பாராதபடித் தன் உடலை மறைத்துக் கொண்டு, தன்கால் - தன் கால்களில் அணிந்த, அரியமை சிலம்பு - பருக்கைக் கற்களைத் தன்பாற் கொண்ட சிலம்புகளை, கழீஇ - கழற்றி, பல்மாண் - பலவாகிய மாட்சிமைப்பட்ட, வரிபுனை - வரிந்து புனைந்த, பந்தொடு - பந்துகளோடு, வைஇய செல் வோள் - சேரவோரிடத்தில் வைக்கச் செல்வோள், இவை காண் தோறும் - இவற்றை என் தோழிகள் காணும்பொழுதெல்லாம், நோவர் - வருந்துவர்; என் ஆயத்தோர் - அவ்வாறு வருந்தும் என் தோழியர், அளியரோ அளியர் - மிகவும் இரங்கத் தக்கார், என - என்று கருதி, நும்மொடுதான் வரவு - நும்மொடுதான் வரு தலை, அயரவும் - உடன்பட்டும், தன்வரைத்து அன்றியும் - அவளுடைய கட்டுப்பாட்டையும்மீறி, கண் கலுழ்ந்தன - கண்கள் கண்ணீர் சொரிந்தன, ஆகையால் எது தகுமோ அதைச் செய்வீர்.

முடிபு : தலைவனே! செல்வோள் அயரவும் கண்கலுழ்ந்தன என முடிக்க.

கருத்து : தன்பிரிவினைத் தோழியர் பொறார் என்று கூறித் தலைவனைச் செலவழுங்குவித்தாள்.

அ-ள் : குழிசி - தாழி - பானை. வெளில் - தயிர் கடை தற்கென நட்டதூண். மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - செலவு அழுங்குவித்தல்.

ஒப்புமைப் பகுதி

8. அளியளோ அளியள்

"அளியளோ அளியள் என்நெஞ்சமர்ந்தோளே (குறுந். 56)
(அகநா. 43,56)

10. கண்கள் தாமே அழுதல்.

"அளியவோ அளிய தாமே ஒளி பசந்து" (ஐங். 455)
(குறுந். 56:5), (59.239:3), (கலித். 53:3).

"கெழுதகைமையின் அழுதன தோழி" (குறுந். 241:2-7)

# 13. குறிஞ்சி

### தோழி கூற்று

எழாஅ ஆகலின் எழில்நலம் தொலைய
அழாஅ தீமோ, நொதுமலர் தலையே!
ஏனல் காவலர் மாவிழ்த்துப் பறித்த
பகழி அன்ன சேயரி மழைக்கண்
5 நல்ல பெருந் தோளோயே! கொல்லன்
எறிபொன் பிதிரின் சிறுபல் காஅய
வேங்கை வீஉகும் ஓங்குமலைக் கட்சி
மயில் அறிபு, அறியா மன்னோ:
பயில்குரல் கவரும் பைம்புறக் கிளியே.

எ-து: இயற்கைப் புணர்ச்சியின் மறுநாள், தலைவியின் வேறுபாடு கண்ட தோழி, தலைவி மறைத்தற்குச் சொல்லியது.

கபிலர்

ப-ரை: ஏனல் காவலர் - தினைப்புனத்தைப் பாதுகாக்கும் குறவர், மா- தினைப்பயிரை அழிக்கவந்த விலங்குகளை, வீழ்த்து -அம்பெய்து கொன்று, பறித்த - மீண்டும் அவற்றின் உடம்பினின் றும் பறித்து எடுத்த, பகழி அன்ன - அம்பினைப்போன்ற, சேயரி பரந்த மழைக்கண் - செவ்வரி பரந்த குளிர்ச்சியை உடைய கண்ணையும், நல்ல பெருந்தோளோய் - நல்ல பெரிய தோளையும் உடையாய்! கொல்லன் - இரும்பு அடிக்கும் கொல்லனது உலைக்களத்து, எறிபொன் பிதிரின் - அடிக்கும் இரும்பின் பொறி சிதறுமாறுபோல, சிறு பல் காய - சிறிய பல

வாய காய்களை உடைய, வேங்கை - வேங்கை மரத்தின், வீ - மலர்கள், உகும் - உதிர்கின்ற ஓங்கு மலை - உயர்ந்த மலையிலுள்ள கட்சி - கூட்டிலிருக்கும், மயில் - மயில்கள், அறியா மன்னோ - அறியாது என்று கருதி, பைம்புறக்கிளி - பசிய புறத்தினை உடைய கிளிகள், பயில் குரல் கவரும் - நெருங்கிய தினைக்கதிர்களைக் கொய்து செல்லும், அதனை நீ அறிகின்றிலை. எழாய் - அவற்றை ஓட்ட நீ எழுந்திராய். ஆகலின் - ஆகையால் (மேலும்) எழில் நலம் தொலைய - நின் அழகிய நலமனைத்தும் கெடும்படியாக, நொதுமலர் தலை - அயலவர் இருக்கும் இவ்விடத்து, அழாஅதீம் - அழாது இருத்தலையேனும் செய்வாய்.

முடிபு : பெருந்தோளோய்! கிளி குரல் கவரும்: எழாய். அழாஅதீம் என முடிக்க.

கருத்து : தலைவீ! கிளியை ஓட்டவும் செய்திலை. பிறரறியுமாறு அழவும் செய்கின்றனை. இயற்கைப் புணர்ச்சியால் உனக்கு ஏற்பட்ட வேறுபாட்டை நீ கூறாது மறைத்தாலும் உன் செய்கைகளால் உணர்ந்தேன் என்று தோழி கூறினாள்.

அ-ள் : பிதிர் - பொறி. கட்சி - கூடு. பயிலல் - நெருங்கல். குருதி படிந்த அம்பு கண்ணுக்கு உவமையாயிற்று.

'பிதிர்வில்' எனவும் பாடம்.

வி - ரை : மாவீழ்த்துப் பறித்த பகழி என்றது தலைவனை மயக்கிப் பாய்ந்து மீண்ட கண்ணை உடையாள் என்று குறிப்பித்தது. நீ அழுதால் தமர் அறிந்து இற் செறிப்புச் செய்வர் என்றபடி, தினைக்கதிர்களைக் கிளிகள் கொய்கின்றன. அதனை மயில்கள் பார்த்து இருக்கவும் மயில்கள் அறியா என்று கிளிகள் கருதிக் கவர்வதுபோல, நின்னைக் காவல் புரியும் யான் நின் களவொழுக்கத்தை அறிவேன்; எனினும் யான் அறியேன் என்று கருதி களவினை மறைத்தனை என்று தோழி நயமுடன் கூறினாள்.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - தோழி ஆராய்ந்து அறிதல்.

# 14. பாலை

## தலைவி கூற்று

தொல்கவின் தொலைய, தோள்நலம் சாஅய்,
நல்கார் நீத்தனர் ஆயினும், நல்குவர்:
நட்டனர், வாழி!—தோழி!— குட்டுவன்
அகப்பா அழிய நூறி, செம்பியன்
5 பகல்தீ வேட்ட ஞாட்பினும் மிகப்பெரிது
அலர்எழச் சென்றனர் ஆயினும்—மலர்கவிழ்ந்து
மாமடல் அவிழ்ந்த காந்தள்அம் சாரல்,
இனம்சால் வயக்களிறு பாந்தள் பட்டென,
துஞ்சாத் துயரத்து அஞ்சுபிடிப் பூசல்
10 நெடுவரை விடரகத்து இயம்பும்
கடுமான் புல்லிய காடு இறந்தோரே

எ-து : இயற்பழித்த தோழிக்குத் தலைவி இயற்பட மொழிந்தது. இயற்பழித்தல் - தலைவன் செய்கையைப் பழித்துக் கூறல்.

மாமூலனார்

ப-ரை : தோழி! நீ தலைவனைப் பழித்து உரையாதே. மலர் கவிழ்ந்து - பூக்கள் கட்டவிழ்ந்து, மாமடல் அவிழ்ந்த - பெரிய இதழ் விரிந்த, காந்தள் அம் சாரல் - காந்தள் மலர் களையுடைய சாரலிடத்து, இனம் சால் - தன் இனத்தாற் பெருமை பொருந்திய, வயக்களிறு - வெற்றி மிகுந்த ஆண் யானை, பாந்தள் - பாம்பால், பட்டென - பிடிக்கப்பட்டதாக, துஞ்சாத் துயரத்து - அதனால் தூங்காது துன்பத்துடன், அஞ்சு - பயந்து, பிடி - பெண் யானை, பூசல் - எழுப்பும் பேரொலி யானது, நெடுவரை விடரகத்து - நீண்ட மலையிடத்துள்ள பிளப்புகளில், இயம்பும் - எதிரொலிக்கும், கடுமான் - விரைந்து செல்லும் குதிரையை உடைய, புல்லிய - கள்வர் தலைவனாகிய புல்லியென்பவனுடைய, காடு - வேங்கட மலையிலுள்ள காட்டின் வழி, இறந்தோர் - பிரிந்து சென்ற நம்தலைவர், தோள் நலம் சாஅய் - என் தோளின் அழகு நலங் கெட்டுவாடி, தொல்கவின் தொலைய - பழைய அழகு எல்லாம் குறையுமாறு, நல்கார் - என்னைக்கூடி இன்பம் தராராய், நீத்தனர் - பிரிந்தனர் என்று கூறுகின்றனை. ஆயினும் - அங்ஙனம் பிரிந்தார் என்றாலும் அவர்,

குட்டுவன் - சேரலனுடைய, அகப்பா அழிய - ஈழுமலத்தின் மதில் ஒருங்கு அழிய, நூறி - இடித்து ஒழித்து, செம்பியன் - கிள்ளி வளவன், பகல் தீ வேட்ட - அன்றைய பகலில் அவ் வூரைத் தீயிட்டுக் கொளுத்திய, ஞாட்பினும் - போரினும், மிகப் பெரிது அலர் எழ - மிகப் பெரிதாகிய பழி உண்டாகுமாறு பிரிந்தார் என்றாலும், நட்டனர் நல்குவர் - என்னிடம் மிகவும் அன்பு கொண்டவர் ஆதலால் வந்து அருள் செய்குவர். வாழி - அவர் நீண்டகாலம் வாழ்க என்றவாறு.

முடிபு : செம்பியன் ஞாட்பினும் அலர் எழச் சென்றனர், தொலைய, சாஅய் நீத்தனர் ஆயினும் தோழி நல்குவர் என முடிக்க.

கருத்து : தலைமகன் இயலைத் தோழி பழித்துரைக்க, தலைவி தலைவனைப் பழிக்காதே; குறித்த பருவத்து வந்து அன்பு செய்குவர் என்றவாறு.

அ-ள் : சாய்தல் - நுணுகல். அகப்பா - மதில் ஞாட்பு - போர். விடர் - மலைப்பிளப்பு. நல்குவர் - பாராட்டுவர். தொல் கவின் தொலைதல் - பசலை பாய்தல். தோள் நலம் சாய் என்றது உடம்பு நனி சுருங்கல். களிறுபட்ட துன்பம் கருதிப் பிடி விடரகத்துப் பிளிறும் என்றது, தலைவன் பிரிவால் தலைவி வருந்திய வருத்தம் நோக்கி ஊரார் எடுத்த அலர் சேரியிற் பரவும் என்பதைக் குறிப்பித்தது.

8. 'ஞால் வாய்க் களிறு'—எனவும் பாடம்,

மெய்ப்பாடு : அழுகையைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - இறற்பட மொழிதல்.

ஒப்புமைப்பகுதி

தலைவனைப் பிரிந்தமையில் தோள் நெகிழ்தல்
"தணப்பின் ஞெகிழ்ப என் தடமென் தோளே"
(குறுந். 299:8), (குறுந். 87:5), (குறிஞ்சி. 9), (ஐங். 230:3) .(கலித். 07:11, 45:15).

தோள் நலம் சாய்தல்
"தொல்கவின் றொலைந்து தோணலஞ் சாஅய்"
(குறுந். 381:1)

4. குட்டுவன் அகப்பா என்னும் அரணத்தை எறிந்து
"அகப்பா எறிந்த அருந்திறல் ஆயினும்" (சிலப். நடுகற் 144)
"அண்ணல் அம் பெருங்கோட்டு அகப்பா எறிந்து"
(பதிற். 22:26-7,
"அகப்பா எறிந்து பகல் தீ வேட்டு" (3-ஆம் பத்துப்பதிகம்)

# 15. நெய்தல்

## தோழி கூற்று

முழங்குதிரை கொழீஇய மூரி எக்கர்
நுணங்குதுகில் நுடக்கம் போலக் கணம்கொள
ஊதை தூற்றும் உரவுநீர்ச் சேர்ப்ப!
பூவின் அன்ன நலம்புதிது உண்டு,
5 நீயுணர்ந் தனையே அன்மையின் யாமே,
நேர்புடை நெஞ்சம் தாங்கத் தாங்கி
மாசுஇல் கற்பின் மடவோள் குழவி
பேஎய் வாங்கக் கைவிட் டாங்கு,
சேணும் எம்மொடு வந்த
10 நாணும் விட்டேம்: அலர்க, இவ் வூரே!

எ-து : வரைவு நீட்டித்த வழி, தோழி தலைமகற்குச் சொல்லி வரைவுகடாயது.

அறிவுடைநம்பி

ப-ரை : முழங்கு திரை - ஒலிக்கின்ற அலைகள், கொழீஇய - கொண்டுவந்து குவித்த, மூரி - பெரிய, எக்கர் - மணலை, நுணங்கு - வருத்திய, துகில் நுடக்கம்போல-துகிலின் அசைவைப் போல, கணம்கொள - மிகுதிப்பட, ஊதை தூற்றும் - காற்றுத் தூற்றாநிற்கும், உரவுநீர் - நீர்நிறைந்த வலிய, சேர்ப்ப - கடற் கரைத் தலைவனே! பூவின் அன்ன - பூவைப் போன்ற, - நலம் எமது தலைவியின் நலத்தை, புதிது உண்டு - புதுவதாக நீ நுகர்ந்து வைத்தும், நீ உணர்ந்தனை அன்மையின் - நீ அதன் அருமையை உணரவில்லை ஆகையால், யாம் - நாம், நேர்பு உடை நெஞ்சம் - நினக்கு உடன்படுதலையுடைய எம் உள்ளத் தில், தாங்கத் தாங்கி - வருத்தமுற அதனை ஏற்று, மாசில் - குற்றம் இல்லாத, கற்பின் மடவோள் ஒருத்தி - கற்பினையுடைய இளைய மடமகள் ஒருத்தி, குழவி - தன் சிறிய குழந்தையை, பேஎய் வாங்க - பேய்க்குப் பலி கொடுப்ப எண்ணி,கைவிட்டாங்கு பின் பாசத்தால் அதனைக் கைவிட்டாற்போல, சேணும் - பிறந்தநாள் முதல், எம்மொடுவந்த - எம்முடன் வளர்ந்துவந்த - நாணும் - வெட்கத்தையும், விட்டேம் - நீங்கினேம், இவ் வூர் - இனி இவ்வூரின்கண், அலர்க - அலர் எழுவதாகுக என்றவாறு.

முடிபு : சேர்ப்பா! நலம் புதிது உண்டும் நீ உணர்ந்தனை அன்மையின், நாஹும் விட்டேம்; இவ்வூர் அலர்க: என்று முடிக்க.

கருத்து : தலைவ! நீ தலைவியின் நலத்தை உண்டமையால் ஊரில் அலர் எழுகின்றது. காலம் தாழ்க்காது விரைந்து வந்து மணம் செய்து கொள்க.

அ-ள் : மூரி - பெருமை. உரவு - வலிமை. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவு கடாதல்.

வி-ரை : கடல் அலைகள் குவித்த எக்கர் மணலைக் காற்று அள்ளித் தூற்றினாற்போல, நின்னால் நீக்கப்பட்ட தலைவியைப் பற்றி ஊரார் அலர் தூற்றா நிற்பர் என்றபடி.

ஒப்புமைப்பகுதி

4. தலைவி புதுநலம் இழத்தல்

"புதுநலன் இழந்த புலம்பு மாருடையள்" (குறுந். 81:3)
"பொன்மாலை மார்பன் என்புது நலம் உண்டு இகழ்வானோ"
(தே. திருநா - திருப்பழனம்)

4. தலைவன் நலம் புதிது உண்டல்

"நலம் புதிது உண்ட புலம்பி னானே"
'நலம் புதிது உண்டு உள்ளா நாணிலி' (கலித். 83:21)
தலைவன் உண்ட நலம்
"கண்டிசின் தோழி அவருண்ட என் நலனே"
(குறுந். 112:5 236:6)

நாண் நனி நீடுழந்தன்று "அளிதோ தானே நாணே நம் மொடு நனிநீடு உழந்தன்று மன்னே இனியே" (குறுந். 149:1,2)

"நாணோடு உடன்பிறந்த நான்" (முத். 98)

9.10 : "பெண்பால் - நாண்"
"பெண்பாலவர்கட்கு அணியாய்ப் பிரியாத நாணும்"
(சீவக. 1961)

# 16. பாலை

## தலைவன் கூற்று

புணரின் புணராது பொருளே: பொருள்வயிற்
பிரியின் புணராது புணர்வே: ஆயிடைச்
செல்லினும், செல்லாய் ஆயினும், நல்லதற்கு
உரியை வாழிஎன் நெஞ்சே!—பொருளே
5 வாடாப் பூவின் பொய்கை நாப்பண்
ஓடுமீன் வழியின் கெடுவ: யானே
விழுநீர் வியல்அகம் தூணி ஆக
எழுமாண் அளக்கும் விழுநிதி பெறினும்,
கனங்குழைக்கு அமர்த்த சேயரி மழைக்கண்
10 அமர்ந்து, இனிது, நோக்கமொடு செகுத்தன
எனைய ஆகுக! வாழிய பொருளே!

எ-து : பொருள்மேற் சென்ற உள்ளத்தினை இடித்துரைத்துத் தலைவன் செலவு தவிர்ந்தது.

### சிறைக்குடி ஆந்தையார்

ப-ரை : என் நெஞ்சே! என்பாலன்பு கொண்ட மனமே, வாழி - நான் சொல்வதைக் கேட்பாயாக: நெடுங்காலம் வாழ்வாயாக. பொருளே - நீ கருதிய பொருள்தான், புணரின் - தலைவியை விட்டுப் பிரியாது இல்லத்தின்கண்ணேயே இருந்தவிடத்து, புணராது - நம்மை வந்து அடையாது. ஆனால், புணர்வு - தலைவியைப் புணரும் புணர்ச்சியோ, பொருள்வயின் பிரியின் - பொருள் ஈட்டப் பிரிந்த சமயத்து, புணராது - அடைய முடியாது. (ஆகையால்) செல்லினும் - பிரியினும், செல்லாய் ஆயினும் - பிரியாத சமயத்தும், நல்லதற்கு - எது நல்லதோ அதனைச் செய்தற்கு, உரியை - உனக்கு நன்கு உரிமை உண்டு. பொருளே - நீ விரும்பும் பொருளோ என்றால், வாடாப் பூவின் - வாடாத பூக்களை உடைய, பொய்கை நாப்பண் - பொய்கையின் நடுவில், ஓடும் மீன் வழியில் - ஓடுகின்ற மீன் செல்லும் வழி கெடுவதுபோல, கெடுவ - இருந்த இடமும் தெரியாமற் கெட்டொழியும் இயல்புடையது காண். யானே - யானோ என்றால், விழுநீர் - பெரிய கடல், வியலகம் - சூழ்ந்த இடம் அகன்ற, இப் பெரிய உலகமே, தூணியாக - அளக்கும் மரக்காலாகக் கொண்டு, எழுமாண் அளக்கும் - ஏழு மரக்கால்

அளவில் மாட்சிமைப்பட அளக்கத்தக்க, விழுநிதி பெறினும், பெரிய நிதியே பெறுவதாக இருப்பினும் அதனை விரும்பேன். ஏனெனில் கனம் குழை - கனவிய குழையை உடையாளுடைய, அமர்த்த சேயரி மழைக்கண் - மாறுபட்ட செவ்வரி பரந்த குளிர்ச்சியை உடைய கண்கள், அமர்ந்து - பொருந்தி, இனிது நோக்கமொடு செகுத்தன - இனிதாகப் பார்க்கும் பார்வையால் தாக்கப்பட்டேன்; ஆகையால் நின்னொடு பொருள் ஈட்ட வாரேன். இனி அப் பொருள் - இனி அப் பொருளானது, எனைய ஆகுக - எத்துணைப் பெருமையுடையதாயினும் ஆகுக. வாழிய - பொருளை வேண்டுவார்மாட்டு அது சென்று வாழ்க என்றவாறு.

முடிபு : நெஞ்சே! பொருளோ புணராது; புணர்வோ புணராது; பொருள் மீன் வழியிற் கெடுவ; மழைக்கண் செகுத்தன; பொருள் எனைய ஆகுக; வாழிய என முடிக்க.

கருத்து : நெஞ்சமே! பொருளோ நிலையற்றது. விழுநிதி பெறினும் வேண்டேன். ஏனெனில் தலைவியின் கண் பார்வை என்னைத் தாக்கின. எனவே பிரியேன் என்று தலைவன் செலவு நீங்கினான்.

அ-ள் : தூணி - முகத்தல்அளவைக் கருவி (மரக்கால்). செகுத்தல் - அழித்தல்.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல். பயன் - செலவழுங்குதல்.

ஒப்புமைப்பகுதி

8 பெரும்பொருள் பெறினும் தலைவியைப் பிரியாமை
"இருங்கண் ஞாலத்து ஈண்டு பயப் பெருவளம்
..........................
ஆள்வினை மருங்கிற் பிரியார் நாளும்" (குறுந். 267:1-6)

# 17. குறிஞ்சி

## தலைவி கூற்று

நாள்மழை தலைஇய நல்நெடும் குன்றத்து
மால்கடல் திரையின் இழிதரும் அருவி
அகல்இருங் கானத்து அல்குஅணி நோக்கித்
தாங்கவும் தகைவரை நில்லா நீர்சுழல்பு
5 ஏந்துஎழில் மழைக்கண் கலுழ்தலின் அன்னை

'எவன்செய் தனையோ? நின்இலங்கு எயிறு உண்கு என
மெல்லிய இனிய கூறலின், வல்விரைந்து
உயிரினும் சிறந்த நாணும் நனிமறந்து
உரைக்கல் உய்ந்தனனே—தோழி!—சாரல்
10 காந்தள் ஊதிய மணிநிறத் தும்பி
தீம்தொடை நரம்பின் முரலும்
வான்தோய் வெற்பன் மார்பு அணங்கு எனவே'.

எ-து : முன்னிலைப் புறமொழியாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது. (முன்னிலைப் புறமொழி - கேட்டற்குரியோர் நேரே நிற்கவும் அவரை அழைத்துக் கூறாமல், வேறொருவரை அல்லது பொருளை விளித்துக் கூறல்)

## நொச்சி நியமங்கிழார்

ப-ரை : தோழீ! நாள்மழை - விடியற்காலையில் மேகம், தலைஇய - மழை பெய்துவிட்ட, நல்நெடும் குன்றத்து - நல்ல நெடிய மலையினின்றும், மால்கடல் திரையின் - பெரிய கடலின் அலைபோல, இழிதரும் அருவி - ஓடி வரும் அருவி, அகல் இரும் கானத்து - அகன்ற பெரிய காட்டினிடத்துச் சென்று, அல்கு அணி நோக்கி - தங்கியோடும் அழகைநோக்கி, தாங்கவும் தகைவரை நில்லா - அஃது அவரை எதிர்ப்பட்ட இடமாதலின் அடக்கவும் தகைக்கும் அளவிலும் நில்லாமல், ஏந்து எழில் மழைக்கண் - அழகு தங்கிய குளிர்ந்த கண்கள், நீர்சுழல் கலுழ்தலின் - நீரைப் பெருக்கி அழுதலால், (அது கண்ட) அன்னை - என்தாய், எவன் செய்தனை - நீ ஏன் அழுகின்றாய், நின் - உன்னுடைய, இலங்கு - விளங்குகின்ற, எயிறு - பற்களை, உண்கு என - முத்தம் கொள்வேன் என்று, மெல்லிய - மென்மைத்தன்மை வாய்ந்த, இனிய - இனியனவாகிய சொற்களை, கூறலின் - சொல்லுதலால், வல் விரைந்து - யான் மிகவும் விரைந்து, உயிரினும் சிறந்த நாணும் நனிமறந்து - உயிரைக் காட்டிலும் சிறந்த நாணத்தையும் மிகவும் மறந்துவிட்டு, இந்த அழுகைக்குக் காரணம், சாரல் - மலைச் சாரலின் கண்ணுள்ள, காந்தள் - காந்தள் மலரை, ஊதிய - குடைந்து தேனை உண்ட, மணிநிறம் - நீலமணி போலும் நிறத்தை உடைய, தும்பி - வண்டு, தீம் தொடை நரம்பின் முரலும் - யாழிற் கட்டிய நரம்பு ஒலித்தாற்போல ஒலிக்கும், வான் தோய் வெற்பன் - விசும்பில் ஓங்கிய மலையினையுடைய தலைவனது, மார்பு அணங்கு என - மார்பைப் பெறாமையால் வந்தது என்று, உரைக்கல் உய்ந்தனன் - கூறத் தொடங்கிப் பின்னர் நினைவு வரவே கூறாது ஒழிந்தேன்.

கூறினால் இற்செறிப்பு ஏற்படும். ஆகையால் விரைவில் வரைக என்று குறிப்பித்தாள்.

நயம் : காந்தளை ஊதிய வண்டு இன்னும் தேனசையால் ஒலித்துப் பறக்கும் நாடனாக இருந்தும் முன்பு என் நலன் உண்டு பிரிந்தனன். அவன் நாட்டு அஃறிணைப் பொருளின் பண்பைக் கூட அறிந்திலன் என்று தலைவி கூறினள்.

மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயா உயிர்த்தல்.

அ-ள் : அல்குதல் - தங்குதல், முரறுதல் ; ஒலித்தல்.

ஒப்புமைப்பகுதி

8. உயிரினும் சிறந்த நாணும்
"நாணலது இல்லாக் கற்பின்" (புறநா. 196:13)
"உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்"
(தொல்: களவியல் சூ. :22)
"தாயிற் சிறந்தன்று நாண் தையலாருக்கு" (திருச்சிற். 204)

# 18. பாலை

## தோழி கூற்று

பருவரல் நெஞ்சமொடு பல்படர் அகல
வருவர் வாழி—தோழி!—மூவன்
முழுவலி முள்எயிறு அழுத்திய—கதவின்
கானல்அம் தொண்டிப் பொருநன், வென்வேல்
5 தெறல்அரும் தானைப் பொறையன் பாசறை
நெஞ்சம் நடுக்குறூஉம் துஞ்சா மறவர்
திரைதபு கடலின் இனிதுகண் படுப்ப
கடாஅம் கழீஇய கதன்அடங்கு யானைத்
தடவுநிலை ஒருகோட் டன்ன
10 ஒன்று இலங்கு அருவிய குன்று இறந்தோரே.

எ-து : பிரிவிடை ஆற்றாளாகிய தலைவியைத் தோழி வற்புறுத்தியது.

பொய்லகயார்

ப-ரை : தோழி - என் உயிர்த் தோழியே, வாழி - நெடுங் காலம் நீ வாழ்வாயாக, மூவன் - மூவன் என்னும் வீரனை

வென்று, முழுவலி - அவனது நிரம்பிய வலியை உடைய, முள் எயிறு அழுத்திய - முள்ளைப் போன்ற பற்களைப் பிடுங்கிக் கொண்டுவந்து பதித்த, கதவின் - வாயிற்கதவினை உடைய, கானல் அம் தொண்டி - கடற்கரைச் சோலையை உடைய தொண்டி நகரின், பொருநன் - தலைவனாகிய, வென்வேல் - வெல்லும் வேற்படையை உடைய, தெறல் அருந்தானை - பகைவரால் வெல்லுதற்கு அரிய சேனையை உடைய, பொறையன் - சேரலன் கணைக்கால் இரும்பொறையனது, பாசறை - பாசறையின் கண்ணே உள்ள, நெஞ்சம் நடுக்குறூஉம் துஞ்சா மறவர் - நெஞ்சு நடுங்குதையாலே பயந்து தூங்காத வீரர் அனைவரும், திரைதபு கடலின் - அலை அடங்கிய கடல்போல, இனிது கண்படுப்ப - இனிதாகத் தூங்குமாறு, கடாஅம் கழிஇ - மதநீர் ஒழிந்த, கதன் அடங்கு யானை - சினம் தணிந்த யானையின், தடவு நிலை - பெரியதாய் நிலைத்துள்ள, ஒரு கோட்டன்ன - ஒரு கொம்பைப் போன்ற, ஒன்று இலங்கு அருவிய - ஒன்றாகி விளங்கிய அருவியை உடைய, குன்று இறந்தோர் - மலையைக் கடந்து சென்ற நம் தலைவர், பருவரல் நெஞ்சமொடு - நீ வருத்தமுற்ற உள்ளத்தோடு கொண்ட, பல்படர் அகல - பலவாகிய கவலையும் நீங்க, வருவர் - விரைவில் வருவார். ஆதலின் வருந்தாதே.

முடிபு : தோழி! பொறையன் பாசறை மறவர் கண்படுப்ப குன்று இறந்தோர் வருவர்: வாழி: நீ வருந்தேல்.

கருத்து : பாலை வழிச் சென்ற தலைவர் நின் வருத்தம் நீங்க விரைவில் வருவர். வருந்தாதே என்று தோழி தலைவியை ஆற்றுவித்தாள்.

அ-ள் : படர்தல் - கருதுதல். தடவுநிலை - பெரிதாய் நிற்றல்.

மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைவியை ஆற்றுவித்தல். இது கற்பு என்னும் ஒழுக்கம்.

# 19. நெய்தல்

### தோழி கூற்று

இறவுப்புறத்து அன்ன பிணர்படு தடவுமுதல்
சுறவுக்கோட் டன்ன முள்ளிலைத் தாழை
பெருங்களிற்று மருப்பின் அன்ன அரும்புமுதிர்பு
நல்மான் உழையின் வேறுபடத் தோன்றி
5 விழவுக்களங் கமழும் உரவுநீர்ச் சேர்ப்ப!

இனமணி நெடுந்தேர் பாகன் இயக்கச்
செலீஇய சேறி யாயின், இவளே
வருவை ஆகிய சின்னாள்
வாழா ளாதல்நற்கு அறிந்தனை சென்மே.

எ-து : புணர்ந்து நீங்கிய தலைவனைத் தோழி வரைந்து கொள்ளும்படி கூறியது.

**நக்கண்ணையார்**

ப-ரை : இறவு புறத்து அன்ன - இறால் மீன் மேற்புறத்தைப் போன்ற, பிணர்படு - சருச்சரை பொருந்திய, தடவுமுதல் - பெரிய அடிப்பாகத்தையுடைய, சுறவு - சுறா மீனின், கோடு அன்ன - கொம்பைப் போன்ற, முள் இலை - முட்களையுடைய இலையையுடைய, தாழை - தாழையானது, பெருங்களிறு மருப்பின் அன்ன - பெரிய ஆண் யானையின் கொம்பு போன்ற, அரும்பு முதிர்வு - அரும்பு முதிர்ச்சியுற்றிருக்கும், நன் மான் உழையின் - நல்ல பெண்மான் தலைசாய்ந்து நிற்றல்போல, வேறுபடத் தோன்றி - வேறாகத் தோன்றி, விழவுக் களம் - விழா எடுக்கும் களம் எல்லாம், கமழும் - மணம் வீசாநிற்கும், உரவுநீர் சேர்ப்ப - வலிய நீரையுடைய கடல் பரப்பிற்குத் தலைவனே, இனமணி - மிக்க மணிகள் கட்டிய, நெடுந்தேர்ப்பாகன் - நெடிய நினது தேரைப் பாகன், இயக்க - செலுத்துதலாலே, செலீஇய - நின் ஊர்க்குப் செல்லும் பொருட்டு, சேறி ஆயின் - போகாநின்றனை ஆதலால், இவள் - நின்னைப் பிரிந்த இவள்தான், வருவை ஆகிய சின்னாள் - பின்பு நீ வருவாய் என்று குறிப்பிட்ட சில நாள் அளவும், வாழாள் - உயிர் வாழ்ந்திருக்கமாட்டாள், ஆதல் - ஆதலால், நற்கு அறிந்தனை - இதனை நன்றாகத் தெரிந்துகொண்டு, சென்மே - செல்வாயாக.

முடிபு : நின்னைப் பிரிந்து இவள் உயிர் வாழாள், நற்கு அறிந்தனை சென்மே.

கருத்து : தலைவி நின்னைப் பிரிந்து வாழாள் உயிர் நீங்குவாள் ஆதலால் வரைந்துகொண்டு பிரியாது உறையுமாறு தோழி தலைவனிடம் கூறியது.

அ-ள் : தடவு - பெருமை. "தடவும் கயவும் நளியும் பெருமை" (தொல். உரி. சூ. 22) பிணர் - சொரசொரப்பு. கோடு-கொம்பு. உரவு - வலிமை.

"தேரும் யானையும் குதிரையும் பிறவும் ஊர்ந்தனர், இயங்கலும் உரியர் என்ப." (தொல். பொருள். 212) என்றதனாலு

"நெடுந்தேர் பாகன் இயக்கச் செலீஇய சேறி" என்றதாம். இதனை நச்சினார்க்கினியர் தலைவன் பிரியக்கருதிய வழித் தோழி கூற்று நிகழ்வதற்கு மேற்கோளாகக் கொண்டார். (தொல். பொருள். சூ. 114. உரை)

மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம். பயன் - வரைவு கடாதல்.

# 20. மருதம்

## தலைவி கூற்று

ஐய குறுமகள் கண்டிகும் வைகி
மகிழ்நன் மார்பில் துஞ்சி அவிழ்இணர்த்
தேம்பாய் மராஅம் கமழும் கூந்தல்
துளங்கியல் அசைவரக் கலிங்கம் துயல்வரச்
5 செறிதொடி தெளிர்ப்ப வீசி மறுகில்
பூப்போல் உண்கண் பெயர்ப்ப நோக்கிச்
சென்றனள்—வாழிய மடந்தை! நுண்பல
சுணங்கணி வுற்ற விளங்கு பூணள்
மார்புறு முயக்கிடை ஞெமிர்ந்த சோர்குழைப்
10 பழம்பிணி வைகிய தோள்இணைக்
குழைந்த கோதைக் கொடிமுயங் கலளே.

எ-து : பரத்தையில் பிரிந்து வந்த தலைமகன் "யாரையும் அறியேன்" என்று கூறியதற்குத் தலைவி சொல்லியது.

### ஓரம்போகியார்

ப-ரை : ஐய - ஐயனே, குறுமகள் - நின்காதல் பரத்தை, மகிழ்நன் மார்பில் துஞ்சி - மகிழ்நனாகிய நின்னிடத்தில் தங்கி நின் மார்பில் கிடந்து உறங்கி, தேம்பாய் - வண்டுகள் பாயப் பெற்ற, மராஅம் - வெண்கடம்பமரத்தின், அவிழ் இணர் - விரிந்த பூங்கொத்துக்கள், கமழும் - மணம் வீசுகின்ற கூந்தல், துளங்கியல் அசைவர - கலவிக் காலத்து துவட்சியோடு அவளது சிறுபுறத்திலே வீழ்ந்து அசைந்து கொண்டிருப்ப, கலிங்கம் - அவளது ஆடையும், துயல்வர - தளர்ந்து அசைந்துகொண் டிருப்ப, செறி தொடி - நெருங்கிய வளைகள், தெளிர்ப்ப - ஒலிக்கும்படி, வீசி - கைகளை வீசிக்கொண்டு, பூப்போல் உண்

கண் - நீலமலர் போன்ற மை தீட்டப்பெற்ற கண்கள், பெயர்ப்ப - சுழலும்படி, நோக்கி - பார்த்து, மறுகில் சென்றனள்- எம்தெருவில் சென்றனள், விளங்கு பூணள் - விளங்குகின்ற அணி களுடன், சுணங்கு அணி உற்ற - நுட்பமான பலவாகிய சுணங்கு அணியப் பெற்றவளாக், மார்பு உறு முயக்கிடை - முன்பு நின் மார்பிடத்தில் பெற்ற முயக்கத்தில், ஞெமிர்ந்த - நெரிந்த, சோர்குழை - சோர்ந்த குழையையும் கொண்டிருந்தனள், பழம் பிணி - பழையபிணியாகிய காமநோய், வைகிய - தங்கிய, இணைதோள் - இரண்டு தோள்களையும், குழைந்த கோதை - துவண்ட மாலையையுமுடைய, கொடி - கொடி போன்ற, முயங்கலள்-நின்முயக்கம் நீங்கினவளாகி, எம்மறுகில் சென்றனள் அத் தன்மையையுடைய பரத்தையை யாம் கண்டோம்,மடந்தை வாழிய - அவள் நின்னோடு நீண்டகாலம் வாழ்வாளாக.

முடிபு : ஐய, குறுமகள் கண்டிகும். பூப்போல் உண்கண் பெயர்ப்பநோக்கி மறுகில் சென்றனள்; குழைந்த கோதை கொடி முயங்கலள் சென்றனள்.

கருத்து : நினக்கு உரிய காதற்பரத்தையோடு நீயும் செல்க என்றவாறு.

அ-ள் : குறுமகள் - இளையவளாகிய பரத்தை. மராஅம் - வெண்கடம்பு. கலிங்கம் - மென்மையான ஆடை, தெளிர்ப்ப - ஒலிப்ப, ஞெமிர்ந்து - நெரிந்த, வாழிய - இகழ்ச்சிக் குறிப்பு.

மெய்ப்பாடு - வெகுளி. பயன் - புலவிதீர்ந்து புணர்ச்சியின் மகிழ்தல்.

தோழி கூற்றாகக்கொள்ளும்போது, இளம்பரத்தைபிடத் தில் கொண்ட காமத்தின் காரணமாகத் தலைவன் தன்னைப் பிரிந்தான் என்று ஊடிய தலைவிபிடத்தில் அவள் காமநுகர்ச் சிக்குப் பொருந்தாத சிறுமி என்று கூறி, தலைவியது ஊடலைத் தீர்த்துத் தலைவனுடன் சேர்த்து வைக்கின்றாள் என்று கொள்ள வேண்டும்.

ஒப்புமைப்பகுதி

2. தலைவன் மார்பில் துஞ்சல்

"அணித்துறை ஊரன் மார்பே
பனித்துயில் செய்யும் இன் சாயற்றே" (ஐங். 14)

"கழனி ஊரன் மார்பு
பழனம் ஆகற்க எனவேட் டேமே" (ஐங். 4:5-6)

"மலர்ந்த மார்பிற் பாயல்
துஞ்சிய வெய்ய ணோகோ யானே" (ஐங். 205:4-5)
(குறுந். 6-48)

2. தலைவன் மார்பு தலைவிக்கு இன்பம் பயத்தல்

"மருந்து பிறிதில்லை அவர் மணந்த மார்பே" (குறுந். 68:4)
(குறுந். 73:1, 80:7, 247:6-7, 248:1-2, 339:3-5)
"கழனி ஊரன் மார்பு, பழனம் ஆகற்க" (ஐங்: 4:5-6)
"பனித்துயில் செய்யும் இன்சாயற்றே" (ஐங் .14:3-4)

6. பூப்போல் உண்கண்

"பூப்போல் உண்கட் பொன்போன் மேனி" (குறுந். 101:4)
(முல்லை. 23), (ஐங். 16:4, 101:4)
"பூப்போல் உண்கண் பொன் போர்த்தனவே" (ஐங். 16)
(ஐங். 101:4.) (முல்லை. 23.) (குறுந். 101:4)

## 21. முல்லை

### தலைவன் கூற்று

விரைப்பரி வருந்திய வீங்குசெலல் இளையர்
அரைச்செறி கச்சை யாப்பழித்து அசைஇ
வேண்டுஅமர் நடையர் மென்மெல வருக
தீண்டா வைமுள் தீண்டிநாம் செலற்கு
5 ஏமதி வலவ தேரே! உதுக்காண்
உருக்குறு நறுநெய் பால்விதிர்த் தன்ன
அரிக்குரல் மிடற்ற அம்நுண் பல்பொறிக்
காமரு தகைய கான வாரணம்
பெயல்நீர் போகிய வியல்நெடும்புறவிற்
10 புலரா ஈர்மணல் மலிரக் கெண்டி
நாளிரை கவர மாட்டித்
தன் பெடை நோக்கிய பெருந்தகு நிலையே.

எ-து ; வினைமுற்றி மீள்வான் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

மருதனிளநாகனார்

ப-ரை : வலவ - பாகனே, விரைபரி - விரைந்து செல்லுத லாலே, வருந்திய வீங்கு செலல் இளையர் - வருந்திய மிக்க

செலவினையுடைய வீரர்கள், அரைச்செறி - இடையில் கட்டிய, கச்சை - கச்சையின், யாப்பு அழித்து - கட்டை அவிழ்த்து, அசைஇ - ஆங்காங்குத் தங்கி, வேண்டு அமர் நடையர் - தாம் தாம் விரும்பியபடி அமர்ந்த நடையராய், மென்மெல வருக - மெல்ல வருவாராக, உருக்குறு நறுநெய் - உருக்கப்பெற்ற நறுமணமிக்க நெய்யில், பால் விதிர்த்து அன்ன - பாலைச் சிதறித் தெளித்தாற் போன்ற, அரிக்குரல் - கடைகின்ற குரலையுடைய, மிடற்ற - மிடற்றினையுடைய, அம் நுண்பல்பொறி - அழகிய நுண்ணிய பலவாகிய புள்ளிகளையுடைய, காமரு தகைய - காண்பவருக்கு விருப்பம் தரும் தகுதியுடைய, கானவாரணம் - காட்டுக் கோழியின் சேவல், பெயர் நீர் போகிய - மழைபெய்தலால் விழுந்த நீரானது வடிந்த, வியல் நெடும்புறவில் - அகன்ற நெடிய காட்டிலே, புலரா ஈர்மணல் - காயாத ஈர மணலை, மலிரக் கெண்டி - நன்றாகப் பறித்து, நாள் இரை - காலை உணவாகிய நாங்கூழ்ப் புழுவை, கவரமாட்டி - கவர்ந்து அதனைக் கொன்று, தன்பெடை நோக்கி - தன்னுடைய பெடைக்குக் கொடுக்க வேண்டி, அ பெருகு நிலை - அந்தத் தகைகொண்ட நிலையினை, உதுக்காண் - அங்கேபாராய், நாம் செலற்கு - ஆதலின் நாமும் விரைந்து சென்று தலைவியை அடைவதற்கு வாய்ப்பாக, தீண்டா - இதுகாறும் தீண்டாத, வைமுள் - கூரிய தாற்று முள்ளாலே, தீண்டி - குதிரையைத் தீண்டி, தேர் - தேரை, ஏமதி - செலுத்துவாயாக.

முடிபு: வலவ, நாம் செலற்கு தீண்டா வைமுள் தீண்டி தேர் ஏமதி என்றவாறு.

கருத்து: தலைவியை விரைவில் சென்று அடைவதற்குத் தேரினை விரைவாகச் செலுத்துக என்றதாம்.

அ-ள்: பரி - செலவு, வீங்குசெலல் - நெடுந்தொலைவு கடந்த செலவு, உதுக்காண் - அங்கே பாராய். அரிக்குரல் - கடைதல் குரல். அரிக்குரல் மிடறு - தேரையின் குரல் போன்ற குரலையுடைய மிடறு எனவும் கொள்ளலாம். மலிர - விளங்க, கெண்டி - பரித்து, மாட்டி - அழித்து.

மெய்ப்பாடு - உவகை. பயன் - கேட்டபாகன் தேரைச் செலுத்துதல்.

காட்டுக்கோழி நாங்கூழ்ப் புழுவைத் தன் பெடைக்கு ஊட்ட அன்புடன் நோக்கியவாறு, நாமும் ஈட்டிய பொருளைத் தலைவி பாற் செலுத்தி இன்புற வேண்டினம் என்று குறிப்பித்தான்.

ஒப்புமைப்பகுதி

8. கான வாரணம் ஈனும்
"கான வாரணம் ஈனும்
காடாகி விளியும் நாடு உடையோரே" (புறநா. 52:15-6)

# 22. குறிஞ்சி

## தோழி கூற்று

கொடிச்சி காக்கும் அடுக்கற் பைந்தினை
முந்துவிளை பெருங்குரல் கொண்ட மந்தி
கல்லாக் கடுவனொடு நல்வரை ஏறி
அங்கை நிறைய ஞெமிடிக் கொண்டுதன்
5 திரையணற் கொடுங்கவுள் நிறைய முக்கி
வான்பெயம் நனைந்த புறத்த நோன்பியர்
தைஊண் இருக்கையின் தோன்றும் நாடன்
வந்தனன்; வாழி—தோழி உலகம்
கயம்கண் அற்ற பைதுஅறு காலைப்
10 பீளொடு திரங்கிய நெல்லிற்கு
நள்ளென் யாமத்து மழைபொழிந் தாங்கே.

எ-து: தலைவன் வரைந்து கொள்ள வந்தனன் என்று மகிழ்ந்து தலைவிக்குத் தோழி கூறாநிற்பது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

7. (பி-ம்) "கையூண் இருக்கை"

ப-ரை: தோழி, அடுக்கல் - மலைப்பக்கத்தில் உள்ள, கொடிச்சி காக்கும் - கொடிச்சியால் காக்கப்படும், பைந்தினை - பசுமையான தினைப்பயிரில், முந்துவிளை - முதலிலே பறித்து முற்றிய, பெருங்குரல் கொண்ட - பெருங்கதிர்களைக் கொய்து கொண்ட, மந்தி - மந்தி, கல்லாக் கடுவனொடு - பாய்ந்து செல்லும் தொழிலைத் தவிரப் பிறதொழிலைக் கல்லாத ஆண் குரங்கொடு, நல்வரை ஏறி - நல்ல மலையின் மீது ஏறி, அங்கை நிறைய - அகம் கை நிறைய, ஞெமிடிகொண்டு - கசக்கித் தூய்மை செய்துகொண்டு, தன் திரை அணல் - தன்னுடைய திரைத்த அணலையுடைய, கொடு கவுள் - நிறைய வளைந்த கவுள் நிறையும்படி, முக்கி - உண்டு, வான்பெயல் நனைந்த - மழை பெய்த

லால் நனைந்த, புறத்த நோன்பியர் - புறத்தனவாய் நோன்பி னையுடையார், தை ஊண் இருக்கை - தைத்திங்கட் பிறப்பில் நீராடி நோன்பு நோற்று இருந்து உண்ணுதல்போல, தோன்று நாடன் - தோன்றாநிற்கும் மலைநாடன், உலகம் கயம் - உலகத் துக்குளங்கள் எல்லாம், அற்ற - நாவற்றிய, பைதறுகாலை - ஈர மற்றகாலை, பீளொடு திரங்கிய நெல்லிற்கு - சூலொடு வாடிய நெற்பயிருக்கு, நள் என் யாமத்து - நடு யாமத்தில், மழை பொழிந்து ஆங்கு - மழையானது பெய்தாற்போல, வந்தனன். நம் தலைவனும் விரைவிலே மணந்துகொண்டு நெடுங்காலம் வாழக் கடவதாக.

முடிபு : பீளொடு திரங்கிய நெல்லிற்கு மழைபொழிந்தாங்கு வந்தனன் வாழி.

கருத்து : நீயும் விரைவில் மணம் செய்துகொண்டு இன்ப வாழ்வு துய்ப்பாயாக.

அ-ள் : அடுக்கல் - மழை, காரணப்பெயர். ஞெமிடி- கசக்கி, அணல் - மோவாய், கயல் - குளம், மூக்கி - நிறையத் தின்று, நோன்பியர் - நோன்பினை மேற்கொண்டோர், பைது - ஈரம், பீள் - சூல், நள் - நடு.

வி-ரை : தை ஊண் இருக்கை - தை மாதப் பிறப்பில் நீராடி அன்றையதினம் சமைக்கப்படும் சிறந்த உணவை உண்ண இருத் தல் நோன்பியர். ஆடி மாதம் முதல் முடிய ஆறு மாதங்களும் தேவர்களுக்கு இராப்பொழுது என்று புராணம் கூறுகின்றமை யால் இரவு கடைசியாமங்கொண்ட சிலபொழுது உண்ணாமல் இருக்கும் நோன்பியர்.

மெய்ப்பாடு - உவகை. பயன் - தலைமகளை மகிழ்வித்தல். இச் செய்யுளை நச்சினார்க்கினியர் "வரைவு மலிந்த தோழி தலைவிக்கு உரைத்தது" என்னும் இத்துறைக்கு மேற்கோளாகக் காட்டி உள்ளார்.

திணையைக் கவர்ந்த மந்தி கடுவனோடு மலைமேலேறி நிறையத் தின்று மழையில் நனைந்த முதுகோடு விளங்கும் என்றது, மகிழ்ச்சியுடன் தலைவி வதுவைபூண்டு தலைவன் இல் சென்று இல்வாழ்வு இயற்றி இல்லறக்கடமைகளை மேற்கொள் வாள் என்னும் குறிப்பிற்று.

ஒப்புமைப்பகுதி

4. ஞெமிடி
"ஒண்முக விரலிற் கண்முக ஞெமிடி" (பெருங்.1:46:301)

11. யாமத்து மழை பெய்தல்
"காமம் ஒழிவதாயினும் யாமத்துக்
கருவி மாமழை வீழ்ந்தென அருவி" (குறுந். 42:1-2)
நள்ளென் யாமம்
"கையற நரலும் நள்ளென் யாமத்து" (குறுந். 160:4)
(நெடுதல். 186), (ஐங். 324:3), (குறுந். 6:1)
(அகநா. 103:12, 129:2,142:20, 170:12, 279;6)

# 23. குறிஞ்சி

## தோழி கூற்று

தொடிபழி மறைத்தலின் தோள்உய்ந் தனவே;
வடிக்கொள் கூழை ஆயமொடு ஆடலின்
இடிப்பு மெய்யதொன் றுடைத்தே கடிக்கொள
அன்னை காக்கும் தொல்நலம் சிதையக்
5 காண்தொறும் கலுழ்தல் அன்றியும் ஈண்டுநீர்
முத்துப்படு பரப்பின் கொற்கை முன்துறைச்
சிறுபா சடைய செப்புஊர் நெய்தல்
தெண்ணீர் மலரின் தொலைந்த
கண்ணே காமம் கரப்பு அரியவ்வே.

எ-து: தலைவியின் ஆற்றாமையை உணர்ந்த தோழி வரைவு கடாயது.

**கணக்காயனார்**

ப-ரை: வடிகொள் கூழை - வாரி முடித்த கூந்தலையுடைய இவள், பழி - தன்னைப் பிறர்கூறும் பழிச்சொற்கு அஞ்சி, தொடி - வளைகளைக் கழலாதவாறு செறித்து, மறைத்தலின், தோள் உய்ந்தன - தோள்கள் வாட்டம் தோன்றாவாயின. அல்லாமலும், ஆயமோடு - தன் தோழிகளோடு, ஆடலின் - விளையாடுதலினாலே, இடிப்பு - உடற்களைப்பும், மெய்ய தொன்றுடைத்து - அவ் விளையாட்டினால் தோன்றியது என்று நினைப்பதற்கு உரியதாய் இருந்தது. கடி - காவல் மிகுதிப்பட, அன்னை - அன்னையானவள், காக்கும் - பாதுகாக்கும், தொல் நலம் - இவளது பழைய நலமெல்லாம், சிதைய - சிதையும்படி, காண்தொறும் - பார்க்குந்தோறும், கலுழ்தல் அன்றியும் -

அழுதல் அல்லாமலும், மண்டு நீர் - நெருங்கிய நீர்மிக்க, முத்துப் படு பரப்பின் - முத்துக்கள் விளைகின்ற கடற் பரப்பினையுடைய, கொற்கை - கொற்கை நகரத்து, முன்துறை - முன்புள்ள துறையி லிருக்கும், சிறுபாசடை - சிறிய பசிய இலைகளையுடைய, செப்பு ஊர் - அழகமைந்த, நெய்தல் - நெய்தலின், தெள்நீர் - தெளிந்த நீரிலுள்ள, மலரின் - மலரைப்போல, கண்ணே - கண்களே அழகு குலைந்தன. காமம் - அவைதாம் காமத்தை, கரப்பு அரியவே - மறைத்தல் அரியவாய் இருக்கின்றன. ஆதலின் நினக்கு ஏற்றவாறு செய்வாயாக.

முடிபு : கண்ணே காமம் கரப்ப அரியவ்வே.

கருத்து : விரைந்து வந்து தலைவியை மணந்துகொள்வா யாக என்பதாம்.

அ-ள் : தொடி - வளை. வடித்தல் - வாரிமுடித்தல். செப்பு- செம்மை. காண்டொறும் கலுழ்தல் - துன்பத்துப் புலம்பல்.

மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்

கொற்கை நீரில் முத்து விளைவதுபோல திருமணத்தால் தலைவி இல்லத்தார் மகிழ்ச்சியில் மூழ்குவர் என்பதாம்.

ஒப்புமைப்பகுதி

4. அன்னை ஓம்பிய நலம்

"அன்னை ஓம்பிய ஆய்நலம்" (குறுந். 223: 6)
"யாய் நயந்தெடுத்த ஆய்நலம்" (ஐங். 384: 3)
"தாயோம் பாய்நலம்" (அகநா. 146; 13)
"ஓம்பிய, நலம்புனை உதவியோ உடையேன் மன்னே"
(அகநா. 195:9-10)

9. கண்கள் தாமே அழுதல்.

"யாமே காமந் தாங்கவும் தாம்தம்
கெழுதகைமையின் அழுதன தோழி
.......................................
குன்ற நாடற் கண்டஎம் கண்ணே" (குறுந். 241: 2-7.)

# 24. பாலை

## தலைவி கூற்று

'பார்பக வீழ்ந்த வேருடை விழுக்கோட்டு
உடும்படைந் தன்ன நெடும்பொரி விளவின்'
ஆட்டொழி பந்தின் கோட்டுமுக் கிறுபு
கம்பலத் தன்ன பைம்பயிர்த் தாஅம்
5 வெள்ளில் வல்சி வேற்றுநாட் டாரிடைச்
'சேறும் நாமெ'னச் சொல்லச் சேயிழை
'நன்றெ'னப் புரிந்தோய்; நன்றுசெய் தனையே
செயல்படு மனத்தர் செய்பொருட்கு
அகல்வர் ஆடவர் அதுவதன் பண்பே.

எ-து : பொருட் பிரிவுக்கு உடன்பட்ட தோழியைத் தலைவி உவந்து கூறியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : சேயிழை - செவ்விதான அணிகளை உடையவளே, பார்பக - நிலம் பிளவு படுமாறு, வீழ்ந்த வேர்உடை - இறங்கிய வேரும், விழுகோட்டு - பெரிய கிளைகளும், உடும்பு உடைத்து அன்ன - உடும்புகள் பொருந்தி இருத்தலைப் போல, பொரி - பொரிந்த செதில்களுமுடைய, நெடும் விளவின் - நெடிய விளா மரத்தின், கோடு - கிளையில், மூக்கு இறுபு - மூக்கு இறுபட்டதாக விழுந்து, கம்பலத்து அன்ன - கம்பளத்தை விரித்தாற் போன்ற, பைம்பயிர்த் தாம் - பசுமையான பயிரின் கண்ணே, ஆடு ஒழி - விளையாடுதல் ஒழிந்த, பந்தின் - பந்தினைப்போல் பரவி இருக்கும்; வெள்ளில் - விளாம்பழங்களை, வல்சி - உணவாகவுடைய, வேற்று நாட்டு - அயல்நாட்டிலே, ஆர்இடை - செல்லுதற்கு அரிய பாலை வழியிலே, யாம் சேறும் என - நாம் செல்வோம் என்று, சொல்ல - தலைவர் கூறலும், நன்று என புரிந்தோய் - அத்தகையதொரு செயல் நன்று என்று நல் விருப்பத்தோடு கூறினை, நன்று செய்தனை - ஆதலின் நீ எமக்கு நல்லது ஒன்றனையே செய்தாய்; ஆடவர் - ஆடவர்கள், செயல்படு மனத்தர் - வினைமேல் கொண்ட உள்ளத்தராய், செய்பொருட்கு - பொருள் ஈட்டுதற் பொருட்டுச் செல்வர். அது அதன் பண்பு - அங்ஙனம் அவர் செல்லும்பொழுது மறுத்துக் கூறாமல் உடன்படுவதே அதற்குரிய பண்பாகும்.

முடிபு : சேயிழை நன்று செய்தனை ஆடவர் செய் பொருட்கு அகல்வர், அதுவதன் பண்பே.

கருத்து : தலைவனைப் பிரிந்து ஆற்றியிருப்பேன் என்பதாம்.

அ-ள் : வெள்ளில் - விளாமரம். ஆட்டு - விளையாட்டு. கம்பலம் - கம்பளம், விரிப்பு. கைகோள் - கற்பு.

மெய்ப்பாடு - உவகை. பயன் - ஆற்றியிருத்தல்.

நச்சினார்க்கினியர் இதனைக் கற்பில் திரியாமையின் உவகைப்பாற்படுத்துவர் (தொல். பொருள் சூ. 147 - உரை.)

ஒப்புமைப்பகுதி

3. கோட்டு மூக்கு இறுபு
"நறவடி மாஅத்து மூக்கிறு புதிர்ந்த" (ஐங். 213)

# 25. குறிஞ்சி

## தோழி கூற்று

அவ்வளை வெரிநின் அரக்குஈர்த் தன்ன
செவ்வரி இதழ சேண்நாறு நறவின்
நறுந்தாது ஆடிய தும்பி பசுங்கேழ்ப்
பொன்னுரை கல்லின் நன்னிறம் பெறூஉம்
5 வளமலை நாடன் நெருநல் நம்மொடு
கிளைமலி சிறுதினைக் கிளிகடிந்து அசைஇச்
சொல்லிடம் பெறாஅன் பெயர்ந்தனன் பெயர்ந்தது
அல்லல் அன்றது காதலந் தோழி
தாதுண் வேட்கையின் போதுதெரிந்து ஊதா
10 வண்டு ஓரன்னவவன் தண்டாக் காட்சி
கண்டும் கழறொடி வலித்தவென்
பண்பில் செய்தி நினைப்பா கின்றே.

எ-து : தலைமகளைத் தோழி குறை நயப்புக் கூறியது.

பேரிசாத்தனார்

ப-ரை : காதல் அம் தோழி - அன்பினையுடைய தோழியே, அவ்வளை வெரிநின் - அழகிய சங்கின் முதுகில், அரக்கு ஈர்த்து

அன்ன - அரக்கைத் தீற்றினால் போல, செவ்வரி - சிவந்த வரி பொருந்திய, இதழ - இதழையுடைய, சேண்நாறு - நெடுந்தூரம் மணம் கமழும், நறவின் - நறவம்பூவின், நறும் தாது, ஆடிய - மணமுள்ள தாதை அளைந்த, தும்பி - வண்டு, பசும் கேழ் - பசுமையான நிறமுள்ள, பொன் உரை - பொன்னை உரைக்கும். கல்லின் - கட்டளைக்கல் போல, நல் நிறம் பெறூஉம் - நல்ல நிறத்தைப் பெறும், வளமலை நாடன் - வளப்பத்தையுடைய மலைநாட்டு அதிபன், நெருநல் - நேற்று, நம்மொடு - நம்முடனே கிளைமலி - கிளைத்தல் மிக்க, சிறுதினை - சிறிய தினைப்பயிரில் வீழும், கிளி கடிந்து - கிளிகளை ஓட்டி, அசை - அவ்விடத்தில் தங்கியிருந்தும். சொல்லிடம் பெறாஅன் - தன்னுடைய குறையை சொல்லுதற்கேற்ற வாய்ப்பினைப் பெறானாகி, பெயர்ந்தனன் பெயர்ந்து - அவ்விடத்தைவிட்டு அகன்று சென்றான்; பெயர்ந்தது அல்லல் அன்றது - அங்ஙனம் சென்றது நமக்குத் துன்பம் தருவது அன்று காண். தாது உண் வேட்கையின் - தேனை உண்ணும் ஆசையாலே, போது தெரிந்து - நறுமலரின்னது என்று, ஊதா - ஆராயாமல், எங்கும் போய் விழுகின்ற, வண்டு ஓர் அன்ன - வண்டின் தன்மையை ஒத்து, அவன் தண்டா காட்சி கண்டு - அவனது கெடாத தோற்றப் பொலிவினைக் கண்டுவைத்தும் - கழல் தொடி - கழன்ற வளையை, வலித்த என் பண்பில் செய்தி, மீண்டும் செறித்த எனது பண்பில்லாத செய்கையைக் கருதா நின்றது என் உள்ளம். இஃது என்ன வியப்பு.

முடிபு : தோழி, கழல்தொடி வலித்த என் பண்பில் செய்தி நினைப்பாகின்றே.

கருத்து : அவன் உன்னை நாடியவன்; அவனுக்கு நீயும் அருளைச் செய் என்பதாம்.

அ-ள் : அவ்வளை - அழகிய வளை. வெரிந் - முதுகு. அசைதல் - தங்குதல்.

மெய்ப்பாடு - இளிவரலைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - குறை நயப்பித்தல்.

ஒப்புமைப்பகுதி

3-4 மாம்பூவின் தாதிற்குப் பொற்பொடியும்
குயிலுக்குக் கட்டளைக் கல்லும் உவமை.
" மின்னின் தூவி இருங்குயில் பொன்னன்
உரைதிகழ் கட்டளை கடுப்ப மாச்சினை " (குறுந். 192)

4. பொன்னுரைகல்

" கட்டளை அன்ன மணிநிறத் தும்பி " (ஐங். 215)

10 வண்டோரன்ன அவன்

" வண்டே அனையர் மைந்தர் என்பது "
(பெருங். இலாவா. 16: 36)

" பெண்டிர் நலம் வௌவித் தண்சாரல் தாதுண்ணும்
வண்டில் துறப்பான் மலை " (கலி. 40: 23-4)

# 26. பாலை

## தோழி கூற்று

நோகோ யானே நெகிழ்ந்தன வளையே
செவ்வி சேர்ந்த புள்ளி வெள்ளரை
விண்டுப் புரையும் புணர்நிலை நெடுங்கூட்டுப்
பிண்ட நெல்லின் தாய்மனைஒழியச்
5 சுடர்முழுது எறிப்பத் திரங்கிச் செழுங்காய்
முடமுதிர் பலவின் அத்தம் நும்மொடு
கெடுதுணை ஆகிய தவறோ? வைஎயிற்றுப்
பொன்பொதிந் தன்ன சுணங்கின்
இருஞ்சூழ் ஓதிப் பெருந்தோ ளாட்கே.

எ-து : தலைவி பிரிவு உணர்ந்து வேறுபட்டமை சொல்லித் தோழி செலவு அழுங்குவித்தது.

**சாத்தந்தையார்**

ப-ரை : செவ்வி சேர்ந்த - அழகு அமைந்த, புள்ளி - புள்ளிகளுடைய, வெள் அரை - வெள்ளிய அடிப்பாகத்தையுடைய, விண்டுபுரையும் - மலைபோன்ற, புணர்நிலை - அடுக்கிய நிலை அமைந்த, நெடுங்கூட்டு - பெரிய நெற்கூட்டில், பிண்ட நெல்லின் - நிரம்பக் கொட்டிய நெல்லையுடைய,தாய்மனை - தாய்வீட்டை, ஒழிய - கைவிட்டு, சுடர் முழுது எறிப்ப - ஆதவன் முற்றும் தன் வெயிலை வீசுதலாலே, செழுங்காய் திரங்கி - செழுமையான காய்கள் வாட்டமுற்று, முடமுதிர்பலவின் - முடம்பட்டமுதிர்ந்த பலா மரங்கள் நிரம்பிய, அத்தம் - காட்டு வழியில், நும்மொடு கெடுதுணை ஆகிய தவறோ - நீவிர் தன்னந்தனியனாய்ச்

சென்று வருந்தாது நுமக்குத் துணையாக வந்த தவற்றினாலோ, வை எயிறு - கூரிய பற்களையும், பொன் பொதிந்து அன்ன - பொன்னைப் பொதித்து வைத்தாற் போன்ற, சுணங்கின் - தேமலையும், இருஞ்சூழ் ஓதி - அடர்ந்த கரிய கூந்தலையும், பெருந் தோளாட்கு - பெரிய தோள்களையும் உடையாளுக்கு, வளை நெகிழ்ந்தன - (இப்பொழுதே நும் பிரிவை கேட்டமையின் உடனே உடல் சோர்தலாலே) கைவளைகள் கழன்று விழுந்தன, (இப்பொழுதே இப்படி இருக்குமாயின் இனி வருந்துணையின் எங்ஙனம் ஆற்றியிருப்பாள்) யான் நோகோ - யான் துன்பம் அடைகின்றேன்.

முடிபு : பெருந்தோட்கே, வளை நெகிழ்ந்தன, யான் நோகோ.

கருத்து : நீர் இவளைப் பிரியின் இறந்துபடுவாள்.

அ-ள் : செவ்வி - அழகு, புள்ளி - குதிரின் உறையில் எண்ணு தலுக்கு இடப்பட்ட குறி, வெள் அரை - வைக்கோல் புரி முதலிய சுற்றாத அடிக்கூண்டு, விண்டு - மலை, பிண்ட நெல் - நிறைந்த நெல், சுணங்கு - தேமல், தலைவியின் தாய் வீடு செல்வச் செழிப்புடையது என்பதை "பிண்ட நெல்லின்" என்ற தொடர் விளக்குகிறது, வளைநெகிழ்ந்தன என்றது உடம்பு மிகவும் இளைத்தல். கைகோள் - கற்பு.

மெய்ப்பாடு - பிறன் கட்டோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல். பயன் - செலவு அழுங்குவித்தல்.

ஒப்புமைப்பகுதி

1. வளை நெகிழ்தல்

"கோடீர் இலங்கு வளை நெகிழ நாடொறும்" (குறுந். 11:1)

(ஐங். 27:3, 54:3, 136:2, 140:3)

(கலி. 3:3) (குறள். 1157) (கைந்நிலை. 55)

2. நோகோ யானே

"பெருவிதுப் புற்றன்றால் நோகோ யானே" (குறுந். 1[illegible]1:6)

"துஞ்சாளாகுதல் நோகோ யானே" (ஐங். 107)

(குறுந். 178: , 212:5) (அகநா. 137:16)

(ஐங். 104:4) (புறநா. 116:9, 234:1)

# 27. நெய்தல்

## தோழி கூற்று

நீயும் யானும் நெருநல் பூவின்
நுண்தாது உறைக்கும் வண்டினம் ஒப்பி
ஒழிதிரை வரித்த வெண்மணல் அடைகரைக்
கழிசூழ் கானல் ஆடியது அன்றிக்
5 கரந்துநாம் செய்தது ஒன்று இல்லை உண்டுஎனின்
பரந்துபிறர் அறிந்தன்றும் இலரே நன்றும்
எவன்குறித் தனள்கொல் அன்னை கயந்தோறு
இறஆரி இனக்குருகு ஒலிப்பச் சுறவம்
கழிசேர் மருங்கின் கணைக்கால் நீடிக்
10 கண்போல் பூத்தமை கண்டு நுண்பல
சிறுபா சடைய நெய்தல்
குறுமோ சென்றுஎனக் கூறா தோளே.

எ-து : சிறைப்புறமாகத் தோழி செறிப்பு அறிவுறீ இயது.

குடவாயில் கீரத்தனார்

ப-ரை : தோழி, நெருநல் - நேற்று, நீயும் நானும் - நீயும் நானும் சென்று, பூவின் - மலரின், நுண் தாது - நுட்பமான தாதிலே, உறைக்கும் - திளைக்கும், வண்டினம் - வண்டினங் களை, ஒப்பி - ஓட்டி, ஒழிதிரை - ஒழிந்த அலைகள், வரித்த - குவித்த, வெண்மணல் - வெண்மையான மணலை அடுத்த, அடைகரை - கரைப்பக்கத்திலே, கழிசூழ் - கழிசூழ்ந்துள்ள, கானல் ஆடியது - சோலையில் விளையடியது, அன்றி - அல்லா மல், கரந்து - மறைந்து, நாம் செய்தது ஒன்று - நாம் செய்த செயல்தாம், அன்றி இல்லை - வேறு ஒன்றில்லை, உண்டு எனில் - அங்ஙனம் செய்தது ஒன்று உண்டு என்றால், பரந்து - அது வெளியே பரவி, பிறர் அறிந்தன்று இலர் - அது வெளியே ப்ரவிப் பிறர் அறிந்து வைத்தாரும் இல்லை, நன்றும் - அப்படியாக, அன்னை - தாய், கயந்தோறும் - பொய்கைதோறும், இறஆர் இனக்குருகு - இறாமீனைப் பிடித்துத் தின்னும் கடற்பறவை இனங்கள், ஒலிப்ப - ஆரவாரிக்க, சுறவம் - சுறாமீன்கள், கழிசேர் மருங்கின் - கழியிடத்தே சென்று சேர்கின்ற அந்தப்பக்கத்தில், கணைக்கால் - திரண்ட தண்டானது, நீடி - நீண்டு, நுண்பல - நுண்ணிய பலவாகிய, சிறு பாசடைய - சிறிய பசுமையான இலை களையுடைய, நெய்தல் - நெய்தல் பூவானது, கண்போல் - நம்

கண்கள்போல. பூத்தமைகண்டு - மலர்ந்து இருத்தலைக் கண்டு, சென்று குறுமோ என - அதனைச் சென்று பறித்து வாருங்கள் என்று, கூறாதோள் - கூறினாள் அல்லள், எவன் குறித்தனள் கொல் - ஆதலின் அவள்தான் பெரிதும் என்ன கருதி இருக்கின்றனள் போலும்.

முடிபு : தோழி, நெய்தல் பூத்தமை கண்டு சென்று குறுமோ எனக் கூறாதோள் எவன் குறுத்தனள் கொல்.

கருத்து : அன்னை நம் களவுறவைத் தெரிந்து கொண்டாள். இனி, இற்செறிப்பு நிகழும்; ஆதலின் விரைந்து மணந்து கொள் என்றவாறு.

அ-ள் : நெருநல் - நேற்று, ஒப்பி - ஓட்டி, கானல் - கடற்கரைச்சோலை. சயம் - ஆழமான பொய்கை, கணைக்கால் - திரண்டதண்டு, குறும் - பறித்து.

மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - செறிப்பு அறிவுறுத்தி வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

9-11. பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்
"கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்" (குறுந். 9:4-6)
"கண்போல் நெய்தல்" (ஐங். 151:3)
"இருங்கழி மலர்ந்த கண்போல் நெய்தல்" (அகநா. 170:4)
"கண்ணவிழ் நெய்தலும்" (சிலப். 14:77)

## 28. பாலை

### தோழி கூற்று

என்கைக் கொண்டு தன்கண் ஒற்றியும்
தன்கைக் கொண்டுஎன் நன்னுதல் நீவியும்
அன்னை போல இனிய கூறியும்
கள்வர் போலக் கொடியன் மாதோ
5 மணியென விழிதரு மருவிப் பொன்னென
வேங்கை தாய ஓங்குமலை அடுக்கத்து
ஆடுகழை நிவந்த பைங்கண் மூங்கில்
ஓடுமழை கிழிக்கும் சென்னிக்
கோடுயர் பிறங்கல் மலைகிழ வோனே.

எ-து : 1. பிரிவின்கண் ஆற்றாளாகிய தலைவிக்குத் தோழி சொல்லியது. 2. குறை நயப்புமாம்.

முதுகூற்றனார்

ப-ரை : மணி என - நீலமணி போன்ற, இழிதரும் அருவி - ஓடிவரும் அருவியையுடைய, பொன்என - பொன்போல, வேங்கைதாய - வேங்கை மலர் உதிர்ந்த, ஓங்குமலை அடுக்கத்து- உயர்ந்த மலைப்பக்கத்தில், ஆடுகழை - அசைகின்ற தண்டு, நிவந்த - உயர்ந்த, பைங்கண் - பசுமையான கணுக்களையுடைய, மூங்கில் - மூங்கிலானது, ஓடுமழை - ஆகாயத்தில் ஓடுகின்ற மேகத்தை, கிழிக்கும் சென்னி - கிழிக்கின்ற உச்சியையுடைய, கோடு உயர் பிறங்கல் - மலைகிழவோன் கொடுமுடிகள் உயர்ந்த பிறங்குதலாகிய மலைக்குத் தலைவன், என் கை கொண்டு - முன்பு நம்மை, தலையளி செய்ததான அந்த நாளில் என்கை களைத்தானே எடுத்து, கண்கள் ஒற்றியும் - தன் கண்களில் ஒற்றிக்கொண்டும், தன் கை கொண்டு - தன்னுடைய கைளால், என் நல் நுதல் நீவியும் - எனது நல்ல நெற்றியைத் தடவிவிட்டும், அன்னைபோல - தாயைப் போன்று, இனிய கூறியும் - இனிமை யான சொற்கள் பலவற்றைக் கூறியும், தலையளி செய்து, இன்று, கள்வர்போல - கள்வன்போல, கொடியன் - கொடுந்தன்மை உடையவன் ஆயினான் (களவு நீட்டிக்க விரும்பினான்)

முடிபு : மலைகிழவோன் கள்வர்போலக் கொடியன் ஆயினன்.

கருத்து : அவன் செயலை நினைத்து வாடி நலன்கெடாமல் இருத்தலே இனி செய்ய வேண்டுவது என்பதாகும்.

அ-ள் : மணி - நீலமணி, நிவந்த - உயர்ந்த, கோடு - கொடுமுடி.

"ஒன்றித் தோன்றுந் தோழிமேன" (தொல். பொ. சூ. 39) என்பதனால் தோழி கூற்றும் தலைவி கூற்றாகும் எனக் கூறுவர் பேராசிரியர். கூறியும் என்ற எச்சம்கொடியன் என்பதன் ஆக்கச் சொல்லொடு முடிந்தது.

மெய்ப்பாடு - அழுகை

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

2. நுதல் நீவுதல்
"சிறுமறி கொன்று இவள் நறுநுதல் நீவி" (குறுந். 362:4)
(கலித். 21:6-9) (அகநா. 49:6, 165-9, 240-10)
(தமிழ்நெறி. மேற். 96-1-4)

4. தலைவனைக் கள்வன் என்றல்
"யாருமில்லைத் தானே கள்வன்" (குறுந். 25:1)
"இவன் என்நலம் கவர்ந்த கள்வன்" (முத். 102)
"காடுடைய சுடலைப் பொடிபூசி என்னுள்ளம் கவர்கள்வன்"
(தே. திருஞா)

# 29. பாலை

## நற்றாய் கூற்று

நின்ற வேனில் உலர்ந்த காந்தள்
அழலவிர் நீள்இடை நிழலிடம் பெறாஅது
ஈன்றுகான் மடிந்த பிணவுப்பசி கூர்ந்தென
மான்ற மாலை வழங்குநர்ச் செகீஇய
5 புலிபார்த் துறையும் புல்லதர்ச் சிறுநெறி
யாங்குவல் லுநள்கொல் தானே யான்தன்
வனைந்துஏந்து இளமுலை நோவ கொல்லென
நினைந்துகை நெகிழ்ந்த அனைத்தற்குத் தான்தன்
பேரமர் மழைக்கண் ஈரிய கலுழ
10 வெய்ய உயிர்க்கும் சாயல்
மையீர் ஓதிப் பெருமடத் தகையே.

எ.து : மகள் போக்கிய தாய் சொல்லியது.

பூதனார்

ப.உரை : வனைந்து ஏந்து இளமுலை - தொய்யில் வனைந்து பருத்த இளையதான அவளுடைய கொங்கைகள், நோவகொல் - துன்பத்தைக் கொள்ளுமோ, எனநினைந்து - எனக்கருதி, வக நெகிழ்ந்த - கையை சிறிது நெகிழ்த்த, அனைத்திற்கு தான்தன் - அவ்வளவில் தான் தன்னுடைய. பேர் அமர் - பெரிய அமர்ந்த, மழைக்கண் - குளிர்ச்சி பொருந்திய கண்கள், ஈரிய கலுழ - ஈரமுடையனவாய்க் கலங்க, வெய்ய உயிர்க்கும் - வெம்மையால்

உயிர்க்கின்ற, சாயல் - மென்மையையுடைய, மை ஈர் ஓதி - கருமையுடைய ஈரிய கூந்தலையும், பெருமடத்தகை - பெரிய மடப்பந்தையும் உடைய என்மகள், வேனில் - வேனில் பருவம் ஒன்றே, நின்ற - நிலைபெற்றதனால், உலர்ந்த - காய்ந்து வாடிய காந்தள் பூக்களையும், அழல் அவிர் - அழல் வீசுகின்ற, நீள் இடை - நீண்ட பாலை வழியிலே, நிழல் இடம் - நிழலிடத்தை, பெறாஅது - காணாமல், ஈன்று - குட்டிகளை ஈன்று, கான் மடிந்த - காட்டிலே காவல் செய்துகொண்டிருந்த, பிணவு - பெண்புலி, பசி கூர்ந்து என - மிகவும் பசியுடையதென்று, மான்ற மாலை - (அதன் பசியைப் போக்க நினைத்து) மயங்கிய மாலைப்பொழுதில், வழங்குநர் செகீஇய - வழியில் செல்லுகின்ற வர்களைக் கொல்லும் பொருட்டு, புலி - ஆண்புலியானது, பார்த்து உறையும் - அவ்வழியைப் பார்த்திருக்கும், புல் அதர் - புல்லிய அதராகிய, சிறுநெறி - சிறிய வழியில், யாங்கு வல்லு நள் - எங்ஙனம் நடந்து செல்வதற்கு வல்லவள் ஆவாளோ?

முடிபு : பெருமடத்தகை புலி பார்த்து உறையும் புல்லதர்ச் சிறுநெறி யாங்கு வல்லுநள்கொல்?

கருத்து : அவளுக்கு எவ்வித இடையூறும் ஏற்படாமல் நலமாகப் போய்ச் சேர்தல் வேண்டும் என்பதாம்.

அ-ள் : உலர்ந்த - வாடிய, பிணவு - பெண்புலி, மான்ற - மயங்கிய, செகீஇய - கொல்ல வேண்டி, கைநெகிழ்ந்ததற்கு - பிரிதற்கு, கலுழ்தல் - அழுதல், புல்லதர் சிறுநெறி - பாலும் முள்ளும் உடைய சிறியவழி.

மெய்ப்பாடு - உவகைக் கலுழ்ச்சி.

பயன் - ஆற்றாமை நீங்குதல்.

நயம் - பெண்புலியின் பசியைப் போக்கப் புலி இரைதேடி வழியைப் பார்க்கும் என்றது, தலைவியின் வழிநடை வருத்தத் தைத் போக்கவேண்டிய தலைவன் அங்குத் தங்கும் இடம் தேடுவன் என்ற குறிப்பையும், ஈன்று கான் மடிந்த பிணவு என்றது, தலைமகள் இனி மக்களொடு மகிழ்ந்து மனையறம் காக்கும் என்று ஆற்றுவள் என்ற குறிப்பையும் உணர்த்திற்று.

ஒப்புமைப்பகுதி

6. யாங்கறிந்தன்று
"யாங்கறிந்தன்று இவ் அழுங்கல் ஊரே"
(குறுந். 140:5, 209;6)

9. பேரமர் மழைக்கண்
"பேரமர் மழைக்கண் கொடிச்சி" (குறுந். 286:4)
(அகநா. 326:2)
"பேரமர் மழைக்கண் கலிழ" (ஐங். 214:4) (குறுந். 131:2)
"பேரமர் உண்கண் இவளினும் பிரிக" (புறநா. 71:6)
(குறள். 1083)

# 30. மருதம்

## தோழி கூற்று

கண்டனென்—மகிழ்ந! கண்டுஎவன் செய்கோ?
பாணன் கையது பண்புடைச் சீறியாழ்
யாணர் வண்டின் இம்மென இமிரும்
ஏர்தரு தெருவின் எதிர்ச்சி நோக்கிநின்
5 மார்புதலைக் கொண்ட மாணிழை மகளிர்
கவல்ஏ முற்ற வெய்துவீழ் அரிப்பனி
கால்ஏ முற்ற பைதரு காலைக்
கடல்மரம் கவிழ்ந்தெனக் கலங்கி உடன்வீழ்பு
பலர்கொள் பலகை போல
10 வாங்க வாங்கநின்று ஊங்குஅஞர் நிலையே.

எ-து : பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகன் யாரையும் அறியேன் என்று கூறியதற்குத் தோழி சொல்லியது.

### கொற்றனார்

ப-ரை : மகிழ்ந - தலைவனே, பாணன் கையது - பாணனின் கையிடத்ததாகிய, பண்புடை - பண்பு அமைந்த, சீறியாழ் - சிறிய யாழ், யாணர் வண்டின் - அழகிய வண்டினைப் போல இம்மென இமிரும் - இம் என்னும் ஓசையை எழுப்புகின்ற ஏர்தரு தெருவின் - நீ எழுந்து வருகின்ற தெருவிலே, எதிர்ச்சி நோக்கி - நீ வருதலை எதிர்பார்த்து, நின்மார்பு - நின்னுடைய மார்பினை, தலைக்கொண்ட - முன்பு தமக்கு உடையராய்ப் பற்றிக் கொண்டிருந்த, மாண் இழை - மாட்சிமைப்பட்ட அணிகளை அணிந்த, மகளிர் - பரத்தையர் பலரும், கவல் ஏமுற்ற - நீ பிரிந்ததனால் உண்டாகிய கவற்சி மிகுதலாலே, வெய்து வீழ் அரிப்பனி - வெப்பமாய் வடிகின்ற கண்ணீருடனே, கால் ஏமுற்ற - பெரும்புயற் காற்று வீசிச் சுழற்றுதலாலே, பைதறு காலை - துன்பம்

அடைந்த காலத்தில், கடல்மரம் - கடலில் தாம் ஏறியிருக்கும் மரக்கலம், கவிழ்ந்து என கலங்கி - கவிழ்ந்துவிட்டதாக அதனால் கலக்கமுற்றுத் தாமும், உடன்வீழ்பு - ஒருசேர வீழ்ந்து, பலர் கொள் - அவ்வழி விழுந்த பலரும் பற்றிக்கொண்டு, பலகைபோல - இழுக்கும் பலகையைப் போல, வாங்க வாங்க நின்று - தாம் தாம் தனித்தனி இழுப்பதுபோல நின் கைகளைப்பற்றி அவர் அவர் தம் கருத்து முற்றுப் பெறுமாறு இழுத்தலாலே நீ அவரிடைப்பட்டு, ஊங்கு அஞர் நிலை - மிகவும் வருந்துகின்ற நிலையை, கண்டனென் - யான் கண்கூடாகப் பார்த்தேன், கண்டு எவன் செய்கோ - அங்ஙனம் கண்டும் நின்னை யாது செயற் பாலேன்.

முடிபு : மகிழ்ந, கடல்மரம் கவிழ்ந்தெனக் கலங்கி உடன் வீழ்பு பலர்கொள் பலகைபோல வாங்க வாங்க நின்று அஞர்நிலை கண்டனென். கண்டு எவன்செய்கோ.

கருத்து : நின் நிலைமையை யான் அறிவேன். என்னை ஏமாற்ற வேண்டாம் என்பதாம்.

அ-ள் : யாணர் - அழகு (பிங்கல நிகண்டு) கவல் ஏமுற்ற - கவர்ச்சி மிகுதலால். கால் - காற்று. ஏமுறல் - வீசி மயங்குதல். கடல்மரம் - கப்பல்.

மெய்ப்பாடு : வெகுளியைச் சார்ந்த அச்சம்.

பயன் : வாயில் மறுத்தல்.

ஒப்புமைப்பகுதி

11. புறநிலை
"பிறிதொன்று குறித்த அவனெடும் புறநிலையே"
(குறுந். 298: 8)

# 31. நெய்தல்

## தலைவி கூற்று

மாஇரும் பரப்பகம் துணிய நோக்கிச்
சேயிறா எறிந்த சிறுவெண் காக்கை
பாய்இரும் பனிக்கழி துழைஇப் பைங்கால்
தான்வீழ் பெடைக்குப் பயிரிடூஉ சுரக்கும்
5 சிறுவீ ஞாழல் துறையுரார் இனிதே

பெரும்புலம்பு உற்ற நெஞ்சமொடு பலநினைந்து
யானும் இனையேன்—ஆயின் ஆனாது
வேறுபல் நாட்டில் கால்தர வந்த
பலஉறு பண்ணியம் இழிதரு நிலவுமணல்
10 நெடுஞ்சினைப் புன்னைக் கடுஞ்சூல் வெண்குருகு
உலவுத்திரை ஓதம் வெரூஉம்
உரவுநீர்ச் சேர்ப்பனொடு மணவா ஊங்கே.

எ-து: தலைவன் சிறைப்புறத்தானாக தலைவி வன்புறை எதிரழிந்தது.

நக்கீரனார்

ப-ரை: தோழி, ஆனாது - அமையாமல், வேறு பல் நாட்டில் - வேறாகிய பல நாட்டிலிருந்தும், கால்தர - கலங்களைக் காற்றுச் செலுத்துதலாலே, வந்த - வந்திறங்கிய, பல உறுபண்ணியம்-பலவகைப்பட்ட பண்டங்கள், இழிதரு-இறக்கிய, நிலவுமணல் - நிலாவை ஒத்த மணற்பரப்பின் கண்ணுள்ள, நெடும்சினை புன்னை - நெடிய கிளைகளையுடைய புன்னை மரத்தில் இருக்கின்ற, கடும்சூல் - முதிர்ந்த கருப்பத்தையுடைய, வெண்குருகு - வெண்மையான நாரை, உலவுதிரை - உலாவுகின்ற அலையின், ஓதம் - ஓசைக்கு, வெரூஉம் - அஞ்சாநிற்கும், உரவுநீர் - வலிய நீர்ப்பரப்பினையுடைய, சேர்ப்பனொடு - கடல் சேர்ப்பனோடு, மணவா ஊங்கு - சேரா முன்பு, மாஇரும் - பெரிய கரிய- பரப்பு அகம் - நீர் பரந்த கழியிடம், துணியநோக்கி - தெளிதலானே அதனைப் பார்த்து, சேயிறா - அதிலுள்ள சிவந்த இறால் மீனை, எறிந்த - பிடிப்பதற்குப் பாய்ந்த, சிறுவெண் காக்கை - கழுத்தளவு சிறிது வெண்மையையுடைய நீர்க் காக்கை, பாயிரும் - பரவிய பெரிய, பனிக்கழி - குளிர்ச்சியையுடைய கழியிடத்தை, துழைஇ - துழாவி எடுத்து, பைங்கால் - பசுமையான கால்களையுடைய, பெடைக்கு - தன்பெடையை, பயிரிடூஉ - அழைத்து, தான் வீழ் - தான் பற்றிய, சுரக்கும் - இறால் மீனைக்கொடுக்கும், சிறுவீ - சிறிய பூக்களை உடைய, ஞாழல் துறையும் - ஞாழலந் துறையும், இனிது - இனிதாய் இருந்தது (ஆனால், இப்போது துன்பம் தருவதாய் உள்ளது) பெரும்புலம்புற்ற நெஞ்சமொடு - பெரிய வருத்தமுற்ற உள்ளத்தோடு, பல நினைந்து - அவனைப் பிரிந்ததனால் உண்டாகிய துன்பம் பலவற்றையும் நினைந்து, யானும் இனையேன் ஆயின் - யானும் இத்தன்மையேன் ஆயினேன், இதனைக் காண்பாயாக.

முடிபு : சிறுவீ ஞாழல் துறையும் இனிதே; பெரும்புலம்புற்ற நெஞ்சமொடு பலநினைந்து யானும் இனையேன் ஆயினேன்.

கருத்து : தலைவனைப் பிரிந்ததனால் எல்லாம் வெறுத்துப் போயிற்று. அவன் வருவான் என்ற நம்பிக்கையும் போயிற்று என்பதாம்.

அ-ள் : மா - பெரிய, வெண்காக்கை - கருங் காக்கையும் ஆம். வெண்மை - கருமை மேற்று. துணிய - தெளிய. பயிரிடுதல் - அழைத்தல். புலம்பு - வருத்தம். பண்ணியம் - பண்டம்.

மெய்ப்பாடு : அழுகை.

பயன் : அயாவுயிர்த்தல்.

நயம் ; புன்னைமரத்தின் கிளைமேல் வாழும் கருமுற்றிய நாரை கடலோசைக்கு அஞ்சும் என்றது, தலைவனோடு நட்பு கொண்டு பிறந்தகத்து இருக்கும் யான், அன்னையின் வன் சொல்லுக்கு அஞ்சுவேன் என்பதைக் குறிப்பித்தது. இறாலைப் பிடித்த காக்கை தன் பெடையை விளித்து அதன்வாயில் இரையைத் தரும் என்றது தலைவன் என்னைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்று இன்பம் துய்த்திலன் என்பதைச் சுட்டிற்று.

ஒப்புமைப்பகுதி

2-3. காக்கை கழியைத் துழவல்
"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை"
(குறுந். 246:1. 334:1) (ஐங். 161:1)

9. மணலுக்கு நிலவு
"நிலவுக் குவித்தன்ன வெண்மணல் ஒருசிறை"
(குறுந். 123. 2: 320:8)
"நிலவெக்கர்ப் பல பெயர" (பொருந. 213)
"நிலவுக் கானல்" (மதுரைக். 114)
"நிலவடைந்த இருள்போல" (பட். 82: 3)
"வாள்நிலா ஏய்க்கும் வயங்குஒளி எக்கர்"
(கலித். 131: 17)
"நிலாவின் இலங்கு மணல்மலி மறுகு" (அகநா. 200: 1)
"நிலவு மணல் வியல் கானல்" (புறநா. 17: 11)
"நிலா எழுந்த வார்மணல்" (திணைமா. 29)
"நிலவோரன்ன வெண்மணற் பாக்கத்து" (தமிழ்நெறி மேற்)
"அறல் விளங்கு நிலாமணல்" (மணி. 8: 11)

# 32. குறிஞ்சி

### தோழி கூற்று

"மாயோன் அன்ன மால்வரைக் கவாஅன்
வாலியோன் அன்ன வயங்குவெள் அருவி
அம்மலை கிழவோன் நம்நயந்து என்றும்
வருந்தினன்" என்பதோர் வாய்ச்சொல் தேறாய்
5 நீயும் கண்டு நுமரொடும் எண்ணி
அறிவறிந்து அளவல் வேண்டும்: மறுதரற்கு
அரிய – வாழி, தோழி – பெரியோர்
நாடி நட்பின் அல்லது
நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே.

எ-து: தலைவிக்குக் குறை நயப்புக் கூறியது,

கபிலர்.

ப-ரை: தோழி வாழி - தோழி நீ வாழ்வாயாக, மாயோன் அன்ன - திருமாலைப் போன்ற, மால்வரை கவாஅன் - பெரிய மலைப்பக்கத்து, வாலியோன் அன்ன - அவனுக்கு முன்னவனாக அவதரித்த வெண்ணிறமுள்ள பலராமனைப் போன்ற, வயங்கு - விளங்கிய, வெள் அருவி - வெண்மையான அருவிகளையுடைய, அம்மலைகிழவோன் - அழகிய மலைக்குரிய தலைவன் (நாள் தோறும் நம்புனத்து அயல் வந்து), நம்நயந்து - நம்மை விரும்பி, வருந்தினன் - வருந்தா நின்றான், என்பதோர் வாய்ச் சொல், தேறாய் - தெளிந்தாய் இல்லை, நீயும் கண்டு - நீயும் அவனை நோக்கி, நுமரோடும் எண்ணி - நின்னிடத்தில் அன்புடைய தோழியரோடும் ஆராய்ந்து, அறிவறிந்து - அறிவினால் இது தகுதியுடையது இது தகுதி இல்லாதது என்பதையும் அறிந்து, அளவல் வேண்டும் - பின்னர் அளவளாவுதல் வேண்டும், மறுதரற்கு அரிய - அவன் கூற்று மறுத்தற்கு அரியனகாண். பெரியோர் - சான்றோரை, தம் ஒட்டியோர் திறத்து - தம்மிடம் நட்புக்கொள்ள விரும்பி வந்தவரிடம், நாடி-உள்ள குணங்களைச் சீர்தூக்கி ஆராய்ந்து, நட்பின் அல்லது - நட்பு செய்பவரே அல்லாமல், நட்டு - முதற்கண் நட்புகொண்டு, நாடார் - பின்னர் குணம் குறைகளை ஆராயார். இதனைத் தெரிந்துகொள்.

முடிபு: தோழி வாழி. பெரியோர் நாடி நட்பின் அல்லது நட்டு நாடார் தம் ஒட்டியோர் திறத்து.

கருத்து: இனி அவனது அன்பை நினக்குக் கூறுவதால் யாதொரு பயனுமில்லை என்பதாம்.

அ-ள்: மாயோன் - வாசுதேவன், வாலியோன் - பலராமன், கவாஅன் - மலைப்பக்கம்.

மெய்ப்பாடு - இளிவரலைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - வலிதாகச் சொல்லிக் குறை நயப்பித்தல்.

ஒப்புமைப்பகுதி

1. மலைக் கவான்

"விண்தொட நிவந்த விலங்குமலைக் கவாஅன்"

(குறுந். 262:6, 353: 2)

"விண்டோய் சிமைய விறல்வரைக் கவாஅன்"

(புறநா. 151:2)

"மலையொடு சிமைய மால்வரைக் கவாஅன்" (பட்டின. 138)

1-2: "பானிற வுருவிற் பனைக் கொடியோனும்,
நீனிற வுருவில் நேமியோனும்"

(புறநா. 56:3-6, 58:14-5)

# 33. பாலை

## தோழி கூற்று

படுசுடர் அடைந்த பகுவாய் நெடுவரை
முரம்புசேர் சிறுகுடிப் பரந்த மாலைப்
புலம்புகூட் டுண்ணும் புல்லென் மன்றத்துக்
கல்லுடைப் படுவிற் கலுழி தந்து
5 நிறைபெயல் அறியாக் குறைத்தூண் அல்லில்
துவர்செய் ஆடைச் செந்தொடை மறவர்
அதர்பார்த் தல்கும் அஞ்சுவரு நெறியிடை
இறப்ப எண்ணுவர் அவர்எனின் மறுத்தல்
வல்லுவம் கொல்லோ மெல்லியல் நாமென
10 விம்முறு கிளவியள் என்முக நோக்கி
நல்லக வனமுலைக் கரைசேர்பு
மல்குபுனல் பரந்த மலர்ஏர் கண்ணே.

எ-து: பிரிவுணர்த்தப்பட்ட தலைமகளது குறிப்பு உணர்ந்த தோழி தலைமகற்குச் சொல்லியது.

## இளவேட்டனார்

ப-ரை : தலைவ! என் முகம் நோக்கி - தலைவி என்னைப் பார்த்து. மெல்லியல் - என்பால் அன்புகொண்ட ஆருயிர்த் தோழியே! படுசுடர் அடைந்த பகுவாய் நெடுவரை - மேற்குத் திசையில் சென்ற கதிரவன் மறைய வெடிப்புக் கொண்ட வாயை உடைய நீண்ட மலைப்பக்கத்தில், பரந்த - பரவிய, மாலை - மாலை வேளையில், முரம்பு சேர் சிறுகுடி - வலிய நிலத்தில் அமைந்த சிறுகுடியின் கண் இருக்கும், புலம்பு கூட்டுண்ணும் - கள்வர் பிறர்க்கு அச்சம் தோன்ற ஒருங்கிருந்து உண்ணும், புல் என் மன்றத்து - பொலிவு கெட்ட பொது இடத்தில், கல்லுடைப் படுவில் - கற்களுக்கு இடையில் ஓடும் மடுவில் உள்ள, கலுழி - கலங்கல் நீரைக் கொண்டுவந்து கொடுத்து, நிறை பெயல் அறியா - நிறைந்த மழையைத் தம்பால் கண்டறியாத, குறைத்து ஊண் அல்லில் - குறைந்த உணவையுடைய இராப்பொழுதில், துவர்செய் ஆடை - பழுப்பு ஏறிய ஆடையையும்,செந்தொடை - கூர்மையான அம்புகளையும் உடைய, மறவர் - ஆறலை கள்வர், அதம் பார்த்து அல்கும் - வருகின்றவர்களின் வழியைப் பார்த்து இருக்கும் அஞ்சுவரு நெறியிடை - அச்சம் தரும் வழியின்கண்ணே, இறப்ப எண்ணுவர் எனில் - அவர் செல்லக் கருதுவர் என்றால், அதனை நாம் மறுத்தல் வல்லுவம் கொல்லோ - எம்மால் தடுக்க முடியுமோ என்று, விம்முறு கிளவியள் - விம்மிய சொல்லை உடையவளாய், என் முக நோக்கி - என்னுடைய முகத்தை நோக்கலும், மலர் ஏர் கண் - அவ்வளவில் அவளுடைய மலர் போன்ற கண்களிலிருந்து, நல் அக வனமுலை கரை சேர்பு - நல்ல மார்பின்கண்ணுள்ள அழகிய முலை முகட்டில் விழுந்து பரக்கும் படி, மல்கு புனல் பரந்த - மல்கிய கண்ணீர் பரந்தன, ஆகையால் நீ வருங்காறும் எவ்வாறு அவள் பொறுத்திருப்பள்.

முடிபு : இறப்ப ண்ணுவரெனின் மலர் ஏர் கண் ப கு புனல் பரந்த என முடிக்க.

கருத்து : தலைவ! நீ பிரியின் தலைவி விம்மிக் கண்ணீர் சுரப்பள். அவள் எவ்வாறு நின் பிரிவைப் பொறுப்பள்? என்று தோழி கூறிச் செலவு அழுங்குவித்தாள்.

அ-ள் : முரம்பு - வன்னிலம். படு - மடு.

நயம் : வழிப்பறி செய்வோர் சமயம் பார்த்து ஒளிந்திருத் தல்போது, தலைவன் பிரிவை நோக்கி, பசலை மறைந்திருக்கும் அவன் பிரிதலும் அது உடல் முழுவதும் பரவி நலத்தைக் கெடுக் கும் என்றவாறு

மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - செலவழுங்குவித்தல்.

ஒப்புமைப்பகுதி

துவராடை

6. "சிலை விற் பகழிச் செந்துவராடை" (ஐங். 363:1)

# 34. குறிஞ்சி

## தோழி கூற்று

கடவுட் கற்சுனை அடைஇறந்து அவிழ்ந்த
பறியாக் குவளை மலரொடு காந்தள்
குருதி ஒண்பூ உருகெழக் கட்டிப்
பெருவரை அடுக்கம் பொற்பச் சூர்மகள்
5 அருவி இன்னியத் தாடு நாடன்
மார்புதர வந்த படர்மலி அருநோய்.
நின்னணங்கு அன்மை அறிந்தும் அண்ணாந்து
கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி.
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்!
10 கடவுள் ஆயினும் ஆக
மடவை மன்ற வாழிய முருகே!

எ-து: தோழி தெய்வத்துக்கு உரைப்பாளாய் வெறி விலக்கியது.

பிரமசாரி

ப-ரை: முருகே - முருகனே! கடவுள் - கடவுள் தன்மை பொருந்திய, கற்சுனை - மலையிலுள்ள சுனையில், அடைஇறந்து - இலைகளை விலக்கி, அவிழ்ந்த - மேலே எழுந்து மலர்ந்த, பறியா - பறிக்காமல் விட்டிருந்த, குவளை மலரொடு - குவளை மலரைப் பறித்து அவற்றோடு, குருதிகாந்தள் ஒண்பூ - செங்காந்தள் மலரையும், உருகெழக் கட்டி - வடிவுவிளங்க மாலையாகக் கட்டிச் சூடி, பெருவரை அடுக்கம் - பெரிய மலையின் பக்கங்களில் எல்லாம், பொற்ப - பொலிவுபெற, அருவி இன்னியத்து - அருவியின் ஒலியே இனிய பக்கவாத்தியங்களாகக்

கொண்டு, சூரரமகள் - சூரரமகளிர், ஆடும் நாடன் - ஆடுகின்ற நாட்டிற்குத் தலைவனது, மார்புதர - மார்பைத்தழுவி அதன் காரணமாக, வந்த - ஏற்பட்ட, படர்மலி அருநோய் - பசலை மிகுதியாகப் படர்தலைக் கொண்டதான நீங்குதற்கு அரிய இந்தக் காமநோய், நின் அணங்கு அன்மை அறிந்தும் - நின்னால் வருந்திக் கொடுக்கப்பட்டது அன்று என்பதை நன்றாக அறிந்தும் அண்ணாந்து - தலை நிமிர்ந்து, காரி நறும் கடம்பின் கண்ணி - கார் காலத்து மலர்கின்ற நறிய கடப்ப மாலையை, சூடி, வேலன் வேண்ட - படிமத்தான் வேண்டுகையாலே, வெறிமனை வந்தோய் - வெறிக்களத்துப் பலிபெற வந்தாய், கடவுளாயினும் ஆக - நீ கடவுள் பகுதியுள் வைத்து எண்ணுதற்கு உரியை யாயினும் ஆகுக. மன்றமடவை - திண்ணமாக நீ அறியாமை யுடையை காண்!

வாழிய - இதனோடு நெடுங்காலம் வாழ்க.

முடிபு : வேலன் வேண்ட வெறிமனை வந்தோய் கடவுள் ஆயினும் ஆகமன்ற யடவை.

கருத்து : முருகவேளே! இவளை இவள் தலைவனோடு விரைவில் மணம் முடிக்கப்பெற்று இன்புறுதற்கு உதவினை யானால் இவளது நோய் நீங்கும் என்பதாம்.

அ-ள் : பறியாக்குவளை - கடவுள் சுனை மலராதலில் பூப்பார்பவிக்கன்றிப் பறிக்காத குவளை. கடம்பு - செங்கடம்பு. மன்ற - தேற்றப்பொருள் தரும் இடைச்சொல். "மன்றவென் கிளவி தேற்றம் செய்யும்" (தொல். இடை. சூ: 17) வேலன் - இக்காலத்து பூசாரி என்று சொல்லப்படுவான். வாழிய - இகழ்ச்சிக் குறிப்பு.

மெய்ப்பாடு - பெருமிதத்தைச் சார்ந்த நகை.

பயன் - குறிப்பினால் வெறி விலக்குவித்தல்.

ஒப்புமைப்பகுதி

1-2 சுனைக்குவளை

"அரலைக் குன்றத்து அகல் வாய்க் குண்டு சுனைக்
குவளையொடு" (குறுந். 59: 2-3)
"பைஞ்சுனைக் குவளை" (குறுந். 342: 4-5)
"குவளைம் பைஞ்சுனை" (மலைபடு. 251)
"மல்லறைய மலிர்சுனைக் குவளை" (அகநா. 308: 11)
"குவளைப் பைஞ்சுனை" (புறநா. 132. 5)

2-3 காந்தளின் குருதிப்பூ

" குருதிப் பூவின் குலைக் காந்தட்டே" (குறுந். 1-4)
" தோடார் தோன்றி குருதிபூப்ப" (முல்லை. 96)
" குருதி மலர்த் தோன்றி" (கைந்நிலை. 26)
"அரவு பைத்தாவித்தன்ன அங்காந்தன் அவிழ்ந்து
அலர்ந்தள்"
(சீவக. 1651)

4-5 அருவியோசைக்கு முழவு

" பெருவரை மிசையது நெடுவெள்ளருவி
முதுவாய்க் கோடியர் முழவில் ததும்பி"
(குறுந். 78: 1-2, 365:3-4)
" ஒருதிறம் மண்ணார் முழவின் இசையெழ, ஒருதிறம்
அண்ணல் நெடுவரை அருவி நீர்ததும்ப" (பரி. 17:3-4)
" பாணி முழவிசை அருவி நிர்ததும்ப" (பரி. 21:36)
" பாடின் னருவிப் பனிநீர் இன்னிசைத் தோடமை
முழவின் துதை குரலாக" (அகநா. 82:3,4; 318:5-6)
" யாழும் குழலும் முழவும் இயைந்தென" (திணைமொழி. 7)
" அருவி அரற்றிசை அணிமுழலாக" (பெருங். 81:2-16)
" முழவின்னிசை மூரி முழங்கருவி" (சீவக. 1193)
" அருவிதாழ்ந்து வீழ்ந்தவை முழவில் ததும்பின"
(சீவக. 1560)
" படுகன் முழவினி மீழருவி வரையும்" (சீவக. 2172)
" மலையிலங் கருவிகன் மணமுழவதிர" (தே: திருநா)
" அருவித்திரள் மழலையம் முழவதிரும் அண்ணாமலை"
(தே. திருஞா)

5-6 " நேரிழை நல்லாய் நகையா மலைநாடன்
மார்புதரு வென்நோய் தீர்க்கவருவேலன்"
(சிலப். குன்றக். 1-14)

8-11 கார்க்கடப்பந்தார்

" கார்க்கடப் பந்தார் எங்கடவுள்" (சிலப். குன்றக். 14.4)
" கார்கோண் முகந்த......உருள் பூந்தண்டார் புரளும்
மார்பினன்"
(முருகு. 7-4)
" கார் நறுங் கடம்பின்" (புறநா. 23:1-4)
" காரலர் கடம்பன்" (மணி. 4:49)

9-11 " மாமலை வெற்பன் நோய்தீர்க்க வரும்வேலன்
வருமாயின் வேலன் மடவன் அவனிற்
குருகு பெயர்க் குன்றம் கொன்றான் மடவன்"
(சிலப். குன்றக்: 12:2-4)

11. மடவை மன்ற

"மடவை மன்ற நீயெனக்கடவுபு" (குறுந். 252-5)
(அகநா. 27:6) (பெருங். 1:47-251)

# 35. நெய்தல்

## தோழி கூற்று

பொங்குதிரை பொருத வார்மணல் அடைகரைப்
புன்கால் நாவல் பொதிப்புற இருங்கனி
கிளைசெத்து மொய்த்த தும்பி பழம்செத்துப்
பல்கால் அலவன் கொண்டகோட்கு அசாந்து
5 கொள்ளா நரம்பின் இமிரும் பூசல்
இரைதேர் நாரை எய்தி விடுக்கும்
துறைகெழு மாந்தை அன்ன இவள்நலம்
பண்டும் இற்றே கண்டிசின் தெய்ய
உழையின் போகாது அளிப்பினும் சிறிய
10 ஞெகிழ்ந்த கவின்நலம் கொல்லோ மகிழ்ந்தோர்
கட்கழி செருக்கத்து அன்ன
காமம் கொல்இவள் கண்பசந் ததுவே.

எ-து: மணமனைப் பிற்றை ஞான்று புக்க தோழியைத் தலைவன் நன்கு ஆற்றுவித்தாய் என்றதற்கு அவள் சொல்லியது.

அம்மூவனார்

ப-ரை: பொங்குதிரை பொருத - பொங்கி எழுகின்ற அலை மோதிய, வார்மணல் - நேரிதாகிய மணல், அடைகரை - அடுத்த கடற்கரையில் உதிர்ந்து கிடந்த, புன்கால் - புல்லிய காம்பையுடைய, நாவல் பொதிப்புற இருங்கனி - நாவலின் சாறு பொருந்திய கரிய கனியினை, கிளைசெத்து - தம்மினம் என்று கருதி, தும்பி மொய்த்த - வண்டினம் மொய்க்கும் அவ்வேளையில், பழம் செத்து - அதனைப் பழம் என்றே உணர்ந்து, பல்கால் - பலகால்களையுடைய, அலவன் - நண்டானது, கொண்டகோட்கு - கைக்கொண்ட கோட்பாட்டினால், அசாந்து கொள்ளா - அந்நண்டை விலக்கித் தாம் கொள்ளப்படாதனவாய், நரம்பின் இமிரும் - யாழ் ஓசையைப் போல் மிக்கு ஒலிக்கும் பெரும் பூசலை, இரைதேர் நாரை - இரையைத்

தேடுகின்ற நாரை, எய்தி - வரக்கண்டு, விடுக்கும் - நண்டானது ஓடிப்பதுங்கி நிற்கும், துறைகெழு - கடற்றுறை விளங்கிய, மாந்தை அன்ன - குட்டுவனின் மாந்தை நகரத்தைப் போன்ற, இவள் நலம் - இவளுடைய எழில் நலமானது, பண்டும் இற்றே - முன்பும் இத்தன்மையதேயாகும், கண்டு - காண்பா யாக, உழையின் போகாது - இவள்பால் களவுக் காலத்து விலகாமல் இருந்து, அளிப்பினும் - தலையளி செய்தாலும், இவள் கண் பசந்தது - இவளது கண்கள் பசலை நோய் அடைந்த காரணம், சிறிய - சிறிதளவு, முயக்கம் ஞெகிழ்ந்த - கை நெகிழ்ந்ததனால், கவின் நலம் கொல் - உண்டாகிய அழகின் சிறப்பாகுமோ? கள்கழி மகிழ்ந்தோர் - கள்ளுண்டு மகிழ்ந் தோர்க்குக் கள் இல்லாதுபோகும் காலத்தில் பிறந்த, செருக் கத்து அன்ன - வேறுபாடு போன்ற, காமம் கொல் - காம மயக் கத்தின் வேறுபாடுதானோ, இதனை யான் அறியேன்.

முடிபு : இவள் கண் பசந்தது, சிறிய ஞெகிழ்ந்த கவின் நலம் கொல்லோ, கட்கழி செருக்கத்து அன்ன, காமம் கொல்.

கருத்து : உன்னுடைய காதல் மிகுதியே இவளது துயரத்தை ஆற்றுவித்துக் காத்தது என்பதாம்.

பி.ம். 4. கோட்கூர்ந்து

அ-ள் : புன்கால் - மென்மையான காம்பு, செத்து - கருதி, அசாந்து - தளர்ந்து, இசின் : முன்னிலையசை, தெய்ய - இடைச்சொல், அசைநிலைப் பொருளில் வந்துள்ளது.

மெய்ப்பாடு - உவகையைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - பிரியற்க என்று கூறல்.

இதனுள், தலைவி கனியாகவும், தும்பி தோழியாகவும், அலவன் தன்மேல் தவறிழைக்கும் தமராகவும், தலைவன் இரைதேர் நாரையாகவும் உள்ளுறை உவமம் கொள்வழித் தலைவி பொருட்டு யாய்க்கு அஞ்சி ஒழுகினேனை நீ காத்ததன்றி யான் ஆற்றுவித்தது உளதோ எனத் தலைவன் சிறப்பிற்கு எதிர் தோழி கூறியவாறு காண்க. 'பண்டும் இற்றே' என்றது பண்டையின் மிகவும் வருந்தினாள் என்றாள். இவள் கண் நீண்டு பசந்தது, களவின்கண், நீங்காது அளியா நிற்கவும் சிறிது கெட்ட அழகின் மிகுதியோ, கள்ளுண்டார்க்குக் கள் அறாஉங் காலத்துப் பிறந்த வேறுபாடு போலும் காமவேறுபாடோ, அவ்விரண்டும் அல்லவே இஃது ஓர் அமளிக்கண் துயிலப் பெற்றும் வேதவிதி பற்றிக் கூட்டம் நிகழாமையால் பிறந்த மிக்க வேறுபாடன்றோ? இதனை இவளே ஆற்றுவதன்றி யான் ஆற்றுவிக்குமாறு என்னை என்றாள் என்க. இச்செய்யுளை மேற்கோள் காட்டுவர் நச்சினார்க்கினியர். (தொல். பொருள். சூ. 150 உரை)

ஒப்புமைப்பகுதி

6. இரைதேர் நாரை

"இரைதேர் நாரைக்கு எவ்வம் ஆக" (குறுந். 103:3)

ஆரல் பார்க்கும் குருகு

"ஒழுகுநீர் ஆரல் பார்க்கும் குருகுமுண்டு"
(குறுந். 25:45, 113:3, 114:3-4)

"நாரைகள் ஆரல் வார" (தே-திருநா:திருநனிபள்ளி)

7. மாந்தை

"குட்டுவன் மாந்தை அன்ன" (குறுந். 34:6) (பதிற். 90:28)
(அகநா. 127:6, 376:6) (முத். 82,105)

12. கண் பசலை பாய்தல்

"பசலை பார்ந்தன குவளையங் கண்ணே" (குறுந். 13:5)
"பூப்போல்உன்கண் பொன் போத்தனவே" (ஐங். 16:4)
"உன்கண் பசப்பது எவன் கொலன்னாய் (ஐங். 21:4)
"ஏதிலாளர்க்குப் பசந்த வென்கண்ணே" (ஐங். 34:4)
"கயலெனக் கலங்கிய உண்கண், பயலைக்கு
ஒல்காவாகுதல் பெறினே"
(ஐங். 36:4-5)
"நயந்தோருண்கண் பயந்து பனிமல்க" (ஐங். 37:2)
"பசப்பணிந்தனவால் மகிழ்ந என்கண்ணே" (ஐங். 45:4)
"என்செயப்பசக்கும் தோழி என்கண்ணே" (ஐங். 169:5)
"பல்இதழ் உண்கண் பசத்தல் மற்று எவனோ? (ஐங். 170-4)
"பசந்தவ மாதோ, நீ நயந்தோள் கண்ணே" (ஐங், 264-4)
"பனிமலர் நெடுங்கண் பசலைபாய" (ஐங். 477.1)
"கொன்றைப் பூவிற் பசந்தவென் கண்ணே" (ஐங். 500-1)
"பல்லிதழ் மலருண்கண் பசப்ப" (கலித். 45:11)
"பொன்னெனப் பசந்தகண் போதெழில் நலம்செல"
(கலித். 77:12)
"கண்பசந்து" (அகநா. 146:11)
"முயக்கிடைத் தண்வளி போழப் பயப்புற்ற
பேதை பெருமழைக்கண், கண்ணின் பசப்போ"
(குறள். 1239-40)

கண் பசலை பூத்தல்

"குவளை உண்கண் கலுழப்
பசலையாகா ஊங்கலங்கடையே" (குறுந். 339-6-7)
(ஐங். 16-4, 21-4) (கலித். 15-1) (அகநா. 146-11)

# 36. குறிஞ்சி

## தோழி கூற்று

குறுங்கை இரும்புலிக் கோள்வல் ஏற்றை
பூநுதல் இரும்பிடி புலம்பத் தாக்கித்
தாழ்நீர் நனந்தலைப் பெருங்களிறு அடூஉம்
கல்லக வெற்பன் சொல்லின் தேறி
5 யாம்எம் நலனிழந் தனமே யாமத்து
அலர்வாய்ப் பெண்டிர் அம்பலொடு ஒன்றிப்
புரைஇல் தீமொழி பயிற்றிய உரையெடுத்து
ஆனாக் கௌவைத்து ஆகத்
தானென் இழந்தது இவ்வழுங்கல் ஊரே.

எ-து : இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.

**சீத்தலைச் சாத்தனார்**

ப-ரை : குறுங்கை - குறுகிய முன்னங்கால்களையுடைய, கோள்வல் - கொல்லவல்ல, இரும்புலி ஏற்றை - பெரிய ஆண் புலியானது, பூநுதல் - பொலிவு பெற்ற நெற்றியையுடைய, இரும்பிடி - கரிய பெண்யானை, புலம்ப - புலம்பும்படி, தாழ்நீர் நனந்தலை - நீர் அற்ற அகன்ற காட்டிலே, பெருங்களிறு - பெரிய ஆண்யானையை, தாக்கி அடூஉம் - கொல்லா நிற்கும், கல்லக வெற்பன் - மலையிடத்தையுடைய சிலம்பன், சொல்லின் தேறி - அவனுடைய பிரியேன் என்ற சொல்லினை உண்மை என்று தெளிந்து, யாம் எம் நலம் இழந்தனம் - அவனை ஏற்றதினாலே யாம் எம் நலத்தை இழந்து விட்டோம்; ஆகலின், யாமத்து - இந்த இரவின் யாமத்தும், கண் துயிலாது ஒழிந்தனம், அலர் வாய் - பழி தூற்றும் வாயையுடைய, பெண்டிர் - அயற் பெண்டிரது, அம்பலொடு ஒன்றி - அம்பலோடு சேர்ந்து, இ அழங் கல் ஊர் - இவ்வூர், புரைஇல் - மேன்மை இல்லாத, தீமொழி - தீயசொற்களை, பயிற்றிய - கூறுதற்கு வேண்டிய, உரை எடுத்து - பேச்சுக்களை மேற்கொண்டது, ஆனாக்கௌவைத்து ஆக - அமையாத பழிமொழியையுடையதாக, தான் என் இழந்தது - இதுதான் என்னைப்போல எதனை இழந்தது? இந் நடுயாமத்தி லும் துயின்றிலதே.

பி.ம். 1. குறுக்கை

முடிபு : இவ்வழுங்கலூர் ஆனாக் கௌவைத்தாக தான் என் இழந்தது.

கருத்து : வழியின் ஏதமும் ஊரவர் அலருரையும் நினைந்து நாம்படும் துன்பம் தீர்வதற்கு அவர் நம்மை மணம் செய்து கொள்வதே இனிச் செய்யத்தக்கது.

அ-ள் : பூ நுதல் - அழகிய நெற்றி. புரை - மேன்மை. கௌவை - பழிச்சொல், அழுங்கல் - ஒலி.

மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த அச்சம்.

பயன் - வரைவுகடாதல்.

இதனுள் ஊர் உறங்காமை கூறியது முட்டுவயிற்கழறல்.

நலம் இழந்தனம் என்றது பசலை பாய்தல்.

நயம் : பிடி புலம்புமாறு புலி களிற்றைத் தாக்கிக் கொல்லா நிற்கும் நாடன் என்றது, இரவுக் குறியில் நீவரின் யாம் வருந்துமாறு எம்மைச் சார்ந்தோர் நினக்கு ஏதம் செய்வர் என்றும் குறிப்பிற்று.

ஒப்புமைப்பகுதி

1. "குறுங்கை இரும்புலிக் கோள்வல் ஏற்றை"
(குறுங். 141-5) (ஐங். 216-1, 226-2)

1-3. களிறு புலியைத் தாக்குதல்
"சிறுகட் பெருங்களிறு வயப்புலி தாக்கி"
(குறுங். 88:2-3, 141:4-5, 343:1-3) (மலைபடு. 307-9)

5-7. தலைவனால் நலன் இழத்தல்
"அன்னை ஓம்பிய ஆய்நலம்
என்னை கொண்டான் யாம் இன்னமாய் இனியே"
(குறுங். 223:5-7) (அகநா. 146:9-13) (பெருங். 3-6:133)

# 37. பாலை

## தோழி கூற்று

பிணங்கரில் வாடிய பழவிறல் நனந்தலை
உணங்குஊண் ஆயத்து ஓரான் தெள்மணி
பைய இசைக்கும் அத்தம் வையெயிற்று
இவளொடும் செலினோ நன்றே குவளை
5 நீர்சூழ் மாமலர் அன்ன கண்அழக்

கலையொழி பிணையின் கலங்கி மாறி
அன்பிலிர் அகதிர் ஆயின் என்பரம்
ஆகுவது அன்றிவள் அவலம்—நாகத்து
அணங்குடை அருந்தலை உடலி வலன்ஏர்பு.
10 ஆர்கலி நல்லேறு திரிதரும்
கார்செய் மாலை வரூஉம் போழ்தே.

எ-து : வரைவிடை வைத்துப் பிரிவின்கண் தோழி சொல்லியது.

## பேரிசாத்தனார்

ப-ரை : பிணங்கு அரில் ஒன்றோடொன்று சிக்குண்ட சிறு தூறுகளும், பழவிறல் - பழமையான நல்ல தோற்றமும், வாடிய - வதங்கிய, நனந்தலை - அகன்ற இடத்தையுடைய, ஊண் உணங்கு ஆயத்து - உணவின்றி வாட்டமடைந்த நிரையிலுள்ள, ஓர் ஆன் - ஒரு ஆவினது, தெள்மணி - தெளிந்த மணியோசை, பைய இசைக்கும் - மெதுவாக வந்து ஒலியா நிற்கும், அத்தம் - வழியில் (நீயிர் பொருள் விருப்பத்தால் செல்லுகின்ற இப்பொழுது), வை எயிற்று - கூரிய பற்களையுடைய, இவளோடும், செலின் - செல்வீராயின், நன்று - அது மிக்க நல்லதொரு செயலாகும் (அங்ஙனமின்றி) கலைஒழி - கலைமானைப் பிரிந்த, பிணையின் - பெண் மான்போல, கலங்கி - கலக்கமடைந்து, குவளை - குவளையின், நீர்சூழ் மாமலர் அன்ன - நீர் நிரம்பிய கரிய மலரைப்போன்ற, கண் அழ - கண்கள் அழுகின்ற நீர்வடிய, மாறி - மாறுபட்டு, அன்பிலிர் - அன்பில்லாதவராய், அகதிர் ஆயின் - இவளைப் பிரிந்து செல்வீராயின், நாகத்து - பாம்பினது, அணங்குடை - வருத்துகின்ற, அருந்தலை - அரிய தலை, உடல் (துணிந்து விழும்படி) சினந்து, வலன் ஏர்பு - வலமாக எழுந்து, ஆர்கலி - மிக்க முழக்கத்தையுடைய, நல் ஏறு திரிதரும் - நல்ல இடியேறு திரிகின்றதான, கார் செய்மாலை - கார்ப்பருவத்து மாலைக் காலமானது; வரும்போழ்து - வருகின்றபொழுது, (இவள்படும் துக்கம்) என்பரம் ஆகுவது அன்று - என்னாலே தாங்கப்படுவது ஒன்று அன்று காண்மின்.

முடிபு : ஆர்கலி நல்வேறு திரிதரும் கார்செய்மாலை வருஉம் போழ்து இவள்படும் அவலம் என்பரம் ஆகுவது அன்று.

கருத்து : இவளைப் பிரிந்து சென்றீராயின் அந்தப் பிரிவைத் தாங்காமல் இறந்துபடுவள் என்பதாம்.

அ-ள் : பிணங்கு - பின்னிக்கிடத்தல். பழவிறல் - பழைய தன்மை. அத்தம் - வழி, திரிதரல் - மேகத்தில் யாண்டும் ஓடி முழங்குதல்.

மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - செலவழுங்குவித்தல்.

"ஓம்படைக்கிளவி......தோழி மேன" வரைவிடைப் பிரிகின்றான் ஆற்றுவித்துக் கொண்டிரு என்பாற்குத் தோழி கூறியது. (தொல். பொரு. சூ. 114) நச்சினார்க்கினியர்.

ஒப்புமைப்பகுதி

8-10 பாம்புபட இடிக்கும் உருமு

"நெடுவரை மருங்கிற் பாம்புபட இடிக்கும் கடுவிசை உருமின்"
(குறுங். 158: 1-2, 190:4-5, 268:3-4, 391:3-4)

"உருமுச் சிவந்தெறிந்த உரனழி பாம்பின்" (அகநா. 92:11)

"பாம்பின் பைபட இடிக்கும் கருங்குரல் ஏற்றொடு"
(அகநா. 323:10-11)

"இடியேறுண்ட நலம்போல" (பெருங். 30:112)

# 38. நெய்தல்

## தலைவி கூற்று

வேட்டம் பொய்யாது வலைவளம் சிறப்பப்
பாட்டம் பொய்யாது பரதவர் பகர
இரும்பனம் தீம்பிழி உண்போர் மகிழும்
ஆர்கலி யாணர்த்து ஆயினும் தேர்கெழு
5 மெல்லன் புலம்பன் பிரிபின் புல்லெனப்
புலம்பா கின்றே தோழி கலங்குநீர்க்
கழிசூழ் படப்பை காண்ட வாயில்
ஒலிகா ஓலை முள்மிடை வேலிப்
பெண்ணை இவரும் ஆங்கண்
10 வெண்மணல் படப்பையெம் அழுங்கல் ஊரே.

எ-து : தலைவி வன்புறை எதிரழிந்து சொல்லியது.

உலோச்சனார்

ப-ரை : தோழி, கலங்கு - கலங்கின, நீர்க்கழிசூழ் - நீர் வளத்தைக் கொண்டகழிகள் சூழ்ந்திருக்கும், படப்பை - தோட்டங்களையுடைய, காண்டவாயில் - 'காண்ட வாயில்' என்னும் ஊரிலுள்ள, ஒலிகா ஓலை - ஒலித்தலைக் கொண்ட முற்றிய பனையோலையோடு, முள்மிடை வேலி - முட்களைச் சேர்த்துக் கட்டப்பட்ட வேலியிடத்துள்ள, பெண்ணை - பனைமரங்கள், இவரும் - உயர்ந்திருக்கும், ஆங்கண் - அவ்விடத்ததாகிய, வெண்மணல் - வெண்மையான மணல் மேட்டினையுடைய, படப்பை - பக்கத்தையுடைய, எம் அழுங்கல் ஊர் - எம்முடைய ஆரவாரத்தையுடைய சேரி, வேட்டம் பொய்யாது - கடலிடத்து மீன் வேட்டை பொய்ப்படாது, வலைவள்ம் சிறப்ப - வலைவளம் சிறப்புற்றிருக்கும்படி, பாட்டம் பொய்யாது - மழை பெய்தல் பொய்க்காது, (அதனால் கிடைத்த மீன்களை விலை கூற), பரதவர் பகர - எம் பரதவர்கள் விற்றவராய் இருப்பர். இரும் பனம் - (அவ்விடத்தில்) கரிய பனையினது, தீம்பிழை - கள்ளை, உண்போர் - உண்பார்கள், மகிழும் - அதனால் மகிழ்ந்து, ஆர்கலி - நிரம்பிய ஒலியையுடைய, யாணர்த்து ஆயினும் - புது வருவாயினையுடையதாயினும், தேர்கெழு - தேரூர்ந்து வந்த, மெல்லம் - மெல்லிதான, புலம்பன் - நம் தலைவன், பிரியன் - நம்மை விட்டுப் பிரிந்த காலத்தில், புல்லெனை - பொலிவு இழந்தாற்போல, புலம்பாகின்று - வருத்தத்தைத் தருவதாய் ஆகின்றது. (இதற்கு என் செய்வேன்.)

முடிபு : தோழி, ஊர் யாணர்த்தாயினும் புலம்பன் பிரியின் புலம்பாகின்று.

கருத்து : தலைவன் பிரியின் ஊரும் அதன் வளப்பமும் எனக்குத் துன்பத்தையே அதிகமாக்குகின்றன என்பதாம்.

அ-ள் : வேட்டம் - மீன் வேட்டை, பாட்டம் - மழை; ஆகு பெயர். தீம்பிழை - இனிய கள், ஆர்கலி - மிக்க ஆரவாரம், யாணர் - புது வருவாய், "புதிது படற் பொருட்டே யாணர்க் கிளவி" (தொல். உரி சூ.81) படப்பை - பக்கம், "வாழ்முள் வேலிச் சூழ்மிளைப் படப்பை" (பெரும்பாண். 126) காவோலை - முற்றிய ஓலை, முற்றிக் காய்ந்த ஓலை எனினும் பொருந்தும்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

1-2 கழிநெய்தல்

"பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்
இனமீன் இருங்கழி" (குறுந். 9:-54; 336:5)
(ஐங். 183:5)

# 39. குறிஞ்சி

## தலைவன் கூற்று

சொல்லின் சொல்லெதிர் கொள்ளாய் யாழநின்
திருமுகம் இறைஞ்சி நாணுதி கதுமெனக்
காமம் கைம்மிகின் தாங்குதல் எளிதோ?
கொடுங்கேழ் இரும்புறம் நடுங்கக் குத்திப்
5 புலிவிளை யாடிய புலவுநாறு வேழத்தின்
தலைமருப்பு ஏய்ப்பக் கடைமணி சிவந்தநின்
கண்ணே கதவ அல்ல; நண்ணார்
அரண்தலை மதில ராகவும் முரசுகொண்டு
ஓம்பரண் கடந்த அடுபோர்ச் செழியன்
10 பெரும்பெயர்க் கூடல் அன்னநின்
கரும்புடைத் தோளும் உடையவால் அணங்கே.

எ-து: இரண்டாம் கூட்டத்து எதிர்ச்சியிலே தலைவன் சொல்லியது.

மருதன் இளநாகனார்

ப-ரை: அணங்கே அன்புடையாய்! சொல்லின் - யான் உன்னை நாடினவனாகச் சில சொற்களைக் கூறினால், சொல் எதிர் கொள்ளாய் - அவற்றை எதிர் ஏற்றுக்கொள்ளமாட்டாய், நின்திருமுகம்-உன்னுடைய அழகிய முகத்தை, இறைஞ்சி - கவிழ்த்துக் கொண்டு, நாணுதி - நாணமுற்று நிற்கின்றாய், கதுமென - விரைவாக, காமம்-காமமானது, கைம்மிகின் - கைகடந்து மிகுமாயின், தாங்குதல் எளிதோ - அதனைத் தாங்கிக் கொள்ளுதல் எளியதொரு செயலாகுமோ? கொடுங்கேழ் - வளைந்த கரிய

நிறமுடைய கோடுகளையுடைய, புலி - புலியானது, இரும்புறம் - பெரிய முதுகிலே, நடுங்க - அது நடுங்கிச் சோருமாறு, குத்தி விளையாடிய - குத்தி வீழ்த்தி விளையாட்டயர்ந்த, வேழத்தின் - யானையினது, புலால் நாறு - புலால் நாற்றத்தையுடைய, தலை மருப்பு ஏய்ப்ப - தலையிலுள்ள கொம்புகளைப்போல, கடை மணி சிவந்த - கடைமணிகள் சிவந்த, நின்கண் - உன்கண்கள் தாமும், கதவ - என்னிடத்தில் சினவா நின்றன, அல்ல - அவை மட்டுமல்ல, நலீணார் - பகைவர், அரண்தலை மதிலராகவும் - கோட்டையிடத்துத் தலைமதிலிடத்து வந்து போர்தாராகவும், முரசு கொண்டு - அவரது முரசவாத்தியத்தைக் கொண்டு, ஓம்பு அரண் கடந்த - அவராலே பாதுகாக்கப்பட்ட அரணையும் கைப் பற்றிய, அடுபோர்ச்செழியன் - போரில் கொல்லவல்ல பாண்டிய னது பெரும்பெயர்க்கூடல் அன்ன - பெரும் புகழினையுடைய மதுரையை ஒத்த, நின் கரும்புடைத் தோளும் - தொய்யிற் கரும்பு திட்டப் பெற்றதாய் விளங்கும் உன்னுடைய தோள்களும், உடைய - என்னை வருத்துதலையுடையன காண்.

முடிபு : அணங்கே, பெரும்பெயர்க்கூடலன்ன நின் கரும் புடைத் தோளும் உடைய.

கருத்து : என்னை மறுக்காமல் ஏற்றுக்கொண்டு என் குறையை நீக்குவாயாக என்பதாம்.

அ.ள் : யாழ : அசைநிலை, "கொடியோர் நல்காராயினும் யாழ நின்" (குறுந். செய். 367) "மியா, இக மோ மதி அத்தை இத்தை, வாழிய மாள ஈ யாழ முன்னிலை அசை" (நன். இடை. சூ.21) ஏய்ப்ப - போல, கதம் - சினம், கரும்பு - மன்மதனதுவில்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - ஆற்றாமையுணர்த்தல்.

இதனுள் தழீக்கொண்டது என்றது மெய்தொட்டுப் பயிறலை. சிலகூறில் என்றது பொய் பாராட்டலை. நாணுதி என்றது இடையூறு கிளத்தலை. தாங்குதல் எளிதோ என்றது நீடுநினைந்து இரங்கலை.

ஒப்புமைப்பகுதி

3. கைம்மிகல்

"செய்வினை கைம்மிக எண்ணுதி" (குறுந். 63:2)
(கலி. 46:23, 58:7. 107:24)

4-7 களிறு புலியைத் தாக்குதல்

"சிறுகட் பெருங்களிறு வயப்புலி தாக்கி"

(குறுந். 88:2-3, 141:4-5, 343:1-3) (மலைபடு. 307:9)

5-6 செங்கோட்டியானை

"செங்கோல் அம்பிற் செங்கோட்டியானை" (குறுந். 1:2)

"பொருதிகல் புலி போழ்ந்த பூநுதலெழில் யானைக்
குருதிக் கோட்டழிகறை தெளிபெறக் கழீஇயின்று"

(பரி. 20:4-5)

"மறமிகுவேந்தன் மாறுகொள் மைந்தினால்
புகர்நுதல் புண்செய்த புய்கோடுபோல" (கலி. 53:3-5)

7-11 கண்ணுந் தோளும் கதவ

"கண்ணுங் கதவ நின்முலையே
முலையினும் கதவநின் தடமென் றோளே"

(ஐங். 361) (கலி. 57-19)

# 40. மருதம்

## பரத்தை கூற்று

நெடுநா ஒள்மணி கடிமனை இரட்டக்
குரையிலைப் போகிய விரவுமணற் பந்தர்ப்
பெரும்பாண் காவல் பூண்டென ஒருசார்த்
திருந்திழை மகளிர் விரிச்சி நிற்ப
5 வெறியுற விரிந்த அறுவை மெல்லணைப்
புனிறுநாறு செவிலியொடு புதல்வன் துஞ்ச
வையவி அணிந்த நெய்யாட்டு ஈரணிப்
பசுநெய் கூர்ந்த மென்மை யாக்கைச்
சீர்கெழு மடந்தை ஈர்இமை பொருந்த
10 நள்ளென் கங்குல் கள்வன் போல
அகன்துறை ஊரனும் வந்தனன்
சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே.

எ-து: *தலைமகட்குப் பாங்காயினார் கேட்பப் பரத்தை சொல்லியது.*

## வேண்மா நெடுங் கோட்டனார்

ப-ரை : கடிமனை - காவலையுடைய மாளிகையில், நெடுநா - பெரிய நாவையுடைய, ஒள்மணி - ஒள்ளியமணி, இரட்ட - ஒலிக்க, குரை - ஒலிக்கின்ற இலை, தென்னங்கீற்றால், போக்கிய - மிடைந்து புனைந்து, விரவு மணல் பந்தர் - மணல் பரப்பிய பந்தரில், ஒருசார் பெரும்பாண் - முன்பு பெரியபாணர் தலைவனைச் சூழ்ந்து, காவல் பூண்டுஎன - காவலை மேற் கொண்டாற்போல, திருந்திழை மகளிர் - திருந்திய அணிகளை அணிந்த மகளிர், விரிச்சி நிற்ப - இப்பொழுது நன்னிமித்தமாகச் சூழ்ந்து நிற்ப, வெளியுற விரிந்த - நறுமணம் அமையுமாறு மணம் சேர்த்து விரிக்கப் பெற்ற, அறுவை மெல்லணை - மென்மையான அணையின்மீது, செவிலியொடு - செவிலியுடனே, புனிறுநாறு - ஈன்றதன் அணிமைமணம் மணக்கின்ற, புதல்வன் துஞ்ச - புதல்வன் உறங்க, ஐயவி அணிந்த - வெண்கடுகை அப்பிய, நெய்யாட்டு ஈரணி - எண்ணெய் தேய்த்து முழுகிய நீராட்டி னாலே ஈரமான அணியையுடைய, பசுநெய் பூசிய - குளிர்ந்த நெய்பூசிய, கூர்ந்த - மிக்க, மென்மையாக்கை - மென்மையாகிய உடம்பினையும், சீர்கெழு மடந்தை - அழகுடைய அவன் மனைவி தான், ஈரிமைபொருந்த - இரண்டு இமைகளும் ஒன்றோடொன்று பொருந்த உறங்கா நிற்ப, அகன்துறை ஊரனும் - அகன்ற நீர்த் துறையையுடைய ஊரனும், சிறந்தோன் பெயரனும் - சிறந்த தந்தை பெயரனாகிய தன்மைந்தன், பிறந்தமாறு - பிறந்ததனால், நள்ளென் கங்குல் - நள் என்னும் ஒலியையுடையதான இரவின் நடு யாமத்திலே, கள்வன்போல - திருடனைப்போல, வந்தனன் - வந்தான்.

முடிபு : அகன்றுறை ஊரனும் நள்ளென் கங்குல் கள்வன் போல வந்தனன்.

கருத்து : தலைவன் புதல்வனைப் பார்க்க வந்தானே அன்றி, தலைவியிடத்து அன்புகொண்டு வரவில்லை என்பதாம்.

அ-ள் : கடி - காவல். கடி: விரிச்சொல். குரை - ஒலி. அசைச் சொல்லாகவும் கொள்ளலாம். விரிச்சி - நிமித்தம். அறுவை - ஆடை. ஐயவி - வெண்கடுகு.

மெய்ப்பாடு - பிறன்கட்டோன்றிய எள்ளல் பொருட்டாக வந்த நகை.

பயன் :- தலைமகனை இயற்பழித்தல்.

நயம் : வருவதைப் பரத்தையர் காணில் பலர்கொள் பலகைபோலப் பற்றியீர்த்தலும் ஈர்ப்பர் என்றாள்.

இனி இப் பாட்டு முன்பு வருங்காலத்து வாராது மைந்தன் பிறந்ததனால் வந்தானெனத் தோழி கூறியதாகக் கூறினும் அமையும்.

ஒப்புமைப்பகுதி

விரிச் சிநிற்றல்

''புள்ளும் ஓராம் விரிச்சியும் நில்லாம்'' (குறுந். 218: 3)
''நெல் நீர் எறிந்து விரிச்சி ஓர்க்கும்'' (புறநா. 280: 6)

## 41. பாலை

### தோழி கூற்று

பைங்கண் யானைப் பருஉத்தாள் உதைத்த
வெண்புறக் களரி விடுநீறு ஆடிச்
சுரன்முதல் வருந்திய வருத்தம் பைபயப்
பார மலிசிறு கூவலிற் றணியும்
5 நெடுஞ்சேண் சென்று வருந்துவர் மாதோ
எல்லி வந்த நல்லிசை விருந்திற்குக்
கிளரிழை அரிவை நெய்துழந்து அட்ட
விளர்ஊன் அம்புகை எறிந்த நெற்றிச்
சிறுநுண் பல்வியர் பொறித்த
10 குறுநடைக் கூட்டம் வேண்டு வோரே.

எ-து. பிரிவு உணர்த்தப்பட்டு ஆற்றாளாய தலைமகனைத் தோழி உலகியல் கூறி வற்புறுத்தியது.

இளந்தேவனார்

ப-ரை : கிளர் இழை அரிவை - சிறந்த ஆபரணங்களை அணிந்த தலைவியே, எல்லி வந்த - இரவில் வந்த, நல்இசை - நல்ல புகழையுடைய, விருந்திற்கு - விருந்தினர்களுக்கு, நெய் யுழந்து - உண்பதற்காக வேண்டி நீ நெய்யை அளாவவிட்டு, விளர்ஊன் - கொழுவிய தசையை, அட்ட - சமைத்ததனால் உண்டான, அம்புகை எறிந்த - அழகிய புகை படிந்த, நெற்றி - நெற்றியின்கண், சிறுநுண் - சிறிய நுண்ணிய, பல்வியர் - பல வியர்வை நீர், பொறித்த - தோன்றப்பெற்ற, குறுநடை - குறுகிய

நடையோடு சென்ற, கூட்டம் - நின்புணர்ச்சியை, வேண்டுவோர் - அக்காலத்தில் விரும்பினவர், பைங்கண் - பசுமையான கண்களை யுடைய, யானை - யானையானது, பருஉத்தாள் உதைத்த - தனது பருத்த காலால் உதைத்ததனால் பொடிபட்ட, வெண்புறக் களரி-வெண்மையான மேற்புறத்தையுடைய பாழ் நிலத்திலுள்ள, விடுநீறு ஆடி - விடுபுழுதியில் மூழ்கப்பெற்ற, சுரன் முதல் - சுரத்தின் கண் வந்து, வருந்திய வருத்தம் - வருந்திய வருத்தம் எல்லாம், பைபய - மெல்லநடந்து, பாரம் மலிசிறு - பருத்திகள் சூழ முளைத்திருக்கின்ற சிறிய, கூவலின் - கிணற்றின் அருகில் சென்று, தணியும் - தணித்துக்கொள்ளா நிற்கும், நெடுஞ்சேண் சென்று - நெடுந்தொலைவு சென்று, வருந்துவர் - வருந்தா நிற்பர் போலும்; (அங்ஙனம் சென்று வருந்துவதும் பின்பு உன்னோடு இல்லறம் நடத்துவதற்கு அன்றோ? இதனை நீ அறியாயல் வருந்துவது என்ன,

முடிபு : கிளரிழை அரிவை நெடுஞ்சேண் சென்று வருந்துவர்.

கருத்து : அவர் வருந்துவது இல்லறம் நடாத்தி, விருந்து ஓம்பி புகழ் அடைதற் பொருட்டே ஆகும் என்பதாம்.

அ-ள் : நீறு - புழுதி. பாரம் - பருத்தி. விளர் - கொழுப்பு.

மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

*1 - 2* புஞ்சப் பூழி

களிறு காலுதைத்த புஞ்சப் பூழியொடு (பெருங். *1:33:85*)

*3.* பைபய

"படரும் பைபயப் பெயரும் சுடரும்" (குறுந். *215: 1*)
(ஐங். *83: 1, 113: 5*)

*7 - 10* "குவளை உண்கண் குய்ப்புகை கமழத்
தான் துழந்துஅட்ட தீம்புளிப் பாகர்."
(குறுந். *167: 3-4*)

*8 :* "விளருன் தின்ற வெம்புலால் மெய்யா." (புறநா. *359: 5*)

# 42. முல்லை

## தலைவன் கூற்று

மறத்தற்கு அரிதால் பாக பன்னாள்
வறத்தொடு பொருந்திய உலகுதொழில் கொளீஇய
பழமழை பொழிந்த புதுநீர் அவல
நாநவில் பல்கிளை கறங்க நாவுடை
5 மணியொலி கேளாள் வாணுதல் அதனால்
ஏகுமின் என்ற இளையர் வல்லே
இல்புக்கு அறியுநர் ஆக மெல்லென
மண்ணாக் கூந்தல் மாசறக் கழீஇச்
சில்போது கொண்டு பல்குரல் அழுத்திய
10 அந்நிலை புகுதலின் மெய்வருத் துறாஅ
அவிழ்பூ முடியினள் கவைஇய
மடமா அரிவை மகிழ்ந்தயர் நிலையே.

எ-து. வினை முற்றி மீள்வான் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

கீரத்தனார்

ப-ரை: பாக - பாகனே, பன்னாள் - பல நாட்களாக, வறத்தொடு பொருந்திய - நீர் இல்லாமல் கோடையில் வறட்சியுற்ற, உலகு - உலகத்திலுள்ள உயிர்கள். தொழில் கொளீஇ - தத்தம் தொழிலை மேற்கொள்ளும்படி, பழமழை பொழிந்த - தொன்மை வாய்ந்த மழையும் பெய்ததனால் ஏற்பட்ட, புதுநீர் - புதிய நீர் நிரம்பிய, அவல் - பள்ளங்கள் தோறும், நாநவில் - நாவினால் ஒலிக்கின்ற, பல்கிளை - பலவாய கூட்டத்தையுடைய தவளைகள், கறங்க - சப்திக்கின்றதாலே (நாம் செல்லுகின்ற தேரில் கட்டப்பட்ட, நாவுடை மணி ஒலி - நாவினையுடைய மணிகளின் ஒலியை, வாணுதல் - ஒளிபொருந்திய நெற்றியை யுடைய நமது தலைவி, கேளாள் - கேட்கவில்லை. அதனால், ஏகுமின் என்ற - நீயிர் முன்னே சென்று நம்வரவைக் கூறுங்கள் என்றபடி அக்கட்டளையேற்ற, இளையர் - இளையரும், வல்லே - விரைவாக, இல்புக்கு - மனைக்கண் புகுந்து, அறியுநர் ஆக - அறிவித்தனர். மெல்லென - மெதுவாக, மண்ணாக் கூந்தல் - அதுகாறும் சீவப்படாத கூந்தல், மாசற கழீஇ - அழுக்குப் போக நீராடி, சில்போது கொண்டு - சில மலர்களைக் கொண்டு, பல்குரல் அழுத்திய - பலவாய கூந்தலிலே முடிக்கின்ற, அந்நிலை - அத் தருவாயில், புகுதலின் - யான் உள்ளே புகுதலும், மெய்

வருத்துறா - என்னைப் பார்த்து மெய் வாட்டமடைய வந்து, அவிழ்பூ முடியினள் - அவிழ்ந்து குலையும் முடியினளாய், கவவிஇய - என்னை அணைத்துக்கொண்ட, மடமா - மடப்பத்தையுடைய சிறந்த, அரிவை - நமது தலைவி, மகிழ்ந்தயர் நிலை - மகிழ்ச்சி அடைந்து கொண்டாடும் தன்மையை, மறத்தற்கு அரிது - என்னாலே மறக்க முடியாததாகும். அதனால் விரைவாகச் செல்வோம்.

பி-ம். 3. புதுநீரரவத்து

முடிபு: பாக, வாணுதல் மணியொலி கேளாள், ஏகுமின் என்ற இளையா இல்புக்கு அறியுநராக, மெய்வருத்துறா அவிழ்பூ முடியினள், மடமா அரிவை மகிழ்ந்தயர் நிலை மறத்தற்கு அரிது.

கருத்து: அவளது அந்தச் செவ்விய நிலை என்னாலே மறக்கற்பாலதன்று. ஆகவே தேரினை விரைவாகச் செலுத்து வாயாக என்பதாம்.

அ-ள்: உலகு - இடவாகுபெயர். அவல் - பள்ளம். அறியுநர் என்ற பெயரெச்சம் ஏதுப்பொருளில் வந்தது. அறியுநர் - அறிவிக்குநர். விவ்விகுதி தொக்கது. போது - மலர். குறல் - கூந்தல். கவைஇய - அணைத்த. 'இது தானுற்ற இன்பத்தினைப் பாகற்குக் கூறியது' என்பர் நச்சினார்க்கினியர் (தொல். பொருள். சூ. 146. உரை) இளம்பூரணரும் "தானுற்ற இன்பத்தினைப் பாகற்குக் கூறுதற்கண்ணும்" என்னும் துறைக்கு மேற்கோள் காட்டியுள்ளார். (தொல். பொருள் சூ. 144-உரை)

மெய்ப்பாடு - உவகை.

பயன் - கேட்டபாகன் விரைந்து தேர்கடாவல்.

தலைவன் இல்வழி தலைவி தன்னைப் புனையாளாகலின் மண்ணாக்கூந்தல் என்றான். இதனால் கற்பு மிகுதி கூறப்பட்டது.

# 43. பாலை

## தோழி கூற்று

துகில்விரித் தன்ன வெயில்அவிர் உருப்பின்
என்றூழ் நீடிய குன்றத்துக் கவாஅன்
ஒய்பசிச் செந்நா உயங்குமரை தொலைச்சி
ஆர்ந்தன ஒழிந்த மிச்சில் சேய்நாட்டு
அருஞ்சுரம் செல்வோர்க்கு வல்சி ஆகும்

வெம்மை யாரிடை இறத்தல் நுமக்கே
மெய்ம்மலி உவகை ஆகின்று இவட்கே
அஞ்சல் என்ற இறைகை விட்டெனப்
பைங்கண் யானை வேந்துபுறத் திறுத்தலின்
10 களையுநர்க் காணாது கலங்கிய உடைமதில்
ஓரெயில் மன்னன் போல
அழிவுவந் தன்றால் ஒழிதல் கேட்டே.

எ-து : பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைவனைச் செலவழுங்குவித்தது.

எயினந்தையார்

ப-ரை : துகில் விரித்து அன்ன - வெண்மையான ஆடையை விரித்தாற் போன்ற, வெயில் அவிர் உருப்பின் - வெயிலின் மிகுதியால் விளங்கிய வெப்பத்தையுடைய, நீடிய - சோலை நீடிய, குன்றத்துக் கவா அன் - மலைப்பக்கத்தில், ஒய்பசி - நுணுகிய பசியையுடைய, செந்நாய் இயங்குமரை - வாடிய மரையாவை, தொலைச்சி - கொன்று, ஆர்ந்தன ஒழிந்த - தின்று ஒழிந்த, மிச்சில் - எஞ்சிய பொருள், சேய்நாட்டு - நெடுந்தூரத்திலுள்ள வேற்றுநாட்டினின்றும், அருஞ்சுரம் செல்வோர்க்கு - செல்வதற்கு அருமையான பாலை நிலத்தில் செல்கின்றவர்களுக்கு, வல்சி ஆகும் - உணவாக ஆகும்; வெம்மை ஆடை - வெப்பம் மிக்க அரிய வழியில், இறத்தல் - செல்லுதல், நுமக்கு, மெய்ம்மலி உவகை - உடம்பு திளைக்கும் மகிழ்ச்சி, ஆகின்று - உடைத்தாகின்றது. இவட்கே - இவளுக்கோ என்றால், அஞ்சல் என்ற - நீவிர்விட்டுப் பிரிந்து போதலினாலே, அஞ்சேல் என்ற, இறை - துணையாக வந்த அரசனை, கை விட்டென - கைவிட்டுச் சென்றானாக, பைங்கண் - அப்பொழுது பசிய கண்களையுடைய, யானை-யானைப் படையையுடைய, வேந்து - பகை அரசன், புறத்து இறுத்தலின் - தன்மதில்புறத்து வந்து தங்குதலும், களையுநர் காணாது - தனக்கு ஏற்பட்ட துன்பத்தைப் போக்குவரைக் காணாமல், கலங்கிய - கலக்கமுற்ற, உடை மதில் - உடைந்த ஒரு மதிலை உடைய. ஓர்எயில் மன்னன் போல - ஒரு மதிலையுடைய அரசனைப்போல, அழிவு வந்தன்று அழிவும் வாராநின்றது. கேட்டு ஒழிதல் - ஆகவே ஏற்றது ஒன்றினைச் செய்வாயாக.

முடிபு : இவட்கே, அஞ்சல் என்ற இறைகை விட்டென உடைமதில் ஓரெயின் மன்னன்போல அழிவு வந்தன்று கேட்டு ஒழிதல்.

கருத்து : இவளைவிட்டுப் பிரிந்து சென்றால் இறந்து படுவாள் என்பதாம்.

அ-ள் : உருப்பு - வெப்பம். கவா அன் பக்கம். ஓய்பசி - நுட்ப மான பசி. வல்சி - உணவு. இறுத்தல் - தங்குதல்.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - செலவழுங்குவித்தல்.

ஒரு மதில் உறுப்பையுடைய அரசன் அதனைக் கைவிட்டு அகன்று வேறொரு இடத்திற்குச் சென்று வாழ்வதற்கும் போக்கற்ற நிலையினையுடையவனாக ஆகின்றான். அதுபோலவே இவ்வுடலைப் பசலைக்கு உணவாகக் கொடுத்த தலைவியின் உயிரும் வேறொரு அடைக்கலம் காணாமல் சென்று அழியும் என்கின்றனள்.

நாய் தின்று எஞ்சிய தசை வழிநடைச் செல்வார்க்கு உண வாகும் என்றது, தலைவன் உண்டு எஞ்சிய தலைவியின் எழில் பசலைக்கு உணவாயிற்று என்னும் குறிப்பினது.

ஒப்புமைப்பகுதி

1 : உருப்பு

"உரி நிமிர்ந்தன்ன உருப்பவிர் அமையத்து" (குறுந். 154: 2)
(குறிஞ்சி. 45) (அகநா. 11: 2) (பு. வெ. 255)

3-4 : வேட்டச் செந்நாய் உண்ட மிச்சில்

"வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்" (குறுந். 56: 1)
(பெருங். 1, 52:75-6,) (குறுந். 141:6)
(மலைபடு. 338) (கலி. 83: 1)

7: மெய்ம்மலி உவகை

"மெய்ம்மலி உவகையின் எழுதரும்" (குறுந். 398)
(கலி. 40: 32) (அகநா. 262: 12-13. 272, 12)
(புறநா .45: 9)

# 44. குறிஞ்சி

## தலைவன் கூற்று

பொருஇல் ஆயமொடு அருவி ஆடி
நீர்அலைச் சிவந்த பேரமர் மழைக்கண்
குறியா நோக்கமொடு முறுவல் நல்கி
மனைவயின் பெயர்ந்த காலை நினைஇய
5 நினக்கோ அறியுநள் நெஞ்சே! புனத்த
நீடிலை விளைதினைக் கொடுங்கால் நிமிரக்
கொழுங்குரல் கோடல் கண்ணிச் செழும்பல
பல்கிளைக் குறுவர் அல்கயர் முன்றில்
குடக்காய் ஆசினிப் படப்பை நீடிய
10 பல்மர உயர்சினை மின்மினி விளக்கத்து
செல்மழை இயக்கம் காணும்
நன்மலை நாடன் காதல் மகளே.

எ-து: இற்செறிப்பின் பிற்றைஞான்று தலைமகள் குறியிடத்து வந்து சொல்லியது.

பெருங்கௌசிகனார்

ப-ரை: நெஞ்சே!, புனத்த - கொல்லையிலுள்ள நீடிலை - நீண்ட இலையையுடைய, விளைதினை - விளைந்து முற்றிய தினைப்பயிரின், கொடுங்கால் - வளைந்ததாள், நிமிர - நிமிர்ந்து நிற்குமாறு, கொழுங்குரல் - அவற்றின் முற்றிய கதிர்களை, கோடல் - கொய்து கொண்டு, போதலைக் கருதி, செழுப்பல - செழுமையான, பல்கிளை குறவர் - பல்வேறு உறவினர்களையுடைய குறவர்கள், அல்கயர் முன்றில் - சிறுவர் தங்கி விளையாடும் முற்றிலின்கண் இருந்து, குடக்காய் ஆசினி - குடம் போன்ற பருத்த காய்களைக்கொண்ட ஆசினிப் பலாவையுடைய, படப்பை - தோட்டத்தில், நீடிய - நீண்ட, பல்மர - பல மரங்களின், உயர்சினை - உயர்ந்த கிளைகளிலுள்ள, மின்மினி விளக்கத்து - மின்மின்பூச்சியை விளக்காகக்கொண்டு, செல்மழை - ஆகாயத்தில் செல்லும் மழை முகிலின், இயக்கத்து- இயக்கத்தை, காணும் - காண்கின்ற, நன்மலை நாடன் - நல்ல மலை நாடனது, காதல் மகள் - அன்புள்ள மகள், பொருஇல் - ஒப்பில்லாத, ஆயமொடு - தோழியர்களோடு, அருவியாடி - அருவியில் நீராடி, நீரலை - நீர் அலைக்கப்படுதலாலே, சிவந்த - அதனால் சிவந்த, பேரமர் மழைக்கண் - பெரிய அமர்த்த

குளிர்ச்சியையுடைய கண்களின், குறியா நோக்கமொடு - குறிப்பிட்ட நோக்கத்தோடு, முறுவல் நல்கியும் - புன்னகையையும், நல்கி - தந்து, மனைவயின் பெயர்ந்த காலை - தன் மனையிடத்துச் சென்ற பிறகு, நினைஇய நினக்கோ - அவளைக் கருதி வந்த உன்னாலோ, அறியும் - அவர் அறிந்து துணையாகக் கொள்ளத்தக்க எளியவள்?

முடிபு : நெஞ்சே, நினக்கோ அறியுநள்.

கருத்து : இவளை நீ பிரிந்தால் இவள் இறந்து படுவாள் என்பதாம்.

அ-ள் : முறுவல் - புன்னகை, கால் - தாள், குரல் - கதிர், படப்பை - தோட்டம், இயக்கம் - சஞ்சாரம்.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய அவலம்பற்றிய இளிவரல்.

பயன் - அயாவுயிர்த்தல்.

நயம் - குறவர் மின்மினியை விளக்காகக் கொண்டுமேகத்தின் செலவை நோக்கியிருத்தல் போல, நீயும் தோழி கூற்றால் தலைவியின் இயக்கத்தைக் காணமுயலுகின்றனை.

ஒப்புமைப்பகுதி

2. பேரமர் மழைக்கண்
"பேரமர் மழைக்கண் கொடிச்சி" (குறுந். 286:4)
(ஐங். 214;4) (அகநா. 326:2)
"பேரமர் உண்கண் இவளினும் பிரிக" (புறநா. 71:6)
(குறள். 1083)

# 45. நெய்தல்

## தோழி கூற்று

இவளே கானல் நண்ணிய காமர் சிறுகுடி
நீலநிறப் பெருங்கடல் கலங்க உள்புக்கு
மீனெறி பரதவர் மகளே நீயே
நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்க்
5 கடுந்தேர்ச் செல்வன் காதல் மகனே
நிணச்சுறா அறுத்த உணக்கல் வேண்டி

இனப்புள் ஓப்பும் எமக்குநலன் எவனோ
புலவு நாறுதும் செலநின் றீமோ
பெருநீர் விளையுளெஞ் சிறுநல் வாழ்க்கை
10 நும்மொடு புரைவதோ அன்றே
எம்ம னோரில் செம்மலும் உடைத்தே.

எ-து : குறை வேண்டிய தலைவனைத் தோழி சேட் படுத்தது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : இவள் - இவள்தான், கானல் நண்ணிய - கடற் கரைச் சோலையில் பொருந்திய, காமர் - அழகிய, சிறுகுடி - சிறிய குடியின் கண்ணே இருக்கின்ற, நீல்நிற - நீலநிறத்தை யுடைய, பெருங்கடல் - பெரிய கடலும், கலங்க - கலங்கு மாறு, உள்புக்கு - உள்ளே சென்று, மீன்எறி - வலைவீசி மீனைப் பிடிக்கின்ற, பரதவர் - பரதவரின், மகளே - பெண்ணே ஆவாள். நீயே - நீதானும், நெடுங்கொடி - நெடிய கொடிகள், நுடங்கு - காற்றால் அசைந்து நுடங்கும், நியம மூதூர் - நியமம் என்னும் மூதூர் இடத்தே, கடுந்தேர் செல்வன் - விரைவாகச் செல்லு கின்ற தேரையுடைய, செல்வத்தையுடைய மன்னனது, காதல் மகனே - அன்புடைய மகனாய் இருக்கின்றனை, நிணச்சுறா - கொழுப்பினையுடைய சுறாமீனை, அறுத்த - அறுத்திட்ட, உணக்கல் வேண்டி - தசைகளைக் காய வைக்க வேண்டி வெயிலில் போட்டு, இனப்புள் ஓப்பும் - அவற்றைக் கவர வந்த காக்கைகளை ஓட்டிப் பாதுகாக்கின்ற, எமக்கு, நலன் எவனோ - நலன் என்பதும் யாதாகுமோ?, புலவு நாறுதும் - யாம் புலால் நாற்றம் நாறுகின்றேம், செல நின்றீமோ - ஆதலால் எம் பக்கம் வராதே அகன்று போய் நிற்பாய், பெருநீர் விளையுள் - கடலின் நீரை விளை வயலாகக் கொண்ட, எம்சிறு நல்வாழ்க்கை - சிறிய நல்ல வாழ்க்கையானது. நும்மொடு புரைவதோ அன்று - நும்மொடொக்க உயர்வுடைத்தன்று, எம்மனோரில் - எம் போன்ற பரதவரில், செம்மலும் உடைத்து - நின்போன்ற செல்வ முடையவர்களும், உடைத்து - எம்மரபில் உள்ளனர்.

முடிபு : நும்மொடு புரைவதோ அன்றே, எம்மனோரில் செம்மலும் உடைத்து.

கருத்து : எமக்கு ஏற்றவன் நீயன்றாதலின் எம்பக்கலில் வராமல் அகன்று செல் என்பதாம்.

அ-ள் : கானல் - கடற்கரைச்சோலை. நியமம் - ஓர் ஊர். புள் - காக்கை.

மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்.
பயன் - செவ்வி பெறுதல்.

கடலைக் கலக்கும் வன்மையர் என்றது எமர் கொடியர் நின்னைக் காணின் துன்புறுத்தவர் என்றபடி.

மீனெறி மாக்கள் என்றது உயிர்க்கொலை செய்யும் இயல்பினர், எனவே நினக்கு இரங்கார் என்றபடி.

ஒப்புமைப்பகுதி

1. கானல் நண்ணிய சிறுகுடி
"கானல் நண்ணிய சிறுகுடி முன்றில்" (குறுந்.228:3)

2. நீலநிறப் பெருங்கடல்
"நீனிறப் பெருங்கடல் புக்கனன்" (குறுந். 269:4)

# 46. பாலை

## தோழி கூற்று

வைகல் தோறும் இன்பமும் இளமையும்
எய்கணை நிழலின் கழியுமிவ் வுலகத்துக்
காணீர் என்றலோ அரிதே அதுநனி
பேணீர் ஆகுவீர் ஐயஎன் தோழி
5 பூணணி ஆகம் புலம்பப் பாணர்
அமிர்ப்புக் கொண் டன்ன கொன்றையம் தீங்கனி
பறையறை கடிப்பின் அறையறையாத் துயல்வர
வெவ்வளி வழங்கும் வேய்பயில் அழுவத்து
எவ்வம் மிகூஉம் அருஞ்சுரம் இறந்து
10 நன்வாய் அல்லா வாழ்க்கை
மன்னாப் பொருட்பிணிப் பிரிதும்யாம் எனவே.

எ-து : பிரிவு உணர்த்திய தலைமகற்குத் தோழி சொல்லியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : ஐய - ஐயனே. என் தோழி - எனது தோழியின் பூண் அணி ஆகம் - அணிகலன்கள் அணிந்த மார்பகம், புலம்ப -

தனியே இருந்து வருந்த, கொன்றையம் தீங்கனி - கொன்றையின் இனிய சுவையையுடைய கனிகள், பாணர் - பாணரென, அயிர்ப்பு கொண்டு அன்ன - ஐயங்கொள்ளும்படியவாய், பறையறை கடிப்பின் - தமது பறையை முழக்கும் குறுந்தடி போல, அறை அறையா துயல்வர - பாறையில் விழும்படி கிளைகள் மிகவும் துவண்டு ஆட, வெவ்வளி வழங்கும் - வெட்பம் மிகுந்த காற்று வீசுகின்ற, வேய்பயில - மூங்கில்கள் மிகுந்த, அழுவத்து - இடத்தையுடைய, எவ்வம் மிகூஉம் - துன்பம் மிக்குள்ள, அருஞ்சுரம் - செல்லுதற்கு அருமையான பாலை நிலத்தை, இறந்து - கடந்து, நன்வாய் அல்லா - நன்மையில்லாத, வாழ்க்கை - வாழ்விற்குரிய, மன்னா - நிலையற்ற, பொருள் பிணி - பொருள் ஈட்டுவதற்கு பிணித்த உள்ளத்தோடு, பிரிதும் யாம் என - யாம் பிரிதும் என்று நீர் கூறுதலாலே, இவ்வுலகத்து வைகல்தோறும் - இவ்வுலகத்தில் நாள்தோறும், எய்கணை நிழலின் - எய்யப்பட்ட அம்பு சென்று இலக்கிலேபடும் அளவும் அவ்வம்பு செல்லும் நிழல் எவ்வண்ணம் விரைவில் அழியுமோ அவ்வண்ணம், இன்பமும் இளமையும், கழியும் - கழியா நிற்கும், காணீர் என்றலோ அரிது - அவற்றைக் காணவில்லையென்றால் அரிதாகும். அது நனி பேணிர் ஆகுவீர் - ஆதலின் அதனை நன்றாகப் பேணுகின்ற தன்மையுடையவராக ஆவீராக.

முடிபு: ஐய, வைகல்தோறும் இன்பமும் இளமையும் எய்கணை நிழலின் கழியும் காணீர் என்றலோ அரிது, அது நனி பேணிர் ஆகுவிர்.

கருத்து: இவளை விட்டுப்பிரிதல் அறத்திற்குப் பொருந்தாத செயல் என்பதை அறிவீர் என்பதாம்.

அ-ள்: வைகல் - நாள், புலம்பு - தனிமை, "புலம்பே தனிமை" (தொல். உரி. சூ. 33) துயல்வரல் - அசைந்தாடல்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - செலவழுங்குவித்தல்.

இளமை கழிந்த பின் பெற்ற பொருளாற் பயன் என்னை? என்றவாறு.

கைக்குவரும் இன்பத்தை விட்டு நிலையாப் பொருள் ஈட்டுதல் அழகன்று என்றாள்.

ஒப்புமைப்பகுதி

2. கணை வேகத்திற்கு

"வில்லுமிழ் கணையிற் சென்று சேட்படவே"
(குறுந். 231:6) (பெருங். 1,48:8) (சீவக. 502,701)

11. பொருட்பிணி

"காமர் பொருட்பிணி போகிய" (குறுந். 255:7, 344:7)
(ஐங். 355:12) (கலித். 4:25)
(அகநா. 43:14, 51:8)

நிலையாப் பொருட்பிணி

"நிலையாப் பொருட்பிணி பிரிந்திசினோரே" (குறுந். 350:8)
(கலி. 8:11, 14:1) (அகநா. 79:17)

பொருட் பிரிவு இளமை இன்பத்தைக் கெடுக்கும்

"இறப்பல் என்பது ஈண்டு இளமைக்கு முடிவே"
(குறுந். 126:1, 151:6) (கலி. 18:7-3)

# 47. குறிஞ்சி

## தோழி கூற்று

பெருங்களிறு உழுவை அட்டென இரும்பிடி
உயங்குபிணி வருத்தமொடு இயங்கல் செல்லாது
நெய்தல் பாசடை புரையும் அம்செவிப்
பைதலம் குழவி தழீஇ ஒய்யென
5 அரும்புண் உறுநரின் வருந்தி வைகும்
கானக நாடற்கு இதுவென யானது
கூறின் எவனோ தோழி வேறுணர்ந்து
அணங்கறி கழங்கிற் கோட்டம் காட்டி
வெறியென உணர்ந்த உள்ளமொடு மறியறுத்து
10 அன்னை அயரும் முருகுநின்
பொன்னேர் பசலைக்கு உதவா மாறே.

எ-து : சிறைப்புறமாகத் தோழி தலைமகளுக்கு உரைப்பாளாய்ச் சொல்லியது.

நல்வெள்ளியார்

ப-ரை : தோழி! வேறு உணர்ந்து - தலைவனைப் பிரிந்த தனால் ஏற்பட்ட வேறுபாட்டைப் பிறிது ஒன்றாகக் கருதி, அணங்கு அறி - தெய்வத்தால் அறியப்படுகின்ற, கழங்கின் - கழங்கில், கோட்டம் காட்டி - மாறுபாட்டைக் காட்டுதலாலே, வெறி என உணர்ந்த - வெறியாட்டு எடுத்தலாலே தீரும் என்று அறிந்த, உள்ளமொடு - உள்ளத்துடனே, மறி அறுத்து - ஆட்டை அறுத்து, அன்னை அயரும் - தாயினால் வணங்கப்படுகின்ற, முருகு - முருகவேள், நின் பொன் நேர் பசலைக்கு - உன் பொன் போன்ற பசலையை, உதவாமாறு - போக்குவதற்கு உதவாமை யினாலே, உழுவை - புலியானது, பெருங்களிறு - பெரிய ஆண் யானையை, அட்டு என - கொன்றதே என்று, இரும்பிடி - கரிய பெண் யானை, உயங்குபிணி - வாடிய துன்பத்தோடும், வருத்தமொடு - வருத்தத்தோடும், இயங்கல் செல்லாது - அகன்று செல்ல மாட்டாமல், நெய்தல் - நெய்தலின், பாசடை புரையும் - பசுமையான இலையை ஒத்து இருக்கின்ற, அம்செவி - அழகிய காதுகளையுடைய, பைதலங் குழவிதழீஇ - துன்ப மடைந்துள்ள தன் கன்றினை அணைத்துக்கொண்டு, ஒய்யென - விரைவாக, அரும்புண் உறுநரில் - தீர்த்தற்கரிய புண் உற்றாரைப் போல, வருந்தி வைகும் - வருத்தமுற்று இருக்கும், கானக நாடற்கு - கானக நாடனை நெருங்கி, இது என யான் அது கூறின் - நீ தலையளி செய்யாமை நிமித்தமாக இப்பசலை தோன்றிற்று என்பதை அறிவாய் என்று, யான் அதனைச் சொன்னால் எவன்? - அதனால் ஏதேனும் குற்றம் உண்டாமோ? அதனைக் கூறுவாயாக.

முடிபு : தோழி. கானக நாடற்கு இதுவெனயானது கூறின் எவனோ?

கருத்து : விரைவாக வந்து மணந்து கொள்ளும்படி தலைவனை வற்புறுத்துவோம் என்பதாம்.

அ-ள் : உழுவை - புலி. அஞ்செவி - அகஞ்செவி. பைதல் - வருந்துதல், ஒய்யென - விரைவாக, கோட்டம் - மாறு பாடு. காட்டி - காட்ட எனத்திரிக்க. முருகு - பன்பாகுபெயர்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - வரைவுடன்படுத்தல்.

ஒப்புமைப்பகுதி

3. பாசடைக்குக் களிற்றுச்செவி

"களிற்றுச் செவியன்ன பாசடை மயக்கி" (குறுந். 246:2)
"களிற்றுச் செவியன்ன பாசடை மருங்கின்" (அகநா. 176:4)
"பெருங்களிற்றுச் செவியின் அலைக்கும்" (அகநா. 186;4-6)

# 48. பாலை

## தோழி கூற்று

அன்றை அனைய வாகி இன்றும்எம்
கண்ணுள போலச் சுழலும் மாதோ
புல்லிதழ்க் கோங்கின் மெல்லிதழ்க் குடைப்பூ
வைகுறு மீனின் நினையத் தோன்றி
5 புறவணி கொண்ட பூநாறு கடத்திடைக்
கிடின்என இடிக்கும் கோல்தொடி மறவர்
வடிநவில் அம்பின் வினையர் அஞ்சாது
அமரிடை உறுதர நீக்கிநீர்
எமரிடை உறுதர ஒளித்த காடே.

எ-து : பிரிவுணர்த்திய தலைமகற்குத்தோழி சொல்லியது.

பாலை பாடிய பெருங்கடுங்கோ

ப-ரை : புல் இதழ் - புல்லிய புற இதழ்களையுடைய, கோங்கின் - கோங்கமரத்தினுடைய, மெல் இதழ் - மென்மையான இதழ் மிக்க, குடைப்பூ - குடையைப்போன்ற பூக்கள் எல்லாம். வைகுறு - வைகறைப் பொழுதில், மீன்என - ஆகாயத்தில் விளங்குகின்ற மீன்களாம் என, நினையத் தோன்றிய - கருதும்படி தோன்றுகின்ற, புறவு அணி கொண்ட - காடு எங்கும் அழகு அமைந்த, பூநாறு கடத்திடை - மலர் மணம் வீசும்படியிருந்த கல் நெறியிலே, கிடின் என இடிக்கும் - 'கிடின்' என்னும் ஓசை யுண்டாக மோதுகின்ற, கோல் தொடி மறவர் - வீரவளைகள் அணிந்த மறவர் வடிநவில் அம்பின் வினையர் - கூர்மையுடைய அம்பினால் செய்யும் கொடுந்தொழிலையுடையராய், அஞ்சாது - பயப்படாமல், அமரிடை உறுதர நீக்கி - உம்மோடு போர்செய்ய வந்த பொழுது அவரைவென்று போக்கி, நீர் எமர் இடை-நீர் எம் ஐயன்மார் எங்களைத்தேடி, உறுதர-பின்தொடர்ந்து வருதலும்,

ஒளித்த காடு - எங்களைவிட்டுச் சென்று மறைந்துகொண்ட காடு, அன்றை அனையவாகி - அற்றை நாளைப்போன்ற நிலையதாகி, இன்றும் எம்கண்ணுள்போல - இன்றைய நாளிலும் எம் கண்ணிடத்தே இருப்பதுபோல, சுழலும் - தோன்றிச் சுழலாநிற்கும்.

முடிபு : கோற்றொடி மறவர் அஞ்சாது அமரிடை உறுதர நீக்கி, நீரளமரிடை உறுதர ஒளித்த காடு. அன்றை அனையவாகி இன்றும் எங்கண்ணுள் போலச் சுழலும்.

கருத்து : நும்மைத் துணையாக நினைத்துவந்த எங்களை அருளில்லாமல் பிரிதல் நல்லதன்று.

அ-ள் : மாது, ஓ. அசைற்சொற்கள். புல் - அற்பம். வைகுறு - வைகறை. "வைகுறுவிடியல்" கடம் - காடு. "கடத்திடைக் கணவனை இழந்த" (பு. வெ. 10.)

மெய்ப்பாடு - அச்சம் சார்ந்த பெருமிதம்.

பயன் - செலவழுங்குவித்தல்.

## 49. நெய்தல்

### தோழி கூற்று

படுதிரை கொழீஇய பால்நிற எக்கர்த்
தொடியோர் மடிந்தெனத் துறைபுலம் பின்றே
முடிவலை முகந்த முடங்கிறாப் பாவைப்
படுபுள் ஒப்பலின் பகல்மாய்ந் தன்றே
5 கோட்டுமீன் எறிந்த உவகையர் வேட்டமடிந்து
எமரும் அல்கினர் ஏமார்ந்த தனமெனச்
சென்றுநா மறியின் எவனோ தோழி
மன்றப் புன்னை மாச்சினை நறுவீ
முன்றில் தாழையொடு கமழும்
10 தெண்கடற் சேர்ப்பன்வாழ் சிறுநல் லூர்க்கே.

எ-து 1. தோழி தலைமகனை இரவுக்குறி நயப்பித்தது. 2. சிறைப்புறமாகத் தோழி ஆற்றாமை வியந்ததூஉமாம்.

நெய்தல் தத்தனார்

ப-ரை : தோழீ; முன்றில் மன்றப் புன்னை - பரதவர் முன்றிலில் உள்ள பலர் கூடும் மன்றம்போல் அமைந்த புன்னை

யின், மாசினை - கரிய கிளைகளிலுள்ள, நறுவீ - மணமுள்ள மலர், தாழையொடு - தாழை மடலோடுகூடி, கமழும் - மணம் வீசும், தெண்கடல் சேர்ப்பன் - தெளிந்த கடல் துறைவன், வாழ் சிறுநல் ஊர்க்கு வாழ்கின்ற சிறிய நல்ல ஊரிற்குச் சென்று, படுதிரை கொழீஇய - கடலிலுள்ள பெரிய அலைகளாலே கொழிக்கப்பட்ட, பால்நிற எக்கர் - பால்போலும் வெண்மை யான நிறத்தையுடைய, மணல்மேட்டில் தொடியோர் மடிந்து என - பரத்தியர் எல்லோரும் மனையிடத்து தூங்குகின்ற மையாலே, துறை புலம்பின்று - கடற்றுறை தனிமையுற்று விளங்குகின்றது; முடிவலை - முடித்தலையுடைய வலைகளால், முகந்த - கடலிலிருந்தும் வாரி எடுக்கப்பட்ட, முடங்கு - முடங்கு தலையுடைய, பாவை இறால் - பாவையைப் போன்ற இறால் மீன்களைக் காயவிட்டு, படுபுள் ஓப்ப - அவற்றைக்கொத்த வருகின்ற காக்கைகளை ஓட்டியிருத்தலினாலே, பகல் மாய்ந்தன்று - பகற்பொழுதும் ஒரு வழியாகக் கழிந்தது. கோட்டுமீன் எறிந்த - திரண்ட கொம்புகளைக்கொண்ட சுறா மீன்களைப் பற்றிக் கொணர்ந்த, உவகையர் - மகிழ்ச்சியுடையவ ராக, எமரும் - எம் ஐயன்மாரும், வேட்டம் மடிந்து - மீன் வேட்டைக்குச் செல்வதைக் கைவிட்டு, அல்கினர் - மனையில் தங்கிவிட்டனர். ஏமார்ந்தனம் என - யாமும் நீ இல்லாமையால் மயக்கமுடையவராய் நின்றேம் என்று, நாம் சென்று அறியின் எவன் - நாம் சென்று அவன் கருத்தினை அறிந்துவரின் என்ன குற்றமாமோ?

முடிபு : தொடியோர் மடிந்தெனத் துறை புலம்பின்று. எமரும் கோட்டுமீன் எறிந்த உவகையர் வேட்டம் மடிந்து அல்கினர். ஏமார்ந்தனம் எனச் சென்று நாம் அறியின் எவனோ?

கருத்து : அனைவரும் துயில யாம் மட்டும் நின் பிரிவினால் துயிலிழந்தோம், யாமும் இனிமையாகத் துயில் கொள்ளும்படி எம்மைப் பிரியாமல் இருக்கும் மணவாழ்வினை நாடாயோ என்பதாம்.

அ-ள் : அல்குதல் - தங்குதல். ஏமார்த்தல் - மயங்குதல். வேட்டம் - வேட்டை. மன்றம் - சபை.

மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த இளிவரல்.

பயன் : தலைமகளை இரவுக்குறி நயப்பித்தல்.

ஒப்புமைப்பகுதி

3. இறவின் புறம் வளைந்தது

"முடக்கால் இறவின் முடங்குபுறப் பெருங்கிளை"

(குறுந். 109: 1, 160: 2)

"சிலையுமானப் பச்சிறாப் பிறழும்"

(பெரும்பாண். 269: 70) (அகநா. 220: 17, 376. 16)

"பூட்டு சிலை இறவு" (சீவக. 1788)

"முடங்கிறா முதுநீர்" (தே. திருநா. திருவாரூர்)

3 - 4: இறவின் வாடல்.

"அங்கழிக் கொண்ட இறவின் வாடலொடு" (குறுந். 320: 2)

5. கோட்டுமீன்

"கொடுந் திமிற் பரதவர் கோட்டு மீன் எறிய" (பட். 86)

(அகநா. 170-11) (புறநா. 399. 5) (சீவக. 2325)

5-6. பன்மீன் வேட்டம்

"பன்மீன் வேட்டத்து என் ஐயர் திமிலே" (குறுந். 123: 5)

"புன்றலைவிரும்பாதவர்......
பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லாது" (பட். 90-92)

"பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப்பரதவர்"

(அகநா. 140: 1)

"கோட்டுமீன் வழங்கும் வேட்டமடி பரப்பு" (அகநா. 10: 11)

(புறநா. 399: 5)

# 50. மருதம்

## தோழி கூற்று

அறியா மையின் அன்னை அஞ்சிக்
குழையன் கோதையன் குறும்பைந் தொடியன்
விழவயர் துணங்கை தழூஉகஞ் செல்ல
நெடுநிமிர் தெருவில் கைபுகு கொடுமிடை
5 நொதும லாளன் கதுமெனத் தாக்கலின்
கேட்போர் உள்கொல் இல்லைகொல் போற்றுஎன
யாணது பசலை என்றனன் அதனெதிர்

நாணிலை எலுவ என்றுவந் திசினே
செறுநரும் விழையும் செம்ம லோனென
10 நறுநுதல் அரிவை போற்றேன்
சிறுமை பெருமையின் காணாது துணிந்தே.

எ-து : தோழி பாணற்கு வாயின் மறுத்தது.

## மருதம் பாடிய இளங்கடுங்கோ

ப-ரை : அன்னை - அன்னையே, நறுநுதல் அரிவை - அழகிய நெற்றியையுடைய தலைவி! அறியாமையின் - என்னுடைய அறியாமையாலே, அஞ்சி - நின்னை அஞ்சி, குழையன் - குண்டலத்தையுடையவனாகவும், கோதையன் - மாலையை அணிந்தவனாகவும், குறும்பைந்தொடியன் - குறிய பசுமையான வளையல்களை அணிந்தவனும் ஆகி, விழவு அயர் துணங்கை-விழாக்களத்து அவன் துணங்கை ஆடுதலை, தழூஉகம் செல்ல - கையகப்படுப்பேமாகி, செல்ல - யாங்கள் போக நிற்கையில், நொதுமலாளன் - நமக்கு அயலான் ஆகிய அவன்தான், அவ்வணிகளையுடையவனாய், நெடு நிமிர் தெருவில் - நீண்ட நிமிர்ந்த தெருமுனையில், கதுமென தாக்கலின் - விரைந்து வந்து எதிர்ப்பட்டானாக, கேட்போர் உளர்கொல் - இவ்விதம் செய்யும் உன்னைக் கேட்போரும் உண்டோ, இல்லைகொல் - இல்லையோ, போற்று என - அறிந்துகொள் என்றுகூற அவனும், பசலையானது - பசலையானது அழகாக இருக்கின்றது, என்றனன் - என்று கூறினான். அதன் எதிர் - அதற்கு எதிர் உரையாக, செறுநரும் - அவனைப் பகைத்தோரும், விழையும் செம்மலோன் என - விரும்பப்படும் செம்மல் உடையான்எனக்கொண்டு, போற்றேன் - யான் அவனைப் போற்றினேன் அல்லேன். சிறுமை - என் சிறுமை, பெருமை காணாது துணிந்து - பெரியதாகலின் ஆவியாது துணிந்து, நாண் இலை - நீ நாணம் உடையவன் இல்லை, என - என்று, வந்திசின் - கூறி வந்துவிட்டேன்.

முடிபு : பசலையானது என்றனன், அதனெதிர் எலுவ நாணிலை என்று வந்தேன்.

கருத்து : தலைமகன் எத்தகைய மகளிரையும் பின் தொடரும் தன்மையன்; அதனால் அவன் தலைவியிடத்து உண்மை அன்பு உடையவனாக வரவில்லை என்பதாம்.

அ-ள் : குறுமை+பசுமை+தொடியன். துணங்கை முடக்கிய இருகைகளையும் விலாப்புடைகளில் ஒற்றி அடித்துக் கொண்டு அசைந்தாடும் ஒருவகை விளையாட்டு.

தலைவி முன்னர்த் தலைவன் காமக்கடப்பினால் பணியுந் துணையன்றி நம்மைக் கையிகந்தான் எனக் கையற்றுக் கூறும் கூற்று, புலந்து வருந்தும் தலைவிக்கு மருந்தாய அவன் கூடுவ தோர் ஆற்றல் உறுதி பயக்குமாயின் அவ்வாயில்கட்கு உளதாம் என்றவாறு என்று தொல். பொ. சூ. 166க்கு உரை எழுதி இச் செய்யுளை எடுத்துக் காட்டியுள்ளார்.

தலைவன் சிறைப்புறத்தானாகக் கூற்று அமைந்ததற்கு விதி.
(தொல். பொ. சூ.179)

ஒப்புமைப்பகுதி

3. விழாவும் துணங்கையும்

"மன்னர் குழீஇய விழவினானும்
மகளிர் தழீஇய துணங்கையானும்" (குறுந். 31:1-2)

# 51. குறிஞ்சி

## தலைவி கூற்று

யாங்குச்செய் வாங்கொல் தோழி ஒங்குகழைக்
காம்புடை விடரகம் சிலம்பப் பாம்புடன்று
ஓங்குவரை மிளிர ஆட்டி வீங்குசெலல்
கடுங்குரல் ஏற்றொடு கனைதுளி தலைஇப்
5 பெயலா னாதே வானம் பெயலொடு
மின்னுநிமிர்ந் தன்ன வேலன் வந்தெனப்
பின்னுவிடு முச்சி அளிப்பு ஆனாதே
பெருந்தண் குளவி குழைத்த பாவடி
இருஞ்சேறு ஆடிய நுதல கொள்களிறு
10 பேதை ஆசினி ஒசித்த
வீததர் வேங்கைய மலைகிழ வோற்கே!

எ-து: ஆற்றது ஏதமஞ்சி வேறுபட்டாள் வெறியாடல் உற்றவிடத்துச் சிறைப்புறமாகச் சொல்லியது.

பேராலவாயர்

ப-ரை: தோழி, வானம் - மேகமானது, ஓங்கு கழை - உயர்ந்த தண்டினையுடைய, காம்புடை மூங்கில்கள் நிரம்பிய,

விடரகம் - மலைப்பிளப்பிடமெல்லாம், சிலம்ப - எதிரொலிக்குமாறு, பாம்புடன்று - பாம்புகள் வருந்தி, ஓங்கு வரை மிளிர - உயர்ந்த வரையிடத்துப் புரளுமாறு, வாட்டி - துன்புறுத்தி, வீங்கு செலல் - விரைந்த செலவையுடைய, கடுங்குரல் ஏற்றொடு - கடிய முழக்கம் மிக்க இடியேற்றத்துடனே, கனை துளி தலைஇ - மிக்க துளிகளைப் பெய்யத் தொடங்கி, பெயல் ஆனாதே - பெய்தலும் நிற்கவில்லை. மின்னு நிமிர்ந்து அன்ன - மின்னலைக் கொண்டு செய்தாற்போன்ற, வேலன் - ஒளிறும் வேலினைக் கைக்கொண்டு வெறியாடும் வேலனும், வந்தென - வந்தான் ஆக, பின்னுவிடு - இனிப் பின்னி விடுத்தற்குரிய, முச்சி - கொண்டையில், அளிப்பானாது - பூவைக்குலையாது காத்தலும் அரியதாயிரா நின்றது. பெருந்தண் - பெரிய குளிர்ச்சியையுடைய, குளவி - காட்டு மல்லிகைக் கொடியினை, குழைத்த - சிதைத்த, பாஅடி - பரந்த அடிகளையுடைய, இரும்சேறு ஆடிய - கரிய சேற்றையப்பிய, நுதல - நெற்றியையுடைய, கொல்களிறு - கொல்லும் தன்மையையுடைய - ஆண்யானையானது, பேதை - அறியாமையால், ஆசினி - ஆசினிப் பலாவை, ஒசித்த - முறித்துப் போட்ட பின்பு, வீததர் வேங்கை - மலர்கள் உதிர்ந்து பரவிய வேங்கை மரத்தின் அடியில், அ மலைகிழவோற்கு - தங்கி நிற்கும் மலைக்குரியவனான நம் தலைவனுக்கு, யாங்கு செய்வாம் கொல் - யாம் என்ன செய்யமாட்டுவேம்? நீதான் அதனை எனக்குக் கூறுவாயாக.

முடிபு : தோழி வானம் பெயலானது, மழை கிழவோற்கு யாங்குச் செய்வாங்கொல்.

கருத்து : இனி, தலைவனுடன் களவில் கூடி இன்புறுதல் நடவாது போலும் என்பதாம்.

அ-ள் : கழை - மூங்கிலின் தண்டு. காம்பு - மூங்கில். விடர் - பிளவு. மிளிர்தல் - புரளுதல்.

மெய்ப்பாடு - அழுகைஸ்யச் சார்ந்த அச்சம்.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

1. யாங்குச் செய்வாம்

"யாங்குச் செய்வாம்எம் இடும்பை நோய்க்கென"
(குறுந். 217;3, 268;3, 380:3) (அகநா. 252:9)

1-5. மழை பாம்பை வருத்தி மலையைத் துளக்குதல்
"நெடுவரை மருங்கிற் பாம்புபட இடிக்கும்" (குறுந். 158:1-5)

# 52. பாலை

## தலைவன் கூற்று

மாக்கொடி அதிரற் பூவொடு பாதிரித்
தூத்தகட்டு எதிர்மலர் வேய்ந்த கூந்தல்
மணங்கமழ் நாற்ற மரீஇ யாமிவள்
சுணங்கணி ஆகம் அடைய முயங்கி
5 வீங்குவர்க் கவவின் நீங்கல் செல்லேம்
நீயே ஆள்வினை சிறப்ப எண்ணி நாளும்
பிரிந்துறை வாழ்க்கை புரிந்துஅமை யலையே
அன்பிலை வாழிஎன் நெஞ்சே வெம்போர்
மழவர் பெருமகன் மாவள் ஓரி
10 கைவளம் இயைவது ஆயினும்
ஐதே கம்ம, இயைந்துசெய் பொருளே.

எ-து : தலைமகன் செலவழுங்கியது.

பாலத்தனார்

ப-ரை : என்நெஞ்சே - என்னுடைய நெஞ்சமே; மா கொடி - கரிய கொடியையுடைய, அதிரற் பூவோடு - காட்டுமல்லிகைப் பூவுடனே, தூ தகட்டு - தூய்மையான பொற்றகட்டினைப்போல் இருக்கும், பாதிரி - பாதிரி மலரையும்சேர, எதிர் - எதிர் எதிரே மலர்களை வைத்து, வேய்ந்த - தொடுத்துக்கட்டிய, மலர் - மலர் மாலையைச் சூடிய, கூந்தல் - கூந்தலின், மணம்கமழ் நாற்றம் - மணம் வீசுகின்ற நறுநாற்றத்தைப் பெற்று, யாம் இவள் - யாம் இவளுடைய, சுணங்கு அணி - தேமல் பொருந்திய, ஆகம் அடைய முயங்கி - மார்பினையுடைய இவளை அணைத்துக் கொண்டு, வீங்குஉவர் கவவின் - மிக்க இனிய சுவையினைக் கொண்டதான அந்த அணைப்பினைவிட்டு, நீங்கல் செல்லேன் - யான் விலகிப்போதலைச் செய்யேன், நீயே - நீ தானும், ஆள்வினை சிறப்ப எண்ணி - முயற்சியை மேம்படக்கருதி, நாள் - நாள்தோறும், பிரிந்துறை வாழ்க்கை புரிந்து - எம்மைப் பிரிந்து தனியாக வசிக்கின்ற வாழ்வினை விரும்பி, அமையிலை - சிறிது

பொழுதும் ஒய்கின்றனை இல்லை. அன்பிலை - ஆதலால் என்னிடத்தில் உனக்கு அன்பு இல்லை. வாழி - நீ வாழ்வாயாக. இயைந்து செய்பொருள் - உடன்பட்டு ஈட்டும் பொருள், வெம்போர் மழவர் - கொடிய போர் செய்யவல்ல மழவர்கள்; பெருமகன் - அவர்களின் பெருமானாகத் திகழ்ந்தவன், மாவண் ஓரி - பெரியவள்ளலான ஓரி என்பவனது, கைவளம் இயைவது ஆயினும் - கைவண்மைக்குப் பொருந்திய செல்வம், கிடைக்கு மாயினும், அப்பொருள் இவளுடைய இன்பத்தைக் காட்டிலும் சிறந்தது இல்லை. ஐது - மிக மென்மையுடையதன்றோ! (அதனால் ஏகுவாய்- யாம் வரமாட்டோம்.)

முடிபு : நெஞ்சே, நாளும் பிரிந்துறை வாழ்க்கை புரிந்து அமையலையே அன்பிலை வாழி.

கருத்து : தலைவியைப் பிரிந்து சென்று ஈட்டும் பொருள் எவ்வளவு சிறப்புடையதாயினும் அதனை வேண்டேன் என்பதாம்.

அ-ள் : மரீஇ - பொருந்தி, உவர் - இனிய சுவை. அம்ம - வியப்பிடைச் சொல். ஐது - மென்மை. யாம் வாரகில்லேம் என்பது குறிப்பெச்சம்.

மெய்ப்பாடு - பிறட்கட்டோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - செலவழுங்கல்.

தலைவியை நினைக்குந்தோறும் இன்பம் பெருகும். பொருள் அவ்வாறு இன்று என்றபடி.

ஒப்புமைப்பகுதி

1-2 "கதுப்பறலணியும் காமர் பொழுதே" (ஐங். 345)

9. கைவள்ளோரி

"கைவள் ஓரி கானந் தீண்டி" (குறுந். 199: 3)

11 : ஐதே கம்ம

"ஐதே காமம் யானே" (குறுந். 217)

"ஐதே கம்ம மெய்தோய் நட்பே" (குறுந். 401; 6)

# 53. குறிஞ்சி

## தோழி கூற்று

யான்அஃது அஞ்சினென் கரப்பவும் தானஃது
அறிந்தனள் கொல்லோ? அருளினள் கொல்லோ?
எவன்கொல் தோழி! அன்னை கண்ணியது?
வானுற நிவந்த பெருமலைக் கவாஅன்
5 ஆர்கலி வானந் தலைஇ நடுநாள்
கனைபெயல் பொழிந்தெனக் கானக் கல்யாற்று
முளிஇலை கழித்தன முகிழிண ரொடுவரும்
விருந்தின் தீநீர் மருந்தும் ஆகும்
தண்ணென உண்டு கண்ணின் நோக்கி
10 முனியாது ஆடப் பெறின்இவள்
பனியும் தீர்குவள் செல்கென் றோளோ.

எ-து: வரைவு நீட்டிப்பதி தோழி சிறைப்புறமாகச் சொல்லியது.

நல்வேட்டனார்

ப-ரை: தோழி, யான் அஃது அஞ்சினென் - தலைமகன் பிரிவால் துன்புற்று இளைத்ததனை இன்ன காரணத்தினால் என்று கூறுவதற்கு அஞ்சி, கரப்பவும் - அதனை மறைக்கவும், அன்னை - அன்னை என்னை நோக்கி, வானுற நிவந்த - ஆகாயத்தில் மிக உயர்ந்த, பெருமலை கவாஅன் - பெரிய மலைப்பக்கத்தில், ஆர்கலி வானம் தலைஇ - இடியோசையையுடைய மேகம் மழைபெய்யத் தொடங்கிய, நடுநாள் - நள்ளிருளில், கனை பெயல் பொழிந்தென - மிக்க மழையைப் பொழிந்ததனால், கானக்கல் யாறு - கற்களை உடைய காட்டாற்றிடத்தே, முளி இலை - மரங்களின் காய்ந்த சருகுகளோடு, கழித்தன - கழித்தன வாகிய, முகிழ் இணரொடு வரும் - முகிழ்த்த பூங்கொத்துக்களோடு வரும், விருந்தின் தீ நீர் - புதிய இனிய நீரானது, மருந்தும் ஆகும் - இவருக்கு ஏற்பட்டுள்ள நோயைத் தீர்க்கும் மருந்துமாகும். தண்என உண்டு - அதனைக் குளிர்ச்சிபெறப் பருகி, கண்ணின் நோக்கி - ஆங்குள்ள காட்சிகளைக் கண்ணால் பார்த்து, முனியாது ஆடப்பெறின் - வெறுக்காமல் ஆடப் பெற்றால், இவள் பனியும் - இவள் உடலில் ஏற்பட்ட நடுக்கமும், தீர்குவள் - நீங்குவள், செல்க என்றாள் - அதனால் இவளுடன்

ஆங்குச் செல்வாயாக என்றனள். தான்அஃது அறிந்தனள் கொல் - அன்னை அவ்வாறு கூறியது எதனாலோ? தான் நமது ஒழுகலாற்றை அறிந்து கொண்டதனாலேயோ? அருளினள் கொல் - அல்லது அருளினாலேதான் சொன்னாளோ? எவன் கொல் - அன்னை கூறியது வேறு யாதாக இருக்குமோ ஆராய்ந்துபார்.

முடிபு : தோழி! தீ நீர் மருந்தும் ஆகும்; ஆடப்பெறின் பனியும் தீர்குவள்; செல்கென்றோளே, அன்னை, கண்ணியது எவன்கொல்? என முடிக்க.

கருத்து : இவளது வாட்டத்தை அன்னையும் அறிந்தனள். இனி இவள் இற்செறிக்கப்படுதல் நிகழும். ஆதலால் விரைந்து மணந்துகொள்வாயாக என்பதாம்.

அ-ள் : முளியிலை - காய்ந்த சருகு. இணர் - பூங்கொத்து. மருந்து - காமநோய்க்கு மருந்து. பனி - நடுக்கம்.

மெய்ப்பாடு - அறத்தைச் சார்ந்த அழுகை-

பயன் - வரைவு கடாதல்.

# 54. நெய்தல்

## தலைவி கூற்று

வளைநீர் மேய்ந்து கிளைமுதல் செலீஇ
வாப்பறை விரும்பினை ஆயினும் தூச்சிறை
இரும்புலால் அருந்தும்நின் கிளையொடு சிறிதிருந்து
கருங்கால் வெண்குருகு எனவ கேண்மதி
5 பெரும்புலம் பின்றே சிறுபுன் மாலை
அதுநீ அறியின் அன்புமார் உடையை
நொதுமல் நெஞ்சம் கொள்ளாது என்குறை
இற்றாங்கு உணர உரைமதி தழையோர்
கொய்குழை அரும்பிய குமரி ஞாழல்
10 தெண்திரை மணிப்புறம் தைவரும்
கண்டல் வேலிநும் துறைகிழ வோற்கே.

எ-து : காமமிக்க கழிபடர் கிளவி

சேந்தங்கண்ணனார்

ப-ரை : கருங்கால் - கரிய கால்களையுடைய, வெண் குருகு - வெண்ணிறக் குருகே! கிளைமுதல் செலீஇ - நீ உன் சுற்றத்தாருடனே சென்று, வளைநீர் மேய்ந்து - வளைந்த நீர்ப் பரப்பில் உள்ள இரையைத் தின்று, வாப்பறை - தாவிப் பறந்து வருதலை, விரும்பினை ஆயினும் - விரும்பினையாயினும், இரும்பு லால் அருந்தும் - மிக்க புலவைத் தின்னுகின்ற, தூ சிறை - தூய சிறகுகளையுடைய, நின் கிளையொடு - உன்னுடைய சுற்றத் தோடு, சிறிது இருந்து - சிறிதுபொழுது தங்கியிருந்து, எவை கேள் - என்னுடைய சொற்களைக் கேட்பாயாக, சிறுபுல் மாலை - சிறிய புல்லிய இந்த மாலைக் காலமானது, பெரும் புலம்பின்றே - எனக்குப் பெரும் வருத்தத்தைத் தருகின்றது. அது நீ அறியின் - அதனை நீ அறிந்தால், அன்புமார் உடையை - என்னிடத்தில் மிக்க அன்பு உடையை ஆவாய். நொதுமல் நெஞ்சம் கொள்ளாது - என்னை அயலாராகக் கருதுகின்ற மனப் போக்கினைக் கொள்ளாமல், என் குறை இற்றாங்கு - என் குறை இத்தன்மையது என்று, தழையோர் - தழை உடுப்பவர், கொய் குழை - கொய்தற்குரிய குழையானது தழைத்திருந்த, குமரி ஞாழல் - இளமையான ஞாழலானது, தெண்திரை - தெளிந்த அலைகளின், மணிப்புறம் - கரியபுறத்தை, தைவரும் - தடவா நிற்கும், கண்டல் - தாழைமரங்களை, வேலி - வேலியாகவுடைய, நும் - நும்முடைய, துறைகிழவோற்கு - துறைக்கு உரிமையுடைய வர்க்கு, என்குறை இத்தன்மையது என்று அவர் உணரும்படி சென்று சொல்வாயாக.

முடிபு : செங்கால் வெண்குருகே, துறை கிழவோற்கு என் குறை உணர் உரை.

கருத்து : நாரையே, நீயேனும் சென்று என் குறையை அவர் உணரும்படி எடுத்துக் கூறுவாயாக என்பதாம்.

அ-ள் : புலம்பு - வருத்தம், வாப்பறை - தாவிப் பறத்தல், ஆர் - அசை, மதி - முன்னிலைபசைச்சொல், கண்டல் - நெய்தல் நிலத்திலுள்ள ஒரு மரம், எவை - 'அ' விரித்தல் விகாரம், அல்லது எழுத்துப்பேறுமாம். இது தூது முனிவின்மை.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயர்வுயிர்த்தல்.

இளைய ஞாழல் அலைகளின் கரிய புறத்தைத் தடவும் என்றது தலைவன் முயங்கி முதுகைத் தைவர யான் துயரம் தவிர் வேன் என்னும் குறிப்பிற்று.

ஒப்புமைப்பகுதி

4. கருங்கால் வெண்குருகு

"கழிசேர்ந் தசைஇய கருங்கால் வெண்குருகு" (குறுந். 303:1)
"கருங்கால் வெண்குருகு" (குறுந். 325:5)

# 55. குறிஞ்சி

## தோழி கூற்று

ஓங்கு மலை நாட ஒழிகநின் வாய்மை!
காம்புதலை மணந்த கல்லதர்ச் சிறுநெறி
உறுபகை பேணாது இரவில் வந்துஇவள்
பொறிகிளர் ஆகம் புல்லதி தோள்சேர்பு
5 அறுகாற் பறவை அளவில மொய்த்தலின்
கண்கோள் ஆக நோக்கிப் பண்டும்
இனையை யோவென வினவினள் யாயே
அதனெதிர் சொல்லா ளாகி அல்லாந்து
என்முகம் நோக்கி யோளே அன்னாய்!
10 யாங்குணர்ந் துய்குவள் கொல்லென மடுத்த
சாந்த ஞெகிழி காட்டி
ஈங்குஆ யினவால் என்றிசின் யானே.

எ-து : வரைவிடை மெலிவு ஆற்றுவிக்கும் தோழி தலைமகற்குச் சொல்லியது.

### பெருவழுதி

ப-ரை : ஓங்குமலை நாட - உயர்ந்த மலைகளையுடைய நாட்டிற்கு உரியவனே, நின் வாய்மை - உன்னுடைய வாய்மைகளெல்லாம், ஒழிக - இனி ஒழிவனவாக, காம்புதலை - மூங்கில்கள் நெருங்கிய, கல் அதர் சிறுநெறி - கற்பாறை வழியாகிய சிறுவழியிலே, உறுபகை வந்து அடைகின்ற மிக்க பகையினை, பேணாது - பொருட்படுத்தாமல், இரவில் - இரவுப் பொழுதில், வந்து இவள் - நீயும் வந்து தலைவியது, பொறிகிளர் ஆகம் - திருவிளங்கிய மார்பை, புல்ல - முயங்கி மகிழ, மணந்த - அதனால் உண்டாய புதுமணத்தைக் கருதி, தோள்சேர்பு - இவளுடைய தோள்களிடத்தே சார்ந்து, அறுகால் பறவை -

வண்டினங்கள், அளவில - கணக்கில்லாதனவாய், மொய்த்தலின், கண்கோள் ஆக - எம் அன்னை தம் கண்களாலே, நோக்கிய - கொல்வாள்போல் பார்த்து, பண்டும் மகளே - நீ இதற்கு முன்பும், இனையையோ என - இந்த மனத்தை உடையையோ என்று, வினவினள் - கேட்டனள், அதன் எதிர் சொல்லாளாகி - அதற்கு எதிர் உரை சொல்லாமல், அல்லாந்து - வருத்தமுற்று, என்முகம் நோக்கி - என்னுடைய முகத்தைப் பார்த்தாள்; யாங்கு உணர்ந்து உய்குவள் கொல்என - அதனை அறிந்த யான் இவள் எப்படி ஆராய்ந்து மறைத்துக் கூறி உய்குவள் ,என்று எண்ணி, மடுத்த சாந்த ஞெகிழி காட்டி (அன்னையை நோக்கி) அடுப்பிலிட்ட சந்தன விறகின் கொள்ளியைக் காட்டி, ஈங்கு ஆயின - இவ்விறகிலிருந்த வண்டுகள் இவள் தோளிலே மொய்க்கின்றன என்று யான் கூறினேன்.

முடிபு : அன்னாய், மடுத்த சாந்த ஞெகிழி காட்டி ஈங்கு ஆயின.

கருத்து : இனியும் இவளது பிரிவுத்துயரையும் களவையும் அன்னைக்கு மறைத்து வைத்தல் அரிது என்பதாம்.

அ-ள் : காம்பு - மூங்கில். ஞெகிழி - கொள்ளி.

மெய்ப்பாடு : அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

இச் செய்யுள் படைத்து மொழிதலாம்.

ஒப்புமைப்பகுதி

5. "போதவிழ் முச்சியூதும் வண்டே" (ஐங். 93)
(மலைபடு. 182)

4-7. "புணர்ந்தோர் மொய்ம்மணம் கமழும் தண்பொழில்"
(ஐங். 19) (சீவக. 858)

# 56. பாலை

## தலைவி கூற்று

குறுநிலைக் குரவின் சிறுநனை நறுவீ
வண்டுதரு நாற்றம் வளிகலந் தீயக்
கண்களி பெறூஉம் கவின்பெறு காலை
எல்வளை ஞெகிழ்ந்தோர்க்கு அல்லல் உறீஇச்
சென்ற நெஞ்சம் செய்வினைக்கு உசாவா

ஒருங்குவரல் நசையொடு வருந்தும் கொல்லோ?
அருளான் ஆதலின் அழிந்திவண் வந்து
தொல்நலன் இழந்தவென் பொன்னிறம் நோக்கி
ஏதி லாட்டி இவளெனப்
10 போயின்று கொல்லோ நோய்தலை மணந்தே.

எ-து : வரவிடை மெலிவாற்றுவிக்கும் தோழிக்குத் தலைவி சொல்லியது.

## பெருவழுதி

ப-ரை : குறுநிலை - குறுகியதாக நிற்றலையுடைய, குரவின் - குராமரத்தின் சிறுநனை நறுவீ - சிறிய அரும்புகள் முதிர்ந்த நறுமலரில், வண்டுதரு நாற்றம் - வண்டுகள் உட்காருவதால் எழுந்த மணத்தை, வளி கலந்து ஈய - தென்றல் காற்று புகுந்து கலந்துவீச, கண் - கண்கள், களி பெறூஉம் – மகிழ்ச்சியடைகின்ற, கவின்பெறு காலை - அழகினைப் பெற்றிருந்த போதிலே, எல்வளை ஞெகிழ்ந்தோற்கு - என்னுடைய ஒளிபொருந்திய வளையை நெகிழ்வித்தோரைக் கருதி, அல்லல் உறீஇ - துன்பம் கொண்டதாய், சென்ற நெஞ்சம் - அவர்பால் சென்ற என் நெஞ்சமானது, செய்வினைக்கு உசாவா - அவ்விடத்தில் அவர் செய்யும் செயலுக்குத் துணையாயிருந்து, ஒருங்குவால் - செயலை முற்றுவித்து அவருடன் ஒருசேர வருவதற்கு, நசையொடு வருந்தும் சொல் விருப்பத்தோடு வருந்தியிருக்கின்றதோ? அன்றி, அருளான் ஆதலின் - அவர்தாம் அருள் செய்யாமையால் அழிந்து இவண் வந்து - கலங்கி இங்கு வந்து, தொல்நலம் இழந்த - பழைய அழகினை இழந்துவிட்ட, என் - எனது, பொன்னிறம் நோக்கி - பொன்னிறமான பசலை நிறத்தைப் பார்த்து, இவள் எதிலாட்டி என - இவள் நமக்கு அயலாள் ஆவள் என்று, நோய்தலை மணந்து - நோய்மிகக் கண்டு, போயின்றுகொல் - என்னைத் தேடிச் சென்றனனோ? அறியேன்; ஆதலின் யான் எங்ஙனம் ஆற்றுகிற்பேன்.

முடிபு : இவள் ஏதிலாட்டி என நோய்தலை மணந்து போயின்று கொல்.

கருத்து : பிரிந்த அன்றே என் நெஞ்சம் அவருடன் சென்று விட்டது. யான் என் செய்வேன் எனத் தன் ஆராத் துயரத்தைத் தலைவி உணர்த்துகின்றாள் என்பதாம்.

அ-ள் : எல் - ஒளி. உசாத்துணை - சூழ்ச்சி வினாவும் துணை.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயர்வுயிர்த்தல்.

போயின்று கொல் என்றது ஆங்கு நெஞ்சழிதல்.

ஒப்புமைப் பகுதி

4. வளை நெகிழ்தல்

"கோடீரிலங்கு வளைநெகிழ நாடொறும்" (குறுந். 11:1)
(ஐங். 27:3, 54:3, 136:2, 140:3) (கலி. 3:3)
(குறள். 1157) (கைந்நிலை. 55)

8. தொல் கவின் தொலைதல்

"தொல் கவின் தொலைந்து தோள்நலம் சாஅய்"
(குறுந். 381:1) (கலித். 2:28, 16:5, 26:10)
(அகநா. 147:12, 177:1, 235:18, 270:10)

# 57. குறிஞ்சி

## தோழி கூற்று

தடங்கோட்டு ஆமான் மடங்கல் மாநிரைக்
குன்ற வேங்கைக் கன்னொடு வதிந்தெனத்
துஞ்சுபதம் பெற்ற துய்த்தலை மந்தி
கல்லென் சுற்றம் கைகவியாக் குறுகி
5 வீங்குசுரை ஞெமுங்க வாங்கித் தீம்பாற்
கல்லா வன்பறழ்க் கைந்நிறை பிழியும்
மாமலை நாட மருட்கை உடைத்தே
செங்கோல் கொடுங்குரல் சிறுதினை வியன்புனம்
கொய்பதம் குறுகும் காலையெம்
10 மையீர் ஓதி மாண்நலம் தொலைவே.

எ-து : செறிப்பு அறிவுறீஇ வரைவு கடாயது.

பொதும்பில் கிழார்

ப-ரை : தடம்கோடு ஆமான் - வளைந்த கொம்புகளை யுடைய காட்டுப்பசு ஒன்று. மடங்கல் மாநிரை - சிங்கம் முதலான

விலங்குகளின் கூட்டம் நிறைந்துள்ள, குன்றம் - மலையிடத்தே, வேங்கை - ஒரு வேங்கை மரத்தடியில் கன்னொடு வதிந்து தன் கன்றோடும் தங்கியிருந்ததாக, துஞ்சு பதம் பெற்ற - அந்தப் பசு தூங்குகின்றதான தன்மையைப் பெற்ற, துய்த்தலை மந்தி - பஞ்சுபோன்ற தலையை உடைய மந்தியானது, கல்லென சுற்றம் - கல்லென ஒலிக்கும் தன் தன் சுற்றத்தை, கை கவியா குறுகி - ஒலிக்காதவாறு கையமர்த்திவிட்டு, அந்தப் பசுவினிடத்தை அடைந்து, வீங்குசுரை - பால் நிரம்பிப் பருத்திருந்த அப்பசுவினது மடியினை, ஞெமுங்க வாங்கி - அழுந்தும்படி பற்றி இழுத்து, தீம்பால் - இனிய பாலைக் கறந்து, கல்லா வன்பறழ் - தன் தொழிலைக் கல்லாத வலிய குட்டியின், கைந்நிறை பிழியும், கைநிறையப் பிழியா நிற்கும், மாமலைநாட - பெரிய மலைகளை யுடைய நாட்டிற்குத் தலைவனே, செங்கோல் சிவந்த தண்டினை யும், கொடுங்குரல் வளைந்த கதிர்களையும் கொண்ட, சிறுதினை - சிறிய தினைப்பயிரையும் உடைய, வியன்புனம் - அகன்ற புன மானது, கொய்பதம் - கதிர்களைக் கொய்யும் பருவத்தை குறுகும் காலை - நெருங்கும் காலத்து, எம்மை ஈர்ஓதி - எம் முடைய கரிய ஈரிய கூந்தலையுடையவளின், மாண்நலம் - மாட்சிமைப்பட்ட நலமானது, தொலைவு - கெட்டழிவது உறுதி. (அதனை நினைத்தபோது என் நெஞ்சமும், மருட்கை உடைத்து - மருட்சியையுடையதாய் ஆகின்றது.

முடிபு : மலைநாட! சிறுதினை கொய்பதம் குறுகும் காலை மையீர் ஓதி மாணலம் தொலையும் என முடிக்க.

கருத்து : அவள் இற்செறிக்கப் படுவாள். அவள் நலம் கெட்டுவிடும். ஆகவே, விரைந்து மணந்து கொள்வாயாக என்பதாம்.

அ-ள் : துய் - பஞ்சு. ஞெமுங்குதல் - அழுந்துதல்.

நயம் : மந்தி கொடிய விலங்கிற்கு அஞ்சாது பதம்பெற்றுச் சென்று பாலைப் பிழிந்து ஊட்டிக் குட்டியைக் காப்பதுபோல, நீயும் பொருளீட்டிக் கொணர்ந்து கொடுத்து இவளை மணந்து பாதுகாப்பாயாக என்றவாறு.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல். இஃது அவன் உணர்வு மறுத்தல்.

ஒப்புமைப் பகுதி

3 : துய்த்தலை மந்தி

"துய்த்தலை மந்தியைக் கையீடுஉப் பயிரும்"

(புறநா. 168:24)

## 58. நெய்தல்

### தோழி கூற்று

பெருமுது செல்வர் பொன்னுடைப் புதல்வர்
சிறுதோட் கோத்த செவ்வரிப் பறையின்
கண்ணகத்து எழுதிய குரீஇப் போலக்
கோல்கொண்டு அலைப்பப் படீஇயர் மாதோ
5 வீரை வேண்மான் வெளியன் தித்தன்
முரசுமுதல் கொளீஇய மாலை விளக்கின்
வெண்கோடு இயம்ப நுண்பனி அரும்பக்
கையற வந்த பொழுதொடு மெய்சோர்ந்து
அவல நெஞ்சினம் பெயர உயர்திரை
10 நீடுநீர்ப் பனித்துறைச் சேர்ப்பன்
ஓடுதேர் நுண்நுகம் நுழைத்த மாவே.

முதுகூற்றனார்

எ-து : பகற்குறி வந்து நீங்கும் தலைமகன் போக்கு நீக்கித் தோழி மாவின்மேல் வைத்துச் சொல்லியது.

ப-ரை : வீரை வேண்மான் வெளியன் - உறையூரை அரசாட்சி செய்த வீரை வேண்மானான வெளியன் என்னும், தித்தன் - தித்தனுடைய, முரசுமுதல் கொளீஇய - முரசு முதலிய வற்றோடு, வெண்கோடு - வெண்மையான சங்குகள் ஒலிக்க, மாலை விளக்கின் - வரிசையாக வைக்கப்பட்ட மாலைக் காலத்து விளக்குகளின் ஒளியோடு சென்று, நுண்பனி - நுட்பமான பனித் துளிகளும், அரும்ப - அரும்பத் தொடங்கும், கையற வந்த - தலைவரைப் பிரிந்த தலைவி செயலறும்படி வந்த, பொழு தொடு - மாலைப் பொழுதோடு, மெய் சோர்ந்து - உடல் வாட்ட முற்று, அவல நெஞ்சினம் - வருந்திய மனத்தோடு, பெயர - பெயர்ந்து போகும் வண்ணம், உயர்திரை - ஓங்கி எழுகின்ற

அலைகளையுடைய, நீடுநீர் - நீண்ட நீர்வடிவாகிய, பனித் துறை சேர்ப்பன் - கடலின் குளிர்ந்த துறையையுடைய சேர்ப் பனது, ஓடுதேர் - ஓடுகின்ற தேரின், நுண்நுகம் - நுண்ணிய நுகத் தில், நுழைத்த மா - பூட்டப் பெற்ற குதிரைகள்தாம், பெருமுது செல்வர் - பெரிதான முதிர்ந்த செல்வரின், பொன்னுடைப் புதல்வர் - பொன் ஆபரணங்களையுடைய புதல்வர்கள், சிறு தோள் - சிறிய தோளில், கோத்த - மாட்டிய, செவ்வரி பறை யின் - செவ்விதாக ஒலிக்கும் பறையின், கண்ணகத்து - கண்ணகத்தே, எழுதிய - எழுதப்பட்டுள்ள, குரீஇ போல - குருவியானது அடிபடுவதுபோல, கோல் கொண்டு - பாகனால் கோல் கொண்டு, அலைப்படீஇயர் - அடித்து வருத்துதலினாலே துன்பப்படுவனவாக.

முடிபு: சேர்ப்பன் நுண்ணுகம் நுழைத்த மா அலைப்பப் படீஇயர் என முடிக்க.

கருத்து: தலைமகளை ஆயத்தில் விட்டுத் தோழி தலைவன் பாற் சென்று உன்தேரிற் பூட்டிய குதிரைகள் ஒறுக்கப்படுவன ஆகுக என்று கூறுமுகத்தான் குறிப்பினால் வரைவு கடாயது.

மெய்ப்பாடு - பெருமிதம்,

பயன் - குறிப்பினால் வரைவு கடாதல்.

# 59. முல்லை

## தலைவன் கூற்று

உடும்பு கொரீஇ வரிநுணல் அகழ்ந்து
நெடுங்கோட்டுப் புற்றத்து ஈயல் கெண்டி
எல்லுமுயல் எறிந்த வேட்டுவன் அஞ்சுவல
பல்வேறு பண்டத் தொடைமறந்து இல்லத்து
5 இருமடைக் கள்ளின் இன்களி செருக்கும்
வன்புலக் காட்டு நாட்டதுவேஅன்பு கலந்து
நம்வயின் புரிந்த கொள்கையொடு நெஞ்சத்து
உள்ளினள் உறைவோள் ஊரே முல்லை
நுண்முகை அவிழ்ந்த புறவின்
பொறைதலை மணந்தன்று உறவுமார் இனியே.

எ-து: வினைமுற்றி மீள்வான் தேர்ப்பாகற்குச் சொல்லி யது.

கபிலர்

ப-ரை : அன்பு கலந்து - அன்பின் பெருக்கால் உள்ளம் கலந்து, நம் வயிற் புரிந்த கொள்கையொடு - நம்மிடம் விரும்பிய கொள்கையுடன், நெஞ்சத்து - என்றும் தன் நெஞ்சிலே, உள்ளினள் - எம்மை நினைந்து வாழும் எம்காதலி, உறைவோள் - தங்கியிருக்கும், ஊர் - ஊர்தான், உடும்பு - உடும்பினை, கொரீஇ - ஈட்டியாற்குத்தி எடுத்தும், வரிநுணல் அகழ்ந்து - மண்ணில் முழுகி மறைந்துகிடக்கும் வரிகளையுடைய நுணலை மண் வெட்டியாற் பறித்து எடுத்தும், நெடுங்கோட்டுப் புற்றத்து - நெடிய கோடு களை உடைய புற்றுக்களை, வாழ்விடமாகக் கொண்ட, ஈயல் கெண்டி - ஈசல்களை புகையெழுப்பி வெளிக்கொணர்ந்து தாழியில் நிரப்பியும், எல்லு முயல் எறிந்த - பகற்பொழுது முழுவதும் முயல் வேட்டையாடியும், வேட்டுவன் - வேடன், அம்சுவல - அவற்றை அழகிய தோளிலே சுமந்தும், பல்வேறு பண்டத் தொடைமறந்து - பல்வேறு வகையாகிய பண்டங்களைக்கட்டிய முடையுடனே ஏனைய கருவிகளையும் மனையகத்துப் போட்டு மறந்து, இல்லத்து - தன் இருப்பிடத்தின்கண், இருமடைக் கள்ளின் - நிறையப்பருகிய கள்ளின் இனிய மயக்கத்தாலே, இன்களி செருக்கும் - இன்பமுடன் செருக்கோடு வாழும், வன்புலக் காட்டதுவே - வன்புலத்ததாகிய காடுசூழ்ந்த காட்டின்கண் உள்ளது. முல்லை நுண்முகை அவிழ்ந்த - முல்லை யின் அரும்பு மலர்ந்த காட்டின் கண்ணதாகிய ஊரிலிருந்தாலும், பொறை தலை மணந்தன்று - அவளுள்ளம் இதுகாறும் பொறுமை யுடன் இருக்கின்றது. இனி - இனியும் நாம் செல்லக் காலம் தாழ்க்கின், உயவும் - மிக மிக வருந்துவள் என

முடிபு : உறைவோள் ஊர், வேட்டுவன் அகழ்ந்து கெண்டி மறந்து செருக்கும் காட்டகத்தது. பொறை தலை மணந்தன்று. இனி உயவும் என முடிக்க.

கருத்து : பாக! நம்மைப் பிரிந்துறையும் தலைவி இனியும் பொறாள். விரைந்து தேரைச் செலுத்துக என்று தலைவன் வேண்டினன்.

வி-ரை : உடும்பு முதலியவற்றை வேட்டையாடிய வேடன் அவற்றை வீட்டில்இட்டுக் கள்ளின் செருக்கினால் மயங்கிக் கிடப்பன். அதுபோல் நானும் பொருளீட்டி வந்த யான் அப் பொருளைத் தலைவி பால்தந்து அவள் நலனை உண்டு செருக்குறுவேன் என்று கூறினான்.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - பாகன் தேர் கடாவல்

ஒப்புமைப்பகுதி

1. வரிநுணல்

"வரிநுணல் கறங்கத் தேரை தெவிட்ட" (ஐங். 468)

6. காட்டு நாட்டதுவே

"பிறி தொன்றில்லாக் காட்டு நாட்டேமென"

(திருவால. 44:54) (புறநா. 150:19)

பாண்டி நாட்டின் உள் நாடொன்றிற்குக் காடுநாடு என்று பெயர் வழங்கியதாகத் தெரிகிறது. (புறநா. 21:6)

# 60. மருதம்

## தோழி கூற்று

மலைகண்டு அன்ன நிலைபுணர் நிவப்பின்
பெருநெல் பல்கூட்டு எருமை உழவ
கண்படை பெறாஅது தண்புலர் விடியல்
கருங்கண் வராஅல் பெருந்தடி மிளிர்வையொடு
5 புகர்வை அரிசி பொம்மல் பெருஞ்சோறு
கவர்படு கையை கழும மாந்தி
நீர்உறு செறுவின் நாறுமுடி அழுத்த நின்
நடுநரொடு நீ சேறி ஆயின் அவண
சாயும் நெய்தலும் ஓம்புமதி எம்மில்
10. மாஇருங் கூந்தல் மடந்தை
ஆய்வளைக் கூட்டும் அணியுமார் அவையே.

எ-து : சிறைப்புறமாக உழவற்குச் சொல்லுவாளாய்த் தோழி செறிப்பு அறிவுறீஇயது. (சிறைப்புறம் - வேலிப்புறம். செறிப்பு - காவலருமை.)

தூங்கல் ஓரியார்

ப-ரை : மலைகண்டு அன்ன - மலையை எடுத்து நிறுத்தி வைத்தாற் போன்ற, நிலைபுணர் நிவப்பின் - நிலையுடன் கூடிய

உயர்ச்சி பொருந்திய, பெருநெல் பல்கூட்டு - அளவற்ற நெற்களின் தொகுப்பைக் கொண்டிருக்கின்ற, எருமை உழவ - எருமையை ஏரிற்பூட்டி உழுகின்ற உழவனே; நீ, கண்படை பெறாது - இரவிலே தூங்காது, தண்புலர் விடியல் - குளிர்ச்சியை உடைய இருள் நீங்கும் விடியற் காலையில், கருங்கண் வரால் - கரிய கண்களை உடைய வரால் மீனை, பெருந்தடி மிளிர்வையொடு - பெரியனவாகத் துண்டமாகத் தறிக்கப்பட்ட தசையாகிய தான்களோடு, புகர்வை அரிசிப் பொம்மல் பெருஞ்சோறு - கலக்கப்பட்ட உணவுக்குரிய அரிசியால் ஆக்கிய மிக்க சோற்று உருண்டையை, கவர்படு - மிகுந்த ஆசையுடன், கையை - கையின் கண், கமும மாந்தி - மயக்கம் உண்டாகும் வண்ணம் நிறைய வாரி உண்டு, நீர்உறு செறுவின் - நீர் நிறைந்த வயலில், நாறுமுடி அழுத்த - நாற்று முடிகளை நடுதற்கு; நீ நின் நடுநரொடு - நீ நின் உழத்தியருடன், சேறி ஆயின் - சேர்ந்து செல்லும்போது, அவண - உழுகின்ற வயலிலுள்ள, சாயும் நெய்தலும் ஓம்புமதி - கோரைகளையும், நெய்தல்களையும் களைகள் என்று நினைத்துக் களையாது பாதுகாப்பாய். ஏன்எனில், அவை - அக்கோரையும் நெய்தலும், எம்மில் - எங்களுடைய, மா இரும் கூந்தல் - மிக்க கரிய கூந்தலை உடைய, மடந்தை - தலைவி, ஆய்வளைக் கூட்டும் பின்னொருகால் காவல் நீங்கிய சமயத்து, கோரையை வளையாகவும், நெய்தல் தழையை உடையாகவும் அணிந்து கொள்ளப்பயன்படும் அல்லவா என்றபடி.

முடிபு: உழவ சேறியாயின் ஓம்புமதி; அவை மடந்தை ஆய்வளைக்கு அமையும் என முடிக்க.

கருத்து: தலைவ! களவுணர்ந்து தலைவி இற்செறிக்கப்பட்டாள். இனி அவளைக் காணல் இயலாது. எனவே வரைவுக்குரிய முயற்சிகளில் ஈடுபடுவாயாக.

அ-ள்: மிளிர்வை - தான். சாய் - கோரை. புகர்வு - உணவுக்குரிய பண்டம், நாறு - நாற்று.

கோரையையும் நெய்தலையும் பாதுகாப்பாய் என்றமையால் தலைவியால் அவை பாதுகாக்க இயலா; இற்செறிக்கப்பட்டாள் என்றவாறு.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

# 61. குறிஞ்சி

## தோழி கூற்று

கேளாய் எல்ல தோழி அல்கல்
வேணவா நலிய வெய்ய உயிரா
ஏமான் பிணையின் வருந்தினேன் ஆக
துயர்மருங்கு அறிந்தனள் போல அன்னை
5 துஞ்சாயோ என் குறுமகள் என்றலின்
சொல்வெளிப் படாமை மெல்லஎன் நெஞ்சில்
படுமழை பொழிந்த பாறை மருங்கில்
சிரல்வாய் உற்ற தளவின் பரல்அவல்
கான்கெழு நாடற் படர்ந் தோர்க்குக்
10 கண்ணும் படுமோ என்றிசின் யானே.

எ-து : தலைவன் வரவு உணர்ந்து, தலைவிக்குச் சொல்லு வாளாய்த் தோழி சொல்லியது.

### சிறு மோலிகனார்

ப-ரை : எல்ல தோழி! ஏடி தலைவியே! கேளாய் - யான் சொல்வதைச் சிறிது கேட்பாய், அல்கல் - நேற்று இரவில், வேண் அவா நலிய - தலைவன்மாட்டுள்ள ஆசைப் பெருக்கால் நான் துன்பமுற்று, வெய்ய - வெப்பமாக, உயிரா - பெருமூச்சு விட்டு, ஏமான் பிணையின் - அம்புபட்ட பெண்மான்போல, வருந்தினேன் ஆக - வருத்தம் அடைந்தேனாக, துயர் மருங்கு - என் துன்ப மிகுதியை, அறிந்தனள்போல - அறிந்தாள் போல, அன்னை - என்தாய் என்னை நோக்கி, குறுமகள் - 'என் இள மகளே! நீ தூங்கவில்லையா?', என்றலின் - என்றலும், சொல் வெளிப்படாமை - சொல்வது வெளியிலே தெரியாதபடி, மெல்ல என் நெஞ்சில் - மெதுவாக என் மனத்திற்குள்ளே, படுமழை - மிக்க மழை, பொழிந்த - பெய்த, பாறை மருங்கில் - கற்பாறைப் பக்கத்திலே, சிரல் - மீன் கொத்திப் பறவையின், வாய் உற்ற - வாய் போன்ற, தளவின் - அரும்புகளையுடைய முல்லையும், பரல் அவல் - பருக்கைக் கற்கள் நிரம்பிய பள்ளங்களும் உடைய, கான்கெழு நாடற்கு - விளங்கிய காடு சூழ்ந்த நாட்டை உடைய தலைவனைக் கருதியிருப்போர்க்கு, கண்ணும் படுமோ - உறக்க மும் வருமோ? என்றிசின் யானே - என்று கூறினேன் யான்.

முடிபு: தோழி! நலிய, உயிரா, வருந்தினேனாக, அன்னை என்றலின் நான் நாடற்பட்டர்ந்தோர்க்குக் கண்ணும்படுமோ என்றிசின் என முடிக்க.

கருத்து: வேட்கை மிகுதியால் தூக்கமின்றியிருந்தலைத் தாய் உணர்ந்தனள். எனவே தலைவ! விரைந்து வருக: வரைந்து மகிழ்க என்றவாறு.

அ-ள்: எல்ல - இருபாலுக்கும் ஏற்ற சொல். அல்கல் - இரவு, வேணவா - வேட்கையாலுண்டாகிய ஆசை, ஏ - அம்பு,

வி-ரை: தான் அவள் என்ற வேற்றுமையின்றித் தோழி, கூறினாள், "ஒன்றித் தோன்றும் தோழிமேன" (தொல். பொருள். 39) என்னும் விதிப்படி தோழி கூற்றும் தலைவி கூற்றாகும்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவறிவுறுத்தல்.

# 62. பாலை

## தலைவன் கூற்று

வேர்பிணி வெதிரத்துக் கால்பொரு நரல்இசை
கந்துபிணி யானை அயர்உயிர்த்து அன்ன
என்றூழ் நீடிய வேய்பயில் அழுவத்து
குன்றூர் மதியம் நோக்கி நின்று நினைந்து
5 உள்ளினென் அல்லனோ யானே முள்எயிற்று
திலகம் தைஇய தேம்கமழ் திருநுதல்
எமதும் உண்டுஓர் மதிநாள் திங்கள்
உரறுகுரல் வெவ்வளி எடுப்ப நிழல்தப
உலவை ஆகிய மரத்த
10 கல்பிறங்கு உயர்மலை உம்பர்அஃது எனவே.

எ-து: முன்னொரு சமயம் பொருள் வயிற்பிரிந்து வந்த தலைவன், மீண்டும் பொருள் மேற்சென்ற நெஞ்சிற்குச் செலவு அழுங்குவித்தது.

இளங்கீரனார்

ப-ரை: வேர் பிணி வெதிரத்து - வேர்கள் ஒன்றோடு ஒன்று முறுக்குண்ட மூங்கில்களிலே, கால் பொரு நரல் இசை -

காற்று மோதுதலால் உண்டாகிய ஒலிக்கின்ற ஓசையானது, கந்து பிணி யானை - தூணிலே கட்டப்பட்ட யானை வருந்திப் பெருமூச்சு விட்டாற் போன்ற, என்றாழ் நீடிய - கோடை நிலை பெற்ற, வேய் பிறங்கு அழுவம் - மூங்கில்கள் விளங்கும் பாலை நிலவழியில், குன்று ஊர் மதியம் நோக்கி - மலையிடம் ஊர்ந்து செல்லும் சந்திரனை நோக்கி, நின்று நினைந்து - நின்று கருதி, முள் எயிறு - முட்களைப் போன்ற பற்களையும், திலகம் தைஇய - திலகம் திட்டப்பட்ட, தேம்கமழ் திரு நுதல் - மணம் கமழ்கின்ற அழகிய நெற்றியையும் உடைய, மதி நாள் திங்கள் - நாள் நிரம்பிய முழுச் சந்திரன் என்பது ஒன்று, எமதும் உண்டு - எம்மிடமும் உள்ளது. அது இப்பொழுது எங்குள்ளதோ எனில், உரறு குரல் வெவ் வளி எடுப்ப - முழங்குகின்ற ஓசையை உடைய கொடிய காற்றானது வீசுதலாலே, நிழல் பல உலவை ஆகிய - நிழலைத்தரும் இலைகள் உதிர்ந்த காய்ந்த கிளைகளை உடைய, மரத்த - வெறும் கொம்புகளாய் நிற்கின்ற மரங்களை உடைய, கல் பிறங்கு மாமலை - கற்கள் விளங்கும் பெரிய மலையின், உம்பர் அஃது என - மேலே உள்ளது என்று, யான் - நான், உள்ளினென் அல்லனோ? - நினைத்திருந்தேன் அல்லவோ? என்றபடி.

முடிபு : அழுவத்துக் குன்றூர் மதியம் நோக்கி, மதிநாள் திங்கள் எமது உண்டு; அஃது மாமலை உம்பரது என உள்ளினேன் அல்லனோ என முடிக்க.

கருத்து : தலைவன் செல்லும் பாலை நிலத்து மலைமேல் ஊரும் மதியம் நோக்கி அன்னதொரு மதியம் மாமலை உம்பரஃது என்று எண்ணிச் செலவு தவிர்வான் என்றவாறு. தலைவியின் முகம் நோக்கிச் செல்லான் என்றபடி.

அ-ள் : என்றாழ் - கோடை, உரறுதல் - முழங்குதல். உலவை - காய்ந்த கிளை.

வி-ரை : பாலை நிலத்தின் கொடுமையை என்றாழ் அழுவம் என்பது சுட்டிற்று. திருநுதல் முதலியன காதலியைக் கருதியமையால் உண்டான கவற்சியாம்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - செலவழுங்கல்.

ஒப்புமைப்பகுதி

6. நுதலுக்கு மணம் உண்மை

"நீர்வார் கண்ணை நீ இவண்ஒழிய
தேமூர் ஒண்ணுதல் நின்னெடுஞ் செலவே"
(குறுந். 59-3, 205-7, 259:2-3, 273-3, 323:45)

"நன்னுதல் நாறும் முல்லை மலர" (ஐங். 492:2)
(கலி. 14:4, 21:6, 53:14, 59:22)

"நறுநுதல்" (முருகு. 24)

"மையிருங் கான நாறு நறுநுதல்" (அகநா. 43:10)

"தேங்கமழ் புதுமலர் நாறும் இவள் நுதலே" ( " 78:24)

"நாறு நறுநுதல்" ( " 93:10)

"தேங்கமழ் திருநுதல்" ( " 389:3)

# 63. நெய்தல்

## தோழி கூற்று

உரவுக்கடல் உழந்த பெருவலைப் பரதவர்
மிகுமீன் உணக்கிய புதுமணல் ஆங்கண்
கல்லென் சேரிப் புலவற் புன்னை
விழவுநாறு விளங்குஇணர் விரிந்துஉடன் கமழும்
5 அழுங்கல் ஊரோ அறன்இன்று அதனால்
அறன்இல் அன்னை அருங்கடிப் படுப்ப
பசலை ஆகி விளிவது கொல்லோ
புள்உற ஒசிந்த பூமயங்கு அள்ளல்
கழிச்சுரம் நிவக்கும் இருஞ்சிறை இவுளி
10 திரைதரு புணரியின் கழூஉ
மலிதிரைச் சேர்ப்பனொடு அமைந்தநம் தொடர்பே.

ஏ-து: தலைவன் சிறைப்புறமாகத் தோழி அலர் அச்சத்தால் செறிப்பு அறிவுறீஇயது.

உலோச்சனார்

ப-ரை: உரவுக்கடல் உழந்த - வலிமை வாய்ந்த கடலிலே சென்று, உழந்த - மீன் பிடித்தலில் வருந்திய, பெருவலைப் பரதவர் - பெரிய வலைகளை உடைய பரதவர், மிகுமீன் உணக்கிய - மிக்க மீன்களைக் காயப்போட்ட, புதுமணல்

ஆங்கண் - புதிய மணற்பரப்பாகிய அவ்விடத்து, கல்லென் சேரி- கல் என்னும் ஆரவாரத்தை உடைய, சேரி - சேரியை அடுத்த, புலவல் புன்னை - புலால் நாற்றத்திலுள்ள, புன்னை - புன்னை யின், விழவு நாறு - விழாவுக்குரிய மணமுடைய, விளங்கு இணர் - விளங்கிய பூங்கொத்து, விரிந்து உடன் கமழும் - ஒரு சேர மலர்ந்து நறுமணம் கமழும், அழுங்கல் ஊரோ - அலர் எழுப்புகின்ற ஆரவாரமுடைய இவ்வூரோ எனில், அறன் இன்று - தருமம் உடையது இல்லை; அதனால், புள்உற - பறவைகள் வந்து உட்காருவதனால், ஒசிந்த - உதிர்ந்த, பூ மயங்கு அள்ளல்- பூக்கள் கலந்த சேற்றினை உடைய, கழிச்சுரம்நிவக்கும் - கழி யாகிய வழியின் மீதுஓடும், இருஞ்சிறை இவுளி - தேரிற் பூட்டிய பெரிய கட்டினை உடைய குதிரைகள், திரை தரு புணரியின் - அலை எழுந்து வரும் கடல் நீராலே, கழூஉ - கழுவப்படுகின்ற, மலி திரைச் சேர்ப்பனொடு - மிக்க கடல்வளத்தையுடைய தலைவனோடு, அமைந்த தொடர்பு - பொருந்திய நமது நட்பானது. அறன் இல் அன்னை - நம் களவொழுக்கத்திற்கு உடன்பாடு தாராத அறன் இல்லாத அன்னை, அருங்கடிப் படுப்ப - அரிய காவலில் எம்மை வைத்தலால், பசலை ஆகி - இங்ஙனம் பசலை நோய் படர்வதாகி, விளிவதுமன்னோ - கெட்டு அழியக்கடவதுதானோ? என்றபடி.

முடிபு : சேர்ப்பனொடு அமைந்த தொடர்பு, பசலையாகி விளிவது கொல்லோ; ஊரோ அறன் இன்று என்று முடிக்க.

கருத்து : ஊரோ அறன் இன்று: அலர் எழுந்தமையால் அன்னை இற்செறிப்புச் செய்தனள், சேர்ப்பனொடு அமைந்த தொடர்பு பசலை படர்ந்து அழியுந்தன்மைத்தோ? என்று தோழி தலைவிக்கு ஏற்பட்ட இச் செறிப்பைத் தலைமகற்கு உணர்த்தி னாள்.

அ-ள் : சுரம் - இடம். நிவத்தல் - ஓடுதல். புலவல் - அல், சாரியை.

வி-ரை : களவினைப் பொறாது அலர் தூற்றலால் அறன் இன்று என்றாள். இற்செறித்தமையால் அன்னையையும் அறன் இலள் என்றாள். பசலையாகி விளிவது என்றது பசலை பாய்த லாம்.

கழிச் சேற்றில் ஓடும் குதிரைகளின் உடம்பிலே பட்டசேறு கடல்நீரால் கழுவப்படும் என்றது, களவொழுக்கத்தை மேற் கொண்ட இருவரைப் பற்றிய அலர் அவ் விருவரும் வரைந்து கொள்ளுதலால் நீக்கப்படும் என்பதைக் குறிப்பித்தது.

புலால் நாற்றத்தைப் புன்னை மலரின் வாசனையைப் போக்கும் என்பதனால், எமரின் பொருளாசையை. தலைவன் சான்றோரை முன்னிட்டு மணம் பேசிவர வரைவு மாட்சிமைப் படும் என்னும் குறிப்பும் பெறப்பட்டது.

மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - இற்செற்செறிப்பைத் தெரியப்படுத்தி வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

6. அறனில் யாய்
"பல்லோர் துஞ்சு நள்ளென் யாமத்து.........
உயங்கு தொறும் முயங்கும் அறனில் யாயே"
(குறுந். 244:6, 262:2)

# 64. குறிஞ்சி

## தலைவி கூற்று

என்னர் ஆயினும் இனிநினைவு ஒழிக
அன்ன வாக இனையல் தோழியாம்
இன்னமாக நத்துறந்தோர் நட்பு எவன்
மரல் நார்உடுக்கை மலைஉறை குறவர்
5 அறியாது அறுத்த சிறியிலைச் சாந்தம்
வறன்உற்று ஆர முருக்கிப் பையென
மரம்வறிது ஆகச் சோர்ந்து உக்காங்குஎன்
அறிவும் உள்ளமும் அவர்வயிற் சென்றென
வறிதால் இகுளைஎன் யாக்கை இனிஅவர்
10 வரினும் நோய்மருந்து அல்லர் வாராது
அவணர் ஆகுக காதலர் இவண்நம்
காமம் படர்அட வருந்திய
நோய்மலி வருத்தம் காணன்மார் எமரே!

எ-து : பிரிவிடைத் தலைவியது அருமைகண்டு தூதுவிடக் கருதிய தோழிக்குத் தலைவி சொல்லியது.

**உலோச்சனார்**

ப-ரை : தோழீ! நமது காதலர் - நம் அன்பிற்குரிய தலைவர், என்னர் ஆயினும் - எவ்வளவு சிறப்பு உடையவரா

யிருப்பினும், இனி நினைவு ஒழிக - அவர்பால் தூதுவிட வேண்டும் என்னும் எண்ணத்தை இனிஒழிப்பாயாக, அன்ன ஆக இனையல் - நம்மை அவர் கைவிட்டார் என்று வருந்தாமது: யாம் இன்ன மாக - யாம் இப்படிப்பட்ட துன்பத்தை அடையும் வண்ணம், நம் துறந்தோர் - நம்மை விட்டுப் பிரிந்தவருடைய, நட்பு எவன் - நட்புத்தான் நமக்கு யாது பயனைத் தரும்?, மரல் நார் உடுக்கை - மரற்பட்டையின் நாரால பின்னிய உடையினை உடைய, மலை உறை குறவர் - மலையில் வாழ்கின்ற குறவர், அறியாது - தாம் விளைவு அறியாமையாலே, அறுத்த - மேற்பட்டையை அறுத்த, சிறிய இலைச் சாந்தம் - சிறிய இலையை உடைய சந்தன மரத்தில், வறன் உற்று - வற்றல் தொடங்கி, ஆர முருக்கி - மிகவும் அழிந்து, பையென - மெல்ல, மரம் வறிது ஆக - அந்த மரம் வறுமையடைய, சோர்ந்து உக்காங்கு - அதன் கண்ணுள்ள நீர் அறுபட்ட வாயின் வழியே சோர்ந்து வடிந்தாற் போல, என் அறிவும் உள்ளமும் - என் அறிவும் மனமும், அவர் வயின் சென்றென - அவரிடத்துச் சென்று ஒழிந்தன ஆதலின், இகுளை - என் தோழியே, என் யாக்கை வறிது - என் உடம்பு சக்தியின்றி யாதுமில்லையாய் நின்றது; இனி - இனிமேல், அவர் வரினும் - அவர் எம்மைக் காண வந்தாலும், நோய் மருந்து அல்லர் - யான் பெற்ற நோய்க்கு மருந்தாகார், வாராது - இங்கு வராது, காதலர் - நம் தலைவர், அவணர் ஆகுக - அங்கேயே தங்குவாராக, இவண் - இங்கு, நம் - நம்மை, காமம் படர் அட வருந்திய - காமத் துன்பம் வருத்திய, நோய் - துயரத்தை, மலி வருத்தம் - மிகப்பெற்று வருந்தும் ஏதப்பாட்டினை, எமர் - நமது சுற்றத்தார், காணன்மார் - காணாது ஒழிவாராக, யாம் இறப்பதே மேல் என்றபடி.

முடிபு : தோழி!, குறவர் அறுத்த சாந்தம் சோர்ந்து உக்காங்கு அவர் வயிற் சென்றன. துறந்தோர் நட்பு எவன்? எமர் வருத்தம் காணன்மார் என்று முடிக்க.

கருத்து : நம்மைப் பிரிந்து உறையும் தலைவர் நட்பினால் நமக்கு யாது பயன். அவர் வருவதினும் வாராதிருத்தலே நன்று. எமர் நோய் வருத்தம் காணாது நான் இறந்து படுவேன் என்று தலைவி துன்ப மிகுதி தோன்றக் கூறினாள்.

அ-ள் : நத்துறந்தோர் - நம்மைத் துறந்தோர். இரண்டன் தொகை.

வி-ரை : பட்டை சீவிய உடனேயே நீர் வடிந்து சந்தன மரம் பட்டுப் போவதுபோல, புணர்ச்சி வேட்கையால் என்

அறிவும் உள்ளமும் என்னை விட்டகல, என் உடம்பு இறக்குந் தன்மையுடையது என்று உவமையைப் பொருத்திடுக.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

13. நோய் மலி வருத்தம்

"ஆய்வளை ஞெகிழவும் அயர்வுமெய் நிறுப்பவும்
நோய்மலி வருத்தம் அன்னை அறியின்
துறைவன் சொல்லோ பிறவாயினவே" (அகநா. 205:6)

## 65. குறிஞ்சி

### தோழி கூற்று

அமுதம் உண்கநம் அயல் இலாட்டி
கிடங்கில் அன்ன விட்டுக்கரைக் கான்யாற்றுக்
கலங்கும் பாசி நீர் அலைக் கலாவ
ஒளிறுவெள் ளருவி ஒண்துறை மடுத்து
5 புலியொடு பொருத புண்கூர் யானை
நற்கோடு நயந்த அன்பில் கானவர்
விற்சுழிப் பட்ட நாமப் பூசல்
உருமிடைக் கடிஇடி கரையும்
பெருமலை நாடனை 'வருஉம்'என் றோளே.

எ-து: விரிச்சி பெற்றுப் புகன்ற தோழி தலைமகட்குச் சொல்லியது.

கபிலர்

ப-ரை: விட்டுக் கரை கான்யாற்று - விட்டுவிட்டுக் கரைத்துச் செல்லுதலையுடைய காட்டாற்றின் கண்ணே, கலங்கும் பாசி - கலங்கும் பாசியை, நீர் அலைக் கலாவ - நீர் அங்கும் இங்கும் அலைத்தலானே அவையாண்டும் கலப்ப, ஒளிறு - விளங்குகின்ற, வெள்ளருவி வெள்ளிய அருவியினது, ஒண் துறை மடுத்து - ஒள்ளிய துறையின் கண்ணே பாய்ந்து, புலியொடு பொருத புண்கூர் யானை - புலியுடனே போர் செய்தலாற் பெற்ற புண்மிக்க யானையின், நற்கோடு - நல்ல தந்தங்

களை, நயந்த - விரும்பிய, அன்பு இல் - அன்பில்லாத, கானவர் - வேடரின், விற்கழிப்பட்ட - வில்லினின்று விடும் அம்புபட்டதனாலாகிய, நாமப் பூசல் - சுழன்ற அச்சத்தைத் தருகின்ற பிளிற்றலின் பேரோசையானது, உரும் இடைக் கடி இடி கரையும் - இடியாலுண்டாகும் மிக்க முழக்கத்தைப்போல ஒலிக்கும், பெருமலை நாடனை - பெரிய மலைக்குரிய தலைவனை, நம் அயல் மனையாட்டி - நம்முடைய அயல் வீட்டுப் பெண்ணொருத்தி, 'கிடங்கில்' அன்ன - கிடங்கில் என்னும் ஊரைப் போன்ற இனிய சொல்லால், வரூஉம் என்றோள் - வேறொருத்தியிடம் அவன் இப்பொழுதே வருவானென்று அசரீரியாகக் கூறினாள். அது நமக்கு நன் நிமித்தமாயிற்று. எனவே, அமுதம் உண்க - அந்த அயல் மனையாட்டி அமுதம் உண்பாளாக என்றபடி.

பி-ம். 4 உண்டுறை.

முடிபு: யானைப் பூசல் கடியிடி கரையும் பெருமலை நாடனை வரூஉம் என்ற அயலிலாட்டி அமுதம் உண்க என முடிக்க.

கருத்து: குறித்த பருவத்துத் தலைவன் வாராமையால் தலைவி வருந்திய பொழுது அயல்மனைப் பெண்ணொருத்தி அசரீரியாக 'நாடனை வருவான்' என்று கூறினள். அந்த நற்சொல் கூறிய அவள் அமுதம் உண்பாளாக என்று வாழ்த்தினள்.

அ-ள்: கிடங்கில் - ஒருர். விரிச்சி - நன்நிமித்தம்.

புண்மிக்க யானை காம நோய் பெற்ற தலைவியாகவும், வேடர் யானையின் மேல் அம்பெய்தல், அயலவர் தூற்றும் அலராகவும், யானை பூசலிடுவது தலைவி வருந்தி அழுவதாகவும், யானையின் பூசல் மலையிற் சென்று மோதுதல், தலைவி படும்துன்பம் தலைவனைச் சென்றடைந்ததாகவும் குறிப்புப் பொருள் காண்க.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

9. பெருமலை நாடன்

"அமிழ்தம் உண்க நம் அயலிலாட்டி
கழை நிவந்து ஓங்கிய சோலை
மலைகெழு நாடனை வருமென்றோளே" (குறுந். 201:6-7)
"பிறங்கிருஞ் சோலை நன்மலை நாடன்" (கலி. 42:4)
பாடல் முழுவதும் (குறுந். 38, 39)

# 66. பாலை

## நற்றாய் கூற்று

மிளகு பெய்தனைய சுவைய புன்காய்
உலறுதலை உகாஅய்ச் சிதர்சிதர்த்து உண்ட
புலம்புகொள் நெடுஞ்சினை ஏறி நினைந்துதன்
பொறிகிளர் எருத்தம் வெறிபட மறுகிப்
5 புன்புறா உயவும் வெந்துகள் இயவின்
நயந்த காதலற் புணர்ந்தனள் ஆயினும்
சிவந்து ஒளிமழுங்கி அமர்த்தன கொல்லோ
கோதை மயங்கினும் குறுந்தொடி நெகிழினும்
காழ்பெயல் அல்குல் காசுமுறை திரியினும்
10 மாண்நலம் கையறக் கலுழும் என்
மாயக் குறுமகள் மலர்ஏர் கண்ணே.

எ-து: மனைமருட்சி, (உடன்போக்குச் சென்ற மகளை நினைந்து நற்றாய் மனையகத்து மருண்டு கூறியது.)

### இனிச்சந்த நாகனார்

ப-ரை: மிளகு பெய்தனைய சுவைய - மிளகினை இட்டு வைத்தாற்போன்ற சுவையுடைய, உலறு தலை - காய்ந்த கிளைகளையுடைய, உகாஅய்ப் புன்காய் - உகாய் மரத்திலுள்ள புல்லிய காயை, சிதர் சிதர்த்து உண்ட - வண்டுகள் நெருங்காத படி ஒட்டி உண்டதனாலாகிய, 'புலம்பு கொள் புன்புறா - வருத்தம் மிக்க மெல்லிய புறா, நெடுஞ்சினை ஏறி - நெடிய கிளைமேல் ஏறி, நினைந்து - தான் தின்ற தவற்றைக் கருதி, தன் - தன்னுடைய; பொறிகிளர் எருத்தம் - வரைகள் விளங்கிய பிடரியைச் சிலிர்த்து, வெறிபட மறுகி உயவும் - தின்ற வெறுப்பி னால் மயக்கமுற்று வருந்தா நிற்கும், வெந்துகள் இயவின் - வெப்பம் வாய்ந்த புழுதிமிக்க வழியின்கண், நயந்த காதலர் புணர்ந்தனள் ஆயினும் - தான் விரும்பிய காதலனுடன் கூடிச் சென்றனள் என்பதற்காக, யான் வருந்தேன். கோதை மயங்கினும் - சூடிய மாலை சிக்குண்டாலும், குறுந்தொடி - சிறிய வளைகள், நெகிழினும் - கழன்று நழுவினாலும், காழ் பெய் அல்குல் - மேகலை அணிந்த அல்குலின்மேல், காசு முறை திரியினும் - தொங்குகின்ற காசுகள் முறை பிறழ்ந்தாலும், மாண் நலம் கையறக் கலுழும் - அவற்றைச் சரிசெய்துகொள்ள அறியாதவளாய்த் தன் பேரழகு சிதையுமாறு அழாநிற்கும், என் மாயக் குறுமகள் - எனது அழகிய இளம்பெண்ணின், மலர் ஏர்

கண் - மலர்போன்ற கண்கள், சிவந்து - பாலைவனக் கடுமையாற் சிவந்து, ஒளிமழுங்கி - பார்வை குன்றி, அமர்த்தனகொல்லோ - கலக்கம் அடைந்தனவோ? இதற்காகவே யான் வருந்துவேன்.

முடிபு : புன்புறா உயவும் வெம்துகள் இயவி புணர்ந்தனள் ஆயினும், மலர் ஏர்கண் மழுங்கி அமர்த்தன கொல்லோ என்று முடிக்க.

கருத்து : நற்றாய் உடன்போக்குச் சென்ற தலைவியது மென்மைத் தன்மைகண்டும் அவள் சென்ற வழியினருமை நினைந்தும் மனையின்கண் வருந்திக் கூறியது.

அ-ள் : சிதர் - வண்டு. இயவு - நெறி. காழ் - எண்கோவையாலாய மேகலை. மாயம் - அழகு.

வி-ரை : புறா தின்னத் தகாத காயைத்தின்று கிளையிலேறி மயக்கமுற்று, வருந்தினாற்போல, என் மகள் அயலானது மாய இன்பத்தினை நன்றெனக் கொண்டு உடன்போக்குச் சென்று பின்பு வருந்தி நிற்பளோ என்றவாறு.

மெய்ப்பாடு - உவகைக் கலுழ்ச்சி.

பயன் - ஆற்றாமை நீங்குதல்.

# 67. நெய்தல்

## தோழி கூற்று

சேய்விசும்பு இவர்ந்த செழுங்கதிர் மண்டிலம்
மால்வரை மறையத் துறைபுலம்பு இன்றே
இறவு அருந்திஎழுந்த கருங்கால் வெண்குருகு
வெண்குவட்டு அரும்சிறைத் தாஅய்க் கரைய
5 கருங்கோட்டுப் புன்னை இறைகொண் டனவே
கணைக்கால் மாமலர் கரப்ப மல்குகழித்
துணைச்சுறா வழங்கலும் வழங்கும் ஆயிடை
எல்இமிழ் பனிக்கடல், மல்குசுடர்க் கொளீஇ
எமரும் வேட்டம் புக்கனர் அதனால்
10 தங்கின் எவனோ தெய்ய பொங்குபிசிர்
முழவு இசைப்புணரி எழுதரும்
உடைகடற் படப்பை எம்உறைவின் ஊர்க்கே

எ-து : பகற்குறிவந்து நீங்கும் தலைமகனைத் தோழி வரைவு கடாயது.

## பேரிசாத்தனார்

ப-ரை : சேய் விசும்பு இவர்ந்த - சேய்மைக் கண்ணே ஆகாயத்தில் ஏறிவந்த, செழும் கதிர் மண்டிலம் - செழுமையான கிரணங்களை உடைய சூரியமண்டிலம், மால்வரை மறைய - பெரிய மலையிடைச் சென்று மறைய, துறை புலம்பு இன்று - யாரும் இல்லாமல் கடல்துறை தனிமைப்பட்டுள்ளது, (தவிர) இறா - இறாமீனை அருந்தி எழுந்த - தின்று எழுந்த, கரும்கால் வெண்குருகு - கரியகாலை உடைய வெள்ளிய நாரைகள், வெண் குவட்டு - வெள்ளிய உப்புக் குவியலின்மேல், அரும் சிறைத்தாய் - அரிய சிறகுகளை வீசிப் பறந்து சென்று, கரைய கரும் கோட்டுப் புன்னை இறைகொண்டன - கரையிலுள்ள கரிய கிளைகளை உடைய புன்னை மரங்களிலே தங்குதல் கொண்டன. மேலும் கணைக்கால் மாமலர் - திரண்ட தண்டினை உடைய சிறந்த நெய்தல் மலர்கள், கரப்ப - மறையும் வண்ணம், மல்குகழி - நீர்ப் பெருக்கெடுத்து ஓடும் கழியின் கண்ணே, துணைச் சுறா - துணையோடு சுறாமீன், இயங்கலும் இயங்கும் - இயங்குதலும் செய்யும். ஆயிடை - மேலும் அவ்விடத்தில், எல் இமிழ் பனிக் கடல் - ஒலிக்கின்ற குளிர்ச்சியை உடைய கடலில், மல்கு சுடர்க் கொளீஇ - ஒளிமிக்க விளக்குகளை எடுத்துக்கொண்டு, எமரும் - எம்மைச் சார்ந்த அனைவரும், வேட்டம் புக்கனர் - மீன் வேட்டையாடச் சென்றுவிட்டனர். அதனால் - ஆதலால், பொங்கு பிசிர் - நீர்த்திவலைகளையும், முழவு இசை - முழவு போன்று ஒலித்தலையும் உடைய, புணரி எழுதரும் உடைகடல் - அலையெழுந்து உடைந்து விழுகின்ற கடற்கரையிலுள்ள, படப்பை - நெய்தல் நிலத்தில், எம் உறைஇன் ஊர்க்கு - யாம் வசிக்கும் இனிமையுடைய ஊரில், தங்கின் எவனோ - இன்று இரவில் தங்கிச் செல்லின் உமக்கு வரும் குறைபாடு என்னவோ? என்றவாறு.

முடிபு : துறைபுலம்பின்று; இறைகொண்டன; வழங்கலும் வழங்கும்; எமர்வேட்டம் புக்கனர்; அதனால் எம் உறைவின் ஊரில் தங்கின் எவனோ? என்று முடிக்க.

கருத்து : தோழி தலைவனைப் பார்த்து நீர்வந்து செல்லும் வழி ஏதம் உடைத்து. எமரும் வேட்டை மேற்சென்றனர். இன்று இரவு எம்இல்லில் தங்கிச் செல்க என்று கூறுவாள்போன்று வரைவு கடாயினாள்.

அ-ள் : இறை கொள்ளல் - தங்குதல். ஊர்க்கு - உருபு மயக்கம்.

வி-ரை : துறை புலம்பின்று என்றமையால் மக்கள் இயங்கார்; ஆறலை கள்வரால் ஏதம் உண்டாகும் என்றாள். குருகுகள் வெண்குவட்டில் தங்கும் என்றது தலைவியோடு உடனுறைக என்றபடி. சுறாமீன் துணையோடு இயலும் என்றது தலைவியோடு சேர்ந்து வாழ்க என்று பெயர்த்தும் கூறியபடி. தமரும் வேட்டம் புக்கனர் எனவே, தமரால் ஏதம் நிகழாமை கூறிற்று.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

3. கருங்கால் வெண் குருகு

"கழி தேர்ந்தசை இய கருங்கால் வெண்குருகு
(குறுந். 303:1.)

5. கருங்கோட்டுப் புன்னை (நற். 249:1, 311:9.)
(ஐங். 161.2) (பெருங். 1.40:68)

8-9. பன்மீன் வேட்டம்

"பன்மீன் வேட்டத்து என்ஐயர் திமிலே." (குறுந். 123:5)

"புன்றலை இரும் பரதவர்...பாயிரும் பனிக்கடல்
வேட்டஞ் செல்லாது." (பட். 90:92)
(அகநா. 140, 170: 11, 10: 1) (புறநா. 399:5)

# 68. குறிஞ்சி

## தோழி கூற்று

விளையாடு ஆயமொடு ஓரை ஆடாது
இளையோர் இல்லிடத்து இற்செறிந்து இருத்தல்
அறனும் அன்றே ஆக்கமும் தேய்ம்எனக்
குறுநுரை சுமந்து நறுமலர் உந்தி
5 பொங்கிவரு புதுநீர் நெஞ்சுண ஆடுகம்
வல்லிதின் வணங்கிச் சொல்லுநர்ப் பெறினே
செல்க என விடுநள்மன் கொல்லோ? எல்உமிழ்ந்து
உரவுஉரும் உரறும் அரைஇருள் நடுநாள்
கொடிநுடங்கு இலங்கின மின்னி
10 ஆடுமழை இறுத்தன்று.அவர்கோடுயர் குன்றே.

எ-து : தலைவன் சிறைப்புறமாகத் தோழி தலைவிக்கு உரைப்பாளாய்ச் செறிப்பு அறிவுறீஇயது.

## பிரான் சாத்தனார்

ப-ரை : அலர் கோடு உயர் குன்று - தலைவரது சிகரம் உயர்ந்த குன்றம் எங்கும், அல் உமிழ்ந்து - ஒளியைப் பரப்பி, உரவு உரும் உரறும் - வலிய இடி முழங்குகின்ற, அரை இருள் நடுநாள் - இரவு இருளின் நடுயாமத்திலே, கொடி நுடங்கு - கொடி அசைந்தாற்போல, இலங்கின - விளங்கினவாய், மின்னி - மேகம் மின்னுதலைச் செய்து, ஆடு மழை இறுத்தன்று - அசைகின்ற மேகம் தங்கி மழையைப் பெய்கின்றது; இளையோர் - இப் பொழுது இளமங்கையர், ஆயமொடு - தாம் விளையாடுகின்ற தோழியர் கூட்டத்தோடு, ஓரை ஆடாது - பாவை கொண்டு விளையாடாமல், இற்செறிந்து இருத்தல் - வீட்டிற் காவல் கொண்டு இருத்தல், அறன் அன்று - முறைமையும் அல்ல, ஆக்க மும் தேய்ம் - மேலும் சோம்பலால் செல்வமும் சுருங்கி விடும், என - என்று, வல்லிதின் - விரைவாகச் சென்று, வணங்கி- பணி வுடன், சொல்லுநர்ப் பெறின் - என் அன்னையிடம் சொல்லு வாரைப் பெற்றால், செல்க என - அங்ஙனமாயின் சென்று விளையாடுவீர் என்று, விடுநள் மற்கொலோ - என் அன்னை ஆட விடுவாளோ? அவ்வாறு விடுத்தால், (அலர் மலையிற் பெய் யும் மழை) குறு நுரை சுமந்து - சிறிய நுரைகளைச் சுமந்து கொண்டு, நறுமலர் உந்தி - நறிய மலர்களைத் தள்ளிக் கொண்டு, பொங்கி வரு புதுநீர் - ஆற்றிற் பொங்கி வருகின்ற புதுநீரில், நெஞ்சு உண - உள்ளம் மகிழ ஆடுவோம். அவ்வாறு அன்னை யிடம் சொல்வாரைப் பெற்றிலேம் ஆதலால் எம் ஆசை கெட்டது என்றவாறு.

முடிபு : கோடுயர் குன்றில் மழை இறுத்தன்று; ஓரை ஆடாது இருத்தல் அறனும் அன்று. ஆக்கமும் தேய்ம்; சொல்லு நர்ப் பெறின் ஆடுகம் என முடிக்க.

கருத்து : தலைவி, தலைவர் குன்றில் பெய்த மழை ஓடி வருகின்றது. அந் நீரில் ஆடுவதற்கு ஏற்றவண்ணம் இற்செறிப்பை அகற்றுமாறு அன்னையிடம் யாரேனும் சொல்லின் நன்று. அவ்வாறு சொல்வாரைப் பெற்றிலமே என்று தோழி நொந்து கூறியது. இதுவும் வரைவு கடாதலாம்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

1. ஓரை ஆயம்

"ஓரை ஆயம் கூறக் கேட்டும்" (குறுந். 48:3) (புறநா.176:1)

௨. அரை இருள் நடுநாள்

"உரவுரும் உரறும் அரையிருள் நடுநாள்" (குறுந். 189:5)

# 69. முல்லை

## தலைவி கூற்று

பல்கதிர் மண்டிலம் பகல்செய்து ஆற்றிச்
சேய்உயர் பெருவரைச் சென்றுஅவண் மறையப்
பறவை பார்ப்புவயின் அடையப் புறவின்
மாஎருத்து இரலை மடப்பிணை தழுவ
5 முல்லை முகைவாய் திறப்பப் பல்வயின்
தோன்றி தோன்றுபு புதல்விளக்கு உறாஅ
மதர்வை நல்லான் மாசுஇல் தெண்மணி
கொடுங்கோற் கோவலர் குழலோடு ஒன்றி
ஐதுவந்து இசைக்கும் அருள்இல் மாலை
10 ஆள்வினைக்கு அகன்றோர் சென்ற நாட்டும்
இனைய ஆகித் தோன்றின்
வினைவலித்து அமைதல் ஆற்றலர் மன்னே

எ-து: வினைவயிற் பிரிதல் ஆற்றாளாய தலைவி சொல்லியது.

### சேகம்பூதனார்

ப-ரை: பல்கதிர் மண்டிலம் - பல கதிர்களையுடைய சூரிய மண்டிலம், பகல் செய்து ஆற்றி - பகற்பொழுதில் ஒளி தந்து தன் வினை முடித்து, சேய் உயர் பெருவரை - மிக உயர்ந்த பெரிய அஸ்தமனகிரியில், சென்று அவண் மறைய - வீழ்ந்து அங்கே மறையவும், பறவை பார்ப்புவயின் - பறவைகள் தம் குஞ்சுகள் இருக்கும் கூட்டிற் சென்று தங்கி இருப்பவும், புறவின் - காட்டிடத்து, மாஎருத்து இரலை - கரிய பிடரியை உடைய கலைமான், மடப்பிணை தழுவ - இளமையை உடைய தன் பெண் மானைத் தழுவி இருப்பவும், முல்லை முகைவாய் திறப்ப - முல்லை அரும்புகள் மலரவும், பல்வயின் - பல இடங்களில், புதல் - புதர்கள்

தோறும், தோன்றி தோன்றுபு - காந்தள்கள் நன்கு பூத்துத் தோன்றி, விளக்கு உறாஅ - விளக்கு ஏந்தி நிற்கவும், மதர்வைநல் ஆன் - செம்மாப்புடைய நல்ல பசுவின், மாசு இல் - குற்றம்அற்ற, தெள் மணி - மணியின்தெளிந்த ஓசை, கொடுங்கோல் கோவலர்- வளைந்த கோலையுடைய ஆயர்களின், குழலோடு - குழல் ஓசை யோடு, ஒன்றி - சேர்ந்து, ஐது - மெல்லியதாக, வந்து - வந்து, இசைக்கும் - ஒலிக்கும், அருள் இல் மாலை - நம்மிடம் சிறிதும் அருள் இல்லாத மாலைப்பொழுதானது, ஆள் வினைக்கு - பொருள் ஈட்டுதற்கு, அகன்றோர் - பிரிந்து சென்ற தலைவர், சென்ற நாட்டும் - போய்த் தங்கியிருக்கும் நாட்டின் கண்ணும், இனைய ஆகித் தோன்றின் - இத்தன்மையவாகத் தோன்று மானால், வினை வலித்து - தாம் மேற்கொண்ட செயலில் தலைவர் உறுதி கொண்டு, அமைதல் ஆற்றலர் - தங்கி இரார், மன் - அது கழிந்தது என் செய்வேன் என்றபடி.

முடிபு : மண்டிலம் மறைய, அடைய, தழுவ, திறப்ப, விளக்கேந்த, இசைக்கும் மாலை தோன்றின் ஆற்றலர் மன் என முடிக்க.

கருத்து : தோழி! நம்மைத் துன்பத்தில் ஆழ்த்தும் மாலைப் பொழுது தலைவர் நாட்டிலும் சென்று அவருக்குத் துன்பத்தைத் தருமானால் அவர் ஆங்கு உறையார். விரைவர்: வரைவர்.

அ-ள் : பார்ப்பு - இளம் குஞ்சுகள். ஐது மெல்லியது. மன்- கழிவு.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயர்வுயிர்த்தல்.

# 70. மருதம்

## தலைவி கூற்று

சிறு வெள்ளாங் குருகே சிறு வெள்ளாங் குருகே
துறை போகு அறுவைத் தூமடி அன்ன
நிறம் கிளர் தூவிச் சிறு வெள்ளாங் குருகே
எம் ஊர் வந்து எம்ஒண்துறைத் துழைஇ
5 சினைக் கெளிற்று ஆர்கையை அவர்ஊர்ப் பெயர்தி
அனைய அன்பினையோ பெருமறவியையோ
ஆங்கண் தீம்புனல் ஈங்கண் பரக்கும்
கழனி நல்லூர் மகிழ்நர்க்கு என்
இழைநெகிழ் பருவரல் செப்பா தோயே

எ-து : காமம் மிக்க கழிபடர் கிளவி.

## வெள்ளி வீதியார்

ப-ரை : சிறு வெள்ளாங் குருகே, சிறுவெள்ளாங் குருகே - சிறிய வெள்ளிய நாரையே! சிறியவெள்ளிய நாரையே!! துறை போகு அறுவைத் தூமடி அன்ன - நீர்த் துறையிலே கழுவிய வெண்ணிற ஆடையின் மாசுஅற்ற மடிபோன்ற, நிறம் கிளர் தூவி - நன்னிறம் விளங்கிய சிறகினை உடைய, சிறுவெள்ளாங் குருகே - சிறிய வெள்ளிய நாரையே! ஆங்கண் தீம்புனல் - அவ் விடத்திலுள்ள இனியநீர், ஈங்கண் பரக்கும் - இவ்வூரின் கண்ணே வந்து பரக்கின்ற, கழனி நல்லூர் மகிழ்நர்க்கு - வயல்களை உடைய நல்ல ஊரினை உடைய எனது காதலர்பாற் சென்று, என் இழை நெகிழ் பருவரல் - பிரிவினால் என்னுடைய அணிகலன்கள் கழலுகின்ற துன்பத்தை, செப்பாதோய் - இதுகாறும் சொல்லாதோய், எம் ஊர்வந்து - நீ எம்மூரினை அடைந்து, எம் ஒள்துறைத் துழைஇ - எமது ஒள்ளிய பொய்கை யினது துறையிலே புகுந்து துழாவி, சினைக் கெளிற்று ஆர்கையை - சினையுள்ள கெளிற்றுமீனைத் தின்றாயாகி, அவர் ஊர்ப் பெயர்தி - அப்பால் அவருடைய ஊர்க்குச் செல்வாயாக. அனைய அன்பினையோ - எம்மூர் வந்து உண்ட நன்றிமறவாமல் இனி அவரிடம் எம் நிலையைப்பற்றிக் கூறத்தக்க அனைய அன்பினை உடையையோ? பெருமறவியையோ - அல்லது பெரிய மறதியை உடையையோ? ஒன்றனைத் துணிந்து சொல்.

முடிபு : குருகே! மகிழ்நர்க்குச் செப்பாதோய்! எம் ஊர் வந்து ஆர்கையை, அன்பினையோ, மறவியையோ சொல் என முடிக்க.

கருத்து : யான் படும் துன்பத்தைத் தலைவர்க்கு யாரேனும் சென்று சொல்லின் என் துயர் தீரும் என்று தலைவி வேட்கை மிகுதியாற் கூறினாள்,

அ-ள் : குருகு - நாரை. அறுவை - ஆடை. தூவி - சிறகு. மறவி - மறதி. பருவரல் - துன்பம். தூது முனிவின்மை பற்றியெழுந்தபா.

வி-ரை : ஆங்கண் தீம்புனல் ஈங்கன் பரக்கும் என்றது ஆங்கும் நீ இரையைப் பெறுவை என்றும், ஊரும் அணித்து என்றும் குறிப்பித்தான்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயர்வுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

9. இழை நெகிழ்தல்

"முகை முற்றினவே முல்லை முல்லையொடு
........................
வாலிழை நெகிழ்த்தோர் வாரார்
மாலை வந்தன்றெனள் மாணலம் குறித்தே."
(குறுந். 188, 358)

"விறலிழை நெகிழ்த்த வீவருங் கடுநோய்" (குறிஞ்சி 3)
"இழை நெகிழ் செல்லல்"
"இழை நிலை நெகிழ"
"இழை நெகிழ் செல்லலுறீஇ"
"வில்லிழை நெகிழ" (ஐங். 25:4, 310:2, 315:3, 318:2)
"பாசிழை நெகிழ" (பதிற். 68, 15)
"திருந்திழை நெகிழ்ந்தன"
"வீங்கிழை நெகிழச் சாஅய்"
"திருந்திழை நெகிழ்ந்து"
(அகநா. 206:16, 251:3, 255:17, 387:11)

# 71. பாலை

## தோழி கூற்று

மன்னாப் பொருட்பிணி முன்னி இன்னதை
வளைஅணி முன்கை நின் இகுளைக்கு உணர்த்தெனப்
பல்மாண் இரத்திர் ஆயின் சென்ம் என
விடுநள் ஆதலும் உரியள் விடினே
5 கண்ணும் நுதலும் நீவி முன் நின்று
பிரிதல் வல்லிரோ ஐய செல்வர்
வகைஅமர் நல்இல் அகஇறை உறையும்
வண்ணப் புறவின் செங்காற் சேவல்
வீழ்துணைப் பயிரும் கையறு முரல்குரல்
10 நும்இலள் புலம்பக் கேட்டொறும்
பொம்மல் ஓதி பெருவிதுப்பு உறவே.

எ-து : தலைவனைத் தோழி செலவழுங்குவித்தது.

வண்ணப்புறக் கந்தரத்தனார்

ப-ரை : ஐய - தலைவ! மன்னா - நிலையில்லாத, பொருட்பிணி - பொருளின்மேல் எழுந்த ஆசையால், முன்னி - அதனைப்

பெற எண்ணி, இன்னதை - பொருள்வயிற் பிரிய இருப்பதை, வளை அணி முன்கை - வளையணிந்த முன்கையை உடைய, நின் இகுளைக்கு - உன் தோழிக்கு, அதாவது தலைவிக்கு, உணர்த்து என - கூறுவாயாக என்று, பல்மாண் - பலவாக மாட்சிமைப்பட, இரத்திர் ஆயின் - வேண்டிக் கூறுகின்றீர் ஆதலால், (அதன்படி யான் சென்று தலைவியிடம் நும் பிரிவைக் கூறின்) சென்மென - "நீவிர் செல்வீராக" என்று, விடுநள் ஆதலும் உரியள் - உம்மைச் செல்ல விடினும் விடுவள், விடினே - அவ்வாறு அவள் நும்மை விடுப்பினும், செல்வர் - செல்வர்களின் வகை அமர் நல் இல் - பல பிரிவறைகளைக் கொண்ட சிறந்த வீட்டின்கண், அகம் இறை உறையும் - உள் இறப்பில் தங்கியிருக்கும், வண்ணப் புறவின் - அழகிய புறாக்களுள் சிறந்த, செங்காற் சேவல் - சிவந்த கால் களை உடைய சேவற் புறா, வீழ் துணைப் பயிரும் - தான் விரும்பிய பெண் புறாவைப் புணர்ச்சிக்கு அழைக்கும். கையறு முரல் குரல் - காமத்தாற் செயலற்று ஒலிக்கின்ற அக் குரலோசையை, நும் இலள் - உம்மைப் பிரிந்து, கேட்டொறும் - கேட்கும்பொழுது எல்லாம், பொம்மல் ஓதி - எம் பொலிவு பெற்ற கூந்தலை உடைய தலைவி, பெருவிதுப்பு உற - பேர் அவாவால் நடுங்கி வருந்தும், முன் நின்று - அவளுக்கு முன்நின்று, கண்ணும் நுதலும் நீவி - அவளுடைய கண்ணையும் நெற்றியையும் தடவி, பிரிதல் வல்லிரோ - பிரிந்து செல்வதற்கு வன்மை உடையீரோ? உடையீராயிற் சென்று சொல்லுவேன்.

முடிபு: ஐயா! பொம்மலோதி பெருவிதுப்புற முன்னின்று நீவி, பிரிதல் வல்லிரோ, வல்லீராயின் விடுநள் ஆதலும் உரியள் என முடிக்க.

கருத்து: பிரிவை உணர்த்திய தலைவன்பால் இயல்பா யமைந்த கண்ணோட்டத்தால் தலைவி பிரிவிற்கு உடன்படினும், ஆண்புறா புணர்ச்சி கருதிப் பெண் புறாவை அழைக்கும் குரலோசை கேட்டுப் பெரிதும் துன்பம் அடைவள். நும்மால் இயலுமாயின் நீரே நும்பிரிவை உணர்த்திச் செல்வீர் என்று தோழி செலவழுங்குவித்தாள்.

அ-ள்: பயிர்தல் - புணர்ச்சிக்கு அழைத்தல். விதுப்பு - ஆசையினால் வருந்துகின்ற வருத்தம்.

வி-ரை: இப்பொழுது நிலைத்து நிற்கும் காம இன்பத்தை நுகராது பிரிந்து நிலையில்லாத பொருளை விரும்பும் நும் அறிவு என்னே என்று நொந்தாள்.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - செலவழுங்குவித்தல்.

ஒப்புமைப்பகுதி

1. பொருட்பிணி

"காமர் பொருட்பிணிப் போகிய"
(குறுந். 255:7; 344:7; 350:8.) (ஐங். 355:2)
(கலி. 4:25) (அகநா. 43:14; 51:8)

நிலையாப் பொருட்பிணி
"அம்ம வாழி தோழி முன்னின்ற............
நிலையாப் பொருட்பிணிப் பிரிந்திசினோரே"
(கலி. 8:11. 14:1) (அகநா. 79:17)

# 72. நெய்தல்

## தோழி கூற்று

பேணுப பேணார் பெரியோர் என்பது
நாணுத் தக்கன்று அதுகாணும் காலை
உயிர்ஓர் அன்ன செயிர்தீர் நட்பின்
நினக்குயான் மறைத்தல் யாவது மிகப்பெரிது
5 அழிதக்கன்றால் தானே கொண்கன்
யான்யாய் அஞ்சுவல் எனினும் தானே
பிரிதல் சூழான் மன்னே இனியே
கானல் ஆயம் அறியினும் ஆனாது
அலர்வந்து அன்றுகொல் என்னும் அதனால்
10 புலர்வதுகொல் அவன் நட்பு என
அஞ்சுவல் தோழி என் நெஞ்சத் தானே!

எ-து: தோழி சிறைப்புறமாகத் தலைவிக்கு உரைப் பாளாய்ச் சொல்லியது.

### இளம் போதியார்

ப-ரை: பெரியோர் - சான்றோர், பேணுப - தாம் விரும் பும் பொருள்களை, பேணார் - நன்கு பாதுகாவார், என்பது காணும் காலை - என்னும் உண்மையை நோக்குமிடத்து, நாணுத் தக்கன்று - எனக்குப் பெரிதும் வெட்கத்தைத் தருகின்றது, உயிர் ஓர் அன்ன - வேறுபாடின்றி உயிர் ஒன்றாக இருந்தாலொத்த, செயிர் தீர் நட்பின் - குற்றம் அற்ற நட்பினை

உடைய, நினக்கு - உன்னிடம், யான் மறைத்தல் யாவது - யான் தலைவன் செயலை மறைப்பது எவ்வாறு இயலும்?, மிகப் பெரிது அழிதக்கன்றால் தானே - அவ்வளவு பெரிய மானக் கேடாக இருக்கின்றது?, யான் யாய் அஞ்சுவல் எனினும் - முன்பெல்லாம், நான் அவனை நோக்கி "அன்னைக்கு அஞ்சுவேன்; ஆகையால் அகன்று செல்வாய்" என்றாலும், கொண்கன் - தலைவன், தானே பிரிதல் சூழான் - நம்மை விட்டுப் பிரியக் கருதுபவன் அல்லன், மன் - அது கழிந்தது, இனி - இப்பொழுதோ என்றால், கானல் ஆயம் - அக் கடற்கரைச் சோலையில் விளையாடுகின்ற தோழியர் கூட்டம், அறியினும் - அறிவதா யினும், ஆனாது - அடங்காமல், அலர்வது அன்று கொல் - அலர் வந்து சேருமோ, என்னும் - என்று அஞ்சும், அதனால் - ஆகை யால், என் நெஞ்சத்து - என் உள்ளத்தின் கண், அவன் நட்பு - அவனுடைய தொடர்பு, புலர்வது கொல் என - இல்லையாய் விடுமோ என்று, அஞ்சுவல் - அச்சப்படுவேன்.

முடிபு: தலைவி! கொண்கன் யாய் அஞ்சுவல் எனினும் பிரிதல் சூழான்; இனி ஆயம் அறியினும் அலர் எழுமோ என்று அஞ்சும், அதனால் அவன் நட்பு புலர்வது கொல் என்று அஞ்சு வல் என முடிக்க.

கருத்து: தாயறியினும் களவிற் புணர்ச்சியை அஞ்சாது வேண்டி நின்ற தலைமகன், இப்பொழுது தோழியர் கூட்டம் இதனை அறியின் அலர் எழுமே என்று அஞ்சி ஒழுகுவது பெருந் தன்மையன்று என்று தோழி கூறி வரைவு உடன்படுத்தினாள்.

விளக்கம்: 'பேறுயா வேனார் பெரியோர்' என்பது பிறிது மொழிதலாம். தன் அச்சத்தைத் தலைவி அறியின் இறந்து படுவள் என்று தலைவன் அறிந்து வரைவொடு புகுவனாம்.

மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - வரைவுடன்படுத்தல்.

ஒப்புமைப்பகுதி

3. உயிரோரன்ன நட்பு

"உயிர் கலந்தொன்றிய செயிர்தீர் நட்பின்" (ஐங்.479)

# 73. பாலை

## தலைவி கூற்று

வேனில் முருக்கின் விளைதுணர் அன்ன
மாணா விரல வல்வாய்ப் பேஎய்
மல்லல் மூதூர் மலர்ப்பலி உணீஇய
மன்றம் போழும் புன்கண் மாலை
5 தம்மொடும் அஞ்சும் நம் இவண் ஒழியச்
செல்ப என்ப தாமே செவ்வரி
மயிர்நிரைத்து அன்ன வார்கோல் வாங்குகதிர்ச்
செந்நெல்அம் செறுவின் அன்னம் துஞ்சும்
பூக்கெழு படப்பைச் சாய்க்காட்டு அன்ன என்
10 நுதற்கவின் அழிக்கும் பசலையும்
அயலோர் தூற்றும் அம்பலும் அளித்தே.

எ-து: செலவுக் குறிப்பறிந்து வேறுபட்ட தலைவி சொல்லியது.

மூலங் கீரனார்

ப-ரை: வேனில் - வேனிற் காலத்து, முருக்கின் - செம் முருக்கினது, விளை துணர் அன்ன - பூங்கொத்தில் காய்த்துப் பழுத்து முற்றிய நெற்றுப் போன்ற, மாணா விரல - மாண்பில்லாத விரல்களை உடைய, வல்வாய்ப் பேஎய் - பூசல் இடுகின்ற வலிய வாயை உடைய பேய், மல்லல் - வளப்பத்தை உடைய, மூதூர் - பழைமையாகிய ஊரின் கண்ணே, மலர்ப் பலி உணீஇய - தெய்வத்தின் முன் படைக்கப்படும் அருச்சனையோடு கலந்த ஊன் சோற்றை உண்ண வேண்டி, மன்றம் போழும் - தான் வாழும் பாழ் மண்டபத்தை மோதியெழுகின்ற, புன்கண் மாலை - பிரிந்தாரைத் துன்புறுத்தும் மாலைப்பொழுதில், தம்மொடு - தலைவரோடு, அஞ்சும் - முயங்கிக் கிடக்கின்ற சமயத்தும் பயப்படும், நம் - நாம், இவண் ஒழிய - தனியே இங்கு தங்குமாறு நம்மைக் கைவிட்டு, செவ்வரி - செவ்விய மெல்லிய, மயிர் நிறைத்து அன்ன - மயிரை ஒழுங்குபட வைத்தாற் போன்ற, வார் கோல் - நீண்ட திரட்சியை உடைய, வாங்கு கதிர் - வளைந்த செந்நெற் கதிர்களை உடைய, அம் - அழகிய, செறுவில் - வயல்களில், அன்னம் துஞ்சும் - அன்னப் பறவைகள் உறங்கும், பூகெழு - அழகு தங்கிய, படப்பை - தோட்டங்களை உடைய, சாய்க் காட்டன்ன - திருச் சாய்க்கானத்தைப் போன்ற,

என் நுதல் - என் நெற்றியின், கவின் - அழகை, அழிக்கும் - குறைக்கும், பசலையும் - பசலை நோயையும், அயலோர் - அது கண்டு அயலவர், தூற்றும் - எடுத்து உரைக்கும், அம்பலும் - பழிச் சொல்லையும், அளித்து - எனக்குக் கொடுத்து, தாம் - தலைவர் தாம், செல்ப என்ப - பிரிவர் என்று உழையர் கூறா நிற்பர். இனி யான் எங்ஙனம் ஆற்றுவேன்.

முடிபு : தலைவர் பசலையும் அம்பலும் எமக்கு அளித்து, நம் இவணொழியச் செல்ப என்ப என் செய்வேன் என்று முடிக்க,

கருத்து : தலைவன் அருகில் இருப்பினும் மாலைப் பொழுது கண்டு அஞ்சும் நான் அவர் பிரிவை எங்ஙனம் ஆற்றுவேன் என்றாள்.

அ-ள் : மயிர் நெல்லுக்கு உவமை. கோல் - திரட்சி.

வி-ரை : பேய் மலர்ப்பலி உண்ண வேண்டி மன்றத்தைப் புடைத்து எழும் என்றது, பசலையானது என் நலத்தை உண்ண வேண்டி நெஞ்சை வருத்தி எழும் என்னும் கருத்தையும், வயலில் அன்னம் உறங்கும் என்றது யானும் படுக்கையில் அவர் மார்பில் துஞ்சி இருந்தேன், இப்பொழுது அஃது இல்லை என்னும் கருத்தையும் பெறவைத்தன.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

10. நுதல் பசத்தல்

"மன்ற மராஅத்த பேஎமுதிற் கடவுள்
பசைஇப் பசந்தன்று நுதலே
ஞெகிழ ஞெகிழ்ந்தன்று தடமென் றோளே"
(குறுந். 48:5, 87:4, 205:7)

# 74. நெய்தல்

## தலைவி கூற்று

வடிக்கதிர் திரித்த வல்ஞாண் பெருவலை
இடிக்குரல் புணரிப் பௌவத்து இடுமார்
நிறையப் பெய்த அம்பி காழோர்
சிறை அருங் களிற்றின் பரதவர் ஒயயும்
5 சிறு வீ ஞாழல் பெருங்கடற் சேர்ப்பனை

ஏதிலாளனும் என்ப போது அவிழ்
புதுமணற் கானல் புன்னை நுண்தாது
கொண்டல் அசைவளி தூக்குதொறும் குருகின்
வெண்புறம் மொசிய வார்க்கும் தெண்கடல்
10 கண்டல் வேலிய ஊர் அவன்
பெண்டு என அறிந்தன்று பெயர்த்தலோ அரிதே!

எ-து : தலைவி பாணற்கு வாயில் மறுத்தது.

உலோச்சனார்

ப-ரை : வடிக்கதிர் திரித்த - திருத்தமாகச் செய்யப்பட்ட கதிரிட்டு முறுக்கிய, வல்ஞாண் பெருவலை - வலிய கயிற்றால் பின்னப்பட்ட பெரிய வலைகளை, இடிக்குரல் புணரி பௌவத்து இடுமார் - இடிபோல முழங்குகின்ற அலைகளை உடைய கடலில் வீசி எறியும் பொருட்டு, நிறையப் பெய்த அம்பி - நிறைய ஏற்றப்பட்ட படகினை, காழோர் - கோல் ஏந்திய யானைப்பாகர், சிறை அரும் களிற்றின் - கட்டி இழுத்துச் செலுத்துகின்ற அடக்குதற்கரிய களிற்றி யானையைப் போல, பரதவர் - மீன் பிடிப்போர், ஒய்யும் - செலுத்தா நிற்கும், சிறுவீ ஞாழல் - சிறிய மலர்களைக் கொண்ட ஞாழல் மரங்களை உடைய, பெருங்கடற் சேர்ப்பனை - பெரிய கடற்கரையின் தலைவனைப்பற்றி, ஏதிலாளனும் என்ப - 'அவன் நும்மிடம் அன்புடையவனும் அல்லன். அயலானும் ஆயினான்.' என்று பலரும் கூறுவர்; போது அவிழ் - (அதற்கேற்ப) மலர்விரிகின்ற, புதுமணக் கானல் - புதிய மணற்பரப்பை உடைய சோலையி லுள்ள, புன்னை நுண் தாது - புன்னையின் நுண்ணிய மகரந்தப் பொடிகள், கொண்டல் - அசைவளி ஓடுகின்ற கீழ்க்காற்று, தூக்குதொறும் - மோதுந்தோறும், குருகின் வெண்புறம் மொசிய வார்க்கும் - குருகின் வெளிய முதுகில் நெருங்கத் தூர்க்கா நிற்கும், தெண்கடல் - தெரிந்த கடற்கரையிலுள்ள, கண்டல் வேலிய - தாழைகளை வேலியாக உடைய, ஊர் - இவ்வூரானது, அவன் பெண்டு என - அவனால் விரும்பப்படும் பரத்தையானவள் அச்சேர்ப்பனுக்கு மனைக்கிழத்தி ஆயினாள் என்று கூறாநின்றது. பெயர்த்தலோ அரிது - அங்ஙனம் உண்டாகிய வார்த்தையை மாற்றுதல் எவர்க்கும் அரியதொன்றாம். ஆகையால் பாண! தலைவனுக்குத் தூதா ஈண்டு வாராதே.

முடிபு : பாண! சேர்ப்பனை ஏதிலாளனும் என்ப. ஊர் அவன் பெண்டென அறிந்தன்று. ஆதலின் வாயிலாக வாரற்க என முடிக்க.

கருத்து : தலைவன் பரத்தமை ஒழுக்கத்தை மேற் கொண்டான். எனவே அவன் சார்பாக ஈண்டு நீ ஒன்றும் உரைத்தல் வேண்டாம் என்றபடி.

அ-ள் : அம்பி - படகு. ஒய்யும் - செலுத்தும். மொசிதல் - நெருங்கல்.

வி-ரை : புன்னையின் மகரந்தங்கள் உதிர்ந்து விழுந்து குறுமினை மறைக்கும் என்றதனால் தலைவன் பிரிவால் தோன்றிய பசலை படர்ந்து என் மெய் முழுதும் மூடி மறைக்கும் என்றபடி.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - வாயின் மறுத்தல்.

# 75. குறிஞ்சி

## தலைவன் கூற்று

நயன் இன்மையின் பயன்இது என்னாது
பூம்பொலிப் பொலிந்த அழல்உமிழ் அகன்பைப்
பாம்புஉயிர் அணங்கி யாங்கும் ஈங்குஇது
தகாஅது வாழியோ குறுமகள் நகாஅது
5 உரைமதி உடையும் என்உள்ளம் சாரல்
கொடுவில் கானவன் கோட்டுமா தொலைச்சிப்
பச்சூன் பெய்த பகழி போலச்
சேயரி பரந்த ஆய் இதழ் மழைக்கண்
உறாஅ நோக்கம் உற்ற என்
10 பைதல் நெஞ்சம் உய்யுமாறே.

எ-து : சேட்படுக்கப்பட்டு ஆற்றானாய தலைமகன் தோழி கேட்பச் சொல்லியது. (சேட்படுத்தல் - தலைவியை நெருங்கா வண்ணம் தலைவனை அப்பாற்படுத்தல்.)

மாமூலனார்

ப-ரை : குறுமகள் - இளைய மகளே. வாழி - நீ நெடுங் காலம் வாழ்வாயாக. நயன் இன்மையின் - சிறிதும் நன்மை தராமையால், இது பயன் என்னாது - இதுதான் பயன் என்று கருதாமல், பூம்பொறிப் பொலிந்த - அழகுபெற்ற புள்ளிகளை உடைய, அழல் உமிழ் - அழல்போலும் நஞ்சை உமிழ்கின்ற,

அகன்பை - விரிந்த படத்தை உடைய, பாம்பு - கொடிய பாம்பானது, உயிர் அணங்கியாங்கு - கொல்லும் பொருட்டு உயிர்களைக் கடித்து வருத்தினாற்போல, ஈங்கு - இவ்விடத்து, நகாஅ - பரிகசித்து உரைப்பலாகிய, இது - இந்த உன்செயல், தகாஅது - உனக்கு அழகு அன்று. சாரல் - மலைச்சாரலில், கொடுவில் கானவன் - வளைந்த வில்லையுடைய வேட்டுவன், கோட்டுமா தொலைச்சி - கோட்டினை உடைய பன்றியை எய்து கொன்று, பச்சு ஊன் பெய்த பகழிபோல - அதன் பசிய தசையிற் பாய்ச்சியதனாலே சிவந்த அம்பைப் போல, சேய்அரி பரந்த - செவ்வரி பரவிய, ஆய்இதழ் மழைக் கண் - அழகிய பூவிதழ் போன்ற குளிர்ச்சி அமைந்த கண்களினுடைய, உறாஅ நோக்கம் உற்ற - பொருந்தாத பார்வையால் தாக்குண்ட, என் பைதல் நெஞ்சம் - எனது வருந்திய நெஞ்சம், உய்யுமாறு - வருத்தம் நீங்கிப் பிழைக்கும் வண்ணம், உரைமதி - நகையாடாது சொல்வாயாக. என் உள்ளம் உடையும் - நகைப்பின் என் மனம் பெரிதும் துன்பம் அடையும் என்பதை அறிவாயாக.

முடிபு : குறுமகள்! என்நெஞ்சம் உய்யுமாறு நகாஅது உரைமதி. என் உள்ளம் உடையும் என முடிக்க.

கருத்து : தலைமகள்பார்வையால் தாக்குண்ட தலைமகள், தோழியிடம் என்னை நகையாடாதே. நகைக்கின் யான் அடையும் துன்பம் அளவற்றது என்றாள்.

அ-ள் : வாழி என்றதை இகழ்ச்சிக் குறிப்பாகவும் கொள்ளலாம். பைதல் - துன்பம். கோட்டுமா - பன்றி.

வி-ரை : தன்னைப் பரிகசித்தலின் நயனுடையை அல்லை என்றான் தன்மாட்டு இரக்கம் காட்டவேண்டும் என்பான் வாழியோ என்றான். என் துன்பம் நீ அறியாய் என்பான் 'குறுமகள்' என்றான். தன்னுயிரை வாட்டலின் பார்வைக்கு அம்பை உவமித்தான்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் : ஆற்றாது உரைத்தல்.

ஒப்புமைப்பகுதி

2-5 : பாம்பு கதுவியது போன்ற துன்பம்

"செல்வார் அல்லர் என்றுயான் இகழ்ந்தனனே
நல்வரால் கதுவி யாங்குஎன்
அல்லல் நெஞ்சம் அலமலக்கு உறுமே" (குறுந். 48:4-5)
"அரவுறு துயரம் எய்துப" (ஐங். 173:2) (சிறுபாண். 237)

"செவ்வாரவரென யான் இகழ்ந்தேனே
ஒல்லான் இவனென ஒழிந்தனர்
நல்எழில் உண்கண் நலியும் என்னெஞ்சே."
(தமிழ்நெறி. மேற்)

"பிரியாரென இகழ்ந்தேன் முன்னம் யான் பின்னை
........................எற்பிரியிற்
அரியான் அருளிலர் போல் அன்ன என்னை அழிவித்தவே."
(திருச்சிற். 340)

"செல்லார் அவரென்று யான் இகழ்ந்தேன் சுரம் செல்லத்
தன்கண்........................
வில்லான் பகைபோல் எனது உள்ளந்தன்னை
மெலிவிக்குயே"
(பாண்டிக்கோவை)

# 76. பாலை

## தலைவன் கூற்று

வருமழை கரந்த வால்நிற விசும்பின்
நுண்துளி மாறிய உலவைஅம் காட்டு
ஆல நீழல் அசைவு நீக்கி
அஞ்சுவழி அஞ்சாது அசைவழி அசைஇ
5 வருந்தாது ஏகுமதி வால்இழைக் குறுமகள்
இம்மென் பேர்அலர் நும்ஊர்ப் புன்னை
வீமலர் உதிர்ந்த தேன்நாறு புலவின்
கானல் வார்மணல் மரீஇ
கல்உறச் சிவந்த நின்மெல்லடி உயற்கே.

எ-து : உடன்போக்கில் தலைவியை அழைத்துச் சென்ற தலைவன் இடைச்சுரத்துத் தலைவிக்கு உரைத்தது.

அம்மூவனார்

ப-ரை : வால் இழைக் குறுமகள் - தூய அணிகலன்களைத் தரித்த இளமை வாய்ந்த பெண்ணே! இம் மென் பேர்அலர் - இந்த மெல்லிய பெரிய பழிச்சொல்லைத் தூற்றுகின்ற, நும்ஊர் - உனது ஊரின் கண்ணுள்ள, புன்னை - புன்னை மரத்தினது, வீமலர் - காம்பு இற்ற மலர், உதிர்ந்த - மிகுதியாக உதிர்ந்த தனாலே, தேன்நாறு - தேன்மணம் வீசுகின்ற, புலவின் கானல் -

புலால் நாறும் கழிக்கரைச் சோலையில், ஆர் மணல் மரீஇ - மிக்க மணலிலே நடந்து, கல்உறச் சிவந்த - (இப்பொழுது) கற்கள் பதிதலாலே சிவந்த, நின் மெல்லடி - நின்னுடைய மெல் அடிகள், உயற்கு - வருந்தாது இருத்தற் பொருட்டு, வருமழை கரந்த - வருகின்ற மழை பெய்யாது ஒழிந்த, வால் நிற விசும்பின் - வெள்ளிய நிறத்தை உடைய விசும்பினின்றும் விழுகின்ற, நுண் துளி மாறிய - நுண்ணிய நீர்த்துளிகளும் இல்லையாகிய, உலவை அம் காட்டு - காற்றுச் சுழன்று வீசும் அழகிய காட்டிடத்து, ஆல நீழல் - ஆலமரத்தின் நிழலிலே தங்கி இளைப்பாறி, அஞ்சு வழி அஞ்சாது - அஞ்ச வேண்டிய இடங்கள் வந்தவிடத்தும் அஞ்சாது, அசைவழி அசைஇ - தங்க வேண்டிய சமயங்களில் தங்கி, வருந்தாது - சிறிதும் வருத்தம் கொள்ளாமல், ஏகு - என்னுடன் வருவாயாக.

முடிபு : குறுமகள்! மெல்லடி உயற்கு அசைவு நீக்கி, அஞ்சாது, அசைஇ ஏகுமதி எனமுடிக்க.

கருத்து : மெல்லிய பாதங்கள் நோவுறா வண்ணம் தங்கி இளைப்பாறி மெல்ல மெல்ல வருக என்று தலைவன் கூறினான்.

அ-ள் : உலவை - காற்று. அசைதல் - தங்குதல். இது நெய் தலிற் களவு.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - அயர்வு அகற்றல்.

# 77. குறிஞ்சி

## தலைவன் கூற்று

மலையமா னார்ந்து போகி புலையன்
பெருந்துடி கறங்கப் பிறபுலம் புக்கவர்
அருங்குறும்பு எருக்கி அயாஉயிர்த் தாஅங்கு
உய்த்தன்று மன்னே நெஞ்சே செவ்வேர்ச்
5 சினைதொறும் தூங்கும் பயங்கெழு பலவின்
சுளையுடை முன்றில் மனையோள் கங்குல்
ஒலிவெள் அருவி ஒலியின் துஞ்சும்
ஊரலஞ் சேரிச் சீறூர் வல்லோன்
வாள்அரம் பொருத கோள்நேர் எல்வளை
10 அகன்தொடி செறித்த முன்கை ஒள்நுதல்

பாடல் - 77

திதலை அல்குல் குறுமகள்
குவளை உண்கண் மகிழ்மட நோக்கே.

எ-து : பின்னின்ற தலைவன் நெஞ்சிற்கு உரைத்தது. (பின்னிற்றல் - குறையுற்று நிற்றல்)

கபிலர்

ப-ரை : நெஞ்சே! - ஏ மனமே! செவ்வேர்ச் சினை தொறும் தூங்கும் - சிவந்த வேர்களை உடைய கிளைகள் தோறும் தொங்கும், பயம் கெழு பலவின் சுளையுடை - பழங்கள் நிறைந்த பலாவின் சுளைகளை உடைய, முன்றில் - முன்றிலின் கண்ணே, மனையோள் - தலைவியானவள், கங்குல் - இரவில், ஒலி வெள் அருவி ஒலியின் - நெருங்கி விழுகின்ற வெளிய அருவியின் ஒலியைக் கேட்டு, துஞ்சும் - உறங்கும், ஊர் அல் அம் - பேரூர் அல்லாத சிலவாய அழகிய, சேரிச் சீறூர் - சேரிகளை உடைய சிற்றூரின் கண்ணே, வல்லோன் - கைத்தொழில் திறமை வாய்ந்த ஒருவன், வாள் அரம் பொருத - கூரிய அரத்தால் அறுத்த, கோள் நேர் எல்வளை - வளைந்த அழகிய ஒளியை உடைய, வளையும் அகன் தொடி செறித்த - அகன்ற தொடியும் அணிந்த முன்னங்கையையும், ஒள் நுதல் - விளக்கம் அமைந்த நெற்றியையும், திதலை அல்குல் - தித்தி படர்ந்த அல்குலையும், குறுமகள் - இளமையையும் உடைய நம் காதலியின், குவளை உண்கண் - குவளை மலர் போன்ற மைதீட்டிய கண்களின், மகிழ் மடநோக்கு - மகிழ்ச்சியைத் தரும் மருண்ட பார்வையானது, மலையமா ஊர்ந்து - மலை போன்ற பெரிய யானையின் மீது ஏறி, போகி - சென்று, புலையன் - புலையனால், பெருந்துடி கறங்க - முழக்கப்படும் பெரிய துடியானது ஒலிக்க, பிறபுலம்புக்கு - வேற்று நாட்டிற் புகுந்து, அவர் அரும் குறும்பு எருக்கி - அப் பகைவரது வெல்லற்கரிய கோட்டையை அழித்து, அயா உயிர்த் தாங்கு - இளைத்துப் பெருமூச்சு விட்டாற்போல, உயத்தன்று - நம்மை இவளிடம் இழுத்துச் செல்லுகின்றது. (ஆகையால் இவள் உடன்படுங்காறும் பொறுத்திரு)

முடிபு : நெஞ்சே! குறுமகள் மகிழ்மட நோக்கு அயா உயிர்த்தா அங்கு உய்த்தன்று என்று முடிக்க.

கருத்து : தலைவியின் மடநோக்கால் துன்பம் அடைந்த தலைவன் அவள் உடன்படுங்காறும் பொறுத்திருப்பாயாக என்று நெஞ்சிற்கு அறிவுறுத்தினான்.

அ-ள் : குறும்பு - அரண். எருக்குதல் - அழித்தல்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - ஆற்றாது உரைத்தல்.

ஒப்புமைப்பகுதி

4.5 வேர்க் கோட் பலா

"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே" (குறுந். 257:1-4)
"செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி"
(அகநா. 209:15)

# 78. நெய்தல்

## தோழி கூற்று

கோட்சுறா வழங்கும் வாள்கேழ் இருங்கழி
மணிஏர் நெய்தல் மாமலர் நிறைய
பொன்நேர் நுண்தாது புன்னை தாஅம்
வீழ்தாள் தாழைப் பூக்கமழ் கானல்
5 படர்வந்து நலியும் சுடர்செல் மாலை
நோய்மலி பருவரல் நாம்இவண் உய்கம்
கேட்டிசின் வாழி தோழி தெண்கழி
வள்வாய் ஆழி உள்வாய் தோயினும்
புள்ளுநிமிர்ந்து அன்ன பொலம்படைக் கலிமா
10 வலவன் கோலுற அறியா
உரவுநீர்ச் சேர்ப்பன் தேர்மணிக் குரலே!

எ-து : வரைவு மலிந்தது.

கீரங்கீரனார்

ப-ரை : தோழி வாழி - தோழியே! நீ வாழ்வாயாக. தெண் கழி - தெளிந்த கழியின் கண்ணுள்ள நீரிவிடத்து, வள் வாய் ஆழி உள்வாய் தோயினும் - பெருமை வாய்ந்த தேர்ச் சக்கரத்தின் உள்வாய் அளவு அழுங்கப் பெற்றாலும், புள்ளு நிமிர்ந்து அன்ன - பறவை பறந்து சென்றாற் போன்ற, பொலம்படைக் கலிமா - பொன்னாற் செய்யப்பட்ட கலம் முதலியவற்றை அணிந்த மனம் செருக்கிய குதிரை, வலவன் கோல்உற அறியா - தேர்ப்பாகனின் தார்க்கோலால் தூண்டப் படுதலை அறியாத, உரவுநீர்ச்

சேர்ப்பன் - பரவிய கடல்நீர்ச் சேர்ப்பனது, தேர் மணிக் குரல் கேட்டிசின் - தேரின்மணி ஒலிக்கும் ஓசையைக் கேட்பாயாக. கோள் சுறா வழங்கும் - கொல்லும் தன்மையுள்ள சுறாமீன் சஞ்சரிக்கின்ற, வாள்கேழ் இருங்கழி - ஒள்ளிய நிறத்தை உடைய பெரிய கழியிடத்து, மணிஏர் நெய்தல் - நீலமணி போன்ற மலர்ந்த நெய்தலின், மாமலர் நிறைய - கரிய மலர் நிறையுமாறு, பொன் நேர் - பொன்னை ஒத்த நுண்ணிய மகரந்தப் பொடிகளை உடைய, புன்னை தாஅம் - புன்னையின் தாதுக்கள் பரக்கும், வீழ்தாள் தாழைப்பூ-வீழ் ஊன்றிய அடியை உடைய தாழைமலர், கமழ் கானல் - வாசனை வீசும் கடற்கரையின் கண்ணுள்ள சோலையின் கண்ணே, படர் வந்து நலியும் - துன்பம் தொடர்ந்து வந்து வருத்தும், சுடர்செல் மாலை - கதிரவன் மறையும் மாலைப்பொழுதில், நோய்மலி பருவரல் - காமநோய் மிகுதலால் உண்டாகும் துன்பத்தினின்றும், நாம் இவண் உய்கம் - நாம் இனி இங்கு பிழைத்து வாழ்வோம்.

முடிபு : தோழி! தேர்மணிக் குரல் கேட்டு, மாலை நோய் மலி பருவரல் நாம் இவண் உய்கம் உன்று முடிக்க.

கருத்து : தலைவன் நிதியொடு உன்னை வரைந்துகொள்ள வருகின்றான். மணிக் குரலோசை கேட்பாய். துயரம் ஒழிக.

வி-ரை : புன்னை நெய்தல் மலர் நிறைய தாதுக்களைச் சொரியும் என்றது, தலைவன் நமர் கைநிறைய பொருளைக் குவித்து வரைந்து கொள்வன் என்பதையும், தாழையின் மணம் எங்கும் பரவும் என்றது நாடெங்கும் உன் வரைவு மாட்சிமைப் படும் என்பதையும் பெற வைத்தன.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - மகிழ்தல். இது வரைவு மலிதலாம்.

ஒப்புமைப்பகுதி

4. வீழ்தாள் தாழை

"வீழ்தாழைக் குழவித்தீர்" (பெரும்பாண். 357)
குழவி ஓரறிவுயிரின் இளமைப் பெயர்.
(தொல். மரபுசூ. 24, பேர், மேற்.)

# 79. பாலை

## தலைவி கூற்று

சிறைநாள் ஈங்கை உறைநனி திரள்வீ
கூரைநல் மனைக் குறுந்தொடி மகளிர்
மணல்ஆடு கழங்கின் அறைமிசைத் தாஅம்
ஏர்தரல் உற்ற இயக்குஅரும் கவலைப்
5 பிரிந்தோர் வந்து நப்புணரப் புணர்ந்தோர்
பிரிதல் சூழ்தலின் அரியதும் உண்டோ
என்று நாம்கூறிக் காமம் செப்புதும்
செப்பாது விடினே உயிரொடும் வந்தன்று
அம்ம வாழி தோழி.
10 யாதனில் தவிர்க்குவம் காதலர் செலவே.

எ-து : பிரிவுணர்ந்து வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

**கண்ணகனார்**

ப-ரை : தோழி வாழி - தோழி! நீ நெடுங்காலம் வாழ்வாயாக. அம்ம - நான் சொல்வதனைக் கேட்பாயாக. சிறை நாள் ஈங்கை உறைநனி திரள்வீ - ஈங்கையின் மூடியிருக்கின்ற தேன்துளி மிகத்திரளும் மலர்களானவை, கூரை நல்மனைக் குறுந்தொடி மகளிர் - கூரையை உடைய நல்ல மனையின் கண் வாழும் மகளிர்தம், மணல் ஆடு கழங்கின் அறைமிசைத் தாஅம் - வீட்டு முன்றிலில் மணலிடத்து விளையாடுதற்கு இட்ட கழங்கு போலக் கற்பாறையின்மேல் வீழ்ந்து பரவியிருக்கும், ஏர்தரல் உற்ற - அழகு பொருந்திய, இயக்கு அரும் கவலை - மக்கள் இயங்குதற்கு அரிய பல பிரிவினைக் கொண்ட வழியிலே, பிரிந்தோர் வந்து நம் புணரப் புணர்ந்தோர் - பிரிந்து போயினீர் எனினும், இப் பருவத்து வந்து எம்மைக் கூடிப் புணர வேண்டி யிருக்க, எம்மைக்கூடியிருந்த நீவிர், பிரிதல் சூழ்தலின் அரியதும் உண்டோ - பிரிந்து போதற்கு நினைந்து இருப்பதைக் காட்டிலும் அரிய கொடுமை பிறிதொன்றும் உண்டோ? இல்லையே? என்று - என்று கருதி, நாம் கூறிக் காமம் செப்புதும் - அவரிடம் சென்று கூறி நம் விருப்பத்தைச் சொல்லுகிற்போம்; செப்பாது விடின் - சொல்லாமல் இருப்பின் அவர் பிரியினும் பிரிவர்காண். உயிரொடும் வந்தன்று - அப் பிரிவு என் உயிர்க்கு இறுதி பயக்கும் அல்லவா? ஆகையால் நாம் நேரில் அவரிடம் கூறிப் பிரிவைத்

தடுத்தலின்றி, காதலர் செலவு - தலைவருடைய பிரிவினை, யாதனில் - வேறு எந்த முறையில், தவிர்க்குவம் - தடுத்து நிறுத்துவோம், இயலாது.

முடிபு : தோழி! பிரிதல் சூழ்தலின் அரியதும் உண்டோ? காதலர் செலவு யாதெனில் தவிர்க்குவம் எனமுடிக்க.

கருத்து : தலைவர் பிரியின் உயிர் இறும்; எனவே அவர் பிரிவைத் தடுப்பதே செயத்தக்கது. வேறு வழியில்லை.

அ-ள் : உறை - தேன் துளி. அறை - பாறை. ஏர் - அழகு.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயர்வு உயிர்த்தல்.

# 80. மருதம்

### தலைவன் கூற்று

மன்ற எருமை மலர்தலைக் காரான்
இன்தீம் பாற்பயம் கொண்மார் கன்றுவிட்டு
ஊர்க்குறு மாக்கள் மேற்கொண்டு கழியும்
பெரும்புலர் விடியலின் விரும்பிப் போத்தந்து
5 தழையும் தாரும் தந்தனன் இவன்என
இழையணி ஆயமொடு தகுநாண் தடைஇ
தைஇத் திங்கள் தண்கயம் படியும்
பெருந்தோட் குறுமகள் அல்லது
மருந்து பிறிதுஇல்லை யான்உற்ற நோய்க்கே.

எ-து : சேட்படுக்கப்பட்டு ஆற்றானாய தலைமகன், தோழி கேட்ப, தன் நெஞ்சிற்கு உரைத்தது.

**பூதன் தேவனார்**

ப-ரை : மன்ற - தொழுவத்துள்ள, மலர்தலை - அகன்ற தலையை உடைய, காரான் எருமை - கரிய எருமையின், இன் தீம்பால் - மிக இனிய பாலை, பயம் கொண்மார் - நிரம்பக் கறந்து கொள்ளும் பொருட்டு, கன்று விட்டு - அவற்றின் கன்று களைத் தொழுவத்திலேயே விட்டுவிட்டு, ஊர்க்குறு மாக்கள் - ஊரிலுள்ள மாடு மேய்க்கும் இளஞ்சிறுவர்கள், மேற்கொண்டு - அவ்வெருமைகளின் மேல் ஏறிக்கொண்டு, கழியும் - தனியே

மேய்த்து வருதற்குச் செல்லும், பெரும்புலர் விடியலில் - பெரிய இருள் நீங்கும் விடியற் காலத்து, விரும்பிப் போத்தந்து - விருப்பத்துடன் வந்து, இவன் தழையும் தாரும் தந்தனன் என - இத் தலைவன், உடுக்கும் தழையும், சூடும் மாலையும் தந்தான் என்று, இழை அணி ஆயமொடு - கலன்கள் அணிந்த தோழிகளோடு, தகு நாண் தடைஇ - தகுதியை உடைய நாணத்தால் கட்டுப்பட்டு, தைஇத் திங்கள் - குளிர்ச்சி மிகுந்த தைமாதத்தில், தண் கயம் படியும் - என்னை அடையும் நோன்பின்காரணமாகத் தண்ணிய நீரில் ஆடும், பெருந்தோள் குறுமகள் அல்லது - பெரிய தோள்களையுடைய அவ் இளமகளாகிய தலைவியை அன்றி, யான் உற்ற நோய்க்கு - யான் பெற்ற காம நோயை நீக்குதற்குப் பிறிதொரு மருந்து இல்லை காண் என்று தலைவன் நெஞ்சிற்கு எடுத்து உரைத்தான்.

முடிபு : விடியலிற் கயம்படியும் குறுமகள் அல்லது யான் உற்ற நோய்க்கு மருந்து பிறிதில்லை என முடிக்க.

கருத்து : யான் உற்ற நோய்க்குத் தலைவியைத் தவிர பிறிதொரு மருந்து இல்லை என்று தோழி கேட்பத் தன் நெஞ்சிற்குச் சொல்லி அவளைக் கொண்டு தலைவியைத் தலைவன் அடைய முயன்றான்.

அ-ள் : மன்றம் - தொழுவம். தடவு - வளைவு. எருமைக் காரான் - இருபெயரொட்டு.

வி-ரை : "பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை தன் நோய்க்குத் தானே மருந்து" என்ற குறள் ஈண்டு நினைக்கத் தக்கது. நோன்பின் பயன் எய்த மகளிர் தைத்திங்கட் பிறப்பிலும் அத் திங்கள் முழுவதிலும் வைகறையில் நீராடுவர். ஆண்டாள் பாவை நோன்பு நோற்றமை ஈண்டு அறியத்தக்கது. இளஞ் சிறுவர் தலைவியாகவும், பால் மிகுதி பெற விரும்புதல் நோன்பின் பயனை அடைய விரும்புதலாகவும் கொள்க.

மெய்ப்பாடு - தன்கண் தோன்றிய வருத்தம் பற்றி எழுந்த இளிவரல்.

பயன் - ஆற்றாது உரைத்தல்.

இச் செய்யுள் மருதத்துக் களவு வந்தது.

ஒப்புமைப்பகுதி

1. எருமைக் காரான்

"இதுமற்று எவனோ தோழி துனியிடை
இருமருப்ப எருமை ஈன்றணிக் காரான்

பெரு முதுபெண்டிரேம் ஆகிய எமக்கே"
(குறுந். 181;3, 261:3)

தைத்திங்கள் நீர் தண்ணிது

"வேம்பின் பைங்காய் என்தோழி தரினே
தைஇத் திங்கள் தண்ணிய தரினும்
ஐய அற்றால் அன்பின் பாலே" (குறுந். 196:4)
"தைஇத் தண்கயம்" (ஐங். 84:4)
"தைஇத் திங்கள் தண்கயம் போல" (புறநா. 70-6)
"தைத்திங்கள் தண்ணிய தரினும்" (குறுந். 196:4)
"தைத்திங்கள் தண்கயம் போல" (புறநா. 70;6)

# 81. முல்லை

## தலைவன் கூற்று

இருநிலம் குறையக் கொட்டிப் பரிந்தின்று
ஆதி போகிய அசைவுஇல் நோன்தாள்
மன்னர் மதிக்கும் மாண்வினைப் புரவி
கொய்ம்மயிர் எருத்திற் பெய்ம்மணி ஆர்ப்ப
5 பூண்கதில் பாகநின் தேரே பூண்தாழ்
ஆக வனமுலைக் கரைவலம் தெறிப்ப
அழுதனள் உறையும் அம்மா அரிவை
விருந்துஅயர் விருப்பொடு வருத்தினள் அசைஇய
முறுவல் இன்நகை காண்கம்
10 உறுபகை தணித்தனன் உரவுவாள் வேந்தே.

எ-து: வினை முற்றிய தலைவன் தேர்ப்பாகற்கு உரைத்தது.

### அகம்பன் மாலாதனார்

ப-ரை: பாக - பாகனே! உரவு வாள் வேந்து - வலிமை மிக்க வாட்படையைத் தரித்த நம் மன்னன், உறுபகை - மிக்க பகையை, தணித்தனன் - அடக்கி விட்டனன், (இனி இங்கு யாம் செய்யத்தக்கது ஒன்றும் இல்லை ஆகையால்) இருநிலம் - அகன்ற நிலம், குறைய - குழியும்படி, கொட்டிப்பரிந்து - கொட்டி நடந்து, இன்று ஆதி போகிய - இப்பொழுது விரைந்து

நேராக ஓடுகின்ற, அசைவு இல் நோன்தாள் - களைப்பு இல்லாத வலிய கால்களை உடைய, மன்னர் மதிக்கும் - அரசரால் நன்கு மதிக்கப்படுகின்ற, மாண்வினைப் புரவி - மாட்சிமைப்பட்ட நடைத்தொழிலை உடைய குதிரையை, கொய்ம் மயிர் எருத்தில் - கொய்யும் மயிரை உடைய பிடரியில், பெய்ம் மணி ஆர்ப்ப - கட்டிய மணிகள் ஒலிப்ப, நின்தேர் பூண்க - உன் தேரிலே பூட்டி ஓட்டுவாயாக, பூண் தாழ் ஆகம் வனமுலை - ஆபரணங்கள் தாழ்ந்து தொங்கும் மார்பிலுள்ள அழகிய முலையின், கரை வலம் தெறிப்ப - முகட்டிலே கண்ணீர் தெறித்து விழும் வண்ணம், அழுதனள் உறையும் - அழுதனளாகித் தங்கியிருக்கும், அம்மா அரிவை - அழகிய மாமை நிறத்தை உடைய காதலி, விருந்து அயர் விருப்பொடு - விருந்து படைக்கும் ஆர்வம் உடையவளாய், வருந்தினள் - அட்டிற் சாலையிற் புகுந்து விருந்துணவை வருந்தி அட்டு, அசைஇய - அதனாற் களைப்படைந்த, முறுவல் இன்னகை காண்கம் - மகிழ்ச்சியோடு கூடிய அவளுடைய இனிய புன்முறுவலைக் கண்டு களிப்போம்.

முடிபு : பாக! நின் தேர்ப் பூண்க. அரிவை இன்னகை காண்கம் என முடிக்க.

கருத்து : பாக! தேரை விரைந்து செலுத்துவாயாக. வினைமுடித்தனம். அரிவையின் முறுவல் காண்போம் என்று தலைவன் கூறினான்.

அ-ள் : ஆதி - குதிரையின் நடை விசேடம். கரை - முகடு. அசைவு - களைப்பு.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - கேட்டபாகன் தேரை ஓட்டுதல். மகிழ்தலும் ஆம்.

ஒப்புமைப்பகுதி

8-9. தலைவன் வரவு குறித்து விருந்து அயர்தல்

"முதைப் புனங் கொன்ற ஆர்கலி உழவர்

..............................

மாலை நனிவிருந்து அயர்மார்
தேர்வரும் என்னும் உரை வாராதே" (குறுந். 155:6)

"விருந்தும் பெறுகுநள் போலும் திருந்திழைத்
தடமென் பணைத்தோள் மடமொழி அரிவை

..............................

செல்லும் நெடுந்தகை தேரே, முல்லை,
மாலை நகர் புகலாய்ந்தே" (அகநா. 324)

"மனைக் கொண்டு புக்கனள் நெடுந்தகை
விருந்து ஏர் பெற்றனள் திருந்து இழையோளே"
(அகநா. 384:13-14)

"வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை அயர்கம் விருந்து" (குறள். 1268)

# 82. குறிஞ்சி

## தலைவன் கூற்று

நோயும் நெகிழ்ச்சியும் வீடச் சிறந்த
வேய்வனப்பு உற்ற தோளை நீயே
என்னுடன் வருதியோ நன்னடைக் கொடிச்சி
முருகு புணர்ந்து இயன்ற வள்ளிபோல நின்
5 உருவுகண் எறிப்ப நோக்கல் ஆற்றலனே
போகிய நாகப் போக்குஅருங் கவலை
சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்
சேறுஆடு இரும்புறம் நீறொடு சிவண
வெள்வசிப் படீஇயர் மொய்த்த வள்பு அழீஇக்
10 கோள்நாய் கொண்ட கொள்ளைக்
கானவர் பெயர்க்கும் சிறுகுடி யானே.

எ-து : தோழியிற் புணர்ச்சிக்கண் தலைவன் தன்னிலைக் கொளீஇயது.

**அம்மள்ளனார்**

ப-ரை : நோயும் நெகிழ்ச்சியும் வீட - யான் கொண்ட காம வேட்கையும் அதனால் ஏற்பட்ட உடல் தளர்ச்சியும் நீங்கும் வண்ணம், (என்னைக் கூடிய) சிறந்த - உயர்ந்த, வேய் வனப்பு உற்ற - மூங்கில் போலும் அழகு அமைந்த, தோளை - தோளை உடையை ஆகையால், நல் நடைக் கொடிச்சி - நல்ல நடையை உடைய கொடிச்சியே! போகிய - நீண்டு வளர்ந்த, நாகப் போக்கு அரும் கவலை - நாக மரங்களை உடைய செல்லுதற்கு அரிய கவர்ந்த வழியின் கண், சிறுகண் பன்றி பெருஞ்சின ஒருத் தல் - சிறியகண்களையும் அடங்காத கோபத்தையும் உடைய ஆண்பன்றி, சேறு ஆடு இரும்புறம் நீறொடு சிவண - சேற்றில் விழுந்து புரளுதலால் அச் சேறு பூசப்பெற்ற கரிய முதுகு புழுதி படிந்து இருப்ப, வெள் வசிப் படீஇயர் - அப்புழுதியுடனே

சென்று சுருக்குவார் வைத்த வெறும் பிளப்பில் விழுந்துபட, மொய்த்த வள்பு அழீஇ - அவ்வளவில் வாரை அழித்து மொய்த்தன வாய்க் கொன்று, கோள் நாய் கொண்ட - நாய்கள் தின்று எஞ்சிய தசைகளை, கொள்ளை கானவர் பெயர்க்கும் - அவைகள் கொண்டு போகாதபடி கானவர் சென்று அவற்றைப் போக்கிப் பன்றி இறைச்சியைக் கொண்டு வரும், சிறுகுடியான் - சிறியகுடியின் கண்ணே, முருகு புணர்ந்து இயன்ற வள்ளிபோல - முருகவேளை மணந்து உடன்சென்ற வள்ளிப்பிராட்டியைப் போல, நீயே - நீதான், என்னுடன் வருதியோ - என்னுடன் வருகின்றாயோ?, நின் - உன்னுடைய உருவு கண் எறிப்ப - வடிவின் ஒளி கண்ணில் வீசுதலால், நோக்கல் ஆற்றலன் - யான் நின்னைப் பார்க்க ஆற்றேன், அதனால் வேறொன்றனையும் நினையாதே!

முடிபு: கொடிச்சி! சிறுகுடியில் வள்ளிபோல என்னுடன் வருதியோ! யான் நோக்கல் ஆற்றலன் என முடிக்க.

கருத்து: தலைவியைத் தன்னுடன் வருமாறு தலைவன் வேண்டினான்.

அ-ள்: நீறு - புழுதி. வசி - பிளப்பு. முருகு - இளமை. வள்பு - வார். கொள்ளை - மிகுதி. தலைமகனுக்கு முருகனையும் தலைமகட்கு வள்ளியையும் உவமித்தார் அவர்களும் அத்தன்மையராதலின். சிறப்பு உவமை. வெடிப்புகளில் சுருக்கு வார் வைத்து விலங்குகளைப் பிடிப்பது கானவர் செயல். பன்றி - தலைவி. வாரின் அகப்படுதல் - தலைவி காம நோயில் வீழ்தல். பன்றியின் தசையை நாய் பற்றுதல் - தலைவியின் அழகைப் பசலை தின்றல். கானவர் பெயர்க்குதல் தலைவன் பசலையைப் போக்குதல் என்று பொருத்திச் சுவைக்க.

மெய்ப்பாடு - பெருமிதம்,

பயன் - தன் நிலையை அவள் மனம் ஏற்கும் வண்ணம் கூறல்.

# 83. குறிஞ்சி

## தோழி கூற்று

எம்ஊர் வாயில் உண்துறைத் தடைஇய
கடவுள் முதுமரத்து உடன்உறை பழகிய
தேயா வளைவாய் தெண்கண் கூர்உகிர்
வாய்ப்பறை அசாஅம் வலிமுந்து கூகை
5 மைஊன் தெரிந்த நெய்வெண் புழுக்கல்
எலிவான் சூட்டொடு மலியப் பேணுதும்
எஞ்சாக் கொள்கைஎம் காதலர் வரல்நசைஇத்
துஞ்சாது அலமரு பொழுதின்
அஞ்சுவரக் கடுங்குரல் பயிற்றா தீமே.

எ-து: இரவுக் குறிவந்த தலைவன் சிறைப்புறத்தானாக, தோழி சொல்லியது.

**பெருந்தேவனார்**

ப-ரை: எம் ஊர் வாயில் - எம்முடைய ஊர் முகத்தில், உண்துறைத் தடைஇய - ஊரரால் உண்ணப்படும் பொய்கைத் துறைப்பக்கத்தில் நன்கு பருத்த, கடவுள் முதுமரத்து - கடவுள் வாழும் முதிய மரத்தின் மீதிருந்து, உடனுறை பழகிய - எம் அருகு ஒரு சேர உறைதலானே, தேயா வளைவாய் - தேயாத வளைந்த வாயையும், தெண்கண் - தெளிந்த கண்ணையும், கூர் உகிர் - கூரிய நகத்தையும் உடைய, வாய்ப்பறை அசாஅம் - வாயாகிய பறையாலே ஒலி எழுப்பி, பிறரை வருத்தும், வலிமுந்து கூகை - வலிமை வாய்ந்த கூகையே! (யாம்) மைஊன் தெரிந்த - ஆட்டு இறைச்சியுடனே ஆய்ந்தமைந்த, நெய்வெண் புழுக்கல் - நெய் கலந்த வெள்ளிய சோற்றினை, எலிவான் சூட்டொடு - வெள்எலியின் சூட்டு இறைச்சியோடு கலந்து, மலியப் பேணுதும் - நின்னை விரும்பி நிரம்பக் கொடுப்போம், எஞ்சாக் கொள்கை எம் காதலர் - எம்மிடம் அன்பிற் குறைவு படாத கொள்கையை உடைய எமது தலைவர், வரல் நசைஇ - வருதலை விரும்பி, துஞ்சாது அலமரு பொழுதில் - யாம் இரவிலே உறக்கம் கொள்ளாது உள்ளம் சுழன்று தங்கியிருக்கும் பொழுது, அஞ்சுவர - எல்லோரும் அஞ்சி விழித்துக் கொள்ளும் படியாக, கடுங்குரல் - நின் கொடிய குரலை எடுத்துக் குழறி, பயிற்றாதீமே - எம்மை வருத்தாதே.

முடிபு : கூகை! மலியப் பேணுதும், காதலர் வரல்நசைஇ அலமரும் பொழுதில் கடுங்குரல் பயிற்றாதீம்.

கருத்து : கூகைக்குக் கூறுவாளாய்த் தோழி தலைவனை வரைவுகடாயினாள்.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய அசைவு பற்றிய அழுகை.

பயன் - வரைவு கடாதல்.

# 84. பாலை

## தலைவி கூற்று

கண்ணும் தோளும் தண்நறும் கதுப்பும்
திதலை அல்குலும் பலபாராட்டி
நெருநலும் இவணர் மன்னே இன்றே
பெருநீர் ஒப்பின் பேஎய் வெண்தேர்
5 மரன்இல் நீளிடை மான்நசை உறூஉம்
சுடுமண் தசும்பின் மத்தம் தின்ற
பிறவா வெண்ணெய் உருப்பு இடந்தன்ன
உவர்எழு களரி ஓமைஅம் காட்டு
வெயில்வீற்று இருந்த வெம்பலை அருஞ்சுரம்
10 ஏகுவர் என்ப தாமே தம்வயின்
இரந்தோர் மாற்றல் ஆற்றா
இல்லின் வாழ்க்கை வல்லா தோரே.

எ-து : பிரிவிடை ஆற்றாளாய தலைவி தோழிக்குச் சொல்லியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை.

ப-ரை : தம் வயின் - தம்மிடம், இரந்தோர் - வந்து யாசிப்பவர் விரும்பிய, பொருளைக் கொடுத்து, மாற்றல் ஆற்றா - அவரது பொருளாசையைப் போக்குதற்கு அரிய, இல்லின் வாழ்க்கை - இல்லற வாழ்க்கையில், வல்லாதோர் - பயின்று அறியாத நம் தலைவர், கண்ணும் தோளும் தண்நறும் கதுப்பும் திதலை அல்குலும் பலபாராட்டி - என் கண்களையும், தோள் களையும், தண்ணிய நறிய கூந்தலையும், தித்திபடர்ந்த அல்குலையும் பலபடியாகச் செப்பித்துக் கூறி, நெருநலும் -

நேற்றைப் பொழுதிலும், இவணர் - இங்குள்ளவராயிருந்தார்; மன் - அது கழிந்தது. இன்றே - இன்றைக்கு, பெருநீர் ஒப்பில் - பெரிய நீர்ப்பரப்பை ஒத்த, பேஎய் வெண்தேர் - வெள்ளிய பேய்த் தேரைக்கண்டு, மரன் இல் நீள் இடை - மரங்கள் அற்ற நீண்ட இடத்தில், மான் நசை உறூஉம் - மான் கூட்டம் நீரென விரும்பிச் செல்லா நிற்கும். சுடுமண் தசும்பின் - மண்ணாற் செய்து சுடப்பட்ட தயிர்ப் பானையில், மத்தம் தின்ற - மத்தாற் கலக்கிய காலத்து, பிறவா வெண்ணெய் - வெம்மையால் வெண்ணெய் ஒன்று சேராது, உருப்பு இடந்தன்ன - சிதறிக் கிடந்தாற் போன்ற, உவர்எழு களரி ஓமை அம்காட்டு - உப்புப் பூத்த களரை உடைய ஓமை மரங்கள் நெருங்கிய காட்டகத்து, வெயில் வீற்று இருந்த - வெய்யில் நிலைபெற்றிருந்த, வெம்பு அலை அருஞ் சுரம் - வெம்மையை உடைய செல்லுதற்கு அரிய பாலை நிலத்திலே, தம் வயின் தாமே ஏகுவர் என்ப - தம்மிடத்து தாம் தமியராய்ச் செல்லுவர் என உழையர் கூறுவர். யான் எங்ஙனம் பொறுப்பேன்.

முடிபு : வல்லாதோர் தாமே தம்வயின் அருஞ்சுரம் ஏகுவர் என்ப என முடிக்க.

கருத்து : என்னைப் பலவாறு பாராட்டிய தலைவர் சுரத்திடைத் தமியராய்ச் செல்லின் யான் என் செய்வேன் என்று தலைவி வருந்திக் கூறினள்.

நயம் : கானல் நீரைத் தண்ணீர் என மயங்கி மான் வேட்கை கொள்ளும் என்றது, அருள் இல்லாத தலைவரை அருள் உடையர் எனக் கருதி மயங்கினேன் என்னும் தலைவியின் உட்கிடக்கையைப் புலப்படுத்திற்று.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயர்வு உயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

8. ஓமையம் பெருங்காடு

"உமணர் சேர்ந்து கழிந்த மருங்கின் அகன்றலை
ஊர்பாழ்த்து அன்ன ஓமையம் பெருங்காட்டு
............................
இனியவோ பெரும் தமியோர்க்கு மனையே"

(குறுந். 124:2)

9 வெம்பு அலை அருஞ்சுரம்

"வெம்பலை அருஞ்சுர நலியா" (ஐங். 325)

# 85. குறிஞ்சி

## தோழி கூற்று

ஆய்மலர் மழைக்கண் தெண்பனி உறைப்பவும்
வேய்மருள் பணைத்தோள் விறல்இழை நெகிழவும்
அம்பல் மூதூர் அரவம் ஆயினும்
குறுவரி இரும்புலி அஞ்சிக் குறுநடைக்
5 கன்றுடை வேழம் நின்றுகாத்து அல்கும்
ஆரிருள் கடுகிய அஞ்சுவரு சிறுநெறி
வாரற்க தில்ல தோழி சாரல்
கானவன் எய்த முளவுமான் கொழுங்குறை
தேம்கமழ் கதுப்பின் கொடிச்சி மகிழ்ந்துகொடு
10 காந்தள்அம் சிறுகுடிப் பகுக்கும்
ஓங்குமலை நாடன்நின் நசையினானே.

எ-து : தலைவன் வரவு உணர்ந்த தோழி தலைவிக்கு உரைத்தது.

### நல்விளக்கனார்

ப-ரை : தோழி - தலைவியே! ஆய்மலர் மழைக்கண் தெண்பனி உறைப்பவும் - அழகிய குவளை மலர்போன்ற குளிர்ச்சியை உடைய நின் கண்களினின்று தெளிந்த நீர் மிக வடிந்து விழவும், வேய்மருள் பணைத்தோள் - மூங்கிலை ஒத்த பருத்த தோள்களில் அணிந்த, விறல் இழை நெகிழவும் - ஏனைய ஆபரணங்களைத் தன் அழகால் வெற்றிகொள்ளும் வளையல்கள் நெகிழ்ந்து விழவும், அம்பல் மூதூர் - அவற்றை நோக்கிப் பழி கூறும் இப் பழைய ஊர், அரவம் ஆயினும் - மிகஅலர் தூற்றும் என்றாலும், சாரல் - மலைச்சாரலில், கானவன் எய்த - வேடன் வேட்டையாடிக் கொண்டுவந்த, முளவுமான் - முள்ளம்பன்றியின், கொழுங்குறை - கொழுவிய தசைத் துண்டத்தை, தேம் கமழ் கதுப்பிற் கொடிச்சி - தேன் கமழும் கூந்தலை உடைய கொடிச்சி, மகிழ்ந்து கொடு - மகிழ்ந்து ஏற்றுக்கொண்டு, காந்தள் அம் சிறுகுடிப் பகுக்கும் - காந்தள் மிக்க சிறுகுடியில் உள்ளார் பலர்க்கும் பகுத்துக் கொடுக்கும், ஓங்கு மலை நாடன் - உயர்ந்த மலை நாட்டை உடைய நம் தலைவன், நின் நசையினால் - உன் மேல் உள்ள விருப்பத்தால், குறுவரி இரும்புலி - குறுகிய வரிகளை உடைய பெரிய புலிக்கு, அஞ்சி - பயந்து, குறுநடை - விரைந்து

செல்லப் பழகாத மெல்லிய நடையை உடைய, கன்று உடை வேழம் - தன் கன்றைப் பிடியானை, நின்று காத்து அல்கும் - ஆண்டு நின்று காத்துத் தங்காநிற்கும், ஆர்இருள் கடுகிய - நீங்குதற்கு அரிய இருள்மிக்க, அஞ்சுவரு சிறுநெறி - கண்டார்க்கு அச்சத்தைத் தோற்றுவிக்கின்ற சிறிய நெறியின் கண்ணே, வாரற்க - வாராது இருப்பானாக.

முடிபு : நாடன் நின் நசையினால் அஞ்சுவரு சிறுநெறி வாரற்க என முடிக்க.

கருத்து : இரவிற் கொடிய நெறியில் தலைவ நீ வருதல் ஏதம் உடைத்து ஆகையால் களவு தவிர்ந்து விரைந்து வந்து வரைந்துகொள் என்று குறிப்பித்தாள்.

வி-ரை : கண்ணீர் விடுதல் முதலாயின கூறி நீ இவ்வாறு வரின் இறந்துபடுவள் என்று கூறினாள். கானவன் தலைவனாக வும் - கொடிச்சி தலைவியாகவும் - பன்றித்தசை பொருள் ஈட்டித் தலைவிபால் தருவதாகவும், சிறுகுடிப் பகுத்தல் - இல்லறம் நடத்தலாகவும் கொள்க. புலிக்குப் பயந்து பிடியானை தன் கன்றைக் காத்துத் தங்கும் என்றது தலைவிக்கு வரும் துன்பத் திற்கு அஞ்சி, தான் அவளைக் காத்து வருவதாகத் தோழி கூறினாள். இதன்கண் கண்ணீர் வடிதல் - துன்பத்துப் புலம்பலை யும், தோள்வளை நெகிழ்தல் - உடம்பு நனி சுருங்கலையும், வாரற்க என்றது அச்சத்தின் அகறலையும், அவன் புணர்வு மறுத்தலையும் உணர்த்திற்று.

மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த வெகுளி.

பயன் - வரைவுடன் படுத்தல்.

ஒப்புமைப்பகுதி

1-11. தலைவி வருந்தினாலும் தலைவன் வாராமை நன்று.

"வெறியென உணர்ந்த வேலன் நோய் மருந்து
அரும்படர் எவ்வம் இன்று நாம் உழப்பினும்
வாரற்க தில்ல தோழி சாரற்
இலங்கு மலை நாடன் இரவினானே" (குறுந். 360, 3-4)

8-11 "முளயு மாத்தொடக்கிய பைந்நிணப்பிளவை
......வாலவிழ் வல்சி" (மலைபடு. 176-83)

# 86. பாலை

## தோழி கூற்று

அறவர் வாழி தோழி மறவர்
வேல்என விரிந்த கதுப்பின் தோல
பாண்டில் ஒப்பின் பகன்றை மலரும்
கடும்பனி அற்சிரம் நடுங்கக் காண்தகக்
5 கைவல் வினைவன் தையுபு சொரிந்த
சுரிதக உருவின ஆகிப் பெரிய
கோங்கம் குவிமுகை அவிழ ஈங்கை
நற்றளிர் நயவர நுடங்கும்
முற்றா வேனில் முன்னிவந் தோரே.

எ-து: குறித்த பருவத்தின் வினை முடித்து வந்தமை கேட்ட தோழி தலைவிக்கு உரைத்தது.

நக்கீரர்

ப-ரை: தோழி - தலைவியே! மறவர் வேலென விரிந்த - வீரர் கையிலுள்ள வேற்படை போல விரிந்த, கதுப்பின் தோல - மேற்கதுப்பாகிய தோலை உடைய, பாண்டில் ஒப்பின் பகன்றை மலரும் - சிவதை, வெள்ளி வட்டிலைப்போல மலரும், கடும்பனி அற்சிரம் - முன்பனியை உடைய அற்சிரக் காலத்து, நடுங்க - நாம் நடுங்குமாறு நம்மை விட்டுப் பிரிந்து, காண்தக - அழகு பொருந்த, கைவல் வினைவன் - கைத்தொழில் வல்ல கம்மியன், தையுபு சொரிந்த சுரிதக உருவின ஆகி - அரதனக்கற்களை இட்டு இழைத்த பொன்னாலாகிய சுரிதகம் என்னும் அணி போன்ற வடிவத்தை உடைய, பெரிய கோங்கம் குவிமுகை - பெரிய கோங்க மரத்தினது குவிந்த முகைகள், அவிழ - மலர, ஈங்கை நல்தளிர் - ஈங்கையின் நல்ல தளிர்கள், நயவர - கண்டார்க்கு விருப்பம் வருமாறு, நுடங்கும் - அசையா நிற்கும், முற்றா வேனில் - முதிராத இளவேனிற் காலத்து, முன்னி - நம்மைக் கருதி, வந்தோர் - வந்தார் ஆனதால், அறவர் - நம் தலைவர் அறநெறி தவறிலர், வாழி - அதனால் அவர் நெடுங்காலம் வாழ்வாராக.

முடிபு: தோழியே! அற்சிரம் நடுங்க, குவிமுகை அவிழ, தளிர் நுடங்கும் முற்றாவேனில் வந்தோர் அறவர் வாழி என முடிக்க.

கருத்து : வினை முடித்துக் குறித்த பருவத்தில் தலைவர் வந்தாராகலின் அவர் மிகவும் அறவர் என்றவாறு.

அ-ள் : பாண்டில் - வட்டில், தட்டு. பகன்றை - சிவதை. அற்சிரம் - முன் பனிக்காலம். சுரிதகம் - திருகு பூப்போல மகளிர் அணியும் ஒரணி. சிவதை மலர் - வெள்ளி வட்டில் போன்று விளங்கும். குறித்த பருவத்து வந்தமையால் தலைவனை அறவர் என்றாள்.

வாழ்த்தல் என்னும் மெய்ப்பாடு; உவகையும் அடங்கும்.

பயன் - மகிழ்தல். கைகோள் - கற்பு.

ஒப்புமைப்பகுதி

3. பகன்றை

"நலத்தகைப் புலைத்தி பசை தோய்த்து, எடுத்த
...............................
பேரிலைப் பகன்றை பொதியவிழ் வான்பூ
...............................
இன்றுகொல் தோழி அவர் சென்ற நாட்டே"

(குறுந். 330:4) (குறிஞ்சி. 88) (ஐங். 87;1)
(அகநா. 176:10, 316:6) (புறநா. 16:14, 235:18)

4. அரும்பனி அற்சிரம்

"பூழ்க்கால் அன்ன செங்கால் உழுந்தின்
...............................
அரும்பனி அற்சிரம் தீர்க்கும்
மருந்து பிறிதில்லை அவர் மணந்த மார்பே"

(குறுந். 68:3, 76:6, 82:6, 277:4, 338:5)

"அரும்பனி அளைஇய வற்சிரக் காலை" (ஐங். 470:2)

4. கடும்பனி அற்சிரம்

"காந்தள் வேலி ஓங்குமலை நன்னாட்டுச்
.......................................
கடும்பனி வச்சிர நடுங்களுர் உறவே"

(குறுந். 68:3, 76:6, 82:6)

# 87. நெய்தல்

## தலைவி கூற்று

உள்ளூர் மாஅத்த முள்எயிற்று வாவல்
ஓங்கல் அம்சினைத் தூங்குதுயில் பொழுதின்
வெல்போர்ச் சோழர் அழிசிஅம் பெருங்காட்டு
நெல்லிஅம் புளிச்சுவைக் கனவி யாங்கு
5 அதுகழிந் தன்றே தோழி அவர்நாட்டுப்
பனிஅரும்பு உடைந்த பெருந்தாள் புன்னை
துறைமேய் இப்பி ஈர்ம்புறத்து உறைக்கும்
சிறுகுடிப் பரதவர் மகிழ்ச்சியும்
பெருந்தண் கானலும் நினைந்த அப்பகலே.

..எ-து: தலைவன் வரைவிடை வைத்துப்பிரிய, ஆற்றாளாய தலைவி கனாக்கண்டு தோழிக்கு உரைத்தது.

**நக்கண்ணையார்**

ப-ரை: தோழி - தோழியே! அவர் நாட்டு - நம் தலைவரது நாட்டின் கண்ணுள்ள, பெருந்தாள் புன்னை - பெரிய அடிப்பகுதியை உடைய புன்னையின், பனி அரும்பு - குளிர்ந்த அரும்புகள் மலர்ந்து, துறைமேய் இப்பி - கடலின் துறையிடத்து மேய்கின்ற சங்கின், ஈரம் புறத்து உறைக்கும் - ஈரமான முதுகுப் புறத்து விழும், சிறுகுடிப் பரதவர் மகிழ்ச்சியும் - சிறுகுடியிலுள்ள பரதவர் மகிழும் மகிழ்ச்சியையும், பெரும் தண் கானலும் - பெரிய தண்ணிய கழிக்கானலிலுள்ள சோலையையும், நினைந்த அப்பகல் - நாம் நினைந்த அப்பகற்பொழுதின் கண்ணே, உள் ளூர் மரா அத்த - ஊரினுள் ஓங்கி வளர்ந்த மாமரத்தில், முள் எயிற்று வாவல் - முள் போன்ற பற்களையுடைய வௌவால், ஓங்கு சினை - உயர்ந்ததொரு கிளையில், தூங்கு துயில் பொழுதின் - சென்று தங்கித் துயில் கொள்ளும் சமயத்தில், வெல்போர்ச் சோழர் - வெல்லும் போரை உடைய சோழர் குடியிற் பிறந்த, அழிசி - 'அழிசி' என்பவனது, பெருங்காட்டு - பெரிய காட்டிலுள்ள, நெல்லி அம் புளிச்சுவைக்கு - நெல்லிப் பழத்தின் இனிய புளிப்புச் சுவையை, கனவி யாங்கு - தான் பெற்றதாகக் கனவு கண்டாற்போல, அது கழிந்தன்று - யானும் அவரொடு முயங்கினதாகக் கனவு காண அக்கனவின் முயங்கிய இன்பம் எல்லாம் விழித்தவுடன் மறைந்து போயிற்று: என் செய்வேன்.

முடிபு : வாவல் புளிச்சுவைக் கனவியாங்கு, நினைந்த அப் பகல் கழிந்தன்று, என் செய்வேன் என முடிக்க.

கருத்து : தலைவி தோழியை நோக்கி தலைவன் தொடர்பு எனக்குக் கனவு போல் ஒழிதலாயிற்று என்று வருந்திக் கூறினாள். கனவொடு மயங்கல் என்னும்.

மெய்ப்பாடு - அழுகையும் அடங்கும்.

பயன் - அயர்வு உயிர்த்தல்.

இப்பியின் புறத்தை புன்னையின் மகரந்தங்கள் மூடினாற் போல பசப்பு தன் மெய்யை மூடிக் கொண்டது என்று தலைவி கூறினாள்.

ஒப்புமைப்பகுதி

1-4. வௌவால், மா, நெல்லி

"அமிழ்தம் உண்க நம் அயலில் ஆட்டி
பால்கலப்பு அன்ன தேக்கொக்கு அருந்துபு
நெல்லியம் புளி மாந்தி அயலது
மல்லெகழு நாடனை வரும் என் றோளே" (குறுந். 201)

# 88. குறிஞ்சி

## தோழி கூற்று

யாம்செய் தொல்வினைக்கு எவன் பேதுற்றனை
வருந்தல் வாழி தோழி யாம் சென்று
உரைத்தனம் வருகம் எழுமதி புணர்திரைக்
கடல்விளை அமுதம் பெயற்கு ஏற்றாஅங்கு
5 உருகி உகுதல் அஞ்சுவல் உதுக்காண்
தம்மோன் கொடுமை நம்வயின் ஏற்றி
நயம்பெரிது உடைமையின் தாங்கல் செல்லாது
கண்ணீர் அருவி யாக
அழுமே தோழிஅவர் பழம்உதிர் குன்றே.

எ-து : தலைவன் சிறைப்புறமாகத் தோழி தலைவிக்கு உரைப்பாளாய்ச் சொல்லியது.

நல்லந்துவனார்

ப-ரை : தோழி - தலைவியே! யாம் செய் தொல்வினைக்கு - நாம் செய்த பழவினை அப்படியிருக்க, அதனை ஆராயாது, எவன் பேதுற்றனை - நீ எதன் பொருட்டு மயங்குகின்றனை? வருந்தல் - அங்ஙனம் வருந்தாதே, வாழி - நெடுங்காலம் வாழ்வாயாக. யாம் சென்று உரைத்தனம் வருகம் - இத் துன்பத்தை அவர்பால் நாம் சென்று கூறிவிட்டு வருவோம். எழுமதி - என்னுடன் எழுவாயாக. புணர்திரை - பொருந்திய அலைகளை உடைய, கடல் - கடல் நீராய், விளை அமுதம் - விளைந்த உப்புக் குவியல், பெயற்கு - மழைக்கு, ஏற்றாஅங்கு - அகப்பட்டுக் கரைந்து அழிந்தாற்போல, உருகி - நீ மனம் உருகி, உகுதல் - அழிதலுக்கு, அஞ்சுவல் - யான் அஞ்சுகின்றேன்; தம்மோன் - தலைவன், நம் - கொடுமையின் நம்மிடத்துச் செய்த கொடுமையை, ஏற்றி - நினைந்து, அவர் பழம் உதிர் குன்று - அவருடைய பழங்கள் உதிர்கின்ற குன்றானது, நயம் பெரிது உடைமையின் - நம்பாற் பெரிதும் அன்புடைமையாலே, தாங்கள் செல்லாது தன் வருத்தத்தை அடக்கிக்கொள்ள மாட்டாதே, கண்ணீர் அருவியாக - தன் கண்ணீர் அருவியாகப் பெருகும்படி அழும்; உதுக்காண் - அதனை அவ்விடத்தே பாராய்; அவர் மட்டும் இரங்குபவர் அல்லர்.

முடிபு : தோழி! குன்று அழும்; உருகி உகுதல் அஞ்சுவல்; எவன் பேதுற்றனை? வருந்தல்; உரைத்தனம் வருக; எழுமதி என்று முடிக்க.

கருத்து : தலைவனிடஞ் சென்று தலைவிபடும் துன்பத்தைக் கூறுவோம் என்றவிடத்துக் கேட்ட தலைவன் விரைந்து வந்து வரைந்து கொள்வான் என்று தோழி நினைத்தாள்.

அ-ள் : கடல்விளை அமுதம் - உப்பு. ஏற்றல் - நினைதல். தம்மோன் - தலைவன்: தம்மான் என்பர். "தம்மானை அறியாத சாதியார் உளரே" என்பது தேவாரம்.

வி-ரை : குன்றமும் அழும் என்றது அதனினும் தலைவன் நெஞ்சு வன்மையுடையது. எவன் பேதுற்றவை - துன்பத்துப் புலம்பல். உருகி உருகுதல் - ஆங்கு நெஞ்சு அழிதல். கொடுமை யுடைய தலைவனுக்குச் சொந்தமான குன்று பசித்த உயிர்களின் பசிதீரப் பழங்களை உதிர்க்கின்றனவே; இஃது என்ன ஆச்சரியம் என்றபடி.

மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

4-5. உப்பு மழையால் அழிதல்

"அருங்கரை நின்ற உப்பொய் சகடம்
பெரும் பெயறலைய வீந்தாங்கிவள்" (குறுந். 165:3-4)

"உப்பியல் பாவை உறை உற்றது போல
உக்குவிடும் என் உயிர்" (கலி. 138:16.7)

"நெடுவெள் உப்பின் நிரம்பாக் குப்பை
பெரும் பெயற்கு உருகி யாஅங்கு" (அகநா. 206:14-15)

"மிகுபெயல் உப்புச் சிறைநில்லா வெள்ளம் போல
நாணுவரை நில்லாக் காமம் நண்ணி"
(அகநா. 206:14-5, 208-18-21)

"கடும்புனல் நெருங்க உடைந்து நிலை ஆற்றா
உப்புச் சிறைபோல் உள்நெகிழ்ந்து உருகி"
(பெருங். 3:201,20-21)

"உப்பின் பெருங்குப்பை நீர்படியின் இல்லாகும்" (திரி. 83)

"ஒளிநல உப்புக்குன்றமூர் புனற்குடை ந்ததே போல்"
(சீவக. 813)

8 -9. அருவியை அழுகைக் கண்ணீராகக் கூறுதல்

"அடங்கி வீழ்ந்தருவியின் அழுவ போன்றவே" (சீவக. 88)

குன்றம் அருவியைக் கண்ணீராகக் கொண்டு அழுதல்

"நீளருவிக் கண்ணீர் வீழ்த்தலறி வண்ணம் வண்ணம்
கோள்உழுவை அன்னாற்குக் குன்றமு நின்றமுதனவே"
(சீவக. 1226)

# 89. முல்லை

## தோழி கூற்று

கொண்டல் ஆற்றி விண்தலைச் செறீஇயர்
திரைப்பிதிர் கடுப்ப முகடுஉகந்து ஏறி
நிரைத்து நிறைகொண்ட கமஞ்சூல் மாமழை
அழிதுளி கழிப்பிய அழிபெயற் கடைநாள்
5 இரும்பனிப் பருவத்த மயிர்க்காய் உழுந்தின்
அகல்இலை அகல வீசி அகலாது
அல்கலும் அலைக்கும் நல்கா வாடை

பரும யானை அயாஉயிர்த் தாஅங்கு
இன்னும் வருமே தோழி வாரா
10 வண்க ணாளரோடு இயைந்த
புன்கண் மாலையும் புலம்பும் முந்துறுத்தே.

எ-து : பொருள் ஈட்டித் திரும்பி வந்தான் எனக் கேட்ட தோழி தலைவிக்கு உரைத்தது.

## இளம் புல்லூர்க் காவிதி

ப-ரை : கொண்டல் - கீழ்காற்று, ஆற்றி - செலுத்துதலால், விண்தலை - ஆகாயத்தில், செறீஇயர் - செறிவுற்ற, திரைப்பிதிர் கடுப்ப - அலையிலுள்ள சிறு துளிகளாகிய பிசிர்போல, முகடு உகந்து ஏறி - மலையின் உச்சியை ஆர்வத்துடன் ஏறி, நிரைத்து - ஒழுங்காக, நிறைகொண்ட - அமைந்து நிறைவுற்ற, கமம் சூல் மாமழை - நிரம்பிய கருவுற்ற நீரையுடைய கரியமேகம், அழிதுளி கழிப்பிய - மிக்க மழையைப் பெய்தொழிந்த, அழிபெயல் கடை நாள் - மழையொழிந்த கார்காலத்தின் இறுதியில், இரும் பனிப் பருவத்த - மிக்க முன்பனிப் பருவத்தில், மயிர்க்காய் உழுந்தின்- மயிர்களை உடைய காய்களைக் கொண்டிருக்கும் உழுந்தின், அகல் இலை வீசி - அகன்ற இலைகள் அனைத்தும் சிதையும்படி வீசி, அகலாது - நம்மைவிட்டு நீங்காது, அல்கலும் அலைக்கும் - நாள்தோறும் வருத்தும், நல்கா வாடை - நம்மாட்டு அன்பு காட்டாத வாடைக் காற்றானது, வாரா - நம்மிடம் அன்பு காட்ட வராத, வன்கணாளரோடு - அருள் அற்ற தலைவரோடு, இயைந்த - ஒருசேரப் பொருந்திய, புன்கண் மாலையும் - துன்பத்தைத் தரும் மாலைப் பொழுதையும், புலம்பும் - தனிமையையும், முந்துறத்த - முற்பட்டுவிட்டுக் கொண்டு, பரும யானை - பருமம் பூண்ட யானை, அயா உயிர்த்தாங்கு - பெருமூச்சு விட்டாற்போல, தோழி - தோழியே, இன்னும் வருமே - மேலும் வாரா நிற்குமோ? அப்படி வரினும் நமக்குத் துன்பம் தாராதுகாண்.

முடிபு : தோழி! மாலையும் புலம்பும் முந்துறுத்து அலைக்கும் வாடை இன்னும் வருமே என முடிக்க.

கருத்து : பொருள் வயிற் பிரிந்த தலைவர் மீண்டு வந்தார். இனி வாடையாலும், மாலையாலும், தனிமையாலும் நமக்குத் துன்பம் இல்லை என்று தலைவி தோழியிடம் கூறினாள்.

அ-ள் : கொண்டல் - கீழ்காற்று. பிதிர் - நீர்த்துளி. கமம் - நிறைவு. பருமம் - அம்பாரி.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - தலைவியை மகிழ்வித்தல். கைகோள் - கற்பு.

ஒப்புமைப்பகுதி

4-7. உறை அழிதுளி வாடை

"நுண்ணுறை அழிதுளி தலைஇய
தன்வரல் வாடையும் பிரிந்திசி னோர்க்கழலே."
(குறுந். 35:4-5)

5. "அரும்பனி அச்சிரம் தீர்க்கும்
மருந்து பிறிது இல்லை அவர் மணந்த மார்பே"
(குறுந். 68:3-4)

அச்சிரம்—முன் பனிக்காலம், (பரி. 18:38) (சிலப். 14:105)

"பற்றுவிடு விரலிற் பயறு காய்ஊழ்ப்ப
அற்சிரம் நின்றன்றாற் பொழுதே" (அகநா. 339:4-5)

"மருந்தில் கூற்றம்" (புறநா. 3:12 உரை)

# 90. மருதம்

## தோழி கூற்று

ஆடுஇயல் விழவின் அழுங்கல் மூதூர்
உடையோர் பான்மையின் பெருங்கை தூவா
அறனில் புலைத்தி எல்லித் தோய்த்த
புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு
5 வாடா மாலை துயல்வர ஓடிப்
பெருங்கயிறு நாலும் இரும்பனம் பிணையல்
பூங்கண் ஆயம் ஊக்க ஊங்காள்
அழுதனள் பெயரும் அஞ்சில் ஓதி
நல்கூர் பெண்டின் சில்வளைக் குறுமகள்
10 ஊசல் உறுதொழில் பூசல் கூட்டா
நயன்இல் மாக்களொடு குழீஇ
பயன்இன்று அம்ம இவ்வேந்துடை அவையே.

எ-து : தோழி தலைமகளுக்கு உரைப்பாளாய், பாணனை நெருங்கி வாயில் மறுத்தது.

## அஞ்சில் அஞ்சியார்

ப-ரை : ஆடு இயல் விழவின் - எப்பொழுதும் கூத்து ஆடுகின்ற விழாவின் ஒலியை உடைய, மூதூர் - இம்மூதூரின் கண், உடையோர் பான்மையின் - ஆடைகளை ஆராய்ந்து கழுவுந் தன்மையில், பெருங்கை தூவா - பெரிதும் தன்கை ஒழியாத, வறன் இல் புலைத்தி - வறுமையில்லாத ஆடை ஒலிப்பவள் (வண்ணாத்தி), எல்லி - இரவில், தோய்த்த - தோய்த்த, புகா - சோற்றின், புகர் - கஞ்சியை, கொண்ட - இட்டுப் புலர்த்திய, புன் பூங்கலிங்கமொடு - சிறிய பூத்தொழிலையுடைய வேலைப் பாடமைந்த ஆடையுடனே, வாடாமாலை - பொன்னரிமாலையும், துயல்வர - அசைந்தாட, ஓடி - ஓடிச் சென்று, பெருங்கயிறு நாலும் - திரித்த கயிற்றைக் கொண்டு கட்டித் தொங்கப் பண்ணிய, இரும்பனம் பிணையல் - கரிய பனை நாரினால் உறுதியாய்ச் செய்யப்பட்ட ஊசலில், பூங்கண் ஆயம் ஊக்க - பூவைப் போலும் கண்களை உடைய தன் தோழிமார் அதனை ஆட்டவும், ஊங்காது - தான் ஆடாதவளாய், அழுதனள் பெயரும் - அழுது மீளுகின்ற, அம் சில் ஓதி - அழகிய சிலவாகிய கூந்தலை உடைய, நல்கூர் பெண்டின் - பெண் தன்மையிற் குறைவுபட்ட, சில்வளைக் குறுமகள் - சிலவாய வளைகளை அணிந்த பரத்தையாகிய பெதும்பைப் பருவத்தாள் ஓர் இளமகளை, ஊசல் உறுதொழில் - மீட்டும் ஊசலாடுகின்ற மிக்க தொழிலின், பூசல் கூட்டா - ஆரவாரத்திற் செய்யாத, நயன் இல்மாக்களொடு குழீஇ - விருப்பம் அற்ற மக்களொடு சேர்ந்து, இவ் வேந்துடை அவை - இவ்வேந்தனது அவைக்களம்தான், பயன் இன்று - பயனற்று இருக்கின்றது, அம்ம - என்ன வியப்பு? அப் பரத்தையை ஆடச் செய்திருந்தால் அவள் ஊடியிராள்; தலைவனும் அவளைப் பிரிய வேண்டிய அவசியம் வந்திருக்காது; ஆண்டு அவள் ஊடினமையால் இறைமகன் இங்கு வந்தான் போலும்; இனி இங்கு வாராது ஒழிவானாக.

முடிபு : இவ் வேந்துடை அவை நயன் இல் மாக்களொடு குழீஇ பயன் இன்றம்ம என முடிக்க.

கருத்து : பரத்தை ஊசலாடாது அழுது ஊடினமையின் தலைவன் இவண் வந்தான் போலும், பாண! அவனொழுக்கம் பயன் உடையதன்று என்று தலைவி பாணனொடு வெகுண்டு உரைத்தாள்.

அ-ள் ; கைதூவாமை - கைஒழியாமை. புலத்தி: ஆடை துவைக்கும் தொழிலி. புகா - உணவு. புகர் - கஞ்சி, ஊக்கல் - அசைத்தல். நல்கூர் பெண்டு - பெண்தன்மை அற்றவள். நயன் இன்மை - தூதாடலின் பலனைப் பெறாமை.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - வாயின் மறுத்தல்.

2-3 "புலைத்தி கழீஇய தூவெள்ளறுவை" (புறநா 311:2)
"நலத்தகைப் புலைத்தி பசைதோய்த்தெடுத்து" (குறுந்.330)
"ஆடை கொண்டொலிக்கும் நின் புலைத்தி" (கலி, 72:14)
"பசைகொல் மெல்விரற் பெருந்தோட் புலைத்தி"
(அகநா. 34;11)
"பசைவிரற் புலைத்தி நெடிது பிசைந்தூட்டிய பூந்துகில்"
(அகநா. 387:6-7)

12. அரசனது செங்கோலவையம்
"பணைத்தோட் குறுமகள் பாவை தைஇயும்
..........................
முறையுடை அரசன் செங்கோல் அவையத்து
..........................
அளிதோ தானேஇவ் அழுங்கல் ஊரே" (குறுந். 276:5)
(அகநா. 93:5) (புறநா. 39:8-9, 71:7-9)
(சிலப். 5:135) (பெருங். 1,34:25)

முற்றும். (பெரும்பாண் - 212:9)

# 91. நெய்தல்

## தோழி கூற்று

நீஉணர்ந் தனையே தோழி வீஉகப்
புன்னை பூத்த இன்னிழல் உயர்கரைப்
பாடுஇமிழ் பனிக்கடல் துழைஇப் யெடையொடு
உடங்குஇரை தேரும் தடந்தாள் நாரை
5 ஐய சிறுகண் செங்கடைச் சிறுமீன்
மேக்குஉயர் சினையின் மீமிசைக் குடம்பைத்
தாய்ப்பயிர் பிள்ளை வாய்ப்படச் சொரியும்
கானல்அம் படப்பை ஆனா வண்மகிழ்ப்
பெருநல் ஈகைநம் சிறுகுடிப் பொலியப்
10 புள்ளுயிர்க் கொட்பின் வள்ளுயிர் மணித்தார்க்
கடுமாப் பூண்ட நெடுந்தேர்
நெடுநீர்ச் சேர்ப்பன் பகல்இவண் வரவே.

எ-து : தோழி தலைமகட்கு வரைவு மலிந்து உரைத்தது.

**பிசிராந்தையார்**

ப-ரை : தோழி! வீ உக - மலர்கள் உதிரும்படி, புன்னை பூத்த - புன்னை மரங்கள் பூத்திருக்கின்ற, இன்நிழல் உயர்கரை - இனிய நிழலைக் கொண்ட உயர்ந்த கரையை உடைய, பாடு இமிழ் பனிக்கடல் துழைஇ - ஓசை முழங்குகின்ற குளிர்ச்சியை உடைய கடலின் கண்ணே துழாவி, பெடையொடு - தன் பெடையுடன், உடங்கு இரை தேரும் - ஒன்றாகச் சென்று இரையைத் தேடுகின்ற, தடந்தாள் நாரை - நீண்ட காலை உடைய நாரை, ஐய - மெல்லிய, சிறுகண் - சிறிய கண்களை உடைய, சிறுமீன் - சிறிய மீன்களைப் பிடித்து, மேக்குயர் சினையின் - மேலோங்கிய கிளையிலுள்ள, மீமிசைக் குடம்பை - ஓங்கி உயரமான இடத்திலிருக்கும் கூட்டிலிருந்து, தாய் - தன் தாய் நாரையை, பயிர்ப்படை அழைக்கும் - கூவி அழைக்கின்ற, பிள்ளை - தன் பிள்ளையின், வாய்ப்படச் சொரியும் - வாயில் விழுமாறு கொடுக்கின்ற, கானல் - கடற்கரைச் சோலையையும், படப்பை - கொல்லையையும், ஆனா - குறையாத, வன்மகிழ் - சிறந்த உணவையும், பெருநல் ஈகை - பெரிய நல்ல கொடையையும் உடைய, நம் சிறுகுடி பொலிய - நாம் வசிக்கும் சிறுகுடி முழுவதும் பொலிவு பெற, புள் உயிர்க் கொட்பின் - பறவைகள் ஒலித்தாற் போன்ற சுழற்சியை உடைய, வள் உயிர் - பெரிய ஒலியை உடைய, மணித்தார் கடுமாப்பூண்ட - மணிகள் கட்டிய மாலையை அணிந்த விரைவாகச் செல்லும் குதிரைகள் பூட்டிய, நெடுந்தேர் - உயர்ந்த தேரின் மேல், நெடுநீர்ச் சேர்ப்பன் - நீண்ட கடற்கரைத் தலைவனாகிய நமது காதலன், பகல் இவண் வரவு - பலரும் காணுமாறு பகற்பொழுதில் இங்கு வருவதனை, நீ உணர்ந்தனையோ - நீ அறிந்தனையோ? இவ்வாறு வருதலால் வரைந்து கொள்ளக் கருதினான் போலும்.

முடிபு : தோழி! நம் சிறுகுடிப் பொலிய சேர்ப்பன் பகல் இவண் வரவு நீ உணர்ந்தனையே என முடிக்க.

கருத்து : தலைவன் பலரும் காண, பகலில் இவண் வருதலால் வரைவு மலிந்தது என்று தோழி கூறினாள்.

அ-ள் : வீ - மலர். பயிர்தல் - அழைத்தல். வள்ளுயிர் - பேரொலி.

வி-ரை : பெருநல் ஈகை நம் சிறுகுடி என்றமையால் வரைய வேண்டியவரின் நம் குரவர் மறுக்கார் என்பதைப் பெற வைத்தாள்.

இதனுட் பெடை என்றது பாகன் போன்றோரை; நாரை என்றது தலைமகனை. இரைதேடுதல் என்றது பொருள் ஈட்டலை.

பிள்ளை என்றது தலைவியை. இரை சொரிதல் என்றது தலைவன் இருந்தி அளித்தலை.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - தலைவியை மகிழ்வித்தல்.

ஒப்புமைப்பகுதி

4. ஆரல் பார்க்கும் குருகு.

"யாரும் இல்லைத் தானே கள்வன்
..................................
ஒழுகு நீர் ஆரல் பார்க்கும்
குருகும் உண்டுதான் மணந்த ஞான்றே"
(குறுந். 25:4-5, 114:3-4)

"நாரைகள் ஆரல் வார" (தே.திருநா. திருநனிபள்ளி)

இரை தேர் நாரை

"இரைதேர் நாரைக்கு எவ்வமாக" (குறுந். 103)

4-7. பறவை இரையைப் பிள்ளையின் வாயிற் செருகுதல்

"ஞாயிறுபட்ட அகல்வாய் வானத்து
அளியதாமே கொடுஞ்சிறைப் பறவை
இறையுற.........
பிள்ளை உள்வாய்ச் செரீஇய
இரைகொண்டமையின் விரையுமாற் செலவே"
(குறுந். 92)

"சுழனி ஆரல் கவுளகத்து அடக்கிப்
பழன மருதிற் பார்ப்புவாய்ச் சொரிந்து
கருங்கால் நாரை நரன்று வந்திருப்ப" (பெருங். 3-7:29-31)

"பல்சிறைப் புறவம் பரிந்து உடனாடி
அவ்வாய்க் கொண்ட ஆரிரை அமிழ்தம்
செவ்வாய்ப் பார்ப்பிற்குச் சேர்ந்தவன் சொரிதலின்"
(பெருங். 5-1:68-70)

# 92. பாலை

## தோழி கூற்று

உள்ளார் கொல்லோ தோழி துணையொடு
வேனில் ஓதிப் பாடுநடை வழலை
வரிமரல் நுகும்பின் வாடி அவண
வறன்பொருந்து குன்றத்து உச்சிக் கவாஅன்
5 வேட்டச் சீறூர் அகன்கட் கேணிப்
பயநிரைக்கு எடுத்த மணிநீர்ப் பத்தர்
புன்றலை மடப்பிடி கன்றோடு ஆர
வில்கடிந்து ஊட்டின பெயரும்
கொல்களிற்று ஒருத்தல் சுரன்இறந் தோரே.

எ-து: பிரிவிடை வேறுபட்ட கிழத்திக்குத் தோழி சொல்லியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை.

ப-ரை: தோழி - தலைவியே! வேனில் - முதுவேனிற் காலத்து, பாடுநடை வருந்திய நடையை உடைய, ஓதி வழலை - ஓந்தியாகிய வழலை, துணையொடு - தன் துணையொடு, வரி மரல் நுகும்பின் - வரிகளை உடைய மரலின் இளமடல்போல, வாடி - வாட்டம் உற்று, அவண - அவ்விடத்திற் கிடத்தலை உடைய, வறன் பொருந்து - வறட்சி அடைந்துள்ள, குன்றத்து உச்சி- குன்றின்மேல், கவாஅன் - பக்கத்திலுள்ள, வேட்டச் சேரி - வேட்டுவச் சேரியை அடுத்த, அகன்கட் கேணி - அகன்ற வாயை உடைய கேணியினின்று, பயநிரைக்கு எடுத்த - பாலைத் தருகின்ற ஆனிரை உண்ணுமாறு எடுத்துவைத்த, மணிநீர்ப் பத்தர் - தெளிந்த நீர்ப்பத்தரை, புன்தலை மடப்பிடி - புல்லிய தலையை உடைய இளம்பிடி, கன்றோடு ஆர - தன் கன்றுடனே நீருண்ணும்படி, வில்கடிந்து ஊட்டின பெயரும் - அப்பத்தரின் வாயை மூடிய விற்பொறியை முறித்துப் போட்டு அவற்றை உண்பித்துச் செல்லாநிற்கும், கொல்களிற்று ஒருத்தல் - கொல்லுந் தொழிலை உடைய களிற்றொருத்தல் வாழ்கின்ற, சுரன் - பாலைநிலத்தின் வழியில் இறந்தோர் - சென்ற நம் தலைவர், உள்ளார் கொல்லோ - சென்று தங்கிய இடத்தும் அவர் நம்மை நினைத்திலர் போலும். அதனால் அவர் மாட்டு வருந்திப் பெறும்பயன் என்னை?

முடிபு: தோழி! சுரன் இறந்தோர் உள்ளார் கொல்லோ என்று முடிக்க.

கருத்து: அன்புறு தகுவன சுரத்திடைக் கண்டும் நின்னை அவர் உள்ளி வாரார்; எனவே அவரை நினைத்து வருந்திப் பெறும் பயன் யாது என்று தோழி கூறி, தலைவியைத் தோழி ஆற்றுவித்தாள்.

அ-ள் : ஒதி - ஒந்தி; இடைக்குறை. வழலை - பாம்பின் விசேடம். ஒருத்தல் - விலங்கின் ஆண்பாற் பெயர். நுகும்பு - இளமடல்.

வி-ரை : பெண் யானையும் கன்றும் நீருண்ணுமாறு களிறு பத்தரை உடைத்து உண்பிக்கும் கானத்திற் சென்று அதனை நோக்கிய காதலர் நாம் மகிழ வந்திலரே என்ன கொடுமை என்றிரங்கியது.

மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

5-7. "ஆனீர்ப் பத்தல் யானை வெளவும்" (ஐங். 304)

# 93. குறிஞ்சி

## தோழி கூற்று

பிரசம் தூங்க பெரும்பழம் துணர
வரைவெள் அருவி மாலையின் இழிதரக்
கூலம் எல்லாம் புலம்புஉக நாளும்
மல்லற்று அம்மஇம் மலைகெழு வெற்பெனப்
5 பிரிந்தோர் இரங்கும் பெருங்கல் நாட
செல்கம் எழுமோ சிறக்க நின்ஊழி
மருங்கு மறைத்த திருந்துஇழைப் பணைத்தோள்
நல்கூர் நுசுப்பின் மெல்இயல் குறுமகள்
பூண்தாழ் ஆகம் நாண்அட வருந்திய
10 பழங்கண் மாமையும் உடைய தழங்குகுரல்
மயிர்க்கண் முரசினோரும் முன்
உயிர்க்குறி எதிர்ப்பைப் பெறல்அருங் குரைத்தே.

எ-து : வரைவு கடாயது.

**மலையனார்**

ப-ரை : பிரசம் தூங்க - மரங்களின் கிளைகளில் எல்லாம் தேன் கூடுகள் தொங்கி நிற்ப, பெரும்பழம் துணர - பெரிய பெரிய பழங்கள் குலை குலையாகப் பழுக்க, வரைவெள் அருவி - வரையிடத்து வெள்ளிய அருவிகள், மாலையின் இழிதர - மாலைபோல இறங்கிவர, கூலம் எல்லாம் - மலைச்சாரலில் உள்ள கொல்லைகளில் நெல்லு எள்ளு முதலியன விதைக்கப்பட்டு, புலம்புக - உரிய இடங்களில் கொண்டு வந்து குவிக்கப்பட, இம் மலைகெழு வெற்பு - சிறுசிறு குன்றுகள் சூழ்ந்த இந்தப் பெரிய மலை, நாளும் - எப்பொழுதும், மல்லற்று - வளம் கொழிப்பதாக இருக்கின்றது என்று, அம்ம - கண்டார் வியந்து கூற, பிரிந்தோர் - இதனை விட்டுப் பிரிபவர், இரங்கும் - வருத்தப்படும், பெருங்கல்நாட - பெரியமலை நாடனே! செல்கம் - யாம் இதனைவிட்டுச் செல்வோம், எழுமோ - நீயும் எழுந்து செல்வாயாக, சிறக்க நின் ஊழி - உன் வாழ்நாள் நீளுவதாகுக. மருங்கு - பக்கங்களில், மறைத்த - இடை முதலியன மறையும் வண்ணம் பூண்ட, திருந்து இழை - சிறந்த ஆபரணங்களை உடைய, பணைத்தோள் - பருத்த தோள்களையும், நல்கூர் நுசுப்பின் - மிக நுண்ணிய இடையையும், மெல் இயல் - மென்மையான சாயலையும் உடைய, குறுமகள் - இவ் இளமகளுடைய, பூண்தாழ் ஆகம் - அணிகலன்கள் தாழ்ந்து தொங்கும், ஆகம் - மார்புகள், நாண் அட வருந்திய - நாணம் துன்பப்படுத்தலால் வருத்தமுற, பழங்கண் மாமையும் - துன்பம் கொண்ட பசலைநிறமும், உடைய - உடையன ஆதலால், தழங்குகுரல் - ஒலிக்கின்ற குரலை உடைய, மயிர்க்கண் முரசினோரும் - மயிர் சீவாத தோல் போர்த்த இடமகன்ற நின் மணமுரசொலி, கேட்டலினாலே நம்மைத் தலைவன் வரைய வந்தான் என்று, தலைவி நினைக்கும்; முன் உயிர்க் குறியெதிர்ப்பை - அந்த நாள் வருதற்குள் இவர் இறவாமல் இருக்கும் படியான நிலையைக் காணல் இனிப் பெறுதற்கு அரிய தொன்றாகும். காண் - எண்ணிப் பார்.

முடிபு - பெருங்கல் நாட, உயிர்க் குறியெதிர்ப்பை பெறலருங் குரைத்து, செல்கம்: எழுமோ என முடிக்க.

கருத்து : தலைவ! இனிப்பகற் குறிக்கண் வாரலை. யாம் எம் இருப்பிடம் செல்கின்றோம். மணமுரசொலி கேட்குமுன் தலைவி இறந்துபடினும் படும். ஆகலின் விரைந்து வந்து வரைந்து கொள் என்று வரைவு கடாயினாள்.

அ-ள் : கூலம் - நெல் முதலிய தானிய வகைகள்.

மெய்ப்பாடு - அவலத்தைச் சேர்ந்த பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

# 94. நெய்தல்

## தலைவி கூற்று

நோய் அலைக் கலங்கிய மதன்அழி பொழுதில்
காமம் செப்பல் ஆண்மகற்கு அமையும்
யானென் பெண்மை தட்ப நுண்ணிதின் தாங்கிக்
கைவல் கம்மியன் கவின்பெறக் கழாஅ
5 மண்ணாப் பசுமுத்து ஏய்ப்பக் குவிஇணர்ப்
புன்னை அரும்பிய புலவுநீர்ச் சேர்ப்பன்
என்ன மகன்கொல் தோழி தன்வயின்
ஆர்வம் உடைய ராகி
மார்பு அணங்குறுநரை அறியா தோனே.

எ-து : தலைவன் சிறைப்புறத்தானாக, தலைவி தோழிக்கு உரைப்பாளாய்ச் சொல்லியது.

### இளந்திரையனார்

ப-ரை : தோழி - தோழியே! நோய் - காம நோயானது, அலைக் கலங்கிய - நிலையழியுமாறு செய்தலால், மதன் அழி பொழுதில் - கலக்கம் உற்று வலிமை குன்றிய சமயத்தில், காமம் செப்பல் - அன்புடன் வந்து அருகிலிருந்து அன்பான இனிய உரைகளைக் கூறி ஆற்றுவித்தல், ஆண்மகற்கு - ஆண்மக்களுக்குரிய, அமையும் - சிறந்த பண்பாகும், (அவ்வாறு நான் காம நோயால் துன்புற்ற போது நமது காதலன் அருகிருந்து ஆற்றவும் இல்லை) கைவல் கம்மியன் - கைத்தொழில் வல்ல கம்மியன், கவின்பெறக் கழாஅ - அழகு பொருந்தக் கழுவி, மண்ணாப் பசு முத்து ஏய்ப்ப - தூய்மை செய்யாத பசியமுத்து தனது நிறைந்த ஒளியை மறைத்துக் காட்டினாற்போல, யான் - நான், என் பெண்மை தட்ப - புணர்ச்சியால் நிகழ்ந்த மிக்க நலனைப் புலப்படாமல், நுண்ணிதின் தாங்கி - அரிதாகத் தாங்கி நிற்க, குவி இணர்ப்புன்னை அரும்பிய - அலராமற் குவிந்த பூங் கொத்துக்களை உடைய புன்னையின் கண்ணே, புலவுநீர்ச் சேர்ப்ப - புலவு நாற்றத்தை உடைய நீர்தெறித்தலால் மலர்ந்த கடற்கரைத் தலைவனாகிய, தன்வயின் - தன்பால், ஆர்வம் உடையராகி - விருப்பம் கொண்டவராக, மார்பு அணங்குநரை - அவனது மார்பால் துன்புற்ற என் நிலையை, அறியாதோர் - உணரமாட்டாத நம் காதலர், என்ன மகன் கொல் - என்ன ஆண் மகன் என்று கூறுவேனோ?

முடிபு : தோழி, ஆண்மகற்கு அமையும். மார்பு அணங் குறநரை அறியாதோன் என்ன மகன் கொல்? என்று முடிக்க.

கருத்து : நம் துயரம் அறியாத தலைமகன் என்ன மகனோ? மகனாயின் விரைந்து வந்து வரைந்து கோடலே யான் வேண்டியது என்றாள்.

வி-ரை : இதனுள் தலைவியை முத்திற்கு ஒப்பாகக் கூறியது சிறப்பு நிலைக்களன் பற்றி எழுந்த உவமையாம். ஆண்மகன் அருகிருந்து அன்புகாட்டல் கற்பிற்கன்றி களவில் இயையாமையின் வரைவு விரும்பியவாறு, காதல் கைம்மிகலால் என்ன மகன் என்று இழித்துரைத்தாள். இஃது அழிவில் கூட்டம். புன்னையிடத்துத் தோன்றிய புலால் நாற்றத்தைப் பூவிரிந்து கெடுக்குமாறுபோல, களவினால் ஆகிய குற்றத்தை வரைந்து கொண்டமையாற் போக்குக என்றாள்.

மெய்ப்பாடு - வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - வரைவுடம்படுத்தல்.

ஒப்புமைப்பகுதி

1. புலம்பலைக் கலங்கி

"சிறைபனி உடைந்த சேயரி மழைக்கண்
பொறையரு நோயொடு புலம்பலைக் கலங்கி"
(குறுந். 86:1-2)

2. காமஞ் செப்பல்

"காசில் காமம் செப்பிக் கண்ணினால் இரப்பர்"
(சீவக. 2549)

5-6 "நெடுங்காற்புன்னை நித்திலம் கைப்பவும்"
(சிறுபாண். 149)

"மண்ணாமுத்த மரும்பிய புன்னை" (அகநா. 30:13)

## 95. குறிஞ்சி

### தலைவன் கூற்று

கழைபாடு இரங்க பல்லியம் கறங்க
ஆடுமகள் நடந்த கொடும்புரிநோன் கயிற்று
அதவத் தீம்கனி அன்ன செம்முகத்
துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்கக்
5 கழைக்கண் இரும்பொறை ஏறிவிசைத்து எழுந்து

குறக்குறு மாக்கள் தாளம்கொட்டும் அக்
குன்றகத் ததுவே .கொழுமிளைச் சீறூர்
சீறூரோளே நாறு மயிர்க் கொடிச்சி
கொடிச்சி கையகத்ததுவே பிறர்
10 விடுத்தற்கு ஆகாது பிணித்த என்நெஞ்சே.

எ-து : தலைமகன் பாங்கற்கு, 'இவ்விடத்து இத்தன்மையது' என உரைத்தது.

## கொட்டம்பலவனார்

ப-ரை : கழை பாடு இரங்க பல்லியம் கறங்க - பக்கத்திலே குழல் ஒலிப்ப பல வாத்தியங்களும் முழங்க, ஆடுமகள் நடந்த - ஆடுகின்ற கழைக்கூத்தி நடந்த, கொடும்புரி நோன் கயிற்று - முறுக்குண்ட புரியை உடைய வலிய கயிற்றின் மீது, அதவத் தீங்கனி அன்ன - இனிய அத்திப்பழம் போன்ற, செம்முகத்து - சிவந்த முகத்தையும், துய்த்தலை - பஞ்சுபோன்ற தலையையும் உடைய, மந்தி - மந்தியினது, வன்பறழ் - வலியகுட்டி, தூங்க - தன் தாயை இறுகப் பற்றித் தூங்கா நிற்ப, (அதனைக் கண்ட) குறக் குறுமாக்கள் - குறச் சாதியரின் இளஞ்சிறார், கழைக்கண் இரும்பொறை ஏறி - (பெரிய பாறையில் ஓங்கி வளர்ந்து நிற்கும்) மூங்கிலின்மேல் விசைத்தெழுந்து ஏறிநின்று, தாளம் கொட்டும் - தாளம் கொட்டா நிற்கும், அக் குன்றகத்ததுவே - அந்தக் குன்றினிடத்து உளதாகும், கொழுமிளைச் சீறூர் - கொழுவிய காவற்காடு சூழ்ந்த சிறூர்; நாறு மயிர்க் கொடிச்சி - என்னாற் காதலிக்கப்பட்ட நறுமணம் கமழும் கூந்தலை உடைய கொடிச்சி, சிறூரோளே - அச் சிறூரின் கண்ணே இருப்பவளாவாள். பிணித்த - அவளால் பிணிப்புண்ட, என் நெஞ்சு - என் நெஞ்சமும், கொடிச்சி கையகத்தது - அந்தக் கொடிச்சியின் கையகத்ததாக அடங்கிவிட்டது; பிறர் விடுத்தற்கு ஆகாது - அவள் இரங்கி என் நெஞ்சை விடுவித்தால் தவிர, பிறரால் விடுவித்தற்கு இயலாது.

முடிபு : பாங்க; என் நெஞ்சு கையகத்தது: பிறர் விடுத்தற்கு ஆகாது என முடிக்க.

கருத்து : தலைவன் தன்னை மயக்கிய தலைவியின் இடத்தையும் இயலையும் பாங்கற்கு கூறி அவளைத்தான் அடைய ஆவன செய்யுமாறு வேண்டினன்.

அ-ள் : அதவம் - அத்தி. துய் - பஞ்சு. மிளை - காவற்காடு. தலைவியின் இயலை நாறுமயிர் என்றமையாற் சுட்டினான்.

வி-ரை : தாளம் கொட்டும் என்ற சொற் சிறப்பான் இப் பாடலாசிரியர், கொட்டம்பலவனார் எனப்பட்டார் போலும்.

நயம் : கூத்தி நடந்த கயிற்றின்மேல் குரங்குக் குட்டி ஏறி யாடுவதைக் கண்ட குறச் சிறுவர்கள் தாளம் கொட்டுவர் என்றது, செய்வன செய்து தவிர்வன தவிர்ந்து உயிர்களைப் பாதுகாத்தலைக் கொண்ட என்னுள்ளத்து ஒரு கொடிச்சி வந்து தங்கியுள்ளதனை அறிந்த நீ நகையாடித் துன்புறுத்தினை என்பதனைச் சுட்டிற்று.

மெய்ப்பாடு - வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - பாங்கனிடத்து உரைத்தல்.

ஒப்புமைப்பகுதி

3-4. அதவத்துப்பழம்

"கருங்கால் வேம்பின் ஒண்பூ யாணர்

...............................

ஆற்றயல் எழுந்த வெண்கோட்டு அதவத்து
எழுகுளிறு மிதித்த ஒருபழம் போலக்
காதலரகலக் கல்லென் றவ்வே" (குறுந். 24)

8. கூந்தலின் இயற்கைமணம்

"கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி

...............................

செறியெயிற்று அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீ யறியும் பூவே" (குறுந். 2:4-5)

"கூந்தல்......நறுந் தண்ணியதுவே" (குறுந். 116:1-4)

"நெறிபடுகூந்தல்" (குறுந். 199:3-4)

"நறுமென் கூந்தல்" (குறுந். 270:8)

"நாறிருங் கூந்தல்" (குறுந். 272:8)

"மண நாறு கதுப்பினாய்" (கலி. 43:23)

"நாறிருங் கூந்தல்" (புறநா. 113:9)

# 96. நெய்தல்

## தோழி கூற்று

இதுவே நறுவீ ஞாழல் மாமலர் தாஅய்ப்
புன்னை ததைந்த வெண்மணல் ஒருசிறைப்
புதுவது புணர்ந்த பொழிலே உதுவே
பொம்மற் படுதிரை நம்மோடு ஆடி
5 புறந்தாழ்பு இருளிய பிறங்குகுரல் ஐம்பால்
துவரினர் அருளிய துறையே அதுவே
கொடுங்கழை நிவந்த நெடுங்கால் நெய்தல்
அம்பகை நெறித்தழை அணிபெறத் தைஇத்
தமியர் சென்ற கானல் என்றாங்கு
10 உள்ளு தோறு உள்ளுதோறு உருகி
பைஇப் பையப் பசந்தனை பசப்பே.

எ-து : சிறைப்புறமாகத் தோழி தலைவிக்கு உரைப்பாளாய் வரைவுகடாயது.

### கோக்குள முற்றனார்

ப-ரை : தோழி - தலைவியே, நறுவீ ஞாழல் - நறுமணம் வீசும் மலர்களையுடைய ஞாழலின், மாமலர் - சிறந்த மலர் களும், புன்னை - புன்னையின் மலர்களும், தாஅய் - உதிர்ந்து; ததைந்த - பரவி நெருங்கிய, வெண்மணல் ஒரு சிறை - வெள்ளிய மணற்பரப்பின் ஒரு பக்கம், புதுவது புணர்ந்த பொழில் இதுவே - என்னைப் புதுவதாக இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த சோலை இதுவே என்றும், பொம்மல் படுதிரை நம்மோடு ஆடி - பொலிவு பொருந்திய கடலில் நம்மோடு நீராடி, புறந்தாழ்பு இருளிய பிறங்கு குரல் ஐம்பால் - என் முதுகிலே தாழ்ந்து இருண்ட விளங்கிய ஐந்து வகையாகப் பிரிக் கப்படும் கூந்தலை, துவரினர் அருளிய துறையே அதுவே - பிழிந்து துவட்டினராய் அருளிய நீர்த்துறை அதுவே என்றும், கொடுங்கழை நிவந்த கடுங்கால் நெய்தல் - வளைந்த தண்டு யர்ந்த நீண்ட காம்புடைய நெய்தலின், அம்பகை நெறித்தழை - அழகிய ஒன்றோடொன்று மாறுபடத்தொடுத்த நெறிப்பை உடைய தழையை, அணி பெறத்தைஇ - அழகு பெற எனக்கு உடுப்பித்து, தமியர் - தமியராக, சென்ற கானல் என்று ஆங்கு - சென்றுவிட்ட கழிக்கரைச் சோலை அதுவே என்றும் அவ் வண்ணம், உள்ளுதோறு உள்ளுதோறு உருகி - நினைக்குந்தோறும்

நினைக்குந்தோறும் உள்ளம் உருகி, பைஇப் பைய - மெல்ல மெல்ல, பசுப்பு பசந்தனை - பசப்பை மேற்கொண்டு பசந்து காட்டினாய், இனி எப்படி உய்குவாய்.

முடிபு : இதுவே பொழிலே, அதுவே அருளிய துறையே, தமியர் சென்ற கானல் உதுவே என்று உருகிப் பசந்தனை என் செய்வேன் என்று முடிக்க.

கருத்து : தலைவி! உன்னைத் தலைவன் புணர்ந்த சோலை இது என்றும், ஆடிய துறை அது என்றும் உள்ளம் உருகிப் பசந்தனை. இஃது உணர்ந்த தலைவன் விரைந்து வந்து வரைந்து கொள்வான்; கவலற்க.

அ-ள் : பொம்மல் - பொலிவு. துவருதல் - துவட்டுதல், கழை - தண்டு. புணர்ந்தபொழிலிது, ஆடியதுறை அது, தைஇய கானல் உது என்னும் மூன்றும் துன்பத்துப் புலம்பல் என்பர். உள்ளுதோறு உருகி என்பது ஆங்கு நெஞ்சழிதல் என்பர். பசப்புப் பசந்தனை என்பது பசலை பாய்தலாம்.

மெய்ப்பாடு - அவலத்தைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - வரைவுகடாதல்.

ஒப்புமைப்பகுதி

1-2. ஞாழலும் புன்னையும்

"எறிசுறாக் கலித்த இலங்குநீர்ப் பரப்பின்
நறுவீ ஞாழலொடு புன்னை தாஅய் (குறுந். 318)
"புன்னையொடு ஞாழல் பூக்குந் தண்ணந் துறைவன்"
(ஐங். 103:1-2)

"பொன்னிணர் ஞாழல் முனையிற் பொழி அவிழ
புன்னைஅம் பூஞ்சினைச் சேக்கும் துறைவன்" (ஐங். 169)
"எக்கர்ப் புன்னை இன்னிழல் அசைஇ......
ஞாழல் ஓங்குசினைத் தொடுத்த கொடுங்கழித் தாழை
வீழ்கயிற்று ஊசல் தூங்கி" (அகநா. 20:3-6)
"பொன்வீ ஞாழலொடு புன்னை வரிக்கும்
கானலம் பெருந் துறை" (அகநா. 70:9-10)
"ஞாழலொடு கெழீஇய படப்பை நின்ற
முடத்தாட் புன்னைப்பொன்னேர் நுண்தாது நோக்கி"
(அகநா. 180:12-4)

7-8. மகளிர் நெய்தல் தொடை அணிதல்

"அடும்பின் ஆய்மலர் விரைஇ நெய்தல்
நெடுந்தொடை வேய்ந்த நீர்வார் கூந்தல் (குறுந். 401)
"கடலாடு மகளிரும், நெய்தல்அம் பகைத்தழைப்
பாவை புனையார், உடலகங்கொள்வோர் இன்மையிற்
றொடலைக் குற்ற சிலபூவினரே" (ஐங். 187:2-5)

8. பகைநெறித்தழை

"கள்ளிற் கேளி ராத்திரை உள்ளூர்.........
அயவெள்ளாம்பல் அம்பகை நெறித்தழை" (குறுந். 293:5)
"நெய்தல்அம் பகைத்தழை" (ஐங். 187:3)
"மணலொடு மலிர் நிறை விரும்பிய ஒண்டழை" (ஐங். 15:1)

# 97. முல்லை

## தலைவி கூற்று

அழுந்துபடு விழுப்புண் வழும்புவாய் புலரா
எவ்வ நெஞ்சத்து எஃகெறிந் தாங்குப்
பிரிவில புலம்பி நுவலும் குயிலினும்
தேறுநீர் கெழீஇய யாறுநனி கொடிதே
5 அதனினும் கொடியள் தானே மதனின்
துய்த்தலை இதழ பைங்குருக் கத்தியொடு
பித்திகை விரவுமலர் கொள்ளீரோ என
வண்டுசூழ் வட்டியள் திரிதரும்
தண்டலை உழவர் தனிமட மகளே.

எ-து: பருவங்கண்டு ஆற்றாளாய தலைவிக்கு உரைத்தது.

மாறன் வழுதி

ப-ரை: தோழி - தோழியே! அழுந்துபடு விழுப்புண் - ஆழ்ந்த பெரிய புண்ணின், வழும்பு வாய் புலரா - வாய் நிணம் காயாத, எவ்வ நெஞ்சத்து - துன்பம் தங்கிய மார்பினிடத்தில், எஃகு எறிந்தாங்கு - கூரிய வேலைப் பாய்ச்சினாற்போல, பிரிவில - என்னை விட்டுப் பிரியாதனவாய், புலம்பி - வருந்த, நுவலும் - கூவும், குயிலினும் - குயிலைக் காட்டிலும், தேறுநீர்

கெழீஇய - நன்றாகத் தெளிந்த நீர் செறிந்து வருகின்ற, யாறு நனி கொடிதே - யாறு மிகவும் கொடியதாய் இருக்கின்றது, மதனின் - அழகுடைய, துய்த்தலை இதழ - பஞ்சு போன்ற மேலே புற இதழை உடைய, பைங் குருக்கத்தியொடு - பசியகுருக் கத்தி மலருடனே, விரவு மலர் பித்திகை கொள்ளீரோ என - விரவிய சிறிய சண்பக மலரையும் விலைக்குக் கொள்வீரோ என்று. வண்டுசூழ் வட்டியர் - அம்மலர்களை இட்டுவைத்த வண்டுகள் மொய்க்கும்படியான கடகப் பெட்டியை, திரிதரும் - கைக்கொண்டு எங்கும் சுற்றி வரும், தண்தலை உழவர் தனி மட மகள் - சோலையில் வாழும் உழைத்துண்ணும் உழவருடைய ஒப்பற்ற இளைய மகள்தான. அதனினும் கொடியள் தானே - அந்த யாற்றைக் காட்டிலும் மிகக் கொடியவளாய் இருக்கின் றாள். ஆகையால் யான் எவ்வாறு ஆற்றுவேன்?

முடிபு : குயிலினும் யாறு கொடிது, அவ் யாற்றினும் உழவர் மகள் கொடியள், எங்ஙன் ஆற்றுவன் என்று முடிக்க.

கருத்து : தலைவன் கார்ப்பருவத்தில் வாரானாக, அது கண்ட தலைவி கருப்பொருள் முதலாயவற்றைக் கண்டு நொந்து எப்படி உய்வேன் என்று தோழியிடம் கூறினாள்.

அ-ள் : வழும்பு - நிணம். மதன் - அழகு, பித்திகை - சிறு சண்பகம். வட்டி - கடகப்பெட்டி.

நயம் : முதலிருவரிகளில் "வெந்த புண்ணில் வேல் நுழைந் தாற்போல" என்னும் பழமொழியின் கருத்தமைந்துள்ளது. குயில் கூவுதல், யாற்றில் நீர் பெருகுதல், குருக்கத்தி, சிறு சண்பகம் மலர்தல் ஆகியவை கூறப்படுதலின் முல்லையாயிற்று. குயிலோசை முதலியன இன்பத்தை வெறுத்தலோடு துன்பத்துப் புலம்பலையும் கருதிற்று. குயில் கொடிது என்றாள் - செவி இன்பத்தைப்பெற, ஏனைய புலன்கள் இன்பம் பெறாமையின்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

1-3. புணர்ந்த பறவையின்ஒலி பிரிந்தாருக்குத் துன்பத்தை உண்டாக்குதல்

"உதுக்காணதுவே இதுவென் மொழிகோ
நோன்சினை இருத்த விருந்தோட்டுப் புள்ளினம்
தாம்புணர்ந் தமையிற் பிரிந்தோ ருள்ளா"

(குறுந். *191:1-3, 160:1-4*)

# 98. குறிஞ்சி

## தோழி கூற்று

எய்ம்முள் அன்ன பரூஉ மயிர் எருத்தின்
செய்ம்ம் மேவல் சிறுகட் பன்றி
ஓங்குமலை வியன்புனம் படீஇயர் வீங்குபொறி
நூழை நுழையும் பொழுதில் தாழாது
5 பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென
மெல்ல மெல்லப் பிறக்கே பெயர்ந்துதன்
கல்அளைப் பள்ளி வதியும் நாடன்
எந்தை ஓம்பும் கடிப்புடை வியன்நகர்த்
துஞ்சாக் காவலர் இகழ்பதம் நோக்கி
10 இரவின் வருஉம் அதனினும் கொடிதே
வைகலும் பொருந்தல் ஒல்லாக்
கண்ணொடு வாரா என்நார்இல் நெஞ்சே.

எ-து : இரவுக்குறி வந்து ஒழுகும் தலைவனைத் தோழி வரைவுகடாயது.

### உக்கிரப் பெருவழுதி

ப-ரை : எய் முள்ளன்ன - முள்ளம்பன்றியினது முள்ளைப் போன்ற, பருஉமயிர் - பருத்தமயிரை உடைய, எருத்தின் - கழுத்தினையும், செய்ம்மேவல் - வயலிற்சென்று மேயும் விருப்பத்தையும், சிறுகண் - சிறிய கண்களையும் உடைய, பன்றி - பன்றியானது, ஓங்குமலை வியன்புனம் - உயர்ந்த மலையிடத்துள்ள விசாலமான தினைப் புனத்திலே, படீஇயர் - சென்று மேயும் பொருட்டு, வீங்குபொறி - பெரிய இயந்திரம் அமைந்த, நூழை நுழையும் பொழுதில் - புழைவழியிலே சென்று புகும்பொழுது, தாழாது - தாழ்க்காமல் விரைந்து, பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென - நல்லபக்கத்திலிருந்து பல்லி சொல்லலும், மெல்ல மெல்லப் பிறக்கே பெயர்ந்து - (அதனை அறிந்து அவ்விடம் சென்றால் துன்பம் ஏற்படும் என்று பயந்து) மெல்ல மெல்லப் பின்னே திரும்பிவந்து, தன் கல்அளைப் பள்ளி - தன் கல் குகையிலுள்ள பள்ளியிடத்தே, வதியும் நாட - பயமின்றித் தங்கியிருக்கும் மலைநாடனே! எந்தை ஓம்பும் - எம் தந்தையாற் பாதுகாக்கப்படுகின்ற, கடிப்புடை வியன் நகர் - காவலை உடைய அகன்ற மாளிகையிடத்து, துஞ்சாக் காவலர் - உறங்காமற் பாதுகாக்கும் ஊர்க்காவலர்தாம், இகழ் பதம் நோக்கி,

சோர்ந்து இருக்கும் சமயம் பார்த்து, இரவின் வரூஉம் அதனினும் - நீ இரவின் கண் வந்து முயங்கிச் செல்வதைக் காட்டிலும், வைகலும் - நாள்தோறும், பொருந்தல் ஒல்லாக் கண்ணொடு - நீ வரும் வழியின் கொடுமைகண்டு துயிலப் பெறாத என்கண்ணும், அதனினும் கொடிது - அதைக் காட்டிலும் கொடியதாய் இரா நின்றது. என் நார் இல் நெஞ்சு (கொடிது) - நின்னிடம் சென்று திரும்பாத என் நெஞ்சமும் கொடியது காண்.

முடிபு : நாட! துஞ்சாக் காவலர் இகழ்பதம் நோக்கி இரவின் வரூஉம் நின்செயல் கொடிது. கண்ணொடு வாரா என் நாரில் நெஞ்சு எனமுடிக்க.

கருத்து : தலைவ! நீ ஏதம் நிறைந்த வழியில் இரவிடை வருதல் கொடிது. அதனினும் கொடிது துயிலாக் கண்கள். மேலும் கொடிது நின்பாற் சென்ற என்னுள்ளம் மீண்டும் திரும்பாமை. ஆகையால் இரவிடை வாரற்க என்று வரைவு கடாயினாள்.

அ-ள் : எய் - முள்ளம்பன்றி. மேவல் - விரும்புதல். நூழை - துவாரம். கடிப்பு - காவல். நார் - அன்பு.

இது தோழி கொண்டு கூறினாள்.

நயம் : பன்றி தினையை மேய விரும்பிப் பொறியில் நுழையுங் கால், பல்லி சொல்கேட்டு அஞ்சி மீண்டு தன் இருப்பிடஞ் சென்று தங்கும் என்றது, தலைவன் தலைவியிடம் இன்பம் விரும்பி காவல் மாளிகையில் பதுங்கி நுழையும்போது நிலவு வெளிப்படல், காவலர் கடுகுதல் முதலிய இடையூறுகள் நிகழக்கண்டு மீண்டு தன் ஊர் செல்வான் என்பதைக் குறிப்பித்தது.

மெய்ப்பாடு - அவலத்தைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

# 99. முல்லை

## தோழி கூற்று

நீர்அற வறந்த நிரம்பா நீள்இடைத்
துகில்விரித்து அன்ன வெயில்அவிர் உருப்பின்
அஞ்சுவரப் பனிக்கும் வெஞ்சுரம் இறந்தோர்
தாம்வரத் தெளித்த பருவம் காண்வர
5 இதுவோ என்றிசின் மடந்தை மதியின்று

மறந்து கடல்முகந்த கமஞ்சூல் மாமழை
பொறுத்தல் செல்லாது இறுத்த வண்பெயல்
காரென்று அயர்ந்த உள்ளமொடு தேர்வில
பிடவும் கொன்றையும் கோடலும்
10 மடவ ஆகலின் மலர்ந்தன பலவே.

எ-து : பருவம் கண்டு ஆற்றாளாய தலைவியைத் தோழி பருவம் அன்று என்று வற்புறுத்தியது.

## இளந்திரையனார்

ப-ரை : மடந்தை - மடந்தையே! நீர் அற வறந்த - தண்ணி தாகிய குளுமை முற்றும் அற்ற, நிரம்பா நீள் இடை - செல்லச் செல்லத் தொலையாத நீண்ட வழியில், துகில் விரித்து அன்ன - வெண்மையான ஆடையைப் பரக்க விரித்தாற் போன்ற, வெயில் அவிர் உருப்பின் - கதிரவன் ஒளி வீசுகின்ற வெப்பத்தாலே, அஞ்சுவரப் பனிக்கும் - நோக்குவார் அஞ்சும்படியாக நடுக்கத் தைச் செய்யும், வெம் சுரம் இறந்தோர் - கொடிய காட்டின் கண்ணே சென்ற நம் தலைவர், தாம் வரக்காண் வர தெளித்த பருவம் - தாம் வருவேம் என்று அழகு பொருந்தத் தெளியக் கூறிய காலம், இதுவோ என்றிசின் - இதுதானோ என்று கேட் கின்றனை, இஃது அன்று, மதிஇன்று - அறிவில்லாது, மறந்து - பருவகாலத்தை மறந்து, கடல் முகந்த கமம் சூல் மாமழை - கடல்நிரை உண்டதனாலாகிய நிறைந்த கருக்கொண்ட கரி மேகம், பொறுத்தல் செல்லாது - தன்னால் தாங்கமாட்டாமல், இறுத்த - பெய்து ஒழிந்த, வண்பெயல் - வளவிய மழையை நோக்கி, கார் என்று - கார்காலம் என்று கருதி, அயர்ந்த உள்ள மொடு - மறதியுற்ற உள்ளத்துடனே, தேர்வுஇல - அறியாதன வாய், பிடவும் கொன்றையும் கோடலும் - பிடவும் கொன்றையும் காந்தளும், பலவும் - இவை போன்ற பலவும், மடவ ஆகலின் - அறிவில்லாப் பொருள் ஆதலின், மலர்ந்தன - மிக மலர்ந்து விட்டன. அவற்றைக் கண்டு நீ கார்காலம் என மயங்காதே.

முடிபு : மடந்தை! பருவம் இதுவோ என்றிசின்; மடவ ஆகலின் பல மலர்ந்தன இது பருவம் இன்று என்று முடிக்க.

கருத்து : தலைவன் குறித்த கார்ப்பருவம் இஃது அன்று; பிடவும் கொன்றையும் காந்தளும் மலர்ந்தன கண்டு மயங்கற்க என்றாள்.

அ-ள் : உருப்பு - வெப்பம். கமம் - நிறைவு. இறுத்தல் - பெய்து ஒழித்தல், கோடல் - காந்தள். இது பருவம் அன்று

எனவே தலைவர் குறித்த பருவத்து வருவர் என்று தெளிவித்தாள்.

மெய்ப்பாடு - மருட்கை.

பயன் - தலைவியைத் தெளிவித்தல்.

ஒப்புமைப்பகுதி

9. கொன்றை கார்காலத்தில் மலர்தல்

"மடவ மன்ற தடவுநிலைக் கொன்றை
..............................
வம்ப மாரியைக் காரென மதித்தே"

(குறுந். 66:1-5, 21:3-4)

பழநீர்

"மடவ வாழி மஞ்ஞை மாயினம்
....................
கழிந்த மாரிக்கு ஒழிந்த பழநீர்
....................
நொதுமல் வானத்து முழங்கு குரல் கேட்டே"

(குறுந். 251:5)

2. உருப்பு

"யாங்கறிந்தனர் கொல் தோழி பாம்பின்
உரி நிமிர்ந்தன்ன உருப்பவிர் அமையத்து
....................
பிரிந்து சேணுறைதல் வல்லு வோரே" (குறுந். 154:2)

(குறிஞ்சி. 45) (அகநா. 11:2) (பு. வெ. 255)

8-10 "காரென மயங்கிய, பேதையங் கொன்றைக்
கோதை நிலை நோக்கி" (ஐங். 462) (குறுந். 66, 183)

# 100. மருதம்

## பரத்தை கூற்று

உள்ளுதொறும் நகுவேன் தோழி வள்உகிர்
மாரிக் கொக்கின் கூர்அல் அன்ன
குண்டுநீர் ஆம்பல் தண்டுறை ஊரன்
தேங்கமழ் ஐம்பால் பற்றி என்வயின்
5 வான்கோல் எல்வளை வெளவிய பூசல்

சினவிய முகத்துச் சினவாது சென்றுநின்
மனையோட்கு உரைப்பல் என்றலின் முனைஊர்ப்
பல்லா நெடுநிரை வில்லின் ஒய்யும்
தேர்வண் மலையன் முந்தைப் பேர்இசைப்
10 புலம்பிரி வயிரியர் நலம்புரி முழவின்
மண்ணார் கண்ணின் அதிரும்
நன்ன ராளன் நடுங்குஅஞர் நிலையே.

எ-து : பரத்தை, தலைவிக்குப் பாங்காயினர் கேட்ப விறலிக்கு உடம்படச் சொல்லியது.

பரணர்

ப-ரை : தோழி - தோழீ, வள்உகிர் - பெரிய நகங்களை உடைய, மாரிக் கொக்கின் - கார் காலத்து எங்கும் உலாவும் கொக்கினது, கூரல் அன்ன - கூர்மையான மூக்குப்போன்ற, குண்டு நீர் ஆம்பல் - ஆழ்ந்த நீரில் முளைத்த ஆம்பற் பூவை உடைய, தண்துறை ஊரன் - தண்ணிய நீர்த்துறையை உடைய ஊரன், தேங்கமழ் - நெய்மணம் வீசுகின்ற, ஐம்பால் பற்றி - என் கூந்தலைப் பற்றி இழுத்து, என் வயின் - என் கையிலுள்ள, வான் கோல் எல் வளை - வெள்ளிய வேலைப்பாடு அமைந்த ஒளியை உடைய வளையை, வௌவிய பூசல் - கழற்றிக் கொண்டதனாலாகிய பூசலாலே, சினவிய முகத்து - சினம் கொண்ட முகத்தோடு அவனை நோக்கி, சினவாது சென்று நின் மனையோட்கு உரைப்பல் - இனி இங்ஙனம் சினவாது சென்று நின் மனைக்கிழத்திபால் இச் செயலைக் கூறுவேன்; என்றலில் - என்று நான் சொன்னவுடன், முனைஊர் - ஊர்க் கோடியிலுள்ள, பல் ஆ நெடுநிரை - பல நெடிய ஆனிரைகளை, வில்லின் ஒய்யும் - விற்போரால் வென்று செலுத்திக் கொண்டு, தேர் வண் மலையன் - வருகின்ற இரவலர்க்குத் தேர் கொடுக்கும் கொடைத் தன்மை வாய்ந்த மலையமானின், முந்தை - அவைக்கு முன்பு, புலம்பிரி பேரிசை - வேற்று நாட்டிலிருந்து வந்த பெரிய இசையை உடைய, வயிரியர் - கூத்தர், நலம்புரி முழவின் - நன்மையை விரும்பி முழக்குகின்ற மத்தளத்தின், மண் ஆர் கண்ணின் அதிரும் - மார்ச்சனை பொருந்திய பக்கம் அதிர்வது போலும் அதிர்ச்சியுடன், நன்னராளன் - நன்மையை மேற் கொள்ளும் அவன்தான், நடுங்கு அஞர்நிலை - நடுங்கிய வருத்த முற்ற நிலையை, உள்ளுதொறும் - நினைக்குந்தோறும், நகுவேன் - சிரிப்பேன்.

முடிபு : தோழி! ஊரன் வெளவிய பூசல் மனையோட்டு உரைப்பல் என்றலின் நன்னராளன் நடுங்களுர் நிலையை உள்ளு தோறும் நகுவேன் யான் என முடிக்க.

கருத்து : ஊரன் நம்மாட்டுச் செய்தன எல்லாம் நின் மனைவிக்கு உரைப்பேன் என்ற அளவில் நடுங்கிய நிலையைக் கண்டு நான் நகையாடினேன் என்று பரத்தை தலைவன் தன்னை விட்டு அகலாமல் இருத்தற்கு அசதியாடி உரைத்தமையை விறலிக்குக் கூறினாள்.

அ-ள் : குண்டு - ஆழம். ஒய்யும் - செலுத்தும்.

நயம் : நன்னராளன் நிலையைத் தலைவி அறியின் அவளுக்கு இவனிடம் வெறுப்புத் தோன்றும். தோன்றவே மீட்டும் தான் அவனை அடையலாம் என்று கருதி இவ்வாறு கூறினாள்.

மெய்ப்பாடு - எள்ளல் பொருளாகப் பிறன்கண் தோன்றிய இளிவரல்.

பயன் - பரத்தை தலைவனைத் தான் அடையச் சூழ்ந்து உரைத்தல்.

ஒப்புமைப்பகுதி

2-3. கொக்கின் புறத்திற்கு ஆம்பற் பூ

"மா யாம்பலன்ன கொக்கின்

.....................

சிறியவும் உள்ஈண்டு விலைஞர் கை வளையே"

(குறுந். 117, 122:1-2)

4. ஐம்பால் பற்றல்

"இவன் இவள் ஐம்பால் பற்றவும் இவளிவள்" (குறுந். 229-1)

10-12. "தெண்கண் மாக்கிணை

கண்ணகத்து யாத்த நுண்ணரிச் சிறுகோல்

எறிதொறு நுடங்கியாங்கு" (புறநா. 382:18-21)

# 101. நெய்தல்

## தலைவன் கூற்று

முற்றா மஞ்சட் பசும்புறங் கடுப்பச்
சுற்றிய பிணர சூழ்கழி இறவின்
கணங்கொள் குப்பை உணங்குதிறன் நோக்கிப்
புன்னைஅம் கொழுநிழன் முன்னுய்த்துப் பரப்புந்
5 துறைநணி யிருந்த பாக்கமும் உறைநனி
இனிதுமன்அளிதோ தானே துனிதீர்ந்து
அகன்ற அல்குல் ஐதமை நுசுப்பின்
மீனெறி பரதவர் மடமகள்
மான்அமர் நோக்கம் காணா ஊங்கே.

எ-து : பின்னின்ற தலைமகன் தோழி கேட்பச் சொல்லியது.

### வெள்ளியந்தின்னனார்

ப-ரை : துனி தீர்ந்து - வருத்தமின்றி, அகன்ற அல்குல் - அகன்ற அல்குலையும், ஐது அமை நுசுப்பின் - மெல்லியதாக அமைந்த இடையையும் உடைய, மீனெறி - மீன் பிடிக்கின்ற, பரதவர் மடமகள் - பரதவரது இளமகளின், மானமர் நோக்கம் - மான் போலும் பார்வை, காணா ஊங்கே - காண்பதற்கு முன், முற்றா - முற்றாத, மஞ்சட் பசும்புறம் - இளமஞ்சட் கிழங்கின் பசுமையான புறம், கடுப்ப - போல, சுற்றிய - சுற்றியிருக்கின்ற, பிணர - சருச்சரையை உடைய, சூழ்கழி - சூழ்ந்த கழியிடத்துள்ள, இறவின் - இறாமீனின், கணங்கொள் - கூட்டம் கொண்ட, குப்பை - குவியல், உணங்கு திறம் - காயும் வகை, நோக்கி - ஆராய்ந்து, புன்னையம் - புன்னையினது, கொழுநிழன் - கொழுவிய நிழலின் எதிரே, முன்னுய்த்துப் பரப்பும் துறை - பரப்பும் துறைக்கு, நணியிருந்த - அருகிருந்த, பாக்கமும் - நெய்தல் நிலமும், முறை - முறையே, நனியினிதுமன் - மிக இனிமை உடையதாய் இருந்தது, அளிதோ தானே - இரங்கத்தக்கது அல்லவா?

முடிபு : தலைவன், தலைவியிடத்துத் தான் வைத்த காதலினாலே படும் துன்பத்தைத் தோழி அறியுமாறு அவள் கேட்கக் கூறுகிறான்.

கருத்து : பரதவர் தம் மடமகளது மான் போன்ற பார்வையையுடைய கண்களைத் தலைமகள் பார்க்கும் முன்னர்,

மீன் நாற்றத்தையுடைய பாக்கமும் அவனுக்கு இனிதாகவே இருந்தது.

அ-ள் : பாக்கம் - கடற்கரையிலுள்ள ஊர். ஐது - மெல்லிது. மெய்ப்பாடு - அழுகை.

பயன் - தோழி கேட்டுக் குறை முடிப்பாளாவது.

ஒப்புமைப்பகுதி

2:3, இறவின் வாடல்

"அருங்கழிக்கொண்ட இறவின் வாடலொடு" (குறுந். 320:2)

4. புன்னை

"புன்னை ஓங்கிய புலாலஞ்சேரி" (குறுந். 351)
(அகநா. 270:2)

# 102. குறிஞ்சி

## தலைவி கூற்று

கொடுங்குரல் குறைத்த செவ்வாய்ப் பைங்கிளி
யஞ்சல் ஓம்பி ஆர்பதம் கொண்டு
நின்குறை முடித்த பின்றை என்குறை
செய்தல் வேண்டுமால் கைதொழுது இரப்பல்
5 பல்கோட் பலவின் சாரல்அவர் நாட்டு
நின்கிளை மருங்கின் சேறி யாயின்
அம்மலை கிழவோற்கு உரைமதி இம்மலைக்
கானக் குறவர் மடமகள்
ஏனல் காவல் ஆயினள் எனவே.

எ-து : காமமிக்க கழிபடர் கிளவி.

செம்பியனார்

ப-ரை : கொடுங்குரல் - வளைந்த, தினைக் கதிர்களை, குறைத்த - கொய்து கொண்டு போகா நின்ற, செவ்வாய் - சிவந்த வாயையுடைய, பைங்கிளி - பசுமையான கிளியே! அஞ்சல் ஓம்பி - அச்சுறுத்துவார் என்று அஞ்சாமல், ஆர்பதம் - வேண்டிய உணவை, கொண்டு - உண்டு, நின்குறை - நின் குறைகள் யாவும் முடித்த பின் - முடித்த பின்பு, என் குறை -

எனது குறைபாட்டை, செய்தல் வேண்டுமால் - செய்து முடிக்க வேண்டுமென்று, கை தொழுது - என்னிரு கைகள் குவித்து, இரப்பல் - இரந்து கேட்கின்றேன், அது யாது என்னில், பல்கோட் பலவின் - பல காய்களைக் காய்க்கின்ற, - பலாமரங்கள் மிக்க, சாரலவர் நாட்டு - சாரலையுடைய அவர் நாட்டிலுள்ள, நின் கிளை மருங்கில் - உனது சுற்றத்தினிடத்து, சேறியாயின் - செல்லுவாயே ஆயின், அம்மலை கிழவோற்கு - அம்மலைக்கு உரியவராகிய எனது காதலரிடத்து உரைமதி - சொல்லுவாயாக, இம்மலை - இந்த மலையைச் சூழ்ந்த, கானக் குறவர் மடமகள் - காட்டிலுள்ள குறவருடைய இளமகள், நல் காவலாயினள் - தினைக் கொல்லைக்கு நல்ல காவலாக அமைந்து அங்கு இருக்கிறாள் என்பதை மட்டும் சொன்மின்.

முடிபு : தலைவி பைங்கிளியை விளித்து, மலை கிழவோர்க்கு உரை மதி, இம் மலைக் கானக் குறவர் மடமகளேனல் காவலாயினளெனவே.

கருத்து : தலைவன் வராதது கண்ட தலைவி, கிளியை நோக்கி, என் தலைவனது நாட்டிலுள்ள நின் சுற்றத்தாரிடம் நீ செல்லுவாயேயானால், ஆங்கு என் காதலரிடத்து இம் மலைக் குறவர் மகள் மீண்டும் தினைப்புனங் காவல் செய்ய வந்தனள் என்று உரைப்பாயாக என்று கூறுகிறாள்.

அ-ள் : குரல் - கதிர். ஆர்பதம் - உணவு. கோள் - காய். என்னைக் கைவிட்ட கொடுமையுடையவர் நாட்டிலிருந்தும் பலா மரங்கள் பிறர்க்குப் பயன்படுமாறு காய்க்கின்றனவே என்ன வியப்பு என்றபடி.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்:

ஒப்புமைப்பகுதி

2. ஆர்பதம்

"அரும்பெறல் அமிழ்தம் ஆர்பதமாக" (குறுந். 389:2)
(பதிற். 55:11, 66:9)

# 103. பாலை

## தலைவன் கூற்று

ஒன்றுதெரிந்து உரைத்திசின் நெஞ்சே புன்கால்
சிறியிலை வேம்பின் பெரிய கொன்று
கடாஅஞ் செருக்கிய கடுஞ்சின முன்பின்
களிறுநின்று இறந்த நீரல் ஈரத்துப்
5 பால்அவி தோல்முலை அகடுநிலஞ் சேர்த்திப்
பசியட முடங்கிய பைங்கட் செந்நாய்
மாயா வேட்டம் போகிய கணவன்
பொய்யா மரபின் பிணவுநினைந்து இரங்கும்
விருந்தின்வெங் காட்டு வருந்துதும் யாமே
10 ஆள்வினைக்கு அகல்வாம் எனினும்
மீள்வாம் எனினும் நீதுணிந் ததுவே.

எ-து : பொருள்வயிற் பிரிந்த தலைவன் இடைச்சுரத்து ஆற்றாதாகிய நெஞ்சினைக் கழறியது.

மருதன் இள நாகனார்

ப-ரை : ஒன்று தெரிந்து - இரண்டனுள் ஒன்றனை ஆராய்ந்து, உரைத்தி சின் - உரைப்பாயாக, நெஞ்சே - என் நெஞ்சமே! புன்கால் - புல்லிய காம்பையுடைய, சிறியிலை - சிறிய இலையையுடைய, வேம்பின் - வேப்ப மரத்தின், பெரிய கொன்று - பெரிய கிளைகளை, முறித்துத் தள்ளி, கடாஅம் செருக்கிய - மதத்தாற் செருக்குண்ட, கடுஞ்சின முன்பின் - கடிய சினமும் வலிமையும் உடைய, களிறு - களிற்றியானை, நின்றிறந்த - நின்று கழித்தகன்ற, நீரலீரத்து - நன்னீரல்லாத இழிந்த நீரினாலாகிய ஈரத்து, பால் அவி தோல் முலை - பால் வற்றிய தோலாகிய முலையை உடைய, அகடு நிலம் சேர்த்தி - வயிற்றைப் பொருத்தி, பசி அட முடங்கிய - பசி வருத்துதலாலே வருந்தி முடங்கிக் கிடந்த, பைங்கட் செந்நாய் - பசிய கண்ணையுடைய செந்நாய்ப் பிணவினது, மாயாவேட்டம் போகிய கணவன் - கெடாத வேட்டை மேற்சென்ற கணவனாகிய செந்நாயேற்றை, பொய்யா மரபில் - தான் உண்மையாக, பிணவு நினைந்திரங்கும் - பிணவை முன்பு புணர்ந்த தன்மையைக் கருதி வருந்தா நிற்கும், விருந்தின் - இது காறும் புக்கறியாத புதுவதாகிய, வெங்காட்டு - கொடிய காட்டின் கண்ணே, வருந்துதும் யாமே - வந்து புகுந்து யாம்

வருந்துகின்றோம், ஆள்வினைக்கு - பொருளீட்டும் முயற்சிக்கு ஈடாக, அகல்வாம் எனினும் - செல்வோம் என்றாலும், மீள்வாம் எனினும் - அங்ஙனம் செய்யாது மீண்டும் ஊர் திரும்பிச் செல்வோம் என்றாலும், நீ துணிந்ததுவே - நீ துணிந்த ஒன்றனைத் தேர்ந்தெடுத்து உரைப்பாயாக.

முடிபு : நெஞ்சே! ஆள்வினைக்கு அகல்வாம் எனினும், மீள்வாம் எனினும், நீ துணிந்ததுவே, ஒன்று தெரிந்து உரைத்திசின்.

கருத்து : பொருளீட்டத் தலைமகளைப் பிரிந்து செல்கின்ற தலைமகன் சுரத்தினிடைத் தன் காதலியைக் கருதிக் கவன்ற நெஞ்சிடத்து, இக் கொடிய காட்டில் வந்து வருந்துகின்றோம்; பொருளீட்டத் தொடர்ந்து செல்வதா அன்றி மீண்டும் திரும்பி ஊருக்குச் செல்வதா என்பதை ஆராய்ந்து எனக்குச் சொல்லுவாயாக என்று கூறினான்.

அ-ள் : முன்பு - வலிமை. விருந்து - புதுமை. நீரல்நீர் - சிறுநீர்.

மெய்ப்பாடு - பிறன் கண்தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - இடைச் சுரத்து அழுங்கல்.

ஒப்புமைப்பகுதி

1. உரைத்திசின்

"கேட்டிசின் வாழி தோழி" (குறுந். 30:1)
"சின்" முன்னிலை அசைச்சொல் (தொல்: இடை, 27)
"எம்மை யுய்த்தியோ உரைத்தசின் நெஞ்சே" (குறுந். 63:4)

7. கணவன் என்பது அஃறிணைக்கும் வரும்

"வலிக்கு வரம்பாகிய கணவன் ஓம்பலின் (மலைபடு. 307:8)
"நிறைச் சூல் யாமை - முட்டை பார்ப்பிடனாகு மளவை
பகவாய்க் கணவன் ஓம்பும்" (அகநா. 160:5-8)

# 104. குறிஞ்சி

## தலைவி கூற்று

பூம்பொறி உழுவைப் பேழ்வாய் ஏற்றை
தேம்கமழ் சிலம்பின் களிற்றொடு பொரினே
துறுகல் மீமிசை உறுகண் அஞ்சாக்
குறக்குறு மாக்கள் புகற்சியின் எறிந்த
5 தொண்டகச் சிறுபறைப் பாணி யயலது
பைந்தாள் செந்தினைப் படுகிளி யோப்பும்
ஆர்கலி வெற்பன் மார்புநயந்து உறையும்
யானே அன்றியும் உளர்கொல் பானாட்
பாம்புடை விடர வோங்குமலை மிளிர
10 உருமுச் சிவந்து எறியும் பொழுதொடு பெருநீர்
போக்குஅற விலங்கிய சாரல்
நோக்குஅருஞ் சிறுநெறி நினையு மோரே.

எ-து : தலைவி ஆறு பார்த்துற்ற அச்சத்தாற் சொல்லியது.

**பேரிசாத்தனார்**

ப-ரை : பூம்பொறி - அழகிய வரியை உடைய, பேழ்வாய் - பெரிய வாயை உடைய, உழுவை ஏற்றை - ஆண்புலி, தேங்கமழ் - இடம் அகன்ற, சிலம்பின் - மலையினிடத்து, களிற்றொடு - களிற்றியானையொடு, பொரினே - போர் செய்கையில், துறுகல் - பெரும்பாறை, மீமிசை - மீது ஏறி, உறுகண் - (போரினால் உண்டாகும்) துன்பத்திற்கு, அஞ்சா - அஞ்சாமல், குறக்குறு மாக்கள் - குறவரின் இள மைந்தர்கள், புகற்சியில் - மனச் செருக்குடன், எறிந்த - அடிக்கின்ற, தொண்டகச் சிறு பறை - சிறிய குறிஞ்சிப் பறையை, பாணி - கையினால் (அடிக்கும்போது) எழும் ஓசையானது, அயலது - பக்கத்திலுள்ள, பைந்தாள் - பசிய அடித்தண்டினையுடைய, செந்தினை - செவ்விய தினைக் கதிர் களை, படு கிளி - கொய்ய வந்திறங்குகின்ற கிளிகளை. ஒப்பும் - ஓட்டாநிற்கும், ஆர்கலி வெற்பன் - நிரம்பிய ஒலியை உடைய மலைநாடனது மார்பை, நயந்து உறையும் - விரும்பித் தனித் துறைகின்ற, யானே - யான் ஒருத்தியே, அன்றியும் - அல்லாமல், உளர்கொல் - பிறர் யாரேனும் உளரோ, பானாள் - இரவு நடுயாமத்தில், பாம்புடை - பாம்பு உறையும், விடர ஓங்கு மலை - பிளப்புக்களையுடைய உயர்ந்த கொடுமுடிகள், மிளிர - புரண்டு

விழும்படியாக, உருமுச் சிவந்து - சிலந்து இடிமுழங்கி, எறியும் - மோதுகின்ற, பொழுதொடு - இருட் பொழுதையும், பெருநீர் - பெருவெள்ளம், போக்கு அற - போக முடியாதவாறு, விலங்கிய சாரல் - குறுக்கிட்டு ஓடுகின்ற சாரலின் கண்ணே, நோக்கு அரும் - நோக்குதற்கரிய, சிறு நெறி - சிறிய நெறியையும் நினையு மோரே - கருதுகின்றவர் உளரோ.

முடிபு : ஆர்கலி வெற்பன் மார்பு நயந்துறையும் யானே அன்றியும் பிறர் உளர் கொல்.

கருத்து : தலைமகன் இடையீடின்றிக் கொடிய காட்டு வழியே இரவுக்குறி வந்தொழுகக் கண்டு அஞ்சிய தலைமகள் இங்ஙனமன்றி வரைந்தெய்தின் இவ் வச்சம் இல்லை யாகுமெனக் கருதி அதனைத் தோழி கேட்டுத் தலைமகனுக்கு அறிவுறுத்தும் வண்ணம் தலைவனது மார்பை விரும்பி உறையும் யானேயல்லது, அவன் வருகின்ற கொடி நெறியைக் கருதுவார் பிறர் யாவருள ரென வருந்திக் கூறா நிற்பது.

அ-ள் : தேம் - இடம். கமழ்தல் - விளங்குதல். புகற்சி - மனச் செருக்கு. தொண்டகம் - குறிஞ்சிப் பறை.

மெய்ப்பாடு - அச்சம்.

பயன் - வரைவுடம்படுத்தல்.

ஒப்புமைப்பகுதி

1-2. களிறு புலியைத் தாக்குதல்

"சிறுகட் பெருங்களிறு வயப்புலி தாக்கி" (குறுந். 88:2)
(குறுந். 141-4-5, 343:1-3) (மலைபடு. 270, 317)
(கலி. 42,45, 46,48) (அகநா. 291, 398) (புறநா. 100:7)

5. தொண்டகச் சிறுபறை

"திரவரி வாரிற் றொண்டகச் சிறுபறை" (குறுந். 375:4)
(முருகு. 197) (அகநா. 118:3)

7. ஆர்கலி வெற்பன் மார்பு

"ஆர்கலி வெற்பன் மார்பு புணையாக" (குறுந். 353:1)

7-8. தலைவி தலைவனது மார்பை விரும்புதல்

"மகிழ்நன் மார்பே வெய்யை யால்நீ"
(குறுந். 73:1, 68:4)

"நின்மார்பு நயந்த நன்னுதல் அரிவை" (ஐங். 46:2)
"நின் மலர்ந்த மார்பு இவள் வயாஅ நோய்க்கே" (ஐங். 51:3-4)
"மலர்ந்த மார்பில் பாயல் துஞ்சிய வெய்யன்" (ஐங். 205:4-5)

8-12. தலைவி என்னைப்போலப் பிறரும் உளரோ என்றல்
"பிறருங் கேட்டுநர் உளர்கொல்" (குறுந். 86:3)
(அகநா. 202:9-15)

# 105. பாலை

## தலைவன் கூற்று

முளிகொடி வலந்த முள்ளரை யிலவத்து
ஒளிர்சினை அதிர வீசி விளிபட
வெவ்வளி வழங்கும் வேய்பயில் மருங்கில்
கடுநடை யானை கன்றொடு வருந்த
5 நெடுநீ ரற்ற நிழலில் ஆங்கண்
அருஞ்சுரக் கவலைய என்னாய் நெடுஞ்சேண்
பட்டனை வாழிய நெஞ்சே குட்டுவன்
குடவரைச் சுனைய மாயிதழ்க் குவளை
வண்டுபடு வான்போது கமழும்
10 அஞ்சில்ஓதி அரும்படர் உறவே.

எ-து: இடைச்சுரத்து மீளலுற்ற நெஞ்சினைத் தலைமகன் கழறியது.

முடத்திருமாறன்

ப-ரை: முளிகொடி - காய்ந்த கொடிகள், வலந்த - சுற்றிய, முள் அரை இலவத்து - முட்கள் பொருந்திய அடியையுடைய இலவமரத்தின், ஒளிர் - விளங்கிய, சினை அதிர - கிளைகள் நடுங்கும்படி, வீசி விளிபட - வீசி அவை முறியுமாறு, வெவ்வளி - கொடிய காற்று, வழங்கும் - மோதியடிக்கின்ற, வேய் பயில் மருங்கில் - மூங்கிற்புதர் நெருங்கிய இடங்களிலே, கடுநடை யானை - கடிய நடையையுடைய பிடிகள், கன்றொடு - தம்தம்

கன்றுகளுடனே, வருந்த - சேர வருந்தா நிற்ப, நெடுநீரற்ற - நெடிய நெறி முழுவதும் நீரில்லாது வற்றிய, நிழல் இல் ஆங்கண் - நிழல் இல்லாத சுரத்தின் கண், அருஞ்சுரக் கவலைய என்னாய் - செல்லுதற்கரிய கவர்த்த நெறிகளை உடைய அவ்விடம் என்று எண்ணாயாய், நெடுஞ்சேண் - நீண்ட தூரம், பட்டனை - வந்து விட்டனை, வாழிய நெஞ்சே - வாழ்வாயாக நெஞ்சே, குட்டுவன் - குட்டுவன் சேரனது, குடவரைச் சுனைய - குட மலைச் சுனையிலுள்ள, மா இதழ்க் குவளை - பெரிய இதழை உடைய குவளை மலரில், வண்டு படு - வண்டு மொய்க்கும், வான் போது கமழும் - பெரிய மலரைச் சூடுதலான் மணம் கமழுகின்ற, அம் சில் ஓதி - அழகிய சிலவாய கூந்தலை உடைய, (நம் காதலி) அரும்படர் உறவே - நீங்குதற்கு அரிய துன்பத்தாலே வருந்த விட்டு வந்தனை.

முடிபு : நெஞ்சே, மாயிதழ்க் குவளை வண்டுபடு வான் போது கமழும் அம்சில் ஓதி அரும் படர் உறவே நெடுநீரற்ற நிழலிலாங்கண் அருஞ்சுரக் கவலைய வென்னாய் நெடுஞ்சேட் பட்டனை.

கருத்து : பொருள் வயிற் பிரிந்து சுரத்தினிடையே சென்ற தலைமகன் தலைவியை எண்ணி, மீள்லுற்ற நெஞ்சை நோக்கி, நெஞ்சே! நீ காடு கடுமையானது என்று எண்ணாமல் நெடுந் தூரம் வந்து விட்டனை. நமது காதலி அங்கு வருந்தும்படி நீ புறப்பட்டு வந்து விட்டாய். நீ நீடு வாழ்வாயாக என்றாள்.

அ-ள் : முளிதல் - காய்தல். வலத்தல் - சுற்றுதல்.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - இடைச்சுரத்து அழுங்கல்.

ஒப்புமைப்பகுதி

7 குட்டுவன்

"குட்டுவன் மாந்தை அன்ன" (குறுந். 34:6)
(அகநா. 212:16)

8. சுனைப் பூங்குவளை

"சுனைப் பூங்குவளை சுரும்பார் கண்ணியன்"
(குறுந். 321:2) (குறுந். 50:2-3)

10. அஞ்சிலோதி (குறுந். 211:1, 214:3. 289:2) (குறிஞ்சி. 180) (ஐங். 49:1, 391:6, 448:5) (அகநா. 261:3) (சீவக. 2576)

# 106. நெய்தல்

## தலைவன் கூற்று

அறிதலும் அறிதியோ பாக பெருங்கடல்
எறிதிரை கொழீஇய எக்கர் வெறிகொள
ஆடுவரி அலவ ஓடுவயின் ஆற்றாது
அசைஇஉள் ஒழிந்த வசைதீர் குறுமகட்கு
5 உயவினென் சென்றுயான் உள்நோய் உரைப்ப
மறுமொழி பெயர்த்தல் ஆற்றாள் நறுமலர்
ஞாழல் அஞ்சினைத் தாழிணர் கொழுதி
முறிதிமிர்ந்து உதிர்த்த கையள்
அறிவஞர் உறுவி ஆய்மட நிலையே.

எ-து : பருவ வரவின் கண் பண்டு நிகழ்ந்ததோர் குறிப்பு உணர்ந்த தலைவன், அதனைக் கண்டு தாங்கில்லானாய் மீள்கின் றான், தேர்ப்பாகற்குச் சொல்லியது.

தொண்டைமான் இளந்திரையன்

ப-ரை : பாக - தேர்ப் பாகனே! பெருங் கடல் எறி திரை - பெரிய கடலின் மோதுகின்ற அலையாலே, கொழீஇய - கொழிக் கப்பட்ட, எக்கர் வெறி கொள் - மணல் மேட்டில் நறுமணம் வீசா நிற்ப, ஆடு வரி அலவன் - விளையாடுகின்ற புள்ளிகளை உடைய நண்டை, ஓடுவயின் ஆற்றாது - ஓடுமிடத்தே பின் தொடர்ந்து செல்ல ஆற்றாது, அசைஇ - களைப்புற்று, உள்ளொழிந்த வசைதீர் - அதன் மீது சென்ற விருப்பம் நீங்கி யிருந்த குற்றமற்ற, குறுமகட்கு - இளைமை உடையாளிடத்து, உயவினென் சென்று - வருந்துகின்றேனாகிய யான் சென்று, யான் - நான், உள்நோய் உரைப்ப - என்னுள்ளத்தின் கண்ணே யுள்ள, வினைவயிற் செல்ல வேண்டிய கவற்சியைக் கூறிய வளவிலே, மறுமொழி பெயர்த்தல் - மறுமொழி கூறுதற்கு, ஆற்றாள் - நாவெழாமையால் ஆற்றாளாய், நறுமலர் - நறிய மலரையுடைய, ஞாழல் அம் சினைத் தாழ் இணர் - ஞாழலினது

தாழ்ந்த அழகிய கிளையிலுள்ள பூங்கொத்தை, கொழுதி - கொய்து, முறி திமிர்ந்து - அத்துடன் இளந் தளிரையுஞ் சேரப் பிசைந்து, உதிர்த்த கையள் - உதிர்த்த கையையுடையளாகி, அறிவு அஞர் - அறிவு மயக்கமுற்றவளின், உறுவி ஆய் மட நிலையே - அழகிய மடப்பத்தினிலையை, அறிதலும் அறிதியோ - நீ அறிந்திருத்தலும் உடையையோ? உடையையாயின் விரைந்து ஒட்டுக.

முடிபு : பாக! குறுமகட்கு யான் உள்நோய் உரைப்ப, மறு மொழி பெயர்த்தல் ஆற்றாள் அறிவு அஞர் உறுவி ஆய் மட நிலையை அறிதலும் அறிதியோ.

கருத்து : வினைமுற்றி மீளுந் தலைவன் விரைவிலே தனது தேரைச் செலுத்த வேண்டி. முன்பு ஊரினின்று போதரும் பொழுது தலைவி வருந்திய நிலையைக் குறித்துக் காட்டுவான் பாகனை நோக்கி, பாக! நான் காதலியிடம் சென்று என் கருத்தினைச் சொன்ன பொழுது பதில் கூற இயலாமல் முறியைத் திமிர்ந்துதிர்த்த கையை உடைய அவளது நிலையை நீ அறித லும் அறிந்திருப்பாயோ என்று கூறுகிறான்.

அ-ள் : உறவு - வருத்தம். வரி - புள்ளி. கொழுதல் - கொய் தல். திமிர்தல் - பிசைதல். அஞருறுவி - மயக்கம் உற்றவள். இது காதல் கைம்மிகல்.

மெய்ப்பாடு - உவகைக்கலுழ்ச்சி.

பயன் - பாகன் தேர்கடாவல்.

ஒப்புமைப்பகுதி

1. "நல்கலும் நல்குவர்"

(குறுந். *37:1*) (ஐங். *36:3*) (கலி. *23:7, 54:8, 14,55:19*)
(அகநா. *8:18*) (புறநா. *1:5*)

6-7 நறுவீ ஞாழல்

"நறுவீ ஞாழலொடு புன்னை தாஅய்" (குறுந். *312:2*)
"எக்கர் ஞாழ னறுமலர்" (குறுந். *318:2*) (ஐங். *150:1*)

# 107. பாலை

## தலைவி கூற்று

உள்ளுதொறும் நகுவேன் தோழி வள்உகிர்ப்
பிடிபிளந்து இட்ட நார்இல் வெண்கோட்டுக்
கொடிறுபோல் காய வால்இணர்ப் பாலை
செல்வளி தூக்கலின் இலைதீர் நெற்றம்
5 கல்இழி அருவியின் ஒல்லென ஒலிக்கும்
புல்இலை ஓமைய புலிவழங்கு அத்தம்
சென்ற காதலர் வழிவழி பட்ட
நெஞ்சே நல்வினைப் பாற்றே ஈண்டொழிந்து
ஆனாக் கௌவை மலைந்த
10 யானே தோழி நோய்ப்பா லேனே.

எ-து : பிரிவிடை மெலிந்த தலைவி தோழிக்குச் சொல்லியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை.

ப-ரை : வள் உகிர் பிடி பிளந்து இட்ட - பெரிய நகங்களை உடைய பெண் யானை தின்னுதற் பொருட்டு மேல் உள்ள தோலைப் பறித்துக் கொண்டதனால், நார் இல் வெண்கோடு - நார் இல்லாத வெள்ளிய கிளைகளையும், கொடிறு போல் - பற்றுக் குறடு போன்ற, காய - காய்களையும் உடைய, வால் இணர்ப்பாலை - வெள்ளிய பூங்கொத்துக்களைக் கொண்ட வெட்பாலையினுடைய, செல்வளி தூக்கலின் - ஓடுகின்ற காற்று அசைத்தலினால், இலைதீர் நெற்றம் - இலை யுதிர்ந்த கிளையில் உள்ள நெற்றுக்கள், கல் இழி அருவியின் ஒல்லென ஒலிக்கும் - மலையினின்று விழும் அருவியைப்போல ஒல்லென ஒலிக்கும், புல் இலை ஓமைய - புல்லிய இலையை உடைய ஓமையை உடைய, புலி வழங்கு அத்தம் - புலி இயங்கு கின்ற சுரத்து, சென்ற காதலர் - சென்ற என் காதலர் பால், வழி வழிபட்ட என் நெஞ்சு - வழிபட்டு அவர் பின்னே சென்ற என் நெஞ்சம், நல்வினைப் பாற்று - முன்பு செய்த நல் வினையின் பயனை இப்பொழுது துய்ப்பதாக இருக்கின்றது, ஈண்டு ஒழிந்து - (அந் நெஞ்சு போல நல்வினை செய்திலேன் ஆகலின்) இங்கேயே தங்கி, ஆனாக் கௌவை மலைந்த - ஊரார் தூற்றும் அடங்காத பழிச் சொல்லைச் சூடப்பெற்ற, யானே - யானே, நோய்ப் பாலேனே - தீவினையின் பயனை நுகரா நின்றேன், தோழி -

தோழியே, உள்ளுதொறும் - இங்ஙனம் இருவினைப் பயனையும் நுகருமாறு பெற்றதனை நினைக்குந்தோறும் நகை தோன்றுத லால், நகுவேன் - யானே என்னை நகுவது செய்யா நின்றேன்.

முடிபு : அத்தம் சென்ற காதலர் வழிபட்ட நெஞ்சு நல் வினைப்பாற்று, யானே நோய்ப்பாலேன். எனவே உள்ளு தொறும் தோழி நகுவேன் என முடிக்க.

கருத்து : தலைவன் சென்றவிடத்து என் நெஞ்சம் சென்றது. யானே அலர்க்கு இலக்கானேன். இதனை உள்ளுதொறும் யான் நகுவேன்.

அ-ள் : வள் உகிர் - பெரிய நகம். கொடிறு - குறடு. ஈயம் பூசும் குறட்டினை ஈண்டுக் குறடு என்றார்.

மெய்ப்பாடு - அழுங்கை பற்றிய நகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

வி-ரை : பிடி - தலைவன். பாலை - தலைவி. புலி - அன்னை போன்றோர். அத்தம் - தோழி. பிடி தோலை உரித்துக் கொண் டதுபோல தலைவியின் நலத்தை தலைவன் பெற்று உண்டு சென் றான். பாலையின் இலை தீர்ந்த நெற்று ஒலிப்பது போல, நெஞ்சழிந்த தலைவி புலம்ப, அருகிருந்த தோழி புலி வழங்குதல் போல அன்னை போன்றோர் இடையே இயங்கப் பெறுதலால் தலைவியைத் தேற்றவும் இயலாதிருந்தனள்.

ஒப்புமைப்பகுதி

4. காற்றுத் தூக்கல்

"கோடை தூக்கும் கானம்" (குறுந். 269:3)

"உறவளி தூக்கும் உயர்சினைமாவின்" (கலி. 84:1)

# 108. குறிஞ்சி

## தோழி கூற்று

மலைஅயற் கலித்த மைஆர் ஏனல்
துணையின் தீர்ந்த கடுங்கண் யானை
அணையக் கண்ட அம்குடிக் குறவர்
கணையர் இணையர் கைபுனை கவணர்
5 விளியர் புறக்குடி ஆர்க்கும் நாட

பழகிய பகையும் பிரிவின் னாதே
முகைஏர் இலங்குஎயிற்று இன்நகை மடந்தை
சுடர்புரை திருநுதல் பசப்பத்
தொடர்பு யாங்கு விட்டனை நோகோ யானே.

எ-து : வரையாது நெடுங்காலம் வந்து ஒழுகலாற்றாளாய தோழி தலைமகளது ஆற்றாமை கூறி வரைவு கடாயது.

பாடினோர் பெயர் தெரியவில்லை.

ப-ரை : மலை அயற் கலித்த - மலைப் பக்கத்து முளைத்துத் தழைத்த, மை ஆர் ஏனல் - கரிய நிறமுடைய தினைக் கதிர்களைத் தின்னக் கருதி, துணையில் தீர்ந்த - தன் பிடியை விட்டு நீங்கிய, கடுங்கண்யானை - கொடிய களிற்றி யானை, அணையக் கண்ட - தினையைத் தின்ன வந்திருத்தலைக் கண்ட, அம் குடிக் குறவர் - அழகிய குடியிலுள்ள குறவர்கள், கணையர் - அம்பை உடையவரும், இணையர் - இணைப்பறையை உடையவரும், கை புனை கவணர் - கை விரலிலே கோத்த கவணை உடையவரும், விளியர் - கூவிப் பேர்இரைச்சலை எழுப்பவருமாகி, புறக்குடி ஆர்க்கும் நாட - குடியிருப்பின் புறமெல்லாம் சென்று ஆரவாரித்துச் சூழும் மலை நாடனே! பழகிய பகையும் பிரிவு இன்னாதே - பழகியிருந்த பகைவராயினாரும் அருகிலிருந்து பிரிவர் என்றால், அப் பிரிவுதான் முன்பு பழகினார்க்குப் பெருந் துன்பம் தருவது ஒன்று அன்றோ? அங்ஙனமாக, (நின்னையின்றி உயிர் வாழாத) முகைஏர் இலங்கு எயிற்று - முல்லை அரும்பு போன்ற இலங்கிய எயிற்றையும், இன்நகை - இனிய புன்முறுவலையும் உடைய, மடந்தை - தலைவியது, சுடர்புரை திருநுதல் பசப்ப - சுடர் போன்ற ஒளி பொருந்திய அழகிய நெற்றியிலே பசலை படருமாறு, தொடர்பு யாங்கு விட்டனை? நீ அவளது நட்பை எவ்வாறு கைவிட்டனை? யான் நோகு - இதற்காகவே யான் வருந்துகின்றேன்.

முடிபு : நாட! இன்னாதே, மடந்தை நுதல் பசப்ப தொடர்பு யாங்கு விட்டனை, யான் நோகு, என முடிக்க.

கருத்து : களவினை நீட்டிக்க விரும்பிய தலைவனை நோக்கி, தலைவி வருந்த எது பற்றியோ நீ அவளைக் கை விட்டனை, அதுபற்றி யான் வருந்துகின்றேன் என்று கூறி வரைவு கடாயினாள்.

உள்ளுறை : தினையைத் தலைவியாகவும், யானையைத் தலைவனாகவும், தினையை மேயவந்த யானையைக் குறவர்

அதனை ஒருக்க, படையினராய் ஆர்த்தல் போல, நீ களவில் தலைவியைக் காண வருவதைக் கண்ட எமர் ஏதம் செய்வராகலின் வரைந்து எய்துக என்றதாம். திருநுதல் பசப்ப என்றது பசலை பாய்தல். பழகிய பகையும் பிரிவு இன்னாது என்றது எம் மெய்யாயினும் ஒப்புமை கோடல்.

ஏனை மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

6. வேறுபட்ட இயல்புடையாரும் பழக்கத்தினால் இனியராதல்
"மருவின் இனியவும் உளவோ" (குறுந். 322)

8. நுதல் பசத்தல்
"பசைஇப் பசந்தன்று நுதலே" (குறுந். 87:4, 48-5, 205:7)

9. நோகோயானே
"பெருவிதுப்புற்றன்றால் நோகோ யானே"
(குறுந். 131:6, 178:7, 212:5) (ஐங். 104:4)
(அகநா. 137:16) (புறநா. 116:9, 234:1)

# 109. பாலை

## தலைவி கூற்று

ஒன்றுதும் என்ற தொன்றுபடு நட்பின்
காதலர் அகன்றெனக் கலங்கிப் பேதுற்று
அன்னவோ இந்நன்னுதல் நிலை என
வினவல் ஆனாப் புனைஇழை கேள்இனி
5 உரைக்கல் ஆகா எவ்வம் இம்மென
இரைக்கும் வாடை இருள்கூர் பொழுதில்
தொளியுடைத் தொழுவில் துணிதல் அற்றத்து
உச்சிக் கட்டிய கூழை ஆவின்
நிலைஎன ஒருவேன் ஆகி
10 உலமரக் கழியும் இப்பகல்மடி பொழுதே.

எ-து : பிரிவிடை ஆற்றாளாய தலைமகளது நிலைகண்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

நீளிப் பெரும்பதுமனார்

ப-ரை : ஒன்றுதும் என்ற தொன்று படுநட்பின் - நின்னைப் பிரியேமாகி எப்பொழுதும் ஒன்றி இருப்போம் என்று கூறிய பழமையாகிய நட்பினின்றும், காதலர் அகன்றென - அன்புடையார் பிரிந்து அகன்றதனாலே, கலங்கி - மனம் கலங்கி, பேதுற்று - மயக்கம் அடைந்து, இந் நன்னுதல் நிலை அன்னவோ என - இந்த நல்ல நெற்றியை உடையாளின் நிலைமை அப்படிப் பட்டனவோ என்று, வினவல் ஆனாப் புனை இழை - வினவு தலைத் தவிராத அலங்கரித்த ஆபரணங்களை உடையாய், இனி - இனிமேல், கேள் - யான் கூறுகின்றதனைக் கேட்பாயாக; உரைக்கல் ஆகா எவ்வம் - கூறுதற்கு முடியாத பெருந்துன்பம் இம் என - விரைந்து பற்ற, இரைக்கும் - ஒலிக்கும், வாடை - வாடைக்காற்று வீசுதலை உடைய, இப்பகல் மடிப்பொழுது - கதிரவன் மேற்கே மறைகின்ற இம் மாலைக் காலத்து, இருள்கூர் பொழுதில் - இருள்மிக்க இராப்பொழுதிலே, தொளியுடைத் தொழுவில் - சேற்றையுடைய தொழுவத்தினின்று, துணிதல் அற்றத்து - வேற்றிடத்திலே கட்டவேண்டும் சமயத்து, உச்சிக் கட்டிய கூழை ஆவின் நிலையென - உச்சியிலே உயர்த்து மேல் கைம்மரத்தில் வலிந்து கட்டிக் கீழினும் படுக்கவிடாது நின்ற நிலையிலே நிற்குமாறு இறுகப் பிணித்த சிறிய குறுமையான பசுவின் நிலையைப்போல, ஒருவேனாகி - யான் தனித்து இருந்து, உலமரக் கழியும் - உள்ளம் சுழன்று வருந்தும் வண்ணம் மெல்ல மெல்ல நீங்கா நிற்கும். புலம்புவதைத் தவிர வேறு செயத்தக்கது ஒன்றும் இல்லை.

முடிபு : புனை இழை! கேள், ஆவின் நிலையை ஒருவேனாகி உலமரக் கழியும் என முடிக்க.

கருத்து : காதலர் வாராமையால் வாடை வீசும் மாலைப் பொழுதில் தனித்திருந்து புலம்புவதைத் தவிர வேறொன்றும் செயத்தக்கது இல்லை.

வி-ரை : காமம் மிகுந்து பரத்தலால் இயக்கமின்றி நிற்கும் தன் நிலைக்கு அசையாது பிணித்த ஆவை உவமித்தாள். இஃது அவல உவமை. பசுவைப் பாதுகாப்பவர்க்கு நற்புண்ணியம் உளவாவது போல, தலைவரைக் கொணர்ந்து உய்த்து என் ஏதம் களையின் நன்மையுண்டாம் என உவமித்தாள்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

# 110. பாலை

## நற்றாய் கூற்று

(செவலி கூற்றெனினும் ஒக்கும்)

பிரசம் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொற்கலத்து ஒருகை ஏந்திப்
புடைப்பிற் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்
உண்என்று ஓக்குபு புடைப்பத் தெண்ணீர்
5 முத்தரிப் பொற்சிலம்பு ஒலிப்பத் தத்துற்று
அரிநரைக் கூந்தல் செம்முது செவிலியர்
பரீஇ மெலிந்தொழியப் பந்தர் ஓடி
ஏவல் மறுக்கும் சிறுவிளை யாட்டி
அறிவும் ஒழுக்கமும் யாண்டுஉணர்ந் தனள்கொல்
10 கொண்ட கொழுநன் குடிவறன் உற்றெனக்
கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்
ஒழுகுநீர் நுணங்குஅறல் போலப்
பொழுதுமறுத்து உண்ணும் சிறுமது கையளே.

எ-து : மனைமருட்சி. மகள் நிலை உரைத்ததூஉம் ஆம்.

**போதனார்**

ப-ரை : பிரசம் கலந்த - தேனைக் கலந்தாற் போன்ற, வெண்சுவைத் தீம்பால் - நல்ல சுவையை உடைய இனிய வெள்ளிய பால் உணவை, விரிகதிர்ப் பொற்கலத்து - விரிந்த ஒளியை உடைய பொன்னால் ஆகிய கலத்தில் இட்டு, ஒரு கை ஏந்தி - அதனை ஒரு கையில் எடுத்துக்கொண்டு, (மற்றொரு கையில்) புடைப்பிற் சுற்றும் - முனையில் உருண்டையாகச் சுற்றிய, பூந்தலைச் சிறுகோல் - பூக்களைத் தலையிலேகொண்ட சிறிய கோலை ஏந்திக்கொண்டு, 'உண்' என்று - 'நீ உண்க' என்று கூறி, ஒக்குபு - அப் பூச்செண்டை எறிதலும், (பயந்து), தெண்ணீர் - தெளிந்த ஒளியை உடைய, முத்து அரிப் பொற் சிலம்பு - முத்துக்களை உள்ளே பரலாகக்கொண்ட பொன்னால் ஆகிய சிலம்பு, ஒலிப்ப - ஒலிக்குமாறு, தத்துற்று - பாய்ந்து, அரிநரைக் கூந்தல் - மெல்லியவாய நரைத்த கூந்தலை உடைய, செம்முது செவிலியர் - செவ்விய முதுமையுற்ற செவிலித்தாயர், பரீஇ மெலிந்து ஒழிய - பிடிக்க முடியாதபடி நடை தளர்ந்து

ஒழியுமாறு, பந்தர் ஓடி - தன் மனையின் முன்னுள்ள பந்தல் முழுதும் சுற்றிச் சுற்றி ஓடி, ஏவல் மறுக்கும் - 'உண்க' என்பதற்கு மாறாக 'உண்ணேன்' என்று மறுத்து உரையாடும், சிறு விளையாட்டி - சிறிய விளையாடலைச் செய்யும் என் மகள், அறிவும் ஒழுக்கமும் - நல்ல அறிவும் ஆசாரமும், யாண்டு உணர்ந்தனள் கொல் - எப்படி அறிந்தனளோ? அறியேன், கொண்ட - தன் கை பற்றிய, கொழுநன் - கணவனின், குடி - குடும்பம், வறன் உற்றென - வறுமை அடைந்ததாக, கொடுத்த தந்தை - உதவிய தந்தையின், கொழுஞ் சோறு - செல்வம் மிக்க உணவை, உள்ளாள் - நினையாதவளாகி, ஒழுகு நீர் நுணங்கு அறல்போல - ஓடுகின்ற நீரிலே இடையறவுபட்டுக் கிடக்கும் நுண்ணிய மணல் போல, பொழுது மறுத்து உண்ணும் சிறு மதுகையள் - ஒரு பொழுது இன்றி ஒரு பொழுது உண்ணும் சிறிய வன்மையை உடையள் ஆயினாள், இஃதென்ன வியப்பு.

முடிபு : ஏவல் மறுக்கும் சிறு விளையாட்டி பொழுது மறுத்து உண்ணும் சிறு மதுகையள், அறிவும் ஒழுக்கமும் யாண்டுணர்ந்தனள் கொல்? என முடிக்க.

கருத்து : தான் புகுந்த மனை வறுமையடைந்த விடத்தும் பிறந்த விட்டு உதவியை நாடாத தலைவியின் அறிவும் ஒழுக்கமும் பெரிது வியத்தற்குரியதொன்றாம்.

அ-ள் : அரி - பருக்கைக் கல். அரிநரை - மெல்லிய நரை. பரிதல் - ஓடுதல்.

வி-ரை : பாலுணவையும் மறுப்பவள், பொழுது மறுத்து உண்பாளாயது அதனினும் கேள்வன் இன்பம் சிறந்தது போலும் என்று வருந்தினாள். விளையாட்டி யாண்டு உணர்ந்தனள் என்றது நம் ஏவலை மறுத்து விளையாடுபவள் காதலன் ஏவலும் அவனுக்கு ஏற்றபடி நடத்தலுமாகியவற்றுக்கு ஏற்ப அறிவும் ஒழுக்கமும் எவ்வாறு பெற்றனள் என்று வியந்ததாம்.

மெய்ப்பாடு - உவகைக் கலுழ்ச்சி.

பயன் - ஆற்றாமை நீங்குதல்.

ஒப்புமைப்பகுதி

1-4 : "பால்கொண்டு மடுப்பவும் உண்ணான் ஆகலில்
செறாஅது ஓச்சிய சிறு கோலஞ்சி" (புறநா. 310:1-2)

1-8 : "யாங்கு வல்லுநள் கொல்தானே ஏந்திய
செம்பொற் புனைகலத்து அம்பொறிக் கலந்த
(அகநா. 219 5-7) (குறுந். 356:5-7)

1-7 : "அம்பொன் வள்ளத்து அமிழ்து பொதி அடிசில்
கொம்பினொல்கிக் குறிப்பிற் கொள்ளாய்"
(பெருங். 1-46:294-5).

6-7 : செவிலி நடை ஒய்தல்
"காலே பரிதப்பினவே" (குறுந். 44-1).

# 111. நெய்தல்

## தோழி கூற்று

அத்த இருப்பைப் பூவின் அன்ன
துய்த்தலை இறவொடு தொகைமீன் பெறீஇயர்
வரிவலைப் பரதவர் கருவினைச் சிறாஅர்
மரன்மேற் கொண்டு மான்கணம் தகைமார்
5 வெந்திறல் இளையவர் வேட்டெழுந் தாங்குத்
திமில்மேற் கொண்டு திரைச்சுரம் நீந்தி
வாள்வாய்ச் சுறவொடு வயமீன் கெண்டி
நிணம்பெய் தோணியர் இகுமணல் இழிதரும்
பெருங்கழிப் பாக்கம் கல்லென
10 வருமே தோழி கொண்கன் தேரே.

எ-து : விரிச்சி பெற்றுப் புகன்ற தோழி தலைவிக்கு உரைத்தது.

பாடினோர் பெயர் தெரியவில்லை.

ப-ரை : தோழி - தோழீ! அத்த இருப்பைப் பூவின் அன்ன - சுரத்தின் கண்ணுள்ள இருப்பைப் பூவைப் போன்ற, துய்த்தலை - மெல்லிய தலையை உடைய, இறவொடு - இறா மீன்களோடு, தொகை மீன் பெறீஇயர் - ஏனைத்திரளாக உள்ள மீன்களையும் பெறுமாறு, வரிவலைப் பரதவர் - பின்னி வரிந்த வலையை உடைய பரதவர்தம், கருவினைச் சிறாஅர் - வன்மை மிக்க தொழிலை உடைய சிறுவர்கள், மரன் மேற்கொண்டு - மரங்களின் மேல் ஏறிக்கொண்டு, மான் இனம் தகைமார் - மான் இனங்களைப் பிடிப்பான் வேண்டி, வெம்திறல் இளையவர் - வெய்ய வலிமையை உடைய வேட்டுவச் சிறுவர், வேட்டு எழுந்தாங்கு - விரும்பி எழுந்தாற்போல, திமில் மேற்கொண்டு - மீன் பிடிக்கும் படகின்மேல் ஏறிக்கொண்டு, திரைச்சுரம் நீந்தி - கடற்பரப்பின் கண்ணே கடந்து சென்று, வாள்வாய்ச் சுறவொடு - ஈர்வாள்

போன்ற வாயை உடைய சுறாமீனையும், வயமீன் கெண்டி - மற்றும் வலிமை வாய்ந்த பெரிய பிற மீன்களையும் பிடித்து, நிணம் பெய் தோணியர் - அவற்றைத் துண்டித்து இறைச்சிகளை நிரப்பிய தோணியராய், இகுமணல் இழிதரும் - மீண்டு வந்து காற்று வீசிப் பரப்பிய மணற்பரப்பில் இறக்கியிடும், பெருங் கழிப்பாக்கம் - பெரிய கழிசூழ்ந்த பாக்கம், கல்என - கல் என்று ஒலிக்குமாறு, கொண்கன் தேர் - தலைவனது தேர், வரும் - வரா நிற்கும், நீ வருந்தாதே;

முடிபு : தோழீ! இகுமணல் இழிதரும் பாக்கம் கல்என தேர் வரும், வருந்தாதே என முடிக்க.

கருத்து : தலைவன் வருவதற்கான நன்னிமித்தம் உணர்ந்த தோழி, அவன் தேர் வருகின்றது, கவலையை ஒழி என்று கூறினாள்.

அ-ள் : வரிவலை - கட்டிய வலை. கருமை - வன்மை. கெண்டுதல் - வெட்டுதல். இகுதல் - சொரிதல். திமில் - மீன் பிடிக்கும் படகு, விரிச்சி நிமித்தம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைமகளைத் தேற்றுவித்தல். கைகோள் - கற்பு.

நயம் : சிறுவர்கள் கடல் மேற்சென்று பிடித்துக் கொணர்ந்த மீன் இனங்களை மணலின்கண் இறக்கி இடும் என்றது, தலைவர் வேற்று நாட்டிற்சென்று தேடிக்கொணர்ந்த பொருளை எல்லாம் நம்மனையில் கொண்டு வந்து குவிப்பர் என்றதாம்.

ஒப்புமைப்பகுதி

1. இருப்பை பாலை நிலத்திற்குரியது

"கான இருப்பை வேனல் வெண்பூ" (குறுந். 329)

2. பெறீஇயர்

"பொன்மலி பாடலி பெறீஇயர்"

(குறுந். 75:4, 83:2, 277:5)

6-7. மீன் வேட்டை

"கொடுந்திமிற் பரதவர் கோட்டுமீன் எறிய"

(குறுந். 303:1-4)

"பரதவர் எறியுளி பொருத வேமுறு பெருமீன்"

(அகநா. 210:1-2)

6.7. நீர்ச்சுரம்

"தாங்கரு நீர்ச்சுரத்து எறிந்து வாங்கு விசை"

(குறுந். 303:3)

9. கல்லென்றல்

"காதலரகலக் கல்லென்றவ்வே"

(குறுந். 24:6, 179:1, 262:1) (மலைபடு. 549)

(புறநா. 184:8)

# 112. குறிஞ்சி

## தோழி கூற்று

விருந்து எவன் செய்கோ தோழி சாரல்
அரும்புஅற மலர்ந்த கருங்கால் வேங்கைச்
சுரும்புஇமிர் அடுக்கம் புலம்பக் களிறுஅட்டு
உரும்புஇல் உள்ளத்து அரிமா வழங்கும்
5 பெருங்கல் நாடன் வரவுஅறிந்து விரும்பி
மாக்கடல் முகந்து மணிநிறத்து அருவித்
தாழ்நீர் நனந்தலை அழுங்துபடப் பாஅய்
மலைஇமைப்பது போல் மின்னிச்
சிலைவல் ஏற்றொடு செறிந்தஇம் மழைக்கே!

எ-து: பருவ வரவின்கண் ஆற்றாளாய தலைவியைத் தோழி வற்புறுத்தியது.

பெருங்குன்றூர் கிழார்

ப-ரை: தோழி - தோழீ, சாரல் - மலைச்சாரலில், அரும்பு அற மலர்ந்த - அரும்பு முழுதும் ஒருசேர மலர்ந்த, கருங்கால் வேங்கை - கரிய அடிப்பகுதியினை உடைய வேங்கையின் கண்ணே, சுரும்பு இமிர் அடுக்கம் - சுரும்பு ஒலிக்கும்படி இருந்த பக்கமலையில் உள்ளனயாவும் அஞ்சும்படியாக, களிறு அட்டு - களிற்றைக் கொன்று, உரும்புஇல் உள்ளத்து - அச்சம் அற்ற உள்ளத்தை உடைய, அரிமா வழங்கும் - சிங்கம் சஞ்சரிக்கும், பெருங்கல் நாடன் - பெரிய மலைநாடன், வரவு அறிந்து - வருகின்றான் என்பதைத் தெரிந்து, விரும்பி - விருப்பம் உற்று, மா கடல் - கரிய கடலின் கண்ணே, முகந்து - சென்று நீரை உண்டு,

மணி நிறத்து அருவி - மணி போலும் நிறத்தினை உடைய அருவியின் இழிகின்ற, தாழ் நீர் நனந்தலை - தாழ்ந்தோடும் நீரை உடைய அகன்ற இடம் எல்லாம் மறைபடுமாறு பரவி, மலை இமைப்பதுபோல் - மலையானது கண் விழித்து இமைப்பது போல் மின்னுதலைச் செய்து, சிலைவல் ஏற்றொடு - ஒலிக்கின்ற வலிய இடியேற்றுடனே, செறிந்த இம் மழைக்கு - கலந்து வந்த இந்த மழைக்கு, விருந்து எவன் செய்கோ? - யான் யாது கைம்மாறு செய்ய வல்லேன்.

முடிபு: தோழி! நாடன் வரவு அறிந்து செறிந்த இடம் மழைக்கு விருந்து எவன் செய்கோ என முடிக்க,

கருத்து: தலைவன் குறித்துச் சென்ற பருவம் வந்துழி ஆற்றாத தலைவியைக் கண்டு, மின்னி இடித்து மழை பொழியும் கார் வந்துற்றது, தலைவர் வருவார்; கவலேல் என்று தோழி வற்புறுத்தினாள்.

அ-ள்: உருப்பு - அச்சம். ஈண்டு உரும்பு என்று மெலிந்தது. நனந்தலை - அகன்ற இடம். அழுந்து படல் - மூடப்படுதல்.

வி-ரை: பகுத்தறிவில்லாத மழையும் அவன் வருவதை அறிந்து விரும்பி வருதலைக் கண்டிருந்தும், நீ அவன் வருகையை அறியாது புலம்புகின்றனை? என்னே நின்செயல் என்றவாறு. அடுக்கம் புலம்ப களிற்றைக் கொன்று சிங்கம் இயங்கும் என்றது, உன்னுடைய பசப்பு வருந்திக் கெட உனக்கு உண்டாகிய காம நோயைப் போக்கி, நினது தலைவன் உன்மாட்டு அகலாது பலகாலும் முயங்குவன் என்றவாறு. களவு - கற்பு என்னும் இரண்டற்கும் இச் செய்யுள் பொது.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

2. கருங்கால் வேங்கை

"அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை" (புறநா. 202:18)
"அரும்பற மலர்ந்த கணைக்கால் வேங்கை" (குறுந். 26:1)

7-9. மழையால் விசும்பு மறைக்கப்படுதல்

"பெயல் கண் மறைத்தலின் விசும்பு காணலையே"
(குறுந். 355:1, 380:1-3)

# 113. பாலை

## தலைவன் கூற்று

உழைஅணந்து உண்ட இறைவாங்கு உயர்சினைப்
புல்அரை இரத்திப் பொதிப்புறப் பசுங்காய்
கல்சேர் சிறுநெறி மல்கத் தாஅம்
பெருங்காடு இறந்தும் எய்த வந்தனவால்
5 அருஞ்செயல் பொருட்பிணி முன்னி யாமே
சேறும் மடந்தை என்றலின் தான்தன்
நெய்தல் உண்கண் பைதல் கூரப்
பின்இருங் கூந்தலின் மறையினள் பெரிதுஅழிந்து
உதியன் மண்டிய ஒலிதலை ஞாட்பின்
10 இம்மென் பெருங்களத்து இயவர் ஊதும்
ஆம்பல் அம்குழலின் ஏங்கி
கலங்கு அஞர்உறுவோள் புலம்புகொள் நோக்கே!

எ-து: இடைச்சுரத்து ஆற்றானாய தலைவன் சொல்லியது.

**இளங்கீரனார்**

ப-ரை: மடந்தை - மடப்பத்தை உடைய நங்காய்! யாம் - நாம், அருஞ்செயல் - அருமையாக ஈட்டப்படும், பொருட்பிணி முன்னி - பொருள் அவாவினாற் பிணிக்கப்பட்டதை எண்ணி சேறும் - செல்லுகின்றோம், என்றலில் - என்று கூறியவுடன், தான் - அவள்தான், தன் - தன்னுடைய, நெய்தல் உண்கண் பைதல் கூர - நெய்தல் மலர்போலும் மையுண்ட கண்கள் வருத்தம் மிக, பின் இருங் கூந்தலின் மறையினள் - பின்னிய கரிய கூந்தலை விரித்து அதனுள்ளே மறைந்து நின்று, பெரிது அழிந்து - மிகவும் கலக்கமுற்று, உதியன் - உதியஞ்சேரல் என்னும் மன்னவன், மண்டிய - சினந்து சென்ற, ஒலி தலை ஞாட்பின் - ஒலிக்கின்ற இடத்தை உடைய போர்க்களத்தின் கண்ணே, இம் என் பெருங்களத்து - இம் என்று ஆரவாரம் எழும் பெரிய இடத்தில், இயவர் ஊதும் - வாச்சியம் வாசிப்போர் ஊதுகின்ற, ஆம்பல் அம் குழலின் - ஆம்பல் என்னும் பண்ணையுடைய இனிய புல்லாங்குழல் இசையெடுத்தாற்போல, ஏங்கி வாய்விட்டு அழுது, கலங்கு - கலங்கி, அஞர் - துன்பம், உறுவோள் - அடைவோளின், புலம்புகொல் நோக்கு - வருத்தமுற்ற பார்வைகள்

தாம், உழை அணந்து உண்ட - மானினம் நிமிர்ந்து தழை உண்ணு தலால், இறை வாங்கு உயர்சினை - சிறிது வளைந்து உயர்ந்த கிளைகளையும், புல் அரை இரத்தி - புல்லிய அடியையும் உடைய இலந்தை மரங்களின், பொதிப்புறப் பசுங்காய் - மேலே கனியை உடைய பசியகாய், கல்சேர் சிறுநெறி - பரல்கற்கள் பரவிய சிறிய வழியின்கண், மல்க - நிறைய, தாஅம் - பரவியிருக்கும், பெருங் காடு இறந்தும் - பெரிய சுரத்தைக் கடந்தும், எய்த வந்தன - ஈங்கு என் முன்னே வந்து நின்றன. இஃது என்ன வியப்பு?

முடிபு : கலங்கு அஞர் உறுவோன் புலம்புகொள நோக்கு காடு இறந்தும் எய்த வந்தன, என முடிக்க.

கருத்து : பொருள் வயிற் பிரிந்த தலைவன் இடை வழியில் தலைவியின் பிரிவாற்றாமை எண்ணி அவளின் உருவெளித் தோற்றத்தைக் கண்டு வியந்து கூறினான்.

அ-ள் : அணத்தல் - அண்ணாத்தல், நிமிர்தல். இறை - சிறிது. இரத்தி - இலந்தை. ஆம்பல் - ஒருபண்; அல்லது ஓர் இசைக்கருவி. இச்செய்யுள் எதிர்பெய்து பரிதல் என்னும் மெய்ப் பாடு. மான் கூட்டங்களால் இலைகள் தின்னப்பட்டதாயினும் இலந்தை நிறைந்த கனிகளை வழியிடை உதிர்க்கும் என்றது, தலைவி பசலையால் தினப்பட்டனள் எனினும் யாம் இப்பொழுது சென்றால் மிக்க இன்பம் பயவா நிற்பள் ஆதலின் செல்வாம் என்றதாம்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - இடைச்சுரத்து அழுங்கல்

ஒப்புமைப்பகுதி

5. பொருட்பிணி

"காமர் பொருட்பிணி போகிய"
(குறுந். 255:7, 244:7, 350:3) (ஐங். 355-2)
(கலி. 4:25) (அகநா. 43:14, 51:8)

7. கண்பசலை பாய்தல்

"பூப்போலுண்கண் பொன் போர்த்தனவே" (ஐங். 16:4)
"பசலை யார்ந்தன குவளையங் கண்ணே" (குறுந். 13-5)
"உண்கண் பசப்பது எவன்கொல் அன்னாய்" (ஐங். 21:4)
"ஏதிலாளர்க்குப் பசந்தவென் கண்ணே" (ஐங். 34;4)
"கயவெனக் கருதிய உண்கண், பயலைக்கு ஒல்கா
ஆகுதல் பெறினே" (ஐங். 36:4-5)

"நயந்தோருண்கண் பயந்து பனி மல்க" (ஐங். 37-2)
"பசப்பணிந்தனவால் மகிழ்ந்வென் கண்ணே" (ஐங். 45:4)
"என் செயப்பசக்கும் தோழியென் கண்ணே" (ஐங். 169:5)
"பல்லிதழ் உண்கண் பசத்தல் மற்றெவனோ" (ஐங். 170;1)
"பயந்தன மாதோ நீ நயந்தோள் கண்ணே" (ஐங். 264:4)
"பனிமலருண்கண் பசலை பாய" (ஐங். 477:1)
"கொன்றைப் பூவின் பசந்த உண்கண்" (ஐங். 500:1)
"பல்லிதழ் மலருண்கண் பசப்ப" (கலி. 45:11)
"பொன்னெனப் பசந்த கண் போதெழில் நலம் செல"
(கலி. 77:12)
"கண்பசந்து" (அகநா. 146:11)
"முயக்கிடைத்தண்வளி போழப் பயப்புற்ற
பேதை பெருமழைக்கண்"
"கண்ணின் பசப்போ" (குறள். 1239-40)
"கண்பசலை பூத்த காமம்" (சீவக. 231)

11. குழலேங்குமாறு ஏங்கி அழுதார்
"குழலேங்குமாறு ஏங்கி அழுதார் கோதை மடவாரே"
(சீவக. 2945)
"குழலினைவது போல் அழுதனள்" (புறநா. 143:15)
"வேய்ங்குழல்.........நாண, ஏங்கினள்
(கம்ப. கிட்கிந்தா. அரசியற். 3)

11. ஆம்பலங் குழலின் ஏங்கி
"குழலினு மினைகுவள் பெரிதே" (ஐங். 306)

# 114. குறிஞ்சி

## தோழி கூற்று

வெண்கோடு கொண்டு வியலறை வைப்பவும்
பச்சூன் கெண்டி வள்ளுகிர் முணக்கவும்
மறுகுதொறு புலாவஞ் சிறுகுடி அரவம்
வைகிக் கேட்டுப் பையாந் திசினே
5 அளிதோ தானே தோழி அல்கல்
வந்தோன் மன்ற குன்ற நாடன்
துளிபெயல் பொறித்த புள்ளித் தொல்கரை
பொருதிரை நிவப்பின் வரும்யாறு அஞ்சுவல்

ஈர்ங்குரல் உருமின் ஆர்கலி நல்ஏறு
10 பாம்பு கவின் அழிக்கும் ஓங்குவரை பொத்தி
மையில் மடப்பிடி இனையக்
கைஊன்றுபு இழிதரு களிறு எறிந்தன்றே.

எ-து: ஆறு பார்த்துற்ற அச்சத்தால் தோழி தலைவிக்கு உரைப்பாளாய், சிறைப்புறமாகச் சொல்லியது.

## தொல்கபிலர்

ப-ரை: தோழி - தலைவியே! ஈர்ங்குரல் - ஈரிய குரலின் மிக்க, உருமின் ஆர்கலி நல்ஏறு - ஓசையை உடைய இடியேறு, பாம்பு கவின் அழிக்கும் - பாம்பின் அழகைக் கெடுக்கின்றதாகி, ஓங்கு வரை பொத்தி - உயர்ந்த மலைமேல் மோதி, மையில் மடப் பிடி இனைய - கரிய நிறத்தையுடைய இளைய பெண் யானை வருந்துமாறு, கையூன்று - தனது துதிக்கையை ஊன்றி, இழித்ரு - இறங்குகின்ற, களிறு - களிற்றின்மேல், எறிந்தன்று - பாய்ந்து அதனைக் கொன்று ஒழிந்தது; (அங்ஙனம் இறந்த யானையை நம் ஐயன்மார் பிளந்து) வெண்கோடு - அதன் வெள்ளிய தந்தங்களை எடுத்து, வியல் அறை வைப்பவும் - அகன்ற பாலறையில் ஊன் காயுமாறு வைப்பவும், பச்சூன் கெண்டி வள் உகிர் மூணக்கவும் - அவ்யானையின் பசிய ஊனை அழித்து மிகப் பெரிய நகங்களைப் புதைக்கவும், மறுகுதொறு - பேசிக் கொள்ளும் சிறுகுடித்தெரு முழுதும், அரவம் - ஆரவாரப், வைகிக் கேட்டு - இரவு முழுவதும் உறங்காது கேட்டு, பையாந்திசின் - வருந்தினேன், குன்ற நாடன் வந்தோன் மன்ற – அத்தகைய இரவிலே குன்றத்திற்குரிய நாடனாகிய தலைவனும் திண்ணமாக இரவுக் குறியிற் கூடுவான் வேண்டி வந்து நின்றனன். அவன் வரும் வழியில், துளி பெயல் பொறித்த - மழையின் துளி விழுதலாலே பொறிக்கப்பட்ட, புள்ளி - புள்ளிகளை உடைய, தொல்கரை - பழைமையாகிய கரையில், பொருதிரை நிவப்பின் - மோதுகின்ற உயர்வை உடைய அலைகளோடு, வரும்-ஓடிவருகின்ற, யாறு-காட்டாற்றினைக் கருதி, அஞ்சுவல் - அஞ்சுகின்றேன்.

முடிபு - தோழி குன்றநாடன் வரும் யாறு அஞ்சுவல் அளிதோ தானே என்று முடிக்க.

கருத்து: தோழி, இடிமுழங்க, கான்யாறு பெருக, சிறுகுடி அரவம் எழ நள்ளிரவில் தலைவன் வந்தனன். இது நன்று அன்று. யாம் அஞ்சுவல். அவன் வரைதலே தக்கது எனத் தலைவன் கேட்க, தலைவிக்கு உரைத்தாள்.

அ-ள் : வைத்தல் - போக்குதல். விடுத்தல். முணக்கல் - அடக்குதல், கெண்டுதல் - வெட்டுதல். பையாத்தல் - வருந்து தல். அல்கல் - இரவு. பொத்தல் - மோதல்.

வி-ரை : யாறு அஞ்சுவல். இடி களிறு எறிந்தது என்பன கூறி ஆறுபார்த்துற்ற அச்சம் நவின்றான். இரவுக் குறியிடையீடு பட்டமையின் வரைந்து எய்துக.

மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்,

பயன் - இரவுக் குறிவிலக்கி வலரவு உடம்படுத்தல்.

ஒப்புமைப்பகுதி

2. கெண்டிய

"கவலை கெண்டிய வகல்வாய்ச் சிறுகுழி" (குறுந். 233:1)

9-10 பாம்புபட இடிக்கும் உருமு

"உருமுச்சிவந்தெறிந்த வுரனழி பாம்பின்"

"பாம்பின் பைபட இடிக்கும் கடுங்குரலேற்றொடு"

(அகநா. 92:11 323:11)

"இடியேறுண்ட நாகம்போல்" (பெருங். 10:112)

"நெடுவரை மருங்கிற் பாம்புபட இடிக்கும்
கடுவிசை யுருமின் கழறுகுரல் அளைஇ"

(குறுந். 158:1-2 190:4-5, 268:3-4, 391:34,)

# 115. பாலை

## தோழி கூற்று

மலர்ந்த பொய்கைப் பூக்குற்று அழுங்க
அயர்ந்த வாயம் கண்இனிது படீஇயர்
அன்னையுஞ் சிறிதுதணிந்து உயிரினள் இன்நீர்த்
தடங்கடல் வாயில் உண்டுசில்நீரென
5 மயிலடி இலைய மாக்குரல் நொச்சி
மனைநடு மௌவலொடு ஊழ்முகை அவிழக்
காரெதிர்ந் தன்றால் காலை காதலர்
தவச்சேய் நாட்ட ராயினும் மிகப்பேர்
அன்பினர் வாழி தோழி நன்புகழ்
10 உலப்புஇன்று பெறினும் தவிரலர்
கேட்டிசின் அல்லனோ விசும்பின்றகவே.

எ-து: பிரிவிடை ஆற்றாளாய தலைமகளைத் தோழி பருவங்காட்டி வற்புறுத்தியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை.

ப-ரை: மலர்ந்த பொய்கை - அகன்று விரிந்த பொய்கையின் கண் உள்ள, பூக்குற்று அழுங்க - மலர்களைக் கொய்து வந்த துன்பத்தால், அயர்ந்த ஆயம் - வருந்திய தோழியர் குழாமெல்லாம், கண்ணினிது படீஇய - இனிதாக உறங்க வேண்டி, அன்னையும் சிறிது தணிந்து - அன்னையும் நம் மீது கொண்ட சினம் சிறிது தணிந்து, உயிரினள் - உயிர்ப்புடையளாயினாள், இன்னீர்த் தடங்கடல் - இனிய நீரையுடைய பெரிய கடல் நீரை, வாயிலுண்டு சினீரென் - சில எனும்படி வாயினால் உண்டு, மயிலடி - மயிலினடி போன்ற, இலைய - இலையை உடைய, மாக்குரல் - கரிய கதிராகிய, நொச்சி - நொச்சி வேலியின்மீது, மனை நடு - இல்லின் நடு முற்றத்தில், மௌவலொடு - முல்லைக் கூரை மேல், சென்று படர்ந்து, ஊழ் முகை அவிழ - அரும்பவிழ்ந்து மலருமாறு, கார் - கார்ப் பருவம், எதிர்ந்தன்றால் - மேற் கொண்டதன்மையால், காலை - இன்று காலை, காதலர் - காதலர், தவச்சேய் - மிகச் சேய்மையிலுள்ள, நாட்டர் ஆயினும் - நாட்டில் உறைபவர் ஆயினும், மிகப்பேர் அன்பினர் - (நம்மிடத்து) மிகப் பெரிய அன்புடையவர் ஆதலால், வாழி தோழி - தோழியே நீ வாழ்வாயாக, நன்புகழ் - நல்ல புகழை அடைவதாயினும், உலப்பு இன்று பெறினும் - அளவு இன்றிப் பெற்றிடினும், தவிரலர் - அவ்விடத்தே வசித்தலைத் தவிர்த்து விடுவர், கேட்டிசின் - கேட்பாயாக, அல்லனோ - அல்லவா, விசும்பின் - மேகத்தின், தகவே - இடியோசையை.

முடிபு: காதலர் தவச்சேய் நாட்டாராயினும், மிகப்பேர் அன்பிலர், நன்புகழ் உலப்பு இன்று பெறினும் தவிரலர்.

கருத்து: காதலர் அருகிலே அயல் நாட்டில் இருப்பவர் ஆயினும் நம்மீது பேரன்புடையவர்.

அ-ள்: குறுதல் - பறித்தல். உயிரினள் - சினம் அடங்குழிப் பெருமூச்சு விடும் இயல்பினள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

8. சேய்நாட்டார்

"நெடுஞ்சேணாட்டார் ஆயினும்" (குறுந். 228:5)

6. மனை நடுமௌவல்

"மனைவளர் முல்லை" (சிலப். புறஞ்சேரி. 120)
"மாதவி மல்லிகை மனைவளர் முல்லை" (சிலப். 4:27)
(பெருங். 1-33:73 சீவக. 111, 134) (பெரும்பாண். 39-41)

5. நொச்சியின் இலைக்கு மயிலின் அடி

"மயிலடி இலைய மாக்குரல் நொச்சி" (குறுந். 138:3)
"நொச்சிப் பாசிலையன்ன பைந்தாள் மஞ்ஞை"
(திருவிளை. இந்திரன். 74)

6. மனைமரத்தில் உள்ள மௌவல்

"மனைமரத்து, எல்லுறு மௌவல் நாறும்" (குறுந். 19:3-4)
"மனைவிளை நொச்சி மௌவல் வான்முகை" (அகநா. 21:1)
"மனைய, தாழ்வில் நொச்சி சூழ்வன மலரும்
மௌவல் மாச்சினை" (அகநா. 23:, 10-12)
"இல்வளர் முல்லையொடு மல்லிகை" (சிலப். 4-27)
"மனைவளர் முல்லை" (சிலப். 13-120)
"இல்லெழு முல்லையொடு மல்லிகை மயங்கி"
(பெருங். 33:73)
"மனைப்பூங்காவன் மருங்கிற் கவினைய" (பெருங். 3:7)
"பைந்தார் முல்லை வெண்போது நெகிழ" (பெருங். 13-4)

8. நனிசேய் நாட்டர்

"நனிசேய் நாட்டர் நம்முன்னலரே" (குறுந். 380:4, 228:5)

11. கேட்டிசின்

"பிறர்பிறர்கூற வழிக் கேட்டிசினே"
(புறநா. 150-24, 22:36, 151:7)

# 116. குறிஞ்சி

## தலைவி கூற்று

தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்
தாமறிந்து உணர்க என்ப மாதோ
வழுவப் பிண்ட நாப்பண் ஏமுற்று
இருவெதி ரீன்ற வேல்தலைக் கொழுமுளை
5 சூன்முதிர் மடப்பிடி நாண் மேயலாரும்

மலைகெழு நாடன் கேண்மை பலவின்
மாச்சினை துறந்த கோண்முதிர் பெரும்பழம்
விடரளை வீழ்ந்துஉக் காங்குத் தொடர்புஅறச்
சேணுஞ் சென்றுஉக் கன்றே யறியாது
10 ஏகல் அடுக்கத்து இருண்முகை இருந்த
குறிஞ்சி நல்லூர்ப் பெண்டிர்
இன்னும் ஓவார் என்றிறத்து அலரே.

எ-து: வரைவு நீட்டிப்ப ஆற்றாளாய தலைவி தோழிக்கு வன்பொறை எதிரழிந்து சொல்லியது.

கந்தரத்தனார்

ப-ரை: தீமை - தீயசெயல்களை, கண்டோர் திறத்தும் - செய்தவர் மாட்டும், பெரியோர் - ஆன்றோர், தாம் - அத்தீய ரன்றாம், அறிந்து - தாம் செய்த செயல்களின் கொடுமையை அறிந்து, உணர்க - செய்தலை இனிமேல் தவிர்க, என்ப - அதுகாறும் பொறுப்போம் என்று சினவாது இருப்பர். அங்ஙனம் இன்றி, வழுவப் பிண்டம் - வெளிப்பட்ட கருப்பம், நாப்பண் - இடையில், ஏமுற்று - அறியாமையால் மயங்கி, இரு வெதிர் - பெரிய மூங்கிலில், ஈன்ற - தோன்றிய, வேற்றிலை - இலையல்லாத வேறு, கொழுமுளை - கொழுவிய முளையை, சூன் முதிர் - கரு முதிர்ந்த, மடப்பிடி - இளம்பிடி யானை, நாள் - காலையிலே, மேயலாரும் - தின்னும், மலைகெழுநாடன் - மலை விளங்கிய நாடன், கேண்மை - உறவு, பலவின் - பலாவின், மாச்சினை - கரிய கிளையினின்று, துறந்த - கனிந்து கீழே விழுகின்ற, கோள் முதிர் - காய் முதிர்ந்த, பெரும்பழம் - பெரிய பழம், விடரளை - மலைப்பிளப்பாகிய அளையினுள், வீழ்ந்து - விழுந்து, உக்காங்கு - சிதறினாற் போல, தொடர்பு அற - தொடர்ச்சி அற, சேணும் - நெடுங்காலத்திற்குமுன், சென்று உக்கன்று - சென்று ஒழிந்தது, அறியாது - அதனை அறியாத, ஏகல் - உயரமான, அடுக்கத்து - மலைப் பக்கத்திலுள்ள, இருண்முகை - இருள் செறிந்த குவட்டிலிருந்த, குறிஞ்சி நல்லூர்ப் பெண்டிர் - குறிஞ்சியிலுள்ள நல்ல ஊரின் கண் இருக்கும் பெண்டிர்தாம், இன்னும் ஓவார் - இன்னும் (என்னைப் பழி கூறுதலை) ஒழிந்தாரிலர், என் திறத்து அலரே - என்னிடத்துள்ள பழியையே.

முடிபு: மலைகெழு நாடன் கேண்மை அறியாது குறிஞ்சி நல்லூர்ப் பெண்டிர் இன்னும் ஓவார், என் திறத்து அலரே.

கருத்து: தலைவி தோழியை நோக்கி நமது காதலன் நம்பால் வைத்த நட்பானது தொடர்பின்றி அற ஒழிந்த பின்னும்

அயல் மாதர் என்னை அலர் கூறுவது ஒழிந்தார் இலர். யான் இதனை எவ் வண்ணம் ஆற்றுவேன் என்றாள்.

அ-ள் : பிண்டம் - கருப்பம். வழுவல் - வெளிப்படல். ஏமுறல் - மயங்குதல். வெதிர் - மூங்கில். நோன் - காய். ஏ - பெருமை. முகை - தறுகல்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயர்வுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

6-8. விடரளை வீழ்தல்

"இருங்கல் விடரளை வீழ்ந்தென" (ஐங். 214)

4-5 யானை மூங்கிலை உண்ணுதல்

குவையுடைப் பசுங்கழை தின்ற கயவாய்ப்
பேதையானை சுவைத்த (குறுந். 179:5-6)
(அகநா. 85:7-8, 148:13, 218:2-3, 328:13, 332:1-2)
(புறநா. 73:9, 80-7)

10. ஏகல் அடுக்கம்

"இதழ்கள் அவிழ்ந்த ஏகல் வெற்பன்"
(அகநா. 52:5, 177:8) (திணை. ஐம். 10, பழ. 68, 127)

# 117. நெய்தல்

## தலைவி கூற்று

பெருங்கடன் முழங்கக் கானல் மலர
இருங்கழி ஒதம் இல்லிறந்து மலிர
வள்ளிதழ் நெய்தல் கூம்பப் புள்ளுடன்
கமழ்பூம் பொதும்பர்க் கட்சி சேரச்
5 செல்சுடர் மழுங்கச் சிவந்துவாங்கு மண்டிலம்
கல்சேர்பு நண்ணிப் படரடைபு நடுங்கப்
புலம்பொடு வந்த புன்கண் மாலை
அன்னர் உன்னார் கழியின் பன்னாள்
வாழலென் வாழி தோழி என்கண்
10 பிணிபிறி தாகக் கூறுவர்
பழிபிறி தாகல் பண்புமார் அன்றே.

ஏ-து : வரைவு நீட ஆற்றாளாய தலைவி வன்பொறை யெதிரழிந்து சொல்லியது.

## குன்றியனார்

ப-ரை : பெருங்கடல் - பெரிய கடல், முழங்க - முழங்கா நிற்கவும், கானல் மலர - கடல் அருகில் உள்ள சோலை மலர் தலைச் செய்யவும், இருங்கழி - கரிய கழியின், ஓதம் - நீர் வெள் ளம், இல் இறந்து - நமது இல்லத்தின் எல்லை கடந்து, மலிர - நிறைந்து வாரா நிற்பவும், வள்ளிதழ் - பெரிய இதழை உடைய, நெய்தல் - நெய்தல் மலர், கூம்ப - குவியவும், புள்ளுடன் - காக்கைகள் ஒரு சேர, கமழ்பூம் பொதும்பர் - மணம் வீசும் பூஞ் சோலையிலுள்ள, கட்சி சேர - தம் தம் கூடுகளிலே சென்று தங்கா நிற்பவும், செல் சுடர் மழுங்க - மறைகின்ற சுடர் குறைய வும், சிவந்து வாங்கு மண்டிலம் - சிவந்து தோன்றி ஆதித்த மண்டிலம், கல் சேர்பு - அத்த மனக் குன்றடைந்து, நண்ணி - அணுகி, படர் அடைபு - துன்பங்கள் சேர்ந்து, நடுங்க - நடுங்கும் படி, புலம்பொடு - அதனுடன், வந்த - கொண்டு வந்த, புன்கண் மாலை - துன்பம் செய்கின்ற மாலைப் பொழுதில், அன்னர் - அத்தலைவர், உன்னார் - எவ்வை நினையாராய், கழியின் - பல நாட்கள் கழிந்ததால், பல் நாள் - பல நாட்கள், வாழலென் - உயிரோடு வாழ்ந்திரேன், வாழி, தோழி! - தோழியே! நீ வாழ் வாயாக, என் கண் - என்னிடத்து, பிணி - உண்டாகிய நோய், பிறிதாக - வேறு காரணத்தினால் உண்டானதென்று, கூறுவர் - ஊரில் உள்ளோர் கூறுவர், பழி பிறிதாகல் - பழி வேறு ஒன்றாக அயலார் கூறுதல், பண்புமார் அன்றே - பண்புடைய செயலும் அன்றே.

முடிபு : அன்னர் உன்னார் கழியிற் பன்னாள் வாழலேன், வாழி தோழி. என் கண் பிணி பிறிதாகக் கூறுவர் பழி பிறிதாகல் பண்பு மாரன்றே.

கருத்து : என்னிடத்து காமநோயால் உண்டாகிய வேறு பாட்டை அறியாது, ஊரார் வேறொரு பழியைக் கூறுவதைக் கேட்டு நான் உயிர் வாழேன் என்று தலைவி தோழியிடத்துக் கூறுகிறாள்.

அ-ள் : புள் - காக்கை. கட்சி - பறவைக்கூடு.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

2-3. கழிநெய்தல்

"பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்"
(ஐங். 183;5) (குறுந். 9:4:5, 336:5)

## 118. பாலை

### தலைவி கூற்று

அடைகரை மாஅத்து அல்குசினை ஒலியத்
தளிர்கவின் எய்திய தண்நறும் பொதும்பில்
சேவலொடு கெழீஇய செங்கணிருங்குயில்
புகன்றுஎதிர் ஆலும் பூமலி காலையும்
5 அகன்றோர் மன்றநம் மறந்திசி னோரென
இணருறுபு உடைவதன் றலையும் புணர்வினை
ஓவமாக்க ளொள்ளரக்கு ஊட்டிய
துகிலிகை யன்ன துய்த்தலைப் பாதிரி
வாலிதழ் அலரி வண்டுபட ஏந்திப்
10 புதுமலர் தெருவுதொறு நுவலு
நொதும லாட்டிக்கு நோம்என் னெஞ்சே.

எ-து : பருவங் கண்டு ஆற்றாளாய தலைவி சொல்லியது.

பாலை பாடிய பெருங்கடுக்கோ

ப-ரை : அடைகரை - அகன்ற கரைப்பக்கம், மாஅத்து - மாமரத்தில், அல்குசினை - நெருங்கிய கிளை, ஒலிய - தழையும் படி, தளிர்கவின் - இலைக் கொழுந்துடன் கூடிய அழகிய, எய்திய தண்ணறும் - அமைந்த குளிர்ந்த, பொதும்பில் - சோலையிலே, சேவலொடு கெழீஇய - சேவலொடு பொருந்திய, செங்கண் - சிவந்த கண்ணையுடைய, இருங்குயில் - கரிய குயில், புகன்று எதிர் - ஒன்றை ஒன்று விரும்பி எதிரெதிர் இருந்து, ஆலும் - ஆரவாரிக்கும், பூமலி காலையும் - பூங்கொத்து மிகுந்து மலரும் இளவேனிற் காலத்தும், அகன்றோர் - முன்பு பிரிந்து அகன்ற காதலர், மன்ற - நிச்சயமாக, நம் - நம்மை, மறந்திசினோரென - மறந்தனரென, இணர் உறுபு - பூக்கள் பெய்கின்ற பூமலி காலையும், உடைவதன் தலையும் - வருத்தமுறுவதன் மேலும், புணர் வினை - தம் தொழிலில் வல்ல, ஓவமாக்கள் - ஓவியர், ஒள்ளரக்கு ஊட்டிய - ஒள்ளிய அரக்கினை ஊட்டிய, துகிலிகை

அன்ன - எழுதுகோல் போன்ற, துய்த்தலைப் பாதிரி - தலையில் நுண்ணிய பஞ்சினை உடைய பாதிரியின், வாலிதழ் அலரி - வெள்ளிய இதழை உடைய மலர்களை, வண்டு படவேந்தி - வண்டுகள் மொய்க்கும்படி வட்டியிலேந்தி, புதுமலர் - அப்புது மலரை, தெருவுதொறு - தெருவுகள் தோறும், நுவலும் - விலை கூறிச் செல்லா நின்ற, நொதுமலாட்டிக்கு - அயலாளாகிய பூவிலை மடந்தைக்கு, நோமென் நெஞ்சே - என் நெஞ்சமே நோவா நின்றது.

முடிபு : அகன்றோர் மன்ற நம் மறந்திசினோர்

கருத்து : வினைவயிற் சென்ற தலைவன் குறித்த பருவத்து வாராமையால், தலைவி இளவேனிற் காலத்தை நோக்குந் தோறும் தலைவர் தம்மை மறந்தனர் என்று கூறுகிறாள்.

அ-ள் : மா அத்து - அத்து அல்வழிச்சாரியை, அல்கல் - நெருங்கல், ஓவமாக்கள் - சித்திரமாலை செய்வோர்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

பூவிலை மடந்தைக்குத் தன்நெஞ்சு நோமென்றாள். பாதிரியின் நறுமணம் இன்பம் விளைத்துப் பிரிந்தாரைத் துன்புறுத்தலின்.

ஒப்புமைப்பகுதி

1-5. பறவைகள் புணர்ந்து அகவுங்காலத்தில் தலைவர் பிரிதல்.

"நோன்சிலை இருந்த இருந்தோட்டுப் புள்ளினம்
தாம் புணர்ந்தமையிற் பிரிந்தோருள்ளா" (குறுந். 191:2-4)
"விரிகாஞ்சித் தாதாடி இருங்குயில் விளிப்பவும்
பிரிவஞ்சாதவர் தீமை" (கலி. 34:8-9)

குயில்மாவிலிருந்து மகிழும் காலத்திலும் தலைவன் பிரிந்திருத்தலால் தலைவி வருந்துதல்

"ஈங்கே வருவர் இனையல் அவரென
..........................
மின்னின் தூவி இருங்குயில்" (குறுந். 192:1-3)
(அகநா. 229:18, 21)

11. நோம் என் நெஞ்சு

"நோமென் நெஞ்சே நோமென் நெஞ்சே"
(குறுந். 4:1 202:1-5)
"இவட்கு மருந்தன்மை நோமென் நெஞ்சே" (ஐங். 59:4)

# 119. குறிஞ்சி

## தோழி கூற்று

தினையுண் கேழல்இரியப் புனவன்
சிறுபொறி மாட்டிய பெருங்கல் அடாஅர்
ஒண்கேழ் வயப்புலி படூஉம்நாடன்
ஆர்தர வந்தனன ஆயினும் படப்பை
5 இன்முசுப் பெருங்கலை நன்மேயல் ஆரும்
பல்மலர்க் கான்யாற்று உம்பர்க் கருங்கலை
கடும்பஆட்டு வருடையொடு தாவனஉகளும்
பெருவரை நீழல் வருகுவன் குளவியொடு
கூவிளந் ததைந்த கண்ணியன் யாவதும்
10 முயங்கல் பெறுகுவன் அல்லன்
புலவி கொளீஇயர்தன் மலையினும் பெரிதே.

எ-து : சிறைப் புறமாகத் தோழி செறிப்பறிவுறீ இயது.

பெருங்குன்றூர் கிழார்

ப-ரை : தினையுண் - தினைப்புனத்து வந்து உண்கின்ற, கேழல் - பன்றி, இரிய - பட்டொழியுமாறு, புனவன் - அத் தினைப் புனத்துத் தலைவன், சிறுபொறி - சிறிய இயந்திரமாக, மாட்டிய - அமைத்து வைத்த, பெருங்கல் - பெரிய கல்லின், அடா அர் - கருங்கற் பலகையை (ஒரு பால் சாய்வாக நிமிர்த்திக் கீழே முட்டுக் கொடுத்து உள்ளால் உணவு வைப்பது) ஒண் கேழ் வயப்புலி - ஒள்ளிய நிறத்தையும் வலியையும் உடைய புலி, படூஉ - புகுந்து படுகின்ற, நாடன் - மலைநாடன், ஆர்தர வந்தனன் ஆயினும் - யாராலோ தரப்பட்டு வந்தவனாயினும், படப்பை - கொல்லையின் கண், இன்முசுப் பெருங்கலை - இனிய ஆண் குரங்கு, நன் மேயல் ஆரும் - நல்ல உணவை உண்ணா நிற்கும், பன்மலர் - பலவாய மலரை, கான் யாற்று - காட்டாற்றிற்கு, உம்பர் - அப்பாலுள்ள, கருங்கலை - கரையி னிடத்துள்ள பெரிய கலைமான், கடும்பு - சுற்றத்துடன் கூடிய, ஆட்டு வருடையொடு - ஆட்டினத்துடனே, தாவன - தாவித் துள்ளி, உகளும் - குதியா நிற்கும், பெருவரை - பெரிய மூங்கிற் புதர், நீழல் - நிழலில், வருகுவன் - வாரா நிற்பன், குளவியொடு - காட்டு மல்லிகையுடனே, கூவிளம் - கூவிள மலர், ததைந்த - இடையிட்டுக் கட்டிய, கண்ணியன் - நெருங்கிய மாலை உடையவ னாகி, யாவதும் - வந்தும், முயங்கல் - தலைவியின் முயக்கத்தை,

பெறுகுவனல்லன் - இனி அடைபவனல்லன். புலவி கொளீ இயர் - புலந்து கொள்ளினும் புலந்து கொள்வானாக. தன் மலையினும் பெரிதே - தன் மலையைவிட அப் புலவி பெரிதாக இருந்தாலும் இருப்பதே.

முடிபு : புனவன் வருகுவன்; முயங்கல் பெறுகுவன் அல்லன்; புலவி கொளீ இயர் தன் மலையினும் பெரிதே.

கருத்து : தோழி அறிவுறுத்தி வரைவுடன்படுத்துவாளாய் மலைநாடன் யார்தர வரினும் மாலையனாகி வாரா நிற்பன், வந்தும் யாது பயன், முயங்கப் பெறுபவனல்லன், புலந்து போயினும் போவானாக என்று வெகுண்டு கூறா நிற்பது.

அ-ள் : அடார் - கருங்கற்பலகை. முசுப் பெருங்கலை - ஆண் குரங்கு. கடும்பு - சுற்றம். குளவி - காட்டு மல்லிகை. கூவிளம் - வில்வம்.

மெய்ப்பாடு - வெகுளி பற்றிய பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

வி-ரை : பன்றியைப் பிடிக்க வைத்துள்ள பொறியிலே புலி அகப்படும் என்றது வேற்று வரைவு கூடினும் கூடும் என்பது பற்றி. கலைமான் ஆட்டினத்தோடு தாவி உகளும் என்றது வேற்று வரைவு நேரினும் அது கலையோடு ஆடு சேர்ந்தாற்போல் பயன் இன்று. முசுக்கலை நன்கு மேய்ந்து உண்ணும் என்றது வரைந்து கொண்டால் இடையீடின்றி இன்பம் துய்க்கலாம்.

ஒப்புமைப்பகுதி

1. புனவன்

"புனவர் கொள்ளியிற் புகல்வரு மஞ்ஞை (ஐங். 295)

6-8. மானினம் வருடையொடு உகளுதல்

"சிலம்புபாய் வருடையொடுகளும் சென்னிநீர்"
(சீவக. 1238) (பட்டின. 139)

# 120. மருதம்

## தலைவன் கூற்று

தடமருப்பு எருமை மடநடைக் குழவி
தூண்டொறும் யாத்த காண்டகு நல்லிற்
கொடுங்குழை பெய்த செழுஞ்செய் பேதை
சிறுதாழ் செறித்த மெல்விரல் சேப்ப
5 வாழை ஈர்ந்தடி வல்லிதின் வகைஇப்
புகையுண்டு அமர்த்த கண்ணள் தகைபெறப்
பிறைநுதற் பொறித்த சிறுநுண் பல்வியர்
அம்துகில் தலையிற் றுடையினள் நப்புலந்
தட்டி லோளே அம்மா வரிவை
10 எமக்கே வருகதில் விருந்தே சிவப்பு ஆன்று
சிறியமுள் ளெயிறு தோன்ற
முறுவல் கொண்ட முகங்காண் கம்மே.

எ-து : விருந்து வாயிலாகப் புக்க தலைவன் சொல்லியது.

மாங்குடி கிழார்

ப-ரை. தட மருப்பு - வளைந்த கொம்பினை உடைய, எருமை - எருமையின், மடநடை - இளநடையை உடைய, குழவி - கன்றுகளை, தூண்தொறும் - தூண்கள் தோறும், யாத்த - கட்டியிருக்கின்ற, காண் தகு - காணத் தகுந்த, நல் இல் - நல்ல மனையின் கண், கொடுங் குழை - வளைந்த குண்டலத்தைக் காதில் அணிந்த, செழுஞ் செய் பேதை - செழுவிய செய்ய பேதைமை உடைய காதலி, சிறு தாழ் செறித்த - சிறிய மோதிரம் அணிந்த, மெல் விரல் சேப்ப - மெல்லிய விரல் சிவக்கும்படியாக, வாழையீர்ந்து - வாழை இலையைக் கொய்து வந்து, அடி வல்லிதின் வகைஇ - அடிக்காம்பு பருத்திருத்தலின் அதை பகிர்ந்து, புகை உண்டு - புகையுண்ட, அமர்த்த - மாறுபட்ட, கண்ணள் - கண்களை உடையவளாய், தகை பெற - அழகு பெற, பிறைநுதல் - பிறை போன்ற நுதலில், பொறித்த - உண்டாகிய, சிறு நுண் - சிறிய நுணுகிய, பல்வியர் - பலவாய வியர்வை நீரை, அம் துகில் - அழகிய ஆடையாகிய, தலையில் - முன்றானையின் நுனியில், துடையினள் - துடைத்துக் கொண்டவளாயும், நப் புலந்து - நம் மீது புலவிமிக்கு, அட்டிலோளே - அடிசிற் சாலை இடத்தளாய் இரா நின்றாள், அம்மா அரிவை - இந்த அழகிய மாமை

நிறத்தை உடைய பெண், எமக்கே - என்னுடன், வருகதில் - வருபவர் விரும்பி வருவாராக, விருந்தே - விருந்தினராக, சிவப்பு ஆன்று - கோபம் கொள்வதில்லை, சிறு முள் - சிறிய முள் போன்ற, எயிறு தோன்ற - பல் சிறிது தோன்றுமாறு, முறுவல் கொண்ட - நகை கொண்ட, முகம் காண்கம்மே - முகத்தை யாம் கண்டு மகிழ்வேம்.

முடிபு : அட்டிலோளே அம் மா அரிவை எமக்கே வருகதில் விருந்தே சிவப்பானன்று சிறிய முள்ளெயிறு தோன்ற முறுவல் கொண்ட முகம் காண்கம்மே.

கருத்து : பரத்தையிற் பிரிந்தவன் தலைவியின் ஊடலைத் தணிக்கப் பெறானாய் விருந்தொடு புகுதக் கண்டு அவள் தன் ஊடலையடக்கி விருந்தெதிர் கொண்டாளாக, அதனை நோக்கிய அத்தலைமகன் இவளின் முயக்கத்தைப் பெறுதற்குரிய இனிய முகத்தைப் பார்ப்பேமென்று மகிழ்ந்து கூறா நிற்பது.

அ-ள் : தாழ் - மோதிரம். தில் - விழைவு.

வாளை ஈர்ந்தடி எனவும் பாடமுண்டு.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - வாயில் பெற்று மகிழ்தல்.

ஒப்புமைப்பகுதி

1. மடநடைக் குழவி

"காதற்குழவிக்கு ஊறுமுலை கொடுக்கும்" (ஐங். 92)
(பட். 14) (குறுந். 181:3-4)

1-2. எருமைக்குழவி

"இருமருப் பெருமை ஈன்றணிக்காரான்
உழவன் யாத்த குழவியின் அகலாது"
(குறுந். 181:3-4 பட்.14)

11. முள்ளெயிறு

"நெல்லி தின்ற முள்ளெயிறு தயங்க" (குறுந். 262:4)
(கலி. 4:13, 104:18, 112:20) (அகநா. 212-5)
(ஏலாதி. 7 மணி. 18:71) (சீவக. 491, 1099, 2732)

# 121. முல்லை

## தேர்ப்பாகன் கூற்று

விதையர் கொன்ற முதையல் பூழி
இடுமுறை நிரப்பிய ஈரிலை வரகின்
கவைக்கதிர் கறித்த காமர் மடப்பிணை
அரலை அங்காட்டு இரலையொடு வதியும்
5 புறவிற்று அம்மநீ நயந்தோள் ஊரே
எல்லிவிட் டன்று வேந்தெனச் சொல்லுபு
பரியல் வாழ்கநின் கண்ணி காண்வர
விரியுளைப் பொலிந்த வீங்கு செலல் கலிமா
வண்பரி தயங்க எழீஇத் தண்பெயற்
10 கான்யாற்று இடுமணற் கரைபிறக்கு ஒழிய
வெவ்விருந் தயரு மனைவி
மெல்லிறைப் பணைத்தோள் துயிலமர் வோயே

எ-து : வினைமுற்றி மறுத்தருந் தலைமகற்குத் தேர்ப்பாகன் சொல்லியது.

ஒரு சிறைப் பெயரியனார்

ப-ரை : நீ நயந்தோள் ஊர் - நீ விரும்பிச் செல்லுகின்ற தலைவியின் ஊர். விதையர் - விதை விதைக்கும் ஆயர், கொன்ற - பல படியாக உழுது புரட்டிய, முதையல் - பழங் கொல்லை, பூழி - புழுதியில், இடுமுறை - நிறைவுற முறையே, நிரப்பிய - விதைக்கப்பட்டுள்ள, ஈரிலை - ஈரிய இலை நிரம்பிய, வரகின் - வரகின் (ஒரு வகைத் தானியம்), கவைக்கதிர் - கவைத்த கதிர்களை, கறித்த - தின்ற, காமர் - கண்டார்க்கு விருப்பம் வருகின்ற. மடப்பிணை - இளைய பிணைமான், அரலை - மரல்விதை உதிர்ந்து கிடக்கும், அம் காட்டு - அழகிய காட்டினிடத்தே, இரலையொடு - கலை மானோடு, வதியும் - மகிழ்ந்து விளையாடா நிற்கும், புறவிற்று - இம் முல்லை நிலத்தின் கண் உள்ளது, அம்ம - கேட்பாயாக, எல்லி - நேற்றிரவு தான், விட்டன்று - போரை முடித்து நின்னைச் செல்லுமாறு விடைகொடுத்தான், வேந்து - அரசன், எனச் சொல்லுபு - என்று கூறி, பரியல் - வருந்தாதே கொள், வாழ்க - நீடு வாழ்வதாக, நின் கண்ணி - உனது மாலை, காண்வர - காட்சி வரும்படியாக, விரி உளை - விரிந்த குதிரையின் தலையாட்டம் என்னும் அணி, பொலிந்த - விளங்குகின்ற, வீங்கு செலல் - விரைந்த செல

வினையும், கலிமா - குதிரை, வண் பரி - வளவிய குதிரை, தயங்க - விளங்க, எழீஇ - எழுந்து, தண் பெயற் - குளிர்ந்த மழை பெய்தலாலே, கான்யாற்று - பெருகிய கான்யாற்றினரு கில் இடப்பட்ட, இடுமணல் - மணலால் ஆகிய, கரை பிறக்கு ஒழிய - கரை பின்னே செல்லும்படி போந்து, எல் விருந்து - நின் புதிய வரவை, அயரும் மனைவி - விரும்பியேற்று மகிழும் மனைவியினுடைய, மெல் - மென்மையான, இறை - இறைவனே! பணைத்தோள் - பருத்த தோளின் கண்ணவாகிய, துயில் அமர்வோயே - துயிலை விரும்புகின்றவனே.

முடிபு : நீ நயந்தோள் ஊரே, எல்லி விட்டன்று வேந்து எனச் சொல்லுபு பரியல்.

கருத்து : வினை முடித்து மீண்டு வரும் தலைவனிடத்து, தேர்ப்பாகன், நீ விரும்பிய காதலியினூர் இப் புறவத்துள் இருக் கிறது. வருந்தாதே, விரைவாகச் செல்வோம் என்று கூறுவது.

அ-ள் : முதையல் - பழங்கொல்லை. அரலை - மரல் விதை.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - பாகன் தேற்றத் தேறுதல்.

ஒப்புமைப்பகுதி

1. விதையர் கொன்ற முதையல்

"முதைப்புனங் கொன்ற ஆர்கலி உழவர்" (குறுந். 155:1-2)

2-4. வரகை இரலை மேய்தல்

"பழமழைக் கலித்த புதுப்புன வரகின்
இரலை மேய்ந்த" (குறுந். 220:1,2)

"வானம் வாய்த்த வயங்குகதிர் வரகிற்
றிரிமருப்பு இரலையொடு மடமானுகள" (முல்லை. 99-9)

4. அரலை

"அரலை மாலை சூட்டி" (குறுந். 214-6)

# 122. குறிஞ்சி

## தோழி கூற்று

இருங்கல் அடுக்கத்து என்னையர் உழுத
கருங்காற் செந்தினை கடியு முண்டன
கல்லக வரைப்பின் கான்கெழு சிறுகுடி
மல்லன் மருங்கின் மௌவலும் அரும்பின
5 நகையுரும் உரறு நாம நள்ளிருள்
வரையக நாடன் வருஉ மென்பது
உண்டுகொல் அன்றுகொல் யாதுகொன் மற்றெ
நின்று மதிவ லுள்ளமொடு மறைந்தவை யாடி
அன்னையு மமரா முகத்தினள் நின்னொடு
10 நீயே சூழ்தல் வேண்டும்
பூவேய் கண்ணியது பொருந்து மாறே.

எ-து : சிறைப்புறமாகத் தோழி தலைவிக்கு உரைப்பா ளாய்த் தலைவன் கேட்பச் சொல்லியது.

**செங்கண்ணனார்**

ப-ரை : இருங்கல் - பெரிய மலை, அடுக்கத்து - பக்கத்தில் என்னையர் - என்னையன்மார், உழுத - உழுது விதைத்த, கருங்கால் - கரிய அடித் தண்டினையுடைய, செந்தினை - செவ்விய தினைக் கதிர், கடியுமுண்டன - கொய்யப் பட்டன, கல்லக - மலை சூழ்ந்த, வரைப்பின் - எல்லையில், கான்கெழு - கானகத்தே பொருந்திய, சிறுகுடி - சிறுகுடியின், மல்லன் - வளப்பத்தை உடைய, மருங்கின் - பக்கங்களில், மௌவலும் - மல்லிகையும், அரும்பின - அரும்புண்டாயின, நகையுரும் - மின் னொளியுடன்கூடிய, உரறு - இடி முழங்குகின்ற, நாம - அச்சத் துடன் கூடிய, நள்ளிருள் - நடுயாமத்திருள், வரையக நாடன் - மலை சூழ்ந்தநாட்டை உடைய தலைவன், வருஉம் - வருவான், என்பது -என்பது, உண்டு கொல் - உண்மையோ, அன்று கொல் - இல்லையோ, யாது கொல் - வேறு யாதோ, மற்றென நின்று - என நின்று, மதி வல் - ஆராய வல்ல, உள்ளமொடு - உள்ளத் துடனே, மறைந்தவை - (அயலார்க்கு) தெரியாதபடி, ஆடி - கூறிக்கொண்டு, அன்னையும் - தாயும், அமரா - விரும்பாத, முகத்தினள் - (கொடுமை தோன்றிய) முகத்தினளாய் இரா நின்றனள், நின்னொடு - நின் உள்ளத்தோடு, நீயே சூழ்தல்

வேண்டும் - நீயே ஆராய்ந்து அறிதல் வேண்டும், பூவேய் - பூப் போலும், கண்ணி - கண்ணை உடையவளே, அது பொருந்து மாறே - நமது (கள வொழுக்கம்) பொருந்துமா என்பதை.

முடிபு : நாடன் வரூஉம் என்பது மதிவல் உள்ளமொடு மறைந்தவை ஆடி, நின்னொடு நீயே சூழ்தல் வேண்டும், அது பொருந்துமாறே.

கருத்து : தோழி, தலைவியை நோக்கி, நாடன் வருவான் என்பது உண்டோ, இல்லையோ என ஆராய்ந்து, நமது களவொழுக்கம் பொருந்தி நிகழுமா என்பதை அறிந்துகொள் என்றாள்.

அ-ள் : கடிதல் - கொய்தல். மௌவல் - மல்லிகை. ஏய் - உவமவுருபு.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவுடன் படுத்தல்.

## 123. நெய்தல்

### தோழி கூற்று

உரையாய் வாழி தோழி இருங்கழி
இரையார் குருகி நிரைப்பறைத் தொழுதி
வாங்கு மடற் குடம்பைத் தூங்கு இருள்துவன்றும்
பெண்ணை ஓங்கிய வெண்மணற் படப்பைக்
5 கானல் ஆயமொடு காலைக் குற்ற
கள் கமழ் அலர தண்ணறுங் காவி
அம்பகை நெறித்தழை அணிபெறத் தைஇ
வரிபுனை சிற்றில் பரிசிறந் தோடிப்
புலவுத்திரை யுதைத்த கொடுந்தாள் கண்டற்
10 செவ்வேர் ஈரளை அலவன் பார்க்குஞ்
சிறுவிளை யாடலும் மழுங்க
நினக்குப் பெருந் துயர மாகிய நோயே.

எ-து : தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவிக்கு உரைப்பாளாய்ச் சொல்லியது.

காஞ்சிப் புலவனார்

ப-ரை : உரையாய் - கூறுவாய், வாழி தோழி - தோழீ வாழ்வாயாக, இருங்கழி - கரிய கழியின்கண், இரை ஆர் - உணவு தின்ற, குருகின் - குருகுகளின், நிரை - வரிசையாக, பறைத் தொழுதி - பறக்கின்ற கூட்டம், வாங்கு மடல் - வளைந்த பனைமடலில், கட்டிய குடம்பை - கூடுகளில், தூங்கு இருள் - நிறைந்த இருட்பொழுது நெருங்கி உறையா நிற்கும், துவன்று - நிறைந்து, பெண்ணை - பனைமரங்கள், ஓங்கிய - உயர்ந்த, வெண்மணல் - வெள்ளிய மணலைச் சூழ்ந்த, படப்பை - கொல்லையில், கானல் - கடற்கரையில், ஆயமொடு - தோழிய ரொடு, காலை - காலை நேரத்தில், குற்ற - பறித்த, கள் கமழ் - தேன் மணம் வீசுகின்ற, அலர் - மலர், தண் - குளிர்ந்த, நறும் - நறுமணம் கூடிய, காவி - குவளை, அம் - அழகிய, பகை - ஒன்றுக்கொன்று மாறுபட்ட, நெறி - நெறிப்பை உடைய, தழை அணி - தழை முதலியவற்றால் அமைந்த ஆடை, பெற - அழகு பொருந்த, தைஇ - உடுத்து, வரிபுனை - கோலம் புனைந்த, சிற்றில் - சிறிய மனையில், பரிசிறந்தோடி - சிறப்ப விரைந்தோடி, புலவுத்திரை - புலவு நாற்றத்தை உடைய அலை, உதைத்த - மோதிய, கொடுந்தாள் - வளைந்த அடியை உடைய, கண்டல் - தாழை மரத்து, செவ்வேர் - சிவந்த பெரிய, ஈரளை - இரட்டை யாக நெருங்கிய, அலவன் - நண்டு, பார்க்கும் - பார்த்து, சிறு விளையாடலும், அழுங்க - கெடும்படியாக, நினக்கு - உனக்கு, பெரும் - பெரிய, துயரமாகிய - துன்பமாகிய, நோயே - நோயே தான்.

முடிபு : வாழி தோழி, சிறு விளையாடலும் அழுங்கி. நினைக்குறு பெருந்துயரம் ஆகிய நோயே.

கருத்து : தலைவி களவொழுக்கத்திலே பிரிந்துறையும் சமயம் ஆற்றாளாகித் துன்புறுவதையும், தலைவன் சிறைப் புறத்து வந்திருப்பதனையும் அறிந்த தோழி, தலைவியை நோக்கி, நீ ஓடிப் பார்க்கும் விளையாடலும் இல்லையாம்படி, நினக்குற்ற நோயை எனக்கு உரையாய் என்று கூறுகிறாள்.

அ-ள் : நெறி - அருள். தைஇ உடுத்து வரித்தல் - கோலம் இடுதல்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவுடன்படுத்தல்.

ஒப்புமைப்பகுதி

2. பறைத்தொழுதி
"பருவத் தேனசைஇப் பல்பறைத் தொழுதி"
(குறுந். 175:1) (நெடுநல். 15)

7. நெறித்தழை
"மணலாடு மலிர்நிறை விரும்பிய ஒண்டழை" (ஐங். 15)

9-10. நண்டினது கண்டல் ஈரளை
"பார்வலஞ்சிய பருவரல் ஈர்ஞெண்டு
கண்டல் வேரளைச் செலீஇயர்" (குறுந். 117:2-3)

# 124. நெய்தல்

## தோழி கூற்று

ஒன்றுஇல் காலை யன்றில் போலப்
புலம்புகொண்டு உறையும் புன்கண் வாழ்க்கை
யானும் ஆற்றேன் அது தானும்வந் தன்று
நீங்கல் வாழியர் ஐய ஈங்கை
5 முகைவீ அதிரல் மோட்டுமணல் எக்கர்
நௌவி நோன்குளம்பு அழுந்தென வெள்ளி
உருக்குறு கொள்கலங் கடுப்ப விருப்புறத்
தெண்ணீர்க் குமிழி இழிதருந்
தண்ணீர் தழைஇ நின்ற பொழுதே.

எ-து: பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைவற்கு உரைத்தது.

**மோசி கண்ணத்தனார்**

ப-ரை: ஒன்றில் காலை - ஒன்று பிரிந்த காலத்து, அன்றில் போல - மற்றொரு அன்றிற் பறவை பிரிவாற்றாது இறந்து ஒழிதற் போல, புலம்பு கொண்டுறையும் - தனிமையுற்று உறையும், புன்கண் - துன்ப, வாழ்க்கை - வாழ்வு, யானும் ஆற்றேன் - யானும் ஆற்றாமல் இறந்து படுவேன், அதற்குக் காரணம் என்னையோ எனின், ஈங்கை முகை - ஈங்கையின் அரும்பு, வீ - மலர், அதிரல் - காட்டுமல்லிகை, இவை உதிர்ந் திருக்கும், மோட்டு - உயர்ந்த, மணல் எக்கர் - மணலால் அமைந்த குன்றில், நௌவி - மான், நோன் குளம்பு - வலிய குளம்பினால், அழுந்தென - மிதிபட்டு அழுந்துகையினாலே,

வெள்ளி - வெள்ளியை, உருக்குறு - உருக்கிச் சாய்க்கும், கொளி கலம் கடுப்ப - உருக்கும் கலம் போல, விருப்புற - விருப்பமுறும் படி, தெண்ணீர் - தெளிந்த நீர், குமிழி - குமிழியாக, இழிதரும் - வடியும், தண்ணீர் - குளிர்ந்த நீர், தலைஇ - பெற்று நின்ற, பொழுதே - நின்ற கூதிர்ப் பருவம் ஆதலின், ஐய - ஐயனே, நீங்கல் - என்னை விட்டுப் பிரியேல், வாழிய - நெடுங்காலம் வாழ்க. அது தானும் வந்தின்று - அது தானும் வந்துவிட்டது.

முடிபு : நீங்கல், வாழியர் ஐய! ஒன்று இல் காலை, அன்றில் போலப் புலம்பு கொண்டு உறையும் புன்கண் வாழ்க்கை யானும் ஆற்றேன், பொழுது தானும் வந்தன்று.

கருத்து : தலைவனாலே பிரிவுணர்த்தப்பட்ட தோழி அவனை நோக்கி, ஐயனே! தலைவி தனியே இருப்பதை யான் ஆற்றகில்லேன் ஆயினும் தானே வந்தெய்தியதே யென்று வருந்துவள் ஆதலின் இனி நீ பிரியாது உறைவாயாக என்று கூறுவது.

அ.ன் : புலம்பு - தனிமை. நௌவி - மான். நோன்மை - வலிமை தலைஇ - பெற்று; அதிரல் - புனமல்லிகை.

மெய்ப்பாடு - அவலத்தைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - தலைவனைச் செலவழுங்குவித்தல்.

# 125. குறிஞ்சி

## தோழி கூற்று

இரைதேர் எண்கின் பகுவாய் ஏற்றை
கொடுவரிப் புற்றம் வாய்ப்ப வாங்கி
நல்அரா நடுங்க உரறிக் கொல்லன்
ஊதுலைக் குருகின் உள் உயிர்த்து அகழும்
5 நடுநாள் வருதல் அஞ்சும் யாமென
வரைந்துவரல் இரக்குவம் அயின் நம்மலை
நன்னாள் வதுவை கூடி நீடுஇன்று
நம்மொடு செல்வர் மன் தோழி மெல்ல
வேங்கைக் கண்ணியர் எருதெறி களமர்
10 நிலம்கண் டன்ன அகன்கண் பாசறை
மென்றினை நெடும்போர் புரிமார்
துஞ்சுகளிறு எடுப்பும்தம் பெருங்கல் நாட்டே.

எ-து: வரைவு நீட்டிப்ப, ஆற்றாளாய தலைவியைத் தோழி வற்புறுத்தியது.

பாடியவர் பெயர் தெரியவில்லை

ப-ரை: இரை தேர் - இரையை நாடுகின்ற எண்கின் பருவாய் - பிளந்த வாயை உடைய, ஏற்றை - ஆண் கரடியானது, கொடு வரி - வளைந்த வரிகளை உடைய, புற்றம் - புற்று, வாய்ப்ப - கிடைத்தலும், வாங்கி - பெயர்த்து, நல்வரா - நல்ல பாம்பு, நடுங்க - நடுங்குமாறு, உரறி - முழங்கி, கொல்லன் - இரும்பு செய் கொல்லன், ஊதுலை - ஊதுகின்ற உலை, குருகின் - துருத்தியின், உள் உயிர்த்து - உள்ளே பெருமூச் செறிந்து, அகழும் - பறிக்கா நிற்கும், நடுநாள் - இரவு நடுயாமத்தில், வருதல் - வருதலை, அஞ்சுதும் - அஞ்சுகின்றோம், யாமென - யாம் என்று கூறி, வரைந்து வரல் - இனி வரைந்தெய்தும்படி, இரக்குவம் ஆயின் - இரந்து கேட்போமாயின், நம் மலை - நமது மலையில், நன்னாள் - நல்ல நாளில், வதுவை கூடி - மணமகளை மணம் புரிந்து கொண்டு, நீடு இன்று - நீட்டித்தல் இல்லாமல், நம்மொடு - நம்முடன், செல்வர் மன் - செல்வார் காண், தோழி - தோழியே, மெல்ல - மெதுவாக, வேங்கைக் கண்ணியர் - வேங்கை மலர் மாலை சூடுகின்ற குறவர், எருது எறி - எருதை யோட்டி, களமர் - மருதநில மாந்தர், நிலங்கண்டன்ன - களம் செப்பம் செய்தாற் போன்ற, அகன் கண் - அகன்ற இடத்தை யுடைய, பாசறை - பசிய கற்பாறையில், மென் தினை - மெல்லிய தினையை, நெடும்போர் - நெடிய போராக, புரிமார் - விடும் பொருட்டு, துஞ்சு களிறு - தூங்குகின்ற ஆண் யானை, எடுப்பும் - எழுப்பா நிற்கும், தம் - தமது, பெருங் கல் நாட்டே - பெரிய மலை நாட்டகத்தே.

முடிபு: தோழி! நன்னாள் - வதுவை கூடி. நம்மொடு செல்வர் மன்.

கருத்து: தலைவன் வரையாது, இரவுக்குறி வந்து ஒழுகு வதனை அறிந்த தலைவி வருந்துதலும், அது கண்ட தோழி, நீ வருந்தாதே. இரவில் வருவதை அஞ்சிய எம்மை வரைந்து கொள்ளுவீர் என்று கூறினால் நீட்டியாமல் மணந்து நம்மை உடன் கொண்டு தமது நாடெய்துவரெனக் கூறுகிறாள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

3. நல்லரா

"நல்லராக் கதுவி யாங்கென்" (குறுந். 43:4)

# 126. பாலை

## தலைவன் கூற்று

பைங்காய் நல்இடம் ஒரீஇய செங்காய்க்
கருங்களி ஈந்தின் வெண்புறக் களரி
இடுநீ றாடிய கடுநடை ஒருத்தல்
ஆள் பெறல் நசைஇ நாள்சுரம் விலங்கித்
5 துனைதரும் வம்பலர்க் காணாது அச்சினம்
பனைக்கான்று ஆறும் பாழ்நாட்டு அத்தம்
இறந்துசெய் பொருளும் இன்பந் தருமெனின்
இளமையின் சிறந்த வளமையு மில்லை
யிளமை கழிந்த பின்றை வளமை
10 காமந் தருதலுமின்றே யதனால்
நில்லாப் பொருட்பிணிச் சேறி
வல்லே நெஞ்சம் வாய்க்கநின் வினையே.

எ-து : பொருள் வலித்த நெஞ்சினைத் தலைவன் நெருங்கிச் செலவழுங்கியது.

பாடியவர் பெயர் தெரியவில்லை

ப-ரை : பைங்காய் - பசுமையான காய், நல்லிடம் - நல்ல மேலிடம், ஒரீஇய - நிறம் மாறி, செங்காய் - செங்காயாகி, கருங்களி - கருங்களியாய், ஈந்தின் - ஈத்த மரங்களின், வெண் புறம் - வெளிய புறத்தினை உடைய, களரி - உப்பு பூத்த பாழ் நிலம், இடுநீறு ஆடிய - இட்ட புழுதி படிந்த, கடு நடை - கடிய நடையை உடைய, ஒருத்தல் - களிற்றியானை, ஆள் பெறல் - நெறியிலே செல்லுபவர், நசைஇ - விரும்பி, நாள் சுரம் - விடியற் காலத்தில் சுரத்தின் கண், விலங்கி - குறுக்கிட்டுச் சென்று, துனை தரும் - விரைவில் வரும், வம்பலர் வழிப் போவார், காணாது - பார்க்காது, அச்சினம் - அந்தக் கோபம், பனைக் கான்று - பனை மரத்தில் மோதி, ஆறும் - அடங்குகின்ற, பாழ் நாட்டு - பாழ்த்த நாட்டினை உடைய, அத்தம் - பாலை நிலம், இறந்து - சென்று,

செய் பொருளும் - ஈட்டப்படும் பொருளும், இன்பம் தரும் எனின் - இன்பத்தைத் தரும் எனில், இளமையில் - இளமையில், நுகரும் சிறந்த வளமையும் இல்லை - காம இன்பத்தைக் காட்டிலும் சிறந்த இன்பமாமோ, இளமை கழிந்த பின்றை - இளமை கடந்த பின்னர், வளமை - பொருள் வளம், காமந் தருதலும் - காம இன்பத்தைத் தருதலும், இன்றே - இல்லை, அதனால் - ஆதலால், நில்லா - நிலையாத, பொருட் பிணி - பொருள் சேர்த்தல் என்ற ஆசையால், சேறி - போகின்றாய், வல்லே - விரைவாக, நெஞ்சே - நெஞ்சமே, வாய்க்க - வாய்ப்பு உடைத்து ஆவதாக, நின் வினையே - உனது செயலே.

முடிபு : இளமையிற் சிறந்த வளமையுமில்லை, இளமை கழிந்த பின்றை வளமை காமந் தருதலுமின்றே.

கருத்து : பொருள் சேர்த்தற் பொருட்டு பிரியக் கருதிய நெஞ்சிற்குத் தலைவன், இளமையின் அருமையையும். பொருள் சேர்த்தலைப் பிணியென்றும் கூறுகிறான்.

அ-ள் : களரி – உப்பு பூத்த பாழ்நிலம். நீறு - புழுதி. வல் - விரைவு.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - இல்லத்து அழுங்கல்.

இதன்கண் நாளது சின்மையும் இளமையது அருமையும் அன்பினது அகலமும் அகற்சியது அருமையும் அமைத்திருக்கும் அழகினைச் சுவைத்திடுக.

ஒப்புமைப்பகுதி

7-10. இளமை பாராது பொருளுக்குப் பிரிதல்

"இளமை பாரார் வளநசைச் சென்றோர்" (குறுந். 126:1)

"வளமையானாகும் பொருளிது என்பாய்
இளமையும் காமமும் நின்பாணி நில்லா" (கலி. 12:11-2)

"இளமையுந் தருவதோ இறந்த பின்னே" (கலி. 15:26)

11. நில்லாப் பொருட்பிணி

"நிலையாப் பொருட்பிணி பிரிந்திசி னோரே" (குறுந். 350)
(கலி. 8:11, 14:1) (அகநா. 79:17

# 127. நெய்தல்

## தோழி கூற்று

இருங்கழி துழைஇய ஈர்ம்புற நாரை
இறகெறி திவலையிற் பனிக்கும் பாக்கத்து
உவன்வரி னெவனோ பாண பேதை
கொழுமீன் ஆர்கைச் செழுநகர் நிறைந்த
5 கல்லாக் கதவர் தன்ஐயர் ஆகவும்
வண்டல் ஆயமொடு பண்டுதான் ஆடிய
ஈனாப் பாவை தலையிட்டு ஓரும்
மெல்லம் புலம்பன் அன்றியுஞ்
செல்வா மென்னுங் கான லானே.

எ-து : பாணற்குத் தோழி வாயின் மறுத்தது.

**சீத்தலைச் சாத்தனார்**

ப-ரை : இருங்கழி - கரிய கழியிலே, துழைஇய - துழாவிய, ஈர்ம் புற நாரை - ஈரிய புறத்தை உடைய நாரை, இறகெறி - சிறகை உதறுகின்ற, திவலையின் - திவலையாலே, பனிக்கும் - நடுங்கும், பாக்கத்து - (நமது) பாக்கத்து, உவன் வரின் - முன் நிற்பவன் வருதலால், எவனோ - என்ன பயனோ, பாண - பாணனே, பேதை - பேதையானவள், கொழு மீன் - கொழுவிய மீனை, ஆர் கை - உண்ணுதலை உடைய, செழுநகர் நிறைந்த - செழுமையுற்ற மாளிகையில் நிறைந்த, கல்லா - கல்லாத, கதவர் - சினம் உடையவராய் இருப்பவர், தன் ஐயர் ஆகவும் - தனது தமையன்மாராகவும், வண்டல் - விளையாடும், ஆயம் - தோழியர் கூட்டத்தொடு, பண்டு தான் ஆடிய - முன்னர் தான் விளையாடிய, ஈனாப் பாவை - தான் பெறாது கோரையாலே செய்து வைத்துத் தன் மகவென முறைமை பாராட்டும் பாவை, தலையிட்டு ஓரும் - தலைக்கு ஈடாகக் கொண்டு, மெல்லம் புலம்பன் - மெல்லிய கடற்கரைச் சேர்ப்பன், அன்றியும் - அல்லாமலும், செல்வாம் என்னும் - செல்வோமாக என்று, கானலானே - கடற்கரைச் சோலையின் கண்.

முடிபு : ஈனாப் பாவை தலையிட்டோரு மெல்லம் புலம்பனன்றியுஞ் செல்வாமென்னுங் கானலானே பாக்கத்து அவன் வரின் எவனோ, பாண!

கருத்து: தலைவனாலே தூதாக விடுக்கப்பட்ட பாணன், தலைவியின் ஊடலைத் தணிக்க வந்ததறிந்த தோழி, அவனை நோக்கி எங்கள் தலைவி அவனை அல்லாமலே தன் பாவையை வைத்து விளையாடுதற்குக் கழிக்கரைச் சோலைக்குச் செல்வோம் என்கிறாள். ஆதலால் இனி அவன் வந்து யாது பயன் என்கிறாள்.

அ-ள்: வண்டல் - வண்டல் மணலால் சிற்றில் இழைத்துச் சிறு சோறு அட்டு மகளிர் விளையாடும் ஒருவகை விளையாட்டு. ஈனாப்பாவை - தான் பெறாது கோரையால் செய்து வைத்துத் தன் மகவெனப் பாராட்டும் பாவை.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - வாயில் மறுத்தல்.

# 128. குறிஞ்சி

தோழி கூற்று, தலைவி கூற்று

பகலெரி சுடரின் மேனி சாயவும்
பாம்பூர் மதியின் நுதலொளி கரப்பவும்
எனக்குநீ உரையா யாயினை நினக்கியான்
உயிர்பகுத்து அன்ன மாண்பினேன் ஆகலின்
5 அதுகண் டிசினால் யானே யென்றுநனி
அழுதல் ஆன்றிசின் ஆயிழை ஒலிகுரல்
ஏனல் காவலின் இடையுற்று ஒருவன்
கண்ணியன் கழலன் தாரன் தண்ணெனச்
சிறுபுறங் கவையினன் ஆக அதற்கொண்டு
10 அஃதே நினைந்த நெஞ்சமொடு
இஃது ஆகின்றியா னுற்ற நோயே.

எ-து: குறை நேர்ந்த தோழி தலைவி குறை நயப்பக் கூறியது. தோழிக்குத் தலைவி அறத்தொடு நின்றதூஉம் ஆம்.

நற்சேந்தனார்

ப-ரை: பகலெரி - பகற் பொழுதில் எரிகின்ற, சுடரின் - விளக்கின் ஒளி மழுங்கிக் காட்டுதல் போல, மேனி - நின் மேனி, சாயவும் - வாடவும், பாம்பூர் - இராகுவினாலே கவர்ந்து கொள்ளப்பட்ட, மதியின் - சந்திரனின், ஒளி - கிரணம், கரப்பவும்

- மறைதல் போல், எனக்கு நீ - நீ எனக்கு, உரையாயாயினை - உரைத்தாய் அல்லை, நினக்கு யான் - நான் உனக்கு, உயிர் பகுத்தன்ன - ஒருயிரை இரண்டுடம்பின் கண்ணே பகுத்து வைத்தாற் போன்ற மாண்பினேன் - மாட்சிமை உடையவன் ஆனேன், ஆகலின், ஆதலால், அது கண்டிசினால் - மறைத் தொழுகும் அதனை - அறிந்தேன், யானே - நானே, என்று - என்று கூறு, நனி அழுது - மிக அழுது, ஆன்றிசின் - இனி அழாது அமைவாயாக, ஆயிழை - ஆயிழையாய்! ஒலிகுரல் - தலைசாய்ந்த கதிரை உடைய, ஏனல் - தினைப் புனத்தே, காவலினிடை - காவல் செய்யுமிடத்து, உற்று ஒருவன் - ஒருவன் வந்துற்று, கண்ணியன் - கண்ணி சூடியவன், கழலன் - கழல் அணிந்தவன், தாரன் - மாலை அணிந்தவன், தண்ணென - குளுமையாக, சிறுபுறம் - முதுகு, கவையினனாக - அணைத்தனனாக, அதற் கொண்டு - அது முதற்கொண்டு, அஃதே நினைந்த - அதனையே கருதிய, நெஞ்சமொடு - உள்ளத்தோடு, இஃது ஆகின்று - இத் தன்மையதால் இரா நின்றது, யான் உற்ற நோயே - எனக்கு வந்துள்ள நோயே இஃது காண்.

முடிபு : ஆயிழை எனக்கு நீ உரையாயாயினை நினக்கியான் உயிர் பகுத்தன்ன மாண்பினேன். ஏனல் காவலிடையுற்று ஒருவன் சிறுபுறங்கவையினன். அஃதே நினைந்த நெஞ்சமொடு இஃதேகின்று யானுற்ற நோயே.

கருத்து : தலைவனது குறைதீர்க்க உடன்பட்ட தோழி தலைவியை நோக்கி, நீ எனக்கு உரைக்கவில்லை, ஆனால் நான் அறிவேன் என்று கூற என் மீது தவறேற்றி வருந்தாதே, தினைப் புனத்தில் ஒருவன் என் முதுகை அணைத்துக் கொண்டனன்' அதையே நினைந்து எனக்கு இந்நோய் வந்ததென தலைவி உரைக்கிறாள்.

அ-ள் : சாய்தல் - குறைதல்; இசின் - தன்மைக் கண் வந்தது. ஒலிதல் - தழைதல். குரல் - கதிர். சிறுபுறம் - முதுகு.

மெய்ப்பாடு : பெருமிதம்.

பயன் : குறை நயப்பித்தல்; அல்லது அறத்தொடு நிற்றலாம்.

ஒப்புமைப்பகுதி

1. பகல் ஏற்றிய விளக்கு (ஐங். 57)
"பகலிற் தோன்றும் பலகதிர்த் தீயின்"

3-4. தோழிக்கும் தலைவிக்குமுள்ள ஒற்றுமை.

"தலைப்புணைக் கொளினே தலைப் புணைக் கொள்ளும்
கடைப்புணைக் கொளினே கடைப் புணைக் கொள்ளும்"
(குறுந். 222)

# 129. குறிஞ்சி

## தோழி கூற்று

பெருநகை கேளாய் தோழி காதலர்
ஒருநாள் கழியினும் உயிர்வேறு படூஉம்
பொம்மல் ஓதி நம்மிவண் ஒழியச்
செல்ப வென்ப தாமே சென்று
5 தம்வினை முற்றி வரூஉம்வரை நம்மனை
வாழ்துமென்ப நாமே அதன்றலைக்
கேழ்கிளர் உத்தி அரவுத்தலை பனிப்பப்
படுமழை உருமி உரற்றுகுரல்
நடுநாள் யாமத்தும் தமியம் கேட்டே.

எ-து : பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகளை முகம் புக்கது.

**ஔவையார்**

ப-ரை : பெரு நகை - பெரிதும் நகைக்க வல்லது ஒரு நிகழ்ச்சியை, கேளாய் - கேட்பாயாக, தோழி - தோழியே! காதலர் - நின் தலைவர், ஒருநாள் - ஒரு நாள், கழியினும் - நின்னைப் பிரிந்து கழிந்திடினும், உயிர் வேறு படூஉம் - உயிரின் தன்மை வேறுபடுகின்ற, பொம்மல் - பொலிவுற்ற, ஓதி - கூந்தலை உடையாய், நம் இவண் - நம்மை இங்கு, ஒழியச் செல்ப - நீங்குமாறு கைவிட்டுச் செல்லக் கருதியுள்ளார், என்பதாமே - என்று உழையர் கூறுவர். சென்று தம் வினை முற்றி வரூஉம் வரை - சென்று தனது வினை முடித்து வரும்வரை, நம் மனை வாழ்து மென்ப - நமது இல்லத்திலே உயிர் வாழ்ந்திருக்கக் கடவேமென்றும் கூறுவர். நாமே அதன் தலை - நாம் அதற்கு மேலும், கேழ்கிளர் உத்தி - நிறம் விளங்கிய படப்பொறியை உடைய, அரவுத் தலை - பாம்பினது தலை, பனிப்ப - நடுங்கும்படி, படுமழை - பெய்கின்ற மழையிடையிட்ட,

உருமின் உரற்று குரல் - இடியினது முழங்குகின்ற முழக்கத்தை, நடுநாள் யாமத்தும் - இரவு நடு யாமத்து, தமியம் கேட்டே - தனியாயிருந்து கேட்டும், உயிர் வாழக்கடவேம் என்பர். இஃதொரு நகையன்றோ.

முடிபு : காதலர் தாமே சென்று தம் வினை முற்றி வரும் வரை நம்மனை வாழ்தும் என்ப தோழி!

கருத்து : தலைவனைப் பிரிந்து தலைவி வாழ்வாள் என்பது பெரிதும் நகைத்தற்குரிய செயலாயிற்று என்று தோழி கூறுகிறாள்.

அ-ள் : பொம்மல் - பொலிவு. உத்தி - படப்பொறி. உரற்றுதல் - முழக்குதல்,

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைமகளைத் தன்முகமாக்கல்.

ஒப்புமைப்பகுதி

1-2. பிரிதலைக் காட்டிலும் உயிர்செல்லுதல் நலம்.

"பிரிவு அரிதாகிய தண்டாக் காமமொடு
உடனுயிர் போகுக தில்ல" (குறுந். 57,) (ஐங். 11:3-4)
(கலி. 2:13, 3:6, 4:24, 5:18-9, 10:2121:12-3)
(அகநா. 305:8, 339:11-4)

1-2. "பிரிந்தும் வாழ்துமோ நாமே" (குறுந். 111, 32:6, 57:34)
(கலித். 2:13) (அகநா. 3:9, 11-4)

7-8. பாம்புபட இடிக்கும் உருமு

"நெடுவரை மருங்கிற் பாம்புபட இடிக்கும்
கடுவிசை உருமின்" (குறுந். 158:1-2)
"உருமுச் சிவந்து எறிந்த உரனழி பாம்பின்" (அகநா. 92:11)
"பாம்பின் பைடஇடிக்கும் கடுங்குரல் ஏற்றொடு"
"இடியேறுண் டநாகம் போல" (பெருங். 10:112)
(குறுந். 190:4-5, 268:3-4, 391:3-4)

# 130. நெய்தல்

## தலைவி கூற்று

வடுஇன்று நிறைந்த மான்தேர்த் தெண்கண்
மடிவாய்த் தண்ணுமை நடுவண் ஆர்ப்பக்
கோலின் எறிந்து காலைத் தோன்றிய
செங்நீர்ப் பொதுவினைச் செம்மல் மூதூர்த்
5 தமதுசெய் வாழ்க்கையி னினியது உண்டோ
எனைவிருப் புடையராயினு நினைவிலர்
நேர்ந்த நெஞ்சும் நெகிழ்ந்த தோளும்
வாடிய வரியு நோக்கி நீடாது
எவென் செய் தனளிப் பேரஞ ருறுவி என்று
10 ஒருநாள் கூறின்றும் இலரே விரிநீர்
வையக வரையளவு இறந்த
எவ்வ நோய்பிறிது உயவுத்துணை இன்றே.

எ-து: பிரிவிடை மெலிந்த தலைவி வன்பொறை எதிரழிந்து சொல்லியது.

### நெய்தலத்தனார்

ப-ரை: வடுவின்று - குற்றமின்றி, நிறைந்த - எல்லா இலக்கணமும் நிறைந்த, மான் தேர் - குதிரைகள் பூட்டிய தேர், தெண் கண் - தெளிந்த ஓசையை உடைய இடமகன்ற, மடிவாய்த் தண்ணுமை - தோலை மடித்துப் போர்த்த மத்தளம், நகுவண் ஆர்ப்ப - இடையில் ஒலிப்ப, கோலின் எறிந்து - கோலால் எறிந்து, காலைத் தோன்றிய - விடியற்காலையிலே தோன்றிய, செந்நீர் - செம்மையாகிய நீர்மையையும், பொது வினை - பொதுவாகிய செயலையும், செம்மல் - (உடைய) தலைவன், மூதூர் - பழமையான ஊர், தமது செய் - தமதாகச் செய்யப்படுகின்ற, வாழ்க்கையின் - வாழ்க்கையைக் காட்டிலும், இனியது உண்டோ - இனிமையானது ஒன்று உண்டோ, எனை விருப்புடையராயினும் - எவ்வளவு விருப்பம் உடையவராய் இருந்தார் எனினும், நினைவிலர் - நினைவில்லாதவர் ஆயினர், நேர்ந்த நெஞ்சும் - (அவருக்கு) உடன்பட்ட (என்) நெஞ்சும், நெகிழ்ந்த தோளும் - நெகிழ்ச்சியுற்ற தோளும், வாடிய வரியும் - வாடிய (எனது) நிறமும், நோக்கி - பார்த்து, நீடாது - தாமதியாது, எவன் செய்தனள் - என்ன காரியம செய்து கொண்டனளோ, இப் பேர்

அஞர் - இப் பெரிய துன்பம், உறுவி - உற்றவள், என்றொரு நாள் - என்று ஒரு நாளேனும், கூறின்றுமிலரே - கூறினாரிலர், விரிநீர் - விரிந்த கடல் நீர் சூழ்ந்த, வையக - நிலம், வரையளவு - எல்லை அளவு, இறந்த - கடந்த, எவ்வ நோய் - வருத்தத்தைத் தருகின்ற காமநோய், பிறிது உயவுத் துணை இன்றே - உற்ற துணை வேறுயாதுமில்லை. எவ்வாறு உய்வேன்?

முடிபு : செம்மல், எனை விருப்புடையராயினும், நினைவிலர், பிறிதுயவுத் துணையின்றே.

கருத்து : தலைமகன் பிரிவினால் மெலிவடைந்த தலைமகள்ப் தன்னைத் தெளிவிக்கும் தோழியை நோக்கி, அவர் என்னை பிரிந்ததோடு மட்டும் அல்லாமல் நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்று கேட்டு அறிந்தாரில்லை. எனக்குப் பிறிதொரு உற்ற துணையும் இல்லை என்று கூறி வருந்துகிறாள்.

அ-ள் : வரி - நிறம். அஞர் - துன்பம். தண்ணுமை - எழுச்சிக் குரிய வாக்கியம்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயா உயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

2. "மடிவாய்த் தண்ணுமை"
"மடிவாய்த் தண்ணுமை இழிசனன் குரலே"
(புறநா. 289. 10.)
"மடிவாய்த் தண்ணுமை நடுவட் சிலைப்ப"
(பெரும்பாண். 144)

7. தோள் நெகிழ்தல்
"நெகிழ நெகிழ்ந்தன்று தடமென் றோளே" (குறுந். 77. 6.)

## 131. நெய்தல்

### தோழி கூற்று

ஆடியதொழிலும் அல்கிய பொழிலும்
உள்ளலாகா உயவு நெஞ்சமொடு
ஊடலும் உடையமோ உயர்மணற் சேர்ப்ப
திரைமுதிர் அரைய தடந்தாள் தாழைச்
5 சுறவு மருப்பு அன்ன முள்தோடு ஒசிய

இறவு ஆரினக்குருகு இறைகொள இருக்கும்
நறவுமகிழ் இருக்கை நற்றேர்ப் பெரியன்
கள்கமழ் பொறையாறு அன்ன என்
நற்றோள் நெகிழ மறத்தல் நுமக்கே.

எ-து : மணமனையிற் பிற்றை ஞான்று புக்க தோழியைத் தலைவன் வேறுபடாமை ஆற்றுவித்தாய் பெரியை காணென் றாற்குத் தோழி சொல்லியது.

## உலோச்சனார்

ப-ரை : ஆடிய தொழிலும் - விளையாட்டு அயர்தற்குத் தொழிலையும், அல்கிய பொழிலும் - தங்கியிருப்பதற்குச் சோலையையும், உள்ளல் ஆகா - நினைக்கலாகாத, உயவு நெஞ்சமொடு - வருந்துகின்ற நெஞ்சினையும், ஊடலும் - ஊடு தலையும், உடையமோ - உடையேமோ, உயர்மணற் சேர்ப்ப - உயர்ந்த மணற் பரப்பினை உடைய நெய்தல் நிலத் தலைவனே!, திரை முதிர் - திரைத்தல் முதிர்ந்த, அரைய தடந்தாட் தாழை - அரையை உடைய, வளைந்த அடிமரத்தை உடைய தாழையினது, சுறவு மருப்பு அன்ன - சுறா மீனின் கொம்பு போன்ற, முட் தோடு ஒசிய - முள்ளை உடைய இலை முறிந்து சாயும்படி, இறவு ஆர் இன - இறாமீனை இரையாகத் தின்கின்ற நாரையின் இனம், குருகு இறை கொள இருக்கும் - நாரை தங்குதல் கொள வீற்றிருக் கும், நறவு மகிழ் இருக்கை - கள்ளுண்டலால் மகிழ்ந்திருத்தலை உடைய, நற்றேர்ப் பெரியன் - நல்ல தேரை உடைய பெரியன் என்பானது, கட்கமழ் - கள்ளின் மணம் கமழும், பொறையாறு அன்ன - பொறையாறு என்னும் ஊர் போன்ற, என்னற்றோள் நெகிழ - எனது நல்ல தோள்கள் நெகிழும்படி, மறத்தல் நுமக்கே- நீர் மறந்திருப்பீரோ இல்லையே என்றபடி.

முடிபு : உயர் மணற் சேர்ப்ப! உள்ளலாகா உயவு நெஞ்ச மொடு ஊடலு முடையமோ, என் நற்றோள் நெகிழ மறத்தல் நுமக்கே.

கருத்து : தலைவன் தலைவியை மணம் புரிந்துகொண்ட மறுநாள், தோழியை நோக்கி இன்றளவும் தலைவியை நீதான் வருந்தி வேறுபடாமல் நன்கு பாதுகாத்தனை என்றதற்குப் பதிலாக என்னைப் புகழ்வதினால் ஆவதொன்றும் இல்லை. எங்களைக் கருதியிருந்த நீதான் பெரியவன் எனப் புகழ்ந்து கூறுகிறாள்.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - மகிழ்தல்.

ஒப்புமைப்பகுதி

9. தோள் நெகிழ்தல்

"நெகிழ நெகிழ்ந்தன்று தடமென்றோளே"

(குறுந். 87 - 5, 77:6)

# 132. நெய்தல்

## தோழி கூற்று

பேரூர் துஞ்சும் யாரும் இல்லைத்
திருந்துவாய்ச் சுறவ நீர்கான்று ஒய்யெனப்
பெருந்தெரு உதிர்தரு பெயலுறு தண்வளி
போர்அமை கதவப் புரைதொறுந் தூவக்
5 கூரெயிற்று எகினம் நடுங்கும் நன்னகர்ப்
பயில்பட நிவந்த பல்பூஞ் சேக்கை
அயலு மாண்சிறை யதுவே அதன்றலைக்
காப்புடை வாயில் போற்றோ என்னும்
யாமம் கொள்பவர் நெடுநா வொண்மணி
10 ஒன்றுஎறி பாணியின் இரட்டும்
இன்று கொல் அளியேன் பொன்றும்நாளே.

எ-து : காப்பு மிகுதிக் கண்ஆற்றாளாகிய தலைவிக்குத் தோழி சொல்லியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை.

ப-ரை : பேரூர் - பெரிய ஊரினர், துஞ்சும் - துயின்று கொண்டிருப்பர், யாரும் இல்லை - விழித்திருப்பார் யாருமிலர், திருந்துவாய் - திருந்திய வாயை உடைய, சுறவ - சுறாமீன், நீர் கான்று - நீரைக் கக்குதலாய் அந்நீர், ஒய்யென - விரைவாக, பெருந் தெரு - பெரிய தெருவிலே, உதிர்தரு - உதிர்கின்ற, பெயலுறு - மழையாக, மழையோடு பொருந்திய, தண்வளி - குளிர்ந்த காற்று, போரமை கதவ - தம்முள் ஒன்றோடு ஒன்று பொருந்துதல் அமைந்துள்ள வாயிற் கதவு, புரைதொறும் - துளைகள் தோறும், தூவ - தூவா நிற்ப, கூர் எயிற்று - கூரிய பற்களை உடைய, எகினம் - நாய், நடுங்கும் - நடுங்குகின்ற, நன்னகர் - நல்ல மாளிகை, பயில் பட - துயிலுமாறு, நிவந்த -

உயர்ந்த, பல்பூஞ் சேக்கை - பலவாய மலர்களால் அமைந்த படுக்கையின், அயலும் - பக்கத்திலும், மாண்சிறை அதுவே - மாட்சிமைப்பட்ட சிறைப்படுத்தியதாக அதுதான், அதன் தலை - அதன் மேலும், காப்புடை வாயில் - காவலை உடைய வாயிலையும், போற்று - பாதுகாத்துக் கொள்ளுக, ஓ என்னும் - ஓ என்று கூறா நின்ற, யாமங்கொள்பவர் - யாமந்தோறும் ஊர்காப்பவர், நெடு நா ஒண்மணி - நீண்ட நா அமைந்த ஒள்ளிய மணி, ஒன்று எறி பாணியின் - ஒன்றுகின்ற தாளத்தில், இரட்டும் - மோதி எழுப்பி இரட்டிக்கின்ற ஒலி போல, இன்று கொல் - இன்று தானோ, அளியேன் - இரங்கத் தகுந்த யான், பொன்றும்நாளே - இறந்தொழியும் நாளே.

முடிபு : பேரூர் துஞ்சும்; யாரும் இல்லை: இன்று கொல் அளியேன் பொன்றும் நாளே.

கருத்து : இல்லிலே சிறை வைக்கப்பட்ட தலைவி காவல் மிகுதியால் தலைவனை அடைய முடியாதது கண்ட தோழி தலைவி கூறியது போலக் கூறுவாளாய்த் தலைவியை நோக்கி, ஊரும் துயிலா நின்றது, யாருமில்லை. இக் காலத்து அவரை அடையப் பெறாதபடி யான் இறக்கும் நாள் இன்றுதானோ என அழுங்கிக் கூறா நிற்பது.

அ-ள் : எகினம் - நாய். நகர் - வீடு. பாணி - தாளம்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - ஆற்றாது உரைத்தல்.

ஒப்புமைப்பகுதி

9. "நெடுநா வொண்மணி நிழத்திய நடுநா" (முல்லை. 50)

# 133. குறிஞ்சி

## தலைவி கூற்று

தோளே தொடிகொட்பு ஆனா கண்ணே
வாளீர் வடியின் வடிவுஇழந் தனவே
நுதலும் பசலை பாயின்று திதலைச்
சில்பொறி அணிந்த பல்காழ் அல்குல்
5 மணியேர் ஐம்பால் மாயோட்கு என்று
வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை தூற்ற

நாமுறு துயரஞ் செய்யலர் என்னும்
காமுறு தோழி காதலம் கிளவி
இரும்புசெய் கொல்லன் வெவ்வுலைத் தெளித்த
10 தோய்மடற் சில்நீர் போல
நோய்மலி நெஞ்சிற்கு ஏமமாம் சிறிதே.

எ-து : வரைவிடை வைத்துப் பிரிவாற்றாளாய தலைவி வற்புறுத்தும் தோழிக்குச் சொல்லியது.

நற்றமனார்

ப-ரை : தோளே - தோள்கள் தாம், தொடி கொட்பு ஆனா - அணியப் பெற்ற வளை சுழன்று கழலுதலை நீங்கா. கண்ணே - கண்கள்தாம், வாள்ஈர் வடியின் - வாளாற் பிளந்த மாவடு போன்ற, வடிவு இழந்தனவே - வடிவை இழந்தன, நுதலும் - நெற்றியும், பசலை பாயின்று - பசலை பரவியது, திதலை - தித்தியின், சில்பொறி - சில புள்ளிகள் அமைந்த, அணிந்த - அணியப்பெற்ற, பல் காழ் அல்குல் - பலவாய வடங்களை உடைய காஞ்சி அணிந்த அல்குலையும், மணி ஏர் - நீலமணி போன்ற, ஐம்பால் - கூந்தலையும் உடைய, மாயோட்கு - மாமை நிறமுடையவளுக்கு, என்று, வெவ்வாய் - கொடிய வாயை உடைய, பெண்டிர் - ஏதிலாட்டியர், கௌவை தூற்ற - பழிச் சொல்லெடுத்து தூற்றா நிற்கும்படி, நாமுறு - அச்சம் மிகுந்த, துயரம் - துன்பம், செய்யலர் - செய்பவர் அல்லர், என்னும் - என்கின்ற, காமுறு தோழி - விருப்பம் மிக்க தோழி! காதலங் கிளவி - அன்பு மிகுந்த இச் சொல், இரும்பு செய் கொல்லன் - இரும்பு வேலை செய்கின்ற கொல்லன், வெவ்வுலைத் தெளித்த - தான் வெய்ய உலையிலே தெளித்த, தோய்மடல் சின்னீர் போல - பனை மடலாலே தோய்த்தலை உடைய சிலவாய நீர் அவ்வுலையைச் சிறிது அவிக்குமாறு போல, நோய் மலி நெஞ்சிற்கு - நோய் மிகுந்த உள்ளத்திற்கு, ஏமம் ஆம் சிறிதே - சிறிது தணித்துக் காவலாய் நிற்கின்றது.

முடிபு : காமுறு தோழி! வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை தூற்ற நாமுறு துயரஞ் செய்யலர் என்னும் காதலங் கிளவி நோய் மலி நெஞ்சிற்கு ஏமமாம் சிறிதே.

கருத்து : தலைவன் பிரிவினால் வருந்துகின்ற தலைவி, தன் தோழி ஆறுதல் கூறுகின்ற சொல், தன் நெஞ்சிற்குச் சிறிது தணிவாகவும், தனக்குப் பாதுகாவலாகவும் இருப்பதாகக் கூறுகிறாள்.

அ-ள் : கொட்பு - சுழற்சி. வடி - மாவடு. காழ் - காஞ்சி ஆபரணம். நாம் - அச்சம். ஏமம் - காவல்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

3-4. திதலை அல்குல்

"திதலை அல்குல் என்மாமைக் கவினே" (குறுந். 27:5,294:5)
(ஐங். 29:4, 72-2) (அகநா. 54-31, 183-2, 189-9)

2. கூர்ந்து பார்த்தார் கண் ஒளி இழத்தல்

"கண்ணே, நோக்கி நோக்கி வாள் இழந்தனவே"
(குறுந். 44:1-2)

"வெளிறுகண் போகப் பன்னாட் டிரங்கி" (புறநா. 177:2)

"வாளற்றுப் புற்கென்ற கண்ணும்" அவர் வரும் வழிபார்த்து என் கண்களும் ஒளியிழந்து புல்லிய ஆயின
(குறள். 1261, பரிமேல்)

"கண்ணும் வாளற்ற" (சீவக. 998) (மலைபடு. 369)

3. நுதல் பசத்தல்

"பசைஇப் பசந்தன்று நுதலே" (குறுந். 87:4, 48:5, 205:7)

1-3. கண், தோள், நுதல் பழைய அழகு கெடுதல்

"பூவொடு புரையுங் கண்ணும் வேயென
........................
நல்லமன் வாழி தோழி அல்கலும்" (குறுந். 226:1-4)

# 134. குறிஞ்சி

## தோழி கூற்று

இனிதின்இனிது தலைப்படுதும் என்பது
இதுகொல் வாழி தோழி காதலர்
வருகுறி செய்த வரையகச் சிறுதினைச்
செவ்வாய்ப் பாசினங் கடீஇயர் கொடிச்சி
5 அவ்வாய்த் தட்டையொடு அவணை ஆகஎன
ஏயள்மன் யாயும் நுந்தை வாழியர்
அம்மா மேனி நிரைதொடிக் குறுமகள்
செல்லா யோநின் முள்ளெயி றுண்கென
மெல்லிய இனிய கூறலின் யானஃது
10 ஒல்லேன் போல வுரையாடு வலே.

ஏ-து : இற்செறிப்பாரென ஆற்றாளாய தலைவியை அஃதிலரென்பது படத் தோழி சொல்லியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை: இனிதின் இனிது - இனிய ஒரு பொருளைக் காட்டிலும் இனியதானது, தலைப்படும் என்பது - வந்துறும் என்பது, இது கொல் - இதுதானோ; வாழி தோழி - தோழீ வாழ்வாயாக, காதலர் வருகுறி செய்த - காதலர் வருவதற்குக் குறி செய்த, வரையக - மலையிடத்துள்ள, சிறு தினை - சிறிய தினைப் புனத்தே, செவ்வாய் - சிவந்த வாயை உடைய, பாசினம் - பசுங் கிளியின் கூட்டத்தை, துடீ இயர் - ஓட்டும் பொருட்டு, கொடிச்சி - குறிஞ்சி நிலத்துப் பெண்ணே!, அவ்வாய் - அழகமைந்த, தட்டையொடு - மூங்கிற் (பிளாச்சைச் சிறிது பிளந்து அப் பிளப்பிலே சிறு கல்லை வைத்துச் சுழற்றி வீசும் கருவி) தட்டை என்கிற கருவியோடு, அவணை ஆக என - அத்தினைப் புனத்திற்குச் செல்வாயாக என்று, ஏயள்மன் யாயும் - தாயும் பல முறை மிகுதியாக ஏவினள், நுந்தை - உன் தந்தை, வாழியர் - வாழ்வாராக, அம் மா மேனி - அழகிய மாந்தளிர் போன்ற மேனியையும், நிரை தொடிக் குறுமகள் - நிரைத்த வளையையும் உடைய இளமடந்தாய்! செல்லாயோ - சென்றிலையோ, நின் முள்ளெயிறு - உனது முள்ளெயிற்றை, உண்கென - முத்தம் கொள்வல் என்று, மெல்லிய - மெல்லியவாகிய, இனிய கூறலின் - இனிய வார்த்தை கூறுதலினால், யான் அஃது - யான் இன்னும், ஒல்லேன் - செல்லமாட்டேன், போல உரையாடுவலே - போலச் சில வார்த்தை ஆடுவேன் ஆயினேன்.

முடிபு : வாழி தோழி, குறுமகள் செல்லாயோ, நின் முள்ளெயிறு உண்கென மெல்லிய இனிய கூறலின் யான் அஃது ஒல்லேன் போல உரையாடுவலே இனிதின் இனிது இது கொல்?

கருத்து : தலைவனது பிரிவு நீட்டித்தலால் பொறாத தலைவி இல்வயிற் செறிப்பார் போலும் என்று அஞ்சிய விடத்து, இதனையறிந்த தோழி, தலைவியிடத்து நினது தாயும் தந்தையும் தினைப் புனக் காவலுக்கு ஏகென ஏவின போது யான் உடன்படேன் போல் உரையாடினேன். ஆதலின் மீண்டு தினைப்புனங் காவலுக்கு நாம் போதலும் அமையும்; தலைவனைக் கூடுதலும் ஆகுமென்று அவளாற்றும் படிக்கூறா நிற்பது.

பாசு - கிளி.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

# 135. நெய்தல்

## தோழி கூற்று

தூங்கல் ஓலை ஓங்குமடற் பெண்ணை
மாஅரை புதைத்த மணன்மலி முன்றில்
வரையாத் தாரம் வருவிருந்து அயரும்
தண்குடி வாழ்நர் அங்குடிச் சீறூர்
5 இனிதுமன் றம்ம தானே பனிபடு
பல்சுரம் உழந்த நல்கூர் பரிய
முழங்குதிரைப் புதுமணல் அழுந்தக் கொட்கும்
வாலுளைப் பொலிந்த புரவித்
தேரோர் நம்மொடு நகாஅ ஊங்கே.

எ-து : வரைவு நீட்டிப்ப அலராமெனக் கவன்ற தோழி சிறைப்புறமாகச் சொல்லியது.

**கதப்பிள்ளையார்**

ப-ரை : தூங்கல் ஓலை - தொங்குகின்ற ஓலையையும், ஓங்கு மடல் - நீண்ட மடலையும் உடைய, பெண்ணை - பனையினது, மா அரை - கரிய அடிமரம், புதைத்த - புதைபடுமாறு, மணன் மலி - மணல் மிகுந்த, முன்றில் - முற்றத்தின்கண் இருந்து, வரையா - அளவு படாத, தாரம் - உணவுப் பண்டங்களை, வருவிருந்து - வருகின்ற விருந்தினர்க்கு, அயரும் - பகுத்துக் கொடா நிற்கும், தண்குடி - மெல்லிய குடி, வாழ்நர் - வாழ்க்கை உடையவர் வாழும், அம் குடி சீறூர் - அழகிய குடியிருப்பை உடைய சிறிய ஊர், இனிது - மிக இனிமையாயிருந்தது, மன்றம்ம - அம்ம!, தானே - அதுவே, பனி படு - குளிர்ச்சி பொருந்திய, பல்சுரம் - பலவாய கடத்தற்கரிய நிலத்து, உழந்த - வருந்திய, நல்கூர் - குறைந்த, பரிய - செலவினை உடைய, முழங்கு திரை - ஒலிக்கின்ற அலை மோதி, புது மணல் - கொழிப்பக் கிடந்த புதிய மணலிலே, அழுந்த - தேருருள் அழுந்த, கொட்கும் - செல்லமாட்டாது சுழலா நிற்கும், வால் உளை - வெள்ளிய பிடரி மயிர், பொலிந்த - பொலிவு பெற்ற, புரவித் தேரோர் - புரவி பூட்டிய தேரினை உடைய தலைவர், நம்மொடு - நம்முடன், நகாஅ - மகிழ்ந்து ஊடாடாத முன், ஊங்கே - உவ்விடத்தே வருத்தம் தந்தது.

முடிபு : வாலுளைப் பொலிந்த புரவித் தேரோர் நம்மொடு நகாஅலூங்கே. தண்குடி வாழ்நர் அங்குடிச் சீறூர் இனிது மன்றம்ம.

கருத்து : தலைவன் வரையாது நீட்டித்தலால் ஊரார் பழி தூற்றுவர் என்பதறிந்த தோழி, தலைவர் நம்மொடு நகைப்ப அவரது நகையை மெய்யெனக் கொண்டு கூடி இப்பொழுது அவர் அருகில் இன்மையாலே சீறூர் வருத்தம் உடையதாய்த் தோன்றா நின்றது. அவர் நகுவதன் மூலம் சீறூர் இனிமையுடையதாய் இருந்தது என்று கூறுகின்றாள்.

அ்-ள் : தாரம் - உணவுப் பொருள். சுரம் - கடத்தற்கரிய நிலம். ப்ரி - செலவு. கொட்குதல் - சுழலுதல். உளை - பிடரி மயிர். நகை - மகிழ்ந்து உடன்படல்.

மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - வரைவுடன்படுத்தல்.

ஒப்புமைப்பகுதி

1-2. பனைமடல் மணலால் மூடப்படுதல்

"பனைத் தலைக் கருக்குடை நெடுமடல் குருத்தொடு மாயக்
கடுவளி தொகுத்த நெடுவெண் குப்பை"
(குறுந். 372:1-3, 243:4-5, 281:1-2)

9. தலைவனொடு நகுதல்

"விரிநீர்ச் சேர்ப்பனொடு நகாஅ லூங்கே"
(குறுந். 226:7, 169:3, 320:5, 381:1, 394:7)
(மதுரை. 402) (மு. குறுந். 357)

# 136. குறிஞ்சி

## தலைவி கூற்று

திருந்துகோல் எல்வளை வேண்டியான் அழவும்
அரும்பிணி யுறுநர்க்கு வேட்டது கொடாது
மருந்தாய்ந்து கொடுத்த அறவோன் போல்
என்னை வாழிய பலவே பன்னிய
5 மலைகெழு நாடனொடு நம்மிடைச் சிறிய

தலைப்பிரிவு உண்மை அறிவான் போல
நீப்பநீங் காது வரின்வரை அமைந்து
தோள்பழி மறைக்கும் உதவிப்
போக்கில் பொலங்தொடி செறீஇ யோனே.

எ-து : சிறைப்புறமாகத் தலைவி தோழிக்கு உரைத்தது.

## நற்றங்கொற்றனார்

ப-ரை : திருந்துகோல் - திருந்திய கோல் தொழில் அமைந்த, எல் வளை - ஒளி பொருந்திய தோள் வளை, வேண்டி - விரும்பி, யான் - யான், அழவும் - அழவும், அரும்பிணி - தீர்த்தற்கு அரிய நோய், உறுநர்க்கு - அடைந்தவர்க்கு, வேட்டது - விரும்பியது, கொடாது - கொடுக்காது, மருந்து ஆய்ந்து - தகுந்த மருந்தை ஆராய்ந்து, கொடுத்த - கொடுத்த, அறவோன் போல - மருத்துவன் போல, என்னை - என் தந்தை, வாழிய - வாழ்வானாக, (ஏனெனில்) பலவே - பலராலும், பன்னிய - புகழப் படுகின்ற, மலைகெழு நாடனொடு - மலையை உடைய நாட்டை உடைய நமது காதலனோடு, நம்மிடை - நாமும் ஒருவரை ஒருவர் இடையிடை, சிறிய - சிறிதளவு, தலைப்பிரிவு - விட்டுப் பிரிகின்றதன், உண்மை அறிவான்போல - உண்மையை தானும் சிறிதளவு அறிகின்றவன்போல, நீப்ப நீங்காது - வேண்டாமென்று கழற்றினாலும் கழன்று நீங்காது, வரின் வரை அமைந்து - தன் எல்லை கடவாமல் தங்கி, தோள் பழி - தோளின் பழியை, மறைக்கும் - மறைக்கின்ற, உதவி - உதவியை உடைய, போக்கில் - கலப்பு இல்லாத, பொலந்தொடி - பொன்னாலாகிய தோள் வளை, செறீஇ யோனே - செய்து தந்து செறிக்கச் செய்தனன். என்னே அவன் பெற்றி.

முடிபு : என் ஐ, மலைகெழு நாடனொடு நம்மிடைச் சிறிய தலைப்பிரிவு உண்மை அறிவான் போல பொலந்தொடி செறீஇ யோனே.

கருத்து : தலைவனது பிரிவால் உடல் மெலிகின்ற தலைவியின் தந்தை பொன்னாலாகிய தோள்வளையைத் தகுதிபடச் செய்தணிந்தான் என்றவாறு.

மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - வரைவுடன்படுத்தல்.

# 137. பாலை

## தலைவன் கூற்று

தண்ணிய கமழும் தாழிருங் கூந்தல்
தடமென் பணைத்தோண் மடநல் லோள்வயின்
பிரியச் சூழ்ந்தனை ஆயின் அரியது ஒன்று
எய்தினை வாழிய நெஞ்சே செவ்வரை
5 அருவி ஆன்ற நீரில் நீளிடைக்
கயந்தலை மடப்பிடி யுயங்குபசி களைஇயர்
பெருங்களிறு தொலைத்த முடத்தாள் ஓமை
அருஞ்சுரஞ் செல்வோர்க்கு அலகுநிழல் ஆகும்
குன்ற வைப்பின் கானஞ்
10 சென்றுசேண் அகறல் வல்லிய நீயே.

எ-து : தலைவன் செலவழுங்கியது.

பெருங்கண்ணனார்

ப-ரை : தண்ணிய - மெல்லிய, கமழும் - கமழ்கின்ற, தாழிரும் - தாழ்ந்த கரிய, கூந்தல் - கூந்தலையும், தடமென் - அகன்ற மென்மையான, பணைத்தோள் - பருத்த தோளையும், மடநல்லோள் - மடப்பத்தையும் உடைய நல்லவளை, வயின் பிரிய - கைவிட்டுப் பிரிய, சூழ்ந்தனை ஆயின் - எண்ணா நின்றனை. அரியது ஒன்று - அடைதற்கு அரிய ஒன்றினை, நீ எய்தினை - அடைந்து விட்டனை, வாழிய நெஞ்சே - நெஞ்சமே! வாழ்வாயாக, செவ்வரை - செவ்விய மலையருவியின் கண்ணே, அருவி ஆன்ற - அருவியருகில் அமைந்த, நீரில் - நீரில்லாத, நீள் இடை - நீண்ட நெறியிடத்தில், கயந்தலை - மெல்லிய தலையை உடைய, மடப்பிடி - இளைய பிடி யானையின், உயங்கு பசி - வருந்திய பசியை, களை இயர் - நீக்கும் பொருட்டு, பெருங் களிறு - பெரிய களிற்றியானை, தொலைத்த - முறித்துத் தள்ளிய, முடத்தாள் - வளைந்த அடியை உடைய, ஓமை - ஓமை என்கிற மரம், அருஞ்சுரம் - செல்லுதற்கு அரிய சுரத்தின் கண்ணே, செல்வோர்க்கு - செல்கின்றவர்களுக்கு, அல்கு நிழல் ஆகும் - தங்குவதற்கு நிழலாகும், குன்ற வைப்பின் கானம் - குன்றங்களை இடையிடையே கொண்ட காட்டினுள் புகுந்து, சேண் அகறல் - நெடுந்தூரம் பிரிந்து செல்லுதல், வல்லிய நீயே - கருதிய நீயே வல்லியை. ஆனால் யான் வாரேன்.

முடிபு : வாழிய நெஞ்சே! மடநல்லோள் வயின் பிரியச் சூழ்ந்தனை ஆயின், அரியது ஒன்று எய்தினை, குன்ற வைப்பின் கானம் சென்று சேண் அகறல் வல்லிய நீயே.

கருத்து : பொருட்டுச் செல்லும் தலைமகன் தன் நெஞ்சை நோக்கிச் சுரத்திற் செல்லக் கருதிய நீ நமது காதலியைப் பிரிந்து விட எண்ணினை போலும்; அப்படியாயின் இவளைக் காட்டிலும் அரிய தொன்றனை அடைந்தனை என வருந்தி நெஞ்சை இகழ்ந்து கூறுகிறான்.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய எள்ளல் பற்றிய இளிவரல்.

பயன் - இல்லத்து அழுங்கல்.

ஒப்புமைப்பகுதி

1. கூந்தலின் நறுமணமும் தண்மையும்

"யானயந்து உறைவோள் தேம்பாய் கூந்தல்

........................

நன்னெறி யவ்வே நறுந்தண் ணியவே" (குறுந். 116:1-4)

கூந்தலின் இயற்கை மணம்

"செறியெயிற்று அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீ அறியும் பூவே" (குறுந். 2:4-5)

"கைவள்ளோரி கானந் தீண்டி
எறிவளி கமழும் நெறிபடு கூந்தல்" (குறுந். 199:3-4)

"நறுமென் கூந்தல்" (குறுந், 270:8)

"நாறிருங் கூந்தல்" (குறுந். 272:8)

"நறுங்கதுப்பு" (குறுந். 254:5)

"மணநா ஹும் கதுப்பினாய்" (கலி. 43:23)

"நாறிருங் கூந்தல்" (புறநா. 113:9)

6-7. பாலை நிலத்தில் யானை பிடியைப் பாதுகாத்தல்

"பிடிபசி களைஇய பெருங்கை வேழம்
மென்சினை யாஅம் பொளிக்கும்" (குறுந். 37:2-4)
(கலி.11:9) (மலைபடு. 307)

"புன்றலை மடப்பிடி உணீஇயர்
அங்குழை. நெடுநிலை யாஅமொற்றி நனைகவுட்
படி ஞிமிறு கடியும் களிறு" (அகநா. 59:7-18)

6-7. யானை ஓமைத் தோல் உண்ணல்

"கான யானை தோள் நயந்துண்ட
பொரிதாள் ஓமை வளிபொரு நெடுஞ்சினை"
(குறுந். 79:1-2)

# 138. நெய்தல்

## தோழி கூற்று

உவர்விளை உப்பின் குன்றுபோல் குப்பை
மலைஉய்த்துப் பகரும் நிலையா வாழ்க்கைக்
கணங்கொள் உமணர் உயங்குவயின் ஒழித்த
பண்அழி பழம்பார் வெண்குருகு ஈனும்
5 தண்ணம் துறைவன் முன்நாள் நம்மொடு
பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல்
பூவுடன் நெறிதரு தொடலை தைஇக்
கண்அறி வுடைமை அல்லது நுண்வினை
இழைஅணி அல்குல் விழவாடு மகளிர்
10 முழங்குதிரை இன்சீர் தூங்கும்
அழுங்கல் மூதூர் அறிந்தன்றோ இன்றே.

எ-து: *அலராயிற்றென ஆற்றாளாய தலைமகட்குத் தலைவன் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.*

### அம்மூவனார்

ப-ரை : உவர் விளை குன்றுபோல் உப்பின் குப்பை - உவர்ப்பு நிலத்தில் உண்டாகின்ற குன்றுபோலும் உப்பின் குவியலை, மலை உய்த்துப் பகரும் - மலை நாட்டகத்தேகொண்டு போய் விலை கூறி விற்கின்ற, நிலையா வாழ்க்கை - ஓரிடத்திலும் நிலைத்து வாழாத வாழ்க்கையினை உடைய, கணம்கொள் உமணர் - கூட்டங்கொண்ட உப்பு வாணிகர், உயங்கு வயின் ஒழித்த - பாரம் தாங்காமையால் வண்டி முறிய அதனை அங்கேயே இட்டுச் சென்ற இடத்திலே, பண் அழி பழம் பார் - இயல்பு கெட்ட பழையதாகிய வண்டியின் பாரின் கண், வெண் குருகு ஈனும் - வெளிய நாரை தன் முட்டையை ஈனும், தண் அம் துறைவன்-குளிர்ந்த அழகிய கடல் துறையை உடைய தலைவன், முன் நாள் - முன்னொரு நாளில், பாசடை - பசிய இலைகளினின்றும், கலித்த - தழைத்து வெளியில் வந்த, கணைக்கால் நெய்தல் பூவுடன் - திரண்ட தண்டினை உடைய நெய்தல் மலருடன், நெறிதரு தொடலை - நெறிக்கின்ற இலையை இடையிட்டுத் தொடுத்த மாலையை, தைஇ - நினக்குச் சூட்ட, கண் அறிவுடைமை அல்லது - அதனைக் கண்ணால் அறியக் கிடந்ததன்றி, நுண்வினை - நுண்ணிய கை தேர்ந்த கம்மியனாற்

செய்யப்பட்ட, இழை அணி அல்குல் - கலனை அணிந்த அல்குலை உடைய, விழவு ஆடு மகளிர் - விழாக் காலத்துத் துணங்கையாடும் மகளிரினுடைய, இன்சீர் - இனிய தாள அறுதி, முழங்கு திரை - முழங்கும் கடலோசைபோல் எங்கும் பரவும், அழுங்கல் மூதூர் - ஒலியை உடைய இவ்வூர், அறிந்தன்றோ இன்றே - வேறொன்றை யும் அறிந்ததில்லை, உண்மை இங்ஙனம் இருக்க நீ ஆற்றாமை யுறுவது எதனால்?

முடிபு : தண்ணந்துறைவன் முன் நாள் நெய்தல், தொடலை தைஇக் கண்ணறிவுடைமை அல்லது மூதூர் அறிந்தன்றோ இன்று என்று முடிக்க.

கருத்து : ஒருநாள் தலைவன் சூட்டிய மலரை ஊரினர் கண்ணாற் கண்டனர். அது பின்னர் அலர் எழச் செய்யினும் செய்யும். அதற்கு முன் தலைவன் வந்து வரைந்து கொள்ளலே தக்கது என்று தோழி கூறினாள்.

அ-ள் : உமணர் - உப்பு வாணிகர். கலித்தல் - முளைத்தல். தொடலை - மாலை. சீர் - தாள அறுதி. பார் - வண்டிப் பார்.

நயம் : 1. உமணர் ஒழித்துப் போட்ட வண்டிப் பாரில் வெண்குருகு முட்டை ஈனும் என்றது, தலைவனாற் கைவிடப் பட்ட தலைவி மேல் ஊரினர் அலர் தூற்றாநிற்பர் என்றவாறு. 2. தாள அறுதி கடலோசைபோல் பரவும் என்றது, பழிச் சொல் கடலோசைபோல் எழும் என்பதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்

பயன் - வரைவு உடன்படுத்தல்; ஆற்றுவித்தலும் ஆம்.

ஒப்புமைப்பகுதி

4. வெண்குருகு ஈனல்

"நரை மூதாளர் நாயிடக் குழிந்த, வல்லின நல்லக நிறையப் பல்பொறிக், கானவாரனும் ஈனும்"

(புறநா. 52. 14-6.)

6. கணைக்கால் நெய்தல்

"பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்" (குறுந். 9:4)
(பெரும்பாண் : 213), (அகநா : 360:4.)

7. தொடலை தைஇய

"தொடலை தைஇய மடவரன் மகளே" (ஐங். 361)

# 139. முல்லை

## தலைவன் கூற்று

உலகிற்கு ஆணி யாகப் பலர்தொழப்
பலவயின் நிலைஇய குன்றின் கோடுதோறு
ஏயினை உரைஇயரோ பெருங்கலி எழிலி
படுமலை நின்ற நல்யாழ் வடிநரம்பு
5 எழீஇ யன்ன உறையினை முழவின்
மண்ஆர் கண்ணின் இம்மென இமிரும்
வணர்ந்து ஒலிகூந்தல் மாஅ யோளொடு
புணர்ந்து இனிது நுகர்ந்த சாரல் நல்ஊர்
விரவுமலர் உதிர வீசி
10 இரவுப்பெயல் பொழிந்த உதவி யோயே.

எ-து : தலைவன் வினைமுற்றி வந்து பள்ளி இடத்தானாகப் பெய்த மழையை வாழ்த்தியது.

### பெருங்கௌசிகனார்

ப-ரை : பெருங்கலி எழிலி - பெரிய முழக்கத்தைச் செய்யும் மேகமே! முழவின் - மத்தளத்தின், மண் ஆர் கண்ணின் - மார்ச் சனையில் முமைந்த கண்போல, இம்மென இமிரும் - இம்மென முழங்குகின்ற, இடியோசையுடன், வணர்ந்து - கடைகுழன்று, ஒலி - தழைத்த கூந்தல் - கூந்தலையுடைய, மாயோளொடு - மாமை நிறத்தை உடைய தலைவியோடு, புணர்ந்து - முயங்கி; இனிது நுகர்ந்த - அவளது நலனை இனிதாக நுகர்ந்து, சாரல் நல் ஊர் - யான் உற்றகின்ற சாரலில் உள்ள நல்ல ஊரின் கண்ணே, விரவுமலர் - பல்வேறு வகையாகக் கலந்த பூக்கள், உதிர வீசி - உதிரும்படி மோதி, இரவுப் பெயல் பொழிந்த - இரவில் மழை பொழிந்து, உதவியோய் - யான் சுகம் பெற உதவி செய்தனை! நின்ற நல்யாழ் வடி நரம்பு - நீ நிலைபெற்ற நல்ல யாழின் முறுக்கிய நரம்பினின்று, படுமலை எழீஇ அன்ன - படுமலை என்னும் பண்ணினை எழுப்பினாற் போன்ற, உறை யினை - ஒலியொடு பெய்யும் மழையை உடையையாகி, உலகிற்கு ஆணியாக - இவ்வுலகிற்கு ஓர் ஆதாரமாக, பலர் தொழ - பலரும் போற்றி வணங்குமாறு, பலவயின் - பல்வேறு இடங்களில் நிலைஇய - நிலைபெற்று நிற்கும், குன்றின் கோடு தோறு - குன்றின் உச்சி தோறும், ஏயினை - நன்கு பொருந்தி, உரைஇயர் - உலாவுவாயாக.

முடிபு : எழிலி! மாயோளொடு புணர்ந்து இனிது நுகர்ந்த சாரல் நல்லூர் பெயல் பொழிந்த உதவியோய்! குன்றிற் கோடு தோறு ஏயினை உறைஇயர் என முடிக்க.

கருத்து : செய்த வினை முடித்து மீண்டு வந்த நான் தலைவியிடம் இன்பந் துய்த்தற்குத் துணையாக மழை பொழிந்த மேகமே! நீ என்றும் நின்று நிலவுக என்று தலைவன் மேகத்தை வாழ்த்தினான்.

அ-ள் : வணர்தல் - நுனி சுருண்டிருத்தல். உறை இயர் - உலாவுக. படுமலைப் பாலை - ஒருவகைப் பண்.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - தலைவியின் இன்பம் துய்த்து மகிழ்ந்து இருத்தல்.

ஒப்புமைப்பகுதி

2-5. மேட்டு நிலத்திற் பெய்த மழையின் ஓசைக்குப் படுமலைப் பாலை இசை உவமை.

"பாணர் படுமலை பண்ணிய எழாலின்
வானத் தெழுஞ் சுவர் நல்லிசை வீழ" (குறுந். 323:2-3)

# 140. குறிஞ்சி

## தலைவன் கூற்று

கொண்டல் மாமழை குடக்குஏர்பு குழைத்த
சிறுகோல் இணர பெருந்தண் சாந்தம்
வகைசேர் ஐம்பால் தகைபெற வாரிப்
புலர்விடத்து உதிர்த்த துகள்படு கூழைப்
5 பெருங்கண் ஆயம் உவப்பத் தந்தை
நெடுந்தேர் வழங்கும் நிலவுமணல் முற்றத்துப்
பந்தொடு பெயரும் பரிவி லாட்டி
அருளினும் அருளாள் ஆயினும் பெரிதுஅழிந்து
பின்னிலை முனியல்மா நெஞ்சே என்னதூஉம்
10 அருந்துயர் அவலம் தீர்க்கும்
மருந்து பிறிதுஇல்லை யான்உற்ற நோய்க்கே.

எ-து : குறை மறுக்கப்பட்ட தலைவன் தன் நெஞ்சினை நெருங்கியது.

**பூதங்கண்ணனார்**

ப-ரை : மாநெஞ்சே - பெருமைமிக்க என் நெஞ்சமே! கொண்டல் மாமழை - நீரை முகந்து கொண்ட கரிய மேகம், குடக்கு ஏர்பு - மேல்பாலுள்ள மலையிலே எழுந்து மழை பெய்து, குழைத்த - அதனால் தழையச் செய்த, சிறுகோல் - சிறிய கிளைகளிலே, இணர - பூங்கொத்துக்களை உடைய, பெருந்தண் சாந்தம் - பெரிய குளிர்ச்சி பொருந்திய சந்தன மரத்தின் குறையோடு, வகைசேர் ஐம்பால் தகைபெற வாரி - பலவாய பொருள்களையும் சேர்த்து அமைக்கப் பெற்ற சாந்தம் பூசிய கூந்தலை அழகு பெற வாரி, புலர்விடத்து - அச்சாந்தம் காய்ந்த விடத்து, உதிர்த்த - உதிர்க்கப்பட்ட, துகள்படு கூழை - துகள் பொருந்தி ஐந்து வகையாக வகுக்கப்பட்ட கூந்தலையும், பெருங்கண் - - விசாலமான கண்களையும் உடைய, ஆயம் - தோழிகள், உவப்ப - மகிழ, தந்தை - தன் தந்தையின், நெடுந்தேர் வழங்கும் - நெடிய தேர் ஓடும், நிலவு மணல் முற்றத்து - நிலவு போன்ற வெள்ளிய மணல் பரவிக் கிடக்கும் முற்றத்தின் கண், பந்தொடு பெயரும் - விளையாடுவதற்குப் பந்தோடு செல்லும், பரிவிலாட்டி - நம்மிடம் அன்பில்லாத தலைமகள், அருளினும் அருளாள் ஆயினும் - நம்மிடம் அருள் செய்யினும் அருள் செய்யாவிடினும், பெரிது அழிந்து - நீ மிகவும் மனம் அழிந்து, பின் நிலை முனியல் - இரந்து வழிபட்டு நிற்றலை வெறாதே. (ஏனெனில்) யான் உற்ற நோய்க்கு - யான் பெற்ற காமநோயாகிய, அருந்துயர் அவலம் - அரிய துன்பம் கலந்த வருத்தத்தை, தீர்க்கும் - போக்கும், மருந்து என்ன தூஉம் பிறிது இல்லை - மருந்தாவாள் அத் தலைவியே அல்லாமல் சிறிது அளவேனும் வேறு வழி இல்லை.

முடிபு : நெஞ்சே யான் உற்ற நோய்க்கு மருந்து பிறிது இல்லை; எனவே பெரிது அழிந்து பின்னிலை முனியல் என்று முடிக்க.

கருத்து : தான் உற்ற காமநோய்க்குத் தலைவியை அடைவது தவிர வேறு மருந்து ஒன்றும் இல்லை என்று தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினான்.

வி-ரை : "பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை, தன் நோய்க்குத் தானே மருந்து" (குறள்- 1102) என்னும் குறளை ஈண்டு நினைவு கூர்க.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - தானே புலம்பி ஆறுதல்.

தான்படும் துன்பத்தைத் தெரிந்திருந்தும் தெரியாதாள் போன்று பந்தொடு ஆடச்சென்றாள் என்பான் பரிவிலாட்டி என்றான்.

ஒப்புமைப்பகுதி

6. மணலுக்கு நிலவி

"நிலவுக் குவித்தன்ன வெண்மணல் ஒருசிறை" (குறுந். *123:2, 320:8*)

"நிலவெக்கர்ப் பல பெயர" (பொருந. *213*)

"நிலவுக் கானல்" (மதுரை. *114*)

"நிலவடைந்த இருள்போல வலையுணங்கு மணல் முன்றில்" (பட். *83-3*)

"வாணிலா ஏய்க்கும் வயங்கொளி எக்கர்" (கலி. *131:17*)

"நிலாவினியங்கு மணல்மலி மறுகு" (அகநா. *200:1*)

"நிலவு மணல் வியன் கானல்" (புறநா. *17:11*)

"நிலாவெழுந்த வார் மணல்" (திணைமா. *29*)

"நிலவோரன்ன வெண்மணற் பாக்கத்து" (தமிழ் நெறி.மேற்.)

"அறல் விளங்கு நிலா மணல்" (மணி. *8:11*)

11. மருந்து பிறிதில்லை

"மருந்து பிறிதில்லை அவர் மணந்த மார்பே"

(குறுந். *68:4*) (கலி. *60:21*) (அகநா. *147:14*)

# 141. பாலை

## தலைவன் கூற்று

இருஞ்செம் முடிய கொடுங்கவுள் கயவாய்
மாரி யானையின் மருங்குல் தீண்டிப்
பொரிஅரை ஞெமிர்ந்த புழற்காய்க் கொன்றை
நீடிய சடையோடு ஆடா மேனிக்
5 குன்றுஉறை தவசியர் போல பலவுடன்
என்றூழ் நீள்இடைப் பொறப்த் தோன்றும்
அருஞ்சுரம் எளியமன் நினக்கே பருந்துபடப்
பாண்டிலொடு பொருத பல்பிணர்த் தடக்கை
ஏந்துகோட்டு யானை இசைவெங் கிள்ளி
10 வம்புஅணி உயர்கொடி அம்பர் சூழ்ந்த
அரிசில் அம் தெள்அறல் அன்ன இவள்
விரிஒலி கூந்தல்விட்டு அமைகலனே.

எ-து : பொருள் கடைக் கூட்டிய நெஞ்சிற்குத் தலைவன் சொல்லிச் செலவு அழுங்கியது.

## சல்லியங் குமரனார்

ப-ரை : நெஞ்சமே! இரும் செம் முடிய - கரிய அழகிய மத்தகத்தை உடைய, கொடும் கவுள் - வளைந்த கவுளையும், கய வாய் - அகன்ற வாயையும் உடைய, மாரி யானையின் - கரிய மேகம் போன்ற யானையின், மருங்குல் - விலா, தீண்டி - உராய்தலால், பொரி அரை ஞெமிர்ந்த - பொரிந்துள்ள அடி பரந்த, புழற்காய் கொன்றை - உள்ளே துளை பொருந்திய காய் களை உடைய கொன்றை மரங்கள், நீடிய சடையோடு - நீண்ட சடையுடன், ஆடாமேனி - நீராடாத உடலையும் உடைய, குன்றுறை தவசியர் போல - குன்றினிடத்து வாழ்கின்ற, தவஞ் செய்வார் போல, பலவுடன் - பலவும், என்றூழ் நீள் இடை - வெயில் நிலைபெற்ற இடங்களில், பொற்ப - அழகுபெற, தோன்றும் - விளங்கும்; அரும் சுரம் - செல்லுதற்கு அரிய பாலை நிலம், நினக்கு எளிய மன் - நினக்கு மிக எளியவாகும். ஆகை யால் நீயே சென்று காண்பாய்; பருந்து பட - (போரில் இறந்து பட்ட வீரர்களின் உடல்களைத் தினன வேண்டி) பருந்துகள் அவற்றின்மேல் விழுந்து அலைக்க, பாண்டிலொடு - பகை வருடைய தேர்ப்படையோடு, பொருத - போர் செய்து வென்ற, பல் பிணர் தடக்கை - பலவாய சருச்சரையை உடைய நீண்ட கையையும், ஏந்து கோட்டு - தலை ஏந்திய கோட்டினையும் உடைய, யானை - யானைப் படையை உடைய, இசை வெம் கிள்ளி - புகழ் விரும்பிய கிள்ளி வளவனது, வம்பு அணி உயர் கொடி - புதுமைபெற ஆலங்கரித்த உயர்ந்த கொடி கட்டிய, அம்பர் சூழ்ந்த - அம்பர் என்னும் நகரைச் சூழ்ந்த, அரிசில் அம் தெள் அறல் அன்ன - அரிசில் ஆற்றின் தெளிந்த கருமணல் போன்ற, இவள் - இவளுடைய, விரி ஒலி கூந்தல் - விரிந்த தழைந்த கூந்தலின் கண்ணே, விட்டு அமைகலன் - உறங்குதலைக் கைவிட்டுச் சிறிது பொழுதேனும் பிரிந்து வாழேன்.

முடிபு : நெஞ்சே! கூந்தல் விட்டு அமைகலன்; அதனால் நினக்கு அருஞ்சுரம் எளியமன் என முடிக்க.

கருத்து : நெஞ்சமே! தலைவியுடன் உடனுறைந்து வாழ்தலே எனக்கு இனியது. அவளைப் பிரிந்து வாழேன் என்று தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினான்.

அ-ள் : பாண்டில் - குதிரை பூட்டிய தேர். வம்பு - புதுமை. ஞெமிர்தல் - பரத்தல். ஆடாமேனி என்பதற்கு அசையாது யோகத்தில் இருக்கும் உடம்பு எனினும் அமையும். பிணர் - சருச்சரை.

வி-ரை : இது மறுத்துரைப்பது போல் நெஞ்சொடு புணர்த்துக் கூறியது.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றல் பற்றி எழுந்த வருத்தம்.

பயன் - இல்லத்து அழுங்கல்.

2. மாரியானை
"மாரியானையின் வந்து நின்றனனே" (குறுந். 161:7)

12. ஒலிமென் கூந்தல்
"ஒலிமென் கூந்தல் உரியவால் நினக்கே" (குறுந். 225:7)
(குறிஞ்சி. 2) (கலி. 64:6) (புறநா. 109:16, 306:3)

# 142. முல்லை

## தலைவன் கூற்று

வான் இகுபு சொரிந்த வயங்கு பெயற் கடைநாள்
பாணி கொண்ட பல்கால் மெல்உறி
ஞெலிகோல் கலப்பை அதளொடு சுருக்கி
பறிப்புறத்து இட்ட பால்நொடை இடையன்
5 நுண்பல் துவலை ஒருதிறம் நனைப்ப
தண்டு கால் வைத்த ஒடுங்குநிலை மடிவிளி
சிறுதலைத் தொழுதி ஏமார்த்து அல்கும்
புறவினதுவே பொய்யா யாணர்
அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்
10 முல்லை சான்ற கற்பின்
மெல் இயற் குறுமகள் உறைவின் ஊரே.

எ-து : வினை முற்றி மீளும் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

**இடைக்காடனார்**

ப-ரை : வான் இகுபு - வான் இற்று, சொரிந்த - பொழிந்த, வயங்கு - விளங்கிய, பெயல் - மழையின், கடை நாள் - இறுதி நாளிலே, பாணி - கையில், கொண்ட - கொள்கின்ற, பல் கால் -

பலவாகிய காலிட்டு, மெல் உறி - (பின்னிய) மெல்லிய உறி யுடனே, ஞெலி கோல் - தீக்கடை கோல் முதலிய, கலப்பை - கருவிகளை இட்டு வைக்கும் பை, அதளொடு - தோலாலாகிய பையை, சுருக்கி - ஒரு சேரச் சுருக்கிக் கட்டி, பறி - பனை ஓலைப் பாயோடு, புறத்திட்ட - முதுகிற் கட்டி இட்ட, பால் நொடை - பால் விலை கூறிச் செல்லும், இடையன் - இடையன், நுண் பல் - நுண்ணிய பலவாய, துவலை - மழைத்துளி, ஒரு திறம் - (தன்னுடம்பில்) ஒரு புறம், நனைப்ப - நனைத்த லைச் செய்ய, தண்டுகால் - கைக்கோலை ஊன்றி அதன் மேல் ஒரு காலை, வைத்த - வைத்து, ஒடுங்கு நிலை - ஒடுங்கிய நிலையொடு நின்று, மடி விளி - வாயைக் குவித்து ஊதும் வீளை எனப்படுகிற அழைத்தலாகிய குறிப்பொலியை அறிந்து, சிறு தலை - சிறிய தலையை உடைய, தொழுதி - ஆட்டின் தொகுதி, ஏமார்த்து - மயங்கி, அல்கும் - தங்கா நிற்கும், புறவின் அதுவே - புறவின் கண்ணதாய் இருக்கின்றது, பொய்யா - பொய்யாத, யாணர் - புது வருவாய், அல்லில் ஆயினும் - இராப்பொழுதாய் இருப் பினும், விருந்து வரின் உவக்கும் - வரு விருந்தைக் கண்டு மகிழும், முல்லை சான்ற கற்பின் - இல்லிலிருந்து நல்லறஞ் செய்யும் கற்பினையும், மெல்லியல் - மென்மையான சாயலையும் உடைய, குறுமகள் - இளமை மாறாத (நமது காதலி) தலைவி, உறைவின் - உறைகின்ற, ஊரே - ஊராகும்.

முடிபு : அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும் முல்லை சான்ற கற்பின் மெல் இயற் குறுமகள் உறைவின் ஊரே.

கருத்து : வினை முடித்துத் திரும்பும் தலைமகன் தேர்ப்பாக னிடத்து தேரை விரைவிலே செலுத்த வேண்டுமென்னும் குறிப்புடன் தன் தலைமகளின் ஊரை உவந்து கூறுகிறான்.

அ-ள் : பாணி - கை- இகுதல் - விழுதல். ஞெலிகோல் - தீக் கடை கோல். பறி - ஓலைப்பாய் : நொடை - விலை. ஏமார்த்தல் - மயங்குதல். யாணர் - புது வருவாய்.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - பாகன் தேர் கடாவல்.

ஒப்புமைப்பகுதி

4. பால்நொடை இடையன்

"பாலொடு வந்து கூழொடு பெயரும்
யாடுடை இடை மகன்" (குறுந். 221-2)

4. பறி

"பறியுடைக் கையர் மறியினத்து ஒழிய" (குறுந். 22)

"மறித்துருஉத் தொகுத்த பறிப்புடை இடையன்"

(அகநா. 94:4)

"பறியோலை மேலொடு கீழோ இடையர்
பிறியோலை பேர்த்து விளியாகக் கதிப்ப"

(திணைமாலை. 113)

"பறியோலைச் சயனத்தார்" (திவ்:பெரியாழ்வார்:1 1-5)

# 143. பாலை

## தாய் கூற்று

ஐதே காமம் யானே ஒய்யெனத்
தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து
ஓரை ஆயமும் நொச்சியும் காண்தொறும்
நீர்வார் கண்ணேன் கலுழும் என்னினும்
5 கிள்ளையும் கிளைஎனக் கூஉம் இளையோள்
வழுஇலள் அம்ம தானே குழீஇ
அம்பல் மூதூர் அலர்வாய்ப் பெண்டிர்
இன்னா இன்உரை கேட்ட சில்நாள்
அறியேன் போல உயிரேன்
10 நறிய நாறும்நின் கதுப்பு என்றேனே.

எ-து : மனை மருட்சி.

**கண்ணகாரன் கொற்றனார்**

ப-ரை : ஐதே காமம் - காமம் மிகவும் வியப்புடையது. (எப்படியெனில்) யானே - நானே, ஒய்யென - விரைவாக, தருமணல் - உழையர் கொணர்ந்த மணல், ஞெமிரிய - பரப்பிய, திருநகர் - அழகிய மாளிகை, முற்றத்து - முன்றிலின் கண், ஓரை- மகளிர் பாவை கொண்டு விளையாடும் விளையாட்டு விளையாடு கின்ற, ஆயமும் - தோழியர் கூட்டத்தையும், நொச்சியும் - ஆடிட மாகிய நொச்சி வேலியையும், காண்தொறும் - காணுந்தோறும், நீர் வார் - நீர் வடிகின்ற கண்ணேன் - கண்ணை உடையவளாகி, கலுழும் - அழுகின்ற, என்னினும் - என்னைக் காட்டிலும், கிள்ளையும் - (அவள் வளர்த்த) கிளியும், கிளை என - 'அன்னாய் துயிலுணர்தி' என, கூஉம் - கூவா நிற்கும், இளையோள் - இளம் புதல்வி தானும், வழுவிலள் - குற்றம் உடையவள் அல்லள், அம்ம

தானே - அவள் காமம் வியப்புடையதாக உள்ளது. குழீஇ - ஒரு சேரக் கூடி, அம்பன் - அம்பல் மிக்க, மூதூர் - இப் பழைய ஊரில், வாழும் அலர் வாய்ப் பெண்டிர் - அலர் தூற்றும் வாயை உடைய ஏதிலாட்டியர், இன்னா - கொடிய, இன்னுரை - இனிய உரை, கேட்ட - கேட்ட, சின்னாள் - சில நாள் அளவும், அறியேன் போல - அறியாதேன் போல, உயிரேன் - மூச்சு விட்டேனும் இல்லேன், நறிய - முன்பைவிட மிகுதியாக மணம், நாறும் - கமழுகின்றது, நின் — உனது, கதுப்பு - கூந்தல், என்றேனே - என்று அதன் காரணம் உண்மை உணராமல் வினாவினேனே. அதனால் யானே தவறு செய்தேன் ஆவேன்.

முடிபு : இளையோள் வழுவிலள்; மூதூர் அலர்வாய்ப் பெண்டிர் இன்னா இன்னுரை கேட்ட சின்னாள் அறியேன்போல உயிரேன். ஓரை, ஆயமும் நொச்சியும் காண்தொறும் நீர் வார் கண்ணேன்.

கருத்து : தலைவி, தலைவனுடன் போயினள் என்ற செய்தியை, செவிலி, தாய்க்குக் கூற, உடன் தாய் மனையின் கண் இருந்து மருண்டு கூறாநின்று அழுகின்றாள்.

அ-ள் : ஐது - வியப்புடையது. ஓரை - மகளிரின் பாவை விளையாட்டு. ஞெமிர்தல் - பரவுதல். கிளைத்தல் - விளித்தல். பூத்தந்தானைத் தொடர்ந்து சென்றதுபற்றி ஐதே காமம் என்று வியந்தாள். இவனுடன் இவள் தொடர்பு கொண்டாள் என்று பிறர் கூறுதலை இன்னா உரை என்றாள், பூ, புனல், களிறு ஏதுவாகத் தொடர்பு கொள்ளல் அறத்தொடு நிலை ஆகலின் இனிய உரை என்றாள். தலைவன் தந்த வேற்று நிலத்து மலரை முடித்தலின் கூந்தல் புதுமணம் பெற்றது என்றாள்.

மெய்ப்பாடு - உவகைக் கலுழ்ச்சி.

பயன் - ஆற்றாமை நீங்குதல்.

ஒப்புமைப்பகுதி

1. ஐதே காமம்
"ஐதே காமம் யானே" (குறுந். 217:6. 401:6.)

4. நீர்வார் கண்
"நீர்வார் கண்ணேம் தொழுதுநிற் பழிச்சி" (புறநா. 113-6)

2. தருமணல்
"தருமணற் பேரில் தமரொடு புக்கு" (பெருங். 1:34-40)

3. ஓரை ஆயம்
"ஓரை ஆயம் கூறக் கேட்டும்" (குறுந். 48:3) (புறநா. 176:1)

10. கூந்தலின் இயற்கை மணம்
"செறியெயிற்று அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீ அறியும் பூவே" (குறுந். 2:4-5)
"கூந்தல்......நறுந் தண்ணியவே" (குறுந். 116:1-4)
"கைவள் ஓரி...கானந் தீண்டி
எறிவளிகமழும் நெறிபடு கூந்தல்" (குறுந். 199:3-4)
"நறுமென் கூந்தல்" (குறுந். 270:8)
"நாறிருங் கூந்தல்" (குறுந். 272:8)
"நறுங் கதுப்பு" (குறுந். 312:6)
"மண நாறு கதுப்பினாய்" (கலி. 43:23)
"நாறிருங் கூந்தல்" (புறநா. 113:9)

# 144. குறிஞ்சி

## தலைவி கூற்று

பெருங்களிறு உழுவை தாக்கலின் இரும்பிடி
கருவிமா மழையின் அரவம் அஞ்சுபு
போதுஏர் உண்கண் கலுழவும் ஏதில்
பேதை நெஞ்சம் கவலை கவற்ற
5 ஈங்கு ஆகின்றால் தோழி பகுவாய்ப்
பிணவுப்புலி வழங்கும் அணங்குஅருங் கவலை
அவிர்அறல் ஒழுகும் விரைசெலல் கான்யாற்றுக்
கரை அருங் குட்டம் தமியர் நீந்தி
விரவுமலர் பொறித்த தோளர்
10 இரவின் வருதல் அறியா தேற்கே.

எ-து: ஆற்றது ஏதத்திற்குக் கவன்று சிறைப்புறமாகத் தலைவி சொல்லியது.

**கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார்**

ப-ரை: 'தோழி - தோழியே! பகுவாய் - பிளந்த வாயை உடைய, பிணவுப் புலி - பெண் புலி, வழங்கும் - திரியும், அணங்கு - துன்பம், அருங்கவலை - நீங்குதற்கரிய கவர்த்த வழி

யில், அவிர் அறல் - விளங்கிய அறுதியை உடைய மணல் நீர், ஒழுகும் - ஓடும், விரை செலல் - விரைந்த செலவை உடைய, கான் யாற்று - கான் யாற்றில், கரை அருங் குட்டம் - ஆழ முடைய புனலின் இடத்து, தமியர் நீந்தி - தமியராய் நீந்தி, விரவு மலர் - நீரிலே கலந்த மலர், பொறித்த - பொருந்திய, தோளர் - தோளொடு நமது காதலர், இரவின் - இரவில், வருதல் - வருவதனை, அறியாதேற்கே - அறியாமையை உடை யேனாகிய எனக்கு, பெருங்களிறு - பெரிய களிற்றி யானை, உழுவை - புலி, தாக்கலின் - தாக்கப்பட்ட, இரும்பிடி - (அது கண்டு) கரிய பிடி யானை, கருவி - மின்னல் முதலாகிய தொகுதியை உடைய, மாமழையின் - கரிய மேகம், அரவம் - முழங்குவது போன்று பிளிறுகின்ற ஓசையை, அஞ்சுபு - (கேட்டு) நடுங்கி, போது ஏர் - நீல மலர் போன்ற, உண்கண் - மையுண்ட கண்கள், கலுழவும் - நீரை வடித்து அழவும், ஏதில் - யாதும் இல்லாத, பேதை நெஞ்சம் - பேதைமை உடைய என் நெஞ்சம், கவலை கவற்ற - கவலையால் வருந்தவும், ஈங்கு - இவ்வண்ணம், ஆகின்றால் - என் நிலைமை இருந்தது.

முடிபு : தோழி! அவிர் அறல் ஒழுகும் விரை செலற் கான் யாற்றுக்கரையருங் குட்டந் தமியர் நீந்தி விரவு மலர் பொறித்த தோளர் இரவின் வருதல் அறியாதேற்கே.

கருத்து : இரவுக்குறி வாராநின்ற தலைமகன் சிறைப்புறத் தானாக அவன் கேட்டு வரையுமாற்றானே தலைவி தோழியை நோக்கி நமது காதலர் கான்யாற்றின் கண்ணே தமியராய் நீந்தி வருவது கருதி அறியாமையேனுடைய கண்கள் கண்ணீரை வடிக்க வும் நெஞ்சம் கவலையால் வருந்தவும் என் நிலைமை இவ்வாறா கியது காண் என்று கூறா நிற்பது.

அ-ள் : அறல் - நீர். குட்டம் - ஆழம்.

வி-ரை : ஆற்றின் வழியில் ஏற்படும் ஏதம் அறிந்து அஞ்சினள் ஆதலின் அதனைக் கவலை என்றாள்.

இஃது அழிவில் கூட்டத்து அவன் புணர்வு மறுத்தல்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - வரைவு உடன்படுத்தல். அயாவுயிர்த்தலும் ஆம்.

ஒப்புமைப்பகுதி

5. ஈங்காகின்று

"ஈங்காகின்றே தோழி கானல்" (குறுந். 248:3, 15:4)

# 145. நெய்தல்

## தோழி கூற்று

இருங்கழி பொருத ஈர வெண்மணல்
மாக்கொடி அடும்பின் மாஇதழ் அலரி
கூந்தல் மகளிர் கோதைக் கூட்டும்
காமர் கொண்கன் நாம் வெங் கேண்மை
5 ஐது ஏய்ந்தில்லா ஊங்கும் நம்மொடு
புணர்ந்தனன் போல உணரக் கூறி
தான்யாங்கு என்னும் அறன்இல் அன்னை
யான்எழில் அறிதலும் உரியள் நீயும்நம்
பராரைப் புன்னைச் சேரி மெல்ல
10 நள்ளென் கங்குலும் வருமரோ
அம்ம வாழிஅவர் தேர்மணிக் குரலே!

எ-து : இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாக, தோழி வரைவுகடாயது.

நம்பி குட்டுவன்

பரை : இருங்கழி - கரிய கழியில் உள்ள, பொருத - (நீர்) மோதுதலாலே, ஈர வெண் மணல் - ஈர்மான வெண்மையான மணலில் படர்ந்த, மாக் கொடி அடும்பின் - வலிய கொடி அடும்பின், மா இதழ் - பெரிய இதழை உடைய, அலரி - மலர், கூந்தல் மகளிர் .. மகளிரின் கூந்தலில் இடுகின்ற; கோதை கூட்டும் - மாலைக்குக் கூட்டா நிற்கும், காமர் - கண்டோர் விரும்பும் தன்மை உடைய, கொண்கன் - நெய்தல் நிலத் தலைவனுடைய, நாம் - அச்சம் தரும், வெங்கேண்மை - வெய்ய நட்பானது, ஐது ஏய்ந்து - பண்டு பொருந்தி இருந்து, இல்லா - இப்பொழுது இல்லாதிருந்தும், ஊங்கு - முன்பு, நம்மொடு புணர்ந்தனன் போல - நம்மொடு அவன் புணர்ந்தனன் போல, உணரக் கூறி - வெளிப்படையாகச் சொல்லி, தான் யாங்கு - அவன்தான் இப்பொழுது எங்குளன் என்று கூறா நிற்கும், அறனில் அன்னை - அறனில்லாத அன்னை, யான் எழில் அறிதலும் உரியள் - நின் எழுச்சி முதலியன என்னால் அறிதற்கும் உரியள், நீயும் - தோழியாகிய நீயும், அம்ம - நான் சொல்வதைக் கேட்பாய், நம் - நம்முடைய, பராரை - பருத்த அடியை உடைய, புன்னைச் சேரி - புன்னை மரங்ளை உடைய சேரியின் கண், மெல்ல - மெல்ல,

நள்ளென் கங்குலும்-இருள் செறிந்த இரவும், வருமரோ - வந்து ஒலியா நிற்கும், அம்ம வாழி - தோழீ! வாழ்வாயாக, அவர் தேர் மணிக் குரலே - அவர் தேரிலுள்ள மணியின் ஓசையே. நான் என் செய்வேன்? விளைவு யாதோ?

முடிபு : அம்ம வாழி! நீயும் யான் எழில் அறிதல் உரியள்; நம் பராரைப் புன்னைச்சேரி நள்ளென் கங்குலும், அவர் தேர் மணிக்குரலே மெல்ல வருமரோ.

கருத்து : தோழி, தலைவியை நோக்கி, நமது சேரியின் கண் இரவில் நெய்தல் தலைவனான தலைமகனின் தேர் மணி ஓசை வந்து ஒலிக்கும் என்றும் அதற்கு யாது செய்வேன் என்று வருந்திக் கூறினாள்.

நயம் : அடும்பின் மலர் மகளிர் கூந்தலில் சேர்க்கப்படும் என்றது நீ இவளைப் பலரும் அறியப் பூச்சூட்டிப் பெறுவாய் என்ற தாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - விரைவுகடாதல்.

ஒப்புமைப்பகுதி

7. அறனில் யாய்

"உயங்குதொறும் முயங்கும் அறனில் யாயே"

(குறுந். 244:6, 262:2)

10. நள்ளென் யாமம்

"கையற நரலும் நள்ளென் யாமத்து" (குறுந். 160:4)

(நெடுநல். 186) (ஐங். 324:3) (அகநா. 103-12.)

(அகநா. 129:2, 142:20, 170:12, 219:61) (குறுந். 6:1)

# 146. குறிஞ்சி

## தலைவன் கூற்று

வில்லாப் பூவின் கண்ணி சூடி
நல் ஏமுறுவல்எனப் பல்ஊர் திரிதரு
நெடுமாப் பெண்ணை மடல் மானோயே
கடன்அறி மன்னர் குடைநிழற் போலப்
5 பெருந் தண்ணென்ற மரநிழல் சிறிதுஇழிந்து

இருந்தனை சென்மோ வழங்குக சுடர்என
அருளிக் கூடும் ஆர்வ மாக்கள்
நல்லேம் என்னும் கிளவி வல்லோன்
எழுதி அன்ன காண்தகு வனப்பின்
10 ஐயள் மாயோள் அணங்கிய
மையல் நெஞ்சம் என்மொழிக் கொளினே.

எ-து : பின்னின்ற தலைவன் முன்னிலைப் புறமொழியாக, தோழி கேட்பச் சொல்லியது.

கந்தரத்தனார்

ப-ரை : வில்லாப் பூவின் - விலைப்படுத்தற்கு ஆகாத பயனற்ற பூவாகிய பூளை மலரையும், உழிஞை, எருக்கம், ஆவிரம் முதலிய பூக்களையும் கலந்து கட்டிய, கண்ணி சூடி - மாலையைச் சூடி, நல் ஏமுறுவல் - நல்ல பித்தேறினேன், என - என்னும்படி, பல் ஊர் திரிதரு - பல ஊர்களிலும் சென்று திரிகின்ற, நெடு மாப் பெண்ணை மடல் - நெடிய கரிய பனை மடல், மானோயே - கட்டிய குதிரையை உடையோயே, கடன் அறி மன்னர் - கடமை அறிந்து உலகத்தைப் பாதுகாக்கும் மன்னர், குடை நிழற் போல - குடை நிழல் குளிர்ச்சி உறுமாறு போல, பெருந் தண்ணென்ற மரநிழல் - பெரிய தண்ணென்ற மரத்தின் நிழலின் கண்ணே, சிறிது இழிந்து - குதிரையினின்று இழிந்து சிறிது பொழுது, இருந்தனை - தங்கியிருந்து, சென்மோ - செல்வாயாக, வழங்குக சுடர் - ஞாயிறுதான் வெயில் வீசி ஒடுங்குவதாக, என - என்று, அருளிக் கூடும் - அன்போடு நெருங்கிய, ஆர்வ மாக்கள் - மகிழ்ச்சி உடைய மாந்தர், நல்லேம் என்னும் - யாம் நல்லேம் என்னும், கிளவி - புகழ்ச் சொல், வல்லோன் - சித்திரம் தீட்டுவதில் வல்ல ஓவியன், எழுதி அன்ன - தீட்டியது போல, காண் தகு - பார்க்கத் தகுந்த, வனப்பின் - அழகினை உடைய, ஐயள் - மெல்லியள், மாயோள் - மாமை நிறத்தை உடையவள், அணங்கிய - வருத்திய, மையல் - மயக்கத்தை உடைய, நெஞ்சம் - நெஞ்சமே, என் மொழிக் கொளினே - நீ என் வார்த்தையை ஏற்றுக்கொள்வாயே ஆனால்.

முடிபு : அணங்கிய மையல் நெஞ்சே! என் மொழிக் கொளினே, பெருந் தண்ணென்ற மரநிழல் சிறிதிழிந்து இருந்தனை சென்மோ.

கருத்து : மடலேறிய தலைவன், மீண்டும் தோழி கூறக் கேட்டு இரங்கித் தன் நெஞ்சை நோக்கி, கதிர் வெயில் எரி

யொழியும் அளவும், இம் மரத்தின் கீழே சிறிது பொழுது இறங்கி யிருந்து பின்பு செல்வாயாக என்று வருந்திக் கூறுகின்றான்.

வில்லாப்பூ - விலைப்படுத்தற்காகாத பயனற்ற பூ. அவை பூளை, ஆவிரை, உழிஞை, எருக்கம் முதலாயின.

இப் பாடல் கந்தருவத்துள் அடங்கிய பெருந்திணை.

மெய்ப்பாடு - அசைவு பற்றிய அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

1-3 : ஆடவர் மடலேறுதல்

"சோலைவேய் மருள் சூழ்வளைத் தோளிதன்
ஒலைதாழ் பெண்ணை மாமடலூர்தலைக்
காலவேற்றடங்கண்ணி கருதினாள்" (சீவக. 999)

# 147. குறிஞ்சி

## தோழி கூற்று

யாங்கு ஆகுவமோ அணிநுதற் குறுமகள்
தேம்படு சாரற் சிறுதினைப் பெருங்குரல்
செவ்வாய்ப் பைங்கிளி கவரநீமற்று
எவ்வாய்ச் சென்றனை அவண்எனக் கூறி
5 அன்னை ஆனாள் கழற முன்னின்று
அருவி ஆர்க்கும் பெருவரை நாடனை
அறியலும் அறியேன் காண்டலும் இலனே
வெதிர்புனை தட்டையேன் மலர்பூக் கொய்து
சுனைபாய்ந்து ஆடிற்றும் இலன்என நினைவிலை
10 பொய்யல் அந்தோ-வாய்த்தனை அதுகேட்டுத்
தலை இறைஞ்சினளே அன்னை
செலவு ஒழிந்தனையால் அளியை நீபுனத்தே.

எ-து : சிறைப் புறமாகத் தோழி சொல்லியது.

கொள்ளம்பக்கனார்

ப-ரை : யாங்கு - எவ்வாறு, ஆகுவமோ - உய்ய வல்லேமோ, அணி நுதற் குறுமகள் - அழகிய நெற்றியை உடைய இளமகளே,

தேம் படு - இடம் அகன்ற, சாரல் - மலைச் சாரலின் கண், சிறு தினை - சிறிய தினையின், பெருங்குரல் - பெருங்கதிரை, செவ்வாய் - சிவந்த வாயை உடைய, பைங்கிளி - பசுமையான கிளி, கவர - கொய்துகொண்டு செல்ல, நீ மற்று எவ்வாய்ச் சென்றனை - அதனைக் காவல் காக்காது நீ எங்கு சென்று விட்டாய், அவண் - ஆங்கு இல்லாமல், எனக் கூறி - என்று கேட்டு, அன்னை ஆனாள் கழற - அன்னை பலவிதமாக வினவவும், முன் நின்று - அவள் முன் நின்று, அருவி ஆர்க்கும் - அருவி ஒலிக்கும், பெருவரை நாடனை - பெரிய மலை நாடனை, அறியலும் அறியேன் - அறிதலும் செய்திலேன், காண்டலும் இலனே - கண்ணால் கண்டதும் செய்திலேன், வெதிர் புனை - மூங்கிலால் செய்த, தட்டையேன் - கிளி கடி கருவியாகிய தட்டையை உடைய யான், மலர் பூக் கொய்து - மலர்ந்த பூக்களைக் கொய்து, சுனை பாய்ந்து - சுனையிலே பாய்ந்து, ஆடிற்றும் இலன் - ஆடியதும் செய்திலேன், என நினைவிலை - என்று நினைவில்லாது, பொய்யல் - பொய்யும் சொல்லாய், அந்தோ - அய்யகோ, வாய்த்தனை - உண்மையை உரைத்து விட்டாய், அது கேட்டு - அதனைக் கேட்டு, தலை இறைஞ்சினளே - தலை தாழ்ந்து நிற்க, அன்னை - தாய், செலவு - செல்லுதலை, ஒழிந்தனையால் - போக்கிக் கொண்டனை, அளியை நீ - இரங்குதற்குரிய நீ, புனத்தே - புனத்தின் கண்.

முடிபு : அணி நுதல் குறுமகள்! சிறு தினைப் பைங்கிளி கவர, நீ மற்று எவ்வாய்ச் சென்றனை என்று அன்னை கழற, பெருவரை நாடனை அறியேன், காண்டலும் இலன், சுனை பாய்ந்து ஆடிற்றும் இலனென நினைவிலை பொய்யல், அளியை நீ புனத்தே செலவொழிந்தனை.

கருத்து : பகற்குறி வரையாது வந்தொழுகும் தலைவன், ஒருநாள் சிறைப்புறமாக வருவதறிந்த தோழி, தலைவியை நோக்கி, நின் தாயிடத்தில் 'நினைவில்லாது உண்மையைக் கூறி விட்டாய், இனி எங்ஙனம் நாம் ஆவோம் என்று மருட்டிக் கூறா நிற்பது.

இப் படைத்து மொழி கிளவி தோழி கூற்றில் வழுவாயினும் வரைதல் வேட்கையாற் கூறுதலின் வழுவமைதியாயிற்று.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு உடன்படுத்தல்.

ஒப்புமைப்பகுதி

2-8. வெதிர்புனை தட்டை

"தட்டைத் தண்ணுமைப் பின்னர் இயவர்" (ஐங். 215)
(குறிஞ்சி. 43) (குறுந். 193:3)

"புனவர் தட்டை புடைப்பின் அயல" (புறநா. 49:4)

"தழலும் தட்டையும் முறியும் தந்து" (குறுந். 223:4)

"தழலை வாங்கியும் தட்டை ஒப்பியும்" (அகநா. 188)

"ஒலி கழைத் தட்டை புடையுநர் புனந்தொறும்"
(மலைபடு. 328)

தட்டையாவது கிளிகடி கருவி. மூங்கிலைக் கண்ணுக்குக் கண் உள்ளாக நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசை உண்டாக ஒன்றிலே தட்டப்படுவதொரு கருவி. (குறிஞ்சி. 43:3)

4-5. அன்னை அலைத்தல்

"அலையாத் தாயரொடு நற்பா லோரே" (குறுந். 262-2)
(அகநா. 145:21-2)

"அன்னையுங் கோல்கொண் டலைக்கும்" (முத். 66)

7. நல்கலும் நல்குவர்

"நசை பெரிதுடையர் நல்கலும் நல்குவர்" (குறுந். 37:1)
(ஐங். 36:3) (கலி. 23:7, 14, 54:8, 55-19)
(அகநா. 8:18) (புறநா. 1-5)

8. தட்டை (குறுந். 193:3) (ஐங். 285:2)
(அகநா. 32:6, 388:2)

# 148. பாலை

## தோழி கூற்று

வண்ணம் நோக்கியும் மென்மொழி கூறியும்
நீஅவண் வருதல் ஆற்றாய் எனத்தாம்
தொடங்கி ஆள்வினைப் பிரிந்தோர் இன்றே
நெடுங்கயம் புரிந்த நீர்இல் நீள்இடை
5 செங்கால் மராஅத்து அம்புடைப் பொருந்தி
வாங்குசிலை மறவர் வீங்குநிலை அஞ்சாது
கல்அளைச் செறிந்த வள்உகிர்ப் பிணவின்
இன்புனிற்று இடும்பை தீரச் சினம்சிறந்து

செங்கண் இரும்புலிக் கோள்வல் ஏற்றை
10 உயர்மருப்பு ஒருத்தல் புகர்முகம் பாயும்
அருஞ்சுரம் இறப்ப என்ப
வருந்தேன் தோழி வாய்க்கஅவர் செலவே!

எ-து : பிரிவுணர்ந்து வேறுபட்ட தலைவியைத் தோழி வற்புறீஇயது.

கள்ளம்பாளனார்

ப-ரை : வண்ணம் - நிறம், நோக்கியும் - பார்த்தும், மென்மொழி - மெல்லிய இனிய சொல், கூறியும் - உரைத்தும், நீ அவண் - நீ அவ்விடம், வருதல் ஆற்றாய் வருதற்கு ஆற்றாய், என - என்று, தாம் தொடங்கி - தான் தொடங்கி, ஆள்வினை, பொருளீட்டும் முயற்சியில், பிரிந்தோர் - பிரிந்தவர், இன்றே - இன்றே, நெடுங் கயம் - நெடிய பொய்கையின் கண்ணே, புரிந்த - பொருந்திய, நீர் இல் - நீரில்லாத, நீள் இடை - நீண்ட வழியிலே, செங்கால் - சிவந்த அடியினை உடைய, மரா அத்து - மரா மரத்தின், அம் புடைப் பொருந்தி - அழகிய பக்கத்திலே பொருந்தி, வாங்கு சிலை - வளைந்த வில்லை உடைய, மறவர் - வீரர், வீங்கு நிலை - மிக்கிருக்கின்ற நிலைமையை நோக்கி, அஞ்சாது - அச்சம் கொள்ளாது, கல் அளை - மலைக் குகையில், செறிந்த - கிடந்த, வள்உகிர் - பெரிய உகிரை உடைய, பிணவின் - பெண் புலியின், இன் புனிற்று - இனிய குட்டிகளை ஈன்றதனால் ஆகிய, இடும்பை தீர - நோயும் பசியும் தீரும்படியாக, சினம் சிறந்து - சினம் மிகுத்து, செங்கண் - சிவந்த கண்ணை உடைய, இரும்புலி கோள் வல் ஏற்றை - கொல்லுதல் வல்ல பெரிய ஆண் புலியை, உயர் மருப்பு - ஓங்கிய கொம்பினை உடைய, ஒருத்தல் - களிறு, புகர் முகம் பாயும் - புள்ளி அமைந்த முகத்திலே சென்று பாயாநிற்கும், அருஞ்சுரம் - செல்லுதற்கரிய சுரத்தின் கண்ணே, இறப்ப என்ப - செல்லா நிற்பர் என்று கூறுவர், வருந்தேன் - யான் சிறிதும் வருந்துவேன் அல்லேன், தோழி - தோழீ! வாய்க்க - கைகூடுவதாக, அவர் செலவே - அவர் செல்லும் காரியம்.

முடிபு : தோழி! நீ அவண் வருதல் ஆற்றாய் எனத் தாம் தொடங்கி ஆள்வினைப் பிரிந்தோர் அருஞ்சுரம் இறப்ப என்ப, வருந்தேன், வாய்க்க அவர் செலவே.

கருத்து : தலைவன் பொருளீட்டு முயற்சியின் பொருட்டுப் பிரிவது அறிந்த தலைவி ஆற்றாளாக, அதனையறிந்த தோழி,

அவர் செல்லும் காரியம் கைகூடுவதாகுக, நீ வருந்தாதே என்றும் கூறுகிறாள்.

ஈன்ற பெண்புலியின் பசியும் நோயும் போக்க விரும்புவோர்க்கு அஞ்சாது ஆண்புலி பெரிய களிற்றின் முகத்திற் பாயும் என்றது நின்னுடன் குறைபாடின்றி இல்லறம் நடத்த, கொடிய வழியையும் அஞ்சாது சென்று பொருள் ஈட்டி வரச் செல்வர் என்னும் குறிப்பிற்று.

மெய்ப்பாடு - பெருமிதம்:

பயன் - தலைவியை ஆற்றுவித்தல். கைகோள் - கற்பு.

ஒப்புமைப்பகுதி

9. செங்கண் இரும்புலி
"செங்கண் இரும்புலி குழுமும் அதனால்" (குறுந் 321)

# 149. நெய்தல்

## தோழி கூற்று

சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி
மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி
மறுகில் பெண்டிர் அம்பல் தூற்ற
சிறுகோல் வலந்தனள் அன்னை அலைப்ப
5 அலந்தனென் வாழி தோழி கானல்
புதுமலர் தீண்டிய பூநாறு குருஉச்சுவல்
கடுமா பூண்ட நெடுந்தோர் கடைஇ
நடுநாள் வருஉம் இயல்தேர்க் கொண்கனொடு
செலவு அயர்ந்திசினால் யானே
10 அலர்சுமந்து ஒழிகஇவ் அழுங்கல் ஊரே!

எ-து: தோழி தலைவியை உடன்போக்கு வலித்தது. சிறைப்புறமாகச் சொல்லியதூஉம் ஆம்.

உலோச்சனார்

ப-ரை: சிலரும் - சிற்சிலரும், பலரும் - பற்பலரும், கடைக்கண் நோக்கி - கடைக்கண்ணாலே பார்த்து, மூக்கின்

உச்சி - மூக்கின் உச்சியிலே, சுட்டு விரல் சேர்த்தி - சுட்டு விரலை வைத்து, மறுகில் - தெருவிலுள்ள, பெண்டிர் - பெண்மக்கள், அம்பல் தூற்ற - பழிச்சொல் கூறித் தூற்றவும், சிறுகோல் - சிறிய கோல், வலந்தனள் - சுழற்றிவளாக, அன்னை - தாய், அலைப்ப - வருத்த, அலந்தனென் - யான் மிக்க துன்பம் அடைந்தவள் ஆயினேன், வாழி தோழி - தோழி வாழ்வாயாக, கானற் புது மலர் - சோலையிலுள்ள புதுமலர், தீண்டிய - வீசுகின்ற, பூநாறு - பூவினது மணம், குரூஉச் சுவல் - நிறம் பொருந்திய பிடரி மயிரை உடைய, கடுமா - விரைந்து செல்லும் குதிரை, பூண்ட நெடுந்தேர் - பூட்டப்பட்ட நெடிய தேர், கடைஇ - செலுத்தி, நடுநாள் - இரவு நடுயாமம், வரூஉம் - வருகின்ற, இயல்தேர் - இயன்ற தேரை உடைய, கொண்கனொடு - தலைவனுடன், நீ செலவயர்ந்திசினால் - யான் நீ செல்லுமாறு யான் உடன்படா நின்றேன், நீ எழுவாய். அலர் - பழி தூற்றி, சுமந்து ஒழிக - கொண்டு போகக் கடவதாக இவ் வழுங்கலூரே - இந்த இரங்கு தற்குரிய ஊரே.

முடிபு : வாழி தோழி! கொண்கனொடு செலவு அயர்ந்தி சினால் யானே; அலர் சுமந்து ஒழிக, இவ் வழுங்கல் ஊரே.

கருத்து : தலைவியை நோக்கி ஊரார் அலர் தூற்ற, அதனை உண்மையெனக் கருதிய அவள் அன்னை வருந்த தோழி யும் வருந்தி, தலைவியிடத்து, நீ தலைவனொடு செல்வாயாக, இவ்வூர் பழிதூற்றிக் கொண்டு போகட்டும் என்று கூறுகிறாள்.

அ-ள் : அலந்தனென் - துன்புற்றேன். சுவல் - பிடரி மயிர். அம்பல் - சிலரறிந்த பழிச்சொல்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு உடன்படுத்தல்.

ஒப்புமைப்பகுதி

4. அன்னை அலைத்தல்

"அலையாத் தாயரொடு நற்பா லோரே"
(குறுந். 246, 262:2)

"என் அமர்க்கண் அஞ்ஞையை அலைத்த கையே"
(அகநா. 145:21-2)

"அன்னை அலையும் அலை" (ஐங். எழு. 3:)

"அன்னையுங் கோல் கொண்டலைக்கும்" (முத். 66)

# 150. மருதம்

## பரத்தை கூற்று

நகை நன்கு உடையன் பாண நும்பெருமகன்
மிளை வலி சிதையக் களிறு பல பரப்பி
அரண் பல கடந்து முரண் கொள் தானை
வழுதி வாழிய பல எனத் தொழுது ஈண்டு
5 மன் எயிலுடையோர் போல அஃது யாம்
என்னதும் பரியலோ இலம் எனத் தண் நடைக்
கலி மா கடைஇ வந்து எம் சேரித்
தாரும் கண்ணியும் காட்டி ஒருமைய
நெஞ்சம் கொண்டமை விடுமோ வஞ்சக்
10 கண்ணுடைச் சிறுகோல் பற்றிக்
கதம் பெரிது உடையள் யாய் அழுங்கலோ இலளே.

எ-து : *தலை நின்று ஒழுகப்படா நின்ற பரத்தை தலைவனை நெருங்கிப் பாணற்கு உரைத்தது.*

### கடுவன் இளமள்ளனார்

ப-ரை : நும்பெருமகன் - உன் பெருமைக்குரிய தலைவன், நகை நன்கு உடையவன் - பலராலும் நகுதற் படுதலை உடையன், பாண - பாணனே!, மிளை - காவல், வலி - வலிமை, சிதைய - சிதையும்படி, களிறு பல பரப்பி - பலவாய யானைப் படைகளைப் பரக்க விட்டு, அரண் பல கடந்த - பற்பல அரணங்களை வென்றுகொண்ட, முரண் கொள் தானை வழுதி - வலிமை மிக்க சேனைகளை உடைய பாண்டியன் மாறன் வழுதி, வாழிய பல என - பன்னெடு நாள் வாழ்வானாக என்று, தொழுது - வணங்கி, ஈண்டு - அடைகின்ற, மன் எயிலுடையோர் போல - நிலை பெற்ற மதில்களை உடைய குறுநில மன்னர் போல, அஃது - அதற்காக, யாம் - நாம், என்னதும் - சிறிதும், பரியலோ - வருந்துதல், இலம் - செய்யவில்லை, என - என்று, தண் நடை - மென்மையான நடை, கலி மா - கனைக்கின்ற குதிரையை, கடைஇ - செலுத்தி, வந்து எம் சேரி - எமது சேரியின் இடத்து வந்து, தாரும் - பூ மாலையும், கண்ணியும் - போர்ப் பூவையும், காட்டி - காண்பித்து, ஒருமைய - ஒருமைப்பாட்டை உடைய, நெஞ்சம் - நெஞ்சத்தை, கொண்டமை - கவர்ந்து கொண்டது, விடுமோ - இனி விட்டு அமையுமோ, எம் அன்னை, வஞ்சக்

கண்ணுடை - நெருங்கிய கணுக்களை உடைய, சிறு கோல் பற்றி - சிறிய மூங்கில் கோலைக் கையிலேந்தி, கதம் பெரிதுடையள் - வெகுளி பெரிதும் உடையளாய் இரா நின்றாள்; அழுங்கலோ இலளே - சிறிதும் வருந்துகிலளே. ஆதலால் நீ இங்கே வராதே கொள்.

முடிபு : பாண! நும் பெருமகன் நகை நன்கு உடையன்.

கருத்து : பரத்தை ஒருத்தியைக் கலந்து பின்பு, அவளைக் கைவிட்டு, வேறொரு பரத்தை பாற் சென்ற தலைவனிடத்து முதற் பரத்தை வெகுள, அவ் வெகுளி தணிக்கும்படி பாணனை அவளிடத்து அனுப்ப, பாணனிடத்து, அம் முதற்பரத்தை, நும் பெருமகன் யாவராலும் நகைத்தற்குரியன் எனச் சினந்து கூறுகிறாள்.

அ-ள் : மிளை - காவற்காடு. தண் நடை - மெல்லிய நடை. கண் - மூங்கிற் கணு.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - பாணனைக் கடிதல்.

# 151. குறிஞ்சி

## தோழி கூற்று

நல்நுதல் பசப்பினும் பெருந்தோள் நெகிழினும்
கொல்முரண் இரும்புலி அரும்புழைத் தாக்கிச்
செம்மறுக் கொண்ட வெண்கோட்டு யானை
கல்மிசை அருவியின் கழூஉம் சாரல்
5 வாரற்க தில்ல தோழி கடுவன்
முறிஆர் பெருங்கிளை அறிதல் அஞ்சி
கறிவளர் அடுக்கத்து களவினில் புணர்ந்த
செம்முக மந்தி செய்குறி கருங்கால்
பொன்இணர் வேங்கைப் பூஞ்சினைச் செலீஇயர்
10 குண்டுநீர் நெடுஞ்சுனை நோக்கிக் கவிழ்ந்து தன்
புன்தலைப் பாறுமயிர் திருத்தும்
குன்ற நாடன் இரவி னானே.

எ-து : இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.

## இளநாகனார்

ப-ரை : தோழி - தலைவியே! கறிவளர் அடுக்கத்து - மிளகுக் கொடிகள் படர்ந்து வளருகின்ற மலைப் பக்கத்திலே, களவினில் - களவொழுக்கத்தில், புணர்ந்த - கடுவனோடு கூட்டம் பெற்ற, செம்முகமந்தி - சிவத்த முகத்தை உடைய பெண் குரங்கு, செல் குறி - தனக்குப் புணர்ச்சி ஏற்பட்டமையைத் தன் உறவினர் அறிவரே என்று பயந்து, கருங்கால் - கரிய காலையும், பொன் இணர் - பொன்னிறம் போன்ற, பூங்கொத்தினையும் உடைய, வேங்கை - வேங்கை மரத்தின், பூஞ்சினை - அழகிய கிளைமீது, செலீஇயர் - சென்று, குண்டு நீர் நெடுஞ்சினை நோக்கி - ஆழமாகிய சுனை நீரை நோக்கி, கவிழ்ந்து - தலை கவிழ்ந்து இருந்து, தன் புன்தலை - தன்னுடைய மெல்லிய தலையில், பாறு மயிர் திருத்தும் - புணர்ச்சியாற் சிதைந்த மயிரைச் சரி செய்யும், மலை நாடன் - அழகிய மலை நாட்டிற்குரியவன், நன்நுதல் பசப்பினும் - உனது நல்ல நெற்றி பசலை படர்ந்து காட்டினும், பெருந்தோள் நெகிழினும் - பெரிய தோள்களின் வளை நெகிழ்ந்தன ஆயினும், கொல் முரண் இரும்புலி - கொல்லும் தொழிலை உடைய வலிமை மிக்க கரிய புலியை, அரும்புழை தாக்கி - நுழைதற்கு அரிய குகையிற் சென்று மோதிக் கொன்று கிடத்தி, செம்மறுக்கொண்ட - (அதன் இரத்தம் மேலே படிதலால்) சிவந்த மறுவைக்கொண்ட, வெண் கோட்டு யானை - வெண்மை வாய்ந்த கோட்டினை உடைய களிற்றி யானை, கல்மிசை அருவியில் - மலையினின்றும் இறங்கி வருகின்ற அருவி நீரில், கழூஉம் - கழுவும், சாரல் - மலைப்பக்க வழியில், வாரற்க தில்ல - இனி எப்பொழுதும் வாராது இருப்பானாக.

முடிபு : தோழி! குன்ற நாடன் இரவில் கழூஉம் சாரல் வாரற்க என முடிக்க.

கருத்து : ஏதம் நிறைந்த இரவுக் குறியில் வருதலைத் தவிர்ந்து தலைவன் வரைந்துகொள்ள முறையோடு வருவானாக.

அ-ள் : தில் - காலத்தைக் குறித்தது. முறி - தளிர். கறி - மிளகு. குண்டு - ஆழம். பாறுதல் - சிதைதல்.

வி-ரை : இதனுள் நுதல் பசப்பினும் என்றது பசலை பரவுதலை. தோள் நெகிழினும் என்றது உடல் மிக வாடுதலை. வாரற்க என்றது அழிவில் கூட்டத்து அவன் புணர்வு மறுத்தலை. புணர்ச்சி வேறுபாட்டைப் பிறர் அறியாவண்ணம் மந்தி பாறு மயிர் திருத்தும் என்றது, களவொழுக்கத்தாலேற்பட்ட

வேறுபாட்டைப் பிறர் அறிந்துகொள்ளாதபடி நாள்தோறும் தலைவி தன்னைத் திருத்திக்கொள்வாள். மேலும் புலியை யானை கொன்றழித்து அருவியில் தன் கோட்டைக் கழுவிக் கொள்ளும் என்றது, அயலவர் கூறும் அலரைக் கெடுத்து நாளும் நேரமும் பாராது கலந்ததனால் ஆகிய துன்பத்தைப் போக்கி வரைந்துகொள்வானாக என்னும் கருத்தையும் தந்தது.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - இரவுக் குறி மறுத்து வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

1. நுதல்பசத்தலும் தோள் நெகிழ்தலும்

"பசைஇப் பசந்தன்று நுதலே
ஞெகிழ ஞெகிழ்ந்தன்று தடமென்றோளே" (குறுந். 185:1-2,

2-3. களிறு புலியைத் தாக்குதல்

"சிறுகட் பெருங்களிறு வயப்புலிதாக்கி" (குறுந். 88:2-)
(குறுந். 141:4-5, 343:1-3) (மலைபடு. 307, 517)
(கலி. 42,45,46,48) (அகநா. 291,398) (புறநா.100)

7. கறிவளர் அடுக்கம்

"கறிவளர் அடுக்கத்து இரவின் முழங்கிய"
(குறுந். 90:2, 281:1) (கலி. 52:17)

8-9. கருங்கால் வேங்கை

"அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை"
(குறுந். 26:1, 47:1, 343:5) (ஐங். 219:1) (திணைமா.26)

"அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை" (குறுந். 26)
(புறநா. 202:18)

8. செம்முக மந்தி

"குரங்கின், செம்முகப் பெருங்கிளை
யிழைப் பொலிந்தாஅங்கு" (புறநா. 378:20-21)

# 152. நெய்தல்

## தலைவன் கூற்று

மடலே காமம் தந்தது அலரே
மிடைபூ எருக்கின் அலர் தந்தன்றே
இலங்குகதிர் மழுங்கி எல்விசும்பு படரப்
புலம்பு தந்தன்றே புகன்றுசெய் மண்டிலம்
5 எல்லாம் தந்ததன் தலையும் பையென
வடந்தை துவலை தூவக் குடம்பைப்
பெடைபுணர் அன்றில்இயங்கு குரல் அளைஇ
கங்குலும் கையறவு தந்தன்று
யாங்கு ஆகுவென்கொல் அளியேன் யானே.

எ-து: மடல் வலித்த தலைவன் முன்னிலைப் புறமொழி யாக, தோழி கேட்பச் சொல்லியது.

### ஆலம்பேரி சாத்தனார்

ப-ரை: மடலே காமம் தந்தது:- யான் கொண்ட காமமோ இந்தப் பனங்கருக்காலே கட்டிய குதிரையின்மேல் ஏறி மடலேறும் நிலையைத் தந்தது. அலரே - ஊரில் தூற்றும் பழியோ, மிடை பூ எருக்கின் அலர் தந்தன்று - ஆவிரை, பூளை, உழிஞை போன்ற மலர்களைத் தொடுத்த எருக்க மாலையை எனக்குத் தந்தது. புகன்று செய் மண்டிலம் - உலகம் உவப்ப ஒளியைப் பரப்பும் ஞாயிற்று மண்டிலமோ, இலங்கு கதிர் மழுங்கி - விளங்கிய கதிர் கள் மழுக்கம் அடைந்து, எல் விசும்பு படர - தன் ஒளி விசும்பின் மேலே செல்லும்படி, புலம்பு தந்தன்று - எனக்குத் துன்பத்தைத் தந்தது, எல்லாம் தந்ததன் தலையும் - இவையனைத்தும் தந்த தோடல்லாமல், பையென - மெல்ல, வடந்தை - வாடைக் காற்று, துவலை தூவ - பனித்துளியைத் தூவுதலால், குடம்பை - தான் வாழுங்கூட்டில், பெடை புணர் அன்றில் - தன் பெடையைப் பிரியாது புணர்ந்து வாழும் அன்றிற் பறவையின், இயங்கு குரல் - ஒலிக்கின்ற குரலுடனே, அளைஇ - கலந்து, கங்குலும் - இரவும், கையறவு - செயல் இழந்த நிலையை, தந்தன்று - எனக்குத் தந்தது; யாங்கு ஆகுவென் கொல் - இவ்வளவு துன்பங்களுக்கு இடையில் யான் எவ்வாறு உயிர் பிழைப்பேன், யான் அளியேன் - எல்லோராலும் யான் அளிக்கத் தக்கேன்.

முடிபு : தந்தது; தந்தன்று; புலம்பு தந்தன்று; கையறவு தந்தன்று; யாங்காகுவென் கொல்? அளியேன் யான் என முடிக்க.

கருத்து : தலைவியிடம் யான் கொண்ட காமம் மடலேறும் நிலையைத் தந்தது. இனியான் எவ்வாறு உய்வேன்? எவ்வாறாயினும் தலைவியை என்னுடன் கூட்டுவி என்று தலைவன் தோழியிடம் கூறினான்.

அ-ள் : வடந்தை - வாடைக்காற்று. கையறவு-செயலறவு. அல் - ஒளி. புலம்பு - துன்பம்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

1-2. மடலேறுவோர் எருக்கங்கண்ணியை அணிதல்

"மாவென மடலும் ஊர்ப பூவெனக்
குவிமுகிழ் எருக்காங் கண்ணியும் சூடுப" (குறுந். 17:1-2)

"எருக்கின் பிணையலங் கண்ணி மிலைந்து
மணியார்ப்ப, ஓங்கிரும் பெண்ணை மடலூர்ந்து"
(கலித். 139:8-10)

"ஈசன சாந்தும் எருக்கும் அணிந்தோர்
கிழிபிடித்து, பாய்சின மாவென ஏறுவர்
சிறார்ப் பனைமடலே" (திருச்சிற். 74)

"எருக்கங் கண்ணியும் சூடி விருப்புடை, இடப்பால்
மடந்தை நொடிப்போழ்து தணப்பினும்
மடலூர் குறிப்புத்தோன்"
(திருவாரூர் நான்மணி. 24:12-4)

5-6. உறை அழிதுளி வாடை

"நுண்ணுற அழிதுளி தலைஇய
தண்வரல் வாடையும் பிரிந்திசினோர்க்கு அழலே"
(குறுந். 35:4-5)

7-8. அன்றில் யாமத்து நரலுதல்

"நெருப்பின் அன்ன செந்தலை அன்றில்
கையற நரலும் நள்ளென் யாமத்து" (குறுந். 160:1-4)
(தொல். களவு. 16. ந மேற். 'இநவீ')

9. யாங்காகுவென் கொல்

"யாங்கு ஆகுவள்கொல் பூங்குழை என்னும்"
(குறுந். 159:5, 337-6)
(அகநா. 14:13, 260-11; 6-7, 145:4-5)

# 153. பாலை

## தலைவி கூற்று

குணகடல் முகந்து குடக்குஏர்பு இருளி
மண்திணி ஞாலம் விளங்கக் கம்மியர்
செம்புசொரி பானையின் மின்னி எவ்வாயும்
தன்தொழில் வாய்த்த இன்குரல் எழிலி
5 தென்புல மருங்கில் சென்று அற்றாங்கு
நெஞ்சம் அவர்வயின் சென்றென ஈண்டுஒழிந்து
உண்டல் அளித்து என்உடம்பே விறல்போர்
வெஞ்சின வேந்தன் பகைஅலைக் கலங்கி
வாழ்வோர் போகிய பேர்ஊர்ப்
10 பாழ்காத் திருந்த தனிமகன் போன்றே.

எ-து : பிரிவிடை மெலிந்த தலைவி சொல்லியது.

தனிமகனார்

ப-ரை : குணகடல் முகந்து - கீழ்கடலிலே சென்று படிந்து நீரை முகந்து எழுந்து, குடக்கு ஏர்பு இருளி - மேல்பால் ஏகி எங்கும் இருள் பரவுமாறு இருண்டு, மண்திணி ஞாலம் விளங்க - அணுக்கள் செறிந்த இவ்வுலகம் அந்த இருளினின்றும் புலப்படுமாறு, கம்மியர் - இரும்புவேலை செய்யும் கொல்லர்; செம்பு சொரி பானையின் - செம்பினாற் செய்த பானையைக் கடைந்தாற்போல, மின்னி - மின்னிட்டு, எவ்வாயும் - எல்லா இடங்களிலும், தன் தொழில் வாய்த்த - தனது பெய்யுந் தொழிலை மேற்கொண்ட, இன்குரல் எழிலி - இனிய இடியோசை செய்யும் மேகம், தென் புலம் மருங்கிற் சென்றாங்கு - மழை பெய்து முடிந்தவுடன் எழுந்து தெற்குப் பக்கம் சென்றொழிந்தாற்போல, நெஞ்சம் - என் நெஞ்சம், அவர் வயிற் சென்றென - இங்கிருப்பது தவிர்ந்து அவர்பாற் சென்று அங்குத் தங்கி அங்கேயே ஒழிந்து போனதனாலே, விறல்போர் - வலிய போர் செய்யவல்ல, வெம் சின வேந்தன் - கொடிய கோபத்தை உடைய பகை மன்னனது, பகை அலைக் கலங்கி - பகை கொண்ட படை துன்புறுத்தலால் கலங்கி, வாழ்வோர் போகிய - ஊரில் வாழும் குடிமக்கள் பயந்து குடிபெயர்ந்துவிட்ட, பேரூர்ப் பாழ் காத்திருந்த - பெரிய பாழ் நகரத்தைக் காவல் செய்திருந்த, தனிமகன் போன்று - ஒரு தனிமகனைப் போன்று, என் உடம்பு

உண்டல் அளித்து - என் உடம்பு உண்பதனாற் காக்கப்படும் தன்மையாக இருக்கின்றது.

முடிபு : நெஞ்சம் அவர் வயிற் சென்றென, தனிமகன் போன்று என் உடம்பு உண்டல் அளித்து என முடிக்க.

கருத்து : தலைவனைப் பிரிந்து நான் தனிமையில் இருக்கின்றேன். என் நிலை அளிக்கத்தக்கது என்று தலைவி கூறினாள்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

களவு கற்பு இரண்டற்கும் இது பொது.

பாழ்காத்திருந்த தனிமகன் என்னும் அடைச் சிறப்பால் இச் செய்யுள் பாடிய பாவலர் தனிமகன் என்று அழைக்கப் பட்டார் போலும்.

ஒப்புமைப்பகுதி

7-10. "அத்த நண்ணிய அங்குடிச் சீறூர்

..........................

மக்கள் போகிய அணிலொடு முன்றில்
புலப்பில் போலப் புல்லென்று
அலப்பேன் தோழி அவரகன்ற ஞான்றே"

(குறுந். 41:3-6)

"கல்லெனக் கவின்பெற்ற விழவாற்றுப்
படுத்தபின், புல்லென்ற களம்போல
புலம்கொண்டமைவாளோ" (கலி. 5:10-11)

"நல்குநர் புரிந்து நலன் உணப்பட்டோர்
அல்குநர் போகிய ஊரோர் அன்னர்" (கலி. 23:10-11)

# 154. குறிஞ்சி

## தோழி கூற்று

கானமும் கம்மென் றன்றே வானமும்
வரைகிழிப்பு அன்ன மையிருள் பரப்பி
பல்குரல் எழிலி பாடு ஓவாதே
மஞ்சுதவழ் இறும்பில் களிறுவலம் படுத்த
5 வெஞ்சின உழுவைப் பேழ்வாய் ஏற்றை

அஞ்சுதக உரறும் ஓசை கேளாது
துஞ்சுதியோ இல தூவி லாட்டி
பேரஞர் பொருத புகர்படு நெஞ்சம்
நீர்அடு நெருப்பின் தணிய இன்று அவர்
10 வாரார் ஆயினோ நன்றே சாரல்
விலங்குமலை ஆர் ஆறு உள்ளுதொறும்
நிலம்பரந்து ஒழுகும் என்நிறைஇல் நெஞ்சே.

எ-து: இரவுக் குறித்தலைவன் சிறைப்புறமாக வரைவு கடாயது.

## நல்லாவூர் கிழார்

ப-ரை: இல - ஏடீ, தூ இல் ஆட்டி - வலிமையற்றவளே!, கானமும் - காடும், கம் என்று அன்றே - கம் என்று ஒலி செய்யாது அடங்குவதாயிற்று, வானமும் - ஆகாயமும், வரை கிழுப்பன்ன - மலைக்கண் அமைந்த குகையைப் போன்று, மை இருள் பரப்பி - கரிய இருளை எங்கும் பரப்பி, பல் குரல் எழிலி - பலவாய இடி முழக்கத்தை உடைய மேகம், பாடு ஓவாதே - இடைவிடாது பெருமுழக்கம் செய்கின்றது. மஞ்சு - மேகங்கள், தவழ் - தவழு கின்ற, இறும்பில் - சிறிய காட்டில், களிறு - வலம்படுத்த - வலப் பக்கம் விழும்படிக் களிற்றை அடித்து வீழ்த்திய, வெஞ்சின உழுவைப் பேழ்வாய் ஏற்றை - கொடிய கோபத்தையும் அகன்ற வாயையும் உடைய ஆண் புலி, அஞ்சுதர - கேட்டார் பயப்படும் படி, உரறும் - முழங்கும், கேளாது - இவ் ஓசைகள் அனைத்தை யும் செவியிற் கொள்ளாது, துஞ்சுதியோ - நீ தூங்குகின்றாயோ? பேரஞர் - பெரிய துன்பம் வந்து, பொருத - தாக்குதலால், புகர்படு நெஞ்சம் - குற்றப்பட்ட நெஞ்சத்தின் வெப்பமானது, நீர் அடு நெருப்பில் தணிய- நீர் பெய்த நெருப்புப்போல் தணியும்படி, இன்று - இற்றை நாள், அவர் வாரார் ஆயினோ நன்று - நம் தலைவர் வாராது இருப்பின் நல்லதாகும்; என் - என்னுடைய, நிறைஇல் நெஞ்சு - அடக்கும் திறன் அற்ற நெஞ்சம், சாரல் - மலைச் சாரலிலே, விலங்கு மலை ஆராறு - குறுக்கிட்ட மலை யினிடத்துச் செல்லும் வழியை, உள்ளுதொறும் - நினைக்குந் தோறும், நிலம் பரந்து ஒழுகும் - அந்த நிலத்தின் கொடுமை நினைந்து செல்லும். யான் என் செய்வேன்?

முடிபு: இல!, தூவிலாட்டி, ஓவாது கேள்ாது துஞ்சுதியோ! என் நிறையில் நெஞ்சம் நிலம் பரந்து ஒழுகும் என முடிக்க.

கருத்து: இரவுக் குறியின் ஏதம் கருதித் தலைவன் வாராது இருப்பின் நன்று என்று தலைவன் கேட்பக் கூறி, தோழி வரைவு கடாயினாள்.

அ-ள் : கம்மெனல் - ஒலியடங்கும் குறிப்பு. கிழிப்பு - குகை. பாடு - ஓசை. இறும்பு - சிறுகாடு. இல - ஏடி. தா - வலிமை.

வி-ரை : அடிபட்டபொழுது வலப்பக்கத்தில் விழுந்ததையே புலிதின்னும் என்ப.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

10-12. தலைவனோடு நெஞ்சு அவன் செல்லும் வழியிற் செல்லுதல்.

"அஞ்சுமன் அளித்து என் நெஞ்சம் இனியே
ஆரிருட் கங்குல் அவர் வயின்
சாரல் நீளிடைச் செலவானாதே" (குறுந் 153:3-5)

"நன்னர் நெஞ்சம் என்னொடும் நின்னொடும் சூழாது
கைம்மிக்கு,
.............................
தளரடி தாங்கிய சென்றது இன்றே"
(அகநா. 128:6-15)

# 155. நெய்தல்

## தலைவன் கூற்று

ஒள்இழை மகளிரொடு ஓரையும் ஆடாய்
வள்இதழ் நெய்தல் தொடலையும் புனையாய்
விரிபூங் கானல் ஒருசிறை நின்றோய்
யாரையோ நின்தொழுதனம் வினவுதும்
5 கண்டோர் தண்டா நலத்தை தெண்திரைப்
பெருங்கடற் பரப்பின் அமர்ந்துஉறை அணங்கோ
இருங்கழி மருங்கு நிலைபெற்று அனையோ
சொல் இனி மடந்தை என்றனென் அதன்எதிர்
முள்எயிற்று முறுவலும் திறந்தன
10 பல் இதழ் உண்கணும் பரந்தவால் பனியே.

எ-து : 1. இரண்டாங் கூட்டத்துத் தலைவியை எதிர்ப்பட்டுத் தலைவன் சொல்லியது. 2. உணர்புவயின் வாரா ஊடற்கண் தலைவன் சொன்னதூஉம் ஆம்.

பராயனார்

ப-ரை : ஒள் இழை மகளிரொடு - சிறந்த அணிகலன்களைத் தரித்த தோழிமார்களுடன், ஓரையும் ஆடாய் - பாவை விளையாட்டு ஆடினாய் இல்லை, வள் இதழ் நெய்தல் தொடலை யும் புனையாய் - பெரிய இதழ்களையுடைய நெய்தல் மலர் மாலையையும் சூடினாய் இல்லை, விரி பூங்கானல் - விரிந்த மலர் களை உடைய கடற்கரைச் சோலையின் கண்ணே, ஒரு சிறை - ஒரு பக்கம், நின்றோய் - தனித்து நிற்கும் பெண்ணே, கண்டோர் தண்டா நலத்தை - காண்போரால் கெடாத அழகினையுடைய அணங்கே!, மடந்தாய் - மடப்பம் வாய்ந்த மங்கையே! நின் - உன்னை, தொழுதனம் வினவுதும் - வணங்கினவனாய் வினாவு கின்றேன், தெண்திரைப் பெருங்கடல் பரப்பின் - தெளிந்த அலை களை உடைய பெரிய கடல் பரப்பின்கண், அமர்ந்து உறை அணங்கோ - விரும்பி வாழ்கின்ற நீரர மகளோ? இரும் கழி மருங்கு - கரிய கழி அருகிலுள்ள, நிலை பெற்றனையோ - இடத் தில் நிலைபெற்று வாழ்கின்ற நங்கையோ, யாரையோ - வேறு யாரோ? மடந்தை சொல் இனி என்றனென் - மடந்தையே! இப்பொழுது சொல்லுக என்று கூறினேன். அதன் எதிர் - அதற்கு விடையாக, முள் எயிற்று முறுவலும் திறந்தன - முள்ளைப் போன்ற கூர்மையான பற்களினின்று நகையும் உண்டாயின, பல் இதழ் உண்கணும் - ஈர் இமைகளை உடைய மை தீட்டிய கண்களும், பனி பரந்தன - நீர்த்துளிகளைச் சிதறின. ஆதலின் முன்னர் நான் கூடிய தலைவியே இப் பொழுதும் கூடுதற் குறிப்புடையளாய் நிற்கின்றாள் காண்.

முடிபு : ஆடாய், புனையாய். நின்றோய், நலத்தை, அணங்கோ, பெற்றனையோ, என்றனள் எதிர் முறுவலும் திறந்தன, கண் பனி பரந்தன என முடிக்க.

கருத்து : இடந் தலைப்பாட்டில் தலைமகன் தலைவியை வியந்து கூறி அவளின் முயங்கற் குறிப்பை கண்டு மகிழ்ந்தான்.

வி-ரை : இதனுட் கண்டோர் தண்டா நலன் என்றது கண் எச்சில் படாமை.

மெய்ப்பாடு - நகு நய மறைத்தல்.

பயன் - தலைமகன் சேறல்.

ஒப்புமைப்பகுதி

1. ஓரை மகளிர்
"ஓரை மகளிர் ஓராஅம் காட்ட" (குறுந். 316-5, 48:3)
(கலி. 75:4)

10. பல்லிதழ் உண்கண்
"பல்லிதழ் உண்கண் பாடு ஒல்லாவே". (குறுந். 5:5, 259:4)
"புல்லிதழ் உண்கண் பசத்தல் மற்றெவனோ"
(ஐங். 170:4, 190:4, 334:5, 351:4, 471)
"பல்லிதழ் உண்கண் பரந்தன பனியே" (அகநா. 141:14)

# 156. குறிஞ்சி

## தோழி கூற்று

நீயே அடிஅறிந்து ஒதுங்கா ஆர்இருள்வந்து எம்
கடியுடை வியல்நகர்க் காவல் நீவியும்
பேர்அன் பினையே பெருங்கல் நாட
யாமே நின்னுமின் மலையும் பாடிப் பன்னாள்
சிறுதினை காக்குவம் சேறும் அதனால்
பகல்வந் தீமோ பல்சுடர் அகல
எருவை நீடிய பெருவரைச் சிறுகுடி
அரியல் ஆர்ந்தவர் ஆயினும் பெரியர்
பாடு இமிழ்விடர் முகைமுழங்க
10 ஆடுமழை இறுத்தது எம்கோடு உயர்குன்றே.

எ-து : இரவுக்குறி மறுத்தது.

கண்ணங் கொற்றனார்

ப-ரை : பெருங் கல்நாட - பெரிய மலை நாடனே! நீயே - நீதானும் இரவில் சந்திக்க விரும்பி, அடி அறிந்து - வரும் வழி தவறிய இடத்து அவ்வழியை மெல்ல அடிவைத்து அறிந்து, ஒதுங்கா - ஒதுங்கிச் செல்லுதற்கும் கூடாத, ஆர் இருள் - நிறைந்த இருளில், வந்து - வருதலைச் செய்து, கடியுடை - காவலை உடைய, எம் - எமது, வியன் நகர்க் காவல் - பெரிய மாளிகையில் உள்ள காவலையும், நீவியும் - கடந்து வந்து, பேரன்பினையே - கூடும் பேரன்பினை உடையை, பல்பட்ர் அகல - இரவில் நீவரும் ஏதம் குறித்து யாம் அடையும் துன்பங்கள் அகலும் வண்ணம், எருவை நீடிய பெருவரை - கொறுக்கச்சி

முளைத்து அடர்ந்த பெரிய மலைப் பக்கத்தில் உள்ள, சிறுகுடி - சிறுகுடியின்கண், அரியல் - கள்ளினை, ஆர்ந்தவர் ஆயினும் - எமர் மிகவும் குடித்து மயங்கினர் என்றாலும், பெரியர் - சினம் மிகுந்தவர் ஆவர், ஆதலின் இரவில் வாரற்க. மேலும், எம் - எமது, கோடு உயர் குன்று - சிகரங்கள் உயர்ந்த குன்றின் கண்ணே, ஆடுமழை - சஞ்சரிக்கும் மேகம், பாடு இமிழ் - தான் முழங்குகின்ற இடியோசை, விடர் முகை முழங்க - பிளவுபட்ட மலைக் குகைகளிலும் எதிர் ஒலிக்கும்படி, இறுத்தது - தங்கி யிருக்கின்றது, எனவே, பகல் வந்தீமோ - எனவே பகற்பொழு தில் ஆங்கு நீ வந்து முயங்குவாயாக.

முடிபு : பெருங்கல் நாட! பேரன்பினை! கோடுயர்குன்று ஆடுமழை இறுத்தது. படர்அகல பகல் வந்தீமோ என முடிக்க.

கருத்து : நாடனே. நீ இரவிடை வருதலில் உளவாடும் துன்பங்கள் பல. அதுபற்றி யாம் கவல்வோம். இனிப் பகலில் வருக என்று கூறி, தோழி வரைவு கடாயினாள்.

அ-ள் : எருவை - கொறுக்கச்சி. அரியல் - கள். விடர் - மலை வெடிப்பு. முகை - குகை.

வி-ரை : ஆரிருளும், காவலும், மழை மிகுதியும் கூறினமை யால் இரவுக்குறி மறுத்தாளாம். பகற்குறி தவறினமையானும், இரவுக்குறி மறுத்தமையானும் வரைவொடு வருவாயாக என்று குறிப்பித்தாள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

4. தலைவனது குன்றத்தைப் பாடுதல்

"தன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே" (குறுந். *23:5*)
(சிறுபாண். *128*) (ஐங். *244:2-4*) (பரி. *17:51*)
(கலி. *40, 41, 43*) (அகநா. *208:21*)
(புறநா. *131:3, 143:12, 151:12*) (சிலப். *24:3-5*)

9. விடர்முகை

"விடர்முகையடுக்கத்து விறல்கெழு சூலிக்கு"
(குறுந். *218:1, 239:2, 343:4*) (ஐங். *395:2*)
"சுடர்விடு நெடுங்கொடி விடர்முகை முழங்கும்". (ஐங். *395*)
(குறுந். *218:1*) (அகநா. *47:6*) (புறநா. *374:12*)

# 157. பாலை

## தலைவன் கூற்று

இருங்கண் ஞாலத்து ஈண்டுதொழில் உதவிப்
பெரும்பெயல் பொழிந்த வழிநாள் அமையத்துப்
பல்பொறி அரவின் செல்புறம் கடுப்ப
யாற்றுஅறல் நுணங்கிய நாட்பத வேனில்
5 இணர்துதை மாஅத்த புணர்குயில் விளித்தொறும்
நம்வயின் நினையும் நெஞ்சமொடு கைம்மிகக்
கேட்டொறும் கலுழுமால் பெரிதே காட்ட
குறும்பொறை அயல நெடுந்தாள் வேங்கை
அம்பூந்தாது உக்கன்ன
10 நுண்பல் தித்தி மாஅயோளே.

எ-து : பொருள்வயிற் பிரிந்த தலைவன் பருவம் உணர்ந்த நெஞ்சிற்கு உரைத்தது.

### இளவேட்டனார்

ப-ரை : இரும் கண் ஞாலத்து - பெரிய விசாலமான இம் மண்ணுலகில், ஈண்டு தொழில் உதவி - எல்லோரும் தத்தம் தொழில்களை முனைப்புடன் செய்யுமாறு பயன்பட்டு, பெரும் பெயல் - பெரிய நீருண்ட மேகம், பொழிந்த - பெருமழை பெய்து விட்ட, வழிநாள் அமையத்து - மறுநாட் காலையில், பல்பொறி அரவின் - பல புள்ளிகள் அமைந்த பாம்பு, செல் புறம் கடுப்ப - ஓடும்போது அதன் முதுகு நெளியுமாறுபோல, யாற்று அறல் நுணங்கிய - ஆற்றுநீர் நுணுகி ஓடுகின்ற, நாள்பதவேனில் - அழகு நிறைந்த இளவேனிற் காலத்திலே, இணர் துதை மாஅத்த - பூங்கொத்துக்கள் நிரம்பிய மாமரத்தின் கண் வாழும் புணர் குயில் விளித்தொறும் - பெடையுடன் புணர்ந்து குயில் கூவும்பொழுது எல்லாம், காட்ட - காட்டின் கண்ணுள்ள, குறும் பொறை அயல - சிறிய மலையின் பக்கத்தவாகிய நெடுந்தாள் வேங்கை - நீண்ட அடியை உடைய வேங்கை மரத்தின், அம் - அழகிய, பூந்தாது - பூவின் மகரந்தப் பொடிகள், உக்கன்ன - உதிர்ந்தாற் போன்ற, நுண் - நுண்ணிய, பல் - பலவாகிய, தித்தி - தேமலை உடைய, மாஅயோள் - மாமை நிறத்தை உடையாள், நம்வயின் நினையும் நெஞ்சமொடு - நம்பால் நினைந்து விடுத்த நெஞ்சுடனே, கேட்டொறும் - அக் குயில்

ஒன்றனை ஒன்று அழைக்கின்ற ஓசையைக் கேட்கும் பொழுதெல்லாம், கைம்மிக - வேட்கை எல்லை மீற, பெரிது கலுழும் - அதனால் மிகவும் அழுது துன்பப்படுமே; என் செய்வேன்.

முடிபு : மாஅயோள் நம்வயின் நினையும் நெஞ்சமொடு பெரிது கலுழும் என முடிக்க.

கருத்து : எடுத்த வினை முடிவுறவில்லை. குறித்த பருவமும் வந்துற்றது. நம்பிரிவு கருதித் தலைவி வருந்துவளே என்று தலைவன் நெஞ்சிற்குக் கூறினான்.

கைகோள் - கற்பு.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல.

ஒப்புமைப்பகுதி

1-6. குயில் மாவிலிருந்து மகிழுங் காலத்திலும் தலைவன் பிரிந்திருத்தலால் தலைவி வருந்துதல்

"ஈங்கே வருவர் இனையல் அவரென
மின்னின் தூவி இருங்குயில் பொன்னின்"

(குறுந். 192:3-6) (அகநா. 229:18-21)

9-10. தேமலுக்குப் பூந்தாது

"குண்டுநீர்த் தாமரைக் கொங்கின் அன்ன
நுண்பஃல் தித்தி மாஅயோயே" (குறுந். 300:3-4)

# 158. குறிஞ்சி

## தோழி கூற்று

அம்ம வாழி தோழி நம்வயின்
யானோ காணேன் அதுதான் கரந்தே
கல்அதர் மன்னும் கால்கொல் லும்மே
கனைஇருள் மன்னும் கண்கொல் லும்மே
5 விடர்முகைச் செறிந்த வெஞ்சின இரும்புலி
புகர்முக வேழம் புலம்பத் தாக்கி
குருதி பருகிய கொழுங்கவுள் கயவாய்
வேங்கை முதலொடு துடைக்கும்
ஓங்கு மலைநாடன் வரூஉம் ஆறே.

எ-து : ஆறுபார்த்துற்ற அச்சத்தால் சிறைப்புறமாகச் சொல்லியது.

## வெள்ளைக் குடி நாகனார்

ப-ரை : தோழி - தோழியே! வாழி - நெடுங்காலம் வாழ்வாயாக, அம்ம - நான் சொல்வதனைக் கேட்பாயாக, விடர்முகைச் செறிந்த வெஞ்சின இரும்புலி - மலைக்குகையினுள் பதுங்கி இருந்த கொடிய கோபத்தையுடைய கரிய புலியானது, புகர்முக வேழம் - புள்ளிகளைக் கொண்ட முகத்தையுடைய யானை, புலம்ப - வருந்தும் வண்ணம், தாக்கி - மோதி, குருதி பருகிய - அதன் இரத்தத்தைப் பருகிய, கொழும் கவுள் கயவாய் - கொழுவிய கவுளையுடைய பெரிய வாயை, வேங்கை முதலொடு - வேங்கையின் அடிமரத்தில், துடைக்கும் - உராய்ந்து துடைக்கின்ற, ஓங்குமலை நாடன் - உயர்ந்த மலைநாடன், வரூஉம் நெறி - வருகின்ற வழியை, யானோ காணேன் - இந் நாள்வரை யான்கண்டதே இல்லை, அப்படியிருந்தும், அதுதான் - அவன் வரும் வழிதான், நம் வயின் கரந்து - நம்மிடம் மறைந்து வந்து நம்முன் நின்று, கல் அதர் மன்னும் கால் கொல்லும் - இதுதான் அவன் வரும் வழியென்றும் நீ காண் என்றும் கூறி என்னைத் துன்புறுத்தும், கனை இருள் மன்னும் கண் கொல்லும் - இருள் வடிவாய் என் முன் நின்று, இதுதான் அவன் வருகின்ற இருட் பொழுது என்று என் கண்ணைக் கொல்லும்; யான் யாது செய்ய வல்லேன்.

முடிபு : மலைநாடன் வரூஉம் ஆறு யானோ காணேன், கால் கொல்லும், கண் கொல்லும், என் செய்வேன் எனமுடிக்க.

கருத்து : இரவுக் குறியின் ஏதம் கருதி வாரற்க என்று மறுத்து உரைத்து வரைவு கடாயது.

வி-ரை : யானையைத் தாக்கி அதன் குருதி பருகிய புலி தன் வாயை வேங்கை மரத்தின் அடியில் துடைக்கும் என்றது, ஊரினர் கூறும் பழி என்னை வருத்தி அன்னை காதினும் விழுந்து விட்டது என்பதனைக் குறிப்பித்தது.

மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - இரவுக் குறி மறுத்து வரைவு கடாயது.

ஒப்புமைப்பகுதி

5. விடர் முகை

"விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்கு"

(குறுந். 218:1, 239:3, 343:4) (ஐங். 395:2)

# 159. நெய்தல்

## தோழி கூற்று

மணிதுணிந்து அன்ன மாஇரும் பரப்பின்
உரவுத்திரை கெழீஇய பூமலி பெருந்துறை
நிலவுக்குவித்து அன்ன மோட்டுமணல் இடிகரைக்
கோடுதுணர்ந்து அன்ன குருகுஒழுக்கு எண்ணி
5 எல்லை கழிப்பினம் ஆயின் மெல்ல
வளிசீத்து வரித்த புன்னை முன்றில்
கொழுமீன் ஆர்கைச் செழுநகர்ச் செலீஇய
எழுஎனின் அவளும் ஒல்லாள் யாமும்
ஒழிஎன அல்லம் ஆயினம் யாமத்து
10 உடைதிரை ஒலியின் துஞ்சும் மலிகடல்
சில்குடிப் பாக்கம் கல்லென
அல்குவதாக நீ அமர்ந்த தேரே.

எ-து: தலைவியின் ஆற்றாமையும் உலகியலும் கூறி, வரைவு கடாயது.

**கண்ணம் புல்லனார்**

ப-ரை: மணி - நீலமணி, துணிந்து அன்ன - களங்கம் இன்றித் தெளிந்திருந்தாற் போல, மா இரும் பரப்பில் - பெரிய கரிய கடல் நீர்ப்பரப்பில், உரவு - வலிமை வாய்ந்த, திரை - அலைகள், கெழீஇய - ஓங்கி மோதுகின்ற, பூமலி - புன்னை மலர்கள் நிறைந்து பொலியும், பெருந்துறை - பெரிய துறையின் கண்ணே, நிலவுக் குவித்தன்ன - நிலவினைக் குவித்து வைத்தாற் போன்ற, மோட்டு மணல் இடிகரை - உயர்ந்த மணல்மேடு இடிந்து சரிந்த கரையின் கண்ணே, கோடு துணர்ந்து அன்ன - சங்குகளைத் தொகுதியாகத் தொடுத்தாற் போன்ற, குருகு ஒழுக்கு எண்ணி - நாரைகளின் வரிசையை எண்ணி, எல்லை - பகற்பொழுதை, கழிப்பினம் ஆயின் - நின்னோடு போக்குவேம் ஆயின், மெல்ல - மெதுவாக, வளிசீத்து - காற்று அடித்து, வரித்த - அழகு செய்த, புன்னை முன்றில் - புன்னை மரங்கள் ஓங்கிய இல் முன்னர், கொழுமீன் - கொழுவிய சிறந்த மீன் உணவை, ஆர்கை - உண்ணுதலைச் செய்யும், செழுநகர்ச் செலீஇப - வளங்கள் தங்கிய மனைக்கண் செல்லும் பொருட்டு, 'எழு' எனில் - நீ எழுந்து வருவாய் என்றால், அவளும் ஒல்லாள்.

அதற்கு அவள் உடம்படுவாள் அல்லள்; யாமும் - நாங்களும், ஒழியென - தலைவியை நோக்கி "நின் எண்ணத்தைக் கை விடுவாய்" என்று கூறும், அல்லம் ஆயினம் - தகுதியை இழந்து நிற்கின்றோம். ஆதலால் சேர்ப்பனே! யாமத்து - நடுநிசியில் உடைதிரை ஒலியில் - உடைந்து சிதறும் அலை ஓசையைக் கேட்கும், துஞ்சும் - உறங்குகின்ற, மலிகடல் - நிறைந்த கடற் கரையில் அமைந்துள்ள, சில்குடிப்பாக்கம் - சிலவாகிய குடி யிருப்புக்களை உடைய, யாவரும் வரவேற்கும் மகிழ்ச்சியால், எம் ஊர் - எமது ஊரில், நீ அமர்ந்த தேர் கல்லென அல்குவதாக - நீ விரும்பிய தேர் கல்லென்னும் ஆரவாரம் உண்டாகும்படி தங்குவதாகுக.

முடிபு : சேர்ப்ப! எல்லை கழிப்பினம், எமுஎனில் தலைவி ஒல்லாள்; யாமும் அல்லம் ஆயினம். எனவே அமர்ந்த தேர் அல்குக என முடிக்க.

கருத்து : தலைவனை நோக்கி, தோழி பகற்குறிக்குத் தலைவி வருந்துவள், நீ எம்மூர்வரின் எமர் வரவேற்பர் என்று கூறி, இனிக்கூட்டம் நிகழ்வதற்கு இடம் இல்லை, வரைந்துகொள் என்று கூறினாள்.

அ-ள் : துணிவு - தெளிவு. வரித்தல் கோலம் செய்தல். தலைவனுடன் ஆடிய முயங்கிய துறையையும் இடத்தையும் நோக்கி, தலைவி இரங்குவள் என்றமையால் அவளின் ஆற்றாமை உணர்த்தப்பட்டது. எமர் எதிர் கொள்வர் என்றமையால் உலகியல் கூறினாள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.
பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

4. ஆற்றாமை காரணமாக எதிர்ப்பட்ட பொருளை எண்ணல்

"ஈத்திலைக் குப்பை ஏறி உமணர்
உப்பொயொழுகை எண்ணுப" (புறநா. 116:7-8)

"ஊசல் மேவற் சேயிழை மகளிர்
உரல்போல் இலங்குவான் மருப்பிற்
பெருங்கை மதமாப் புகுதரின் அவற்றுள்
விருந்தின் வீழ்பிடி எண்ணுமுறை பெறாஅ" (பதிற். 43)

"திரையுழந்து அசைஇய நிரைவளை
ஆயமொடுப் பின்குப்பையேறி எற்பட
வருதிமில் எண்ணுந் துறைவனொடு" (அகநா. 190)

3. மணலுக்கு நிலவு

"நிலவுக் குவித்தன்ன வெண்மணல் ஒருசிறை"
(குறுந். 123:2, 320: 8)

"நிலவெக்கர்ப் பலபெயர" (பொருந. 213)

"நிலவுக்கானல்" (மதுரைக். 114)

"நில்வடைந்த இருள்போல வலையுணங்கு மணல் முன்றில்
(பட். 82:3)

"வானிலா ஏய்க்கும் வயங்கொளி எக்கர்" (கலி. 131:17)

"நிலவின் இலங்கு மணல் மலிமறுகு" (அகநா. 200:1)

"நிலவுமணல் வியன்கானல்" (புறநா. 17:11)

"நிலவெழுந்த வாரமணல்" (திணைமா. 29)

"நிலவோரன்ன வெண்மணற் பாக்கத்து"
(தமிழ் நெறி. மேற்)

"அறல் விளங்கு நிலாமணல்" (மணி. 8:11)

# 160. குறிஞ்சி

## தலைவன் கூற்று

நயனும் நண்பும் நாணும்நண்டு உடைமையும்
பயனும் பண்பும் பாடுஅறிந்து ஒழுகலும்
நும்மினும் உடையேன் மன்னே கம்மென
எதிர்த்த தித்தி ஏர்இள வனமுலை
5 விதிர்த்து விட்டன்ன அந்நுண் சுணங்கின்
ஐம்பால் வகுத்த கூந்தல் செம்பொன்
திருநுதல் பொலிந்த தேம்பாய் ஓதி
முதுநீர் இலஞ்சி பூத்த குவளை
எதிர்மலர்ப் பிணையல் அன்ன இவள்
10 அரிமதர் மழைக்கண் காணா ஊங்கே.

எ-து : சுழற்று எதிர்மறை

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : கம்மென வெதிர்த்த தித்தி - வயிற்றின் மேன் மேலே தோன்றிய தித்தியையும், ஏர் இள வனமுலை - எழுச்சியை உடைய இளைய அழகிய கொங்கையின் மேலே, விதிர்த்து விட்டன்ன - அள்ளித் தெளித்தாற் போன்ற, அம் நுண் சுணங்கின - அழகிய நுண்ணிய தேமலையும், ஐம்பால் வகுத்த -

ஐந்து பகுதியாகப் பிரிக்கப்பட்ட, செம்பொன் திருநுதல் பொலிந்த - சிவந்து விளங்கிய நெற்றியின் மேலே பொலிவு பெற்ற, தேம்பாய் - தேன்பரவிய, கூந்தல் ஓதி - கூந்தலாகிய ஓதியையும், முதுநீர் இலஞ்சி - நாட்பட்ட நீர் நிறைந்த பொய்கையிலே, பூத்த - மலர்ந்த, குவளை - குவளைப்பூவை, எதிர்மலர்பிணையல் அன்ன - ஒன்றோடு ஒன்று எதிர்வைத்துத் தொடுத்தாற் போன்ற, இவள் - இவளின், அரிமதர் மலைக்கண் - செவ்வரி பரவிய மதர்த்த குளிர்ச்சியை உடைய கண்ணையும், காணா ஊங்கு - யான் காண்பதற்கு முன், நயனும் - யாருடனும் பழகும் உறவையும், நண்பும் - இருவகை நட்பையும், நாணும் - பிறரிடம் சென்று யாசிக்கும் தன்மையில் நாணமும், நன்குடைமையும் - இவற்றை நன்கு பெற்றிருத்தலும், பயனும் - கொடைத் தன்மையும், பண்பும் - உள்ளத்தை அடக்கும் வன்மையும், பாடு அறிந்து ஒழுகலும் - உலக இயல்பு அறிந்து நடத்தலையும். நும்மினும் - உம்மைவிட, உடையேன் மன் - யான் அவற்றை நிறைவாகப் பெற்றிருந்தேன்; இப்பொழுது இவள் கண்ணால் எல்லாம் இழந்தேன். ஆகையால் என் குறித்து நீ இரங்குவது எதனால்.

முடிபு: மழைக் கண் காணாவூங்கு நும்மினும் உடையேன் மன் என முடிக்க.

கருத்து: தலைவியின் வடிவழகைக் கண்டு யான் அனைத்தையும் இழந்தேன்.

அ-ள்: மன் - கழிவு. விதிர்த்தல் - உதிர்த்தல். கூந்தல் ஓதி - இருபெயரொட்டு. 'இவள்' என்றது நெஞ்சறிசுட்டு.

பி-ம். 3. 'நும்மினும் அறிகுவேன்'

மெய்ப்பாடு - அழுகை,

பயன் - ஆற்றாமை உரைத்தல்.

இத்தலைவியைத் தவிர பிறர் உறவு வேண்டாமை - நயன்.

அவளை அன்றி வேறு நட்பு இன்மை - நட்பு.

ஒரு பெண்ணிடம் யாசிக்க வேண்டியிருத்தலால் - நாணம் இன்மை.

தலைவிக்காக உயிரையும் கொடுக்க முற்படுதல் - கொண்ட பயன்.

களவிலொழுக வேண்டுதலின், நன்மக்கட் பண்பு இன்மை - பண்பு.

உலக ஒழுக்கம் தவிர்ந்து இணைவிழைச்சு வேண்டுதல் - பாடறிந்து ஒழுகல்.

# 161. முல்லை

## தலைவன் கூற்று

இறையும் அருந்தொழில் முடித்தெனப் பொறைய
கண்போல் நீலம் சுனைதொறும் மலர
வீததர் வேங்கைய வியல்நெடும் புறவின்
இம்மென் பறவை ஈண்டுகிளை இரிய
5 நெடுந்தெரு அன்ன நேர்கொள் நெடுவழி
இளையர் ஏகுவனர் பரிப்ப, வளைஎனக்
காந்தள் வள்இதழ் கவிகுளம்பு அறுப்பத்
தோள்வலி யாப்ப, ஈண்டுநம் வரவினைப்
புள்அறி வுறீஇயன கொல்லோ தெள்ளிதில்
10 காதல் கெழுமிய நலத்தன் ஏதில்
புதல்வற் காட்டிப் பொய்க்கும்
திதலை அல்குல் தேமொழி யாட்கே.

எ-து : வினைமுற்றிப் பெயரும் தலைவன், தேர்ப்பாகன் கேட்பச் சொல்லியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : இறையும் - நம்முடைய அரசனும், அருந்தொழில் - போர்த் தொழிலை, முடித்தென - முடித்ததனால், பொறைய - மலையில் உள்ள, கண்போல் நீலம் சுனைதொறும் மலர - சுனை களில் எல்லாம் மாதர் கண்போலும் குவளை மலர, வீ ததர் வேங்கைய - மலர் செறிந்து பரவுகின்ற வேங்கை மரங்களை உடைய, வியல் நெடும் புறவின் - அகன்ற நெடிய காட்டின் கண்ணே, இம் என்ற பறவை - 'இம்' என்று பாடுகின்ற வண்டு களின், ஈண்டு கிளை இரிய - நெருங்கிய கூட்டம் இரிந்து ஓட, நெடுந்தெரு அன்ன - சோழ நாட்டில் உள்ள நெடுந்தெரு என்னும் ஊர் போன்ற, நேர் கொள் நெடுவழி - அழகு பொருந்திய நெடிய வழியிலே, இளையர் - நம்முடைய வீரர், ஏகுவனர் பரிப்ப - ஆங்காங்கே தங்கிச் செல்லாநிற்ப, காந்தள் வள் இதழ் - வெண் காந்தளின் வளவிய இதழ்கள், வளை என - சங்கு உடைந்து கிடந்தாற்போலக் கிடக்குமாறு, கவி குளம்பு அறுப்ப - குதிரையின் கவிந்த குளம்பு அறுக்க, தோள் வலி யாப்ப - தோள்களிலே வலிமிக, ஈண்டு நம் வரவினை - நெருங்கி வருகின்ற நம்முடைய

வருகையை தெள்ளிதின் - நன்றாக, காதல் கெழுமிய - அன்பு ததும்பிய நலத்தள் - நன்மையை உடையவளாய், ஏது இல் புதல்வற் காட்டிப் பொய்க்கும் - தொடர்பில்லாத வேறு ஒன்றினைத் தன் புதல்வனுக்குக் காட்டிப் பொய்ம் மொழிகூறி ஆற்றுவித்து மகிழும், திதலை அல்குல் தேமொழியாட்கு - தித்தி பரந்த அல்குலையும் இனிய மொழியையும் உடைய நமது காதலிக்கு, புள் அறிவுறீஇய கொல்லோ - நிமித்தம் காட்டும் காக்கைகள் கரைந்து அறிவுறுத்தினவோ? இவ்வாறு அவள் மகிழ்ந்திருப்ப தற்குக் காரணம் என்னையா.

முடிபு : தேமொழியாட்கு, முடித்தென, மலர, இரிய, பரிப்ப, அறுப்ப யாப்ப, புள் அறிவுறீஇயன கொல்லோ என முடிக்க.

கருத்து : வினை முடித்து நாம் மீண்டுவருதலை நிமித்தத் தால் அறிந்த தலைவி மகிழ்ந்து நிற்கும் நிலைமையை என்னென் பேன் என்று தேர்ப்பாகனிடம் தலைவன் கூறினான்.

வி-ரை : இறை என்றதனால் தலைவன் வினைவலபாங்கன் ஆதல் அறிக.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - மகிழ்தல்.

## 162. பாலை

### தலைவன் கூற்று

மனையுறை புறவின் செங்காற் பேடைக்
காமர் துணையொடு சேவல் சேரப்
புலம்புஇன்ற எழுதரு புன்கண் மாலைத்
தனியே இருத்தல் ஆற்றேன் என்றுநின்
5 பனிவார் உண்கண் பைதல் கலுழ
நும்மொடு வருவல் என்றி எம்மொடு
பெரும்பெயர்த் தந்தை நீடுபுகழ் நெடுநகர்
யாயொடு நனிமிக மடவை முனாஅது
வேலின் இற்றித் தோயா நெடுவீழ்
10 வழிநாள் ஊசலின் கோடை தூக்குதொறும்
துஞ்சுபிடி வருடும் அத்தம்
வல்லை ஆகுதல் ஒல்லுமோ நினக்கே.

எ-து : உடன் வருவேன் என்ற தலைவிக்குத் தலைவன் சொற்றது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : பெரும் பெயர்த் தந்தை - மிக்க புகழை உடைய தந்தையினது, நீடு புகழ் நெடுநகர் - உயர்ந்த புகழ் வாய்ந்த மாளிகையின்கண், யாயொடு - தன்னைப் பெற்ற நற்றாயுடன், நனி மிக மடவை - சிறிது பொழுதும் பிரியாது இருக்கும் இளமைப் பெண்ணே, முனாஅது - முன்பு, மனை உறை புறவின் - மனையிடத்து உறைகின்ற புறாக்களில், செங்கால் பேடை - சிவந்த காலையுடைய பெண்புறாவாம், காமர் துணையொடு - அழகிய தன் துணையுடன், சேவல் - ஆண்புறா, சேர - கூடி மகிழ, புலம்பின்று எழுதரும் - அவற்றை நோக்கி வருத்தம் உற எழுகின்ற துன்பம் தரும் மாலை வேளையில், தனியே - தனித்து, இருத்தல் ஆற்றேன் - பிரிந்து வாழ்தலைப் பொறேன், என்று - என்று கூறி, நின் பனுவார் உண்கண் பைதல் கறுழ - நின் நீர் வடிகின்ற மையுண்ட கண்கள் துன்புற்று அழாநிற்ப, எம்மொடு - எம்மை நோக்கி, நும்மொடு வருவல் என்றி - 'யான் நும்முடனே நீர்போகும் இடத்து உடன் வருவேன்' என்று கூறுகின்றனை, ஆனால், வேலின் - வேலினைப் போலும், இற்றி - இலையை உடைய இத்திமரத்தின், தோயா - நிலத்தில் படியாத, நெடுவீழ் - தொங்குகின்ற நெடிய விழுது, வழிநாள் ஊசலிற் கோடை தூக்கு தொறும் - விடியலில் மேல்காற்று வீசுந்தோறும் ஊசல் ஆடுதல் போன்று, துஞ்சுபிடி வருடும் அத்தம் - கீழே தூங்குகின்ற பிடியானை மேல் புரளும், அத்தம் - பாலை நிலவழியில், நினக்கு - உனக்கு, வல்லை ஆகுதல் ஒல்லுமோ - நடந்து வரும் வல்லமை உள்ளதோ. உன்னால் முடியாதன்றோ.

முடிபு : நும்மொடு வருவல் என்றி, நினக்கு அத்தம் வல்லை ஆகுதல் ஒல்லுமோ எனமுடிக்க.

கருத்து : தலைவீ! நான் செல்லும் கொடிய பாலை வனத்தின் வழி உன்னால் நடந்துவர இயலாது. என்னுடன் வருதலைத் தவிர்க என்று தலைவன் கூறினான்.

பி-ம் 10 'வழிநாரூசல்'

வி-ரை : கோடை வீசுதொறும் இத்தியின் விழுது பிடியைத் தடவும் என்றது யான் மீண்டு வரும்வரை உனக்கு உண்டாகும் ஆற்றாமையைத் தோழி ஆற்றுவிக்கும் என்றதைக் குறிப்பித்தது.

மெய்ப்பாடு - மருட்கை.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

10. காற்றுத் தூக்கல்

"கோடை தூக்குங் கானம்" (குறுந். 369:3)
"உறுவளி தூக்கும் உயர்சினை மாவின்" (கலி. 84:1)

# 163. நெய்தல்

: தோழி கூற்று

உயிர்த்தன ஆகுக அளிய நாளும்
அயிர்த்துகள் முகந்த ஆனா ஊதையொடு
எல்லியும் இரவும் என்னாது கல்லென்க்
கறங்கிசை இனமணி கைபுணர்ந்து ஒலிப்ப
5 நிலவுத் தவழ்மணற் கோடுஏறிச் செல்வர
இன்றுஎன் நெஞ்சம் போலத் தொன்றுநுனி
வருந்துமன் அளிய தாமே பெருங்கடல்
நீல்நிறப் புன்னைத் தமிஒண் கைதை
வானம் மூழ்கிய வயங்குஒளி நெடுஞ்சுடர்க்
10 கதிர்காய்ந்து எழுந்து அகம்கனலி ஞாயிற்று
வைகுறு வனப்பில் தோன்றும்
கைதைஅம் கானல் துறைவன் மாவே.

எ-து : வரைவு மலிந்து சொல்லியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : பெருங் கடல் நீல் நிறப் புன்னை - பெரிய கடலுக்குப் பக்கத்திலுள்ள கரிய நிறத்தை உடைய புன்னையின் அருகில், தமி ஒண் கைதை - தனிமையிலிருக்கின்ற சிறந்த தாழையின் ஒள்ளிய மடல், வானம் மூழ்கிய - ஆகாயம் எங்கும் பரவிய சுடரை உடைய, வயங்கு ஒளி நெடுஞ்சுடர் - விளங்கும் பிரகாசத்தை உடைய கதிரவனது, கதிர் காய்ந்து - கிரணங்கள் தாக்கி, எழுந்து அகம் கனலி - இருளை ஒட்டி எழுந்து உள்ளே கொதித்து நிற்கும், ஞாயிற்று வைகுறு வனப்பில் - ஆதித்தனுடைய பாடு சாய்கின்ற அழகு போலத் தோன்றா நிற்கும்,

கைதை அம் கானல் - அத்தகைய தாழஞ்சோலை சூழ்ந்த. துறைவன் - துறைவனுடைய, மா - குதிரைகள் தாம், நாளும் - ஒவ்வொரு நாளும், அயிர்த்துகள் - நுண்ணிய மணலை, முகந்த ஆனா ஊதையொடு - முகந்து எழுந்து அமையாது வீசும் ஊதைக் காற்றின்கண், எல்லியும் இரவும் என்னாது - இது பகல் இஃது இரவு என்று கருதாமல், கல்லென - ஒலிக்கின்ற, கறங்கு இசை இனமணி - இனிய ஒலியை உடைய ஒரு நிகரனவாகிய மணிகள், கை புணர்ந்து ஒலிப்ப - ஒருசேரக் கோத்துக் கழுத்திலே பூட்டப் பட்டக் கல்லென ஒலி செய்ய, நிலவுத் தவழ் - தன் வெண்மை நிறத்தினால் நிலவு படர்ந்தாற் போன்ற, மணற்கோடு ஏறி - மணற் குன்றுகளின் மேல் ஏறி, செல்வர - செல்லுதலால், இன்று என் நெஞ்சம்போல - என் நெஞ்சம் இப்பொழுது போல, தொன்று நனி வருந்தும் - முன்பே மிகவும் வருந்திற்று, மன் - அது நீங்கியது, அளியதாம் - அந்நெஞ்சின் தன்மையைக் காணின் மிக இரங்கத்தக்கதாம். இன்று தலைவன் வரைவொடு புகுந்தான். இனிமேல் குதிரைகள் வருந்தா. ஆகலின் முன்பு வருந்திய குதிரைகள், அளிய - அளிக்கத் தக்கனவாக இருந்தன. இனி, உயர்த்தன ஆகுக - அவை களைப்பாறுக.

முடிபு : துறைவன்மா, என்னாது ஒலிப்பச் செல்வர என் நெஞ்சம் வருந்துமன்; அவைதாம் அளிய உயிர்த்தன வாகுக எனமுடிக்க.

வி-ரை : புன்னையும் தாழையும் ஒருசேர இருக்கும் துறைவன் என்றது, அவ்விரண்டன் மணமும் ஒருசேரக் கமழ்ந்து விளங்குதல் போலத் தலைவனும் தலைவியுமாகிய நீவிர் இருவீரும் திருமணம் புரிந்து இல்லறம் நிகழ்த்திப் புதல்வரைப் பெற்றுவிளங்குவீர் என்பதைச் சுட்டிற்று.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - தலைவியை ஆற்றி உவப்பித்தல்.

ஒப்புமைப்பகுதி

3-4. கல்லென்றல்

"காதலர் அகலக் கல்லென் றவ்வே" (குறுந். 24:6)

(குறுந். 179:1, 262:1) (மலைபடு. 549) (புறநா. 184:8)

# 164. பாலை

## தோழி கூற்று

உறைதுறந்து இருந்து புறவில் தனாது
செங்கதிர்ச் செல்வன் தெறுதலின் மண்பக
உலகுமிக வருந்தி அயாவுறு காலைச்
சென்றனர் ஆயினும் நன்று செய்தனர்எனச்
5 சொல்லின் தெளிப்பவும் தெளிதல் செல்லாய்
செங்கோல் வாளிக் கொடுவில் ஆடவர்
வம்ப மாக்கள் உயிர்த்திறம் பெயர்த்தென
வெம்கடற்று அடைமுதற் படுமுடை தழீஇ
உறுபசிக் குறுநரி குறுகல் செல்லாது
10 மாறு புறக்கொடுக்கும் அத்தம்
ஊறுஇலர் ஆகுதல் உள்ளாம் மாறே.

எ-து : பொருண் முடித்து வந்தான் என்பது வாயில்கள் வாய்க் கேட்ட தோழி தலைவிக்கு உரைத்தது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : தோழீ, உறை - மழையானது, துறந்து இருந்த - பெய்யாது ஒழிந்த, புறவில் - பாலை நிலத்தின் கண், தனா அது - அந்த நிலத்தின் தெய்வமாகிய, செங்கதிர்ச் செல்வன் - சிவந்த கதிர்களை உடைய சூரியன், தெருதலின் - நன்கு காய்தலால், மண்பக - நிலம் பிளவுபட, உலகு மிக வருந்தி - அதனால் உலகம் மிக வருந்தி, அயாவுறுகாலை - துன்பம் அடைந்த பொழுது, சென்றனர் ஆயினும் - அவர் பொருள் வயிற் சென்றார் ஆதலின், நன்று செய்தனர் என - நல்லதொரு காரியத்தையே செய்தனர் என்று, {சொல்லின் - என்னுடைய சொற்களால், தெளிப்பவும் - நின்னைத் தெளிவித்த காலையும், தெளிதல் செல்லாய் - நீ தெளிவு அடைந்தாய் அல்லை, செங்கோல் வாளிக் கொடுவில் ஆடவர் - வளைந்த வில்லையுடைய ஆறலை கள்வர், செம்மை வாய்ந்த கோல் வடிவாகிய அம்பினால், வம்பமாக்கள் - வழியில் வரும் புதிய மாக்களைக் கொன்று, உயிர்திறம் பறித்தென - உயிரைப் போக்கினமையால், அவ் இறந்தவருடைய சடலங்கள், வெம்கடற்று - கொடிய வழியில், அடைமுதல் - இலைகளால் மூடப்பட்டு, படுமுடைதழீஇ - மிகுந்த முடை நாற்றம் எழுதலும், உறுபசி - மிக்க பசியை உடைய, குறுநரி - சிறிய நரிகள், குறுகல் செல்லாத - அம்முடை நாற்றத்தை வெறுத்து அங்கு நெருங்

காது, மாறு புறம் கொடுக்கும் - பின்னே திரும்பிச் செல்லா நிற்கும், சுரத்தின் கண், ஊறு இலர் ஆகுதல் - சிறிதும் இடையூறு இல்லாமல் வருதலை நினையாமையால் நீ தெளிவு பெறவில்லை. அதனை அறிந்தவர்போல இப் பருவத்து இன்று தலைவர் வந்தனர் போலும்.

முடிபு : தலைவீ! தெளிப்பவும் தெளிதல் செல்லாய். அத்தம் ஊறு இலர் ஆகுதல் உள்ளாமாறு என முடிக்க.

கருத்து : கொடிய வழியின் கண் தலைவர் வருதலை நீ விரும்பினை. அவர்க்கு வழியிடை வருஉம் துன்பங்களை எண்ணித் தெளிவாய்; என்று தோழி தலைவிக்குக் கூறினள்.

அ-ள் : உறை - மழை, கோல் வாளி - இருபெயரொட்டு. "இவ்விடத்து இம்மொழி இவர் இவர்க்குரியர் என்று அவ்விடத்து அவர் அவர்க்கு உரைப்பது முன்னம்" (தொல். பொ. 520) என்றாராகலின் இது முன்னம் என்னும் உறுப்புப் பெற்றது.

நயம் - வேடர்கள் கொன்றொழித்த பிணத்தைத் தின்ன வந்த நரி அதன் முடைநாற்றத்தைக் கண்டு அஞ்சி உண்ணாது செல்லும் என்றது, தலைவர் உன்னைப் பிரிய உன்னழகை உண்ண வந்த பசப்பு அவர் விரைவில் வந்து உனக்குத் தலையளி செய்கையில் மறைந்து ஒழியும் என்பதைச் சுட்டிற்று.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

6-7. ஆறலை கள்வர் செயல்

"கூற்றத் தன்ன கொலைவேல் மறவர்"
(குறுந். 283:5-7, 274:3-4, 297:1-4, 331:1-3)

"அற்றம் பார்த்து அல்கும் கடுங்கண் மறவர் தாம்
கொள்ளும் பொருளிலராயினும் வம்பலர், துள்ளுநர்க்
காண்மார் தொடர்ந்து உயிர்வௌவலின்" (கலி. 4:3-5)

"இறந்தோர் கைப்பொருள் இல்லையாயினும்
மெய்க்கொண்டு
இன்னுயிர் செகாஅர் விட்டகம் தப்பற்கு"
(அகநா. 109:10-12)

"அம்புதொடை அமைதி காண்மார் வம்பலர்
கலனிலராயினும் கொன்றுபுள் ளூட்டும் கல்லா இளையர்"
(அகநா. 375:3-5)

6-8. வெஞ்சுரத்து வம்பலர் இறத்தல்

"தவறெனிற் றவறோ இலவே வெஞ்சுரத்து,
உலந்த வம்பலர் உவலிடு பதுக்கை" (கலி. 24:1-5)
(அகநா. 113:18, 161:2-4, 175:1-6, 313:12-3)

8. படுமுடை

"படுமுடை பருந்து பார்த்து இருக்கும்" (குறுந். 283:7)
(அகநா. 3:5-10)

# 165. குறிஞ்சி

## தோழி கூற்று

அமர்க்கண் ஆமான் அருநிறம் முள்காது
பணைத்த பகழிப் போக்குநினைந்து கானவன்
அணங்கொடு நின்றது மலைவான் கொள்கெனக்
கடவுள் ஓங்குவரை பேண்மார் வேட்டெழுந்து
5 கிளையொடு மகிழும் குன்ற நாடன்
அடைதரும்தோறும் அருமை தனக்கு உரைப்ப
நப்புணர்வு இல்லா நயன்இலோர் நட்பு
அன்ன ஆகுக என்னான்
ஒல்காது ஒழி மிகப்பல்கின தூதே.

எ-து: நொதுமலர் வரையும் பருவத்து, தோழி தலைவிக்கு அறத்தொடு நிற்பச் சொல்லியது, (நொதுமலர் - அயலவர்) வரைவு மலிந்ததூஉம் ஆம்.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை: தோழீ, அமர்க்கண் - அமர்ந்த கண்ணினை உடைய, ஆமான் - காட்டுப் பசுவினது, அருநிறம் - அரிய மார்பிலே, முள்காது - பாய்ந்து தங்காது, பணைத்த பகழி - குறி தவறி ஒழிந்து போன பெரிய அம்பின், போக்கு நினைந்து - போக்கைக் கருதி, கானவன் - வேடுவன், அணங் கொடு நின்றது - 'இம்மலையில் தெய்வம் சஞ்சரிக்கின்றது, மலை வான் கொள்க என - மழை பெய்தால் அத் தெய்வத்தின் கோபம் தணியும் எனவே மலையை மழை வந்து சூழ்க என்று தன் உள்ளத்து எண்ணி, ஓங்கு வரை - உயர்ந்த மலையில், கடவுள் - உறையும் கடவுளை, பேண்மார் - வழிபடும் பொருட்டு, வேட்டு எழுந்து -

விரும்பி எழுந்து, கிளையொடு மகிழும் - தன் சுற்றம் சூழச் சென்று கடவுட்குப் பலியிட்டுப்பின் அதனை உண்டு மகிழும், குன்ற நாடன் - மலைக்குரிய நம் தலைவன், அடைதரும் தோறும் - இங்கு நின்னைக் காணவரும்போது எல்லாம், அருமை - நினது காணும் அருமையை, தனக்கு உரைப்ப - அவனுக்கு நான் எடுத்து உரைக்க, நப்புணர்வு - நம்மைப் புணரும், இல்லா - தன்மை இல்லாத, நயன் இலோர் - அன்பில்லாதவருடைய, நட்பு - நட்பு எல்லாம், அன்ன ஆகுக - அவ்வாறே அன்பில்லாமல் ஒழிவதாகுக, என்னா - என்று, (நீ வெறுப்பது போல்) கூறுகின்றிலன். ஒல்காது ஒழி - நீ வருந்தாது என்னிடம் அறத்தொடு நிற்பாய், மிகப் பல்கின தூது - நின்னை மணம் செய்து கொள்ளுமாறு அயலவர் விடுகின்ற தூது மிகப்பல வாயின.

முடிபு : தலைவீ! குன்றநாடன் நயன் இலோர் நட்பு அன்ன ஆகுக என்னான், ஒல்காது ஒழிக, தூது பல்கின என முடிக்க.

கருத்து : வேற்று வரைவு நேரினும் நேரும். அது நமக்குப் பண்பன்று. ஆகலின் தலைவியே அறத்தொடு நின்று நின்றுவிடு. அதுவே செய்யத்தக்கது.

அ-ள் : பணைத்தல் - தவறுதல். முள்கல் - தங்குதல்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - அறத்தொடு நிற்றல்.

ஒப்புமைப்பகுதி

1. அமர்க்கணாமான்

"அமர்க்கண் ஆமான் அஞ்செவிக் குழவி" (குறுந். 322:1)
(புறநா. 117:4-5)

7. நப்புணர்வு

"தேற்றஞ் செய்து நப்புணர்ந்தினி" (ஐங். 23)
(தொல். தொகை. 15) ((அகநா. 311:5)

# 166. பாலை

## தலைவன் கூற்று

பொன்னும் மணியும் போலும் யாழநின்
நன்னர் மேனியும் நாறுஇருங் கதுப்பும்
போதும் பணையும் போலும் யாழநின்
மாதர் உண்கணும் வனப்பின் தோளும்
5 இவைகாண் தோறும் அகம்மலிந்து யானும்
அறம்நிலை பெற்றோர் அனையேன் அதன்தலை
பொலங்தொடிப் புதல்வனும் பொய்தல் கற்றனன்
வினையும் வேறுபுலத்து இலனே நினையின்
யாதனின் பிரிவாம் மடந்தை
10 காதல் தானும் கடலினும் பெரிதே!

எ-து: செலவுக் குறிப்பினால் வேறுபட்ட கிழத்திக்குத் தலைவன் சொல்லியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை: மடந்தை - மடந்தாய்! பொன்னும் மணியும் போலும் நின் நன்னர் மேனிறம், நாறு இரும் கதுப்பும் - பொன்னைப் போலும் பிரகாசிக்கின்ற நின் வடிவமும், நீலமணி போலும் நிறத்தை உடைய மணம் வீசும் கரிய நின் கூந்தலும், போதும் பணையும் போலும் நின் மாதர் உண்கணும் வனப்பின் தோளும் - குவளை மலரைப் போலும் அழகிய மையுண்ட நின் கண்களும், மூங்கிலைப் போன்று உருண்டு திரண்ட அழகினை உடைய நின் தோள்களும், இவை காண் தோறும் - ஆகிய இவற்றைக் காணும்பொழுது எல்லாம், யானும் அகம் மலிந்து - யானும் மனம் மகிழ்ந்து, அறம் நிலை பெற்றோர் அனையேன் - தருமத்தின் கண்ணே நாட்டம் கொண்டவர் அடையும் பயனைப் பெற்றேன். அதன் தலை - அதற்கு மேலும், பொலந்தொடிப் புதல்வனும் பொய்தல் கற்றனன் - பொன் வளையல்களைத் தரித்த புதல்வனும் விளையாடத் தொடங்கிவிட்டனன்; வினையும் வேறு புலத்து இலன் - (நூல்களைப் படித்துச் சுவைப்பதைக் காட்டிலும் சிறந்தது ஒன்றும் இன்மையால்) வேற்றிடம் சென்று செய்யும் தொழில் ஒன்றும் இலேன்; காதல் தானும் கடலினும் பெரிதே - நின்பால் எனக்கு உண்டாகிய ஆசையோ கடலைக் காட்டிலும் பெரியது. நினையின் - ஆராய்ந்து

பார்க்குங்கால், யாதனிற் பிரிவாம் - நாம் ஒருவரை ஒருவர் எவ்வாறு பிரிவோம். ஆகலின் நீ வேறுபடாதே.

முடிபு : யானும் அறநிலை பெற்றோர் அனையேன், கற்றனன். இலன், யாதனிற் பிரிவாம் எனமுடிக்க.

கருத்து : தலைவியே! என் பிரிவு கருதி வருந்தற்க. உன்னை விட்டு என்றும் பிரியேன்.

அ-ள் : மாதர் - அழகு: காதல். நிரனிறையணி முன்னிரண்டு அடிகளில் அமைந்துள்ளது.

மெய்ப்பாடு - மருட்கை.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

கைகோள் - கற்பு. பிரிவுணர்ந்துவருந்துகின்ற வளைத் தேற்றுகின்றான் ஆதலில் இச் செய்யுள் பாலைத்திணை ஆயிற்று.

ஒப்புமைப்பகுதி

1-2. பொன் ஏர்மேனி
"பொன்னேர் மேனி நன்னலைஞ் சிதைத்தோர்"
(குறுந்: *319:6*)

10 காமம் பெரிது
"உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே"
(குறுந். *18:5*, *371:4*)

கடலினும் பெரிது
"கடலினும் பெரிது எமக்கு அவருடை தட்பே"
(ஐங். *184*) (குறுந். *3:2*)

# 167. நெய்தல்

## தோழி கூற்று

கருங்கோட்டுப் புன்னை குடக்குவாங்கு பெருஞ்சினை
விருந்தின் வெண்குருகு ஆர்ப்பின் ஆஅய்
வண்மகிழ் நாளவைப் பரிசில் பெற்ற
பண் அமை நெடுந்தேர்ப் பாணியின் ஒலிக்கும்
5 தண்ணம் துறைவன் தூதொடும் வந்த
பயன்தெரி பனுவல் பைதீர் பாண
நின்வாய்ப் பணிமொழி களையா பல்மாண்

புதுவீ ஞாழலொடு புன்னை தாஅம்
மணம்கமழ் கானல் மாண்நலம் இழந்த
10 இறைஏர் எல்வளைக் குறுமகள்
பிறைஏர் திருநுதல் பாஅய பசப்பே.

எ-து: தோழி பாணற்கு வாயில் மறுத்தது. தூதொடு வந்த பாணற்குச் சொல்லிதூஉம் ஆம்.

ப-ரை: புன்னை - புன்னை மரத்தினது, குடக்கு வாங்கு கருங்கோட்டுப் பெரும் சினை - மேலோங்கி வளைந்த கரிய அடிப் பகுதியை உடைய பெரிய கிளையிலே, விருந்தின் - புதிதாக வந்து தங்கிய, வெண்குருகு - வெளிய நாரை, ஆர்ப்பின் - ஒலித்தல், ஆஅய் - கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகிய ஆய் அண்டிரனது, வண் மகிழ் நாள் அவை - பெரிய மகிழ்ச்சியை உடைய, அரச சபையிலே, பரிசில் பெற்ற - இரவலர் பரிசாகப் பெற்ற, பண் அமை நெடுந் தேர்ப் பாணியின் - ஒப்பனை செய்யப் பெற்ற நெடிய தேரினது ஓசைபோல, ஒலிக்கும் - ஒலியா நிற்கும், தண்ணந் துறைவன் - குளிர்ச்சி பொருந்திய கடற்கரையை உடைய தலைவனாகிய காதலன், தூதொடும் வந்த - நின்னைத் தூதுவனாக விடுக்க எம்பால் வந்த, பயன் தெரி பனுவல் - நீ பெறும் பயனுக்குத் தக்கபடி தலைவன் சார்பாக எடுத்துக்கூறும் பனுவலை உடைய, பைதல் பாண - வருத்தம் அற்ற பாணனே, நின் வாய்ப் பணிமொழி - நின் வாயினாற் கூறப்படுகின்ற மெல்லிய பொய்ம்மொழிகள், பன்மாண் - பல மாட்சிமைப் பட்ட, புதுவீ ஞாழலொடு - புதிய ஞாழல் மலரொடு, புன்னை தாஅ - புன்னை மலரும் உதிர்ந்து பரவிய, மணம் கமழ் கானல் - மணம் கமழ்கின்ற கடற்கரையில் உள்ள சோலையின் கண்ணே, மாண் நலம் (முன்பு தலைவனால் நுகரப்பட்டுப் பின்பு) தனது மாட்சிமையுடைய நலத்துடனே, இறை ஏர் எல் வளை - கையிலுள்ள அழகிய வளையும், இழந்த - இழந்த, குறுமகள் - இளமை குன்றா தலைவியது, பிறை ஏர் - பிறையினை ஒத்த, திருநுதல் - அழகிய நெற்றியில், பாஅய - பரவிய, பசப்பு - பசலை நிறத்தை, களையா - நீக்குவன அல்ல, ஆகையால் நீ வந்தவழியே திரும்பிச் செல்லுக.

முடிபு: பாண! நின்பணிமொழி திருநுதல் பாஅய பசப்பு களையா என முடிக்க.

கருத்து: பாண! தலைவன் வந்து தலையளி செய்தால் அன்றித் தலைவியின் பசலை நீ கூறிய பொய்ம் மொழிகளால் நீங்கா.

அ-ள் : பாணி - ஒலி. ஏர் - உவமவுருபு. பணிமொழி - துனி தீர்க்க வேண்டிக்கூறும் பொய்ம்மொழி.

நயம் : நாரையினொலி தேரினொலியை ஒக்கும் என்றது. பாணன் பணிமொழி தலைவிக்கு இடியொலி போன்றுள்ளது என்னும் கருத்தையும், ஞாழலொடு புன்னைப் பூப்பரவி கமழும் என்றது தலைவனுக்குத் தலைவியோடொப்பப் பரத்தையும் கருதலாயினள் என்னும் கருத்தையும் பயந்தன.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியின் ஆற்றாமை கூறுதல்.

ஒப்புமைப்பகுதி

8-9. ஞாழலும் புன்னையும்

"எறிசுறாக் கலித்த இலங்குநீர்ப் பரப்பின்
நறுவீ ஞாழலொடு புன்னை தாஅய்" (குறுந். 318:1-2)

"புன்னையொடு ஞாழல்பூக்குந் தண்ணந் துறைவன்" (ஐங். 103:1-2)

"பொன்னிணர் ஞாழல் முனையிற் பொதியவிழ்
புன்னையம் பூஞ்சினைச் சேக்கும் துறைவன்" (ஐங். 169:2-3)

"எக்கர்ப் புன்னை இன்னிழல் அசைஇ
ஞாழல் ஓங்கு சினைத் தொடுத்த கொடுங்
கழித்தாழை வீழ் கயிற்றூசல் தூங்கி" (அகநா. 20:3-6)

"பொன்வீ ஞாழலொடு புன்னைவரிக்கும்,
கானலம் பெருந்துறை" (அகநா. 70:9-10)

"ஞாழலொடு கெழீஇப் படப்பை நின்ற முடத்தாட்
புன்னைப் பொன்னேர் நுண்டாது நோக்கி" (அகநா. 180:12-4)

11. நுதல் பசத்தல்

"பசைஇப் பசந்தன்று நுதலே" (குறுந். 87:4, 48:5, 205:7)

10. எல்வளை

"இறையோர் எல்வளை நெகிழ்வு ஓடும்யே" (ஐங். 20)

# 168. குறிஞ்சி

## தோழி கூற்று

சுரும்புண விரிந்த கருங்கால் வேங்கைப்
பெருஞ்சினைத் தொடுத்த கொழுங்கண் இறாஅல்
புள்உற்றுக் கசிந்த தீந்தேன் கல்அளைக்
குறக்குறு மாக்கள் உண்ட மிச்சிலைப்
5 புன்றலை மந்தி வன்பறழ் நக்கும்
நன்மலை நாட பண்புஎனப் படுமோ
நின்நயந்து உறைவி இன்உயிர் உள்ளாய்
அணங்குடை அரவின் ஆர்இருள் நடுநாள்
மைபடு சிறுநெறி எஃகு துணையாக
10 ஆரம் கமழும் மார்பினை
சாரல் சிறுகுடி ஈங்குநீ வரலே.

எ-து : தோழி இரவுக்குறி மறுத்தது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : சுரும்பு உண - வண்டுகள் தன்பாலுள்ள தேனைப் பருகுமாறு, விரிந்த - மலர் விரிந்த, கருங்கால் வேங்கை - கரிய அடிமரத்தை உடைய வேங்கையின், பெருஞ்சினை - பெரிய கிளையில், தொடுத்த - கட்டிய, கொழுங்கண் இறால் - கொழுவிய கண்களை உடைய தேன் அடையிலே, புள்உற்றுக் கசிந்த - தேனீக்கள் மொய்த்தலால் தேன்கசிந்து, தீந்தேன் - கல்லின் குழிகளில் வடிந்த தேன், குறக் குறுமாக்கள் - குறவரின் இளஞ் சிறுவர்கள், உண்ட மிச்சிலை - வழித்து உண்டு மிகுந்ததை, புன்தலை மந்தி - மெல்லிய தலையை உடைய மந்தியின், வன்பறழ் - வலிய குட்டிகள் சென்று, நக்கும் - உண்ணா நிற்கும், நன்மலை நாட - நல்ல மலை நாட்டிற்குத் தலைவனே! நின் நயந்து - உன்னை விரும்பி, உறைவி - உறையும், இன் உயிர் உள்ளாய் - இவளின் இனிய உயிர் படுகின்ற துன்பத்தைச் சிறிதும் எண்ணிப் பாராய், அணங்கு உடை அரவின் - வருத்துந் தன்மையை உடைய பாம்புகள் சஞ்சரிக்கும், ஆர் இருள் நடுநாள் - வருதற்கு அரிய இரவின் நடு யாமத்தில், மைபடு - மயக்கத்தைத் தரும், சிறுநெறி - சிறிய வழியில், எஃகு துணையாக - வேலையே துணையாகக் கொண்டு, ஆரம் கமழும் மார்பினை - சந்தனம் பூசுதலால் அதன் நறுமணம் வீசுகின்ற மார்பினை உடையையாய், சாரல் சிறுகுடி - சாரலின் கண்ணுள்ள சிறிய குடியாக, ஈங்கு -

இவ்விடத்து, நீ வரல் - நீ தனியே வருதல், பண்பு எனப்படுமோ - தகுதிப்பாடு உடையதாமோ? ஆகையால் இனி இங்கு இரவில் வராதே.

முடிபு : நன்மலை நாட! எஃகு துணையாக ஈங்கு நீ வரல் பண்பு எனப்படுமோ, எனமுடிக்க.

கருத்து : தலைவியின் உயிர் துன்புறும்படி இரவிலே வருதல் நினக்குப் பண்பு அன்று; விரைவில் வரைக என்றவாறு.

உள்ளுறை : வேங்கையினைத் தலைவியாகவும், சுரும்புண விரிந்தது ஏதிலாட்டியர் பழிச்சொற் கூறுவதாகவும், அதன்பால் உள்ள இறாலின் தேன் தலைவியின் இன்பமாகவும், வண்டுகள் சூழ்தல் உறவினர் சூழ்ந்து இருப்பதாகவும், கசிந்து வரும் தேனைக் குறக் குறுமாக்கள் உண்பது தலைவியின் அழகைப் பசலை உண்டொழிப்பதாகவும், எஞ்சியதைக் குரங்குக் குட்டி உண்ணுதல், எஞ்சிய நலனை ஒரோ ஒருகால் தலைவன் நுகர்வ தாகவும் கொள்க.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - இரவுக்குறி மறுத்து வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

1. கருங்கால் வேங்கை

"அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை" (புறநா. 202:18)
(குறுந். 26:1, 343:5) (ஐங். 219:1) (திணைமா. 26)

10. தலைவன் சந்தனம் பூசிவருதல்

"மலைச் செஞ்சாந்தின் ஆர மார்பினன்"
(குறுந். 321:1, 140:3) (அகநா. 100:1-4)

# 169. முல்லை

## தலைவன் கூற்று

முன்னியது முடித்தனம் ஆயின் நன்னுதல்
வருவம் என்னும் பருவரல் தீர
படும்கொல் வாழி நெடுஞ்சுவர்ப் பல்லி
பரல்தலை போகிய சிரல்தலைக் கள்ளி
5 மீமிசைக் கலித்த வீநறு முல்லை

ஆடுதலைத் துருருன் தோடுதலைப் பெயர்க்கும்
வன்கை இடையன் எல்லிப் பரீஇ
வெண்போழ் தைஇய அலங்கல்அம் தொடலை
மறுகுடன் கமழும் மாலை
10 சிறுகுடிப் பாக்கத்து எம்பெரு நகரானே.

எ-து: வினை முற்றி மீளும் தலைவன் தன் நெஞ்சிற்கு உரைத்தது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை: நெஞ்சே! நன் நுதல் - அழகிய நெற்றியை உடையவளே! முன்னியது - எடுத்த வினையை, முடித்தனம் ஆயின் - என்று முடித்தோமே அன்றே தாமதம் இன்றி, வருவம் என்னும் - வருகின்றோம் என்று கூறியவுடன், பருவரல் தீர - பிரிவினால் அவளுக்கு உண்டாகிய துன்பம் அனைத்தும் நீங்கும் வண்ணம், (நம் வருகையை) பரல் தலை போகிய - பருக்கைக் கற்கள் நிறைந்த பாலை நிலத்தின் கண் வளர்ந்து ஓங்கிய, சிரல் தலைக் கள்ளி - மீன் கொத்திப் பறவை போன்ற தலையை உடைய கள்ளியின், மீமிசைக் கலித்த - மேலே படர்ந்து தழைத்த, வீ நறு முல்லை - முல்லையின் நறிய மலரை, ஆடு தலைத் துருவின் - ஆடுகின்ற தலையை உடைய ஆட்டின், தோடு தலைப் பெயர்க்கும் - தொகுதியை மேய விடுகின்ற, வன் கை இடையன் - வலிய கையை உடைய இடையன், எல்லிப் பரீஇ - இரவிலே கொய்து, வெண்போழ் - வெள்ளிய பனங் குருத்தின் போழுடனே, தைஇய - சேர்த்துத் தொடுத்த, அலங்கல் அம் தொடலை - அசைகின்ற மாலையின் நறுமணம், மறுகுடன் கமழும் - தெருவெங்கும் கமழா நிற்கும், மாலை - இந்த மாலைப் பொழுதில், சிறு குடிப் பாக்கத்து - சிறிய குடிகளை உடைய பாக்கத்தின் கண்ணே, எம் பெரு நகரான் - அமைந்துள்ள எமது பெரிய மாளிகை இடத்து, நெடுஞ்சுவர்ப் பல்லி - நெடிய சுவரில் வாழும் பல்லி, படும் கொல் - அடித்துத் தெரிவிக்குமோ.

முடிபு: நெஞ்சமே! நெடுஞ்சுவர்ப் பல்லி, எம் பெருநகரான் வருவம் என்னும் பருவரல் தீரப் படும்கொல், வாழி எனமுடிக்க.

கருத்து: வினை முடித்து மீளும் தலைவன் தன் வருகையைச் சுவர்ப்பல்லி தலைவிக்கு முன்கூட்டியே தெரிவித்து அவள் துயர் தீர்க்குமோ என்று எண்ணிக் கூறினான்.

அ-ள்: சிரல் - சிச்சிலி என்னும் மீன் கொத்திப் பறவை. மீமிசை - மேலிடம். துரு - ஆடு. தோடு - கூட்டம். படுதல் - சொல்லுதல். 'வாய் மாண்ட பல்லி படும்' என்பது கைந்நிலை.

நயம் - இடையன் தொடுத்த கண்ணி, போமுடனே கமழும் என்றது, பல்லி சொல் கேட்ட தலைவி தன் புதல்வனுடன் மகிழ்ந்து நம் வருகையால் களிப்பு எய்தியிருப்பாள் என்பதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - நெஞ்சுடன் உசாவுதல்.

# 170. மருதம்

## தோழி கூற்று

மடக்கண் தகரக் கூந்தல் பணைத்தோள்
வார்ந்த வாலெயிற்றுச் சேர்ந்து செறிகுறங்கின்
பிணையல் அம்தழைத் தைஇத் துணையிலள்
விழவுக் களம்பொலிய வந்து நின்றனளே
5 எழுமினோ எழுமின் எம்கொழுநற் காக்கம்
ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்
பலர்உடன் கழித்த ஒள்வாள் மலையனது
ஒருவேற்கு ஓடி யாங்குநம்
பன்மையது எவனோ இவள்நன்மை தலைப்படினே.

எ-து : தோழி விறலிக்கு வாயில் மறுத்தது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : மடக்கண் - மடமை வாய்ந்த மருண்ட கண் பார்வையையும், தகரக் கூந்தல் - வாசனைச் சாந்து பூசிய கூந்தலையும், பணைத்தோள் - மூங்கில் போன்று உருண்டு திரண்ட பசிய தோள்களையும், வார்ந்தவால் எயிற்று - ஒழுங்காக அமைந்த வெள்ளிய பற்களையும், சேர்ந்து செறி குறங்கின் - திரண்டு நெருங்கிய தொடைகளையும் உடைய, துணை இலள் - ஒப்பில்லாத இவ்விறலி, பிணையல் அம் தழைத் தைஇ - கட்டிய அழகிய தழை ஆடையை உடுத்தி, விழவுக் களம் பொலிய - திருவிழாச் செய்யும் இவ் இடம் எங்கும் பொலிவு எய்துமாறு, வந்து நின்றனள் - வந்து நிற்கல் ஆயினள், காண்மின். எம் கொழுநற் காக்க - நமது காதலனை வேறொரு பரத்தை பால் இவள் கொண்டு செல்லாதபடி நாம் பாதுகாப்போம், எழுமினோ எழுமின் - அனைவரும் எழுவீர் எழுவீர், இவள் நன்மை தலைப்படின் - இவள் கொண்ட காரியம் கை

கூடுமானால், ஆரியர் துவன்றிய - ஆரியர் நெருங்கிச் செய்த போரின் கண்ணே, பேர்இசை முள்ளூர் - பெரிய புகழை உடைய முள்ளூர்ப் போர்க் களத்து, பலருடன் - பலருடன் போர்க்குச் சென்று, கழித்த - உறையினின்றும் எடுத்த, ஒள்வாள் மலையன் - ஒள்ளிய வாட் படையை உடைய மலையனது. ஒரு வேற்கு - ஒப்பற்ற வேற்படைக்கு அஞ்சி, ஓடி ஆங்கு - அந்த ஆரியப்படை ஓடியது போல, நம் பன்மையது எவனோ - நம்முடைய கூட்டமும் ஒழிய வேண்டியது அல்லாமல் வேறு யாது பயன்படும்.

முடிபு : விறலி விழவுக்களம் பொலிய வந்து நின்றனள்; இவள் நன்மை தலைப்படின் பன்மையது எவனோ. அதனால், கொழுநற் காக்க எழுமினோ எழுமின் என முடிக்க.

கருத்து : விறலி தலைவனை மற்றொரு பரத்தை பால் கொண்டுய்க்கா வண்ணம் நாம் தலைவனைப் பாதுகாக்க எழுவம் என்று தோழி வாயில் மறுத்தாள்.

அ-ள் : விறலி - விறல்படப்பாடி ஆடும் மகள். விறல் - சத்துவம். சேர் - திரட்சி.

பி-ம். 9 - இவள் வன்மை

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - வாயின் மறுத்தல்.

ஒப்புமைப்பகுதி

6. மலையன் முள்ளூர்

"பயன்கெழு முள்ளூர் மீமிசை" (புறநா. 123:5)

"முரண்கொள் துப்பிற் செவ்வேல் மலையன்" (குறுந். 312)

முள்ளூர்க்கானம்

"மலையன் மகிழாது ஈத்த இழையணி
நெடுந்தேர், பயன் கெழுமுள்ளூர் மீமிசைப்பட்ட"
(புறநா. 123:3-6)

"பறையிசை அருவி முள்ளூர்ப் பொருந" (புறநா. 126:8)

"எள்ளறு சிறப்பின் முள்ளூர் மீமிசை
அருவழி இருந்த பெருவிறல் வளவன்" (புறநா. 174:13-6)

# 171. பாலை

## தோழி கூற்று

நீர்நசைக்கு ஊக்கிய உயவல் யானை
வேனிற் குன்றத்து வெவ்வரைக் கவாஅன்
நிலம்செல செல்லாக் கயந்தலைக் குழவி
சேரிஅம் பெண்டிர் நெஞ்சத்து எறிய
5 ஊர்ஆன் கன்றொடு புகுதும் நாடன்
பன்மலை அரும்சுரம் இறப்பின் நம்விட்டு
யாங்கு வல்லுந மற்றே ஞாங்கர்
வினைப்பூண் தெண்மணி வீழ்ந்தன நிகர்ப்பக்
கழுது கால்கொள்ளும் பொழுதுகொள் பால்நாள்
10 ஆர்வ நெஞ்மொடு அளைஇ
மார்புறப் படுத்தல் மரீஇய கண்ணே.

எ-து : பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகட்கு உரைத்தது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : நீர் நசைக்கு ஊக்கிய - நீருண்ணும் வேட்கையை மேற்கொண்ட, உயவல் - வருத்தத்தை உடைய, யானை - பெண் யானை, வேனில் குன்றத்து - வெப்பம் மிக்க சிறு குன்றுகளைச் சூழ உடைய, வெவ் வரைக் கவா அன் - வெவ்விய மலைப் பக்கத்திலுள்ள, நிலம் செல - நிலத்தின் கண்ணே செல்லுதலும், செல்லா - அதனுடன் செல்லும் வலிமையற்ற, கயம் - மெல்லிய, தலை - தலையை உடைய, குழவி - யானைக் கன்று, சேரி அம் பெண்டிர் - சேரியில் வாழும் மாதர், நெஞ்சத்து எறிய - தம்முள்ளத்துத் துண்ணெனனும்படி, ஊர் ஆன் கன்றொடு - ஊரிலுள்ள பசுவின் கன்றோடு சேர்ந்து, புகுதும் நாடன் - அச் சேரியின் கண் புகும் மலை நாடன், நம் விட்டு - நம்மைவிட்டுப் பிரிந்து, பல்மலை அரும்சுரம் இறப்பின் - பலவாகிய மலைகள் இடைப்பட்ட கடத்தற்கு அரிய சுரநெறியில் செல்லின், வினைப் பூண் - கம்மியரால் கட்டப்பட்ட நல்ல தொழில் திறன் அமைந்த, தெள்மணி - தெளிந்த ஓசைகளை உடைய மணிகளைக் கொண்ட, ஞாங்கர் வீழ்ந்தன நிகர்ப்ப - களையப்பட்ட வேற் படையை ஒப்ப, கழுது - பேய்கள், கால் கொள்ளும் பொழுது கொள் பால்நாள் - நிலைகொண்டு உலாவுகின்ற பொழுது

அமைந்த நடுநிசியில், ஆர்வ நெஞ்சமொடு அளைஇ - ஆசையோடு நெஞ்சு கலந்து, மார்புறப் படுத்தல் மரீஇய கண் - அவனுடைய மார்பின்மேல் நெருங்கப் படுத்தலைப் பொருந்தின கண்கள், மற்று யாங்கு வல்லுந கொல்லோ - இனி எவ்வாறு துயில வல்லன ஆகும்?

முடிபு : நாடன் மார்பொடு படுத்தல் மரீஇய கண் யாங்கு வல்லுந என முடிக்க.

கருத்து : தலைவன் மார்பிற் கிடந்து உறங்கும் கண்கள் அவன் பிரிந்தக்கால் எவ்வாறு உறங்கும்.

அ-ள் : ஞாங்கர் - வேல். கயம் - மென்மை. கழுது - பேய்.

நயம் : யானை நீருண்ண மலைப்பக்கம் போதலும், அதன் கன்று சேரிப் பெண்டிர் அஞ்சும்படி ஆண் கன்றொடு புகும் என்றது, தலைவன் பொருள்வயிற் பிரிந்து போதலும், ஏவல் மாந்தர்தாம் தலைவி எவ்வாறு ஆற்றுவள் என்று வருந்தா நிற்ப, தலைவி என்னோடு வைகுதல் ஆவாள் என்னும் கருத்தைத் தந்தது.

மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்திருத்தல்.

ஒப்புமைப்பகுதி

1. உயவல் யானை
"நீர் நசைக்கு ஊக்கிய உயவல் யானை" (ஐங். 377)

3. கயந்தலை
"முழந்தாள் இரும்பிடிக் கயந்தலைக் குழவி"
(குறுந். 394) (கலி. 11:8)

11. தலைவன் மார்பு தலைவிக்கு இன்பம் பயத்தல்
"மருந்து பிறிதில்லை அவன் மணந்த மார்பே"
(குறுந். 68:4, 73:1, 80:7, 247:6-7, 248:1-2, 339:3-5)
"கழனி ஊரன் மார்பு பழனமாகற்க" (ஐங். 4:5, 6)
"ஊரன் மார்பே, பனித்துயில் செய்யும்
இன் சாயற்றே" (ஐங் 14:3, 4)
"மலர்ந்த மார்பிற்பாயல்" (ஐங். 205:4, 5)

# 172. நெய்தல்

## தோழி கூற்று

விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி
மறந்தனம் துறந்த காழ்முளை அகைய
நெய்பெய் தீம்பால் பெய்துஇனிது வளர்ப்ப
நும்மினும் சிறந்தது நுவ்வைஆகும் என்று
5 அன்னை கூறினள் புன்னையது சிறப்பே
அம்ம நாணுதும் நும்மொடு நகையே
விருந்திற் பாணர் விளர்இசை கடுப்ப
வலம்புரி வான்கோடு நரலும் இலங்குநீர்த்
துறைகெழு கொண்க நீநல்கின்
10 நிறைபடு நீழல் பிறவுமார் உளவே.

எ-து: பகற்குறி வந்த தலைமகனைத் தோழி வரைவு கடாயது. குறிபெயர்த்தீடுமாம்.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை: விருந்திற் பாணர் - புதியராய் வந்த பாணர், பாடுகின்ற, விளர் இசை கடுப்ப - மெல்லிய இசைப்பாட்டுப்போல, வலம்புரி வான்கோடு - வெள்ளிய வலம்புரிச் சங்கு, நரலும் - ஒலிக்கும், இலங்கு - விளங்கிய, நீர் - நீரையுடைய, துறைகெழு கொண்க - துறை பொருந்திய நெய்தல் நிலத்தலைவனே!, விளையாடு ஆயமொடு - யாம் எம்மோடு விளையாடுகின்ற தோழிமாரோடு சென்று, வெண்மணல் அழுத்தி - ஒரு நாள் வெள்ளிய மணலில் ஊன்றினேமாகி, மறந்தனம் துறந்த - மறந்து ஒழிந்த, காழ் - புன்னையின் விதையானது, அகைய - வேரூன்றி முளைத்து முளைதோன்ற, நெய்பெய் தீம்பால் - (மீண்டும் அதனை நோக்கி மகிழ்ந்து) நெய்கலந்த இனிய பாலை நீராக ஊற்றி, பெய்து இனிது வளர்ப்ப - மேன்மேலும் பெய்து இனியதாக வளர்ப்ப, (ஒருநாள் எமது அன்னை எம்மை நோக்கி) நும்மினும் சிறந்தது - நீயிர் வளர்த்து வரும் புன்னையானது நும்மைக் காட்டிலும் சிறந்தது அன்றோ?, நுவ்வை ஆகும் என்று - அது நும்முடன் பிறந்த தங்கையாகும் தகுதியுடையது கண்டீர், என்று, புன்னையது சிறப்பே - புன்னையின் சிறப்பினை, அன்னை கூறினள் - அன்னை விளங்க உரைத்தாள், நும்மொடு நகை நாணுதும் - ஆதலால் எமது தங்கையாகிய இப் புன்னையின் எதிரில் நும்மொடு நகைத்து விளையாடுதற்கும் மகிழ்வதற்

கும் யாம் வெட்கம் அடைகின்றோம்: அம்ம - அம்மையோ! நீ நல்கின் - நீ இவளை அணைந்து நல்குவையோ? (அணைய விரும்பின்) நிறைபடு நீழல் பிறவுமார் உளவே - நிறைந்த மரத்தின் நிழல் பிறவும் ஈங்குள்ளன காண். அங்குவந்து செல்லல் நன்றாம்.

முடிபு : துறைகெழுகொண்க! அன்னை கூறினாள் புன்னையது சிறப்பு, நகை நும்மொடு நாணுதும். நிறைபடு நீழல் பிறவுமார் உள என முடிக்க.

கருத்து : தலைவனே! நாம் சந்திக்கும் இடத்திற்கு அடிக்கடி அன்னை வருகின்றனள். களவு வெளிப்படினும் படும். எனவே வேறோர் இடத்திற்கு வம்மின் என்று கூறி வரைவு கடாயினாள்.

அ-ள் : விளர் -இளமை. (மென்மையும் ஆம்). வான் - வெண்மை. காழ் - விதை. அகைத்தல் - தோன்றுதல். நுவ்வை - நுமது தங்கை.

பி.ம்.3. இனிது வளர்த்தது.

மெய்ப்பாடு - மருட்கை.

பயன் - வரைவு கடாதல்.

# 173. குறிஞ்சி

## தோழி கூற்று

சுனைப்பூக் குற்றும் தொடலை தைஇயும்
மலைச்செங் காந்தள் கண்ணி தந்தும்
தன்வழிப் படூஉம் நம்நயந்து அருளி
வெறிஎன உணர்ந்த அரிய அன்னையைக்
5 கண்ணினும் கனவினும் காட்டி இந்நோய்
என்னினும் வாராது மணியில் தோன்றும்
அம்மலை கிழவோன் செய்தனன் இதுஎனின்
படுவண்டு ஆர்க்கும் பைந்தார் மார்பின்
நெடுவேட்கு ஏதம் உடைத்தோ
10 தொடியோய் கூறுமதி வினவுவல் யானே.

எ-து : தோழி தலைவிக்கு உரைப்பாளாய்ச் சிறைப் புறமாகச் சொல்லியது. அல்லது வெறி அச்சுறீஇத் தோழி அறத்தொடு நிலைநின்றதூஉம் ஆம்.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : தொடியோய்! - சிறந்த வளையல்களை அணிந்த தலைவியே! யான் வினவுவல் - யான் நின்னை ஒன்று கேட்கின்றேன், அதுதான் யாதெனில், கேள்; சுனைப்பூக் குற்றும் - சுனையின் கண்ணுள்ள மலர்களைக் கொய்தும், தொடலை வைஇயும் - அவைகளை மாலையாகத் தொடுத்தும், மலை - மலையின் கண் வளர்ந்த, செங்காந்தள் - செங்காந்தள் மலர் களைக் கொய்து, கண்ணி தந்தும் - முருகவேள் போர்க்குச் சூடும் கண்ணியாக அமைத்தும், தன்வழிப் படூஉம் - சார்த்தி அவனை வழிபடுகின்ற, நம்நயந்து அருளி - நம்மை ஆதரஞ் செய்யுமாறு விரும்பி அருளி, வெறிஎன உணர்ந்த அன்னையை - நமக்கு ஏற்பட்ட நிறவேறுபாட்டைக் கடவுள் அணங்கியது கொல்லோ என்று தவறாக உணர்ந்து வெறியாடலை வேண்டிய அன்னைக்கு, கண்ணினும் கனவினும் காட்டி - கண்ணாற் குறிப்பாகவும், உறங்கும் போழ்து கனவின் கண்ணும் தன் வடிவு புலப் படக்காட்டி, இந் நோய் - இக்காம நோய், என்னினும் வாராது - என்னாலும் வாராது, பிறவற்றாலும் ஏற்படாது என்பதைப் புலப்படுத்தி, மணியில் தோன்றும் - பார்ப்பவர்க்கு நீலமணி போலத் தோன்றா நிற்கும், அம் மலை கிழவோன் இது செய்தனன் எனில் - அழகிய மலையை உடைய ஒரு தோன்றலே இந் நோயை இவட்குச் செய்தனன் என்று உண்மையைக் கூறின், படுவண்டு ஆர்க்கும் - பொருந்திய வண்டுகள் ஆரவாரிக்கும், பைந்தார் மார்பின் - பசிய மாலையணிந்த மார்பை உடைய, நெடுவேட்கு - அந்த நெடிய முருகக் கடவுட்கு, ஏதம் உடைத்தோ - ஒரு குற்றமும் உண்டாகுமோ, கூறுமதி - அதனை ஆராய்ந்து சொல்லுவாயாக.

முடிபு : தொடியோய்! யான் வினவுவல்; நெடுவேட்கு, இந் நோய் கிழவன் எனில் ஏதம் உடைத்தோ, கூறுமதி என முடிக்க.

கருத்து : அன்னை வெறியெடுக்கின்றாள் என்று தலைவனுக்கு அறிவுறுத்தி, தோழி வரைவுகடாயினாள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவுகடாதல்.

ஒப்புமைப்பகுதி

1. குற்று

"சுனைப்பூக் குற்றும் கள்ளி சூடியும்" (பெரும். 2:128-129)
"சுனைப் பூக்குற்றுத் தொடலை தைஇப்" (குறுந். 142-1)
"பூக்குற்றெய்திய புனலணி ஊரன்" (குறுந். 142:1) (ஐங். 23)

6-7. மலைக்கு மணி

"மண்ணுறு மணியிற் றோன்றும்
தண்ணறுந் துறுகல் ஓங்கிய மலையே"
(குறுந். 367:6-7, 240-7)
"மணிநிற மால்வரை" (ஐங். 208:4)
"மணிநிறங் கொண்ட மால்வரை வெற்பில்"
(ஐங். 224:2) (பரி. திரட்டு. 1:9, 74)

# 174. பாலை

## தலைவி கூற்று

கற்றை ஈந்தின் முற்றுக்குலை அன்ன
ஆள்இல் அத்தத் தாள்அம் போந்தைக்
கோளுடை நெடுஞ்சினை ஆண்குரல் விளிப்பின்
புலிஎதிர் வழங்கும் வளிவழங்கு ஆரிடைச்
5 சென்ற காதலர் வந்தினிது முயங்கிப்
பிரியாது ஒருவழி உறையினும் பெரிதுஅழிந்து
உயங்கினை மடந்தை என்றி தோழி
அற்றும் ஆகும் அஃதுஅறியா தோர்க்கே
வீழாக் கொள்கை வீழ்ந்த கொண்டி
10 மல்லல் மார்பு மடுத்தனன்
புல்லு மற்றுஎவனோ அன்புஇலங் கடையே.

எ-து : வினைமுற்றி வந்து எய்திய காலத்து ஆற்றாளாய தலைவியைத் தோழி வற்புறீஇ நின்றாட்கு அவள் சொல்லியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : தோழி - தோழி! ஈந்தின் கற்றை முற்றுக்குலை அன்ன - ஈந்தினது திரட்சியை உடைய முற்றிய குலை போன்ற, ஆள் இல் அத்தத்து - மக்கள் சஞ்சரிக்காத வழியில் அமைந்த,

தாளம் போந்தை - தாளிப்பனையினது, கோள் உடை நெடுஞ்சினை - குலைகளை உடைய நெடிய மடலிலிருந்து, ஆண் குரல் விளிப்பின் - ஆண் பறவை தன் பெண் பறவையைக் கூவின், புலி எதிர் வழங்கும் - புலி எதிரோசை எழும்படி முழங்கா நிற்கும், வளி வழங்கு - கோடைக்காற்று வீசுகின்ற, ஆர்இடை - அரிய வழியிலே, சென்ற காதலர் - நம்மைப் பிரிந்து சென்ற நின் தலைவர், வந்து இனிது முயங்கி - மீண்டு வந்து இனிதாக உன்னை முயங்கி, பிரியாது ஒருவழி உறையினும் - நீங்காது நீங்கள் இருவரும் ஓரிடத்தே இருக்கும் காலத்திலும், பெரிது அழிந்து உயங்கினை மடந்தை - மடந்தையே! நீ மிகவும் நெஞ்சு அழிந்து ஏன் வருந்துகின்றனை, என்றி - என்று கூறுகின்றனை; அஃது - அவ்வுண்மையை, அறியாதோர்க்கு - உணராதவர்க்கு, அற்றும் ஆகும் - அவ்வாறு கேட்பது சாலும், விழாக் கொள்கை - நம் தலைவன் பிறமாதரை விரும்பாத கொள்கையனாக இருந்தும், கொண்டி - பொருளைக் கொள்ளும் பரத்தையிடம், மல்லல் மார்பு மடுத்தனன் - தன் வளமை வாய்ந்த மார்பைத் தருவனாயினன்; அன்பு இலம்கடை - என்னிடம் அன்பற்ற அவன், புல்லு மற்று எவனோ - என்னைத் தழுவிக் கொள்வதனால் யாது பயன் விளையும்.

முடிபு : சென்ற காதலர் உறையினும் உயங்கினை என்றி; மார்பு விடுத்தனன். அன்பிலங்கடை புல்லுமற்று எவனோ.

கருத்து : அன்பில்லாத தலைவனை முயங்குவதால் யாதொரு பயனும் விளையாது.

அ-ள் : கோள் - காய். கொண்டி - பரத்தை.

நயம் - (1) ஈந்தினது முற்றுக் குலையைப்போல் தாளிப்பனங் குலை இருக்கும் என்றது, பரத்தையும் என்னைப் போல் தலைவனுக்கு உரியள் ஆயினாள் என்பதையும், (2) ஆண்பறவை பெண் பறவையை அழைத்தால் புலி எதிர் ஒலி எடுத்து முழங்கும் என்றது, இல்லகத்திருக்கும் யான் கணவனை விரும்பியேற்பின் அயலே பரத்தை ஆரவாரத்தோடு தலைவனை அழைப்பள் என்பதையும் பயந்தன.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - தலைவி புலவி கூர்தல்.

# 175. நெய்தல்

## தலைவி கூற்று

நெடுங்கடல் அலைத்த கொடுந்திமிற் பரதவர்
கொழுமீன் கொள்கை அழிமணல் குவைஇ
மீன்நெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய
சிறுதீ விளக்கில் துஞ்சும் நறுமலர்ப்
5 புன்னை ஓங்கிய துறைவனொடு அன்னை
தான்அறிந்து அன்றோ இலளே பால்நாள்
சேரிஅம் பெண்டிர் சிறுசொல் நம்பிச்
சுடுவான் போல நோக்கும்
அடுபால் அன்னஎன் பசலை மெய்யே.

எ-து : தோழி சிறைப்புறமாகச் சொல்லியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : கொடும் திமில் பரதவர் - வளைந்த மீன் படகுகளை உடைய பரதவமாக்கள், நெடுங்கடல் அலைத்த - நெடிய கடலிலே சென்று வலைவீசி, கொழுமீன் கொள்ளை - வருந்திப் பிடித்துக் கொண்டு வந்த கொழுவிய மீன்களை, அழிமணற்குவைஇ - நெகிழ்ச்சியை உடைய மணற்பரப்பிலே குவித்து, மீன் நெய் அட்டி - மீன் கொழுப்பால் ஆகிய நெய்யை வார்த்து, கிளிஞ்சில் பொத்திய - கிளிஞ்சலில் ஏற்றிய, சிறுதீவிளக்கில் - சிறிய சுடர் விளக்கின் ஒளியிலே, துஞ்சும் - தூங்குகின்ற, நறுமலர்ப் புன்னை ஓங்கிய துறைவனொடு - நறிய மலரை உடைய புன்னை மரங்கள் உயர்ந்த துறைவனோடு, அன்னை தான் அறிந்து அன்றோ இலள் - (நமக்குள்ள நட்பினை களவிலே புணர்ந்ததனை) நமது அன்னைதான் முன்னரே அறிந்தவளும் இல்லை: அங்ஙனமாக, பால்நாள் - இரவு நடுநிசியில், சேரி அம் பெண்டிர் - நம் சேரியின் கண்ணுள்ள அயலுறை மாதர், சிறுசொல் நம்பி - கூறும் பழிச்சொற்களைக் கேட்டு அடுபால் அன்ன - கொதிக்கின்ற பால்போன்ற, பசலை மெய்யே -பசலைநோய் படர்ந்த என் உடலை, சுடுவான்போல- சுடுவது போல, நோக்கும் - வெறித்து நோக்கா நிற்கும்; இதனால் இனி என்னை இல்வயிற் செறிப்பினும் செறிக்கும் என் செய்வேன்.

முடிபு : அன்னை அறிந்தன்றோ இலள்; சிறுசொல் நம்பி பசலை மெய்யைச் சுடுவான்போல நோக்கும் என முடிக்க.

கருத்து : தலைவனே! இற்செறிப்பு நிகழ்வதற்கு முன்பு தலைவியை வரைந்து கொள்க. இது பசலை பாய்தலாம். காம வெம்மை மிகுதலால் சுடுபாலன்ன மெய் என்றாள். சுடு பால் மேல் ஆடை படர்தல் போல் காமத் தீயால் உடம்பிலே பசலை பரந்தது என்க.

நயம் : கடல் வேட்டையிலே சென்ற பரதவர் கொணர்ந்த மீன்களை மணலிலே குவித்துவிட்டு விளக்கு ஒளியிலே துஞ்சுவர் என்றது, தலைவன் வேற்று நாட்டிற்குச் சென்று பொருள் ஈட்டிக் கொணர்ந்து எமர் வேண்டி யாங்கு அவர் முன்றில் குவித்துப் பலரறிய மணந்து முயங்கி இன்புறுவானாக என்னும் கருத்தைத் தந்தது.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

# 176. குறிஞ்சி

## பரத்தை கூற்று

எம்நயந்து உறைவி ஆயின் யாம்நயந்து
நல்கினம் விட்டதுஎன் நலத்தோன் அவ்வயின்
சால்பின் அளித்தல் அறியாது அவட்குஅவள்
காதலள் என்னுமோ உரைத்திசின் தோழி
5 நிரைத்த யானை முகத்துவரி கடுப்பப்
போதுபொதி உடைந்த ஒண்செங் காந்தள்
வாலைழஅம் சிலம்பின் வம்புபடக் குவைஇ
யாழ்ஓர்த்தன்ன இன்குரல் இனவண்டு
அருவி முழவின் பாடொடு ஒராங்கு
10 மென்மெல இசைக்கும் சாரல்
குன்ற வேலித்தம் உறைவின் ஊரே.

எ-து : பரத்தை தலைவியின் பாங்கிக்குப் பாங்காயினார் கேட்ப விறலிக்குச் சொல்லியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : தோழி - விறலியே, எம் நயந்து உறைவி ஆயின் - தலைவி எம்மை விரும்பி உறைபவளாக இருக்கையில், யாம் நயந்து நல்கினம் விட்டது என் - யாமாக அவளை விரும்பி அவள் விரும்பியவாறு நல்கி விட்டதுதான் என்ன இருக்கின்றது, நலத்தோன் - நமது நலத்திற்குக் காரணமாக இருக்கும் தலைவனை, அவ்வயின் - அத்தலைவியின்பால், சால்பின் அளித்தல் அறியாது - யாம் பெருந்தன்மையாற் போக விட்டது அறியாது, நிரைத்த யானை முகத்து வரி கடுப்ப - நிரைத்திருக்கின்ற யானையின் முகத்திலுள்ள கோடுபோல, போது பொதி உடைந்த ஒண் செங்காந்தள் - பொதிந்த அரும்புகள் யாவும் மலர்ந்த ஒள்ளிய செங்காந்தள், வாழை அம் சிலம்பின் - வாழையை உடைய சிலம்பின்கண், வம்புபட - மணம் கமழா நிற்ப, யாழ் ஓர்த்தன்ன - யாழின் இசையைக் கேட்டால் ஒத்த, இன்குரல் இனவண்டு - இனிய குரலை உடைய கூட்டமாகிய வண்டுகள், குவைஇ - திரண்டு, அருவி முழவின் பாடொடு - அருவியாகிய முழவொலியொடு, ஒராங்கு - ஒரு தன்மைப்பட, மென்மெல - மெல்ல மெல்ல, இசைக்கும் சாரல் - ஒலிக்கும் சாரலிலே, குன்றவேலி - குன்றுகளையே வேலியாகக் கொண்ட, தம் உறைவு இன் ஊர் - அவர்கள் இருக்கின்ற ஊரினர், அவட்கு அவள் காதலள் என்னுமோ - தலைவிபால் அப் பரத்தை மிக்க அன்புடையள்; ஆதலின் அத் தலைவியின் விருப்பத்திற்கு ஏற்ப தலைவனை விடுத்தனள் என்று கூறுவரோ, உரைத்திசின் - ஆராய்ந்து ஒன்றனைக் கூறாய், அங்ஙனமானால் மீண்டும் தலைவனை நாம் நமது ஆற்றலால் கைக்கொள்வோம் காண்.

முடிபு : தம் உறைவு இன் ஊர், அவட்கு அவள் காதலள் என்னுமோ? தோழி உரைத்திசின் என முடிக்க.

கருத்து : தலைவியின் மாட்டு அன்பின் காரணமாக நாமும் அன்புடன் தலைவனை அவள் பால் விடுத்தனம். யாம் அவனை மீண்டும் பற்றுவோம் என்று பரத்தை கூறினாள்.

நயம் : சிலம்பிலே செங்காந்தள் மலர்தலும் வண்டுகள் அருவியொலியொடு சேர மெல்ல மெல்லப் பாடும் என்றது, தலைவியொடு தலைவன் மகிழ்ந்து இருப்பானாதலின் நாம் முழவு முதலியன கொண்டு பாடுவோம். அவன் மீண்டும் நம் வயத்தன் ஆவான் என்பதைக் கருதிற்று.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - பரத்தை சூழ்தல்.

ஒப்புமைப்பகுதி

5. யானை முகவரி

"களிற்று முக வரியிற்று எறும் வீபூப்ப" (புறநா. 119:2)
(கலி. 44:5) (அகநா. 349:11-12)

5-6. காந்தள் மலருக்கு யானையின் முகத்துவரி

"பொருதயானைப் புகர்முகங் கடுப்ப
மன்றத் துறுகல் மீமிசைப் பலவுடன்
ஒண்செங் காந்தள் அவிழும் நாடன்" (குறுந். 284:1-3)

9. அருவிக்கு முழவு

"துன்னரு நெடுவரைத் ததும்பிய அருவி
தண்ணென் முரசின் இமிழிசை காட்டும்"
(குறுந். 365:3-4, 78:1-2)
(அகநா. 25:21-2, 138;8-9, 172:2-4, 318:5-6)
(தஞ்சை. 22:2-6)

# 177. பாலை

## தலைவி கூற்று

பரந்துபடு கூர்எரி கானம் நைப்ப
மரம்தீ உற்ற மகிழ்தலை அம்காட்டு
ஒதுக்கு அரும்வெம்சுரம் இறந்தனர் மற்றவர்
குறிப்பின் கண்டிசின் யானே நெறிப்பட
5 வேலும் இலங்குஇலை துடைப்ப பலகையும்
பீலி சூட்டி மணிஅணி பவ்வே
பண்டினும் நனிபல அளிப்ப இனியே
வந்தன்று போலும் தோழி நொந்துநொந்து
எழுதுஎழில் உண்கண் பாவை
10 அழிதரு வெள்ளம் நீந்தும் நாளே.

எ-து. செலவுக் குறிப்பறிந்த தலைமகள் தோழிக்கு உரைத்தது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : தோழி - தோழீயே! (நமது காதலர்) பரந்து படுகூர் எரிகானம் நைப்ப - பரந்துபட்ட மிக்க தீ காடு முழுதும் அழித்தனினால், மரம் தீ உற்ற - மரங்கள் யாவும் கருகித் தீர்ந்து, மகிழ்தலை

அம் காட்டு - கண்டோர்க்கு மகிழ்ச்சி நீங்கலாகிய அக் காட்டகத்து, ஒதுக்கு அரும் வெஞ்சுரம் - ஒதுங்கி இருத்தற்கும் நிழல் இல்லாத கொடிய சுரத்தின் கண்ணே, இறந்தனர் - சென்று விட்டனர் என்பது திண்ணம், அவர் குறிப்பிற் கண்டிசின் யான் - அவர் செய்யும் செய்கையின் குறிப்பினால் யான் கண்டறிந்தேன் எவ்வாறு அறிந்தனை என்று நீ கேட்பையாயின் சொல்லுவன் கேள்; நெறிப்பட - ஒழுங்குபட, வேலும் இலங்கு இலை துடைப்ப - வேலின் விளங்கிய இலையை மாசு போகத் துடைப்பர்; அன்றி, பலகையும் - கேடயம் என்னும் பலகையையும், பீலி சூட்டி - மயிற்பீலி சூட்டி, மணி அணிபவ்வே - மணியையும் அதன்மேல் அணிவர்; மேலும், பண்டினும் - முன்னைக் காட்டிலும், நனிபல அளிப்ப - என்னை மிகப் பல படியாகப் பாராட்டி அணிசெய்வார்; அன்பு காட்டுவர்; (ஆதலின் யான்) நொந்து நொந்து - வருந்தி வருந்தி, எழுது எழில் உண்கண் பாவை - எழுதுதற்குத் தகுந்த அழகு அமைந்த மையுண்ட கண்ணிலே பாவை தோன்றாதபடி, அழிதரு வெள்ளம் நீந்து நாள் - வெள்ளம் போன்று கண்ணீர் வடிய அவ் வெள்ளத்தின் கண் விழுந்து நீந்தி உழலும் நாள், இன்னே - இப்பொழுதே, வந்தன்றுபோலும் - வந்து தங்கியதுபோலும்; இனி எவ்வாறு ஆற்றுகிற்பேன்;

முடிபு : தலைவர் வெஞ்சுரம் இறந்தனர்; வெள்ளம் நீந்து நாள் வந்தன்று என் செய்வேன்.

கருத்து : தலைவர் சுரம் போதலைத் துணிந்தனர் என்பதைக் குறிப்பால் யான் தோழி உணர்ந்தேன், அவர் பிரிவை இவ் வேனிலில் யான் எவ்வாறு ஆற்றுவேன் என்று தலைவி கூறினள்.

வி-ரை : பல பாராட்டுதலாவது கண்ணும் தோளும் நுதலும் கூந்தலும் தைவருதலும், இறுகத் தழுவலும், உறுப்புக் களைப் பலகாலும் நோக்கி நிற்றலும், நோக்கி மீளலும், வாளா உரையாடலும் முதலியன. இது துன்பத்துப் புலம்பல்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

4. செலவுக்குறிப்பு

"செப்பினஞ் செலினே செலவரி தாகுமென்று"

(குறுந். 207:1)

# 178. நெய்தல்

## தோழி கூற்று

ஆடுஅமை ஆக்கம் ஐது பிசைந்தன்ன
தோடுஅமை தூவித் தடந்தாள் நாரை
நலன் உணப்பட்ட நல்கூர் பேடை
கழிபெயர் மருங்கில் சிறுமீன் உண்ணாது
5 கைதை அம்படுசினைப் புலம்பொடு வதியும்
தண்ணம் துறைவன் தேரே கண்ணின்
காணவும் இயைந்தன்று மன்னே நாணி
நள்என் யாமத்தும் கண்படை பெறேஎன்
புள்ஒலி மணிசெத்து ஓர்ப்ப
10. விளிந்தன்றுமாது அவர்த் தெளிந்த என்நெஞ்சே.

எ-து : சிறைப்புறமாகத் தோழி செறிப்பு அறிவுறீஇயது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : ஆடு அமை ஆக்கம் ஐது பிசைந்தன்ன - அசைகின்ற மூங்கிலின் உள்ளே உரிக்கப்படும் உரியை மடித்து மெல்லியதாகப் பிசைந்து வைத்தால் ஒத்த, தோடு அமை தூவித் தடந்தாள் நாரை - தொகுதி அமைந்த சிறகுகளையும், நீண்டகால்களையும் உடைய நாரையினால், நலன் உணப்பட்ட நல்கூர் பேடை - இன்பம் நுகரப் பெற்ற செயல் அற்ற பேடை, கழி பெயர் மருங்கில் - கழிக்கரையிலே பெயரும் இடங்களில், சிறுமீன் உண்ணாது - பெயர்ந்து சென்று சிறிய மீனையும் தின்னாது, கைதை அம் படுசினை - தாழையின் பெரிய கிளையின் கண்ணே, புலம்பொடு வதியும் - வருத்தத்துடன் உறையா நிற்கும், தண் அம் துறைவன் - மெல்லிய துறைகளை உடைய நமது காதலன், தேர் - ஊர்ந்து வரும் தேரானது, கண்ணின் காணவும் இயைந் தன்று மன் - முன்பு நம்முடைய கண்ணாலேனும் காணுதற்குப் பொருந்தி இருந்தது: மன் - இப்பொழுது அது கழிந்தது; நாணி - அயலவர் கூறும் பழிச்சொல்லைக் கேட்டு அன்னை இற்செறிப்புச் செய்தலால் நாணி. நள் என் யாமத்தும் - நடுநசியிலும், கண்படை பெறே என் - கண்துயிலப் பெறேன்: புள்ஒலி - அயலிலே பறவைகள் ஒலித்தல், மணி செத்து ஓர்ப்ப - அவர் தேரின் மணிபோல் இருத்தலால் அவ் ஒலியைக் கேட்டு, அவர்த் தெளிந்த என் நெஞ்சு - அவரைத் தெளிந்து இருந்த

பெருமையை உடைய என் நெஞ்சமானது, விளிந்தன்று - இப்பொழுது அழிவு பொருந்தியது ஆயிற்று.

முடிபு: தேர் கண்ணிற் காணவும் இயைந்தன்று. நாணி கண்படை பெறேஎன். என் நெஞ்சு விளிந்தன்று என முடிக்க.

கருத்து: இல்வயிற் செறித்தமையை உள்ளுறையால் தலைவனுக்குத் தோழி அறிவுறுத்தி வரைவ கடாயினாள்.

பி.ம். 10. தவத்தெளிந்த என் நெஞ்சு

அ-ள்: ஐது - மெல்லிது. அமை - மூங்கில். தோடு - தொகுதி. செத்து - ஒத்து; உவமஉருபு.

வி-ரை: இதனுட் கண்படைபெறேஎன் என்றது கண்டுயில் மறுத்தலாம். நெஞ்சம் விளிந்து என்றது ஆங்கு நெஞ்சழிதலாம்.

உள்ளுறை: நாரையால் நலன் உணப்பட்ட பேடை பின்பு சேவலின்றித் தனியே மீனும் உண்ணாது சினையின் கண்ணே புலம்பொடு வதியும் என்றது, தலைவனால் நலன் உணப்பட்ட தலைவி மீட்டும் அவனை அடையப் பெறாது உண்டியும் விரும்பாது இற்செறிக்கப்பட்டு வருந்தி உறையா நிற்கும் என்னும் கருத்தை உணர்த்தியது.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - இற்செறிப்பு அறிவுறுத்தி வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

8. தலைவி துஞ்சாமை

"நள்ளென் றன்றே யாமம் சொல்லவிந்து

.........................

ஓர்யான் மன்ய துஞ்சா தேனே" (குறுந். 6)

8. நள்ளென் யாமம்

"கையற நரலும் நள்ளென் யாமத்து" (குறுந். 160:4)
(நெடுநல். 186) (ஐங். 324:3)
(அகநா. 103:12, 129:2, 142-20, 170-12, 279:6)

# 179. பாலை

## நற்றாய் கூற்று

இல்எழு வயலை ஈற்றுஆ தின்றென
பந்து நிலத்து எறிந்து பாவைநீக்கி
அவ்வயிறு அலைத்த என்செய்வினைக் குறுமகள்
மான்அமர்ப்பு அன்ன மையல் நோக்கமொடு
5 யானும் தாயும் மடுப்பத் தேனொடு
தீம்பால் உண்ணாள் வீங்குவனள் விம்மி
நெருநலும் அனையள் மன்னே இன்றே
மைஅணற் காளை பொய்புகல் ஆக
அருஞ்சுரம் இறந்தனள் என்பதன்
10 முருந்துஏர் வெண்பல் முகிழ்நகை திறந்தே.

எ-து : மனை மருட்சி (மனை மருட்சியாவது தலைவன் தலைவியைக் கொண்டு தலைக் கழிந்ததைச் செவிலியால் அறிந்த நற்றாய் மனைக்கண் தலைவியின் செயல்களை நினைந்து மருண்டு நொந்து நவின்றது.)

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : இல் எழு வயலை - மனையகத்து முளைத்துப் படர்ந்த வயலைக் கொடியை, ஈற்று ஆ தின்றென - கன்றை ஈன்ற பசுவானது தின்றதனால், (அது கண்டவுடன்) பந்து நிலத்து எறிந்து - தான் விளையாடிக் கொண்டிருந்த பந்தை நிலத்திலே எறிந்துவிட்டு, பாவை நீக்கி - விளையாடுதற்கு வைத்திருக்கும் கோரையாற் புனையப்பட்ட பாவையையும் கீழே கிடத்தி, அவ் வயிறு அலைத்த - தனது அழகிய வயிற்றில் அடித்துக் கொண்ட, என் செய்வினைக் குறுமகள் - செய்யும் காரியங்கள் வல்ல என் இளம் புதல்வி, மான் அமர்ப்பு அன்ன - மானின் பொருந்திய நோக்கம் போன்ற, மையல் நோக்கமொடு - மயக்கத்தைச் செய்யும் பார்வையுடன், யானும் தாயும் - யானும் செவிலித்தாயும், தேனொடு தீம்பால் - தேனொடு கலந்த பாலை அருந்துக என்று, மடுப்ப - ஊட்டவும், உண்ணாள் - உண்ணாமல், விம்மி வீங்குவனள் - விம்மி அழுபவள் ஆகி, நெருநலும் அனையள் - நேற்றும் அத் தன்மையளாக இருந்தாள். மன் - அப் பண்பு அவளிடம் நீங்கியது, இன்று - இப்பொழுது. மை அணல்காளை - கறுத்த தாடியினை உடைய காளைபோல்வானின், பொய் - பொய் உரைகளையே பற்றுக்கோடாகக் கொண்டு, தன்

முருந்து ஏர் வெண்பல் முகிழ் நகை திறந்து - மயில் இறகின் அடியைப் போன்ற தன் வெண்மையான பற்களிலே தோன்றும் நகையைத் தோற்றுவித்து, அரும் சுரம் இறந்தனள் என்ப - உடல் பட்டுச் செல்லுதற்குரிய சுரத்தின் கண்ணே சென்றனள் என்று கூறுவர். இவள் எங்ஙனம் இல்லறம் பூண்டு ஒழுகுவள் என்று அஞ்சுகின்றேன், எவ்வண்ணம் ஆற்றுவேன்.

முடிபு : குறுமகள் உண்ணாள் விம்மி வீங்குவனள்; இன்று முகிழ்நகை திறந்து அரும்சுரம் இறந்தனள் எப்படி?

கருத்து : குறுமகள் எவ்வாறு இல்லறக் கடமை பூண்டு ஒழுகும் திறனைப் பெற்றாள்.

அ-ள் : அ - அழகு. அணல் - மோவாயின் கீழுள்ள தாடி.

நயம் : வயலைக் கொடியை ஈன்ற பசு மேய்ந்ததாக அது கண்டு என் குறுமகள் வயிறு அலைத்து வருந்தியதுபோல அவளை ஏதிலாளன் துய்த்துக்கொண்டு போக யான் வயிறு அலைத்துப் புலம்பா நின்றேன் என்பது.

மெய்ப்பாடு - உவகைக் கலுழ்ச்சி.

பயன் - ஆற்றாமை நீங்குதல்.

# 180. மருதம்

## தோழி கூற்று

பழனப் பாகல் முயிறுமூசு குடம்பை
கழனி நாரை உரைத்தலின் செந்நெல்
விரவுவெள் அரிசியின் தாஅம் ஊரன்
பலர்ப்பெறல் நசைஇ நம்இல் வாரலனே
5 மாயோள் நலத்தை நம்பிவிடல் ஒல்லாளே
அன்னியும் பெரியன் அவனும் விழுமிய
இருபெரு வேந்தர் பொருகளத்து ஒழித்த
புன்னை விழுமம் போல
என்னொடு கழியும் இவ்இருவரது இகலே.

எ-து : தலைமகற்கு வாயில் நேர்ந்த தோழி தலைவியிடத்துப் பொறாமைகண்டு சொல்லியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : பழனப் பாகல் - வயலுக்கு அருகில் இருக்கின்ற பலாமரத்திலுள்ள, முயிறுமூசு குடம்பை - இலைகளைக் கூடாக்கி முயிறுகள் முட்டையிட்டு நெருங்கி உறைகின்ற அக் கூடுகளை, கழனி நாரை உரைத்தலின் - கழனியின் கண்ணே இரை புன்னுமாறு வந்த நாரை சென்று தங்கி உரிஞ்சுதலால், (அம் முயறுகளும் அவற்றின் முட்டைகளும் கலந்தபடியுள்ள) செந்நெல் அரிசியின் - சிவந்த நெல்லோடு கலந்த அரிசி உதிர்ந்து பரவினாற் போல, தாஅம் ஊரன் - உதிர்ந்து பரவாநிற்கும் வயல் சூழ்ந்த ஊரையுடைய தலைவன், பலர்ப்பெறல் நசைஇ - பரத்தை மகளிர் பலரைத் தான் பெற்று முயங்குதலை விரும்பி, நம் இல் வாரலன் - அதனால் நம் மனையகத்து வருகின்றான் அல்லன்; ஒருகால் அவன் வரினும் அப்பொழுது, மாயோள் - மாமை நிறத்தை உடையளாய தலைவி, நலத்தை நம்பி விடல் ஒல்லாள் - அவனது நலத்தை உடைய பெருந்தகைமையை விரும்பித்தான் அதன் முன் பெற்ற ஊடலையும் விட்டொழியாள். ஆகலின், அன்னியும் - அன்னி குடியில் தோன்றிய அன்னி என்பவனும், பெரியன் அவனும் - தேரழுந்தூரில் வாழ்ந்த பெரிய திதியன் என்பவனும் ஆகிய, விழுமிய இரு பெருவேந்தர் - ஆகிய சிறப்பு மிக்க இவ்விரண்டு பெரிய அரசர்கள், பொருகளத்து - போர்க் களத்தில் போரிடுகையில், ஒழித்த - அன்னி வெட்டிச் சாய்த்த, புன்னை விழுமம் போல - பூவும் மலரும் நிறைந்த புன்னைமரம் விழுதலும் அவ்விருவரின் பகைமையும் ஒழிந்தாற்போல, இவ் இருவரது இகல் - இத் தலைவியும் தலைவனுமாகிய இருவருடைய பகைமையும், என்னொடு கழியும் - யான் இறந்துபடின் என்னொருத்தியோடு நீங்கும் போலும்.

முடிபு : ஊரன் இல்வாரலன்; மாயோள் ஒல்லாள்; புன்னை விழுமம்போல இருவரது இகல் என்னொடு கழியும் எனமுடிக்க.

கருத்து : தலைவி தலைவன் மாட்டுப் புலவி நீங்கினாள் அல்லள். தலைவனும் பரத்தமை நீங்கினான் அல்லன். இவ் விருவரின் பகைமையும் யான் இறந்துபடின் நீங்கும் என்று தோழி நொந்து நவின்றாள்.

அ-ள் : பாகல் - பலா. மாயோள் - தலைவி. செந்நெல் முயிற்றுக்கும், அரிசி முட்டைக்கும் உருவுவமமாக வந்தது.

நயம் : நாரை உரிஞ்சுதலால் குடம்பையுள் முயிறு உதிரும் என்றது தலைவி சினமிகுத்தலினால் என்னுடலினின்றும் உயிர் நீங்கும் போலும் என்றதாம்.

மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - தலைவி ஊடல் தீர்தல்.

ஒப்புமைப்பகுதி

1. பழனப்பாகல்

"பழனப் பாகல் முயிறு மூசு குடம்பை" (ஐங். 99)

# 181. முல்லை

## தோழி கூற்று

உள்இறைக் குரீஇக் கார்அணற் சேவல்
பிறபுலத் துணையோடு உறைபுலத்து அல்கி
வந்ததன் செவ்வி நோக்கிப் பேடை
நெறிகிளர் ஈங்கைப் பூவின் அன்ன
5 சிறுபல் பிள்ளையொடு குடம்பை கடிதலின்
துவலையின் நனைந்த புறத்தது அயலது
கூரல் இருக்கை அருளி நெடிதுநினைந்து
ஈர நெஞ்சின் தன்வயின் விளிப்பக்
கையற வந்த மையல் மாலை
10 இரீஇய ஆகலின் இன்ஒலி இழந்த
தார்அணி புரவி தண்பயிர் துமிப்ப
வந்தன்று பெருவிறல் தேரே
உய்ந்தன் றாய்கும் இவள்ஆய் நுதற்கவினே.

எ-து: வினை முற்றிப் புகுந்தது கண்ட தோழி மகிழ்ந்து உரைத்தது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை: உள் இறைக் குரீஇ - வீட்டில் கூரையினுள்ளே வாழ்கின்ற குருவியின், கார் அணல் சேவல் - கரிய தாழ்ந்த வாயை உடைய சேவல், பிறபுலத் துணையோடு - வேற்றுப் புலத்துச் சென்று ஆங்குள்ள ஒரு குருவிப் பெடையோடு, உறை புலத்து அல்கி - மற்றொரு சார்பிலே புகுந்து புணர்ந்து அங்கே சிறிது பொழுது தாழ்ந்து இருந்து வருதலும், வந்ததன் செவ்வி நோக்கி - வந்த குருவியின் மெய்யிலே புணர்குறி வாய்த் திருப்பதை நோக்கி, பேடை - அதற்குரிமை பூண்ட பேடை,

நெறிகிளர் ஈங்கைப் பூவின் அன்ன - நெறிப்பு விளங்கிய ஈங்கையின் பூவைப் போன்ற, சிறுபல் பிள்ளையொடு - சிறிய பலவாகிய பிள்ளைகளும் தாலும் சேர நின்று, குடம்பை கடிதலின் - சேவல் குருவிக் கூட்டின் உள்ளே நுழையா வண்ணம் தடுத்தலினால், துவலையின் நனைந்த புறத்தது - மழையிலே நனைந்த புறத்தினதாகி, அயலது - பக்கத்தில், கூரல் இருக்கை அருளி - மழையாலும் குளிராலும் நடுங்கி இருப்பதை நோக்கி அருளுடன், நெடிது நினைந்து - நெடும் பொழுது ஆராய்ந்து, ஈர நெஞ்சின் - அன்பார்ந்த உள்ளத்துடன், தன் வயின் விளிப்ப - தன்னிடம் வருமாறு அழைக்க, கையற வந்த - குருவிச் சேவல் செயலற்று வரும், மையல் மாலை - மயக்கத்தைத் தரும் மாலைப்பொழுது, இரீஇய ஆகலின் - வந்து தங்கியதாகலின், இன்ஒலி இழந்த - இனிய ஒலி இழந்த, தார் அணி புரவி - மாலை அணிந்த புரவி, தண் பயிர் துமிப்ப - மெல்லிய பயிர்களை மிதியா நிற்ப, பெரு விறல் தேர் வந்தன்று - பெரிய வெற்றி பொருந்திய தலைவரது தேர் வந்திறுத்தது; (ஆதலால்) இவள் ஆய் நுதற் கவின் உய்ந்தன்று ஆகும் - இவளது சிறிய நெற்றியிலுள்ள அழகானது பசலை படராது பிழைத்ததாகும்.

முடிபு : மாலை இரீஇய வாகலின் பெருவிறல் தேர் வந்தன்று: அதனால் இவள் ஆய் நுதற்கவின் உய்ந்தன்று என முடிக்க.

கருத்து : மாலைப் பொழுதில் தலைவனது தேர் வந்தது ஆகலின் தலைவி அவன் பிரிவு கருதி ஊடாது மகிழ்ந்து வரவேற்பள்.

உள்ளுறை : வேற்றுப் புலத்தொரு பெடையைப் புணர்ந்து மீண்டு வந்த சேவலை அதனுடைய பேடை ஊடித் தன் பிள்ளைகளோடு சென்று கூட்டிற்குள் அது நுழையாவாறு தடுத்துப் பின்பு அச் சேவல் புறத்தே நனைந்து வருந்துவதை நோக்கி அன்புடன் அழையா நின்றது என்றது, முன்பு தலைவன் பரத்தையிற் பிரிந்து வருதலை அறிந்த தலைவி தன் உழையருடன் சென்று மறுத்துப் பின்பு அவன் புறத்து வருந்தி நிற்றலை அறிந்து எதிர் ஏற்றுக்கொண்டனள் என்னும் குறிப்பைத் தந்தது.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - மகிழ்தல்.

ஒப்புமைப்பகுதி

1. கார் அணற் சேவல்

"மனையுறை குரீஇக் காரணற் சேவல்" (புறநா. 318:4)

# 182. குறிஞ்சி

### தோழி கூற்று

நிலவும் மறைந்தன்று இருளும் பட்டன்று
ஓவத்து அன்ன இடனுடை வரைப்பிற்
பாவை அன்ன நப்புறம் காக்கும்
சிறந்த செல்வத்து அன்னையும் துஞ்சினள்
5 கெடுத்துப்படு நன்கலம் எடுத்துக்கொண் டாங்கு
நன்மார்பு அடைய முயங்கி மென்மெலக்
கண்டனம் வருகம் சென்மோ தோழி
கீழும் மேலும் காப்போர் நீத்த
வறுந்தலைப் பெருங்களிறு போலத்
10 தமியன் வந்தோன் பனியலை நிலையே!

எ-து : வரைவு நீட்டிப்பத் தலைமகள் ஆற்றாமை அறிந்த தோழி, சிறைப்புறமாகச் சொல்லி வரைவு கடாயது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : தோழி - தலைவி! நிலவும் மறைந்தன்று - நிலவும் மறைந்து ஒழிந்தது. இருளும் பட்டன்று - இருளும் வந்து பொருந்தியது. ஓவத்து அன்ன - சித்திரத்தில் அமைந்தால் ஒத்த, இடனுடை வரைப்பில் - அகன்ற இடத்தை உடைய வீட்டின் எல்லையிலே, பாவை அன்ன - பாவையைப் போன்ற, நப்புறம் காக்கும் - நம்மைப் புறங்காக்கின்ற, சிறந்த செல்வத்து அன்னையும் துஞ்சினள் - சிறந்த பெருமையினை உடைய அன்னையும் துயில்கின்றனள், கீழும் மேலும் காப்போர் நீத்த - கட்டுத் தறியிலே பிணித்துக் காப்பவரும் மீதேறி நடத்துபவரும் ஒழிந்த, வறுந்தலைப் பெருங்களிறு போல - சிறிய தலையை உடைய பெரிய களிற்றி யானைபோல, தமியன் வந்தோன் - தனியாக வந்த தலைவனது, பனி அலை நிலை - பனி துன்புறுத்தலால் கலக்குண்ட நிலையைச் சென்று நோக்கி, கெடுத்துப்படு நன்கலம் எடுத்துக் கொண்டாங்கு - காணாமற் போன சிறந்த அணிகலனை மீட்டும் கண்டெடுத்தாற்போல, நன்மார்பு - நம்மை இற்செறித்தலால் அடையாது இருந்த அவனுடைய நல்ல மார்பை, அடைய முயங்கி - சேரத்தழுவி மகிழ்ந்து இருந்து, மென்மெல - மெல்ல மெல்ல, கண்டனம் - அவனைப் பன்முறை நன்றாகப் பார்த்து, வருகம் - வருவோம், சென்மோ - புறப்படுவாயாக, ஆராய்ந்து கூறுவாய்.

முடிபு : மறைந்தன்று, பட்டன்று, அன்னையும் துஞ்சினள், தமியன் வந்தோன், கண்டனம் வருகம், சென்மோ எனமுடிக்க.

கருத்து : இரவுக் குறியில் ஏற்படும் ஏதப்பாடுகளை அறிந்து தலைவன் உன்னை வரைந்து கோடலே அவன் செயத்தக்கது.

வி-ரை : வரைந்து கொள்வாய் என்று தலைவரை வற்புறுத்துவார் இன்மையால் தன்னுள்ளம் ஏவியவாறு களவில் வந்து ஒழுகும் என்பாள் காப்போர் நீத்த களிறு போன்றான் என்றாள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

2. ஓவத்தன்ன

"ஓவத்தன்ன இடனுடை வரைப்பில்" (புறநா. 251:1)
"ஓவத்தன்ன உருகெழு நெடுநகர்" (பதிற். 88:28)
"ஓவத்தன்ன வினைபுனை நல்லில்" (அகநா. 98:11)

# 183. நெய்தல்

## தோழி கூற்று

தம்நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து
பிறநாட்டு உப்பின் கொள்ளை சாற்றி
நெடுநெறி ஒழுகை நிலவுமணல் நீந்தி
அவண்உறை முனிந்த ஒக்கலொடு புலம்பெயர்ந்து
5 உமணர் போகலும் இன்னாது ஆகும்
மடவை மன்ற கொண்க வயின்தோறு
இன்னாது அலைக்கும் ஊதையொடு ஒரும்
நும்இல் புலம்பின் மாலையும் உடைத்தே
இனமீன் ஆர்ந்த வெண்குருகு மிதித்த
10 வறுநீர் நெய்தல் போல
வாழாள் ஆதல் சூழா தோயே.

எ-து : வரைவிடை வைத்துப் பிரியும் தலைவற்குத் தோழி சொல்லியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : கொண்க - தலைவனே! தம் நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து - மருத நிலத்தின் கண் உப்பு வியாபாரம் செய்வோர் தமது நாட்டில் விளைந்த வெளிய நெல்லைப் பண்டிகளில் ஏற்றிச் சென்று விற்று அதற்கு விலையாக, பிற நாட்டு உப்பின் கொள்ளை சாற்றி - அயல்நாடாகிய நெய்தல் நிலத்தில் விளைந்த உப்பைப் பெற்றுக் கொண்டுபோம் விலை கூறி, நெடுநெறி ஒழுகை - நீண்ட வழியிலே வண்டிகளுடனே, நிலவு மணல் நீந்தி - நிலாப் போன்ற மணற்பரப்பைக் கடந்து, அவண் உறை முனிந்த ஒக்கலொடு- அவ்விடத்தில் தங்கியிருப்பதை வெறுத்த சுற்றத்துடன், புலம்பெயர்ந்து - அங்கு நின்றும் போந்து, உமணர் - உப்பு வாணிகர், போகலும் - செல்லுதலும், இன்னாது ஆகும் - அவர் தம் கூட்டத்துடனும் தம் வண்டிகளுட னும் சென்றமை அவ்வூர்க்குத் துன்பம் தருவது ஒன்று அன்றோ? அதுபோல, நீயும் எம்மை விட்டுப் பிரிந்து செல்வது எமக்குத் துன்பம் தருவது ஒன்றாகும். அந்தத் துன்பம் தருதற்கு, வயின் தோறும் - இடங்கள்தோறும், இன்னாது அலைக்கும் - துன்புறுத்தி வருகின்ற, ஊதையொடு - கூதிரின் ஊதைக்காற்று டன், நும் இல் - நீ இல்லாமல், புலம்பின் - தனிமையில் நின்ற, மாலையும் - துன்பம் செய்யும் மாலைப்பொழுதும் வாரா நின்றது. (அதனை அறிந்து நீ பிரிய முற்படின்) இனமீன் ஆர்ந்த - மீன் இனத்தை நிறையத் தின்ற, வெண்குருகு - வெள்ளிய நாரை, மிதித்த - மிதித்த, வறுநீர் நெய்தல் போல - நீர் வற்றிய குளத்து நெய்தல் மலர் போல, வாழாள் - இவள் ஒரு கணமும் உயிருடன் வாழாள், சூழாதோய் - அவ்வாறு இறந்துபடும் எம் தலைவியது நிலையை நினைய நீ (ஐயகோ!) மன்ற - திண்ணமாக, மடவை - அறியாமையை உடையை.

பி.ம். 6. மடவை மன்றம்ம

முடிபு : கொண்க! வறுநீர் நெய்தல்போல வாழாள் ஆதல் சூழாதோய் மன்ற மடவை, என முடிக்க.

கருத்து : தலைவன் பிரியின் தலைவி, நீர் வற்றிய குளத்தில் வாடி வதங்கும் நெய்தல் மலர்போல் துன்புறுவள் என்று தோழி கூறிச் செலவு தவிருமாறு செய்தாள்.

அ-ள் : ஒழுகை - பாண்டில் - வண்டி.

நயம் : மீன்களை மேய்ந்த செருக்கோடு நாரை, நீர் வற்றிய குளத்துச் சிறிது சிறிது மலர்ந்து வாட்டம் உறுகின்ற நெய்தல் மலரை மிதித்துக் கெடுத்தற்போல, பொருள் ஈட்டும் உள்ளத்தோடு நீ நீண்ட இடைவெளியில் ஒவ்வொரு சமயம்

நின்னைப்பெற்று ஏனைய காலத்துப் பெறாது வாடியிருக்கும் தலைவியை முற்றும் நீங்கி இறக்குமாறு செய்கின்றனை என்று தோழி குறிப்பித்தாள்.

வாழாளாதல் - துன்பத்துப் புலம்பல்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - செலவழுங்குவித்தல்.

ஒப்புமைப்பகுதி

2-3. உப்பொய் சகடம்

"அருங்கரை நின்ற உப்பொய் சகடம்" (குறுந். 165-3)
"நோன்பகட்டு உமணர் ஒழுகை" (சிறுபாண். 55)
"பெருங் கயிற்றொழுகை மருங்கிற்காப்பச்
சில்பத உணவின் கொள்ளை சாற்றி" (பெரும்பாண. 63:4)
உப்பொய் உமணர் அருந்துறை போக்குய ஒழுகை"
(அகநா. 30:5,6)
உமணர் உப்பொய் ஒழுகை" (புறநா. 116:7,8)

3. மணலுக்கு நிலவு
159ஆம் செய்யுளின் ஒப்புமைப்பகுதியைக் காண்க.

6. மடலைவ மன்ற
"மடவை மன்ற நீயெனக் கடவுபு" (குறுந். 252:5)
(அகநா. 2/:6) (பெருங். 1-47:251)

# 184. பாலை

## நற்றாய் கூற்று

ஒருமகள் உடையேன் மன்னே அவளும்
செருமிகு மொய்ம்பின் கூர்வேற் காளையொடு
பெருமலை அருஞ்சுரம் நெருநல் சென்றனள்
இனியே தாங்குநின் அவலம் என்றிர் அதுமற்று
5 யாங்ஙனம் ஒல்லுமோ அறிவுடை யீரே
உள்ளின் உள்ளம் வேமே உண்கண்
மணிவாழ் பாவை நடைகற்று அன்னஎன்
அணியியற் குறுமகள் ஆடிய
மணிஏர் நொச்சியும் தெற்றியும் கண்டே.

ஏ-து : மனைமருட்சி

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : அறிவுடையீரே - அறிவுடைய நொதுமற் பெண்டிரே! உங்களைப் போல் பல புதல்வியரைப் பெற்றேன் இல்லை, ஒருமகள் உடையேன் - யான் ஒரே ஒரு பெண்ணையே பெற்றுள்ளேன், மன்-என் செய்வேன். அவளும்-அந்த என் அருமை மகளும், செருமிகு மொய்ம்பின் - போரில் மிக்க வலிமையும், கூர்வேல் - கூரிய வேற்படையையும் உடைய, காளையொடு - வீரன் ஒருவனோடு, நெருநல் - நேற்று இரவு, பெருமலை அரும் சுரம் சென்றனள் - பெரிய மலையின் கண்ணுள்ள போவதற்கு அரியதாகிய சுரநெறியிற் சென்றனள்; இனியே - அங்ஙனம் அவள் போயினமையால் அவளிடம் யான் கொண்டிருந்த அவாவும் நீங்கியது. இனியே - இப்பொழுதோ, நின் அவலம் தாங்கும் என்றிர் - 'உன் துன்பத்தைப் பொறுத்துக் கொள்' எனக் கூறு கின்றீர்: அது மற்று யாங்ஙனம் ஒல்லுமோ - அதனை அடக்குதல் எவ்வாறு இயலும்? உண்கண் - மைதீட்டிய கண்ணின், மணிவாழ் பாவை - மணியிடையே வாழும் பாவை, நடை கற்றன்ன - வெளியே நடந்து வந்தாற்போல, என் அணி இயல் குறுமகள் - எனது அழகிய சாயலை உடைய இளையமகள், ஆடிய - விளையாடிய, மணியேர் நொச்சியும் - நீலமணி போன்ற நொச்சியையும், தெற்றியும் - திண்ணையையும், கண்டு - நோக்கி, உள்ளின் நினைந்தால், உள்ளம் வேம் - அவ்வாறு நினைந்த மனமும் வெந்து போகும் அன்றோ? இனி எவ்வாறு பிழைப்பேன்.

முடிபு : அறிவுடையீரே! அவளும் சென்றனள்; என்றிர், ஒல்லுமோ! கண்டு உள்ளம் வேம் என முடிக்க.

கருத்து : உடன்போக்கின் பின்னர் மகளைப் பிரிந்த நற்றாயின் அவலம் கண்டு அயலவர் தேற்ற, எவ்வாறு தேறுவேன் என்று நற்றாய் ஆற்றாமை மீதூர்ந்து கூறினாள்.

அ-ள் : தெற்றி - திண்ணை. மன் - கழிவு.

மெய்ப்பாடு - உவகைக் கலுழ்ச்சி.

பயன் - ஆற்றாமை நீங்குதல்.

ஒப்புமைப்பகுதி

9. நொச்சி

"மணி துணர்ந்தன்ன மாக்குரல் நொச்சி" (புறநா. 272:1)

6. உள்ளின் உள்ளம் வேம்
"உள்ளின் உள்ளம் வேமே உள்ளா" (குறுந். 102:1, 150:4)
"உள்ளின் உள்ளம் சுடும்" (குறள். 1207)
"கருதின்வேம் உள்ளமும்" (கம்ப. தாடகை. 5)

# 185. குறிஞ்சி

## தலைவன் கூற்று

ஆனா நோயோடு அழிபடர்க் கலங்கிக்
காமம் கைம்மிகக் கையறு துயரம்
காணவும் நல்காய் ஆயிற் பாணர்
பரிசில் பெற்ற விரியுளை நல்மான்
5 கவிகுளம்பு பொருத கல்மிசைச் சிறுநெறி
இரவலர் மெலியாது ஏறும் பொறையன்
உரைசால் உயர்வரைக் கொல்லிக் குடவயின்
அகல்இலைக் காந்தள் அலங்குகுலைப் பாய்ந்து
பறவை இழைத்த பல்கண் இறாஅல்
10 தேனுடை நெடுவரைத் தெய்வம் எழுதிய
வினைமாண் பாவை அன்னோள்
கொலைசூழ்ந் தனளால் நோகோ யானே.

எ-து: பாங்கற்குத் தலைவன் சொல்லியது. சேட்படுக்குந் தோழிக்குத் தலைவன் சொல்லியதூஉம் ஆம்.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை: பாணர் பரிசில்பெற்ற - பாணர்கள் பரிசிலாகப் பெற்ற, விரி உளை நல் மான் - விரிந்த பிடரி மயிரினை உடைய சிறந்த குதிரையின், கவி குளம்பு பொருத - கவிந்த குளம்புகள் தாக்குதலால், கல்மிசைச் சிறுநெறி - செப்பமாகிய மலை மேலுள்ள சிறுநெறியின் கண்ணே, மெலியாது இரவலர் ஏறும் - தளராமல் இரவலர் ஏறுகின்ற, பொறையன் - பொறையனுடைய, உரைசால் - புகழ் அமைந்த, உயர்வரைக் கொல்லி - உயர்ந்த கொல்லிமலையின், குடவயின் - மேல்பால், அகல் இலைக் காந்தள் - அகன்ற இலையை உடைய காந்தள் மலரின், அலங்கு குலைப் பாய்ந்து - அசையும் பூங்குலையிலே பாய்ந்து, பறவை இழைத்த பல்கண் இறாஅல் - தேனைப் பருகி வந்த வண்டு

களால் வைக்கப்பட்ட. பலவாகிய கண்களை உடைய தேன் கூட்டின் கண், தேனுடை நெடுவரை - நிறைந்த தேனை உடைய, நெடிய அம்மலையிலே, தெய்வம் எழுதிய - தெய்வத்தாற் செய்து வைத்த, வினை மாண் பாவை - செயற்கையால் மாட்சிமைப்பட்ட பாவை போன்ற, அன்னோள் - அத் தலைவிதான். கொலை சூழ்ந்தனளால் - என்னைக் கொலை செய்யும் வண்ணம் ஆராய்ந்து நன்கு அறிந்து கொண்டனள்; அவள் சூழ்ச்சியில் அகப்பட்டு யான், ஆனா நோயோடு - அடங்காத நோயோடு, அழிபடர்க் கலங்கி - பலவாக எண்ணிக் கழிக்கின்ற, காமம் கைம்மிக - காமமானது அளவு கடந்து பொருதலால், கையறு துயரம் - என் செயல் ஒருங்கு அழிந்து நிற்றலை, காணவும் - கண்டு வைத்தும், நல்காய் ஆயின் - அவளுடன் கூட்டுவிக்கும் முயற்சியை நீ செய்யாவிடின், அது நின்னால் வந்தது அன்று; ஊழ்வினையால் வந்தது என, யான் நோகு - யான் என் விதியை நொந்து கொள்வேன்.

முடிபு : பாவை அன்னோள் கொலை சூழ்ந்தனளால், யான் நோகு என முடிக்க.

கருத்து : பாவை போன்ற தன் வடிவினால் தலைவி என்னைத் துன்புறுத்துவதைக் கண்டும் அதற்கு வகை செய்யாது இருப்பின் என் விதியை யான் நொந்து கொள்வதினும் வேறு வழியில்லை என்பது.

அ-ள் : ஆனாமை - அமையாமை, அடங்காமை. கைம்மிகல் - அளவு கடத்தல். கொல்லிப்பாவை - கொல்லி மலையில் தேவ தச்சனால் கண்டாரைத் தானே நகை செய்து கொல்லுமாறு அமைக்கப்பட்ட ஓர் அழகுப் பாவை. அவளைத் தலைவிக்கு உவமை கூறினமையால் தலைவியும் குறுநகையால் என்னை மயக்கு வித்துக் கொலை சூழ்ந்தனள் என்க.

உள்ளுறை : பாணர் பெற்ற பரிசில் குதிரைகளின் குளம்பாலே செப்பல் செய்யப்பட்ட வழியில் இரவலர் மெலியாது ஏறுவர் என்றது, நீ சென்று தலைவியைக் கண்டு இயைவிப்பின் அந் நெறியே யான் வருந்தாது சென்று கூடுவேன் என்னும் கருத்தையும், கொல்லி மலையில் உள்ள காந்தள் மலரின் தேனை வண்டு கொண்டுவந்து தேன் கூட்டில் வைக்கும் என்றது, என் அறிவு என் நெஞ்சினைப் பற்றிக் கொண்டுபோய் அவள்பால் வைத்ததை அறிவாய் என்னும் கருத்தையும் பயந்தன,

மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - பாங்கனை உடன்படுவித்தல்.

ஒப்புமைப்பகுதி.

6-11 கொல்லிமலையில் தெய்வம் எழுதிய பாவை
"பெரும்பூட் பொறையன் பேஎமுதிர் கொல்லிக்
....................................
நல்லியற் பாவை அன்ன" (குறுந். 89:4-6)
"பொறையன் கொல்லி ஒளிறு நீரடுக்கத்து
வியலகம் பொற்பக் கடவுள் எழுதிய
பாவையின் மடவது மாண்ட மாஅ யோளோ"
(அகநா. 62:13-5)
"கொல்லி நிலைபெறு கடவுள் ஆக்கிய
பலர்புகழ் பாவையன்ன நின்னலனே" (அகநா. 209:15, 7)
"தெய்வத் தாற்செய்த கொல்லிப் பாவை" (சீவக. 65:7)

8. இலைக் காந்தள்
"குருதிப் பூவின் குலைக் காந்தட்டே" (குறுந். 1:4)
"சிலம்புடன் கமழும் அலங்கு குலைக் காந்தள்"
(குறுந். 239:3)
"எடுத்த நறவின் குலை அலங் காந்தள்" (கலி. 40:12)
"பஃறுடுப்பு எடுத்த அலங்கு குலைக் காந்தள்"
(அகநா. 108:15)
"பூந்தள் சாரற் பொங்கு குலை எடுத்த
காந்தள் கொழு முகை" (பெருங். 9.12:57-8)

# 186. பாலை

## தலைவி கூற்று

கல்ஊற்று ஈண்டல கயன்அற வாங்கி
இரும்பிணர்த் தடக்கை நீட்டி நீர்நொண்டு
பெருங்கை யானை பிடிஎதிர் ஓடும்
கானம் வெம்பிய வறம்கூர் கடத்திடை
5 வேனில் ஓதி நிறம்பெயர் முதுபோத்துப்
பாண் யாழ்கடைய வாங்கி பாங்கர்ப்
நெடுநிலை யாஅம் ஏறும் தொழில
பிறர்க்குஎன முயலும் பேர்அருள் நெஞ்சமொடு
காமர் பொருட்பிணி போகிய
10 நாம்வெங் காதலர் சென்ற ஆறே.

எ-து : பிரிவிடை மெலிந்த தோழிக்குத் தலைவி சொல்லியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : கல் ஊற்று ஈண்டல - கல்லின் கண்ணே ஊறுகின்ற ஊற்றில் சேர் தலை உடைய நீரை, இரும்பிணர்த்தடக்கை நீட்டி - பெரிய சருச்சரையை உடைய நீண்ட துதிக்கையை நீட்டி, கயன் அறவாங்கி - அவ்வூற்றுக்குழியில் உள்ள நீரை முழுதும் முகந்து கொண்டு, நீர் நொண்டு - அந்நீரை உட்கொண்டு, பெருங்கை யானை - பெரிய கையை உடைய யானைக்களிறு, பிடி எதிர்ஓடும் - தன்பிடியின் எதிரே ஓடா நிற்கும், கானம் - காடு முழுதும், வெம்பிய வறப்கூர் கடத்திடை - வெப்பம் மிகுந்த மிக்க வறட்சி வாய்ந்த கற்கள் நிறைந்த வழியிலே, பிறர்க்கு என முயலும் - தன் வாழ்நாளும், பொருளும் இவை முதலாயின எல்லாம் பிறர் பொருட்டே என்று முயன்று முடிக்கும், பேர் அருள் நெஞ்சமொடு - பெரிய அருள்மிக்க நெஞ்சுடனே, காமர் - அழகிய, பொருட்பிணி - பொருளாசை பிணித்தலால், நாம் வெம்காதலர் - நாம் விரும்பும் தலைவர் ஆறு - வழி, வேனில் - வேனிற் காலத்தின்கண், நிறம் பெயர் - மாறி மாறித் தன்னிறம் வேறுபடுகின்ற, முது - முதிய, ஓதிப்போத்து - ஓந்திப் போத்தா கிற பச்சோந்திதான் ஏறஇயலாது வருந்தி, பாண் - தளர்ச்சி யுற்ற பாணர்கள், யாழ் கடைய வாங்கி - தம் அசைவு தீரச் சிறிது பொழுது யாழ் வாசிப்ப, அதனைக் கேட்டலும் தன் வருத் தம் நீங்கி, பாங்கர் - பக்கத்திலுள்ள, நெடுநிலை யா அம் ஏறும் - நீண்டு நிற்றலை உடைய யாமரத்தின் மேல் ஏறும் தொழிலை உடையன என்பர், அத்தகைய கொடியகாட்டில் அவர் செல்லு வதனை நினைத்தலால் யான் எவ்வாறு ஆற்றியிருப்பேன்.

முடிபு : காதலர் சென்ற ஆறு முதுபோத்து ஏறுந்தொழில் என்று முடிக்க.

கருத்து : தலைவர் சென்ற ஆற்றின் அருமையை நினைந்து வருந்துவேன் எனினும் அவர் வருவர் என ஆற்றி இருப்பேன் என்று தலைவி கூறினாள்.

அ-ள் : கயன் - ஊற்று நிலை. பிணர் - சருச்சரை. ஈண்டுதல் - செறிதல். ஓதி - ஓந்தி. கடைய - செலுத்துதலால்.

நயம் : இறைச்சியால் தான் ஆற்றியிருக்கும் தன்மையைப் புலப்படுத்தினாள்.

இறைச்சி : நீர் வறந்த காலத்து. கயத்தில் ஊறுகின்ற நீரைத் தன் பிடி வருந்தாவாறு களிறு கையால் நொண்டு கொண்டு சென்றது என்றதனாலே, யான் வருந்தா வண்ணம்

தலைவர் தாம் சென்றவிடத்து எய்தப்படும் பொருளோடு விரைவர், ஆதலின் ஆற்றுவேன் என்றதாம்

மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

5. ஓதி முதுபோத்து

"வேதிலைவெரிநின் ஓதிமுது போத்து" (குறுந். 140:1)

10. நாம் வெங் காதலர்

"நாம் வெங்காதலர் சென்ற ஆறே" (குறுந். 255:8)
(கலி. 27:26)

## 187. நெய்தல்

### தலைவி கூற்று

நெய்தல் கூம்ப நிழல்குணக்கு ஒழுகக்
கல்சேர் மண்டிலம் சிவந்துநிலம் தணியப்
பல்பூங் கானலும் அல்கின்று அன்றே
இனமணி ஒலிப்பப் பொழுதுபடப் பூட்டி
5 மெய்ம்மலி காமத்து யாம்தொழுது ஒழியத்
தேரும் செல்புறம் மறையும் ஊரோடு
யாங்கு ஆவதுகொல் தானே தேம்பட
ஊது வண்டு இமிருங்கோதை மார்பின்
மின்இவர் கொடும்பூண் கொண்கனொடு
10 இன்நகை மேவ நாம் ஆடிய பொழிலே.

எ-து: தலைமகன் பகற்குறி வந்து மீள்வானது செலவு நோக்கி, தலைமகள் தன்னுள்ளே சொல்லுவாளாய்ச் சொல்லியது.

ஒளவையார்

ப-ரை: நெஞ்சமே! நெய்தல் கூம்ப - நெய்தலின் மலர் குவிய, நிழல் குணக்கு ஒழுக - நிழல்கள் யாவும் கீழ்த் திசையைச் சென்று அடைய, கல்சேர் மண்டிலம் - மேற்கு மலையிற் சென்று சேர்கின்ற ஆதித்த மண்டிலம், சிவந்து நிலம் தணிப்ப - சிவந்த

நிறம் பெற்ற நிலத்தின் கண்ணே தான் காட்டிய கொடுமை முற்றும் தணிக்க, பல் பூங்கானலும் - பலவகை மலர்களை உடைய கடற்கரைச் சோலையும், அல்கின்று அன்றே - தன் தோற்றப் பொலிவு குறைய, மெய்ம்மலிகாமத்து யாம் - இப்பொழுது உடம்பில் மலியப் பெற்ற காமத்தை உடைய யாம், தொழுது ஒழிய - அக் காமத்தைத் தணிக்கும் வழியைப் பெறாது பின்னே நின்று தொழுது ஒழியும்படி, பொழுதுபட - பொழுது படலும், இனமணி ஒலிப்பப் பூட்டி - மணி இனம் ஒலிப்ப குதிரைகள் பூட்டப்பட்ட, தேரும் செல்புறம் மறையும் - தேரானது தான் செல்லுகின்ற புறமும் மறையா நிற்கும்; ஊரோடு - ஆதலால் இவ் வூருடனே, தேம்பட ஊதுவண்டு இமிரும் - தேனைப் பொருந்த உண்டு வண்டுகள் ஒலிக்கின்ற, கோதை மார்பின் - மாலை அணிந்த மார்பின் கண்ணே, மின் இவர் கொடும்பூண் கொண்கனொடு - மின்னுதல் பொருந்திய வளைந்த அணிகலன் களை உடைய தலைவனும், நாம் - நாமும், இன்னகை மேவ - இனிய உவகை பொருந்த முயங்கி, ஆடிய பொழில் - விளையாடிய சோலையானது, யாங்கு ஆவது கொல்தானே - நமக்கு எவ் வண்ணமாக அமையுமோ? அறியேன்.

முடிபு : கானலும் அல்கின்றன்றே, தேரும் செல்புறம் மறையும்; இன்னகை ஆடிய பொழில் ஊரோடு யாங்காவது கொல் என்று முடிக்க.

கருத்து : கடற்கரைச் சோலையும் பொலிவு குன்றியது. தலைவன் தேரும் மறையும். இவ் வூரோடு அவன் ஆடிய பொழிலும் நமக்கு இனி எவ் வண்ணமாகும் என்று தலைவி நெஞ்சழிந்து கூறினாள்.

வி-ரை : வரும்பொழுது எதிர் தொழுது போம்பொழுது புறந்தொழுதல் கற்புடை மகளிர்க்கு இயல்பாதல் அறிக.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்

கேட்போர் - நெஞ்சம்.

# 188. குறிஞ்சி

## தோழி கூற்று

படுநீர்ச் சிலம்பிற் கலித்த வாழைக்
கொடுமடல் ஈன்ற கூர்வாய்க் குவிமுகை
ஒள்ளிழை மகளிர் இலங்குவளைத் தொடூஉம்
மெல்விரல் மோசை போலக் காந்தள்
5 வள்இதழ் தோயும் வான்றோய் வெற்ப
நன்றி விளைவும் தீதொடு வருமென
அன்று நற்கு அறிந்தனள் ஆயின் குன்றத்துத்
தேம்முதிர் சிலம்பில் தடைஇய
வேய்மருள் பணைத்தோள் அழியலள் மன்னே.

எ-து: பகற்குறி மறுத்து வரைவு கடாயது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை: படுநீர்ச் சிலம்பில் - ஆழ்ந்த சுனையில் நீரை உடைய மலைப்பக்கத்தில், கலித்த - முளைத்த, வாழைக் கொடுமடல் - வாழையின் வளைந்த மடலினின்றும், ஈன்ற - வெளிவந்த, கூர்வாய்க் குவிமுகை - கூரிய நுனியை உடைய குவிந்த முகையானது, ஒள்ளிழை மகளிர் - ஒள்ளிய கலனை உடைய மாதர்களின், இலங்குவளைத் தொடூஉ - விளங்கிய வளையோடு பிணிப்புற்ற, மெல்விரல் மோசை போல - மெல்லிய விரலில் அணிந்த விரல்அணி போல, காந்தள் வள்இதழ் தோயும் - செங்காந்தளின் வளவிய இதழிலே தோயா நிற்கும், வான்றோய் வெற்ப - வானைத் தொடும் உயர்ந்த மலையை உடைய தலைவனே, எமது தலைவி, 'நன்றி விளைவும் தீதொடு வரும்' என - ஒரு காலத்து நன்றாக முடிவதொரு காரியம், மற்றொரு காலத்துத் தீதாக வரும் என்று, அன்று - இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த ஞான்று நீ இரந்து பின்நிலை நின்றகாலத்து, நற்கு - நன்றாக அறிந்தனளாயின் - அறிந்தனளாய் இருப்பின், குன்றத்து - குன்றத்தின் கண்ணுள்ள, தேம் முதிர் சிலம்பில் - தேன் முற்றிய பக்கமலையில், தடைஇய - முளைத்து வளைந்த அடியை உடைய, வேய்மருள் பணைத்தோள் - மூங்கில் போலும் பருத்ததோள், அழியலள் - இக்காலத்து நெகிழ்வாள் அல்லள். மன் - அது கழிந்ததாகலின் இனிக் கூறி என்ன பயன்?

முடிபு: வெற்ப! அறிந்தனள் ஆயின் தோள் அழியலள் மன் என முடிக்க.

கருத்து : தலைவ! களவு தீது என்று என் தலைவி முன்பே அறிந்திருப்பின் இப்பொழுது வாடுநள் அல்லள். எனவே விரைந்து வந்து வரைந்து கொள்க.

(படு - நீர் நிலையாகிய பள்ளம்: மோசை - விரலணி, தடைஇய - வளைந்த. தோள் அழியலன் - சினைவினை முதலொடு முடிந்தது.)

உள்ளுறை : வாழை முகை விரலணி போலக் காந்தளிலே தோய்ந்தும் விரலணி ஆகாதன்றே அங்ஙனமாக நீ நல்லவன் போல வந்து தலைவியைத் தோய்ந்தும் இங்ஙனம் தலைவி வாடும்படி விட்டு வரையாது அருகி வருதலால் நன்மகன் அல்லை என்றாள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

## 189. பாலை

### தோழி கூற்று

தம்மலது இல்லா நம்நயந்து அருளி
இன்னும் வாரார் ஆயினும் சென்னியர்
தெறல்அரும் கடவுள் முன்னர் சீறியாழ்
நரம்பு இசைத்தன்ன இன்குரற் குருகின்
5 கங்கை வங்கம் போகுவர் கொல்லோ
எவ்வினை செய்வர்கொல் தாமே வெவ்வினைக்
கொலைவல் வேட்டுவன் வலைபரிந்து போகிய
கானப் புறவின் சேவல் வாய்நூல்
சிலம்பி அம்சினை வெரூஉம்
10 அலங்கல் உலவை அம்காடு இறந்தோரே.

எ-து : பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

எ-து : வெவ்வினைக் கொலைவல் வேட்டுவன் - கொடிய கொலைத் தொழிலில் வல்ல வேட்டுவனது, வலை பரிந்து

வேட்டுவன் விரித்த வலையை அறுத்துவிட்டு ஓடிய, கானப் புறவின் சேவல் - காட்டின் கண்ணுள்ள சேவற் புறாவானது, வாய் நூல் சிலம்பி - தன் வாயில் உண்டாகும் நூலாலே கட்டிய சிலந்தியின் கோட்டையைக் கண்டு, அஞ்சினை வெரூஉம் - அஞ்சா நிற்கும், அலங்கல் உலவை அம்காடு - சுழன்று அடிக்கின்ற சூறைக்காற்றை உடைய காட்டின் கண்ணே, இறந்தோர் - சென்ற தலைவர், தம் அலது இல்லா - அவரையின்றிச் சிறிதும் வாழ்தல் முடியாத, நம் நயந்து - நம்மை விரும்பி, அருளி - அருள் புரிய, இன்னும் வாரார் ஆயினும் - இன்னும் வந்திலர் என்றாலும் வேறு எங்குச் சென்று வாழ்வர்? சென்னியர் - பாணர், தெறல் அரும் கடவுள் முன்னர் - தெறுகின்ற சினம் தணிதற்கு அரிய தெய்வத்தின் முன் சென்று, சீறியாழ் நரம்பு இசைத்தன்ன - அதன் சினம் அடங்குமாறு சிறிய யாழின் நரம்பின் ஓசையைப் பாடினால் ஒத்த, இன் குரல் குருகின் - இனிய குரலையுடைய குருகுகள் இருக்கின்ற, கங்கை வங்கம் - கங்கையாற்றின் கண் ஓடுகின்ற மரக்கலத்து ஏறி, போகுவர் கொல்லோ - யாண்டேனுஞ் சென்றிருப்பாரோ? தாம் எவ்வினை செய்வர்கொல் - அவர் பிற எந்தச் செயலைச் செய்கிற்பர்? ஒன்றும் செய்கிலர். ஆகையால் இப்பொழுதே வருகுவர். நீ வருந்தற்க.

முடிபு : காடு இறந்தோர் வங்கம் போகுவர் கொல், எவ்வினை செய்வர்கொல்? என முடிக்க.

கருத்து : தலைவர் இன்னும் வந்திலர் என வருந்தாது ஒழிக. அவர் எங்கும் போகார்; இன்னே வருகுவர்; ஆற்றுவாய்.

அ-ள் : சென்னி - பிச்சையெடுக்கப் பயன்படும் 'மண்டை போன்றதொரு பாண்டம். அதனை உடைமையார் பாணர் சென்னியர் எனப்பட்டனர். வங்கம் - கப்பல். சிலம்பி - சிலந்தி.

நயம் : வேட்டுவன் விரித்த வலைக்கு அஞ்சிய புறா சிலந்தி யின் வலைக்கும் அஞ்சும் என்றது, களவில் பன்முறை பிரிதலால் வருந்திய தலைவர், பிரிவிற்கு அஞ்சி குறித்த பருவத்து இன்னே வருவர் என்பதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

1. தலைவனது இன்றியமையாமை

"நீயெமக்கு இன்னாதன பல செய்யினும்

நின்னின்றமைதல் வல்லாமாறே" (குறுந். 309:8)
"நின்னின்று இமைப்பு வரை
வாழாள் மடவோள்" (கலி. 21:12, 8)
"நின்னலது இல்லா இவள் சிறுநுதலே" (ஐங். 179)

7-10. ஒரு பொருளால் உண்டாகிய அச்சம் அப் பொருளைப் போன்ற வேறொரு பொருளாலும் உண்டாதல்.

"ஏனலஞ் சிறுதினை காக்கும் சேணோன்
..............................
மீன்படு சுடரொளி வெரூஉம்"
(குறுந். 357:5-7) (பெருங். 1:37, 252:48)

# 190. குறிஞ்சி

## தலைவன் கூற்று

ஙோ இனி வாழிய நெஞ்சே மேவார்
ஆர் அரண் கடந்த மாரி வண்மகிழ்த்
திதலை எஃகின் சேந்தன் தந்தை
தேம்கமழ் விரிதார் இயல்தேர் அழிசி
5 வண்டுமூசு நெய்தல் நெல்லிடை மலரும்
அரியல் அம்கழனி ஆர்க்காடு அன்ன
காமர் பணைத்தோள் நலம்வீறு எய்திய
வலைமான் மழைக்கண் குறுமகள்
சில்மொழித் துவர்வாய் நகைக்கு மகிழ்ந்தோயே.

எ-து: 1. பின்னின்ற தலைமகன் ஆற்றானாகிய நெஞ்சிற்குச் சொல்லியது. 2. அல்ல குறிப்பட்டு மீள்வான் நெஞ்சிற்குச் சொல்லியதூஉம் ஆம். 3. இடைச் சுரத்துச் சென்று தலைமகள் நலம் உள்ளி மீளலுற்ற நெஞ்சினைக் கழறியதூஉம் ஆம்.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை: நெஞ்சே - ஏ மனமே, மேவார் - பகைவருடைய, ஆர் அரண் கடந்த - நுழைவதற்கு அரிய கோட்டைகளை வென்று கொண்ட, மாரி வண்மகிழ் - மழையைப் போன்ற கொடை வண்மையும், கள்ளுணவையும், திதலை எஃகில் - திதலை பரந்த வேற்படையையும் உடைய, சேந்தன் - 'சேந்தன்'

என்பானுக்குத் தந்தை - தந்தையாகிய, தேம்கமழ் விரிதார் இயல் தேர் அழிசி - தேன் மணம் கமழும் விரிந்த மாலையை உடைய அழகிய தேரினை உடைய் 'அழிசி' என்பவனது, நெல் இடை - நெற்கதிர்களின் இடையே, வண்டு மூசு நெய்தல் மலரும் - வண்டுகள் மொய்க்கின்ற நெய்தலில் மலர்கின்ற, அரியல் அம் கழனி - பூவினின்றும் தேன் வடிதலை உடைய வயல் சூழ்ந்த, ஆர்க்காடு அன்ன - 'ஆர்க்காடு' என்னும் ஊரை ஒத்த, காமர் பணைத்தோள் நலம் - விருப்பம் வருகின்ற பருத்த தோளின் அழகோடு, வீறு எய்திய - பெருமையடைந்த, வலை மான் மழைக்கண் குறுமகள் - வலையில் அகப்பட்ட மானினது கண் போன்ற மருண்ட குளிர்ச்சியை உடைய கண்களைப் பெற்ற இளைய மகளாகிய தலைவியின், சின்மொழி - சிலவாய மொழியினை உடைய, துவர்வாய் - சிவந்த வாயினின்றும் எழுகின்ற, நகைக்கு - புன்முறுவலுக்கு, மகிழ்ந்தோய் - மகிழ்ச்சி கொண்டோய், அம் மகிழ்ச்சி பின்பு கிடைக்கப் பெறாமையால் இனி - இனிமேல், நோ - நீ துன்பப்படுவாய், வாழி - இத் துன்பத்துடன் நெடுங்காலம் வாழ்க.

முடிபு : நெஞ்சே! குறுமகள் நகைக்கு மகிழ்ந்தோய் இனி நோ வாழிய என முடிக்க.

கருத்து : தலைவியின் குறுநகைக்கு விரும்பினோய், அது கிடைக்கப் பெறாமையால் வருந்துவாய் என்று நெஞ்சிற்குத் தலைவன் கூறினான்.

வி-ரை : சேந்தன் தந்தையாகிய அழிசியின் ஆர்க்காடு அன்ன குறுமகள் என்க. இது துன்பத்துப் புலம்பல்.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - தன் உள்ளத்து அழுங்கள்.

# 191. நெய்தல்

## தோழி கூற்று

சிறுவீ ஞாழல் தேன்தோய் ஒள்இணர்
நேர்இழை மகளிர் வார்மணல் இழைத்த
வண்டற் பாவை வனமுலை முற்றத்து
ஒண்பொறிச் சுணங்கின் ஐதுபடத் தாஅம்
5 கண்டல் வேலிக் காமர் சிறுகுடி

எல்லி வந்தன்றோ தேரெனச் சொல்லி
அலர்எழுந் தன்றுஇவ் வூரே பலருளும்
என்நோக் கினளே அன்னை நாளை
மணிப்பூ முண்டகம் கொய்யேன் ஆயின்
10 அணிக்கவின் உண்மையோ அரிதே மணிக்கழி
நறும்பூங் கானல் வந்துஅவர்
வறுந்தேர் போதல் அதனினும் அரிதே.

எ-து : தோழி தலைமகன் சிறைப்புறமாகச் செறிப்பு அறிவுறுப்பான் வேண்டிச் சொல்லியது.

## உலோச்சனார்

ப-ரை : சிறவீ ஞாழல் - சிறிய மலர்களை உடைய ஞாழலின் தேன் தோய் ஒள் இணர் - தேன் பொருந்திய ஒள்ளிய பூங்கொத்துக்கள், நேர் இழை மகளிர் - அழகிய கலன்களை உடைய சிறுமியர், வார்மணல் இழைத்த - நெடிய மணலில் வண்டலாட்டு அயரும் வழி புனைந்த, வண்டற் பாவை - வண்டல் மண்ணாற் செய்த பாவையின், வனமுலை - அழகிய கொங்கையின், முற்றத்து - முனையில், ஒண்பொறிசுணங்கின் - படர்ந்த ஒள்ளிய வரியை உடைய சுணங்குபோல, ஐது படத் தாஅம் - மெல்லிதாகப் படுமாறு பரவா நிற்கும், கண்டல் வேலிச் சிறு குடி - கண்டல் மரங்களாகிய வேலி சூழ்ந்த கண்டார்க்கு விருப்பம் வருகின்ற சிறிய குடித்தெருவின் கண்ணே, எல்லி - நேற்று இரவில், தேர் வந்தன்றோ என - தேரொன்று வந்துளதே என்று, சொல்லி - உரையாடி, இவ்வூர் - இவ்வூர் முழுதும், அலர் எழுந்தன்று - அலர் எழுந்ததாக; அதனைக் கேள்வியுற்ற, அன்னை - நம் அன்னை, பலருளும் - என் போல்வார் பலர் இருப்ப அவருள்ளும், என் நோக்கினள் - என்னையே குறிப்பாக நோக்கி நின்றனள்; நாளை - நாளைய தினம், மணிப்பூம் முண்டகம் கொய்யேன் ஆயின் - கழிக் கரையிலுள்ள முள்ளியினுடைய நீலமணி போலும் மலரைக் கொய்யேன் ஆனால், அணிககவின் உண்மையோ அரிது - என்மிக்க அழகு கெடாது உளதாவது அரிதாகும், மணிக்கழி நறும் பூம்கானல் - நீலமணி போலும் கரிய கழியிடத்திலுள்ள நறிய பூஞ்சோலையில், அவர் வந்து வறுந் தேர் போதல் - அவர் வந்து நம்மை அணையாது வறிதே செல்லுதல், அதனினும் அரிது - இல்வயிற் செறிக்கும் அக் கொடுமையைக் காட்டிலும் அரிய துன்பத்தைத் தரும்.

முடிபு : சிறுகுடி தேர் எல்லி வந்தன்றோ எனச் சொல்லி ஊர் அலர் எழுந்தன்று; அன்னை நோக்கினள். களவின் உண்மையோ அரிது. தேர் வறிது போதல் அதனினும் அரிது என முடிக்க.

கருத்து : களவினைப் பற்றி ஊரினர் அலர் தூற்றுவர். அன்னையும் அறிந்தனள். இற்செறிப்பு நிகழும் இனிக் கூட்டம் நிகழா. எனவே தலைவ விரைந்து வருக, வரைந்து கொள்க என்றபடி.

வி-ரை : வறுந்தேர் போதல் அரிது என்றதனால் வரைந்து தேர் ஏற்றிச் செல்லவேண்டும், அன்றேல் வலிந்து கொண்டுதலைக் கழியவேண்டும் எனவும் குறிப்பித்தாளாயிற்று.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - செறிப்பறிவுறுத்து வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

3. வண்டற் பாவை
"வண்டற் பாவை வெளவலின்
நுண்பொடி அளைஇக் கடல்தூர்ப் போளே" (ஐங். 124)

4. சுணங்கு
"சுணங்கு வளர் இளமுலை" (ஐங். 149)

# 192. குறிஞ்சி

## தலைவன் கூற்று

குருதி வேட்கை உருகெழு வயமான்
வலிமிகு முன்பின் மழகளிறு பார்க்கும்
மரம்பயில் சோலை மலியப் பூழியர்
உருவத் துருவின் நாள்மேயல் ஆரும்
5 மாரி எண்கின் மலைச்சுர நீள்இடை
நீநயந்து வருதல் எவன்எனப் பலபுலந்து
அழுதனை உறையும் அம்மா அரிவை
பயங்கெழு பலவின் கொல்லிக் குடவரைப்
பூதம் புணர்த்த புதிதுஇயல் பாவை
10 விரிகதிர் இளவெயில் தோன்றி அன்னநின்
ஆய்நலம் உள்ளிவரின் எமக்கு
ஏமம் ஆகும் மலைமுதல் ஆறே.

எ-து : இரவுக் குறி மறுக்கப்பட்டு ஆற்றானாய தலைமகள் சொல்லியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : குருதி வேட்கை உருகெழு வயமான் - இரத்தத்தை உண்ணும் விருப்பத்தோடு அச்சத்தைச் செய்யும் வலிய புலி, வலி மிகு முன்பின் மழகளிறு பார்க்கும் - தன்னெதிரே வலிமை மிக்க பெரிய இளைய களிற்றியானை வருதலை நோக்கி நிற்கும், மரம் பயில் சோலை மலிய - மரங்கள் பொருந்திய சோலை நிரம்ப, பூழியர் - பூழியருடைய, உருவத் துருவின - நல்ல நிறத்தை உடைய ஆட்டுமந்தைபோல, மாரி-மாரிக்காலத்து, நாள்-விடியற் காலையில் மேயல் ஆரும் - மேய்கின்ற, எண்கின் - கரடிகளை உடைய, மலைச் சுர நீள் இடை - மலைச்சுரத்து நீண்ட வழியில், நீ நயந்து வருதல் எவன் என - நீ என்னை விரும்பி வருதல் என்னை கொல் என்று, பல புலந்து - பலவாக நொந்து கூறி, அழுதனை உறையும் - அழுது கொண்டிருக்கும், அம்மா அரிவை - அழகிய மாமை நிறத்தை உடைய மடந்தாய், பயம் கெழு பலவின் - பயன் மிக்க பலமரங்களை உடைய, கொல்லிக் குடவரை - கொல்லி மலையினுள் மேல்பாலாக, பூதம் புணர்த்த - முன்பு தெய்வத்தாலே செய்து வைக்கப்பட்ட, புதிது இயல் பாவை - புதுமையான நடை கொண்டு இயங்குகின்ற பாவை, விரிகதிர் இளவெயில் தோன்றி அன்ன - விரிந்த ஞாயிற்றின் இளஞ்சுடரில் தோன்றி நின்றால் ஒத்த, நின் - உன்னுடைய, ஆய்நலம் - அழகிய நலத்தை, உள்ளி வரின் - கருதி வருங் காலத்து, நின்மேனி ஒளியே எங்கும் பரவி இருளை ஓட்டுவதாகத் தோன்றுதலால், மலை முதல் ஆறு - இம் மலையடியிலுள்ள நெறியானது, ஏமம் ஆகும் - எமக்குக் காவலை உடையதாகும்; ஆதலின் நீ அழேல்.

முடிபு : அழுதனை உறையும் அம்மா அரிவை; நின் ஆய் நலம் உள்ளிவரின் மலைமுதல் ஆறு எமக்கு ஏமம் ஆகும் என முடிக்க.

கருத்து : தலைவியின் அழகை உள்ளி வருதலால் சுரத்திடை எனக்கு அதுவே பாதுகாப்பாய் உள்ளது. எனக்கு ஏதம் ஒன்றும் வாராது. கவலற்க என்று தலைவன் கூறினான்.

அ-ள் : வயமான் - புலி. துரு - ஆடு. ஆய்நலம் - அழகிய இன்பம். ஏமம் - காவல்.

இச்செய்யுளிற் காணப்படும் உவமைபோல,

"தாவில் நன்பொன் தைஇய பாவை,
விண்தவழ் இளவெயிற் கொண்டு நின்றன்ன"
என அகத்தினும் (212) வந்துளது.

நயம் : புலி களிற்றைப் பார்க்கும் சோலையின் கண்ணே கரடி அஞ்சாது இயங்கும் என்றது, அன்னை காவலாய் இருக்கும் மனையகத்து யான் அஞ்சாது வரவல்லேன் என்பதாம்.

மெய்ப்பாடு - வீரம்.

பயன் - தலைமகளை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

8-10 "புனைந்த பாவை செல்சுடர்ப்
பசுவெயிற் றோன்றியன்ன செய்யர்"
(பத். மதுரைக். 410:12)

"தாவினன் பொன்தை இயபாவை" (அகநா. 212:1-3)

# 193. பாலை

## தலைமகள் கூற்று

அட்டரக்கு உருவின் வட்டுமுகை ஈங்கைத்
துய்த்தலைப் புதுமலர்த் துளிதலைக் கலாவ
நிறைநீர்ப் புனிற்றுப் புலம்துழைஇ ஆனாய்
இரும்புறம் தழூஉம் பெருந்தண் வாடை
5 நினக்குத் தீது அறிந்தன்றோ இலமே
பணைத்தோள் எல்வளை ஞெகிழ்த்த எம்காதலர்
அரும்செயல் பொருட்பிணிப் பிரிந்தனர் ஆக
யாரும்இல் ஒருசிறை இருந்து
பேரஞர் உறுவியை வருத்தாதீமே.

எ-து : பிரிவிடை ஆற்றாளாகிய தலைமகள் சொல்லியது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : அட்டு அரக்கு உருவின் - உருக்கிய அரக்குப் போன்ற சிவந்த, வட்டு முகை ஈங்கை - வட்டமாகிய முகையை உடைய ஈங்கையினது, துய்த்தலைப் புதுமலர் - பஞ்சு போன்ற தலையை உடைய புதிய மலரின், துளி தலைக் கலாவ - தேன்

துளி நின்பாற் கலப்ப, அதனோடு, நிறை நீர்ப் புனிற்றுப் புலம் துழைஇ - நிறைந்த நீர் ததும்பும் மழை புலங்களுட் புகுந்து அவற்றை அளைந்தும், ஆனாய் - அங்குத் தங்காமல், இரும் புறம் தழூஉம் பெருந்தண் வாடை - எமது பெரிய அயற்பக்க மெல்லாம் சூழ்ந்து வந்து மோதுகின்ற பெரிய குளிர்ச்சியை உடைய வாடையே, நினக்குத் தீது அறிந்தன்றோம் இலமே - யாம் ஒருபோதும் என் நெஞ்சினுள்ளே நினக்குத் தீயன செய்ய எண்ணியது இல்லை; அப்படியிருக்க, பணைத்தோள் எல்வளை ஞெகிழ்த்த எம் காதலர் - எம்முடைய பருத்த தோளில் ஏற்றிய ஒளியை உடையவளை நெகிழும்படிச் செய்த எமது காதலர் தாம், அரும் செயல் பொருட்பிணிப் பிரிந்தனராக - ஈட்டுதற்கு அரிய பொருளை ஈட்டுமாறு உள்ளம் பிணித்தல் காரணமாகப் பிரிந்தனர் ஆதலின், யாரும் இல் ஒரு சிறை இருந்து - உசாவுந் துணை யாரும் இல்லாது ஒரு புறத்து இருந்து, பேர் அஞர் உறுவியை - பெரிய துன்பத்தை அடைந்தேமாகிய எம்மை, வருத்தாதீம் - வருத்தாமற் செல்வாய்.

முடிபு : பெருந்தண் வாடை, காதலர் பொருட் பிணிப் பிரிந்தனராக பேரஞர் உறுவியை வருத்தாதீம் எனமுடிக்க.

கருத்து : தலைவன் குறித்துச் சென்ற பருவத்து வாராமையால் தலைவி வாடையை நோக்கித் துன்புறும் என்னை நீ வேறு வருத்தாதே என்று வேண்டினள்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

# 194. குறிஞ்சி

## தோழி கூற்று

அம்ம வாழி தோழி கைம்மாறு
யாது செய்வாங்கொல் நாமே கயவாய்க்
கன்றுடை மருங்கிற் பிடிபுணர்ந்து இயலும்
வலன்உயர் மருப்பின் நிலன்ஈர்த் தடக்கை
5 அண்ணல் யானைக்கு அன்றியும கல்மிசைத்

தனிநிலை இதணம் புலம்பப் போகி
மந்தியும் அறியா மரம்பயில் ஒருசிறை
குன்றக வெற்பனொடு நாம் விளையாட
விரும்புகவர் கொண்ட ஏனல்
10 பெருங்குரல் கொள்ளாச் சிறுபசுங் கிளிக்கே.

எ-து : சிறைப்புறமாகச் செறிப்பு அறிவுறீஇயது.

## மதுரை மருதன் இளநாகனார்

ப-ரை : தோழி - தோழியே, வாழி - நெடுங்காலம் வாழ்வாயாக, அம்ம - நான் கூறுவதைக் கேள், கல்மிசை - மலைமேல் கட்டிய, தனிநிலை இதணம் - தனியாக நிலைபெற்ற கட்டுப் பரண், புலம்பப் போகி - வறிது ஆம்படி விடுத்துச் சென்று, மந்தியும் அறியா - மரம் ஏறும் தொழிலில் சிறப்புடைய மந்திகளும் அம் மரங்கள் நெருங்கி இருப்பதனால் ஏறி அறியாத, மரம்பயில் ஒரு சிறை - மரங்கள் நெருங்கின ஓரிடத்திலே, குன்ற வெற்பனொடு - குன்றுகளை உடைய மலை கிழவோனுடன், நாம் விளையாட - நாம் தழுவி விளையாட்டு அயர, (அப்பொழுது) விரும்பு கவர் கொண்ட ஏனல் - மிக விருப்பம் கொண்ட புனத்திலுள்ள தினையின், பெருங்குரல் கொள்ளா - பெரிய கதிர்களைத் தின்று அழித்து விடாத, கய வாய் - பெரிய வாயை உடைய, கன்றுடை மருங்கில் - கன்றினைப் பக்கத்திலே உடைய, பிடி புணர்ந்து இயலும் - பிடியானையோடு புணர்ந்து இயங்குகின்ற, வலன் உயர் மருப்பின் - வலிமை மிக்க தந்தங்களையும், நிலன் ஈர்த் தடக்கை - நிலத்தின் கண் ஈர்த்தலை உடைய நெடிய துதிக்கையையும், அண்ணல் - பெருமையையும் உடைய களிற்றி யானைக்கு, கைம்மாறு யாது செய்வோம் கொல் - நாம் யாது கைம்மாறு செய்ய வல்லோம், அல்லாமலும், மிக விருப்பம் கொண்ட பெரிய தினைக்கதிர்களை மேயாது ஒழிந்த, சிறு பசுங் கிளிக்கு - சிறிய பசிய கிளிக்கும் யாது கைம்மாறு செய்யக்கடவம். நம்மை அன்னை இல்வயிற் செறித்தலான் அவை புனம் புகுந்து அழிக்கின்றன.

முடிபு : தோழி! வாழி! யானைக் கன்றியும், பெருங்குரல் கொள்ளாச் சிறுபசுங் கிளிக்கும் யாது கைம்மாறு செய்யவல்லேம். எனமுடிக்க.

கருத்து : இற்செறிப்பு நிகழ்ந்துள்ளதால் தலைவியை இனி களவில் சந்திக்க வொண்ணாது; தலைவ விரைந்து - வருக வரைந்து கொள்க என்று தோழி கூறினாள்.

வி-ரை : யானையும் கிளியும் இப்பொழுது தினைப்பயிரைக் கெடுப்பது போல், நாம் தினைப்புனம் காக்கையிற் கெடுத்திருந் தால் எமர் கொள்ளும் சினம் இன்னும் கொடியதாகும்.

நயம் : கன்றை மருங்கில் உடைய பிடியைக் களிறு புணர்ந்து இயலும் என்றது, மணம் புரிந்து இல்லறம் மேற்கொண்டு புதல்வனைப் பயந்து அப் புதல்வன் மருங்காகத் தலைவன் என்னை இடையறவு படாது முயங்கி இன்புறுவானாக என்றபடி.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - செறிப்பு அறிவுறுத்து வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

7. மந்தியும் அறியா மரம்
"கடுவனும் அறியாக் காடிறந்தோளே" (ஐங். 374)
(முருகு. 42) (அகநா. 92:8-9, 368:8-9)

# 195. நெய்தல்

## தோழி கூற்று

அருளாய் ஆகலோ கொடிதே இருங்கழிக்
குருளை நீர்நாய் கொழுமீன் மாந்தி
தில்லைஅம் பொதும்பில் பள்ளி கொள்ளும்
மெல்லம் புலம்ப யான்கண் டிசினே
5 கல்லென் புள்ளின் கானல்அம் தொண்டி
நெல்லரி தொழுவர் கூர்வாள் உற்றென
பல்இதழ் தயங்கிய கூம்பா நெய்தல்
நீர்அலைத் தோற்றம் போல
ஈரிய கலுழும் நீஙயந்தோள் கண்ணே.

எ-து களவின் கண் நெடுங்காலம் வந்தொழுக ஆற்றா ளாயின தோழி வரைவுகடாயது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : இருங்கழிக் குருளை நீர் நாய் - கரிய கழியின் கண்ணுள்ள நீர் நாயின் குருளை, கொழு மீன் மாந்தி -

கொழுவிய மீன்களைப் பிடித்துத் தின்று, தில்லை அம் பொதும்பில் - தில்லை மரப்பொந்துகளில், பள்ளி கொள்ளும் - படுத்து உறங்கும், மெல்லம் புலம்ப - மெல்லிய கடற்கரையின் தலைவனே, கல்என் புள்ளின் கானல் அம் தொண்டி - 'கல்' என ஒலிக்கின்ற பறவைகளை உடைய கடற்கரைச் சோலை சூழ்ந்த தொண்டியின் கண்ணதாகிய வயலிலே, நெல் அரி தொழுவர் - நெற்கதிர் அறுக்கும் உழவருடைய, கூர்வாள் உற்றென - கூரிய அரிவாளால் அறுபட்டதனாலே, பல் இதழ் தயங்கிய - பல இதழ்கள் விளங்கிய, கூம்பா நெய்தல் - குவியாத நெய்தல் மலர், நீர் அலைத் தோற்றம் போல - நீரிலே மூழ்கி அலைகின்ற தோற்றத்தைப்போல, நீ நயந்தோள் கண் - நீ விரும்பிய காதலியின் கண்கள், ஈரிய கலுழும் - ஈரத்தன்மை உடையனவாய் அழா நிற்கும், ஆதலின் நீயும் அவளை அழாவண்ணம் வரைந்து கொண்டாய் இல்லை, அருளாய் ஆகலோ கொடிதே - இங்ஙனம் நீ அருள் செய்யாமல் இருப்பது ஓ ஓ! மிகவும் கொடியது காண்.

முடிபு : மெல்லம் புலம்ப! நீ நயந்தோள் கண் ஈரிய கலுழும். அதனால் அருளாய் ஆகலோ கொடிது என முடிக்க.

கருத்து : தலைவனே! உன் பிரிவால் தலைவி கலுழா நிற்கின்றனள். அருள் இன்றிக் களவில் ஈடுபடல் கொடிது. எனவே விரைந்து வா வரைந்து கொள்.

பி.ம். 3. திதலைப் பொதும்பு

வி-ரை : நின்னைக் கண்ட போழ்து தலைவி மகிழ்வாள். அதனால் அவள் அழுகையை நீ அறிந்தாய் இல்லை. யான். அறிவேன் என்றாள். இது கண்டவழி உவத்தல் என்னும் மெய்ப்பாடாம். துன்பத்துப் புலம்பலும் அடங்கும்.

உள்ளுறை : நீர் நாயின் குருளை தான் வேண்டியபடி மீனைத் தின்று கவலையின்றிப் பொந்துகளில் படுத்து உறங்கும் என்றது, நீயும் இரவு முழுவதும் தலைவியின் நலன் நுகர்ந்து மணம் புரியும் எண்ணம் இல்லாமல் நின்னூர்க்குச் சென்று தங்குகின்றனை என்றாள். புள்ளினம் கல் என ஒலிப்பதுபோல ஊரினர் கூறும் அலர் எங்கும் ஒலிக்கும் என்றான்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

4. மெல்லம் புலம்பல்

"மெல்லம் புலம்பன் வந்த மாறே" (ஐங். 120:4)

6-7. நெய்தற்களை
"நின்னூர் நெய்தல் அனையேம் பெரும்" (குறுந். 309:5-6)
"தண்ணறு நெய்தற் றளை அவிழ் வான்பூ
வெண்ணெல் அரிநர் மாற்றினர் அறுக்கும்" (ஐங். 190:1-2)
"நெல்லரிதொழுவர் கூர்வாள் மழுங்கில்" (புறநா. 379:3)

# 196. நெய்தல்

### தலைவி கூற்று

பளிங்கு செறிந்தன்ன பல்கதிர் இடைஇடைப்
பால்முகந்து அன்ன பசுவெண் நிலவின்
மால்பிடர் அறியா நிறையுறு மதியம
சால்பும் செம்மையும் உடையை ஆதலின்
5 நிற்கரந்து உறையும் உலகம் இன்மையின்
எற்கரந்து உறைவோர் உள்வழி காட்டாய்
நற்கவின் இழந்த என்தோள்போல் சாஅய்
சிறுகுபு சிறுகுபு செரீஇ
அறிகரி பொய்த்தலின் ஆகுமோ அதுவே.

எ-து: நெட்டிடை கழிந்து பொருள் வயிற் பிரிந்த காலத்து, ஆற்றாளாகிய தலைமகள் திங்கள் மேலிட்டுத் தன்னுள்ளே சொல்லியது.

### வெள்ளைக்குடி நாகனார்

ப-ரை: பளிங்கு செறிந்தன்ன - பல பளிங்குக் கற்கள் ஒன்றாகச் செறிந்தாற்போன்ற, பல்கதிர் இடை இடை - பல வாய கதிர்களின் இடையே இடையே, பால் முகந்து அன்ன - பாலை முகந்து வைத்தாற் போன்ற, பசு வெண்ணிலவின் - குளிர்ச்சியை உடைய வெளிய நிலாவினை உடைய, மால்பிடர் அறியா - மேகத்தின் பிடர் மேலே தோன்றிப் பிறரால் அறியப் படாத, நிறையுறு மதியம் - எல்லாக் கலைகளும் நிரம்பிய திங்களே!, சால்பும் செம்மையும் உடையை ஆதலின் - நீதானும் நிறைவும் நேர்மையும் உடையை யாதலானும், நின் கரந்து உறையும் - நினக்குத் தெரியாத வண்ணம் மறைந்து உறையும், உலகம் இன்மையின் - உலகம் ஒன்றும் இன்மையானும், என் கரந்து உறைவோர் - எனக்குத் தோன்றாது மறைந்தொழுகும் எம் காதலர், உள்வழி - இருக்கும் இடத்தினை, காட்டாய் - நீ

எனக்குக் காட்டுவாயாக என்று வேண்டினள். திங்கள் காட்டாது வாளா இருத்தலின், அதன்மேல் வெகுண்டு மீண்டும் அதனை நோக்கி, திங்களே! அறிகரி பொய்த்தலின் - நீ அறிந்த அளவு சான்று கூறாது பொய்யை மேற்கொண்டமையால், நல் கவின் இழந்த என் தோள்போல - நல்ல அழகு இழந்த என் தோள் போல, சாஅய் - வாட்டம் உற்று, சிறுகுபு சிறுகுபு செரீஇ - சிறுகிச் சிறுகிக் குறைந்து, ஆகுமோ அதுவே - நின்விழிப்புலம் மறைதலால் நின்னாற் காட்டுவதுதான் இயலுமோ? முடியா தல்லவா என்றாள்.

முடிபு : திங்களே; நிற்கரந்து உறையும் உலகம் இன்மையின் எற்கரந்து உறைவோர் உள்வழி காட்டாய் என முடிக்க.

கருத்து : தலைவன் பிரிவால் ஆற்றாத தலைவி திங்களை நோக்கி என் காதலர் உள்வழி காட்டாய் என ஆற்றாமை மீதூர நொந்து நவின்றாள்.

அ-ள் : மால் - மேகம். இதற்குத் தேனெடுக்க எமர் சமைத்த கண்ணேணியாலேஇடரப் பட்டறியாததிங்கள் என்று பொருள் கொள்க.

வி-ரை : எங்கும் சுற்றித் திரியும் நீ அவருள் வழி எனக்குக் கூறாது இருத்தலின் அறிகரி பொய்த்தனை என்றாள். அதனாலே தேய்ந்தொழிலை என்றாள்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

## 197. பாலை

### தோழி கூற்று

தோளே தொடிநெகிழ்ந் தனவே நுதலே  
பீர்இவர் மலரிற் பசப்பு ஊர்ந்தன்றே  
கண்ணும் தண்பனி வைகின அன்னோ  
தெளிந்தனம் மன்ற தேயர்என் உயிர்என  
5 ஆழல் வாழி தோழி நீநின்  
தாழ்ந்துஒலி கதுப்பின் வீழ்ந்த காலொடு  
வண்டுபடு புதுமலர் ஒண்துறைத் ;ரீஇய

பெருமட மகளிர் முன்கைச் சிறுகோல்
பொலங்தொடி போல மின்னி கணங்கொள்
10 இன்இசை முரசின் இரங்கி மன்னர்
எயில் ஊர் பல்தோல் போலச்
செல்மழை தவழும் அவர்நல்மலை நாட்டே.

எ-து : வரைவு நீட ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி ஆற்றுவித்தது.

நக்கீரர்

ப-ரை : தோழி - தலைவியே! தோளே - தோள்கள்தாம், தொடி - வளையல்களை, நெகிழ்ந்தன - நெகிழவிட்டன, நுதலே - நெற்றி, பீர் இவர் மலரில் - படர்ந்த பீர்க்க மலரைப்போல, பசப்பு ஊர்ந்தன்றே - பசலை படர்ந்தது, கண்ணும் - கண்களிலும், தண்பனி - தண்ணிய நீர், வைகின - தங்கின, அன்னோ - ஐயோ! என் உயிர் தேயர் மன்ற தெளிந்தனம் - என்னுடைய உயிர் இறப்பது திண்ணம் என நன்கு அறிந்தனம், என - என்று, ஆழல் - அழாதே, நீ வாழி - இத் துன்பம் நீங்கி நீ நெடுங்காலம் வாழ்வாயாக, நின் தாழ்ந்தொலி கதுப்பின் - நினது தாழ்ந்து தழைந்த கூந்தல்போல, வீழ்ந்த காலொடு - இறங்கிய காலுடனே, வண்டுபடு புதுமலர் - வண்டுகள் பொருந்திய புதிய மலர்களை, ஒண் துறை தரீஇய - ஒள்ளிய நீர்த்துறையின் கண்ணே கொய்து கொணர்ந்த, பெருமட மகளிர் - பெரிய மடப்பத்தை உடைய மகளிரின், முன்கைச் சிறுகோல் - முன்கையில் அணிந்த சிறிய வேலைப்பாடு அமைந்த, பொலம் தொடிபோல - பொன்னாலாகிய தொடிபோல, மின்னி - மின்னுதலைச் செய்து, கணங்கொள் - கூட்டங்கொண்ட, இன் இசை முரசின் - இனிய ஒலியை உடைய முரசுபோல, இரங்கி - முழங்கி, மன்னர் எயில் ஊர் பல் தோல் போல - அரசர்களுடைய அரணாகிய மதில்மேலே பகைவருடைய படை சென்று பாயாதவாறு பாதுகாப்பாக நின்ற பலவாகிய கிடுகுப் படையைப் போல, அவர் நல்மலை நாட்டு - அவரது நல்ல மலை நாட்டின் கண், செல் மழை தவழும் - விசும்பிலே செல்லும் மேகம் தவழா நிற்கும். அம் மழை நின் கூந்தல்போல் இருத்தலால் அதனைக் காண்டலும் நின்னைக் கருதி இன்னே வருகுவர்காண்.

முடிபு : தோழி! ஆழல், வாழி, அவர் நன்மலை நாட்டுச் செல்மழை தவழும், இன்னே வருகுவர் எனமுடிக்க.

கருத்து : சுரத்திடைச் சென்ற காதலர் மேகங்களைப் பார்த்து உன் நினைவைப் பெற்று விரைந்து வருவர் என்றபடி.

அ-ள் : கதுப்பு - கூந்தல். தோல் - கிடுகுப்படை - கேடயம் என்பர். தேயர் - தேயும் பொருட்டு.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

1-2. பசப்பிற்குப் பீர்க்கமலர்

"மாரிப் பீரத்து அலர் வண்ண மடவாள்"
(சிலப். கடலாடு. 38) (குறுந். 98:5)

10. முரசின் இசை

"விழுக்கடிப் பறைந்த முழுக்குரல் முரசம்
ஒழுக்குடை மருங்கின் ஒரு மொழித்தாக
அரவுஎறி உருமின் உரறுபு சிலைப்ப" (புறநா. 366:1-3)

10-12. தோல் பரப்பல்

"வினைமாட்சிய விரை புரவியொடு
மழையுருவின தோல் பரப்பி" (புறநா. 16:2, 17:34)

12. செல்மழை தவழும்

"புரைதவ வுயரிய மழைமருள் பஃறோ" (மலைபடு. 377)
(பதிற். 62:2) (அகநா. 186:15)

# 198. பாலை

## செவிலி கூற்று

சேயின் வருஉம் மதவலி யாஉயர்ந்து
ஓமை நீடிய கான்இடை அத்தம்
முன்நாள் உம்பர்க் கழிந்த என்மகள்
கண்பட நீர்ஆழ்ந் தன்றே தந்தை
5 தன்ஊர் இடவயின் தொழுவேன் நுண்பல்
கோடுஏந்து அல்குல் அரும்பிய திதலை
வார்ந்து இலங்கு வாலெயிற்றுப் பொலிந்தநார்ச்

சில்வளை பல்கூந்தலளே அவளே
மைஅணல் எருத்தின் முன்பின் தடக்கை
10 வல்வில் அம்பின் எய்யா வண்மகிழ்த்
தந்தை தன்ஊர் இதுவே
ஈன்றேன் யானே பொலிக நும்பெயரே.

எ-து : பின் சென்ற செவிலி இடைச்சுரத்துக் கண்டோர்க்குச் சொல்லியது.

கயமனார்

பி.ம். 12. பொலிக நும்புகழே

ப-ரை : சேயின் வருஉ மதவலி - வெகு சேய்மையிலிருந்து வருகின்ற அரச குமாரனே, யாஉயர்ந்து - யா என்னும் மரங்கள் ஓங்கி வளர்ந்து, ஓமை நீடிய - ஓமை மரங்கள் நீண்டு வளர்ந்த, கான் இடை அத்தம் - காடுகள் இடையிட்ட வழியிலே, முன் நாள் - நேற்று, உம்பர்க் கழிந்த என் மகள் - நெடுந்தூரம் சென்ற என்மகள் போல, கண்பட - இவள் என்கண் எதிரே தோன்றுதலால், நீர் ஆழ்ந்தன்றே - என் கண்களில் நீர் நிறைந் துள்ளது, அவள்தான் நுண்பல் கோடு ஏந்து அல்குல் - நுண்ணிய வரிகள் பொருந்திய அல்குலும், அரும்பிய திதலை - தோன்றிய சுணங்கும், வார்ந்து இலங்கு வைஎயிறு - நேர்மையுற்று அழகாகச் சீராக விளங்கும் கூர்மையான பற்களும் பொருந்திய, பொலிந்த தார் - விளங்கிய மாலையும், சில்வளை - சிலவாகிய வளையும், பல் கூந்தலள் - பலவாகிய கூந்தலும் உடையவள், நிற்க, தந்தை தன் ஊர் இடவயின் தொழுவேன் - உம்மை எம் மூரில் வரவேற்று விருந்து உபசரிப்பேன், அதற்கேற்ற, மை அணல் எருத்தின் - மை போன்ற கருமை நிறம் வாய்ந்த தாடியையும், பிடரியையும், முன்பின் - வலிமை மிக்க, தடக்கை - நீண்ட கையையும், வல்வில் - வலிய வில்லையும், அம்பின் - அம்பையும். எய்யா - அளவிட்டு உரைக்க இயலாத, வண் - கொடையையும், மகிழ் - கள்ளுண்வையும் உடைய, தந்தை - அவளுடைய தந்தையின், ஊர் - ஊரானது, இதுவே - இதுவே ஆகும். கண்டீர், யானே ஈன்றேன் - அவளைப் பெற்றவளும் பாதுகாத்தவளும் யானே, அறிவீர்; என் துயரத்தைக் கண்ட நீவிர் அவளை எதிர்கண்டு பேசியன் பற்றி நுவல்வீரானால் பெரு மகிழ்வு எய்துவேன், நும் பெயர் பொலிக - நுமக்கு அறத்தா லாகிய புகழ் உண்டாகுக என்று செவிலி கூறினாள்.

முடிபு : மதவலி! என்மகள் உம்பர்க் கழிந்தனள். தொழுவேன். அவள் பல்கூந்தலள், இது தந்தை ஊர். யான் என்றேன், நும்பெயர் பொலிக என முடிக்க.

கருத்து : செவிலி, தலைவன் தலைவியைக் கொண்டு தலைக் கழிந்துழி, அத்தத்தில் கண்டோரைப் பார்த்து தன் நிலையைப் புலப்படுத்தி மகளைப் பற்றி உசாவினள். மதவலி - அரசன்.

மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த உவகை.

பயன் - தலைமகளைக் காண விரும்பல்.

# 199. நெய்தல்

## தலைவி கூற்று

ஓங்குமணல் உடுத்த நெடுமாப் பெண்ணை
வீங்குமடல் குடம்பைப் பைதல் வெண்குருகு
நள்ளென் யாமத்து உயவுதோறு உருகி
அள்ளல் அன்னஎன் உள்ளமொடு உள்உடைந்து
5 உளனே வாழி தோழி வளைநீர்க்
கடுஞ்சுறா எறிந்த கொடுந்திமிற் பரதவர்
வாங்குவிசைத் தூண்டில் ஊங்குஊங்கு ஆகி
வளிபொரக் கற்றை தாஅய் நளிசுடர்
நீல்நிற விசும்பின் மீனொடு புரையப்
10 பைபய இமைக்கும் துறைவன்
மெய்தோய் முயக்கம் காணா ஊங்கே.

எ-து : வன்புறை எதிர் அழிந்தது.

**பேரிசாத்தனார்**

ப-ரை : தோழி - தோழீ! வாழி - நெடுங்காலம் நீ வாழ்க, வளைநீர் - சூழ்ந்த கடல்நீரில், கடும் சுறா எறிந்த - விரைந்து ஓடும் சுறாமீனைப் பிடிக்க வலைவீசி எறிந்த, கொடும் திமில் பரதவர் - வளைந்த மீன் பிடிக்கும் படகினை உடைய பரதவர், வாங்கி விசைத் தூண்டில் - இழுக்கும் வேகத்தை உடைய தூண்டி லின், ஊங்கு ஊங்கு ஆகி - இடை இடையே அமைந்து, வளி - காற்று, பொர - தாக்குதலால், கற்றை தாஅய் நளிசுடர் - எரி

கின்ற கற்றை சாய்ந்து பரவிய நெருங்கிய விளக்கின் ஒளி, நீல்நிற விசும்பின் - நீல நிறத்தை உடைய ஆகாயத்தின் கண்ணே, மீனொடு புரைய - ஒளிரும் மீன்களைப்போல, பைபய - சிறுகி மெல்ல மெல்ல, இமைக்கும் - சுடர்வீசும், துறைவன் - துறையை உடைய தலைவனது, மெய்தோய் முயக்கம் - உடம்பைத் தழுவி முயங்கும் முயக்கத்தை, காணா ஊங்கு - நான் அடையப் பெறாதவிடத்து, ஓங்கு மணல் உடுத்த - உயர்ந்த மணல் செறிந்த திடர் சூழ்ந்த, நெடுமாப் பெண்ணை - நீண்டு வளர்ந்த கரிய பனையினது, வீங்கு மடல் - நெருங்கிய மடலில் கட்டிய, குடம்பை - கூட்டின் கண் இருக்கின்ற, பைதல் வெண்குருகு - பிரிந்து வருந்துகின்ற வெளிய நாரை, நள் என் யாமத்து - இரவு நடு யாமத்து, உயவு தோறு - ஒலிக்கும் போதெல்லாம் உருகி, அள்ளல் அன்ன - சேற்றைப்போல் குழம்பி நிற்கும், என் உள்ளமொடு - என் உள்ளத்துடன், உள் உடைந்து - என் எண்ணமும் சிதைந்து, உளன் - இன்னும் உயிருடன் இருக்கின்றேன். என் உயிர் மிகவும் வலிது காண்.

முடிபு : தோழி! துறைவன் முயக்கம் காணா ஊங்கு உள் உடைந்து உளன், இறவேன் என முடிக்க.

கருத்து : துறைவனுடைய முயக்கம் பெறாதவிடத்தும் நான் உயிர் விடாது உள்ளேன். என்னைப் பொறுத்திரு என்னின் எவ்வாறு இயலும் என்று தலைவி தோழி வற்புறுத்தலை வெறுத்துக் கூறினாள்.

அ-ள் : பைதல் - வருத்தம். அள்ளல் - சேறு.

நயம் : காற்றால் தாக்குண்டும் அணையாது சுடர் மழுங்கித் தோன்றும் விளக்கை உடைய துறைவன் என்றமையால், வேட்கை மிகுதியால் என் அழகு பசலையால் தினப்பட்டு மறைந்தவிடத்தும் அவர் வருவர் என்னும் கருத்தால் உயிர் விடாது உள்ளேன் என்னும் கருத்து வெளிப்பட்டது.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

3. நள்ளென் யாமம்
"கையற நரலும் நள்ளென் யாமத்து" (குறுந். 160:4)

5. உளனே வாழி தோழி
"உளனோ வாழி தோழி விளிவா" (குறுந். 316)

10. பைபய
"மணந்தனை அருளாய் ஆயினும் பைபய" (ஐங். 83:1)
"படரும் பைபயப் பெயரும் சுடரும்" (குறுந். 215:1)
(ஐங். 113:5)

# 200. மருதம்

## தோழி கூற்று

கண்ணி கட்டிய கதிர அன்ன
ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி
யாறு கிடந்தன்ன அகல்நெடுந் தெருவில்
சாறுஎன நுவலும் முதுவாய்க் குயவ
5 இதுவும் ஆங்கண் நுவன்றிசின் மாதோ
ஆம்பல் அமன்ற தீம்பெரும் பழனத்துப்
பொய்கை ஊர்க்குப் போவோய் ஆகிக்
கைகவர் நரம்பின் பனுவற் பாணன்
செய்த அல்லல் பல்குவ வைஎயிற்று
10 ஐதுஅகல் அல்குல் மகளிர் இவன்
பொய்பொதி கொடுஞ்சொல் ஓம்புமின் எனவே.

எ-து : தோழி தலைவியது குறிப்பு அறிந்து, வாயிலாகப் புக்க பாணன் கேட்ப, குயவனைக் கூவி, 'இங்ஙனம் சொல்லாயோ' என்று குயவற்குச் சொல்லியது.

கூடலூர்ப் பல்கண்ணனார்

ப-ரை : கண்ணி கட்டிய - அரும்புகளைக் கட்டிய, கதிர் அன்ன - கதிர் போன்ற, ஒண்குரல் - சிறந்த பூங்கொத்தினை உடைய, நொச்சித் தெரியல் சூடி - நொச்சி மாலையைச் சூடி யாறு கிடந்தன்ன - ஆறு கிடந்தாற் போன்ற, அகல் நெடும் தெருவில் - அகன்ற நெடிய தெருவின் கண்ணே, 'சாறு, என - இவ்வூரில் இன்று திருவிழா நடக்கின்றது; அனைவரும் வந்து காண்மின்' என்று, நுவலும் - யாவரும் அறியுமாறு கூவும், முதுவாய்க் குயவ - அறிவு சான்ற குயவனே! ஆம்பல் அமன்ற -

ஆம்பல் மலர்கள் நெருங்கிய, நீம் பெரும் பழனத்துப் பொய்கை ஊர்க்கு - இனிய பெரிய வயலும் பொய்கையும் உடைய ஊரின் கண்ணே, போவோய் ஆகி - நீ செல்வை ஆகி, ஆங்குள்ள மகளிரை விளித்து, வை எயிற்று - கூர்மையான பற்களையும், ஐது அகல் அல்குல் - மெல்லிதாய் அகன்ற அல்குலையும் உடைய, மகளிர் - மகளிர், கைகவர் நரம்பின் - கை விரும்புதற்குக் காரண மான நரம்பினை உடைய, யாழிலே பாடும் இசைப்பாட்டுவல்ல, பனுவல் பாணன் - பாடும் பாணன், செய்த அல்லல் பல்குவ் - செய்த துன்பங்கள் மிகப் பலவாகி வளர்வன ஆயின, இவன் பொய் பொதி கொடுஞ்சொல் - உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் இப் பாணனின் கொடிய சொற்களைக் கேட்டு வருந்தாது, ஓம்புமின் - உங்களை நீங்கள் பாதுகாத்துக் கொள்ளுங்கள், என - என்று, இதனையும் சேர்த்துக் கூறுவீர்.

முடிபு : குயவ! மகளிர்! பாணன் கொடுஞ்சொல் ஓம்புமின் என நுவன்றிசின் என முடிக்க.

கருத்து : வாயிலாகப் புகுந்த பாணனைத் தலைவி வெருண்டு இவன் கூறும் பொய்யுரைகளை அனைவரும் அறியுமாறு செய்க என்று விழாவினைத் தெரிவிக்கும் குயவனை விளித்து வேண்டியதைத் தோழி எடுத்து மொழிந்தாள்.

அ-ள் : கண்ணி கட்டல் - அரும்பு தோன்றல். சாறு - திருவிழா.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - வாயில் மறுத்தல்.

ஒப்புமைப்பகுதி

1-2. கண்ணி மாலை

"கடம்பு சூடிய கண்ணி மாலை போல்" (சீவக. 990)

10-11. பொய்த்தல்

"தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ" (குறுந். 25:2)
(குறள். 293)

"பொய்வலாளன்" (குறுந். 30:2)

"நும்மோரன்னோர் மாட்டும் இன்ன
பொய்யொடுமிடைந்தவை தோன்றின்" (அகநா. 286:15-7)

"தானுற்ற சூள்பேணான் பொய்த்தான் மலை"
(கலி. 19-2:41)

# 201. குறிஞ்சி

### தலைவன் கூற்று

மலைஉறை குறவன் காதல் மடமகள்,
பெறல்அருங் குரையள் அருங்கடிக் காப்பினள்
சொல்எதிர் கொள்ளாள் இனையள் அனையோள்
உள்ளல் கூடாது என்றோய் மற்றும்
5 செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லித்
தெய்வம் காக்கும் தீதுநீர் நெடுங்கோட்டு
அவ்வெள் அருவிக் குடவரை அகத்து
கால்பொருது இடிப்பினும் கதழ்உறை கடுகினும்
உரும்உடன்று எறியினும் ஊறுபல தோன்றினும்
10 பெருநிலம் கிளரினும் திருநல உருவின்
மாயா இயற்கைப் பாவையின்
போதல் ஒல்லாள் என்நெஞ்சத் தானே.

எ-து : கழறிய பாங்கற்குத் தலைமகன் சொல்லியது.

பரணர்

ப-ரை : மலை உறை குறவன் காதல் மடமகள் - மலையில் வாழ்கின்ற குறவனது அன்புடைய இளையமகள், அரும் கடிக் காப்பினள் - அரிய கடிய காவலை உடையவள், பெறல் அரும் குரையள் - அதனால் உன்னால் அடைய முடியாதவள், எண்ணிப் பார்; சொல் எதிர்கொள்ளாள் - நீ கூறும் சொற்களை ஏற்று அதன்படி நடக்கும் இயல்பை உடையவள் அல்லள்; இனையள் - அவள் இத்தகையவள்; அனையோள் - அத்தன்மையாளை, உள்ளல் கூடாது - நினைத்தலும் கூடாது, என்றோய் - என்று அறிவுரை கூறும் அன்பனே! செவ்வேர்ப் பலவின் - சிவந்த வேர்களை உடைய பலா மரங்களின், பயம்கெழு - பழங்கள் பொருந்திய, கொல்லித் தெய்வம் காக்கும் - கொல்லிமலைத் தெய்வத்தாலே பாதுகாக்கப்பட்டு வருகின்ற, தீதுதீர் - குற்றங்கள் நீங்கிய, நெடுங்கோட்டு - உயர்ந்த சிகரங்களையும், அவ் வெள்ளருவி - அழகிய வெள்ளிய அருவியையும் உடைய, குடவரை அகத்து - கொல்லிமலைச் சாரலில், கால் பொருது இடிப்பினும் - காற்று மோதி அடித்தாலும், கதழ்உறை கடுகினும் - வலிய மழை விரைந்து பெய்தாலும், உரும் உடன்று - சினம் கொண்டு இடி, எறியினும் - முழங்கித் தாக்கினும், ஊறுபல தோன்றினும் - வேறு பற்பல இடையூறுகள் தோன்றினாலும்,

பெருநிலம் மிளிரினும் - பெரிய இவ்வுலகமே சினங்கொண்டு எதிர்த்தாலும், திருநல உருவின் மாயா இயற்கைப் பாவையின் - தன் அழகிய நல்ல வடிவம் கெடாத இயல்பினை உடைய பாவை போல, என் நெஞ்சத்து - என் உள்ளத்தை விட்டு, போதல் ஒல்லாள் - நீங்கி ஒழிபவள் அல்லள், ஆகையால் நான் அவளை எவ்வாறு மறப்பேன்.

முடிபு : மடமகள், அருங்குரையள், காப்பினள், கொள்ளாள், இணையள், உள்ளள் கூடாது என்றோய்! அவள் என் நெஞ்சத்துப் போதல் ஒல்லாள் என முடிக்க.

கருத்து : எத்துணை இடர்ப்பாடுகள் தோன்றினும் என் உள்ளம் புகுந்தோளை என்னால் மறத்தல் இயலாது, என்றபடி.

வி-ரை : காவலருமையால் நின்பால் அன்புடையள் என்றாலும் பெறல் அரியள், நின் சொல்லுக்கு விடையுந் தாராள் என்று பாங்கன் கூறினான். என் நெஞ்சைவிட்டு அகலாள் என்றதனால் அவளைப் பெற்றாலன்றி உயிர் வாழேன் என்று தலைவன் கூறினான். தெய்வம் காத்தலாற்பாவை ஊறின்றி இருத்தல்போல, ஊழ்வினை எம்மை ஒன்று சேர்க்கும் என்றானாம்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - பாங்கனை உடம்படுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

5\. வேரிற் காய்க் குலையை உடைய பலா

"வேரும் முதலும் கோடும் ஓராங்குத்
..........................
கீழ்தாழ்வு அன்ன வீழ்கேட் பலவின்"
(குறுந். 257:1-3, 18:1)

5-11. கொல்லிப்பாவை

"பாவடி உரல பகுவாய் வள்ளை
..........................
பெரும்பூண் பொறையன் பேஎமுதிர் கொல்லி
..........................
நல்லியற் பாவை அன்ன" (கலி. 56:7) (சிலப். 6:61)

10\. நிலம்புடை பெயர்தல்

"நிலம்புடை பெயரினும் நீர்தீப் பிறழினும்" (குறுந். 373:1)
"நிலந்திறம் பெயருங் காலையாயினும்" (பதிற். 63:6)
"நிலம்புடை பெயர்வதாயினும்" (புறநா. 34:5)
"இருநிலம் பெயரினும்" (பெருங். 1;58:92)

# 202. பாலை

## தலைவன் கூற்று

புலிபொரச் சிவந்த புலால்அம் செங்கோட்டு
ஒலிபல் முத்தம் ஆர்ப்ப வலிசிறந்து
வன்சுவல் பராரை முருக்கிக் கன்றொடு
மடப்பிடி தழீஇய தடக்கை வேழம்
5 தேன்செய் பெருங்கிளை இரிய வேங்கைப்
பொன்புரை கவழம் புறந்தருபு ஊட்டும்
மாமலை விடரகம் கவைஇ காண்வரக்
கண்டிசின் வாழியோ குறுமகள் நுந்தை
அறுமீன் பயந்த அறம்செய் திங்கள்
10 செல்சுடர் நெடுங்கொடி போலப்
பல்பூங் கோங்கம் அணிந்த காடே.

எ-து: உடன்போகா நின்ற தலைவன் தலைவிக்குச் சொல்லியது.

பாலை பாடிய பெருங்கடுங்கோ

ப-ரை: குறுமகள் - இளமடந்தையே! வாழியோ - நீ நீண்ட நாட்கள் வாழ்வாயாக, புலி பொர - புலியுடன் போர் செய்தலால், சிவந்த - இரத்தம் படிந்து சிவந்த, புலால் - புலவு நாற்றத்தைக் கொண்ட, அம் - அழகிய, செங்கோட்டு - செவ்விய கொம்புகளின் அடியில், ஒலிபல் முத்தம் - தழைத்த பலவாய முத்துக்கள், ஆர்ப்ப - ஒலிக்க, வலி சிறந்து - வலிமை மிகுந்து, வன்சுவல் பராரை - வலிய மேட்டு நிலத்தின் கண்ணுள்ள வேங்கை மரத்தின் பருத்த அடியை, முருக்கி - முறித்து, கன்றொடு மடப்பிடி தழீஇய - தன் கன்றுடனே இளம்பிடியை அணைத்த, தடக்கை வேழம் - நீண்ட கையை உடைய களிற்றி யானை, தேன்செய் பெருங்கிளை இரிய - தேனைச் சேர்க்கின்ற ஈக்கள் எல்லாம் அஞ்சி ஓடுமாறு, வேங்கைப் பொன்புரை கவழம் - அந்த வேங்கையின் பொன்போன்ற பூங்கொத்தாலாகிய உணவை, புறந்தருபு ஊட்டும் - பாதுகாத்து ஊட்டும், மாமலை விடரகம் கவைஇ - கரிய மலையின் பிளப்பு இடங்களைச் சூழ்ந்து, காண்வர - அழகு மிக, அறுமீன் பயந்த அறம் செய்திங்கள் - கார்த்திகை நாளின் பெயராலே பெற்ற அறம் செய்தற்குரிய திங்களிலே எடுக்கப்பட்ட, செல்சுடர் நெடுங் கொடிபோல -

விசும்பிலே செல்லுகின்ற ஒளியை உடைய நீண்ட விளக்குகளின் வரிசைபோல, பல்பூம் கோங்கம் அணிந்த - நுந்தைகாடு - பல பூக்கள் நிரம்பிய கோங்கங்கள் அழகு செய்யப்பட்ட உனது தந்தைக்குரிய இக் காட்டினை, கண்டிசின் - நீ காண்பாயாக.

முடிபு: குறுமகள்; கோங்கம் அணிந்த நும் தந்தைகாடு கண்டிசின் என முடிக்க.

கருத்து: கொண்டுதலைக் கழியுந் தலைவன் "உன் தந்தையின் காட்டைக் கண்டு மகிழ்ந்து அயர்வின்றி வருக" என்று தலைவியிடம் கூறினான்.

அ-ள்: கவல் - மேட்டு நிலம். கவழம் - கவளம் - வாய் நிரம்பிய உணவு. அறுமீன் - கார்த்திகைநாள். உவாமதியோடு சேர்கின்ற திங்களைக் கார்த்திகைத் திங்கள் என்பர். அத் திங்களில் நீராடி விளக்கேற்றி வைத்துப் பார்ப்பார்க்கு அளித்தல் அறம் எனப் படுதலின் அறஞ்செய் திங்கள் என்றார். சுடர் - விளக்கு. கொடி - விளக்கின் வரிசை. இளைய தலைவியை வருந்தாது வருமாறு அவளது தந்தை காட்டினைக் காட்டி மகிழுமாறு செய்து அச்சமின்றி மெல்லக் கொண்டேகினான்.

நயம்: கன்றோடு பிடியைத் தழுவிய வேழம் கவளம் ஊட்டும் காடு என்றது, தலைவியோடு இல்லறம் நடத்தி அவளிடம் பிறந்த மக்களுடன் அவளையும் பாதுகாத்துக் கொள்ளுவேன் என்று எண்ணும் தலைவன் உட்கிடையைக் குறிப்பித்தது.

மெய்ப்பாடு - உவகை.

பயன்: தலைவியை அயர்வு அகற்றல்.

ஒப்புமைப்பகுதி

1-4. களிறு புலியைத் தாக்குதல்

"சிறுகட் பெருங்களிறு வயப்புலி தாக்கி"

(குறுந். 88:2-3, 141:4-5, 343:1-3) (மலைபடு. 517)
(கலி. 42, 45, 46, 48) (அகநா. 291, 398)
(புறநா. 100:7)

# 203. நெய்தல்

## தோழி கூற்று

முழங்குதிரை கொழீஇய மூரி எக்கர்த்
தடந்தாள் தாழை முள்ளுடை நெடுந்தோட்டு
அகமடல் பொதுளிய முகைமுதிர் வான்பூங்
கோடுவார்ந் தன்ன வெண்பூத் தாழை
5 எறிதிரை உதைத்தலின் பொங்கித் தாதுசோர்பு
சிறுகுடிப் பாக்கத்து மறுகுபுலா மறுக்கும்
மணம்கமழ் கானல் இயைந்தநம் கேண்மை
ஒருநாள் பிரியினும் உய்வுஅரிது என்னாது
கதழ்பரி நெடுந்தேர் வரவுஆண்டு அழுங்கச்
10 செய்த தன்தப்பல் அன்றியும்
உய்வுப் புணர்ந்தன்று இவ்அழுங்கல் ஊரே.

எ-து : தலைவன் சிறைப்புறத் தானாகத் தோழி சொல்லி வரைவு கடாயது.

### உலோச்சனார்

ப-ரை : முழங்குதிரை கொழீஇய-ஒலிக்கின்ற அலைகளாற் கொழிக்கப்பட்ட, மூரி எக்கர் - பெரிய மணலாகிய திடரின் கண்ணுள்ள, தடம்தாள் தாழை - வளைந்த அடியை உடைய தாழையின், முள்ளுடை நெடுந்தோட்டு-முள்ளை உடைய நெடிய தொகுதியாகிய, அகமடல் பொதுளிய - இலையின் உள்மடலிலே தோன்றிய, முகை முதிர் வான்பூம் கோடு வார்ந்தன்ன - அரும்பு முறிந்த வெளிய பொலிவு பெற்ற சங்கினை நீட்டித்து வைத்தாலொத்த, வெண் பூந்தாழை - வெளிய பூவை உடைய தாழை, எறிதிரை உதைத்தலில் - எறிகின்ற அலை மோதுதலாலே, பொங்கித் தாது சோர்பு - பொங்கித் தாது உதிர்ந்து, சிறுகுடிப் பாக்கத்து - சிறிய குடியை உடைய பாக்கத்து, மறுகுபுலா மறுக்கும் - தெருவில் எழுகின்ற புலால் நாற்றத்தைப் போக்கும், மணம் கமழ் கானல் - நறுமணம் வீசுகின்ற கடற்கரைச் சோலையின் கண்ணே, இயைந்த நம் கேண்மை - காதலருடனே தொடர்ந்து ஒன்றிய நம்முடைய நட்பானது, ஒருநாள் பிரியினும் - ஒருநாள் இடையிட்டுப் பிரிந்தாலும், உய்வு அரிது என்னாது - உயிர் பிழைத்தல் அரிதாகுமென்று கருதாமல், கதழ்பரி நெடுந்தேர் வரவு - விரைந்த செலவினை உடைய

குதிரை பூட்டிய அவரது நெடிய தேரின் வருகையை, ஆண்டு அழுங்க - இனி அச் சோலைக்கண் வாராது அலரால் மறிக்கப் பட்டு, செய்த தன் தப்பல் அன்றியும் - வருந்தச் செய்ததன் தவறுகளை வெளிக்காட்டாது இருப்பதன்றியும், இவ் அழுங்கல் ஊர் - இப் பழிமொழியாகிய பேர் இரைச்சலை உடைய இவ் வூரானது, உயவு புணர்ந்தன்று - இங்ஙனம் ஒரு தேர் வந்து செல்வதன் காரணம்தான் யாதோ என்று ஆராய்ந்து அதனால் வருத்தமும் அடைகின்றது. இஃது என்ன கொடுமையோ? இனி இக் களவொழுக்கம் நீட்டிக்குமோ?

முடிபு : இவ் அழுங்கல் ஊர் தேர் வரவு ஆண்டு அழுங்க உயவுப் புணர்ந்தன்று என முடிக்க.

கருத்து : அலர் எழுதலும் தேர் வருதல் பற்றி ஊரினர் உசாவுதலும் உள்ளபடியால் இனித் தலைவன் களவு ஒழுக்கத் தில் நீட்டித்துக் காணல் இயலாது; எனவே வரைந்து கோடல் வேண்டும். அதுவே செய்யத்தக்கது.

நயம் : அலை மோதுதலால் தாழையின் மகரந்தம் உதிர்ந்து மறுகிலுள்ள புலால் நாற்றத்தை நீக்குதல்போல, தலைவனை ஆசை தூண்டுதலால் அவன் பொருளை எமர் இல்லத்துக் கொணர்ந்து குவித்து வரைந்து ஊரிலெழுந்த அலரைப் போக்கு வானாக என்றதாம். இதனுள் அவன் புணர்வு மறுத்தல் - துன்பத்துப் புலம்பல் போன்ற அவத்தைகள் வந்துள்ளன.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

10. தப்பல்

"ஒல்லேம் என்ற தப்பற்கு"

(குறுந். 79:7 121:3; 292 2) (அகநா. 196:9)

7-8. பிரிதலைக் காட்டிலும் உயிர் செல்லுதல் நலம்.

"பிரிவரிதாகிய தண்டாக் காமமொடு
உடனுயிர் போகுக தில்ல" (ஐங். 11:3-4)

(கலி. 2:13; 3:6; 4:24; 2:18-9; 10:21; 21:12-3)

(அகநா. 305:8; 339:11-4)

# 204. குறிஞ்சி

### தலைவன் கூற்று

தளிர்சேர் தண்தழை தைஇ நுந்தை
குளிர்வாய் வியன்புனத்து எல்பட வருகோ
குறுஞ்சுனைக் குவளை அடைச்சி நாம்புணரிய
நறுந்தண் சாரல் ஆடுகம் வருகோ
5 இன்சொல் மேவலைப் பட்டஎன் நெஞ்சுணக்
கூறுஇனி மடந்தை நின்கூர்எயிறு உண்குஎன
யான்தன் மொழிதலின் மொழிஎதிர் வந்து
தான்செய் குறியில் இனிய கூறி
ஏறுபிரி மடப்பிணை கடுப்ப வேறுபட்டு
10 உறுகழை நிவப்பின் சிறுகுடிப் பெயரும்
கொடிச்சி செல்புறம் நோக்கி
விடுத்த நெஞ்சம் விடல்ஒல் லாதே.

எ-து : பின்னின்ற தலைவன் ஆற்றானாய்த் தோழி கேட்பத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

**மள்ளனார்**

ப-ரை : மடந்தை - மடப்பம் வாய்ந்த பெண்ணே! தளிர் சேர தண்தழை தைஇ - தளிர் சேர்ந்த மெல்லிய தழையை உடுத்து, நுந்தை - உன் தந்தையினுடைய, குளிர்வாய் வியன் புனத்து - கிளிகடி கருவியாலே பாதுகாக்கப்படுகின்ற அகன்ற தினைப்புனத்தின் கண்ணே, எல்பட - கதிரவன் மறைந்தபின், வருகோ - வருவேனோ? குறுஞ்சுனைக் குவளை அடைச்சி - பறித்த சுனைக் குவளை மலரைச் சூடி, நாம் புணரிய - நாம் முன்பு புணர்ந்த, நறுந்தண் சாரல் ஆடுகம் வருகோ - நறிய குளிர்ந்த மலைச்சாரலில் விளையாடுவோம் ஆதலால் அதற்கு அங்கு வருவேனோ? இன்சொல் - இவற்றிற்கு விடையாக நீ கூறும் இனிய மொழியை, மேவலைப்பட்ட - விரும்புதலால் அம் மொழி பெறாமல் வருந்துகின்ற, என் நெஞ்சு உண - என் உள்ளம் கொண்டு மகிழும்படி, இனி - இப்பொழுது, கூறு - ஒரு வார்த்தை கூறுவாய், நின் கூர் எயிறு உண்கு - உன்னுடைய கூரிய எயிற்றைச் சுவைத்து மகிழ்வேன், என - என்று, யான் தன் மொழிதலின் - யான் நெருங்கி அவளிடம் இனிய வார்த்தைகள் பலவற்றைக் கூறலின், மொழி எதிர்வந்து - என் சொல்லுக்கு

எதிராக வந்து, தான் செய்குறியில் இனிய கூறி - தான் முன்பு செய்த குறியிடத்து அழைத்துக் கொண்டு போய் 'நீ பின்னர் முயங்குதி' என இனிய மொழிகளைக் கூறி, ஏறுபிரி மடப்பிணை கடுப்ப - கலைமானைப் பிரிந்து செல்கின்ற பெண்மானைப்போல, வேறுபட்டு - நின்னை வேறாகக் கொண்டு, உறுகழை நிவப்பில் - நிறைந்த மூங்கில்கள் உயர்ந்து தோன்றுதலை உடைய, சிறுகுடிப் பெயரும் கொடிச்சி - தன் சிறுகுடியின் கண்ணே, திரும்பிச் செல்லும் தலைவி, செல்புறம் நோக்கி - செல்லுகின்ற பின்புறம் நோக்கி, விடுத்த நெஞ்சம் - அவளைக் கைவிட்டு ஏமார்ந்திருந்த நெஞ்சமே, விடல் ஒல்லாதே - அவள் நலனை நுகர்ந்து மகிழாது கைவிடலாமா? விடலாகாதே.

முடிபு : கொடிச்சி செல்புறம் நோக்கிய நெஞ்சமே! அவளை விடல் ஒல்லாது என முடிக்க.

கருத்து : பெற்ற தலைவியின் நலனை நுகராது போகவிட்ட நெஞ்சமே! நீ எனக்கு நல்லது செய்தனை அல்லை.

அ-ள் . எயிறு உண்கு என்பதற்கு வாயை முத்தமிடல் எனவும் பொருள் கொள்ளலாம். மேவு அலைப்பட்ட - விருப்பம் அலைத்தலால் துன்பப்பட்ட. குளிர் - கிளிகடிகருவி. நிவப்பு - உயர்வு.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - கேட்ட தோழி குறை முடிப்பாளாவது.

ஒப்புமைப்பகுதி

5. நெஞ்சுண

"மங்கை கொட்டி நெஞ்சுண" (சீவக. 156)
(பெருங். 2.9:39) (சூளா. கலியாண. 287)

"நெஞ்சு நம் பிரிந்தன்றாயினும்" (குறுந். 237:2)
(அகநா. 157:10)

3. குவளையையும் நெய்தலையும் அடைச்சுதல்

"கண்ணவிழ் நெய்தலும் கதுப்புற அடைச்சி" (குறுந். 80:1)
(சிலப். ஊர்காண். 77) (மதுரை. 588)

# 205. பாலை

## தலைவன் கூற்று
## (தோழி கூற்றும் ஆம்)

அருவி ஆர்க்கும் பெருவரை அடுக்கத்து
ஆளி நன்மான் வேட்டுஎழு கோள்உகிர்ப்
பூம்பொறி உழுவை தொலைச்சிய வைந்நுதி
ஏந்து வெண்கோட்டு வயக்களிறு இழுக்கும்
5 துன்அருங் கானம் என்னாய் நீயே
குவளை உண்கண் இவள்ஈண்டு ஒழிய
ஆள்வினைக்கு அகறி ஆயின் இன்றொடு
போயின்று கொல்லோ தானே படப்பைக்
கொடுமுள் ஈங்கை நெடுமா அந்தளிர்
10 நீர்மலி கதழ்பெயல் தலைஇய
ஆய்நிறம் புரையும் இவள்மாமைக் கவினே.

எ-து: தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது. தோழி செலவழுங்கச் சொல்லிய தூஉம்ஆம்.

### இளநாகனார்

ப-ரை: நெஞ்சே! அருவி ஆர்க்கும் - அருவி ஒலிக்கின்ற, பெருவரை அடுக்கத்து - பெரிய மலைப்பக்கத்தில், நல் ஆளி மான் - நல்ல ஆளி என்னும் விலங்கு, வேட்டு எழு - இரை விரும்பி எழுந்த, கோள் உகிர் - கொல்லவல்ல நகங்களையும், பூம் பொறி - அழகிய வரிகளையுமுடைய, உழுவை தொலைச்சிய - புலியால் அடிக்கப்பட்ட, வைந்நுதி - கூரிய நுனியை உடைய, ஏந்து வெண்கோட்டு - தலையிலே தாங்கிய வெள்ளிய கோட்டினை உடைய, வயக்களிறு - வலிய களிற்றி யானையை, இழுக்கும் - இரையெனக் கொண்டு இழுத்துச் செல்லும், துன் அருங்கானம் என்னாய் - பிறர் செல்லற்கு அரிய காடு என்று நினையாயாய், நீயே - நீதான், குவளை உண்கண் இவள் ஈண்டு ஒழிய - குவளை மலர் போன்ற மையுண்ட கண்களை உடைய இவள் இவ்விடத்தே நிற்குமாறு கைவிட்டு, ஆள்வினைக்கு - முயற்சியை மேற்கொண்டு வினைமேற் செல்குவையானால், படப்பை - கொல்லையிலுள்ள, கொடு முள் ஈங்கை - வளைந்த முள்ளை உடைய ஈங்கையின், நெடுமா அம் தளிர் - நெடிய கரிய அழகிய தளிரின் மீது, நீர்மலி கதல்பெயல் தலைஇய - நீர்மிக்க விரைவை

உடைய மழைபெய்துவிட்ட பொழுது உண்டாகிய, ஆய் நலம் புரையும் - அழகிய நிறத்தை ஒத்திருக்கும், இவள் மாமைக்கவின் - இவளது மாமையின் அழகு, இன்றொடு போயின்று கொல்லோ - இன்றோடு கெட்டொழிந்ததோ, ஆராய்ந்து பார், எனவே நினக்கு எது ஏற்றது என்பதை ஆய்ந்து செய்வாயாக.

முடிபு : நெஞ்சே! துன்னரும் கானம் என்னாய்! ஆள் வினைக்கு அகறியாயின், இவள் மாமைக் கவின் போன்று கொல்லோ? என முடிக்க.

கருத்து : தலைவி அன்றுபோல் இன்றும் கவினுடன் இருக் கின்றாள் ஆதலின் வினை வயிற்பிரிய எண்ணுவது நன்றன்று.

நயம் : புலியால் அடிக்கப்பட்ட களிற்றை ஆளி இரையாக உண்ணக் கருதி இழுத்துச் சென்று உண்ணும் காடு என்றது உன்னால் நலன் உணப்பட்ட இவளது மேனி அழகைப் பசலை உண்டு கெடுக்கா நிற்கும் என்றதாம்.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - செலவழுங்கல்.

தோழிகூற்றிற்கு மெய்ப்பபாடு - பெருமிதம்.

பயன் - செலவு அழுங்குவித்தல்.

ஒப்புமைப்பகுதி

5-11. தலைவன் பிரிவினால் மாமை அழிதல்

"பசலை உணீஇயர் வேண்டும்
திதலை அல்குல் என் மாமைக் கவினே" (குறுந். 27:4-5)

"கான நாடன் பிரிந்தெனத் தானும்
பிரிந்தன்று என் மாமைக் கவினே"
(தொல். களவு: 21, ந. மேற். அம்மவாழி)

"அணியாகம் கைதொழுதேனும் இழக்கோ
நறுமாவின் கொய்தளிரன்ன நிறம்" (முத். 83)

"மற்கொண்ட திண்டோள் மறவேல் நெடுந்தகை
தற்கண்டு மாமை தகை இழந்த" (பு.வெ: 307)

9. "நுண்முள் ஈங்கைச் செவ்வரும்பு ஊழ்த்த"
(அகநா. 357:11)

# 206. குறிஞ்சி

## தோழி கூற்று

துய்த்தலைப் புனிற்றுக்குரல் பால்வார்பு இறைஞ்சித்
தோடுஅலைக் கொண்டன ஏனல் என்று
துறுகல் மீமிசைக் குறுவன குழீஇச்
செவ்வாய்ப் பாசினம் கவரும்இன்று அவ்வாய்த்
5 தட்டையும் புடைத்தனை கவணையும் தொடுக்க என
எந்தை வந்து உரைத்தனனாக அன்னையும்
நன்னாள் வேங்கையும் மலர்கமா இனியென
என்முகம் நோக்கினள் எவன்கொல் தோழி
செல்வாள் என்றுகொல் செறிப்பல் என்றுகொல்
10 கல்கெழு நாடன் கேண்மை
அறிந்தனள்கொல் அஃதுஅறிகலேன் யானே.

எ-து : தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது.

### ஐயூர் முடவனார்

ப-ரை : தோழி - தலைவி! துய்த்தலை - பஞ்சு நுனி போன்ற தலையை உடைய, புனிற்றுக் குரல் - அப்பொழுதீன்ற தினைக் கதிர்கள் எல்லாம், பால் வார்பு - பால் முற்றி, இறைஞ்சி - அதனால் தலை சாய்ந்து, ஏனல் தோடு அலைக் கொண்டன - தினைப்பயிர்களின் மேலேயுள்ள தோடுகள் அலை தலைக் கொண்டன, என்று - என்று கருதி, அத் தினைகளைக் கொய்துகொள்ள வேண்டி, துறுகல் மீமிசை - துறுகல்லின் மீது, குறுவன குழீஇ - கொய்வான் வேண்டி ஒன்று திரண்டு, செவ்வாய்ப் பாசினம் - சிவந்த வாயை உடைய பசிய கிளியின் கூட்டம், கவரும் இன்று - இப்பொழுதே கவர்ந்து கொண்டு போய்விடும், அவ் வாய்த் தட்டையும் புடைத்தனை - நீ அங்கே சென்று கிளியோப்புந் தட்டையைப் பக்கத்திலுள்ள கட்டையிலே அடித்து ஓசை செய்வதோடு, கவணையும் தொடுக்க என - கவண் கல்லும் வீசுக என்று, எந்தை வந்து உரைத்தனனாக - என் தந்தை வந்து கூறிச் சென்றானாக, அன்னையும் - என் தாயும் இனி நன்னாள் வேங்கையும் மலர்க - நல்லநாளை அறிவுறுத்தும் வேங்கையும் மலர்க, என - என்று கூறி, என் முகம் நோக்கினள் - என் முகத்தைக் குறிப்பாக நோக்கினள், செல்வாள் என்றுகொல்,

தினைப்புனம் காக்க இவளை அனுப்பலாம் என்றோ, செறிப்பல் என்றுகொல் - என்னை இல்வயிற் செறிக்கலாம் என்றோ, எவன்கொல் - வேறு யாதேனும் கருதியோ அறியேன், கல்கெழு நாடன்கேண்மை - மலை பொருந்திய நாடன்பால் வைத்த நம்முடைய நட்பை, அறிந்தனள் கொல் - அவ் அன்னைதான் அறிந்து கொண்டனளோ? யான் அறிகலேன் - அன்னையின் எண்ணம் யாதென்று நான் அறிந்திலேன்; நீ அறிந்தனை யாயிற் கூறுக.

முடிபு : தோழி! கல்கெழு நாடன் கேண்மை அறிந்தனள். கொல்? யான் அறிகலேன் என முடிக்க.

கருத்து : தலைவ! நும் களவினைத் தந்தையும் தாயும் அறிந்தனள்! இனிக் கூட்டம் நிகழ்தல் அரிது - எனவே விரைந்து வரைதற்குரிய முயற்சிகளில் ஈடுப்டுவாயாக என்று தோழி கூறினள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவுடன் படுத்தல்.

ஒப்புமைப்பகுதி

1-3. பால்வார்பு ஏனல்

"பைந்தாட் செந்தினை, மடப்பிடித் தடக்கையன்ன பால்"

(குறுந். 198:2.3)

5. தட்டை

"தழலுந் தட்டையுங் குளிரும் பிறவும்" (குறிஞ்சி. 44)

(மதுரைக்காஞ்சி. 305) (மலைபடு. 328) (ஐங். 285)

(அகநா. 32,388)

## 207. நெய்தல்

### தோழி கூற்று

கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை
முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பைக்
கொழுமீன் கொள்பவர் பாக்கம் கல்லென
நெடுந்தேர் பண்ணி வரல் ஆனாதே
5 குன்றத்து அன்ன குவவுமணல் நீந்தி

வந்தனர் பெயர்வர்கொல் தாமே அல்கல்
இளையரும் முதியரும் கிளையுடன் குழீஇக்
கோட்சுறா எறிந்தெனச் சுருங்கிய நாம்பின்
முடிமுதிர் பரதவர் மடமொழிக் குறுமகள்
10 வலையும் தூண்டிலும் பற்றிப் பெருங்கால்
திரையெழு பௌவம் முன்னிய
கொலை வெஞ்சிறாஅர் பாற்பட் டனளே.

எ-து : நொதுமலர் வரைவுழித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : அன்னாய்! கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை - கழிசூழ்ந்த கண்டல் மரங்களால் ஆகிய வேலியை உடைய கொல்லை இடை அமைந்த, முண்டகம் வேய்ந்த - முள்ளிச் செடிகளால் வேய்ந்த, குறி இறைக் குரம்பை - குறுகிய கூரையை உடைய சிறு குடில்களை உடைய, கொழுமீன் கொள்பவர் - கொழுத்த மீன்களைப் பிடிப்பவர் வாழ்கின்ற, பாக்கம் - பாக்கம் முழுதும், கல்லென - கல்லென்றும் ஓசையுண்டாக, நெடுந்தேர் பண்ணி - நெடிய தேரைச் செலுத்திக்கொண்டு, வரல் - நம் காதலர் வருவது, ஆனாது - தடுக்கக் கூடியது ஒன்றன்று; குன்றத்து அன்ன - மலை போன்ற, குவவு மணல் நீந்தி - குவிந்த மணற் பரப்பைக் கடந்து, வந்தனர் தாம் பெயர்வர்கொல் - வந்த நம் தலைவர்தாம் வறிதே இனித் திரும்பிச் செல்வரோ? அல்கல் - இரவில், இளையரும் முதியரும் - இளைஞரும் முதியோரும், கிளையுடன் குழீஇ - தம் உறவினருடன் கூடியிருந்து, கோட் சுறாஎறிந்த - கொல்ல வல்ல சுறாமீன் கிழித்த தனாலே, சுருங்கிய - சுருங்கிய, நாம்பின் - நாம்பு என்னும் மெல்லிய கொடிகளைக் கொண்டு, முடி முதிர் பரதவர் - வலையை முடிகின்ற முதிர்ச்சியை உடைய பரதவரின், மடமொழிக் குறுமகள் - மடப்பம் மிக்க மொழியை உடைய இளமகளான இவள் அவருக்கே உரியவள், மாறாக வேற்று வரைவுக்கு உட்படுத்தினீரானால், வலையும் தூண்டிலும் பற்றி - வலையையும் தூண்டிலையும் பிடித்து, பெருங்கால் - பெரிய காற்று வீசுதலால், திரைஎழு - அலைஎழுகின்ற, பௌவம் - கடலின் கண்ணே, முன்னிய - செல்லுகின்ற, கொலைவெம் சிறாஅர்பாற் பட்டனளே - கொலைத் தொழிலை உடைய கொடிய பரதவர் சிறாஅர் வாய்ப் பட்டொழிந் தனளேயாவாள்; இனிச் செயத்தக்கது செய்ம்மின்.

முடிபு : அன்னாய்! தேர்வலானாது; வந்தனர் பெயர்வர் கொல்? குறுமகள் சிறாஅர் பாற்பட்டனள்; இனி என் பயன்? என முடிக்க.

கருத்து : தலைவி வேற்று வரைவிற்கு உடம்படாள். வந்த காதலர் வறிதே பெயர்வரோ? மாறாக நிகழின் தலைவி இறந்துபடுவள்.

நயம் : தேரோடு வருதல் என்றமையால் தலைவனின் செல்வ மிகுதி புலப்படலாயிற்று. அத்தகு செல்வர் இழிந்த பாக்கத்து வருவர் என்றமையால் தலைவிமாட்டு அவருக்குள்ள அன்பின் பெருக்கம் புலனாயிற்று. வரையவரும் நொதுமலர் வலையும் தூண்டிலும் உடையோர் என இழிக்கப்பட்டனர் பிறர் வரையின் இவள் உய்யாள் எனத் தலைவியின் இறந்துபாடு குறித்தாளுமாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வெளிப்படையாக அறத்தொடு நிற்றல்.

ஒப்புமைப்பகுதி

1. தாழை வேலி
"தாழை, மாலை வேளாட்டு வேலியாகும்" (குறுந். 245:3-4)

3. கல்லென்றல்
"ஊர் அலரெழச் சேரி கல்லென" (குறுந். 262:1 24:6)

4. தேர் பண்ணல்
"காலை எழுந்து கடுந்தேர் பண்ணி" (குறுந். 45:1)

5. குன்றத்தன்ன மணல்
"குன்றத் தன்ன குவவு மணல் அடைகரை"
(குறுந். 236:3, 311:5)
"குன்றில் தோன்றும் குவவுமணற் சேர்ப்ப"
(அகநா. 310:10)

# 208. பாலை

## தோழி கூற்று

விறல்சாய் விளங்கிழை நெகிழ விம்மி
அறல்போல் தெள்மணி இடைமுலை நனைப்ப
விளிவுஇல கலுழும் கண்ணொடு பெரிது அழிந்து
எவன் இனைபு வாடுதி சுடர்நுதற் குறுமகள்
5 செல்வார் அல்லர் நம்காதலர் செலினும்
நோன்மார் அல்லர் நோயே மற்றவர்
கொன்னும் நம்புங் குரையர் தாமே
சிறந்த அன்பினர் சாயலும் உரியர்
பிரிந்த நம்மினும் இரங்கி அரும்பொருள்
10 முடியாது ஆயினும் வருவர் அதன்தலை
இன்துணைப் பிரிந்தோர் நாடித்
தருவது போலும் இப்பெருமழைக் குரலே.

எ-து: செலவுற்றாரது குறிப்பு அறிந்து ஆற்றாளாய தலைவி உரைப்பத் தோழி சொல்லியது.

### நொச்சி நியமங்கிழார்

ப-ரை: சுடர் நுதற் குறுமகள் - விளங்குகின்ற நெற்றியை உடைய இளைய மகளே! விறல் சாய் விளங்கு இழை நெகிழ - நின் வலிமையெல்லாம் குறைய விளங்கிய அணிகலன்கள் நெகிழ, அறல்போல் தெள்மணி இடைமுலை நனைப்ப - முத்துப்போன்ற கண்ணீர்த் துளி கொங்கையினிடையே விழுந்து நனைத்தலைச் செய்ய, விளிவு இல விம்மிக் கலுழும் கண்ணொடு - நீங்காதபடி விம்மி விம்மி அழுகின்ற கண்ணுடன், பெரிது அழிந்து - மிகவும் வருந்தி, எவன் இனைபு வாடுதி - என்ன கருதி வாடுகின்றனை? நம் காதலர் செல்வார் அல்லர் - நமது காதலர் நின்னைப்பிரிந்து செல்பவர் அல்லர், செலினும் - அங்ஙனம் பிரிந்து சென்றாலும், நோன்மார் அல்லர் நோய் - காமநோயைப் பொறுக்கும் ஆற்றல் இலர், அவர்தாம் - அத் தலைவர் தாம், கொன்னும் நம்பும் குரையர் - நின்னிடத்துப் பெரியதொரு விருப்பம் உடையவர் கண்டாய், சிறந்த அன்பினர் - நின்பாற் சிறந்த அன்புடையவர்; சாயலும் உரியர் - மென்மைத்தன்மையும் நிறைய வாய்க்கப் பெற்றவர், பிரிந்த நம்மினும் - அவரைப் பிரிந்து உறையும் நம்மைக் காட்டிலும், இரங்கி-இரக்கமுற்று, அரும் பொருள்

முடியாது ஆயினும் - தேடிய அரிய பொருள் கிடைக்கப் பெறா வாயினும், வருவர் - தாமதியாது உடனே திரும்பி வருவர்; அதன் தலை - அதன் மேலும், இப்பெருமழைக் குரல் - இப்பெரிய மேகத்தின் இடிமுழக்கமானது, இன்துணைப் பிரிந்தோர் நாடித் தருவது போலும் - இனிய துணையைப் பிரிந்தோரை நாடித் தருவது போலுமாய் இரா நின்றது; ஆதலின் நீ வருந்தற்க.

முடிபு : குறுமகள்! எவன் வாடுதி? காதலர் செல்வார் அல்லர்; செலினும் நோன்மார் அல்லர்; பெருமழைக்குரல் மின்னும், வருவர் என முடிக்க.

கருத்து : பொருள் வயிற் பிரிந்த தலைவன் காமநோய் பொறுக்கும் ஆற்றல் இலர். நின்னைப்பிரிந்து உறையார். வருவர் என்று தோழி ஆற்றுவித்தாள்.

(பி-ம்) 3. கலிழும் 5. நுங்காதலர்.

அ-ள் : விறல் - வலிமை. சாய்தல் - உள்ளதன் நுணுக்கம். அறல் - நீர். நோன்றல் - பொறுத்தல். நோன்மார் - பொறுப்ப வர். கொன் - பெருமை. உரிச்சொல். நம்பு - விருப்பம். குரை - அசை நிலை. சாயல் - மென்மை. பெரிது அழிந்து வாடியது - துன்பத்துப் புலம்பல்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

# 209. குறிஞ்சி

## தலைவன் கூற்று

மலைஇடம் படுத்துக் கோட்டிய கொல்லைத்
தளிபதம் பெற்ற கான்உழு குறவர்
சிலவித்து அகல இட்டுஉடன் பலவிளைந்து
இறங்குகுரல் பிறங்கிய ஏனல் உள்ளாள்
5 மழலைஅம் குறுமகள் மிழலைஅம் தீம்குரல்
கிளியும் தாம்அறி பவ்வே எனக்கே
படுங்காற் பையுள் தீரும் படாஅது
தவிரும் காலை ஆயின்என்
உயிரோடு எல்லாம் உடன் வாங்கும்மே.

எ-து : குறைமறுக்கப்பட்டுப் பின்னின்ற தலைவன் ஆற்றானாய், நெஞ்சிற்குச் சொல்லுவானாய்ச் சொல்லியது.

நொச்சி நியமங்கிழார்

ப-ரை : மலையிடம் படுத்து - மலைப் பக்கங்களில் அகலப் படுத்தி, கோட்டிய - வளைத்த, கொல்லை - கொல்லையாகிய, தளிபதம் பெற்ற கான் - மழை பெய்யும் பதம் பெற்ற காட்டினை, உழு - உழுகின்ற, குறவர் - குறிஞ்சி நிலக் குறவர், சிலவித்து - சிற்சில விதைகளை, அகல இட்டு - கலப்பாக விதைத்து, உடன் - ஒருசேர, பல விளைந்து - பலவாக விளைந்து, இறங்கு குரல் பிறங்கிய ஏனல் - சாய்ந்து கதிர் விளங்கிய தினைக் கொல்லையின் கண், உள்ளாள் - உள்ளவளாகிய, மழலை அம் குறுமகள் - மழலை மாறாத இளமடந்தை, மிழலை அம் தீம் குரல் - பேசு கின்ற இனிய குரலை, கிளியும் தாம் அறிபவ்வே - கிளிகளும் அறிந்திருப்பனவே. எனக்கே படுங்காற் பையுள் தீரும் - அவ் இனிய குரல் என் அருகிலிருந்து மிழற்றின் அன்றே எனது காம நோய் தீரும்; படாஅது - அருகிருந்து மிழற்றப்படாது, தவிருங் காலையாயின் - என்னின்று நீங்கி அகல்வதாயின், என் உயிரோடு எல்லாம் உடன் வாங்கும் - என் அறிவு முதலிய குணங்களுடன் என் உயிரையும் சேர எல்லாவற்றையும் கைக்கொண்டு அகலும். உண்மை இவ்வாறிருக்க அவளின்றி யான் எவ்வாறு பிழைப்பேன்.

முடிபு : நெஞ்சே! குறுமகள் தீங்குரல் கிளியும் அறிப; எனக்கே பையுள் தீரும் தவிரின் என் உயிரோடு எல்லாம் உடன் வாங்கும் என முடிக்க.

கருத்து : தலைவியின்றித் தான் உயிர் வாழாமையைத் தோழிக்குப் புலப்படுத்தித் தன் குறையை ஏற்குமாறு தலைவன் செய்தான்.

மெய்ப்பாடு - தன்கண் தோன்றிய அவலம்.

பயன் - தோழி கேட்டுக் குறை முடிப்பாளாயது.

## 210. மருதம்

### தோழி கூற்று

அரிகால் மாறிய அம்கண் அகல்வயல்
மறுகால் உழுத ஈரச் செறுவின்
வித்தொடு சென்ற வட்டி பற்பல
மீனொடு பெயரும் யாணர் ஊர
5 நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்

செல்வம் அன்று தன்செய்வினைப் பயனே
சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்
புன்கண் அஞ்சும் பண்பின்
மென்கட் செல்வம் செல்வம் என்பதுவே.

எ-து : தோழி தலைமகனை நெருங்கிச் சொல்லுவாளாய் வாயில் நேர்ந்தது.

## மிளை கிழான், நல்வேட்டனார்

ப-ரை : அரிகால் மாறிய - நெல் அறுத்து நீங்கப்பெற்ற, அம்கண் அகல் வயல் - அழகிய இடமகன்ற வயலின் கண்ணே, மறுகால் உழுத - மறுபடியும் உழுத, ஈரச் செறுவில் - ஈரமுடைய சேற்றில், வித்தொடு சென்ற - விதைக்கும்வண்ணம் விதை கொண்டு சென்ற, வட்டி - கடகப் பெட்டியில், பற்பல மீனொடு பெயரும் - மிகப் பலவாகிய மீன்களைப் பிடித்துப்போட்டு மீண்டு கொண்டு வருகின்ற, யாணர் ஊர! - புதிய வருவாயினை உடைய ஊரனே! நெடிய மொழிதலும் - அரசரால் மாராயம் முதலியன பெற்றுப் பாராட்டப்படுதலும், கடிய ஊர்தலும் - அவர் முன்பாகக் குதிரை, தேர், யானை முதலியவற்றை ஊர்ந்து பெருமிதமாகச் செலுத்துதலும், செல்வம் அன்று - செல்வம் எனப்படுவது அன்றுகாண்; தன் செய்வினைப் பயன் - அவை அனைத்தும் முன்புதாம் செய்த நல்வினைப் பயனால் அடையப் படுவதாம். சான்றோர் - குணங்களால் உயர்ந்தோர், செல்வம் என்பது - செல்வம் என்று சிறப்பித்துச் சொல்வது யாதோ எனில், சேர்ந்தோர் புன்கண் அஞ்சும் பண்பின் மென்கட் செல்வம் செல்வம் என்பதுவே - தன்னிடம் அடைக்கலமாக வந்தோர்க்கு உண்டாகிய துன்பத்திற்கு அஞ்சி அத் துன்பத்தைப் போக்கி அவரைக் கை விடாமல் ஆளுகின்ற இயல்புடனே வன்கண் மையின்றி இனிய தன்மையனாக இருக்கும் செல்வமே யாம். அடைக்கலமாக உன் கைப்பற்றி ஒழுகாநின்ற இவளை நீ கைவிட்டதனாலே அத்தகையபண்பு உன்னிடம் இல்லை என்று அறியக் கிடத்தலின் இனிக் கூறுவதில் யாது பயன்?

முடிபு : யாணர் ஊர! செல்வம் அன்று; சேர்ந்தோர்ப் புன்கண் அஞ்சும் செல்வமே செல்வம்; அறிவாய் என முடிக்க.

கருத்து : தலைவ! நின்புறத்தொழுக்கம் கடியத்தக்கது. தலைவியைக் காத்தலே செல்வம். அப் பண்பு நின்பால் இல்லை என்று கடிந்து கூறினாள்.

உள்ளுறை : தாளடியில் விதைக்குமாறு விதையோடு சென்ற வட்டி மீனோடு பெயரும் என்றது, தலைவியோடு இல்லறம் நிகழ்த்துகின்ற நின்பால் வேண்டிய பரத்தையரைக் கொணர்ந்து புணர்த்திய பாணன் தான் விரும்பும் பொருளை நின்னிடத்துப் பெற்றுச் செல்லாநிற்கும்; அந்த மயக்கில் நிற்கும் உன்பால் பேசுவதில் யாது பயன் என்பதாம்.

மெய்ப்பாடு - வருத்தம் பற்றிய வெகுளி.

பயன் - வாயின் நேர்தல்.

ஒப்புமைப்பகுதி

3. விதைக் குறுவட்டி

"விதைக்குறு வட்டியோதொடு பொதுள" (குறுந். 155:2)

"அகன்பெரு வட்டி நிறைய" (ஐங். 47, 48:1-2)

(மலைபடு. 152) (குறுந். 155-2)

# 211. நெய்தல்

## தோழி கூற்று

யார்க்கு நொந்து உரைக்கோ யானே-ஊர்கடல்
ஓதஞ் சென்ற உப்புடைச் செறுவில்
கொடுங்கழி மருங்கின் இரைவேட்டு எழுந்த
கருங்கால் குருகின் கோள்உய்ந்து போகிய
5 முடங்குபுற இறவின் மோவாய் ஏற்றை
எறிதிரை தொகுத்த எக்கர் நெடுங்கோட்டுத்
துறுகடற் றலைய தோடுபொதி தாழை
வண்டுபடு வான்போது வெரூஉம்
துறைகெழு கொண்கன் துறந்தனன் எனவே.

எ-து : வரைவுநீட ஒருதலை ஆற்றாளாம் என்ற தோழி சிறைப்புறமாகத் தன்னுள்ளே சொல்லியது.

கோட்டியூர் நல்லந்தையார்

ப-ரை : ஊர்கடல் - ஊர்ந்து செல்லுகின்ற கடலின் நீர், ஓதம் சென்ற - அலையுடன் தாவிச்சென்ற, உப்புடைச்

செறுவில் - உப்புவிளையும் வயலிடத்து, கொடுங்கழி மருங்கில் - வளைந்த கழியிடத்து, இரைவேட்டு எழுந்த - இரையை விரும்பி எழுந்த, கருங்கால் குருகின் - கரிய காலையுடைய குருகின், கோள் - குத்துக்கு, உய்ந்து - தப்பித்து, போகிய - பிழைத்து ஓடிய, முடங்கு புற - வளைந்த முதுகும், மோவாய் - உயர்ந்த வாயுமுடைய, இறவின் ஏற்றை - ஆண் இறால்மீன், எறிதிரை தொகுத்த - மோதுகின்ற அலை கொழித்த, எக்கர் நெடுங்கோட்டு - மணல் மேடாகிய நெடிய கரையின் கண்ணே, துறுகடல் தலைய - உண்டாகிய நெருங்கிய கடலின் புறத்திலே தலை சாய்ந்து நிற்கும், தோடு பொதிதாழை - இலைகள் பொதிந்த தாழையி னுடைய, வண்டுபடு-வண்டுகள் வந்து மொய்க்கின்ற, வான்போது - வெளிய பூவைநோக்கி இதுவும் ஒரு குருகுபோலும் என்று கருதி, வெரூஉம் - அஞ்சும், துறைகெழு கொண்கன் - துறை பொருந்திய கடற்கரைக்குத் தலைவனாகிய நமது தலைவன், துறந்தனன் என - என்னைப் பிரிந்தான் என்று, யான் யார்க்கு - யான்படும் துன்பங்களை யாருக்கு, நொந்து உரைக்கோ - வருந்தி உரைப்பேன்.

முடிபு : துறைகெழு கொண்கன் துறந்தனன் என, யான் யார்க்கு நொந்து உரைக்கோ என முடிக்க.

கருத்து : பிரிவினையும் களவினையும் தலைவி பொறாள் என்று தோழி தலைவன் உணருமாறு குறிப்பாற் புலப்படுத்தி வரைவு உடன்படுமாறு செய்தாள்.

வி-ரை : கொண்கன் - திணைப் பெயரே அன்றிக் காதலன் என்னும் பொருளையும் தந்தது.

நயம் : குருகின் குத்திற்குத் தப்பி ஓடிய இறால் தாழம் பூவை நோக்கிக் குருகு எனக் கருதி அஞ்சும் என்றது, ஊரில் அலர் எழ அஞ்சிய தலைவி, அன்னையைக் கண்டவிடத்துச் சினப்பள் கொல் என்று அஞ்சினள்.

மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - தலைவனை வரைவு உடன்படுத்தல்.

ஒப்புமைப்பகுதி

3-8. மீன் தனக்கு அச்சத்தைத் தரும் பொருளைப் போன்று இருப்பனவற்றைக் கண்டு அஞ்சுதல்.

"குருகு கொளக் குளித்த கெண்டை அயலது
உருகெழு தாமரை வான்முகை வெரூஉம்" (குறுந். 127:1-2)

"கோள்வல் பாண்மகன் தலைவலித்து யாத்த,
நெடுங்கழைத் தூண்டில் நடுங்க நாண்கொளீஇக்
கொடுவாய் இரும்பின் மடித்தலைப் புலம்பப்
பொதியிரை கதுவிய போழ்வாய் வாளை
நீர்நனிப் பிரம்பின் நடுங்குநிழல் வெரூஉம்"
(பெரும்பாண். 284-8) (தே. திருவெண்காடு. திருஞா. 4)

4-8. ஒரு பொருளாற் உண்டாகிய அச்சம்அப் பொருளைப் போன்ற வேறு பொருளாலும் உண்டாதல்.

"மீன்படு சுடரொளி வெரூஉம்
வான்தோய் வெற்பன் மணவா லூங்கே"
(குறுந். 357: 5-7) (பெருங். 1:37-252)

5-6. இறவின் புறம் வளைந்தது

"முடக்கால் இறவின் முடங்கு புறப் பெருங்கிளை"
(குறுந். 109:1)

"சிலையுமான...பச்சிறாப் பிறழும்" (குறுந். 160:2)
(பெரும்பாண- 269:70)

"பூட்டு சிலை இறவு" (அகநா. 220:17, 376:16)
(சீவக. 1788)

"முடங்கிறா மூதூர்" (தே.திருநா.திருவாரூர்)

# 212. பாலை

## தோழி கூற்று

பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ
நெடுங்கால் கணந்துள்அம் புலம்புகொள் தெள்விளி
சுரம்செல் கோடியர் கதுமென இசைக்கும்
நரம்பொடு கொள்ளும் அத்தத்து ஆங்கண்
5 கடுங்குரற் பம்பைக் கதநாய் வடுகர்
நெடும்பெரும் குன்றம் நீந்தி நம்வயின்
வந்தனர் வாழி தோழி கையதை
செம்பொற் கழல்தொடி நோக்கி மாமகள்
கவவுக்கொள் இன்குரல் கேட்டொறும்
அவவுக்கொள் மனத்தேம் ஆகிய நமக்கே.

எ-து : பொருண் முடித்துத் தலைமகனோடு வந்த வாயில்கள் வாய் வரவு கேட்ட தோழி தலைவிக்குச் சொல்லியது.

## குடவாயிற் கீரத்தனார்

ப-ரை : தோழி - தலைவியே!, பார்வை - பார்வை விலங்கினைக் கொண்டு, வேட்டுவன் - வேடன், படுவலை - அமைத்த வலையைக் கண்டு, வெரீஇ - பயந்து, நெடும்கால் - நீண்ட கால்களை உடைய, கணந்துள் - 'கணந்துள்' என்னும் பறவை, அம் புலம்புகொள் தெள்விளி - தான் தனிமையில் இருந்து கத்தா நின்ற தெளிந்த ஓசை, சுரம்செல் - அந்தச் சுரத்தின் கண்ணே செல்லுகின்ற, கோடியர் - கூத்தாடிகள், கதுமென - விரைவாக, இசைக்கும் - ஒலியெழுப்பி, நரம்பொடு - இசை பாடுகின்ற யாழோசையோடு, கொள்ளும் - சேர்ந்து ஒத்து ஒலியா நிற்கும், அத்தத்து ஆங்கண் - அரிய வழியிலே, கடுங்குரற் பம்பை - கடிய ஒலியைத்தரும் பம்பையையும், கதநாய் - சினம் கொண்ட நாயையும் உடைய, வடுகர் - வடுகர் வாழும், நெடும் பெரும் குன்றம் நீந்தி - நெடிய பெரிய குன்றத்தைக் கடந்து, கையதை - நம் கையில் இருக்கும், செம்பொன் கழல் தொடி நோக்கி - செம்பொன்னாற் செய்து செறிக்கப்பட்டு இப்பொழுது கழன்று விழுகின்ற தொடியை நோக்கி, மாமகன் - நமது அரிய சிறந்த புதல்வன் கவவுக்கொள் இன்குரல் - நம்மைத் தழுவிக் கொண்டு அழுகின்ற இனிய குரலை, கேட்டொறும் - கேட்கும் பொழுதெல்லாம், அவவுக் கொள் மனத்தேம் ஆகிய நமக்கு - ஆசை கொள்ளுகின்ற மனத்தை உடையேமாகிய நமக்கு, நம் வயின் வந்தனர் - மன மகிழ்ச்சி ஏற்படுமாறு நம்மிடத்து வந்தடைந்தனர் காண்; வாழி - இனி நீவிர் இருவரும் இல்லறம் பூண்டு நெடுங்காலம் வாழ்வீர்.

முடிபு : தோழி! இன்குரல் கேட்டொறும் அவவுக்கொள் மனத்தேம் ஆகிய எமக்கு உவகைதர வந்தனர், வாழி என முடிக்க.

கருத்து : பொருள் வயிற் பிரிந்த தலைவர் மீண்டு வந்தனர் காண், அவருடன் மகிழ்ந்து நெடுங்காலம் வாழ்க என்று தோழி வாழ்த்தினாள்.

அ-ள்: கோடு - ஊதுகொம்பு. அதனை உடையோர் கோடியர் எனப்பட்டனர். நரம்பு - யாழிற்குச் சினையாகு பெயர். பம்பை - ஒரு வகை வாத்தியம். கவவு - தழுவிக் கொள்ளல். கணந்துள் - நீர்வாழ் பறவை. பாலைக்கண் "எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்" (தொல். பொ. 19) என்னும் விதிப்படிப் பறந்து

வந்தது கைகோள் - கற்பு. தொடி கழலுதலும், மெய் சோர்தலும், மகன் அழுகைக்குக் காரணமாயிற்று. கணந்துட் பறவையின் ஓசை யாழ் ஏசையோடு சேர்ந்து இசைக்கும் என்றது நீ தலைவனோடு கூடி எங்கும் இசைபரவ, வாழ்வாய் என்றதாம்.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - மகிழ்ச்சி.

ஒப்புமைப்பகுதி

5. வடுகர்

"வடவடுகர் வாளோட்டிய" (புறநா. 378:2)

"குல்லைக் கண்ணி வடுகர்" (குறுந். 11:5)

"கல்லா நீண்மொழிக் கதநாய் வடுகர்" (அகநா. 107-11:5)

"வானிணைப் புகவின் வடுகர்" (அகநா. 213:8)

"முரண் மிகு வடுகர்" (அகநா. 281:8)

"தொடையமை பகழித் துவன்றுநிலை வடுகர்" (அகநா. 295:15)

"வம்ப வடுகர் பைந்தலை சவட்டி" (அகநா. 375,14)

"கதநாய் வடுகர்" (அகநா. 381:7)

2. புலம்புகொள் தெள்விளி

"இனந்திர் பருந்தின் புலம்புகொ டெள்விளி" (குறுந். 207:3)

2. நெடுங்காற் கணந்துள்

"நெடுங்காற் கணந்துளாளறிவுறீஇ" (குறுந். 350.5)

5-6. வடுகர் முனையதாகிய நாடு

"குல்லைக் கண்ணி வடுகர் முனையது
பல்வேற் கட்டி நன்னாட்டு உம்பர்" (குறுந். 11:5-7)

"வேங்கடத்தும்பர்............
இகல்முனைத் தழீஇய வேற்றுடைப் பெருநிரை
நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும்,
வானிணைப் புகவின் வடுகர் தேஎத்து" (அகநா. 213:3-8)

"புடையலங் கழற்காற் புல்லி குன்றத்து
நடையருங் கானம் விலங்கி நோன்சிலைத்
தொடையமை பகழித் துவன்று நிலை வடுகர்
பிழியார் மகிழர் கலிசிறந்தார்க்கும்
மொழி பெயர் தேஎம்" (அகநா. 295:13-7)

# 213. குறிஞ்சி

## தலைவன் கூற்று

அருவி ஆர்க்கும் பெருவரை நண்ணிக்
கன்று கால்யாத்த மன்றப் பலவின்
வேர்க்கொண்டு தூங்கும் கொழுஞ்சுளைப் பெரும்பழம்
குழவிச் சேதா மாந்தி அயலது
வேய்பயில் இறும்பின் ஆம்அறல் பருகும்
பெருங்கல் வேலிச் சிறுகுடி யாதெனச்
சொல்லவும் சொல்லீர் ஆயின் கல்லெனக்
கருவி மாமழை வீழ்ந்தென எழுந்த
செங்கேழ் ஆடிய செழுங்குரற் சிறுதினைக்
10 கொய்புனம் காவலும் நுமதோ
கோடுஏந்து அல்குல் நீள்தோ ளீரே.

எ-து : மதியுடன் படுக்கும் தலைவன் சொல்லியது.

கச்சிப் பேட்டுப் பெருந்தச்சனார்

ப-ரை : கோடு ஏந்து அல்குல் - பக்கம் உயர்ந்த அல்குலை யும், நீள் தோளீர் - நீண்ட தோள்களையும் உடைய சிறுமிகளே! அருவி ஆர்க்கும் பெருவரை நண்ணி - அருவி ஒலிக்கின்ற பெரிய மலையை அடைந்து, கன்று கால் யாத்த - கன்றைக் காலில் இட்ட கயிறு கட்டிய, மன்றப் பலவின் - மன்றம் போன்ற தழைத்த பலாமரத்தின், வேர்க்கொண்டு தூங்கும் - வேரிலே காய்த்துத் தொங்குகின்ற, கொழும் சுளைப் பெரும்பழம் - கொழுவிய சுளையை உடைய பெரிய பலாப்பழத்தை, குழவிச் சேதா மாந்தி - அவ் இளங் கன்றை உடைய சிவந்த பசுவானது தின்று, அயலது - பக்கத்திலுள்ள, வேய்பயில் இறும்பில் - மூங்கில் நெருங்கிய சிறிய மலையின் கண்ணுள்ள, ஆம் அறல் - குளிர்ந்த நீரைப் பருகும், பெருங்கல் வேலி - பெரிய மலையை அரணாக உடைய, சிறுகுடி - உமது சிறிய குடிதான், யாதுஎன - எங்குள்ளது என்று யான் வினவ, சொல்லவும் சொல்லீர் - அதற்கு விடையொன்றும் சொல்லமாட்டீர். ஆயின் - ஆயினும், அது நிற்க, கருவி மாமழை - மின்னல் இடி முதலிய தொகுதியை உடைய மேகம், கல்என வீழ்ந்தென - கல் என்னும் ஓசையோடு மழையைப் பெய்ததனாலே, எழுந்த - விளைந்த, செங்கேழ் ஆடிய செழுங்குரல் - சிவந்த நிறம் பொருந்திய செழுவிய

கதிர்களை உடைய சிறுதினைக் கொய்புனம் காவலும் - கொய்யத் தக்க இத்தினைப் புனம் காவலும், நுமதோ - நும்முடையது தானோ? இதையேனும் கூறுமின்.

முடிபு : தோளிரே! சிறுகுடி யாதெனச் சொல்லீர் ஆயின் கொய்புனம் காவலும் நுமதோ சொன்மின் என முடிக்க.

கருத்து : தலைவன் புதுவோன் போல் தினைப்புனம் போந்து நும் சிறுகுடில் யாது? தினைப்புனம் காவல் கொண்டீரோ என்று கூறி மதியுடன் படுக்கத் தொடங்கினான்.

அ-ள் : இறும்பு - சிறியமலை. ஆம் - ஈரம். அறல் - நீர். கருவி - மின்னல் முதலியவற்றின் தொகுதி. கேழ் - நிறம்.

நயம் : முன்னுற புணர்ச்சி பெற்றவனாகையால் கோடேந்து அல்குல் என விளித்தான். நீள் தோளிர் என்றான் ஒற்றுமை நயம் பற்றி. தினையறுவடையானவுடன் தலைவி மனை புகுவாள். ஆண்டும் இரவுக்குறி வேண்டுவான் சிறுகுடியாது என வினவினான். கன்றையுடைய பக, அங்குள்ள பலாப் பழத்தைத் தின்று, அயலில் உள்ள சிறிய மலையில் ஓடும் நீரைப் பருகும் என்றது, தலைவியை முன்பே இயற்கைப் புணர்ச்சியிற் பெற்றவன், இப்பொழுது பகற்குறியிற்கூடி, அப்பால் இரவுக் குறியும் கூடி நுகர்ந்து மகிழ்வன் என்றதாம்.

மெய்ப்பாடு - இளிவரலைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - மதியுடம் படுத்தல்.

ஒப்புமைப்பகுதி

2-3. வேரிற் காய்க் குலையை உடைய பலவு

"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்" (குறுந். 18:1)

"கீழ் தாழ்வன்ன வீழ்கோட் பலவின்" (குறுந். 257:1-3)

# 214. பாலை

## தலைவி கூற்று

இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்
அசையுநர் இருந்தோர்க்கு அரும்புணர் வின்மென
வினைவயிற் பிரிந்த வேறுபடு கொள்கை
அரும்புஅவிழ் அலரிச் சுரும்புஉண் பல்போது
5 அணிய வருதும் நின்மணிஇரும் கதுப்புஎன

எஞ்சா வஞ்சினம் நெஞ்சுணக் கூறி
மைசூழ் வெற்பின் மலைபல இறந்து
செய்பொருட்டு அகன்ற செயிர்தீர் காதலர்
கேளார் கொல்லோ தோழி தோள
10 இலங்குவளை நெகிழ்த்த கலங்குஅஞர் எள்ளி
நகுவது போல மின்னி
ஆர்ப்பது போலும் இக்கார்ப்பெயற் குரலே.

எ-து : உலகியலால் பிரிவுணர்த்தப்பட்ட தலைவன் குறித்த பருவங்கண்டு தலைவி சொல்லியது.

## கருவூர்க் கோசனார்

ப-ரை : தோழி - தோழியே! இசையும் - இம்மைக்குரிய புகழும், இன்பமும் - இருமைக்குமுரிய இன்பமும், ஈதலும் - மறுமையிலும் இன்பத்தைத தரும் இரந்தோர்க்கு ஈதலாகிய கொடையும், மூன்றும் - இம் மூன்றும், அசையுநர் இழிந்தோர்க்கு முயற்சியின்றிச் சோம்பித் தம் வீட்டின் கண்ணே இருந்தவர்கட்கு அரும்புணர் வின்மென - அருமையாகவும் கைகூடுவது இல்லையென்று கருதி, வினைவயிற் பிரிந்த - பொருள் ஈட்டும் முயற்சியிற் பிரிந்த, வேறுபடு கொள்கை - வேறுபட்ட கொள்கையோடு, (என்னை நோக்கி) அரும்பு அவிழ் அலரி - அரும்புகள் அவிழ்ந்த மலர்களில், சுரும்பு உண் பல்போது - தேனைப் பருகிய வண்டுகள் மொய்க்கும்படியான பூக்களை, நின் - உன்னுடைய மணி இரும் கதுப்பு - நீலமணி போலும் கரிய நீண்ட கூந்தலில், அணிய வந்தும்என - சூட்டி மகிழ யாம் வருகின்றோம் என்று, நெஞ்சு உண - என்மனம் நம்பும் வண்ணம், எஞ்சா வஞ்சினம் கூறி - குறையாத சுடுஞ்சூள் பலவும் கூறி, மைசூழ் வெற்பின் மலைபல இறந்து - மேகம் தவழும் வெற்பாகிய உயர்ந்த மலைகள் பலவற்றையும் கடந்து, செய்பொருட்டு அகன்ற - பொருள் ஈட்டும் பொருட்டுச் சென்ற, செயர் தீர்காதலர் - குற்றம் அற்ற நம் தலைவர், தோள - என்னுடைய தோளில் உள்ள, இலங்குவளை - இலங்கிய வளைகளை, நெகிழ்த்த - நெகிழச் செய்ததனால் ஆகிய, கலங்கு அஞர் எள்ளி - கலங்கிய துன்பத்தை நோக்கி இகழ்ந்து, நகுவதுபோல மின்னி - பரிகசிப்பதுபோல் மின்னுதலைச் செய்து, ஆர்ப்பது போலும் - ஆரவாரம் செய்வது போல் இடிக்கும், இக்கார்ப் பெயற்குரல் - மழைபெய்யும் மேகத்தின் இடி முழக்கத்தை, கேளார்கொல்லோ - கேட்டிலர் கொல்லோ!

முடிபு : தோழி! காதலர் கார்ப்பெயற்குரல் கேளார் கொல்லோ என முடிக்க.

கருத்து : பொருள் வயிற் பிரிந்த காதலர் தாம் குறித்த பருவம் வந்தும் வாரார், என் செய்வேன்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

நாட்டிற்கு நாடு பருவம் வேறுபடும்; எனவே அவர் சென்ற நாட்டு இக் கார்ப் பருவம் வந்திருப்பின் அவர் மீள்வரே என்றபடி. அவர் தவறிலர் என்பதைச் செயிர்தீர் காதலர் எனச் சுட்டினாள். இஃது அருண்மிகவுடைமை யாம். வஞ்சினம் கூறிச் சென்றவர் வாராவிடின் வஞ்சித்தால் அல்லற்படுவர் என்றாள் தெய்வம் அஞ்சல் என்பது பற்றி.

ஒப்புமைப்பகுதி

1-2. இல்லோர்க்கு ஈதலும் துய்த்தலும் இல்லை
"ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்லென"
(குறுந். 63:1)

2-6. வஞ்சினம் உரைத்தல்
"தாவா வஞ்சினம் உரைத்தது" (குறுந். 36:5, 53:6-7)
"ஏமுறு வஞ்சினம் வாய்மையில் தேற்றி" (குறிஞ்சி. 210)
"நெஞ்சுண, அரிய வஞ்சினம் சொல்லியும்"
(அகநா. 175:6-7)

4-5. தலைவன் தலைவியின் கூந்தலை அழகுபடுத்தல்.
"வாருறுவணர் கதுப்புளரிப் புறஞ்சேர்" (குறுந். 82:1)

9-10. வளை நெகிழ்த்த நோய
"இறைவளை நெகிழ்த்த எவ்வ நோயொடு" (குறுந். 289:2)

# 215. நெய்தல்

## தோழி கூற்று

குணகடல் இவர்ந்து குருஉக்கதிர் பரப்பிப்
பகல்கெழு செல்வன் குடமலை மறையப்
புலம்புவந்து இறுத்த புன்கண் மாலை
இலங்குவளை மகளிர் வியல்நகர் அயர
5 மீன்நிணம் தொகுத்த ஊன்நெய் ஒண்சுடர்

நீல்நிறப் பரப்பில் தயங்குதிரை உதைப்பக்
கரைசேர்பு இருந்த கல்லென் பாக்கத்து
இன்றுநீ இவணை ஆகி எம்மொடு
தங்கின் எவனோ தெய்ய செங்கால்
10 கொடுமுடி அவ்வலை பரியப் போகிய
கோட்சுறாக் குறித்த முன்பொடு
வேட்டம் வாயாது எமர் வாரலரே.

எ-து: பகற்குறி வந்து மீள்வானை, "அவள் ஆற்றுந் தன்மையள் அல்லள்; நீ இங்குக் தங்கற் பாலிர்; எமரும் இன்னதொரு தவற்றினர்" எனத் தோழி தலைமகற்குச் சொல்லியது. அல்லது இரவுக்குறி மறுத்து வரைவு கடாயதூஉம் ஆம்.

மதுரைச் சுள்ளம் போதனார்

ப-ரை: சேர்ப்பனே! குணகடல் இவர்ந்து - கீழ்கடலினின்று எழுந்து, குருஉக் கதிர்பரப்பி - நல்ல நிறத்தை உடைய கதிர்களைப் பரப்பி, பகல்செழு செல்வன் - பகற்பொழுதைத் தந்து விளங்கிய கதிரவன், குடமலை மறைய - மேல்பால் உள்ள மலையிலே மறைந்து செல்லும், புலம்பு வந்து இறுத்த - துன்பத்தை முன்னிட்டுக் கொண்டு வந்து தங்கிய, புன்கண் மாலை - பொலிவு குன்றிய மாலைப் பொழுதினை, இலங்கு வளை மகளிர் - இலங்கிய வளையல் அணிந்த மகளிர், வியன் நகர் அயர - தம் தம் சிறந்த மாளிகையிலே எதிர் கொண்டு அழைக்க, மீன் நிணம் - மீனின் கொழுப்பை, தொகுத்த - சேர்த்து உருக்கிய, ஊன் நெய் ஒண்சுடர் - ஊனாகிய நெய் வார்த்து ஏற்றிய ஒள்ளிய விளக்கின் ஒளியை உடைய, நீல்நிறப் பரப்பின் - நீலநிறமுடைய பரப்பின் கண், தயங்கு திரை உதைப்ப - விளங்கிய அலை மோத, கரை சேர்பு இருந்த - கரையைச் சார்ந்து இருந்த, கல் என் பாக்கத்து - கல்லென்னும் ஆரவாரத்தை உடைய பாக்கத்து, இன்று - இன்றையநாள், நீ - தலைவனாகிய நீ, இவணையாகி - இவ்விடத்து இருந்தனையாகி, எம்மொடு தங்கின் - எங்களுடன் தங்கியிருப்பின், எவனோ - யாதேனும் குறைபாடு உள்தாமோ?, செங்கால் - சிவந்த நூலால் ஆகிய காலையும், கொடுமுடி - வளைந்த முடியையும் உடைய, அவ் வலை - அழகிய வலை கிழியும்படி, பரிய - அறுத்துக் கொண்டு, போகிய - புறத்தே ஓடிப்போன, கோள் சுறாக் குறித்த முன்பொடு - கொல்லவல்ல சுறாமீனைக் கருதி வலிமையோடு, வேட்டம் வாயாது - அதனைத் தம் வலையில்

அகப்படப் பிடித்துக்கொண்டு வாராது, எமர் வாரலர் - எம் சுற்றத்தார் வாளாத் திரும்பி வாரார்.

முடிபு : சேர்ப்ப! எமர் வேட்டம் வாயாது வாரலர்; எனவே எம்மொடு தங்கின் எவனோ? என முடிக்க.

கருத்து : பகற்குறி வந்தொழுகும் தலைவனை நோக்கி, ஐயா! நின்னைப் பிரிந்து தலைவி ஆற்றாள்! எனவே வரைந்து கொண்மின் என்று வரைவு கடாயினள்.

வி-ரை : புன்கண் மாலை என்றாள் தலைவிக்கு வருத்தம் மிகுதியுண்டாகும் 'என்பதால். தலைவியோடு கூடி இன்பம் நுகர்க என்பாள் எம்மொடு தங்கின் எவனோ என்றாள். அச்சமும் உறக்கமும் இன்றி இரவு முழுதும் தலைவியிடம் இன்பம் துய்க்கலாம் என்பாள் எமர்வாரலர் என்றாள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

இரவுக் குறி மறுத்து வரைவு கடாதல் என்னுந் துறைக்கு— வரைந்து கொண்டாலன்றித் தலைவியுடன் வைகுதல் இயலாது. வேட்டம் பயன்தரின் ஏமர் உடன் வந்துறுவர். அவர் ஏதம் செய்வர். நீ தங்கா விடினோ மாலைப் பொழுதில் தலைவி துன்பம் பொறாள். எனவே வரைதலே தக்கது என்று களவு மறுத்து வரைவு கடாயினாள்.

ஒப்புமைப்பகுதி

7. கல்லென்றல்

"ஊர் அலர் எழச் சேரி கல்லென" (குறுந். 262:1, 24:6)

11-12. பன்மீன் வேட்டம்

"பன்மீன் வேட்டத்து என்ஐயர் திமிலே (குறுந். 123:5)

"புன்றலையிரும் பரதவர்
பாயிரும் பனிக்கடல் வேட்டம் செல்லாது" (பட். 90-92)
(அகநா. 140, 170, 10) (புறநா. 399:5)

# 216. மருதம்

## பரத்தை கூற்று

துனிதீர் கூட்டமொடு துன்னார் ஆயினும்
இனிதே காணுநர்க் காண்புழி வாழ்தல்
கண்ணுறு விழுமம் கைபோல் உதவி
நம்முறு துயரம் களையார் ஆயினும்
5 இன்னாது அன்றே அவரில் ஊரே
எரிமருள் வேங்கைக் கடவுள் காக்கும்
குருகார் கழனியின் இதணத்து ஆங்கண்
ஏதிலா ளன் கவலை கவற்ற
ஒருமுலை அறுத்த திருமா உண்ணிக்
10 கேட்டோர் அனையார் ஆயினும்
வேட்டோர் அல்லது பிறர்இன் னாரே.

எ-து : தலைவிக்குப் பாங்காயினார் கேட்பத் தலைமகன் தலை நின்று ஒழுகப்படா நின்ற பரத்தை, பாணற்காயினும் விறலிக்காயினும் சொல்லுவாளாய், நெருங்கிச் சொல்லியது.

மதுரை மருதன் இளநாகனார்

ப-ரை : துனிதீர் கூட்டமொடு துன்னார் ஆயினும் - புலவி தணித்துக் கூடுகின்ற கலவியோடு பொருந்தி என்னிடம் வந்திலர் ஆனாலும், காணுநர்க் காண்புழி - காணும் தரத்தினரை நோக்கி யிருந்தாலும், வாழ்தல் இனிது - உயிரோடு வாழ்வது இனியதே யாகும், (ஏனெனிற் பலமுறை அவர் மெய்யை நோக்கி மகிழ்ந்து ளேன்.) அவ்வாறு காணப் பெறாமையின் யான் இனி உயிர் வைத்திருப்பதில் யாது பயன்? கண்ணுறு விழுமம் - கண்ணில் விழுகின்ற மிக நுண்ணிய தூசியை, கைபோல் உதவி - கை விரைந்து சென்று நீக்குமாறுபோல, நம்முறு துயரம் களையார் ஆயினும் - நாம் பெற்ற துன்பத்தை நீக்கார் என்றாலும், அவர் இல் ஊர் இன்னாது அன்றே - அவர் இல்லாத ஊர் துன்பம் தருவ தாம். (அதனால் இவ் வூரில் வாழ்ந்து என்ன பயன். இதை விட்டுச் செல்லினும் செல்வன்) குருகு ஆர் கழனியில் - குருகுகள் ஆரவாரிக்கும் வயற்கரையிலே, கடவுள் காக்கும் எரிமருள் வேங்கை - கடவுள் ஏறிய எரிபோன்ற பூவை உடைய வேங்கை மரத்தின் கண் கட்டிய, இதணத்து ஆங்கண் - கட்டுப் பரணருகிலே, ஏதிலாளன் - அயலான் ஒருவன் ஆராயாது செய்த

தனால் ஆகிய, கவலை - துன்பம், கவற்ற - வருத்துதலால், ஒரு முலை அறுத்த - ஒரு கொங்கையை அறுத்து எறிந்த, திருமா வுண்ணியை, கேட்டோர் - அறிந்தவர்கள், அனையராயினும், அத்தன்மையராயினும், வேட்டோர் அல்லது - அவள்பால் அன்பு கொண்டவர் மட்டுமே வருந்துவரல்லது, பிறர் இன்னாரே - பிறர் அதுபற்றி வருந்துபவர் அல்லர். அவ்வாறே, தலைவரைப் பிரிந்த தலைவி வருந்துபவள் எனினும், மிக்க வேட்கையை உடைய யான் வருந்தும் அளவு அவள் வருத்தம் உறாள்; அவ்வாறே பிறரும் வருந்தார்.

முடிபு : காண்புழி வாழ்தல் இனிது: அவர் இல் ஊர் இன்னாது? வேட்டோரல்லது பிறர் என முடிக்க.

கருத்து : தலைவன்பால் இன்பம் நுகராவிடினும் அவரைக் காணுதல் இனிது. அவரில்லாதவூர் இன்னாதாகும்.

நயம் : கண்ணைப் பரத்தையாகவும், விழுமத்தை அவள் பெற்ற காமம் ஆகவும், கையைத் தலைவனாகவும் உவமம் கொள்க. இது வினையுவமம். இதனுள் வரும் திருமாவுண்ணி என்பது கண்ணகியைச் சுட்டிற்றுப்போலும்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - தலைவி புலத்தல்.

ஒப்புமைப்பகுதி

*1-2.* தலைவனைக் காண்டலால் இன்பம் உண்டாதல்.

"நல்கார் நயவார் ஆயினும்
பல்காற் காண்டலும் உள்ளத்துக்கு இனிதே"
(குறுந். *60:5-6*)

"பேணாது பெட்பவே செய்யினும் கொகண்ணைக்
காணாது அமையல கண்" (குறள். *1283*)

*2-5.* தலைவரோடு கூடின் ஊர் நன்று, இன்றெனில் நன்றன்று

"ஊரோ நன்றுமன் மரந்தை
ஒருதனி வைகிற் புலம்பு ஆகின்றே" (குறுந். *166:3-4*)

"தமரை இல்லார்க்கு, நகரமும் காடு போன்றாங்கு"
(பழ. *3*)

3-4 விழுமங் களைதல்

"தன்னுறு விழுமம் களைஞரோ விலளே" (குறுந். *397:7*)

# 217. குறிஞ்சி

## தலைவி கூற்று

இசைபட வாழ்பவர் செல்வம் போலக்
காண்தொறும் பொலியும் கதழ்வாய் வேழம்
இருங்கேழ் வயப்புலி வெரீஇ அயலது
கருங்கால் வேங்கை ஊறுபட மறலிப்
5 பெருஞ்சினம் தணியும் குன்ற நாடன்
நனிபெரிது இனியன் ஆயினும் துனிபடர்ந்து
ஊடல் உறுவேன் தோழி நீடு
புலம்புசேண் அகல நீந்திப்
புலவி உணர்த்தல் வண்மை யானே.

எ-து : தலைவி வாயில் மறுத்தது.

கபிலர்

ப-ரை : தோழி - தோழியே! இசைபட - புகழ் மிகும்படி, வாழ்பவர் - வாழ்கின்றவருடைய, செல்வம்போல - செல்வம் பொலிவுறுவது போல, காண்தொறும் - பார்க்கும் பொழுதெல்லாம், பொலியும் - பொலிந்து தோன்றுகின்ற, கதழ்வாய் வேழம் - விரைந்த செலவினை உடைய களிற்றியானை, இரும் கேழ் வயப்புலி - தன் எதிரில் நிற்கமாட்டாது கரிய பெரிய வலிமை வாய்ந்த புலி அஞ்சி ஓடுதலால், அயலது - பக்கத்தில் இருந்த, கருங்கால் வேங்கை - கரிய அடியினை உடைய வேங்கை மரம், ஊறுபட - சிதைவுபடுமாறு. மறலி - பகைத்து முறித்துத் தள்ளி, பெரும் சினம் தணியும் - தன் பெருங் கோபத்தை அடக்கிக் கொள்ளும், குன்ற நாடன் - மலைநாடனாகிய நமது காதலன், நனி பெரிது இனியன் ஆயினும் - பலகாலம் நம்முடன் புணர்ந்தமையாலும், பெரு நயப்பு முதலியன செய்த வகை யாலும் மிகப் பெரிதும் இனியனாக இருப்பினும், நீடு புலம்பு சேண் அகல - பிரிவினால் உண்டாகும் நீடிய வருத்தம் எல்லாம் அகன்று போகும்படி, நீந்தி - வந்துகூடி, புலவி - யான் கொண்ட புலவியை, உணர்த்தல் - போக்கப் பணிந்து உணர்த்தல், வண்மையான் - வண்மையைச் செய்தலான், துனிபடர்ந்து - யான் வருத்தம் மேற்கொண்டு, ஊடல் உறுவேன் - ஊடுவது போல் புலந்து நிற்பேன்.

முடிபு : குன்றநாடன் இனியன் ஆயினும் உணர்த்தல் வன்மை யான் ஊடல் உறுவேன் என முடிக்க.

கருத்து : தலைவன் இனியன் எனினும் ஊடுதலுக்குப் பின் கூடுதல் நனி இன்பம் தருதலின் ஊடுவேன்.

அ-ள் : கதழ்வு - விரைவு.

நயம் : ஊடியகாலத்துத் தலைவன் உணர்த்தல் நனி இன்பம் பயத்தலை, "இல்லை தவறு அவர்காயினும் ஊடுதல், வல்லது அவர் அளிக்குமாறு" என்ற குறளானும் அறிக. (குறள் :1321)

உள்ளுறை : களிற்றியானை தன்னிடத்துப் புலியஞ்சி ஓடுதலாலே தான் கொண்ட சினத்தை அயலிலுள்ள வேங்கையை மோதித் தணித்துக்கொள்ளும் என்றது, தலைவி கொண்ட புலவிக்குத் தலைவன் அஞ்சி அகலுதலாலே, அவன் பாலுற்ற பரத்தைமையை இகழ்ந்து கூறி அச்சினம் தணியா நிற்கும் என்றதாம்.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - வாயின் மறுத்தல். இது நிலத்தாற் குறிஞ்சி.

ஒப்புமைப்பகுதி

2-5. களிறு புலியைத் தாக்குதல்

"சிறுகட் பெருங்களிறு வயப்புலி தாக்கித்
தொன்முரண் சோரும் துன்னரும் சாரல்"
(குறுந். 88:2-3, 141:4-5, 343:1-3) (மலைபடு. 307:9)

2-5. புலிக்குப் பூத்த வேங்கை சினை

"மாகுவலி இரும்புலிப் பகுவாம் ஏற்றை
..............................
வாடுபூஞ் சினையிற் கிடக்கும்" (குறுந். 342;3-6)

"உறுபுலி உருஏய்ப்பப் பூத்த வேங்கையை" (கலி. 38:6)

"வேங்கையஞ் சுனையென விறற்புலி முற்றியும்" (கலி. 46:5)

"கொடுவரிதாக்கி வென்ற வருத்தமொடு
நெடுவரை மருங்கில் துஞ்சும் யானை,
நனவில்தான் செய்தது மனத்தாகலில்
கனவிற்கண்டு கதுமென வெரீஇப்
புதுவதாக மலர்ந்த வேங்கையை அதுஎன
உணர்ந்து அதன் அணி நலம் முருக்கி" (கலி. 49:1-6)

"மலர்ந்த, வேங்கை வெறித்தழை வேறு வகுத்தன்ன,
ஊன்பொழி அவிழாக் கோட்டுகிர்க் குருளை"
(அகநா. 147:1-3)
"புலிக் கேழ் வேங்கைப் பூஞ்சினை" (அகநா. 227:8)
"வரிவயம் பொருத வயக்களிறுபோல
இன்னும் மாறாது சினனே" (புறநா. 100:7-8)
"புலியொடு பொருது சினம் சிறந்து
வலியோடு உரவுக் களிறு ஒதுங்கிய மருங்கு"
(அகநா. 291:6-7)
"குயவரி இரும்போத்துப் பொருத, புண்கூர்ந்து
உயங்கு பிடிதழீஇய மதனழியானை" (அகநா. 399:22-3)
"குருஉப்புலி பொருத புண்கூர் யானை"
(மலைபடு. 517) (சிலப். 25:29)

5. கருங்கால் வேங்கை
"கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்" (குறுந். 26:1, 343:5)
(மதுரை. 296) (அகநா, 345:8, 349:10)
(புறநா. 137:9)

# 218. நெய்தல்

## தலைவி கூற்று

ஞாயிறு ஞான்று கதிர்மழுங் கின்றே
எல்லியும் பூவீகொடியிற் புலம்புஅடைந் தன்றே
வாவலும் வயின்றொறும் பறக்கும் சேவலும்
நகைவாய்க் கொளீஇ நகுதொறும் விளிக்கும்
5 மாயாக் காதலொரு அதர்ப்படத் தெளித்தோர்
கூறிய பருவம் கழிந்தன்று பாரிய
பராரை வேம்பின் படுசினை இருந்த
குராஅற் கூகையும் இராஅ இசைக்கும்
ஆனா நோய்அட வருந்தி இன்னும்
10 தமியேன் கேட்குவென் கொல்லோ
பரியரைப் பெண்ணை அன்றிற் குரலே.

எ-து : வரைவிடை மெலிந்த தலைவி வன்பொறை எதிர் மொழிந்தது.

கிடங்கில் காவிதிக் கீரங் கண்ணனார்

ப-ரை : ஞாயிறு - கதிரவன், ஞான்று - மேற்கில் இறங்க, கதிர் மழுங்கின்று - பகற்பொழுதும் சென்றுவிட்டது, எல்லியும் - இராப்பொழுதும், பூ வீ கொடியில் - பூக்கள் உதிர்ந்த கொடி போல, புலம்பு அடைந்தன்றே - ஞாயிற்றை இழந்து தனித்துப் பொலிவு குன்றியது, வாவலும் - வெள்வாலும், வயின் தொறும் - இடங்கள்தோறும், பறக்கும் - பறந்து கொண்டிருக்கும், சேவலும் - ஆந்தையின் சேவலும், நகை வாய்க் கொளீஇ நகுதொறும் விளிக்கும் - மகிழ்ச்சி மிகப்பெற்றுத்தான் நகைக்குந் தோறும் தன் பெடையை அழைக்கும், இவை மட்டும் அல்ல, மாயாக் காதலொடு - குறையாத அன்போடு, அதர்ப்படத் தெளித்தோர் - நெறிப்பட என்னைத் தேற்றிய காதலர், கூறிய பருவமும் - வருகிறேன் என்று சொல்லிச் சென்ற பருவமும், கழிந்தன்று - மெல்ல மெல்லச் செல்லா நின்றது, பாரிய - இடை இடையே நிழல் பரவிய, பராரை - பருத்த அடிபினை உடைய, வேம்பின் படுசினை இருந்த - வேப்பமரத்தின் பெரிய கிளையி லிருந்த, குராஅல் கூகையும் - குரலாகிய கோட்டானும், இராஅ இசைக்கும் - இரவு முழுதும் குழறா நிற்கு:. (இத்தகைய இரவிலே) ஆனா நோய் அட - தீராத காமநோய் துன்புறுத்த லால், வருந்தி - வருத்தமடைந்து, இன்னும் - இத்துணை நாளும் வருந்தியது போதாது என்று இன்னும் தமியளாக இருந்து, பராரைப் பெண்ணை - பருத்த அடியை உடைய பனை மடலிலே இருக்கும் அன்றிற் குரல் - அன்றிற் பறவையின் குரலை யும், தமியேன் கேட்குவென் கொல்லோ - தனித்துக் கேட்டு வருந்துவெனோ? எவ்வண்ணம இதனை ஆற்றியிருப்பேன்.

முடிபு : கதிர் மழுங்கின்று, புலம்பு அடைந்தன்று, சேவலும் பறக்கும், விளிக்கும், பருவம் கழிந்தன்று, இசைக்கும், நோய் அட வருந்தி •அன்றிற்குரல் இன்னும் கேட்டுவென் கொல்லோ எனமுடிக்க.

கருத்து : பொறு என்ற தோழியை நோக்கித் தலைவி "பகலும் போயிற்று, இரவும் வந்துற்றது. ஆந்தை அலறுகிறது, குறித்த பருவமும் கழிந்தது, நான் இன்னும் தனித்து அன்றிற் குரலை இரா முழுதும் கேட்டுத் துயர் உறுவேன் என்றாள்.

ஒப்புமைப்பகுதி

1-3. வாவல் மாலையிற் பழமரம் நோக்கிச் செல்லுதல்

"தாஅ அஞ்சிறை நொப்பறை வாவல்
பழுமரம் படரும் பையுண் மாலை'' (குறுங். 172:1-2)

"குரஞ்சினை வேம்பின் நறும்பழம் உணீஇய
வாவலுகக்கும் மாலையும்" (ஐங். 339:2-3)
"செல்லிய முயலிப் பாஅய சிறகர்
வாவல் உகக்கும் மாலை" (ஐங். 378:1-2)

7-9. கூகை குழறினால் மகளிர் அஞ்சுதல்

"குன்றக் கூகை குழறினும் முன்றில்
அஞ்சுமன் அளித்து என் நெஞ்சம்'' (குறுந். 153:1-3)
"மாடத்தகத்தில் ஆடுவினைக் காவினுட்,
கொம்பர் மீமிசைக் கூகை வந்துலாஅய்,
வித்தகக் கைவினைச் சத்தியேறி,
உட்குத் தக வுரைத்தலும் கட்கின் பாவை''
(பெருங். 3:14, 151-6)
"நெஞ்சந் துட்கென நெடுவிடை நின்ற
காற்றெறிவாழையின் ஆற்ற நடுங்கி'' (பெருங். 3:14, 151-6)
"இரவுக் குறிவயின் வெருவக்குழறிய
விழிக்கட் கூகைக் கடுங்குரல் அறியாள்
கதுமென நடுங்கினள்.'' (பெருங். 3:22, 150-52)

9-11. அன்றில் யாமத்து நரலுதல்

"நெருப்பின் அன்ன செந்தலை அன்றில்
கையற நரலும் நள்ளென் யாமத்து'' (குறுந். 160:1-2)
(தொல். களவு:16. ந.மேற். இருவி.)

# 219. நெய்தல்

## தலைவி கூற்று

கண்ணும் தோளும் தண்நறும் கதுப்பும்
பழநலம் இழந்து பசலை பாய
இன்உயிர் பெரும்பிறிது ஆயினும் என்னதூஉம்
புலவேன் வாழி தோழி சிறுகால்
5 அலவனொடு பெயரும் புலவுத்திரை நளிகடல்
பெருமீன் கொள்ளும் சிறுகுடிப் பரதவர்
கங்குல் மாட்டிய கனைகதிர் ஒண்சுடர்
முதிரா ஞாயிற்று எதிர்ஒளி கடுக்கும்
கானல்அம் பெருந்துறைச் சேர்ப்பன்
10 தானே யானே புணர்ந்த மாறே.

எ-து : வரைவிடை வைத்துப் பிரிய ஆற்றாளாய தலைவி தோழிக்குச் சொல்லியது.

## தாயங் கண்ணனார்

ப-ரை : தோழி -தோழியே! வாழி-நீ நெடுங்காலம் வாழ்க, கண்ணும் தோளும் - என்னுடைய கண்களும் தோள்களும், தண் நறும் கதுப்பும் - மெல்லிய நறிய கூந்தலும், பழநலம் இழந்து - பழைய அழகு கெட்டு, பசலை பாய - நிறம் வேறுபடப் பசலை பாய்ந்து, இன் உயிர் - என்னுடைய இனிய உயிர், பெரும்பிறிது ஆயினும் - இறந்துபடுவதாயினும், சிறுகால் அலவனொடு - சிறிய காலையுடைய நண்டுகளோடு, பெயரும் - பெயர்ந்து போகும், புலவுத் திரை நளிகடல் - புலால் நாற்றத்தை உடைய அலைகள் செறிந்த கடலின் கண்ணே சென்று, பெருமீன் கொள்ளும் - பெரிய மீனைப் பிடிக்கும், சிறுகுடிப் பரதவர் - சிறுகுடியின் கண்ணுள்ள பரதவமாக்கள் மரக்கலங்கட்குத் தெரியுமாறு, கங்குல் மாட்டிய - இரவில் கொளுத்திய, கனைகதிர் ஒண்சுடர் - நெருங்கிய சுடர்களை உடைய ஒள்ளிய விளக்கம், முதிரா ஞாயிற்று எதிர் ஒளி கடுக்கும் - முதிராத இளைய ஞாயிற்றின் எதிரே தோன்றிய ஒளிக்கு ஒப்பாகும், கானல் அம் பெருந் துறைச் சேர்ப்பன்—கழிக்கரைச் சோலையையும் பெரிய கடலின் துறையையும் உடைய நமது காதலன், தானே - தமியனாய் வந்து, யானே - யான் மகிழுமாறு, புணர்ந்தமாறு - முன்பு புணர்ந்து பாராட்டியதனால் இனியும் அங்ஙனம் வருவான் என்னும் எண்ணத்தோடு சிறிதும் அவனிடம், புலவேன் - ஊடல் கொள்ளேன் காண்.

முடிபு : தோழி! சேர்ப்பன் தானே யானே புணர்ந்தமாறு, இன் உயிர் பெரும் பிறிதாயினும் புலவேன் என்று முடிக்க.

கருத்து : என் நிறம் வேறுபடினும் உயிரே போயினும் பிரிந்தமை கருதித் தலைவனோடு புலவேன்; அவன் வந்து தலையளி செய்வன் என்பதாம்.

அ-ள் : பெரும்பிறிது - சாக்காடு. கனை கதிர் - நெருங்கிய கதிர். நளி - செறிவு.

வி-ரை : இதனுட் பழநலம் இழந்து பசலைபாய என்றது பசலைபாய்தலாம். உயிர் பெரும் பிறிதாயினும் என்றது கலக்கமாம்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

நயம் - பரதவர் இரவில் கொளுத்திய விளக்கு இளங்கதிரின் ஒளிபோல விளங்கும் என்றது, தலைவன் என்னைப் புணர்ந்தபின் 'நின்னிற் பிரியேன்' என்று சொல்லிவிடுத்த வாய்மை என் நெஞ்சில் இலங்கா நின்றது என்றாள்.

ஒப்புமைப்பகுதி

1-2. கண் பசலை பாய்தல்

"பசலை ஆர்ந்தன குவளையங் கண்ணே" (குறுந். 13:5)
"பூப்போல் உண்கண் பொன் போர்த்தனவே" (ஐங். 16:4)
"உண்கண் பசப்பது எவன்கொல் அன்னாய்." (ஐங்.21:4)
"ஏதிலாளர்க்குப் பசந்த என் கண்ணே" (ஐங். 34:4)
"கயலெனக் கருதிய உண்கண்
பயலைக்கு ஒல்காவாகுதல் பெறினே" (ஐங். 36:4-5)
"நயந்தோருண் கண் பயந்து பனி மல்க" (ஐங். 37:2)
"பசப்பணிந்த வால் மகிழ்ந என்கண்ணே" (ஐங். 45:4)
"என்செயப் பசக்குந் தோழி என் கண்ணே" (ஐங். 169:5)
"பல்லிதழ் உண்கண் பசத்தல் மற்றெவனோ" (ஐங். 170:4)
"பயந்தன மாதோ நீ நயந்தோள் கண்ணே" (ஐங். 264:4)
"பனிமலர் நெடுங்கண் பசலைபாய" (ஐங். 477-1)
"கொன்றைப் பூவிற் பசந்த உண்கண்" (ஐங். 500-1)
"பல்லிதழ் மலருண்கண் பசப்ப" (கலி. 45:11)
"பொன் எனப் பசந்தகண் போதெழில் நலம் செல."
(கலி. 77-12)
"கண் பசந்து" (அகநா. 146:11)
"முயக்கிடைத் தண்வளி போழப் பயப்புற்ற பேதை பெரு
மழைக்கண்", "கண்ணின் பசப்பவோ" (குறள். 1239-40)

1-2 : தோள் பசத்தல்

"தாம் பசந்தன என் தடமென்றோளே". (குறுந். 121-6)
"வேய்புரை மென்றோட் பசலையும்" (கலி. 39:48)

3. பெரும் பிறிது

"கருங்கட் டாக்கலை பெரும் பிறிது உற்றென"
(குறுந். 69:1, 302:2,) (மணி. 23:28)

# 220. குறிஞ்சி

## தோழி கூற்று

## [தலைவன் கூற்று எனினும் அமையும்]

சிறுமணி தொடர்ந்து பெருங்கச்சு நிறீஇக்
குறுமுகிழ் எருக்கம் கண்ணி சூடி
உண்ணா நன்மாப் பண்ணி எம்முடன்
மறுகுடன் திரிதரும் சிறுகுறு மாக்கள்
5 பெரிதும் சான்றோர் மன்ற விசிபிணி
முழவுக்கண் புலரா விழவுடை யாங்கண்
ஊரேம் என்னும்இப் பேரே முறுநர்
தாமே ஒப்புரவு அறியின் தேமொழிக்
கயலேர் உண்கட் குறுமகட்கு
10 அயலோர் ஆகல்என்று எம்மொடு படலே.

எ-து : குறைநேர்ந்த தோழி தலைமகளை முகம்புக்கது.

அல்லது

பின்னின்ற தலைமகன் தோழி கேட்பத் தலைவியை ஓம்படுத்ததூஉம் ஆம்.

அல்லது

தான் ஆற்றானாய்ச் சொல்லியதூஉம் ஆம்.

### குண்டுகட் பாலியாதனார்

ப-ரை : உண்ணா நன்மாப் பண்ணி - நல்ல பனங்கருக்கால் உணவு உண்ணாத ஒரு குதிரையைச் செய்து, சிறுமணி தொடர்ந்து - அதற்குச் சிறிய மணிகளைக் கட்டி, பெருங்கச்சு நிறீஇ - பெரிய கச்சையையும் பூட்டி, குறுமுகிழ் எருக்கம் கண்ணி சூடி - குறிய எருக்கம் பூ மாலையைச் சூடி, ஒரு தோன்றல் அதில் ஏறியிருப்ப அக் குதிரையை இழுத்துக்கொண்டு, மறுகுடன் - யாம் வருகிற தெருவில், திரிதரும் - எம் பின்னே வந்து திரிகின்ற, சிறு குறுமாக்கள் - சிறிய குறிய பிள்ளைகளாகிய, விசிபிணி - நன்றாக இழுத்து இறுகக் கட்டிய, முழவுக் கண் - குட முழாவின் மார்ச்சனையின் கண், புலரா - ஒயாது முழங்குகின்ற, விழவுடை ஆங்கண் - திருவிழாவினையுடைய அவ்விடத்து, ஊரேம் என்றும் - ஊரைச் சார்ந்தேம் என்று கூறும், இப் பேர் ஏமுறுநர் தாம் - இப் பெரிய மயக்கமுடையவர்கள்தாம், ஒப்புரவு அறியின் - உலக

நடை அறிருந்திருப்பாரே ஆயின், (எம்மைச் சுட்டி) தேமொழி - தேன்போலும் மொழியையும், கயல்ஏர் உண்கண் - கயல்மீனை ஒத்தமை நீட்டிய கண்களையும், உடைய, குறுமகட்கு - நம் இளமடந்தைக்கு, அயலோர் ஆகல் என்று - இத்தோழிமார் அயலாந் தன்மையுடையவர் என்று, எம்மொடு படல் - எம்முடன் சொல்லாடல், எவ்வளவு வியப்புடையது? பெரிதும் சான்றோர் மன்ற : இங்ஙனம் கூறுதலால் இவர் பெரிதும் சால்புடையார் போலும்.

முடிபு : தோழி! குறுமகட்கு குறுமாக்கள் அயலோராக என்று எம்மொடு படல், பெரிதும் சான்றோர் மன்ற என்று முடிக்க.

கருத்து : தலைவன் குறையை நீ தீர்க்காவிடில் ஊர் அறிய அவன் மடலேறுவன் என்று தோழி கூறியது.

வி-ரை : தலைவன் மடலூர்ந்துவரின் ஊரினர் அலர் தூற்றுவர்; எனவே அவன் மடலேறுமுன் அவன் குறையை ஏற்றுக்கொள் என்றாள். குறுமாக்கள் என்னை நின்தோழியென்று அறியாராகலின் பெரிதும் சான்றோர் என்று இகழ்ந்தாள். இவை தலைவி வினவத் தன்முகமாகத் தோழி கூறியவை. புகுதல் - தலைவி நோக்கிய நோக்கெதிர் சென்று புகுதல், முகம் என்பது அங்ஙனம் புகுதற்கு இடமாகிய நோக்கு.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய இளிவரல்,

பயன் - தலைமகளை முகம் புகுவித்தல்.

ஓப்புமைப்பகுதி

1-3. மடல்மாவிற்கு மணி கட்டுதல்

"பொன்னேர் ஆவிரைப் புதுமலர் மிடைந்த
......................
பூண்மணி கறங்க ஏறி நாணட்டு'' (குறுந். *173:1-3*)

4. சிறு குறுமாக்கள்

"ஊர்க் குறுமாக்கள் வெண்கோடு கழாஅலின்'' (புறநா. *94:1*)
"ஒலித்தொருங் கீண்டிய ஊர்க் குறுமாக்களும்''
(மணி. *15:59, 13:40*) (புறநா. *159:7*)
(கலி. *82:9*) (மதுரை. *461.*)

# 221. முல்லை

## தலைவன் கூற்று

மணிகண்டு அன்ன மாநிறக் கருவிளை
ஒண்பூந் தோன்றியொடு தண்புதல் அணியப்
பொன்தொடர்ந்து அன்ன தகைய நன்மலர்க்
கொன்றை ஒள்ளிணர் கோடுதொறும் தூங்க
5 வம்புவிரித்து அன்ன செம்புலப் புறவில்
நீர்அணிப் பெருவழி நீள்இடைப் போழச்
செல்க பாகநின் செய்வினை நெடுந்தேர்
விருந்து விருப்புறூஉம் பெருந்தோட் குறுமகள்
மின்ஒளிர் அவிர்இழை நல்நகர் விளங்க
10 நடைநாட் செய்த நவிலாச் சீறடிப்
பூங்கட் புதல்வன் தூங்குவயின் ஒல்கி
வந்தீக எந்தை என்னும்
அம்தீம் கிளவி கேட்க நாமே.

எ-து: வினைமுற்றி மீள்கின்ற தலைவன் பாகற்குச் சொல்லியது.

### இளவேட்டனார்

ப-ரை: *பாக* - பாகனே! விருந்து - வரும் விருந்தினரை, விருப்புறூஉம் - வரவேற்க விருப்பம் கொண்ட, பெருந்தோட் குறுமகள் - பெரிய தோளை உடைய இளமையுற்ற நமது காதலி, மின்ஒளிர் அவிர் இழை - மின்னல்போல் ஒளி விடுகின்ற விளங்கிய அணிகலன்களால், நல்நகர் விளங்க - எமது நல்ல மாளிகை முழுதும் விளங்காநிற்ப, நாள் - விடியலில், நடைசெய்த - நடை பயின்ற, நவிலா - மழலை பேசுகின்ற, சீறடி - சிறிய அடிகளையும், பூங்கண் - பூப்போன்ற கண்களையும் உடைய, புதல்வன் - அன்பு மகன், தூங்குவயின் ஒல்கி - தூங்கும் இடத்திலே சென்று, உடம்பிலுள்ள துவட்சியோடு அப் புதல்வனை நெருங்கி நோக்கி, எந்தை வந்தீக - எந்தாய் வருக என்று அழைக்கின்ற, அந்தீம் கிளவி - அழகிய இனிய வார்த்தையை, நாம் கேட்க - நாம் கேட்டு மகிழும்வண்ணம், மணிகண்டு அன்ன - நீலமணியாற் செய்து வைத்தாற்போன்ற, மாநிறக் கருவிளை - கரிய நிறத்தை உடைய கருங்காக்கணங்கொடி, ஒண் பூந் தோன்றியொடு - ஒள்ளிய காந்தளுடனே, தண்புதல் அணிய - தண்ணிய புதல்

தோறும் மலர்ந்து அழகு செய்ய, பொன் தொடர்ந்து அன்ன - பொற்காசினைத் தொங்க விட்டாற்போன்ற, தகைய - அழகை உடைய, நல்மலர் - நல்ல மலரை உடைய, கொன்றை - சரக் கொன்றையின், ஒள்இணர் - ஒள்ளிய பூங்கொத்துக்கள், கோடு தொறும் தூங்க - அதன் கிளைகள் தோறும் தொங்க, வம்பு விரித்து அன்ன - இவற்றால் எங்கும் நறுமணத்தைப் பரப்பினாற் போன்ற, செம்புலப் புறவில் - சிவந்த முல்லை நிலத்தில், நீர் அணிப் பெருவழி - நீரோடும் அழகிய பெருவழியின், நீள் இடைப் போழ - நீண்ட இடம் எங்கும் சுவடு பிளப்ப, நின் செய்வினை - இயங்கும் தொழிலை உடைய நினது நெடிய தேர், செல்க - விரைந்து செல்லுவதாக.

முடிபு: பாக! அணிய, தூங்க, போழ நெடுந்தேர் செல்க! புதல்வன் அந்தீம் கிளவி நாம் கேட்க என முடிக்க.

கருத்து: வினைமுற்றி மீளும் தலைவன் தன் தலைவியும் காதற்புதல்வனும் மகிழ்ந்து ஏற்கும்வண்ணம் விரைந்து தேரைச் செலுத்துக என்று பாகனை வேண்டினன்.

அ-ள்: கருவிளை - கரும் காக்கணம். தோன்றி - செங்காந்தள். வம்பு - நறுமணம். வந்தீக - வருக என்றதன் திரிபு.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - பாகன் விரைந்து தேர்கடாவல்.

# 222. குறிஞ்சி

## தோழி கூற்று

கருங்கால் வேங்கைச் செவ்வீ வாங்குசினை
வடுக்கொளப் பிணித்த விடுமுரி முரற்சிக்
கைபுனை சிறுநெறி வாங்கிப் பையென
விசும்புஆடு ஆய்மயில் கடுப்ப யானின்று
5 பசுங்காழ் அல்குல் பற்றுவனன் ஊக்கிச்
செலவுடன் விடுகோ தோழி பலவுடன்
வாழை ஓங்கிய வழையமை சிலம்பில்
துஞ்சுபிடி மருங்கின் மஞ்சுபடக் காணாது
பெருங்களிறு பிளிறும் சோலை அவர்
10 சேண்நெடுங் குன்றம் காணிய நீயே.

எ-து : தோழி தலைவன் வரவுணர்ந்து, சிறைப்புறமாகச் செறிப்பு அறிவுறீஇ வரைவு கடாயது.

கபிலர்

ப-ரை : தோழி - தலைவியே! பலவுடன் - பலவாகிய, வாழை ஓங்கிய - உயர்ந்து வளர்ந்த மலை வாழையும், வாழையமை சிலம்பில் - சுரபுன்னைகளும் பொருந்திய மலையின் கண்ணே, துஞ்சுபிடி மருங்கின் - துயிலுகின்ற பிடியானையின் பக்கத்திலே, மஞ்சுபட - மேகம் மறைத்தலால், காணாது - தன் பிடியைக் காணப் பெறாது, பெருங்களிறு - பெரிய களிற்றி யானை, பிளிறும் - பிளிறா நிற்கும். சோலை - சோலையை உடைய, அவர் சேண் நெடுங்குன்றம் - அவரது உயர்ந்த நெடிய மலையை, நீயே காணிய - நீ கண்டு கவலை நீங்கும்படியாக, கருங்கால் வேங்கை - கரிய அடியை உடைய வேங்கையின், செவ்வீ வாங்கு சினை - சிவந்த மலர்களை உடைய வளைந்த கிளையிலே, வடுக்கொளப் பிணித்த - தழும்புபடக் கட்டிய, விடு முரி முரற்சி - வளையவிட்ட கயிற்றினால் ஆகிய, கைபுனை - கைவன்மையாற் செய்த, சிறுநெறி வாங்கி - சிறிய முடக்கத்தை உடைய ஊசலை இழுத்து, பையென - மெல்ல நின்னை ஏற்றி, யான் இன்று - யான் இப்பொழுது, பசும்காழ் அல்குல் பற்றுவனன் ஊக்கி - நின்னுடைய அல்குலின் மேலே கிடந்த பசிய பொன்னாலாகிய வடத்தைப் பற்றி ஆட்டி, விசும்பு ஆடு ஆய்மயில் கடுப்ப - ஆகாயத்திலே பறக்கின்ற அழகிய மயிலைப் போல, செலவுடன் விடுகோ - நீளச் சென்று மீண்டு வரும்படி விடுவேனோ? கூறுவாயாக.

முடிபு : தோழி! நீயே குன்றம் காணிய செலவுடன் விடுகோ என முடிக்க.

கருத்து : களவில் ஒழுகாநின்ற தலைவனை நோக்கித் தோழி உள்ளுறையால் இற்செறிப்பு நிகழ்ந்தமையைப் புலப்படுத்தி வரைவு கடாயினாள்.

அ-ள் : முரி - முரிவு = ஒடிவு. முரற்சி - கயிறு. நெறி - நெறிப்பு. கயிற்றின் முடக்கம்.

நயம் : தாய் இற்செறிப்புச் செய்தமையால் தலைவனைக் காண இயையாமையால் அவன் வாழும் குன்றத்தைப் பார்த்தேனும் சற்று ஆறுதல் கொள்ளுமாறு மனை முற்றத்தின் கண்ணுள்ள வேங்கை மரத்திலே கட்டிய ஊசலில் உன்னை வைத்து நான் ஆட்டுவேன்; வீசி ஆட்டும்பொழுது அஃது உயரப்

போகும்; அப்பொழுது அவன் குன்றம் காணப்படும் என்று தோழி கூறினாள். இதனால் இல்வயிற் செறித்தமையும் தலைவனின் இன்றியமையாமையும் புலப்படுத்தினாள். இதனால், தலைவன் இனி இவ்வொழுக்கம் நிகழாது, பிரிவால் தலைவி இறந்துபடினும் படும் என்று கருதி வரைந்துகொள்ள முயலுவன். பிடியை மேகம் மறைத்ததனாலே அதனைக் காணாது களிறு பிளிறும் என்றது, தலைவியை இற்செறித்தலால் தலைவன் குறியிடம் புகுந்து அவளைக் காணாது வருந்துவன் என்பதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வலரவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

1. கருங்கால் வேங்கை

"கருங்கால் வேங்கை வீயுறு துறுகல்"

(குறுந். 47:1, 26:1, 343:4) (மதுரைக். 296)

(அகநா. 345:8, 349:10) (புறநா. 137:9)

# 223. நெய்தல்

## தோழி கூற்று

இவள்தன் காமம் பெருமையின் காலைஎன்னாள்நின்
அன்புபெரிது உடைமையின் அளித்தல் வேண்டிப்
பகலும் வருதி பல்பூங் கானல்
இங்நீர் ஆகலோ இனிதால் எனின்இவள்
5 அலரின் அருங்கடிப் படுகுவள் அதனால்
எல்லி வம்மோ மெல்லம் புலம்ப
சுறவினம் கலித்த நிறைஇரும் பரப்பின்
துறையினும் துஞ்சாக் கண்ணர்
பெண்டிரும் உடைத்து இவ்அம்பல் ஊரே.

எ-து: பகற்குறி வந்து மீள்வானைத் தோழி இரவுக்குறி நேர்வாள் போன்று அதவும் மறுத்து வரைவு கடாயது.

உலோச்சனார்

ப-ரை: மெல்லம் புலம்ப - மெல்லிய நெய்தல் நிலத் தலைவனே! இவள் தன் காமம் பெருமையில் - இவள் தன்னுடைய

காமமிகுதியாலே, காலை என்னாள் - இது காலைப் பொழுதாமே என்று கருதாளாகி, நின் - உன்னால், அன்பு பெரிது உடைமையின் - செய்யப்படும் அன்பைப் பெரிதும் பாராட்டுதல் உடைமையால், அளித்தல் வேண்டி - இவளைத் தலையளி செய்தல் வேண்டி, பகலும் - பகற்பொழுதின் கண்ணும், பல்பூங் கானல் வருதி - பலவாய மலர்களை உடைய கழியருகிலுள்ள சோலையில் அன்று குறித்த குறியிடத்து வருகின்றனை; இந்நீர் ஆகலோ இனிதால் - இவ்வாறு நீவிர் இருவீரும் களவின் ஒழுகுதல் இனிதேயாம், எனில் - என்றாலோ, இவள் - இத்தலைவி, அலரின் - ஊரினர் தூற்றும் பழிமொழியாலே, அருங்கடிப் படுகுவள் - அன்னையால் இற்செறிப்புச் செய்யப்படுவள் காண்; எல்லி வம்மோ - அதனால் இனி இராப் பொழுதின் கண்ணே வருக; அவ்வாறு இரவில் வருவை என்றாலும், இவ் அம்பல் ஊர் - பழிச் சொல்லைக் கூறாநிற்கும் இவ்வூர், சுறவினம் கலித்த - சுறாமீன் கூட்டங்கள் மிகவும் நிறைந்த, நிறை இரும் பரப்பில் - மணல் நிறைந்த பெரிய கடற்பரப்பிலுள்ள, துறையிலும் - துறையிடத்தும், துஞ்சாக் கண்ணர் - உறங்காத கண்ணினராகிய, பெண்டிரும் - அலர் தூற்றும் பெரிய பெண்டிரையும், உடைத்து - உடையது, அதனால் துன்பம் வரினும் வரும்.

முடிபு : புலம்ப! எல்லி வம்மோ! இவ்வூர் பெண்டிரும் உடைத்து என முடிக்க.

கருத்து : தலைவனே! பகற்குறி தவிர்ந்து இரவுக்குறின் அலர் தூற்றும் பெண்டிரை யாம் உடையேமாகலின் இடர்உறா வண்ணம் விரைக வரைக என்றபடி.

வருதி என்றது - வந்து மீள்வானை நோக்கிற்று. நிகழ்கால வினைமுற்று,

நயம் : சுறாமீன்கள் இருக்கும் கடலின் துறையிலே தூங்காத கண்ணையுடைய மாதரை இவ்வூர் உடையது என்றது, தலைவியிருக்கின்ற மனையிலே துஞ்சாத கண்ணளாகிய அன்னையை யாம் பெற்றிருக்கின்றேம் என்றதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

# 224. பாலை

## தோழி கூற்று

அன்பினர் மன்னும் பெரியர் அதன்றலை
பின்பனி அமையம் வரும்என முன்பனிக்
கொழுந்து முந்துறீஇக் குரவு அரும்பினவே
புணர்ந்தீர் புணர்மினோ என இணர்மிசைச்
5 செங்கண் இருங்குயில் எதிர்குரல் பயிற்றும்
இன்ப வேனிலும் வந்தன்று நம்வயின்
பிரியலம் என்று தெளித்தோர் தேஎத்து
இனிஎவன் மொழிகோ யானே கயன்அறக்
கண்அழிந்து உலறிய பல்மா நெடுநெறி
10 வினைமுசு கவலை விலங்கிய
வெம்முனை அரும்சுரம் முன்னி யோர்க்கே!

எ-து : தோழியால் பிரிவுணர்த்தப்பட்ட தலைவி பெயர்த்தும் சொல் கடாவப்பட்டு, அறிவிலாதேம் என்னை சொல்லியும் பிரியார் ஆகாரோ? என்று சொல்லியது.

பாலை பாடிய பெருங்கடுங்கோ

ப-ரை : அன்பினர் - நம் காதலர் நம்மிடம் மிகவும் அன்புடையவர், மன்னும் பெரியர் - மிகப் பெரியவர், அதன் தலை - அதற்கு மேலும், பின்பனி அமையம் வரும் என - பின்பனிப் பருவம் வரும் என்று, முன்பனிக் கொழுந்து முந்துறீஇ - முன்பனியின் கொழுந்தை முற்படவிட்டு, குரவு அரும்பின - அறிவுறுத்திய அதற்கு அடையாளமாகக் குராமரம் அரும்பு கட்டின; இணர்மிசை - மாவின் பூங்கொத்து மீதிருந்து, செங்கண் இருங்குயில் - சிவந்த கண்களை உடைய கரிய குயிலின் சேவலும் பேடையும் எதிர் எதிரே இருந்து, புணர்ந்தீர் புணர்மினோ என எதிர்குரல் பயிற்றும் - ஓ, தலைவனும் தலைவியுமாய் அமைந்து புணர்ந்து இன்புற்றீர்; பிரியாதீர்! இன்னும் பலபடியாகப் புணருங் கோள் என்று தம் இனிய குரலால் எடுத்து இசைக்கா நின்ற, இன்ப வேனிலும் வந்தன்று - இன்பமுடைய வேனிற் பருவமும் வந்துளது; நம் வயிற் பிரியலம் என்று - இனி நம் வயிற் பிரிய மாட்டோம் என்று, தெளித்தோர் - என்னைத் தெளிவித்தனர்; தேஎத்து - அவ்வாறு தெளிவித்தவர்மாட்டு, கயன் அற - குளங்களில் நீர்வற்ற, கண் அழிந்து உலறிய - தடையறச் செவ்வி

யழிந்து காய்ந்த, பல்மா நெடுநெறி - பல பெரிய நெடிய நெறியை உடைய, வினைமூசு கவலை - போர்வினை நெருங்கிய கவர்ந்த வழிகள், விலங்கிய - குறுக்கிட்ட, வெம்முனை - கொடிய முனையை உடைய, அரும் சுரம் - செல்லுதற்கரிய சுரத்தின் கண்ணே, முன்னியோர் - பிரிந்து சென்ற தலைவர் பால், இனி எவன் மொழிகோ - இனி யான் யாது சொல்ல மாட்டுவேன்.

முடிபு : இன்ப வேனிலும் வந்தன்று; தெளித்தோர் அரும் சுரம் முன்னியோர்; இனி எவன் மொழிகோ என்று முடிக்க.

கருத்து : தலைவன் பிரிவினைத் தோழியால் உணர்ந்த தலைவி அதுபற்றி மீண்டும் வினாவ, தோழி வேனிலும் வந்தது: அவரும் பிரிந்தனர், இனி யான் என் செய்குவன் என்று நொந்து நவின்றாள்.

அ-ள் : கயன் - குளம். உலறுதல் - காய்தல். வினை - போர்வினை. விலங்குதல் - குறுக்கிடுதல். 'பின்பனி என்பது முதல் பிரியலம் என்றது வரை' தலைவன் கூற்றைத் தோழி கொண்டு கூறினாள். காய்ந்த கொடிய வழியிலே சென்ற தலைவர் உள்ளமும் பசையற்றதாயிற்று; எனவே செயத்தக்கது யாதொன்றும் இல்லை என்றவாறு.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

4-6. வேனில்

"இளவேனல் வந்ததாலென்னாங் கொல் இன்று
வளவேனற் கண்ணி மனம்" (சிலப். 8, வெண்பா. 1)
(சீவக. 2382, 2578) (கலி. 92:61-2)

5-6. புணர்ந்த பறவையின் ஒலி பிரிந்தோருக்குத் துன்பத்தை உண்டாக்குதல்

"உதுக்காண் அதுவே இது என் மொழுகோ
நோன்சினையிருந்த இருந்தோட்டுப் புள்ளினம்
....................................
ஏதிலாவர் இவண் வரிற் போதிற்"
(குறுந். 191:1-5, 160:1-4)

# 225. குறிஞ்சி

## தலைவி கூற்று

### (பரத்தை கூற்றெனினும் அமையும்)

முருகுறழ் முன்பொடு கடுஞ்சினம் செருக்கிப்
பொருத யானை வெண்கோடு கடுப்ப
வாழை ஈன்ற வையேந்து கொழுமுகை
மெல்இயல் மகளிர் ஓதி அன்ன
5 பூவொடு துயல்வரும் மால்வரை நாடனை
இரந்தோர் உளர்கொல் தோழி திருந்திழைத்
தொய்யில் வனமுலை வரிவனப்பு இழப்பப்
பயந்துஎழு பருவரல் தீர
நயந்தோர்க்கு உதவா நார்இல் மார்பே.

எ-து: வன்புறை எதிர் அழிந்தது. அல்லது பரத்தை தலைமகட்குப் பாங்காயின வாயில் கேட்பச் சொல்லியதூஉம் ஆம்.

கபிலர்

ப-ரை: தோழி! திருந்து இழை - திருத்தமாகச் செய்யப் பட்ட கலன்களை அணிந்த, தொய்யில் வனமுலை - தொய்யிற் குழம்பால் எழுதப்பட்ட வனமுலையின் கண்ணுள்ள, வரி வனப்பு இழப்ப - இரேகையின் அழகு கெடும்படி, பயந்து எழு பருவரல் தீர - பசந்து தோன்றிய வருத்தம் நீங்கும்படி, முருகு உறழ் முன்பொடு - முருகக் கடவுளை ஒத்த வலிமையொடு, கடும்சினம் முருக்கி - கடும்சினம் மிகுத்து, பொருத - போர் செய்த, யானை வெண்கோடு கடுப்ப - யானையின் வெள்ளிய தந்தம்போல, வாழை ஈன்ற - வாழை அப்பொழுது ஈன்ற, வை ஏந்து கொழு முகை - தாற்றின் கூர்மை பொருந்திய கொழுத்த முகை, மெல் இயல் மகளிர் - மெல்லிய சாயலை உடைய மகளிர்து, ஒதி அன்ன - கூந்தலை முடித்துப் போட்டாற் போன்ற, பூவொடு துயல்வரும் - அதன் பூவோடு அசையா நிற்கும், மால் வரை நாடனை - பெரியமலை நாடன்பாற் சென்று, இரந்தோர் உளர் கொல் - விரும்பின எமக்கு உதவாத அன்பற்ற அவனது மார்பை நம்மில் இரந்து கேட்டவர் உளரோ? அவனாகவே வந்து பெரு நயப்புரைத்து இப்பொழுது கைவிட்டொழிந்தனன் காண்.

முடிபு : மால்வரை நாடனைச் சென்று நயந்தோர்க்கு உதவா நாரில் மார்பை இரந்தோர் உளர்கொல் என முடிக்க.

கருத்து : தோழி! நாடனது மார்பை நாம் வேண்டினோம் இல்லை. அவனே வந்து தலையளி செய்து பிரிந்தான் எனில் யான் செய்வது என் என எதிரழிந்தாள்.

அ-ள் : வை - கூர்மை. தொய்யில் - கரும்பு வடிவமாக முலையில் எழுதும் கோலம். நார் - அன்பு. நயந்தோர் - இடவழு வமைதி. வெண்கோடு - தார்விடல். ஓதி - பூ. ஏற்ற உவமை யாதல் அறிக.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - காதற்பரத்தை தலைவியை இகழ்ந்து கூறல்.

பரத்தை கூற்றிற்குப் பின்வருமாறு பொருள் கொள்ளுக.

மலைநாடனிடம் போய் விரும்பினார்க்கு உதவாத அவனது மார்பை இங்கு வேண்டினார் உளரோ? யாரும் இல்லையே. அவன் பற்பலர் மாட்டும் துய்க்கச் செல்லுதல்போல என்மாட்டும் வந்தானாக அதுகொண்டு தலைவி வருந்துவதனால் யாது பயன்?

## 226. பாலை

### தலைவி கூற்று

மரஞ்சா மருந்துங் கொள்ளார் மாந்தர்
உரஞ்சாச் செய்யார் உயர்தவம் வளம்கெடப்
பொன்னும் கொள்ளார் மன்னர் நன்னுதல்
நாம்தம் உண்மையின் உளமே அதனால்
5 தாம்செய் பொருள்அளவு அறியார் தாம்கசிந்து
என்றூழ் நிறுப்ப நீள்இடை ஒழியச்
சென்றோர் மன்றநம் காதலர் என்றும்
இன்ன நிலைமைத்து என்ப
என்னோரும் அறிப இவ்வுலகத் தானே.

எ-து : இது பிரிவிடை மெலிந்த தலைமகள் வன்புறை எதிர் மொழிந்தது.

## கணிபுன்குன்றனார்

ப-ரை : நன்னுதல் - அழகிய நெற்றியை உடையாய்!, மாந்தர் - இந்த உலகத்து மக்கள், மரம் சாமருந்தும் கொள்ளார் - மரம் பட்டுப் போகும்படி அதன் பாலுள்ள மருந்தை முற்றும் கொள்ளார், மேலும், உயர்தவம் வளம்கெட - தம் வலிமை முற்றும் கெடுமாறு உயர்ந்த தவத்தைச் செய்யார், மன்னர் - உலகை ஆளும் அரசர், பொன்னும் கொள்ளார் - தம் குடி மக்களின் செல்வம் குறைபடும்படி அவரிடத்து வரி வாங்குபவர் அல்லர், நாம்தம் உண்மையின் - இந்த உண்மையைத் தாம் நன்கு அறிந்து வைத்தும், தாம்செய் பொருள் அளவு அறியார் - தாம் ஈட்ட விரும்பும் பொருளின் எல்லையை உணரார், தாம் கசிந்து - தலைவர் தாம் வருத்தம் மேற்கொண்டு, என்றூழ் நிறுப்ப - வெயில் நிலைகொள்ள, நீள் இடை ஒழிய - நீண்ட சுரத்து நெறி பின்னே ஒழிய, சென்றோர் நம் காதலர் - எம்மைப் பிரிந்து சென்றவராகிய நமது காதலர்தாம், என்றும் இன்ன நிலைமைத்து மன்ற என்ப - எம்மைப் பிரியாது உறைதலின் நாம் உயிரோடு இருக்கின்றோம், பொருள் வயிற்பிரியின் அதனால் யாம் இறந்துபடுவோம் என்பதைத் திண்ணமாக அவர் அறிந்தவர் அல்லர், இவ்வுலகத்தான் - இவ் வுலகத்து ஆடவர் இயற்கை இதுவே என்பர் சான்றோர், என்னோரும் அறிய - இதனை அனைவரும் அறிந்து இருப்பர்.

முடிபு : நன்னுதால் கொள்ளார், செய்யார், கொள்ளார், உளமே, அதனால் அறியார், இவ்வுலகத்து இன்ன நிலைமைத்து என்ப, என்னோரும் அறிப என முடிக்க.

கருத்து : பொறுத்திரு என்ற தோழியை எதிர்மறுத்து, தலைவர் அன்புகாட்டி அருகில் இருந்தமையால் யான் உயிரோடிருந்தேன். பொருள் வேண்டி அவர் பிரிவர். ஆடவர் செய்கை இதுவென்பர் சான்றோர்; யான் எவ்வாறு ஆற்றுவேன் என்று தலைவி கூறினாள்.

வி-ரை : மக்கள் பொருள் ஈட்டுவது இன்ப நுகர்ச்சியின் பொருட்டன்றே; எம்முயிர் போய பின் தலைவருக்கு அப் பொருளால் ஆயபயன் என் என்றவாறு. இது துன்பத்துப் புலம்பல்.

முதல் மூன்றடிகளிலும் பிறிது மொழிதலணி வந்துள்ளது. மருந்து கொள்வோர் மீண்டும் அம்மரத்தை நன்கு பேணுவர். ஆனால் என் தலைவரோ என் நலனையுண்டு பின் என்னைப் பேணாது பிரிவர் என்று புலந்தாளாம். மாந்தர் உரம் கெடுமாறு

தவம் செய்கின்றிலர். யானோ என்னுள்ளம் வருந்தி அழியுமாறு அவரின்பத்தையே கருதலானேன் என்று தன் நிலை கூறினாள். தன் உயிர் பிரியுமாறு அவர் பிரிந்தனர் என்பாள். தலைவனைக் குடியோம்பிக் கொள்ளாக் கொடுங்கோல் மன்னன் என்றாள்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

1. மரம் சா மருந்து
"மருந்துகொண் மரத்தின் வாள்வடுமயங்கி" (புறநா. 180:5)
"மரமுதல்சாய மருந்து கொண்டாங்கு" (பெருங். 1:37-188)
"பால் கொண்ட அத்தி யெனவே உடல் வடுப்பட்ட எமர்" (வெங்கைக் கோவை. 99)
"மரமுதல்சாய மருந்து கொண்டாங்கு" (பெருங். காண். 1:188)

2-3 "மெல்லியன் கிழவனாகி வைகலும்
வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப எடுக்கும்" (புறநா. 184:7-9)

# 227. நெய்தல்

## தோழி கூற்று

அறிந்தோர் அறனிலர் என்றுஅலர் சிறந்த
இன்னுயிர் கழியினும் நனிஇன் னாதே
புன்னைஅம் கானற் புணர்குறி வாய்த்த
பின்ஈர் ஓதி என்தோழிக்கு அன்னோ
5 படுமணி யானைப் பசும்பூண் சோழர்
கொடிநுடங்கு மறுகின் ஆர்க்காட்டு ஆங்கண்
கள்ளுடைத் தடவிற் புள்ளொலித்து ஓவாத்
தேர்வழங்கு தெருவின் அன்ன
கௌவை ஆகின்றது ஐய நின்னருளே.

எ-து : வரையாது நெடுங்காலம் வந்து ஒழுக, தோழி தலைவனை வரைவு முடுகச் சொல்லியது.

**தேவனார்**

ப-ரை : ஐய! ஐயனே! புன்னை அம் கானல் - புன்னை அஞ்சோலையிடத்து, புணர் குறிவாய்த்த - புணர்தற்குப் பலகாறும் நீ குறித்த குறியிடத்து வந்து நின்ற, பின் ஈர் ஓதி என் தோழிக்கு - பின்னிய குளிர்ந்த கூந்தலை உடைய என்தோழிக்கு, அன்னோ - ஐயோ! நின் அருள் - நீ காட்டிய அருள்தான், படுமணி யானை - ஒலிக்கின்ற மணியை உடைய யானையையும், பசும்பூண் - பசிய பொன்னாலாகிய ஆபரணங்களையுமுடைய, சோழர் - சோழமன்னரது, கொடி நுடங்கு மறுகின் - கொடி அசைகின்ற தெருக்களை உடைய, ஆர்க்காட்டு ஆங்கண் - ஆர்க்காடு என்னும் ஊரிலே, கள் உடைத்தடவில் - கள்ளை உடைய பானையில், புள்ஒலித்து ஒவா - வண்டுகள் ஒலித்து நீங்காத, தேர்வழங்கு தெருவின் அன்ன - தேர்வழங்கு தெருவினை ஒத்த, கௌவை ஆகின்றது - பெரிய ஆரவாரம் உண்டாகின்றது, அப் பூசலாகிய பழிச் சொல்லும் எப்படி உண்டாகின்றதோ எனில், அறிந்தோர் அறனிலர் - அறிந்தோம் என்று கூறிக்கொள்ளும் அவர் எல்லாம் அறநெறியிலே நிற்பவரே அல்லர் என்று அலர் சிறந்த என்று பழிச்சொல் எவ்விடத்தும் பரந்து நின்றன. இன்னுயிர் கழியினும் நனி இன்னாது - அவ் அலர்தான் அவளது இனிய உயிர் பரந்துபட்ட பின்னும் துன்பத்தைத் தருகின்ற தன்மை உடையது காண்.

முடிபு : ஐய! என் தோழிக்கு நின்னருள் தெருவின் அன்ன கௌவையாகின்றது என முடிக்க.

கருத்து : தலைவனே! நின் களவொழுக்கம் பலராலும் அறியப்பட்டது. அலர் கண்டு அஞ்சி தலைவி இறந்துபடினும் பழி நீங்குவது ஒன்றன்று. எனவே விரைக வரைக என்று தோழி வரைவு முடுக்கினள்.

அ-ள் : அன்னோ - இரக்கச்சொல். தடவு - சாடி. பானையு மாம். புள் - வண்டு. படுதல் - ஒலித்தல். இஃது ஈரம் இல்கூற்றம் ஏற்று அலர் நாணல்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு முடுக்கல்.

இது கருப்பொருளால் நெய்தல். தலைவி தன் தலைவர் அறன் இலர் எனப் பிறர் கூறக் கேட்டலின் அது பொறாது இறந்துபடும் எனவும், அலரேயன்றி அப் பழியும் நின்னை வந்து சூழும் எனவும் கூறி வரைவுடன் படுத்தினாளாயிற்று,

ஒப்புமைப்பகுதி

3. புன்னை நீழற் புணர்குறி
"இணரவிழ் புன்னை எக்கர் நீழல்
புணர்குறி வாய்த்த ஞான்றை" (குறுந். 299, 123:3-4)
"மின்னிலைப் பொலிந்த விளங்கிணர் அவிழ்பொன்
தண்ணறும் பைந்தாது உறைக்கும், புன்னையம் கானற்
பகல் வந்திமே" (அகநா. 80:11-3)
"பூவேய் புன்னையந் தண்பொழில், வாவே
தெய்ய மணந்தனை செலற்கே" (அகநா. 240:14-5)
"கழிசேர் புன்னையழி பூங்கானற்
தணவா நெஞ்சமொடு தமியன் வந்துநம்
மணவா முன்னும்" (அகநா. 290:9-11)
"புன்னையங் கானல் இருந்தேமாய்ப் பொய்த்து எம்மைச்
சொன்னலங் கூறி நலனுண்ட சேர்ப்பனை"
(கைந்நிலை, 54)
"கண்டலையே கரியாக் கன்னிப் புன்னைக் கலந்த கள்வர்"
(திருச்சிற். 177)

# 228. குறிஞ்சி

## தோழி கூற்று

என்னெனப் படுமோ தோழி மின்னுவசிபு
அதிர்குரல் எழிலி முதிர்கடன் தீரக்
கண்தூர்ப்பு விரிந்த கனைஇருள் நடுநாள்
பண்புஇல் ஆர்இடை வரூஉம் நம்திறத்து
5 அருளான் கொல்லோ தானே கானவன்
சிறுபுறம் கடுக்கும் பெருங்கை வேழம்
வெறிகொள் சாபத்து எறிகணை வெரீஇ
அழுந்துபட விடரகத்து இயம்பும்
எழுந்துவீழ் அருவிய மலைகிழ வோனே.

எ-து: தோழி, சிறைப்புறமாகத் தலைவிக்குச் சொல்லுவாளாய், தலைவன் கேட்பச் சொல்லியது.

முடத்திரு மாறனார்

ப-ரை: தோழி - தலைவீ! கானவன் - காட்டில் வாழும் வேடனது, சிறுபுறம் கடுக்கும் - முதுகுபோன்ற, பெருங்கை

வேழம் - பெரிய துதிக்கையை உடைய களிற்றியானை, வெறிகொள் சாபத்து எறிகணை வெரீஇ - அச்சங்கொண்ட வில்லினின்றும் எய்யுங்கணைக்கு அஞ்சி, அழுந்துபட விடரகத்து இயம்பும் மலைப் பிளப்பின் - ஆழத்தே சென்று மோதுமாறு பிளிறாநிற்கும், எழுந்துவீழ் அருவிய - குதித்து விழுகின்ற அருவியை உடைய, மலை கிழவோன் - மலைக்குரிய நமது காதலன், மின்னு வசிபு - மின்னலால் இருளைப் பிளந்துகொண்டு, அதிர்குரல் எழிலி - முழங்குகின்ற குரலை உடைய மேகம், முதிர்கடன் தீர - தான் சூல் முதிர்தலுடைமையால் அக்கடன் தீருமாறு எங்கும் இருண்டு, கண்தூர்பு விரிந்த - கண்ணொளி மறையும்படி பரந்து நிற்கும், கனைஇருள் நடுநாள் - இருளை உடைய நடுயாமத்தில், பண்புஇல் ஆரிடை - இயல்பில்லாத அரிய வழியில், வருஉம் - வந்து, நம் திறத்து - எம்மாட்டு, அருளான் கொல்லோ தான் - அருள் புரியானோ? என் எனப்படுமோ - இப்பொழுது அளியாமைக்குக் காரணம்தான் என்னவென்று சொல்லப்படுமோ?

முடிபு : தோழி! மலைகிழவோன் வருஉம் நம் திறத்து அருளான் கொல்லோ? என் எனப்படுமோ? என முடிக்க.

கருத்து : தலைவி! தலைவன் இனி நின்னைக் கூடானோ? அவன் வாராமைக்குக் காரணம் என்னையோ? என்று தலைவன் காதில் விழும் வண்ணம் தோழி சொல்லாடினாள்.

அ-ள் : வெறி - அச்சம். வசிபு - பிளந்து. கடன் தீர்த்தல் - தன் கடமையைச் செய்து முடித்தல். "யார் கடன் வைத்தாலும் மாரி கடன் வையாது" என்னும் பழமொழியை ஈண்டு கருதுக. மாரி - தெய்வமுமாம். வழியின் அருமை கருதித் தலைவி வருந்து கின்றாள் ஆகலின், "இனி நீட்டியாது யாம் வரைவொடு புகுதும்" எனக் கருதுவன் எனக் கொண்டு என்னெனப்படுங்கொல் என்றாள்.

நயம் : யானை, வேட்டுவன் கணைக்கு அஞ்சி விடரகத்து இயம்பும் என்றது, தலைவி அயலவர் பழி தூற்றலுக்கு அஞ்சி மனையகத்துப் புலம்பி வருந்தா நிற்கும் என்றதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவுடன் படுத்தல்.

ஒப்புமைப்பகுதி

1. என்னெனப் படுங்கொல் தோழி

"என்னெனப் படுங்கொல் தோழி மின்னுபு"

(குறுந். 194:1) (அகநா. 206:1)

# 229. பாலை

## தோழி கூற்று

சேறும் சேறும் என்றலிற் பலபுலந்து
சென்மின் என்றல் யான்அஞ் சுவலே
செல்லாதீம் எனச் செப்பின் பல்லோர்
நிறத்தெறி புன்சொலின் திறத்து அஞ்சுவலே
5 அதனால் சென்மின் சென்று வினைமுடிமின் சென்றாங்கு
அவண் நீடாதல் ஓம்புமின் யாமத்து
இழைஅணி ஆகம் வடுக்கொள முயங்கி
உழையிர் ஆகவும் பனிப்போள் தமியே
குழைவான் கண்ணிடத்து ஈண்டித் தண்ணென
10 ஆடிய இளமழைப் பின்றை
வாடையும் கண்டிரோ வந்து நின்றதுவே.

எ-து: தலைவனால் பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைவியை ஆற்றுவித்துச் செல்ல உடன்பட்டது; செலவு அழுங்குவித்ததூஉம் ஆம்.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை: சேறும் சேறும் என்றலில் - "யாம் வினைவயிற் செல்வோம், யாம் வினைவயிற் செல்வோம்" என்று நீர் பலமுறை கூறுதலாலே, பல புலந்து - பலவாகப் புலந்து கூறி, சென்மின் என்றல் - 'செல்லுவீராக' என்று சொல்லுதற்கு, யான் அஞ்சுவல் - யான் அஞ்சுவன். செல்லாதீம் எனச் செப்பின் - "நீர் செல்லாது இங்கேயே இருப்பீர்" என்று சொன்னால், பல்லோர் - பலரும் கூறா நிற்கும், நிறத்தெறி புன்சொலின் - மார்பிலே தைக்கின்ற அம்புபோன்ற புல்லிய சொல் காரணமாக, திறத்து அஞ்சுவல் - எங்கே பழி வந்துறுமோ என்று அதற்கும் நான் அஞ்சாநிற்பேன். அதனால் - ஆகையால், சென்மின் - செல்வீராக. சென்று வினை முடிமின் - சென்று எடுத்த வினையை நன்கு முடிப்பீராக; சென்றாங்கு - சென்றக்கால், அவண் - அவ்விடத்து, நீடாதல் - நெடுங்காலம் பிரிந்திருத்தலை, ஓம்பு மின் - தவிர்மின், ஏனெனில் யாமத்து - நடுநிசியில், இழையணிஆகம் - அணிகலன்கள் அணிந்த மார்பிலே, வடுக்கொள - தழும்பு ஏற்படும் வண்ணம், முயங்கி - தழுவி, உழையீராகவும் - நீவிர் அருகிற் பிரியாதிருப்பினும், பனிப்போள் - தலைவி நடுங்குவள் கண்டீர், அத்தகையாள்,

தமியே - தனித்து இருந்து, குழைவான் - வருந்துமாறு, கண்ணிடத்து - அகன்ற இடம் எங்கும், ஈண்டி - பரவி, தண்என - குளிர்ச்சியுண்டாக, ஆடிய இளமழைப் பின்றை - இயங்குகின்ற பெய்து வெளிதாகிய மேகத்தின் பின்னர், வந்து நின்ற வாடையும் கண்டிரோ - வந்து நின்ற வாடைக் காற்றையும் கண்டீரன்றோ? ஆதலின் ஆய்ந்து ஏற்றது செய்ம்மின்.

முடிபு : தலைவி, உழையீராகவும் பனிப்போள்; வந்து நின்றது வாடை; அவண்நீடாதல் ஓம்புமின் என முடிக்க.

கருத்து : பிரியக் கருதிய தலைமகனைத் தோழி நீர் பிரிந்து வினைமுடித்து வாடை வருமுன் வருவீர் என்றாள். பல்லோர் நிறத்தெறிபுன் சொல்: அப்புறங் காவல், நாடுகாவல் என்னும் இவற்றின் பொருட்டுச் செல்லாதிருப்பதால் ஆகிய கேட்டைக் குறித்துப் பலரும் கூறும் கடும் சொல்.

மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - செலவு அழுங்குவித்தல்.

ஒப்புமைப்பகுதி

1-2. "சேறும் சேறும் என்றலிற் பண்டைத்தன்
மாயச் செலவாச் செத்து மருங்கற்று
மன்னிக் கழிகென் றேனே அன்னோ" (குறுந். 325:1-3)

3. செல்லாதீம்

"பனிக் கடுங்குரையம் செல்லாதீம் என"
(குறுந். 350:2, 390:2) (ஐங். 186:3) (அகநா. 300:18)

9-11. உறை அழி துளி வாடை

"நுண்ணுறை அழிதுளி தலைஇய
தண்வரல் வாடையும் பிரிந்திசினோர்க்கு அழலே"
(குறுந். 35:4-5)

# 230. மருதம்

## தோழி கூற்று

முயப்பிடிச் செவியின் அன்ன பாசடைக்
கயக்கணக் கொக்கின் கூம்புமுகை அன்ன
கணைக்கால் ஆம்பல் அமிழ்துநாறு தண்போது
குணக்குத் தோன்று வெள்ளியினிருள்கெட விரியும்
5 கயற் கணம் கலித்த பொய்கை ஊர

முனிவுஇல் பரத்தையை எற்றுறந்து அருளாய்
நனிபுலம்பு அலைத்த வேலை நீங்கப்
புதுவறம் கூர்ந்த செறுவில் தண்ணென
மலிபுனல் பரத்தந் தாங்கு
10 இனிதே தெய்யநிற் காணுங் காலே.

எ-து : தோழி வாயின்மறுத்தது.

**ஆலங்குடி வங்கனார்**

ப-ரை : முயப்பிடிச் செவியின் அன்ன - நெருங்கிய பிடியானையின் செவிபோன்ற, பாசுஅடை - பசிய இலையையும், கயக்கணக் கொக்கின் அன்ன - குளத்தின் கண்வாழும் கொக்குப் போல கூம்பிய முகையையும், கணைக்கால் - அவற்றிற்கு ஒத்த திரண்ட தண்டினையுமுடைய, ஆம்பல் அமிழ்ந்து நாறு தண்போது - ஆம்பலின் அமிழ்து நாறும் மெல்லிய மலர், குணக்குத் தோன்றும் வெள்ளியின் - வைகறையிலே கீழைத் திசையிலே தோன்றுகின்ற வெள்ளியைப்போல, இருள்கெட விரியும் - இருள்கெட மலராநிற்கும், கயற்கணம் கலித்த - கயல் மீன்களின் கூட்டம் செருக்கிய, பொய்கை ஊர - பொய்கையை உடைய ஊரனே! என் துறந்து - என்னைக் கைவிட்டு, முனிவு இல் பரத்தையை அருளாய் - நின்பாற் சிறிதும் சினம் கொள்ளா திருக்கின்ற பரத்தையிடம் அன்புகாட்டி ஆங்கே உறைவாயாக! (யான் நின்பாற் சினம் கொண்டமையால் நின்னால் எஞ் ஞான்றும் அன்பு பாராட்டும் தகுதியைப் பெற்றிலேன் காண்) நனி புலம்பு அலைத்த வேலை - கோடையால் மிகவும் துன்பப் பட்ட காலத்து, நீங்க - அக்கடும் வெப்பம் நீங்குமாறு, புதுவறம் கூர்ந்த செறுவில் - புதுவதாக வற்றிக் காய்ந்து வெடிப்பு மிக்க வயலிலே, தண்ணென - குளிர்ச்சியுண்டாக, மலிபுனல் பரத் தந்தாங்கு - புதுநீர் வெள்ளம் பரவினாற்போல, நிற்காணுங் கால் - நின்னைக் காணும்பொழுது எல்லாம், இனிதே - இனிமை யாகவே இருக்கின்றது; அக் காட்சி ஒன்றே போதும்; ஆகலின் என் மனைக்கு வாராதே கொள்.

முடிபு : ஊர! என் துறந்து பரத்தையை அருளாய்! நிற் காணுங்கால் இனிது; அது ஒன்றே நன்று என முடிக்க.

கருத்து : வாயில் வேண்டி நின்ற தலைவனை "நீ பரத்தை யிடமே தங்குவாயாக; நின்னைக் காணும் காட்சி ஒன்றே எமக்குப்போதும்" என்று தோழி தன்னைத் தலைவியாக ஏறிட்டுக் கொண்டு கூறினாள்.

பி-ம். 9. பாத்தந்தாங்கு. 10. இனிது.

அ-ள் : முயத்தல் - நெருங்கல்- முயா என்பதன் விகாரம். கணை - திரட்சி. இது தலைவியைத் தானாகக் கூறியது.

நயம் - நயந்து தலைவனைப் பிணித்தலின் முனிவில் பரத்தையை என்றாள். இங்கு நீர் வாரீர் என்றிருந்த எமக்கு வந்ததே புணர்ச்சியினும் சிறந்ததாகக் கொண்டு மகிழ்வேம் என்னும் கருத்தால் நின்னைக் காணுங்கால் இனிதே என்றாள். இது, வாராது தாழ்த்தனை என்று இகழ்ந்தது. ஆம்பலம்போது வெள்ளி போல மலர்ந்திருந்தாலும் வெள்ளி ஆகாது, அதுபோல நீ தலைவிக்குச் செய்யும் தலையளி போலப் பரத்தைக்குச் செய்யினும் அவள் தலைவி ஆகாள் என்றதாம்.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - வாயின் மறுத்தல்.

ஒப்புமைப்பகுதி

1. பாசடைக்குக் களிற்றுச் செவி
"களிற்றுச் செவியன்ன பாசடை மயக்கி" (குறுந். 246:2)
"களிற்றுச் செவியன்ன பாசடை மருங்கின்" (அகநா. 174:4)
"நீர்மிசை நிவந்த நெடுந்தாள் அகல்இலை
பெருங்களிற்றுச் செவியின் அலைக்கும்" (அகநா. 186:4-6)

2-3. கொக்கின் புறத்திற்கு ஆம்பற்பூ
"மாரியாம்பலன்ன கொக்கின்" (குறுந். 117:1, 122:1-2)

## 231. நெய்தல்

### தோழி கூற்று

மைஅற விளங்கிய மணிநிற விசும்பில்
கைதொழு மரபின் எழுமீன் போலப்
பெருங்கடற் பரப்பின் இரும்புறம் தோயச்
சிறுவெண் காக்கை பலவுடன் ஆடும்
5 துறைபுலம்பு உடைத்தே தோழி பண்டும்
உள்ளூர்க் குரீஇக் கருஉடைத் தன்ன
பெரும்போது அவிழ்ந்த கருந்தாட் புன்னைக்
கானல்அம் கொண்கன் தந்த
காதல் நம்மொடு நீங்கா மாறே.

எ-து: சிறைப்புறமாகத் தோழி சொல்லி வரைவு கடாயது.

## இளநாகனார்

ப-ரை: தோழி - தலைவியே! பண்டும் - இதன் முன்னும், உள்ளூர்க் குரீஇ - மனையின் கண்ணேயுள்ள ஊர்க்குருவியின், கரு - முட்டையை, உடைத்தன்ன - உடைத்தாற் போன்ற, பெரும் போது அவிழ்ந்த - பெரிய அரும்பு மலர்ந்த, கருந்தாள் புன்னை-கரிய அடியை உடைய புன்னையஞ் சோலையை உடைய, கொண்கன் - தலைவன், தந்த - கொடுத்த, காதல் - அன்பானது, நம்மொடு நீங்காமாறு - நம்மை விட்டு நீங்காமையினாலே, மை அற விளங்கிய - குற்றம் அற விளங்கிய, மணிநிற விசும்பில் - நீலமணி போன்ற நிறத்தை உடைய ஆகாயத்தின் கண்ணே தோன்றி, கைதொழு மரபின் - உலகத்தாராலே கை தொழப் படும் தகுதியை உடைய, எழுமீன்போல - முனிவரின் தோற்ற மாகிய எழுமீன்களைப்போல, (ஸப்த ரிஷிகளைப்போல) பெருங் கடற்பரப்பின்-பெரிய கடற்பரப்பின் கண்ணே, இரு புறம் தோய - கரிய முதுகு நனையும்படி, சிறு வெண் காக்கை - சிறிய வெளிய நீர்க்காக்கைகள் பலவும், பலவுடன் ஆடும் - ஒரு சேர நீர் குடையா நிற்கும், துறை புலம்பு உடைத்தே - கடற்றுறையைத் தலைவன் இன்றி நாம் தமியேமாய் நோக்குதற்கு அத்துறை நனி இன்னாமையை உடையதாய் இரா நின்றது.

முடிபு: தோழி! கொண்கன் தந்த காதல் நம்மொடு நீங்கா மாறு துறை புலம்பு உடைத்து என முடிக்க.

கருத்து: தலைவன் செய்த காதல் நம்மை விட்டு நீங்க வில்லை; அதனால் துறை நோக்குதற்கு வருத்தமாயிருக்கிறது என்று தலைவன் கேட்பத் தோழி தலைவிக்கு உரைத்தாள்.

எழுமீன் - வடதுருவத்தைச் சுற்றி வரும் ஏழு மீன்கள்: ஸப்தரிஷி மண்டலம் எனப்படும். முன்பு புன்னையங் கானலில் முயங்கியமையின், அதனை நோக்கலும் கானலங்காதல் கொண் கன் தந்தது என இடத்தொடு புலம்பத் தொடங்கினாள். கொண்கனொடு ஆடற்கு இனிய துறையாதலின் அவன் இன்மை யிற் புலம்புடைத்தென வருந்தினாள். மணம் புரிந்தாலின்றி வெளிப்படையாக ஆடற்கு இயலாமையின் வரைவு கடாவு மாயிற்று. சிறுவெண் காக்கை தாம் ஆணும் பெண்ணும் பல ஒரு சேர ஆடுதலை நோக்கின காலை, யாமும் அங்ஙனம் ஆடற்கில்லையே என வருந்தா நிற்கும் என்றதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

# 232. குறிஞ்சி

### தோழி கூற்று

சிறுகண் யானைப் பெருங்கை ஈர்இனம்
குளவித் தண்கயம் குழையத் தீண்டிச்
சோலை வாழை முணைஇ அயலது
வேரல் வேலிச் சிறுகுடி அலறச்
5 செங்காற் பலவின் தீம்பழம் மிசையும்
மாமலை நாட தாமம் நல்கென
வேண்டுதும் வாழிய எந்தை வேங்கை
வீயுக விரிந்த முன்றில்
கல்கெழு பாக்கத்து அல்கினை செலினே.

எ-து : பகல்வருவானை இரவு வா எனத் தோழி சொல்லியது.

## முதுவெங்கண்ணனார்

ப-ரை : சிறுகண் - சிறிய கண்களையும், பெருங்கை - பெரியகையையுமுடைய, யானை ஈர் இனம் - யானையின் களிறும் பிடியுமாகிய இரண்டினம், குளவு - மலைப் பச்சையைச் சுற்றிலுமுள்ள, தண் கயம் - குளிர்ந்த நீர்ச்சுனையிலே, குழைய - மெய் துவள, தீண்டி - ஒன்றோடொன்று புணர்ந்து, சோலை - சோலையிலுள்ள, வாழை - மலை வாழையை, முணைஇ - வெறுத்து, அயலது - பக்கத்திலுள்ள, வேரல் வேலிச் சிறுகுடி அலற - மூங்கில் முள்ளால் மிடைந்த வேலியை உடைய சிறுகுடியில் வாழ்வோர் அஞ்சி அலரும்படி, செங்காற் பலவின் தீம்பழம் மிசையும் - சிவந்த அடியை உடையபலாவினது இனிய பழத்தைத் தின்னும், மாமலை நாட - பெரிய மலையை உடைய நாடனே! வாழிய - நீ நெடுங்காலம் வாழ்க, எந்தை - என் தந்தைக்குரிய, வேங்கை வீ உக விரிந்த - வேங்கை மலர் உதிரும்படி அகன்ற, முன்றில் - வாயிலை உடைய, கல்கெழு பாக்கத்து - மலையிலே பொருந்திய பாக்கத்து, அல்கினை செலின் - இன்று இரவு தங்கி மறுநாள் செல்வதாயின், அதற்கு அடையாளமாக, தாமம் நல்கென வேண்டுதும் - நினது மாலையைக் கொடுப்பாயாக என வேண்டுகிற்பேம்.

முடிபு : மலைநாட! அல்கினை செலின் தாமம் நல்கென வேண்டுதும் என முடிக்க.

கருத்து : தலைவ! பகற்குறி இரவுக்குறி இரண்டும் வேண்டேம்! வரைந்து கோடலையே வேண்டுவம் என வரைவு கடாயினாள்.

அ-ள் : குளவி - மலைப்பச்சை. பாக்கம் - பக்கத்துள்ள ஊர். முனைதல் - வெறுத்தல், மிசைதல் - தின்னுதல். இஃது அழிவில் கூட்டத்து அவன் புணர்வு மறுத்தல்.

வி-ரை : இரவில் வந்து முயங்குங்காறும் ஆற்றியிருத்தல் அருமையின் மாலை நல்குவாயாக என்றாள்; அம்மாலையை அணைத்தேனும் இன்புறலாம் என்றபடி.

உள்ளுறை : யானை ஈரினம் தலைவனும் தலைவியும் எனவும், குழையத் தீண்டி என்றது இயற்கைப் புணர்ச்சியிற் கூடியது எனவும், வாழையை வெறுத்து என்றது களவுப் புணர்ச்சியை வெறுத்தெனவும், சிறுகுடி அலற என்றது பழிச் சொற்கூறும் அயலிலாட்டியர் நடுங்கி அவர்வாய் அடங்கச் செய்தெனவும், பலவின் பழம் தின்னும் என்றது வரைந்து கொண்டு இல்லறம் நடத்தி இன்புறுவர் எனவும் கொள்க.

ஒப்புமைப்பகுதி

1-6. வேரல் வேலிப்பலவு

"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்" (குறுந். 18:1)

3. சோலை வாழை

"சோலை வாழைச் சுரிநுகும்பு இனைய"

(குறுந். 308:1) (மலைபடு. 131)

# 233. குறிஞ்சி

## தோழி கூற்று

கல்லாக் கடுவன் நடுங்க முள்எயிற்று
மடமா மந்தி மாணா வன்பறழ்
கோடுஉயர் அடுக்கத்து ஆடுமழை ஒளிக்கும்
பெருங்கல் நாடனை அருளினை ஆயின்
5 இனியென கொள்ளலை மன்னே கொன்ஒன்று

கூறுவன் வாழி தோழி முன்னுற
நாருடை நெஞ்சத்து ஈரம் பொத்தி
ஆன்றோர் செல்நெறி வாழாஅச்
சான்றோன் ஆதல்நற்கு அறிந்தனை தெரிமே,

எ-து : வரையாது நெடுங்காலம் வந்து ஒழுக, இவள் ஆற்றாள் என்பது உணர்ந்து, சிறைப்புறமாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

## அஞ்சில் ஆந்தையார்

ப-ரை : தோழி - தலைவியே! வாழி - நீ நெடுங்காலம் வாழ்க; கல்லா - தாவிக் குதிக்கும் தன் தொழிலைத் தவிர வேறொன்றையும் அறியாத, கடுவன் - ஆண் குரங்கு, நடுங்க - அஞ்சுமாறு, முள்எயிற்று - முள்போன்ற கூரிய பற்களையும், மட - மடப்பத்தையும் உடைய, மா - கருமையான முகத்தையும் உடைய, மந்தி - பெண்குரங்கு, மாணா - நன்கு வளர்ச்சியுறாத, வன்பறழ் - தன்னுடைய வலிய குட்டியோடு, கோடுஉயர் அடுக்கத்து - உயர்ந்த சிகரங்களை உடைய மலைப்பக்கத்து, ஆடு மழை - அசையும் மேகத்தை, ஒளிக்கும் - தனக்கு மறையும் இடமாகக் கொண்டு பதுங்கும், பெருங்கல் நாடனை - பெரிய மலைநாடனை, அருளினை - அவன் வரையா விடினும் அவன் மாட்டுப் பெரிதும் அன்புடைமை ஆயினை; ஆயின் - உன் குணத்தை ஆராயின், இனி என கொள்ளலை - யான் கூறும் சொற்களை இனி நீ ஏலாய், கொன்ஒன்று கூறுவன் - யான் சொல்வது நினக்குப் பயன் தாராது என்றாலும் ஒரு சிறிது கூறுவேன்; (யாதெனில்) முன்னுற - முன்பு பலமுறை அவன் வந்துள்ளான் ஆதலால் (யான் தெரிந்த வகையில்) நாருடை நெஞ்சத்து - அவன் தன்னுடைய அன்புள்ளத்தில், ஈரம் பொத்தி - அருளையும் பெற்று, ஆன்றோர் - சான்றோர், செல்நெறி வாழா - ஒழுகும் நல்லவழியில் நடவாத, சான்றோன் ஆதல் - சால்பிலனாதலை, நற்கு அறிந்தனை தெரிமே - நீ நன்கு அறிந்து உண்மை உணர்வாய்.

முடிபு : தோழி! பெருங்கல் நாடனைச் சான்றோன் ஆதல் நற்கு அறிந்தனை தெரிமே என முடிக்க.

கருத்து : வரையாது களவொழுக்கத்தினையே விரும்பி வரும் தலைவன்மாட்டு நீ பெரிதும் அன்புடையை. ஒன்று கூறுவேன். அவன் சான்றோன் அல்லன் ஆதலை அறிவாய் என்று தலைவன் கேட்டு வரைந்து கொள்ளுமாறு கூறினாள்.

அ-ள் : கோடு - கொடுமுடி - சிகரம். மா - பெரிய எனவும் ஆம். கொன் - பயன் இல்லாமை.

நயம் : தலைவனைக் காணும் முன் தன் சொல் பயன் தந்தாற்போல இப்பொழுது தாராமையின் என் சொல் கொள்ளலை என்றாள். அம்பலும் அல்கும் எழுகின்றமையின் தோழிசொல் பயன் தாராதாயிற்று. சான்றோர் செல்லும் நெறியாவது இரு முதுகுரவர் சான்றாக வரைதலும், களவினைத் தவிர்தலும் ஆம். அறநெறி வாழாமையாவது எல்லோருமறிய மணத்தலின்றிக் களவினையே வேண்டி நிற்றல். அதனாற் சால்பிலன் என்க.

உள்ளுறை : மந்தியும் அதன் குட்டியும் கடுவன் நடுங்க மலைப்பக்கத்து மழையில் மறையும் என்றது, தலைவன் வந்து காணாது மயங்குமாறு யானும் நீயும் இங்கொருபக்கம் மறையலாம் என்றதை இதன் பயன் களவு இடையீடுபட்டுழித் தலைவன் வரைய முயல்வன் என்பதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

8.9. தலைவன் சான்றோன் அல்லன் எனப்படுதல்.
"சான்றோர் அல்லர் யாமரீஇ யோரே" (குறுந். 102:4)

234 ஆம் பாடல் கிடைக்கப் பெறவில்லை.

# 235. நெய்தல்

## தோழி கூற்று

உரவுத்திரை பொருத பிணர்படு தடவுமுதல்
அரவுவாள் வாய முள்ளிலைத் தாழை
பொன்னேர் தாதிற் புன்னையொடு கமழும்
பல்பூங் கானல் பகற்குறி வந்துநம்
5 மெய்கவின் சிதையப் பெயர்ந்தனன் ஆயினும்

குன்றில் தோன்றும் குவவுமணல் ஏறிக்
கண்டனம் வருகம் சென்மோ தோழி
தண்தார் அகலம் வண்டுஇமிர்பு ஊதப்
படுமணிக் கலிமா கடைஇ
10 நெடுநீர்ச் சேர்ப்பன் வருஉ மாறே.

எ-து : வரைவுநீட ஆற்றாளாங் காலத்துத் தோழி வரைவு மலிந்தது.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : தோழி - தலைவீ! உரவுத் திரை பொருத - வலிமைமிக்க அலைகள் வந்து தாக்க, பிணர்படுதடவுமுதல் - சருச்சரை பொருந்திய வளைந்த அடியை உடைய, அரவு வாள் வாய - அராவுகின்ற அரம்பம் போன்ற வாயை உடைய, முள் இலைத் தாழை - முட்கள் பொருந்திய இலைகள் நிறைந்த தாழையின்பூ, பொன் நேர் தாதிற் புன்னையொடு கமழும் - பொன்போன்ற சுண்ணத்தையுடைய புன்னைப் பூக்களோடு ஒன்று கலந்து நறுமணம் வீசும், பல் பூங்கானல் - இன்னும் பற்பல பூக்கள் நிறைந்த சோலையில் குறித்த இடத்திற்கு, பகற்குறி வந்து - பகற்பொழுதில் வந்து நின் நலன் முழுதும் நுகர்ந்து, நம் மெய்கவின் சிதைய-நம்முடைய உடம்பின் அழகு கெடும்படியாக, பெயர்ந்தனன் ஆயினும் - திரும்பிச் சென்றனன் என்றாலும்: தண் தார் அகலம் - குளிர்ந்த மலர்களால் ஆகிய மாலையைத் தரித்த மார்பின் கண், வுண்டு இமிர்பு ஊத - வண்டுகள் வந்து இசைபாடி அம்மாலையின் தேனைப் பருகா நிற்ப, படுமணி - ஒலிக்கின்ற மணிகளாலாகிய மாலையை அணிந்த, கலிமா - செருக்கிய குதிரைகளை, கடைஇ - செலுத்தி, நெடுநீர்ச் சேர்ப்பன் - நெடிய நீரையுடைய நெய்தல் நிலத்திற்குத் தலைவனாகிய நம் காதலன், வருஉம் மாறு - வரைய வருகின்றதனை, குன்றில் - மலைபோல், தோன்றும் - தோற்றத்தைத் தருகின்ற, குவவு மணல் ஏறி - குவிந்த மணலாகிய மேட்டிடத்து ஏறி நின்று, கண்டனம் வருகம் - பார்த்து வருவோம்; சென்மோ - அதற்காக எழுவாயாக.

முடிபு : தோழி! சேர்ப்பன் சிதையப் பெயர்ந்தனன் ஆயினும் வருஉமாறு குவவு மணல் ஏறிக் கண்டனம் வருகம், என முடிக்க.

கருத்து : பகற்குறி வந்து செல்லும் தலைமகன் அது தவிர்ந்து வரைய வருகின்றதனைக் குவிமணல் மேடேறிக் காண்போம் என்றாள்.

அ-ள் : அரவுவாள் - அராவும் கருவியாகிய அரம்பம். ஊதல் - உண்ணல். பிணர் - சருச்சரை (சொரசொரப்பு) கலித்தல் - செருக்குதல்.

வி-ரை : ஆரவாரத்தோடு குதிரை மேலேறிப் பலர் புடைசூழ வருதலின் வரைவு மலிந்தமை கூறினாள். தாழையும் புன்னையும் ஒன்று கலந்து நறுமணம் வீசும் கானல் என்றது, தலைவன் வரைவொடு புகுதலாலே மணம் செய்துகொண்டு நீயும் அவனும் நம்முடைய சேரிவிளங்க வாழ்ந்திடுவீர் என்பதாம்.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - மகிழ்வித்தல்.

நம்மெய்கவின் சிதைய என்று தோழி கூறினாள். (தொல்: பொருள்- 257-ஆம் நூற்பாப்பற்றி.)

ஒப்புமைப்பகுதி

2. தாழையின் மடலுக்குவாள்
"வாள்போல்வாய கொழுமடல் தாழை" (குறுந். 245:3)

6. குன்றத்தன்ன மணல்
"குன்றத்தன்ன குவவு மணல் அடைகரை" (குறுந். 236:3)
"குன்றிற் றோன்றும் குவவு மணற்சேர்ப்ப"
(குறுந். 311:5) (அகநா. 310:10)

# 236. குறிஞ்சி

## தலைவி கூற்று

நோயும் கைம்மிகப் பெரிதே மெய்யும்
தீயுமிழ் தெறலின் வெய்தா கின்றே
ஒய்யெனச் சிறிதாங்கு உயரிய பையென
முன்றிற் கொளினே நந்துவள் பெரிதென
5 நிரைய நெஞ்சத்து அன்னைக்கு உய்த்துஆண்டு
உரைஇனி வாழி தோழி புரைஇல்
நுண்ணேர் எல்வளை நெகிழ்த்தோன் குன்றத்து
அண்ணல் நெடுவரை ஆடித் தண்ணென
வியல்அறை மூழ்கிய வளிஎன்
10 பசலை ஆகம் தீண்டிய சிறிதே.

எ-து : தலைவன் சிறைப்புறமாக வற்புறுக்குந் தோழிக்குந் தலைவி சொல்லியது.

## நம்பி குட்டுவனார்

ப-ரை : தோழி - என் ஆருயிர்த் தோழியே, வாழி - நீடூழி நீ வாழ்க, நோயும் - என்பாற் பொருந்திய காமநோயும், கைம்மிகப் பெரிதே - அளவு கடந்து அதிகரியா நின்றது; மெய்யும் - என் உடம்பும், தீஉமிழ் தெறலின் - நெருப்பை உமிழ்கின்ற கொதிப்பினால், வெய்து ஆகின்று - வெப்பதிதைத் தருகின்றது, (ஆதலால் யான் நலம்பெற) புரைஇல் - குற்றம் நீங்கிய, நுண்நேர் - நுண்ணிய வேலைப்பாடு அமைந்த, எல் வளை - சுடர்மிக்க வளையை, நெகிழ்த்தோன் - பிரிவினால் என் கையிலிருந்து விழுமாறு செய்த தலைவனது, குன்றத்து - மலையிலே, அண்ணல் - தலைமை அமைந்த, நெடுவரை - நீண்ட சிகரங்களில், ஆடி - தவழ்ந்து பரவி, தண் என - குளிர்ச்சி உண்டாகுமாறு, வியல் அறை - அகன்ற பாறையில், மூழ்கிய - அளாவிய, வளி - காற்றானது, என் - என்னுடைய, பசலை ஆகம் - பசலை பரவிய மெய்யிலே, சிறிது தீண்டிய - சிறிதுபட வேண்டி, ஒய்யென - விரைவாகச் சென்று, ஆங்கு உயரிய முன்றில் - அவ்விடத்து உயர்ந்த நம்முடைய முன்றிலிலே, சிறிது பைஎன கொளினே - சிறிது போது இவளை மெல்லக் கிடத்தினாள், நந்துவள் பெரிதுஎன - இவள் மிகவும் நோய் நீங்கப் பெறுவாள்என்று, ஆண்டு - அவ்விடத்து, உய்த்து - என்னைக் கொண்டு போய்விட்டு, நிரைய நெஞ்சத்து - நரகத்தை ஒத்த உள்ளத்தை உடைய கொடிய, அன்னைக்கு - என் தாய்க்கும், இனி - இப்பொழுதே, உரை - கூறுவாயாக.

முடிபு : தோழி! நோயும் பெரிது, மெய்யும் வெய்தாகின்று; அதனால் வளி பசலை ஆகம் சிறிது தீண்டிய முன்றிற் கொளின் பெரிது நந்துவள் என அன்னைக்கு உரை என முடிக்க.

கருத்து : "வரையாது ஒழுகும் தலைமகன் பிரிவால் யான் படும் துன்பம் ஆற்றொணாதது; அவன் மலை மிசைத்தவழும் தென்றல் என்மேற்படின் உய்வேன்" என்று தலைவன் கேட்கத் தோழிக்குத் தலைவி கூறினாள்.

வி-ரை : இற்செறிப்புச் செய்து காவல் பூண்டமையின் நரகம் போன்ற நெஞ்சை உடையவள் அன்னை என்றாள். தன் மலையில் வீசும் தென்றலையே பெற்று உய்பவள், தன்னைப் பெறாவிட்டால் இறந்துபட்டாலும் படுவள் என்று தலைவன் நினைத்து விரைவொடு புகுவான் என்றபடி. மலைச் சிகரங்

களிலே காற்றுச் சூழ்ந்து வீசுதல்போல, என் நெஞ்சம் அவனுடைய தடந் தோள்களிலே பட்டுச் சூழ்ந்து நிற்கும் என்று குறிப்பித்தாள்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

7. வளை நெகிழ்தல்

"இறை வளை நெகிழ்த்த எவ்வ நோயொடு"
(குறுந். 289:2, 11:1, 165:4)

"துறைநனி யூரனை உள்ளி என்
இறையேர் எல்வளை நெகிழ்போடும்மே"
(ஐங். 20:4-5, 27:3. 54:3, 136:2, 140:3)
(குறுந். 289), (கலி. 3, 121, 125, 127, 131)
(குறள். 1157), (கைந்நிலை. 55)

# 237. பாலை

## தோழி கூற்று

நனிமிகப் பசந்து தோளும் சாஅய்ப்
பனிமலி கண்ணும் பண்டு போலா
இன்உயிர் அன்ன பிரிவுஅருங் காதலர்
நீத்து நீடினர் என்னும் புலவி
5 உட்கொண்டு ஊடின்றும் இலையோ மடந்தை
உவக்காண் தோன்றுவ ஓங்கி வியப்புடை
இரவலர் வருஉம் அளவை அண்டிரன்
புரவுஎதிர்ந்து தொகுத்த யானை போல
உலகம் உவப்ப ஓது அரும்
10 வேறுபல் உருவின் ஏர்தரு மழையே.

எ-து : தோழி உரை மாறுபட்டது.

காரிக் கண்ணனார்

ப-ரை : மடந்தை - மடந்தையே! வியப்புடை - வியப்பு உடைய, இரவலர் - இரவலர்கள், வருஉம் அளவை - வருகின்ற

அமயந்து, அண்டிரன் - ஆய் அண்டிரன் என்னும் கொடை வள்ளல், புரவு எதிர்த்து - அவர்கட்குக் கொடுப்பது கருதி, தொகுத்த - சேர்த்து வைத்த, யானை போல - யானைக் கூட்டத்தைப்போல, உலகம் உவப்ப - உலகில் வாழும் உயிர்கள் மகிழ்ச்சியுற. ஓதுஅரும் - கூறுதற்கு அரிய, வேறுபல் உருவின் - பல்வேறு வகைப்பட்ட வடிவங்களோடு, ஏர்தரு - எழுகின்ற, மழை - மேகங்கள், ஓங்கி - உயர, தோன்றுவ - தோன்றுவன வற்றை, உவக்காண் - உவ்விடத்தே காண்பாய்; இஃது அவர் குறித்த பருவம் அன்றோ? இதுகாறும், நனிமிகப் பசந்து - பசலை நிறம் மிகப் பெற்று, தோளும் - தோள்களும், சாஅய் - மெலிந்து, பனிமலிகண்ணும் - நீர்வடிகின்ற கண்களும், பண்டு போலா - முன்பு இருந்தன போலன்றி வேறுபட, இன் உயிர் அன்ன - இனிய உயிர் போன்ற, பிரிவு அரும் காதலர் - பிரிதற்கு அரிய காதலர், நீத்து - என்னை விட்டு, நீடினர் - பிரிந்து நெடுந் தூரம் சென்றொழிந்தனர், என்னும் - என்று, புலவி - ஊடலை, உட்கொண்டு - நின் உள்ளத்தில் கொண்டு, ஊடின்றும் இலையோ - புலத்தலும் செய்திலையோ! இஃதென்ன வியப்பு;

முடிபு : மடந்தை! ஏர் தருமழை உவக்காண் தோன்றுவ; புலவி உட்கொண்டு ஊடின்றும் இலையோ எனமுடிக்க.

கருத்து : தேற்றவும் தேறாத தலைவி பருவ வரவின்கண் ஊடாது இருந்தமை கண்டு தோழி வியந்து கூறினாள்.

அ - ள்: நனிமிக ஒரு பொருட் பன்மொழி. ஏர்தரல் எழுதல் வியப்புடை இரவலர் என்றது கேட்டோர் வியக்குமாறு பாடும் பாணர் போன்றோரை.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - மாறுபடக் கூறல்.

உவக்காண் - ஒட்டி நின்ற இடைச்சொல்

ஒப்புமைப்பகுதி

1. தோள் நெகிழ்தல்

"மன்ற மராஅத்த பேஎ முதிர் கடவுள்

..........................

நெகிழ நெகிழ்ந்தன்று தடமென்றோளே"

(குறுந். 87, 77:6) (ஐங். 39:3, 133:5)

(அகநா. 1:8, 41:1-2, 169:13, 270:4)

3. மகளிர்க்கு ஆடவர் உயிர்

"வினையே ஆடவர்க்கு உயிரே வாணுதல்
மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரென" (குறுந். 135:1-2)

"ஆடவர் உயிரென அருகு போயினார்"(கம்ப எழுச்சிப். 22)

6. உவக்காண்

"உவக்காண் தோழி அவ்வந்திசினே" (குறுந். 367:3)

"அன்னாய் வாழி வேண்டன்னைஉவக்காண்" (ஐங். 206:1)

8. யானைக் கொடை

"இரவலர்க் கீத்த யானையிற் கரவின்று"
(புறநா. 129:6, 130, 131, 135, 140, 151)

"துடியடி அன்ன தூங்குநடைக் குழவியொடு,
பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கென"
(பொருந. 125-6)

"குன்றாகிய பொன்னும் வேழக் குழாமும்
கொடை புகழ்ந்து சென்றார் முகக்கும்" (தஞ்சை. 149)

# 238. முல்லை

## தலைவி கூற்று

வறம்கொல வீந்த கானத்து குறும்பூங்
கோதை மகளிர் குழூஉநிரை கடுப்ப
வண்டுவாய் திறப்ப விண்ட பிடவம்
மாலை அந்தி மாலதர் நண்ணிய
5 பருவஞ் செய்த கருவி மாமழை
அவர்நிலை அறிமோ ஈங்கு எனவருதல்
சான்றோர்ப் புரைவதோ அன்றே மான்றுஉடன்
உரஉரும் உரறும் நீரிற் பரந்த
பாம்புபை மழுங்கல் அன்றியும் மாண்ட
10 கனியா நெஞ்சத் தானும்
இனிய அல்லநின் இடிநவில் குரலே.

எ-து : தலைவி பருவம் கண்டு அழிந்தது.

**கந்தரத்தனார்**

ப-ரை : வறம் கொல - கோடை தாக்குதலால், வீந்த - பட்டு ஒழிந்த, கானத்து - காட்டின்கண், குறும் பூங்கோதை மகளிர் - சில மலர்களை மட்டுமே அணிந்த கூந்தலையுடைய ஆயர் மகளிர், குழூஉநிரை கடுப்ப - கூடுகின்ற கூட்டம்போல, வண்டு வாய் திறப்ப - வண்டுகள் வாய் திறந்து தேனைப் பருகும் வண்ணம், விண்ட - மலர்ந்த. பிடவம் - பிடவுகளை உடைய, மாலை அந்தி - அந்தி மாலையில், மால் அதர் நண்ணிய - காம நோயை யான் மிகவும் அடைய, பருவம் செய்த - கார்ப் பருவத்தைச் செய்த, கருவி - மின்னல், இடிபோன்ற கருவிகளைக் கொண்ட, மா - கரிய, மழை - மேகமே! அவர் நிலை ஈங்கு அறிமோ என வருதல் - "நீ என்னிடம் அவர் நிலைமையை நான் கூற அறிந்து கொள்வாயாக" என்று, வருதல் - இவ்விடம் இடித்து முழங்கி வருதல், சான்றோர்ப் புரைவதோ அன்றே - சான்றோர் பண்பிற்கு ஒத்ததாக இல்லை, அறிவாய்; உடன் மான்று - ஒருசேர மயங்கி, நின் - உன்னுடைய, இடிநவில் குரல் - இடித்து முழங்கும் அந்த ஓசை, உரவு உரும்நீரில் - ஆற்றல் மிக்க இடியாய் முழங்குந்தன்மையினால், பரந்த - எங்கும் பரவிய, பாம்பு - பாம்புகள், பை - படங்கள், மழுங்கல் அன்றி யும் - மழுங்கி அடங்கிச் செய்வதோடல்லாமல், மாண்ட - மாட்சிமைப்பட்ட, கனியா நெஞ்சத்தானும் - தலைவனின் உள்ளத்தைக் கனியச் செய்யாமையோடு, இனிய அல்ல - எனக்கும் நன்மையைச் செய்வன அல்ல.

முடிபு : மாமழை! வருதல் புரைவதோ அன்று: நின் இடி நவில் குரல், நெஞ்சம் கனியாமையோடு, எனக்கும் இனிய அல்ல எனமுடிக்க.

கருத்து : காரில் வருவேனென்றவன் வாராமையால் அப் பருவம் கண்ட தலைவி, ஏ மேகமே! நீ தலைவனின் உள்ளத்தை கனியச் செய்யாமையோடு மட்டுமன்று, எனக்கும் நல்லை அல்லை என்று அழிந்து கூறினாள்.

அ-ள் : வறம் - கோடை. விண்ட - மலர்ந்த, மால் - மயக்கம். மான்று - மயங்கி. பை - படம்.

வி-ரை : யான் காம நோயால் படும் துன்ப நிலையை நீ கண்டு வைத்தும், தலைவனை அழைத்து வருதலின்றி, அவன் நிலையை அறிவையோ என்றல் சால்பன்று என்றாள். இதனை "பிறர்நோயும் தன்நோய்போற் போற்றி அறனறிதல் சான்றோர்கட்கு எல்லாம் கடன்" (கலி.139) என்றதனால் அறிக.

குறித்த வண்ணம் வாராமையால் தலைவன் உள்ளம் பாம்பின் நஞ்சினும் கொடியது என்றாள்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

3. வண்டு வாய்திறக்கப் போது மலர்தல்

"காந்தளம் கொழுமுகை காவல் செல்லாது
வண்டிவாய் திறக்கும் பொழுதில்" (குறுந். 265:1-2)

"புதலும், வரிவண்டூத வாய்நெகிழ்ந்தனவே"
(குறுந். 260:1-2)

"பொய்கை ஆம்பல் அணிநிறக் கொழுமுகை
வண்டுவாய் திறக்கும்" (குறுந். 370:1-2)

# 239. நெய்தல்

## தோழி கூற்று

ஞான்ற ஞாயிறு குடமலை மறைய
மான்ற மாலை மகிழ்ந்த பரதவர்
இனிதுபெறு பெருமீன் எளிதினின் மாறி
அலவன் ஆடிய புலவுமணல் முன்றில்
5 காமர் சிறுகுடிச் செல்நெறி வழியின்
ஆய்மணி பொதிஅவிழ்ந் தாங்கு நெய்தல்
புல்இதழ் பொதிந்த பூத்தப மிதிக்கும்
மல்லல் இருங்கழி மலிநீர்ச் சேர்ப்பற்கு
அமைந்துதொழில் கேட்டன்றோ இலமே முன்கை
10 வார்கோல் எல்வளை உடைய வாங்கி
முயங்கு எனக் கலுழ்ந்த இவ்ஊர்
எற்று ஆவதுகொல் யாம்மற்றொன்று செயினே.

எ-து : தோழி தலைமகன் சிறைப்புறமாகச் சொல்லியது.

குன்றியனார்

ப-ரை : ஞான்ற ஞாயிறு - மாலையிற் சாய்ந்து விழுகின்ற கதிரவன், குடமலை - மேற்கு மலையில், மறைய - மறையவே, மாலை - மாலைப் பொழுதில், மகிழ்ந்த - கள் உண்டு மகிழ்ந்த,

பரதவர் - பரதவராகிய மீன் பிடிப்போர், இனிதுபெறு பெருமீன் - தாம் முயறசியின்றிப் பெற்ற பெரிய மீன்களை, எளிதினின் மாறி - எளிதாக விற்று, அலவன் ஆடிய - நண்டுகள் விளையாடிய, புலவு - புலால் நாற்றத்தை உடைய, மணல் முன்றில் - மணலை உடைய முற்றத்தினிடத்து, காமர் - நோக்கு வார்க்கு விருப்பம் தருகின்ற, சிறுகுடி - சிறிய குடியின் கண்ணே, செல்நெறி வழியின் - செல்லல் உற்ற ஒழுங்குபட்ட வழியில், ஆய்மணி பொதி அவிழ்ந்தாங்கு - அழகிய நீலநிற மணியின் குவியலை விரித்துப் பரப்பினாற்போல, நெய்தல் - நெய்தல் மலர் களின், புல்இதழ் - புறஇதழ்களால், பொதிந்த - மூடப்பட்ட, பூ - பூக்கள், தப - கெட, மிதிக்கும் - மிதித்துச் செல்லும், மல்லல் - வளப்பத்தை உடைய, இருங்கழி - கரிய கழிகள் பொருந்திய, மலிநீர் - நிறைந்த கடல் நீரை உடைய, சேர்ப்பற்கு - நெய்தல் நிலத்தலைவனுக்கு, அமைந்து தொழில் - யாம் மனம் ஒத்து இதுவரை அவன் இட்ட தொழிலை, கேட்டு அன்றோ இலமே - கேட்டு அதன்படி நடந்தோம் இல்லை; உண்மை இவ்வாறு இருக்க, என்னைப் பற்றி, முன்கை - நின் முன்கையில் அணிந்த, வார் கோல் - நெடிய வேலைப்பாடு அமைந்த, எல்வளை - ஒளிமிக்க வளைகள் எல்லாம், உடைய - உடையும் படி, வாங்கி முயங்கு என - அச் சேர்ப்பனை அழைத்து அணைத்து முயங்கு வாயாக என்று கூறி, கலுழ்ந்த - புலம்பி அழுத, இவ்வூர் - இந்த ஊர்தான், யாம் - நாம், மற்றொன்று செயின் - தலைவன் விருப்பத்திற்கேற்ப வேறொரு காரியத்தைச் செய்துவிட்டால், எற்றாவது கொல் - என்னபாடு படுமோ? வேறு வினையே இல்லை.

முடிபு : சேர்ப்பற்கு அமைந்து தொழில் கேட்டன்றோ இலமே; அங்ஙனமாக, மற்றொன்று செய்யின் இவ்வூர் எற்றா வ்து கொல் எனமுடிக்க.

கருத்து : தலைவன் விருப்பத்திற்கேற்ப நாம் நடந்தோம் இல்லை; எனினும் நம்மைப்பற்றி அலர் எழுகின்றது. மாறாகத் தலைவனையே முயங்கிவிடின் இவ்வூர் என்ன பாடுபடுத்தும் என்று தலைவன் கேட்கத் தலைவியிடம் தோழி கூறினாள்.

அ-ள்: மான்ற - மயங்கிய, காமர் - விருப்பம். பொதி - கட்டு. தப - கெட, வார் - நெடுமை. எல் - ஒளி.

வி-ரை : தலைவனை மணம் செய்துகொண்டு அவன் சொற்படி கேட்டுநடக்கும் பேறு பெற்றிலம் என்பாள் 'தொழில் கேட்டன்றோ இலமே' என்றாள். 'வாங்கி முயங்கு' என்று

களவினை ஊர் அறிந்து அலர் எழுப்பியமையைத் தெரிவித்தாள். வரையா விட்டால் இறப்பது தவிரச் செயத்தக்கது ஒன்றும் இல்லை என்பாள் வரைவு முயல்வு உணர்த்தினாள்.

நயம் : கள்ளுண்டு மயங்கிய பரதவர், தாம் பிடித்த பெரிய மீனை எளிதிலே விற்று வழியிலுள்ள நீலமலரை மிதித்துச் செல்லுவர் என்றது, காமத்தால் மயங்கிய தலைவன் தான் பெற்ற அரிய செல்வத்தைத் தலைவியின் பெற்றோரிடம் தந்து அவளைப் பெற்று மணந்துகொண்டு ஊரினர் கூறும் அலரை மிதித்துத் தன்னூர்க்குச் சென்று வாழ்க்கை நடத்துவானாக என்றது.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

# 240. பாலை

## தலைவி கூற்று

(தலைவன் கூற்றும் ஆம்)

ஐதே கம்ம இவ்வுலகு படைத்தோனே
வைஎர் வால்எயிற்று ஒள்நுதற் குறுமகள்
கைகவர் முயக்கம் மெய்உறத் திருகி
ஏங்கு உயிர்ப்பட்ட வீங்குமுலை ஆகம்
5 துயில்இடைப் படூஉம் தன்மையது ஆயினும்
வெயில்வெய்து உற்ற பரல்அவல் ஒதுக்கில்
கணிச்சியில் குழித்த கூவல் நண்ணி
ஆன்வழிப் படுநர் தோண்டிய பத்தல்
யானை இனநிரை வெளவும்
10 கானம் திண்ணிய மலைபோன்று இசினே.

எ-து : பிரிவிடை மெலிந்த தலைவி சொல்லியது. அல்லது நெஞ்சினாற் பொருள் வலிக்கப்பட்டு ஆற்றாளாய தலைமகன் சொல்லியதூஉமாம்.

**நப்பாலத்தனார்**

ப-ரை : வை ஏர் வால் எயிறு - கூர்மையாகத் தோன்றிய வெளிய பற்களையும், ஒள் நுதல் - விளக்கம் அமைந்த நெற்றியையும் உடைய, குறுமகள் - இளமை வாய்ந்த தோழீ, கை கவர் முயக்கம் - நம் காதலர் கைகளால் அழுந்தப் புல்லி முயங்கும் புணர்ச்சியானது, மெய்யுற - உடலிலே பொருந்த வேண்டாம் என்று கருதி, திருகி - மாறுபட்டு, ஏங்கு - ஏங்குகின்ற, உயிர்ப்பட்ட - உயிர்த்தலோடு பொருந்திய, வீங்கு - பருத்த, முலை - முலைகளை உடைய, ஆகம் - என் மெய்யானது, துயில் இடைப்படுஉம் - இனித் தனியே கிடந்து உறங்குவதனாலே துன்பப்படும், தன்மையதாயினும் - தன்மையை உடையதாயினும், வெயில் வெய்துற்ற - வெயிலால் வெப்பமுற்ற, பரல் அவல் ஒதுக்கில் - பரல்மிக்க பள்ளத்தின் ஒரு புறத்திலே, கணிச்சியிற் குழித்த கூவல் நண்ணி - குந்தாலியாற் குழித்த கிணற்றை அடைந்து, ஆண் வழிப் படுநர் - பசுவின் நிரையைப் பாதுகாக்கும் ஆயர், தோண்டிய பத்தல் - பறித்த சிறுகுழியில் உள்ள நீரை, யானை இனநிரை வௌவும் - யானைக் கூட்டம் வரிசையாகச் சென்று உண்ணாநிற்கும், கானம் - தலைவர் சென்ற காடானது, திண்ணிய மலை போன்று - திண்ணிய மலை போல அழியாத தன்மை, எனக்கு அச்சத்தைத் தருகின்றது, இவ் உலகு படைத்தோன் - அத்தகைய கொடிய இப் பாலை நிலத்தைப் படைத்த கடவுள் தானும், ஐதே கம்ம - அதன்கட் ஸபயச் சென்று மிகவும் துன்புற்று வருந்துவானாக.

முடிபு : குறுமகள்! தன்மையதாயினும் ' கானம் மலை போன்றிசின், இவ்வுலகு படைத்தோன் ஐதே எனமுடிக்க.

கருத்து : தலைவர் சென்ற காடு மலைபோல அச்சத்தைத் தருகின்றது. இதனைப் படைத்த இறைவன் தானும் இதன்கட் புகுந்து வருந்துவானாக என்று தலைவி நொந்து நவின்றாள்.

இரண்டாவது துறைக்குரிய கருத்து : உள்ளம் பொருள் மேற் சேறலின் தலைவியிடம் முயக்கம் பெறாத் தலைவன் யான் துயில் கொள்ளாவிடினும் செல்லும்காடு அச்சத்தைத் தருகின்றது. எனவே அத்தகைய பாலையைப் படைத்தோன் அதன் கண்ணே சென்று வருந்துவானாக என்று கூறினாள்.

அ-ள் : அவல் - பள்ளம். கணிச்சி - குந்தாலி. பத்தல் - ஏற்றச்சால். அதுபோல் இருத்தலின் பத்தலென்றார்.

வி-ரை : பசுக்கள் குடிக்கும்வண்ணம் இடையர் கிணற்றுப் பக்கம் பறித்த குழியாகிய பத்தலில் நிரப்பிய தண்ணீரை யானை இளம் உண்ணும் என்றது, இப்பொழுது தலைவனால் துய்த்தற் குரிய என் நலன் முழுதையும் பசலை உண்டு ஒழிக்கும் என்பதாம்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

யான் துய்க்கவேண்டிய நலத்தைப் பசலை உண்கின்றது என்று தலைவன் வருந்தியதாக அவன் கூற்றிற்கு ஏற்ப பொருள் காண்க.

மெய்ப்பாடு - பிறன் கண் தோன்றிய அச்சம் பற்றிய இளிவரல்.

பயன் - இல்லத்து அழுங்கல்.

ஒப்புமைப்பகுதி

1. ஐதேகம்ம
"ஐதேகம்ம மெய்தோய் நட்பே" (குறுந். 401:6)
"ஐதேகாமம் யானே" (குறுந். 217:6)

7-9. ஆனீர்ப்பத்தல்
"ஆனீர்ப்பத்தல் யானை வெளவும்" (ஐங். 304:2)

# 241. பாலை

## தலைவி கூற்று

உள்ளார் கொல்லோ தோழி கொடுஞ்சிறைப்
புள்ளடி பொறித்த வரியுடைத் தலைய
நீரழி மருங்கின் ஈர்அயிர் தோன்ற
வளரா வாடை உளர்புநனி தீண்டலின்
5 வேழ வெண்பூ விரிவன பலவுடன்
வேந்துவீசு கவரியின் பூம்புதல் அணிய
மழைகழி விசும்பில் மாறி ஞாயிறு
விழித்து இமைப்பதுபோல் விளங்குபு மறைய
எல்லை போகிய பொழுதின் எல்உறப்
10 பனிக்கால் கொண்ட பையுள் யாமத்துப்
பல்இதழ் உண்கண் கலுழ
நில்லாப் பொருட்பிணிப் பிரிந்திசி னோரே.

எ-து : தலைவி வன்புறை எதிர் அழிந்தது.

## மதுரைப் பெருமருதனார்

ப-ரை : தோழீ! கொடும் சிறை - கொடிய சிறகுகளை உடைய, புள் அடி பொறித்த - பறவைகளின் காற் சுவடு பொருந்திய, வரியுடைத் தலைய - வரிகளை மேற்கொண்டுள்ள, நீர் அழி மருங்கின் - நீர் வற்றிய இடங்கள் தோறும், ஈர் அயிர் தோன்ற - குளிர்ந்த நுண்மணல் தோன்ற, வளரா வாடை - மெல்லென வீசும் வாடைக் காற்று, உளர்பு நனி தீண்டலின் - உளர்ந்து மிகவும் தீண்டுதலினாலே, வேழ வெண்பூ - கரும்பின் வெள்ளிய பூ, பலவுடன் விரிவன - பலவும் ஒரு சேர மலர்வன வாய், வேந்து வீசு கவரியின் - அரசனுக்கு வீசப்படும் வெண் சாமரைபோல், பூம்புதல் அணிய - மெல்லிய புதல் தோறும் அழகு செய்யா நிற்ப, மழைகழி விசும்பில் - மேகங்கள் நீங்கிச் செல்லுகின்ற ஆகாயத்தில், ஞாயிறு - கதிரவன், மாறி விழித்து இமைப்பது போல், விளங்குபு மறைய - மாறிமாறி விழித்து இமைப்பதுபோலத் தோன்றித் தோன்றி மறையா நிற்ப, எல்லை போகிய பொழுதில் - பகல் போய் வந்த மாலைப் பொழுதோடு, எல்லுற - இரவுப் பொழுதும் வந்துசேர, பனிக் கால் கொண்ட - பனி தரையில் விழத்தொடங்கிய, பையுள் - துன்ப செய்யும், யாமத்து - நடுநிசியில், பல் இதழ் உண்கண் கலுழ - இமைகளை உடைய மையுண்ட கண்கள் நீர் வழியும்படி அழாநிற்ப, நில்லாப் பொருட்பிணி - நிலையற்ற பொருளைத் தேடுதலில் உள்ளம் கட்டுப்பட்டு, பிரிந்திசினோர் - எம்மைப் பிரிந்து சென்ற தலைவர், இப்பொழுது யாம் படும் துன்பத்தைக் கருதினாரேல், அவர் வருகுவர் என்று பொறுத்திருப்போம். ஆனால், அவர், உள்ளார் கொல் - அவ்வாறு இன்மையின் கருதி யிருப்பார் அல்லரோ?

முடிபு : தோழீ! உண்கண் கலுழ, நில்லாப் பொருட்பிணிப் பிரிந்திசினோர், உள்ளார் கொல்லோ எனமுடிக்க.

கருத்து : பொறுத்திரு என்ற தோழியை நோக்கி, யான் எங்ஙனம் பொறுப்பேன், அவர் என்னை நினைத்திருப்பின் எனக்குப் புரையேறும் அன்றோ? அவரோ நினையார், என் துன்பமோ பெரிது என்று தலைவி கூறினாள்.

அ-ள் : கொடுஞ்சிறை: சினையாகு பெயர். அயிர் - நுண் மணல். எல் - இரவு. பையுள் - துன்பம்.

நயம்: நிலையுற்ற இன்பத்தைத் துறந்து, நிலையற்ற பொருளை வேண்டிச் சென்ற தலைவர் பண்பாளர் அல்லர், அவர்க்கு நன்றி மறப்பது இயல்பே, நம்மை நினைத்தலும் செய்திலர் என்று தலைவி வருந்தினாள்.

கைகோள் - கற்பு.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

1. உள்ளார் கொல்லோ தோழி

"உள்ளார் கொல்லோ தோழி கள்வர்தம்" (குறுந். 16:1)
"உள்ளார் கொல்லோ தோழி கிள்ளை" (குறுந். 67:1)
"உள்ளார் கொல்லோ தோழி உள்ளியும்" (குறுந். 232:1)
(ஐங். 456:1, தனிப்பாடல். 1-4) (அகநா. 235:2)

11. பல்லிதழ் உண்கண்

"பல்லிதழ் உண்கண் பாடு ஒல்லாவே" (குறுந். 5:5)
"பல்லிதழ் உண்கண் பசத்தல் மற்றெவனோ" (ஐங். 170:4)
"பல்லிதழ் உண்கண் அழப் பிரிந்தோரே" (ஐங். 190:4)
"பல்லிதழ் உண்கண் மடந்தை" (ஐங். 334:5)
"பல்லிதழுண்கண் பனியலைக் கலங்க" (ஐங். 351:4)
"பல்லிதழ் மலருண்கண்" (கலி. 46:1)
"பல்லிதழுண்கண் பரந்தன பனியே" (கலி. 100:10)

12. நிலையாப் பொருட்பிணி

"நிலையாப் பொருட்பிணிப் பிரிந்திசினோரே"
(குறுந்.350:8) (கலி. 8:11, 14:17) (அகநா. 79:17)

# 242. முல்லை

## தலைவன் கூற்று

இலையில் பிடவம் ஈர்மலர் அரும்பப்
புதலிவர் தளவம் பூங்கொடி அவிழப்
பொன்னனக் கொன்றை மலர மணிஎனப்
பன்மலர்க் காயாம் குறுஞ்சினை கஞலக்
5 கார்தொடங் கின்றே காலை வல்விரைந்து

செல்க பாகநின் தேரே உவக்காண்
கழிப்பெயர் களரிற் போகிய மடமான்
விழிக்கண் பேதையொடு இனன்இரிந்து ஓடக்
காமர் நெஞ்சமொடு அகலாத்
10 தேடூஉ நின்ற இரலை ஏறே.

எ-து : வினைமுற்றி மறுத்தராநின்ற தலைவன் கார்கண்டு பாகற்குச் சொல்லியது.

## விழிக்கட்பேதைப் பெருங்கண்ணனார்

ப-ரை : பாக - பாகனே! இலையில் பிடவம் - பழுத்து உதிர்தலானே இலைகள் நீங்கிய பிடாவெல்லாம், ஈர்மலர் அரும்ப - மென்மையான மலர்கள் நிறையும் வண்ணம் அரும்புகள் முகிழ்ப்ப, புதல் இவர் தளவம் - புதல்மேல் படர்ந்து ஏறிய முல்லைக்கொடி, பூங்கொடி அவிழ - பூக்கள் மலரா நிற்ப, பொன் எனக் கொன்றை மலர - கொன்றைகள் எல்லாம் பொன்னைப்போல மலர்தலைச் செய்ய, மணி என - நீலமணி போன்ற, பன்மலர்க்காயா - பலவாகிய மலர்களையுடைய காயாவின், குறுஞ்சினை - சிறியவாகிய கிளைகள், கஞல - விளங்க, காலை - இன்று காலையிலேயே, கார் தொடங்கின்று - மேகம் தான் பெய்யுந் தொழிலைத் தொடங்கி விட்டது; கழிப்பெயர் களவில் - கழிந்து பெயர்கின்ற களர் நிலத்திலே, போகிய - சென்ற, மடமான் - பெண்மான், விழிக்கட் பேதையொடு - மருண்டு விழிக்கின்ற கண்களையுடைய தன் குட்டியோடு, இனன் இரிந்து ஓட - கூட்டத்தினின்று பிரிந்து ஓட, காமர் நெஞ்சமொடு - அதனிடம் கொண்ட ஆசை மிகுதியால், அகலா - வேறெங்கும் செல்லாது, தேடூஉநின்ற - தேடிப் பார்க்கின்ற, இரலை ஏறு - ஆண்மானை, உவக்காண் - அதோ பாராய், வல்விரைந்து செல்க - ஆகையால் நின் தேரை விரைந்து செலுத்துவாயாக.

முடிபு : பாக! கார் தொடங்கின்று; இரலை ஏறு மடமானை தேடூஉ நின்றது, உவக்காண், நின்தேர் செல்க; எனமுடிக்க.

கருத்து : பாகனே! குறித்துச் சென்ற கார்ப் பருவம் வந்துற்றது. விலங்கினங்களும் துணையைத் தேடுகின்றன. தலைவி பருவம் கண்டு வருந்துவள். தேரைச் செலுத்துக.

வி-ரை : ஆண்மான் தன் பெண்மானையும் குட்டியையும் தேடா நின்றது எனவே, யான் என் தலைவியையும் புதல்வனையும் காண விழைகின்றேன் என்பதைக் குறிப்பால் உணர்த்தினான். மான்குட்டியை விழிக்கட்பேதை என்றதனால் இப்பாடலாசிரியர் இந்த அடைமொழி பெற்றார் போலும்.

கைகோள் - கற்பு.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - பாகன் தேர் கடாவல்.

ஒப்புமைப்பகுதி

3-4. கொன்றையும் காயாவும்

"சென்ற நாட்ட கொன்றையும் பசுவீ

.........................

புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை"

(குறுந். 183:1-5) (பொருந. 201) (முல்லை. 93-4)

(ஐங். 412:1, 420:1-2) (பெருங். 1-49, 115-6)


KOVILOOR A. B. LIBRARY, KOVILOOR 44005

## 243. பாலை

### தலைவி கூற்று

தேம்படு சிலம்பில் தெள்அறல் தழீஇய
துறுகல் அயல தூமணல் அடைகரை
அலங்குசினை பொதுளிய நறுவடி மாஅத்துப்
பொதும்புதோறு அல்கும் பூங்கண் இருங்குயில்
5 கவறுபெயர்த்து அன்ன நில்லா வாழ்க்கையிட்டு
அகறல் ஓம்புமின் அறிவுடையீர் எனக்
கையறத் துறப்போர்க் கழறுவ போல
மெய்யுற இருந்து மேவா நுவல
இன்னாது ஆகிய காலைப் பொருள்வயிற்
10 பிரிதல் ஆடவர்க்கு இயல்பெனின்
அரிதுமன்று அம்ம அறத்தினும் பொருளே.

என்-து : பிரிவிடை மெலிந்த தலைவி சொல்லியது.

காமக்கணிப் பசலையார்

ப-ரை : தேம்படு சிலம்பில் - தேன் உண்டாகின்ற மலைப் பக்கத்தில், தெள் அறல் தழீஇய - தெள்ளிய நீர் சூழ்ந்த, துறுகல் அயலது - துறுகல்லின் அருகிலுள்ள, தூமணல் அடைகரை - தூய மணல் அடுத்த கரையின் கண்ணே, அலங்கு சினை - அசைகின்ற கிளைகளிலே, பொதுளிய - தளிர்த்துத்

தழைத்த, நறுவடி மாஅத்து - சிறந்த வடுக்களையுடைய மாமரங்கள் நிறைந்த, பொதும்பு தோறு - சோலைகள் தோறும், அல்கும் - தங்கி வாழும், பூங்கண் - அழகிய கண்களைக்கொண்ட, இருங்குயில் - கரிய குயில்கள் எல்லாம், கவறு பெயர்த்து அன்ன - (ஆடுவார் கருத்திற்கு மாறாக) சூதாடு கருவி பெயர்ந்து விழுமாறு போன்ற, நில்லா வாழ்க்கை விட்டு - நிலையற்ற பொருளைத் தேடும் முயற்சியைக் கைவிட்டு, அறிவுடையீர் - அறிவு சான்ற மக்காள், அகறல் ஓம்புமின் - நும் தலைவியரை விட்டுப் பிரியாது ஒன்று கலந்து வாழ்வீர், என - என்று, கையறத் துறப்போர்க் கழறுவபோல - செயலறும்படித் தலைவியரை விட்டுப் பிரிந்து செல்வோரை இடித்து உரைப்பனபோல, மெய்யொடு இருந்து மேவா - தாம் ஆணும் பெண்ணும் மெய்யோடு மெய் பொருந்தச் சேர இருந்து, நுவல - கூவ, இன்னாது ஆகிய காலை - பிரிவு என்னும்போதே துன்பத்தைத் தருகின்ற இளவேனிற் காலத்து, பொருள் வயிற் பிரிதல்-பொருள் ஈட்டும் பொருட்டுப் பிரிந்து செல்வது, ஆடவர்க்கு - தலை மக்கட்கு, இயல்பெனில் - இயல்பாகும் என்றால், அறத்தினும் - மேலான அறத்தைக் காட்டிலும், பொருள் - பொருள் ஈட்டுதல், அரிதுமன் - தெளிவாக அரியது போலும். அம்ம - என்ன ஆச்சரியம்?

முடிபு : குயில் கழறுவபோல நுவல பொருள் வயின் ஆடவர் பிரிதல் அறத்தினும் பொருள் அரிதுமன் என முடிக்க.

கருத்து : பொருள் வயிற் பிரியக் கருதிய தலைவனை நோக்கி, 'அறத்தினும் பொருள் அரியது போலும்' என்று கூறிப் பிரிவாற்றாமையைப் புலப்படுத்தினாள்.

அ-ள் : பொதும்பு - சோலை. அல்குதல் - தங்குதல்.

வி-ரை : குயில் கூவும் ஓசை பிரிந்தார்க்குத் துன்பம் தருதலால் அவை இவ்வாறு கூவுகின்றன என்ற நயம் காண்க. "ஊடினீர் எல்லாம் உருவிலாளன் தன் ஆணை, கூடுமின் என்று குயில் சாற்ற" என்றார் இளங்கோவும். தன்னை நம்பினாரைக் கைவிடுதல் அறனன்று. மாறாகக் கைவிட்டுப் பொருள் வயிற் பிரியின் அறம் துணை நில்லாது என்றபடி.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

3. நறுவடிமா

*"நறுவடிமாஅத்து விளைந்து உகுதீம் பழம்"* (ஐங். 61:1)

*"நறுவடிப், பைங்கால் மாஅத்து அந்தளிர் அன்ன"*
(குறுந். 331:5-6, ஐங். 213:1)

4-10. பறவைகள் புணர்ந்து அகவுங்காலத்தில் தலைவர் பிரிதல்.

*"நோன் சினை இருந்த இருந்தோட்டுப் புள்ளினம்*
*தாம் புணர்ந்தமையிற் பிரிந்தோர் உள்ளா"*
(குறுந் 191:2-3)

*"விரிகாஞ்சித் தாதாடி இருங்குயில் விளிப்பவும்*
*பிரிவஞ்சாதவர் தீமை"* (கலி. 34:8-9)

# 244. குறிஞ்சி

## தலைவி கூற்று

விழுந்த மாரிப் பெருந்தண் சாரல்
கூதிர்க் கூதளத்து அலரி நாறும்
மாதர் வண்டின் நயவரும் தீங்குரல்
மணநாறு சிலம்பின் அசுணம் ஓர்க்கும்
5 உயர்மலை நாடற்கு உரைத்தல் ஒன்றோ
துயர்மருங்கு அறியா அன்னைக்கு இந்நோய்
தணியுமாறு இதுவென உரைத்தல் ஒன்றோ
செய்யாய் ஆதலின் கொடியை தோழி
மணிகெழு நெடுவரை அணிபெற நிவந்த
10 செயலை அந்தளிர் அன்ன என்
மதனில் மாமெய்ப் பசலையும் கண்டே.

எ-து: அறத்தொடு நிலைவலித்த தோழியைத் தலைவி முகம்புக்கது.

கூற்றங் குமரனார்

ப-ரை: தோழி - தோழியே!, மணி கெழு நெடுவரை - நீலமணி போன்ற நிறம்கொண்ட நெடிய மலையில், அணி பெற - அழகு பொருந்த, நிவந்த - உயர்ந்த, செயலை அம் தளிர் அன்ன - அசோகினது தளிரை ஒத்த, என் - என்னுடைய, மதனில் - வலிமையற்ற, மா - சிறந்த, மெய் - உடலின், அழகு குறையுமாறு

செய்த, பசலையும் - பசலை நிறத்தையும், கண்டு - நீ கண்டிருந்தும், மாரி விழுந்த - மழை பெய்த, பெருந்தண் சாரல் - பெரிய குளிர்ந்த சாரலின் கண்ணே, கூதிர் - கூதிர்க் காலத்து, கூதளத்து அலரி நாறும் - கூதாளி மலரின் நறுமணம் வீசுகின்ற, மாதர் வண்டின் - அழகிய வண்டுகளின், நயவரும் தீங்குரல் - விருப்பந்தரும் இனிய ஓசையை, மணம் நாறு சிலம்பின் - நல்ல வாசனை வீசும் மலைக் குகையில் இருக்கின்ற, அசுணம் - அசுணமாகிய விலங்கு, ஓர்க்கும் - யாழிசை போலும் என்று கருதிச் செவிமடுக்கும், உயர்மலை நாடற்கு - உயர்ந்த மலைநாடனுக்கு, உரைத்தல் ஒன்றோ - என் துன்ப மிகுதியைச் சொன்னாய் இல்லை; (அல்லது), துயர் மருங்கு அறியா அன்னைக்கு - என் துன்ப மிகுதியை அறியாத அன்னையிடம் சென்று, இந் நோய் - இத்துன்பம், தணியுமாறு இதுவென - நீங்குதற்குரிய வழி இஃது என, உரைத்தல் ஒன்றோ - சொன்னாயும் இல்லை; செய்யாய் ஆதலின் - எதுவும் செய்யாது என்னைத் துன்பத்தில் ஆழ்த்துவதால், கொடியை - நீ மிகவும் கொடியை.

முடிபு : 'தோழி! நாடற்கு உரைத்தல் ஒன்றோ, அன்னைக்கு உரைத்தல் ஒன்றோ பசலையும் கண்டு உரையாய்; கொடியை' என முடிக்க.

கருத்து ; தன் துயரத்தைத் தலைவனுக்காவது தமர்க்காவது தோழி உரைத்திட வேண்டினாள். அதனாற் பயன் அவளை அறத்தொடு நிற்க, களவு வெளிப்பட்டு விரைவில் முடிதலாம்.

உள்ளுறை : கூதள மலரில் வீழ்தலால் மணம் நாறுகின்ற வண்டு பாடும் ஓசையை, யாழிசை என்று கருதி அசுணமான் ஆராயும் என்றது, தலைவன் தழுவ அதனால் ஏற்பட்ட வேறுபாட்டைக் கண்டு தாய் அணங்கு தீண்டியது போலும் என்று ஆராயா நிற்கும் என்றதாம்.

மெய்ப்பாடு - வருத்தம் பற்றிய வெகுளி.

பயன் - தோழியைத் தன் முகமாக்குதல்.

அசுணத்தைப் பறவை என்பாரும் உளர்.

ஒப்புமைப்பகுதி

2. கூதளம்

"குறுந்தாட் கூதளி யாடிய நெடுவரை" (குறுந். 60:1)

"கூதாளி என்பதே புணர்ச்சிகண் அம்முப் பெற்றும் குறுகியும் வரும்" என்பர் நச்சினார்க்கினியர். (தொல்: உயிர்மயங்கு நூ:44)

இதன் மலர் வெண்ணிறமுடையது. (முருகு. 192)

# 245. நெய்தல்

## தோழி கூற்று

நகையா கின்றே தோழி தகைய
அணிமலர் முண்டகத்து ஆய்பூங் கோதை
மணிமருள் ஐம்பால் வண்டுபடத் ததைஇத்
துணிநீர்ப் பௌவம் துணையோடு ஆடி
5 ஒழுகுநுண் நுசுப்பின் அகன்ற அல்குல்
தெளிதீம் கிளவி யாரையோ என்
அரிதுபுணர் இன்உயிர் வௌவிய நீஎனப்
பூண்மலி நெடுந்தேர்ப் புரவி தாங்கித்
தான்நம் அணங்குதல் அறியான் நம்மின்
10 தான்அணங்கு உற்றமை கூறிக் கானல்
சுரும்புஇமிர் சுடர்நுதல் நோக்கிப்
பெருங்கடற் சேர்ப்பன் தொழுது நின்றதுவே.

எ-து : குறைநேர்ந்த தோழி தலைவியை முகம்புக்கது.

### அல்லங்கீரனார்

ப-ரை : தோழி - தோழீ! தகைய - தகுதி வாய்ந்த, அணி மலர் - அழகிய மலர்கள் நிறைந்த, முண்டகத்து - கழி முள்ளி யின், ஆய்பூங்கோதை - சிறந்த பூ மாலையை, மணிமருள் ஐம்பால் - நீல மணியைப் போன்ற, ஐம்பால் - கரிய ஐந்து வகை யாகப் பகுக்கப்படும் கூந்தலில், வண்டு படத்தை இ - வண்டுகள் மொய்க்கும் வண்ணம் சூடி, துணி நீர்ப்பௌவம் - தெளிந்த நீரையுடைய கடலிலே, துணையொடு ஆடி - தோழிமார்களுடன் சென்று நீராடி, ஒழுகு நுண் நுசுப்பின் - நேர்மை வாய்ந்த நுண்ணிய இடையையும், அகன்ற அல்குல் - அகன்ற அல்குலையும், தெளி தீம்கிளவி - தெளிந்த இனிய சொற்களையும் உடையை யாய், (என்) அரிது புணர் இன்உயிர் - பெறற்கு அரியதாகிய என்னுடன் கலந்த என் இனிய உயிரை, வௌவிய - அபகரித்துக் கொண்ட, நீ - நீதான், யாரையோ என - யார்தான்? எனக்கு விளங்கச் சொல்வாய் என்று, பூண்மலி நெடும் தேர் - ஒப்பனை செய்யப் பெற்ற பூண்கள் அணிந்த நெடிய தேரிலே பூட்டிய, புரவி தாங்கி - குதிரையொடு வந்து, தான் - அத்தலைவன தான், நம் அணங்குதல் - நம்மைத் துன்புறுத்துதலை, அறியான் - உணராத வனாய், நம்மில் - நம்மால், தான் அணங்கு உற்றமை கூறி - தான்

துன்புறுவதை மட்டும் எடுத்துக் கூறி, கானல் - கடற்கரைச் சோலையின் கண்ணே, சுரும்பு இமிர் சுடர் நுதல் நோக்கி - வண்டுகள் சூழ்ந்து நின்று ஒலிக்கின்ற ஒளியை உடைய நமது நெற்றியைப் பார்த்து, பெருங்கடற் சேர்ப்பன் - பெரிய கடலுக்குரியவனாகிய தலைவன், தொழுது - வணங்கி, நின்றது - நின்றதைக் கருதுந்தோறும், நகை ஆகின்று - நமக்குப் பெரிய நகைப்பை உண்டாக்குகின்றது காண்.

முடிவு : சேர்ப்பன் சுடர் நுதல் நோக்கித் தொழுது நின்றது நகையாகின்றது, தோழி என முடிக்க.

கருத்து : தலைவன் குறையைத் தலைவி ஏற்கும் வண்ணம் சாதுர்யமாகத் தோழி தலைவியிடம் அவன் குறைவேண்டிப் பணிந்து நிற்றலை எடுத்துக் கூறினாள்.

அ-ள் : முண்டகம் - கழிமுள்ளி. துணி - தெளிவு. ஒழுகல் - நேர்மை.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய பேதைமை பொருளாகத் தோன்றிய நகை.

பயன் - தலைவியின் கருத்தறிதல்.

ஒப்புமைப்பகுதி

2-3. முண்டகக் கோதை

"முண்டகக் கோதை நனைய" (ஐங். 121)

"முண்டகக் கோதை ஒண்டொடி மகளிர்" (புறநா. 24:11)

11. ஒண்ணுதல்

"தேமுரொண்ணுதல் நின்னொடுஞ் செலவே" (குறுந். 22:5)

"நுதலும் நுண்வியற் பொறித்து வண்டார்க்கும்மே," (சிற்றட்டகம்)

# 246. பாலை

## தோழி கூற்று

இடூஉ ஊங்கண் இனிய படூஉம்
நெடுஞ்சுவர்ப் பல்லியும் பாங்கில் தேற்றும்
மனைமா நொச்சி மீமிசை மாச்சினை
வினைமாண் இருங்குயில் பயிற்றலும் பயிற்றும்
5 உரம்புரி உள்ளமொடு சுரம்பல நீந்திச்

செய்பொருட்கு அகன்றனர் ஆயினும் பொய்யலர்
வருவர் வாழி தோழி புறவின்
பொன்வீக் கொன்றையொடு பிடவுத்தளை அவிழ
இன்இசை வானம் இரங்கும் அவர்
10 வருதும் என்ற பருவமோ இதுவே.

எ-து : பிரிவிடை மெலிந்த தலைவியைத் தோழி வற்புறீ இயது.

காப்பியஞ் சேந்தனார்

ப-ரை : தோழி - தோழி! வாழி - நீ வாழ்க; இடூஉ - நாம் நினைத்த வண்ணம், ஊங்கண் - உவ்விடத்து, இனிய - நல்ல சகுனங்கள், படூஉம் - தெரிகின்றன; மேலும், நெடும் சுவர் - உயரமான சுவரின் கண்ணுள்ள, பல்லியும் - பல்லியும், பாங்கில் - நம்பக்கமாக இருந்து, தேற்றும் - நம்மைத் தெளியச் செய்யும், மனை - மனையைச் சார்ந்து உள்ள, மா - பெரிய, நொச்சி - நொச்சி வேலியில், மீமிசை - உயர்ந்து உள்ள, மாச்சினை - மாமரத்தின் கிளையிலிருந்து, வினை மாண் - கூவும் தொழிலில் மாட்சிமைமிக்க, இரும்குயில் - கரிய குயில், பயிற்றலும் பயிற்றும் - இனிமையுண்டாகக் கூவுதலையும் செய்யும்; உரம்புரி உள்ளமொடு - வலிமை வாய்ந்த உள்ளத்துடன், சுரம் பல நீந்தி - பலவாகிய சுரத்தைக் கடந்து, செய்பொருட்கு - அறத்தையும் இன்பத்தையும் தரும் பொருட்காக, அகன்றனர் - நம் தலைவர் நம்மை விட்டுப்பிரிந்தனர், ஆயினும் - என்றாலும், பொய்யலர் - கார்காலத்தில் வருவேன் என்றவர் தவறிலர், வருகுவர்; (ஏனெனில்) புறவின் காட்டில், பொன்வீக் கொன்றை யொடு - பொன்போலும் நிறம் கொண்ட கொன்றையுடனே, பிடவுத்தளை அவிழ - பிடாவும் மலரா நிற்ப, இன்னிசை வானம் இரங்கும் - இனிய குரலையுடைய மேகமும் இடிக்கும். (ஆதலால் அவர்) வருதும் என்ற - வருவேம் என்ற, பருவம் - கார்ப்பருவமும் இதுவே - இதுதான் போலும்.

முடிவு : படூஉம், தேற்றும், பயிற்றும், ஆயினும் பொய்யலர்; வருதும் என்ற பருவமும் இதுவே, வருவர் வாழி தோழி என முடிக்க.

கருத்து : தலைவர் குறித்த பருவத்தில் வருவார்; அதற் கேற்பச் சகுனமும் எழுகின்றது. பல்லியும் அடிக்கின்றது. மேகமும் இடிக்கின்றது. காரும் வந்துவிட்டது. சொன்ன வண்ணமே வருவார்; கவலற்க என்று தோழி வலியுறுத்தினாள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

8. கொன்றைப் பூவிற்குப் பொன்

"பொன்செய் புனையிழை கட்டிய மகளிர்
கதுப்பிற் றோன்றும் புதுப்பூங் கொன்றை"
(குறுந். 21:2-3)

"கவலை கெண்டிய அகல்வாய்ச் சிறுகுழி
கொன்றை ஒள்வீ தாஅய்ச் செல்வர்
பொன்பெய் பேழை மூய்திறந்து அன்ன" (குறுந். 233:1-3)
"கனமலர் கொன்றை" (தே-திருஞா) : வாள்கொளிபுத் தூர்
(திருச்சிற் : 108)

# 247. குறிஞ்சி

## தோழி கூற்று

தொன்றுபடு துப்பொடு முரண்மிகச் சினைஇக்
கொன்ற யானைச் செங்கோடு கழாஅ
அழிதுளி பொழிந்த இன்குரல் எழிலி
எஃகுறு பஞ்சிற்று ஆகி வைகறைக்
5 கோடுயர் நெடுவரை ஆடும் நாடநீ
நல்காய் ஆயினும் நயன்இல செய்யினும்
நின்வழிப் படூஉம் என்தோழி நல்நுதல்
இருந்து இறைகூடிய பசலைக்கு
மருந்துபிறிது இன்மை நற்கறிந்தனை சென்மே.

எ-து : நீட்டியாமை வரையெனத் தோழி சொல்லியது.

பரணர்

ப-ரை : தொன்றுபடு துப்பொடு - முதிர்ந்த வலியுடனே, முரண்மிக - மாறுபாடு மிகுதலால், சினைஇ - சினந்து, கொன்ற - புலியைக் கொன்ற, யானை - யானையானது, செங்கோடு - இரத்தம் படிந்த தன் தந்தங்களை, கழாஅ - கழுவும்படி, அழி துளி பொழிந்த - வீழ்கின்ற மழையைப் பெய்த, இன்குரல் எழிலி சிறந்த முழக்கத்தையுடைய மேகம், எஃகுறு பஞ்சிற்று ஆகி-

வில்லால் எறியப்பட்ட பஞ்சுபோல் சிதறி, வைகறை - விடியற் காலையில், கோடுஉயர் - உயர்ந்த சிகரங்களைக் கொண்ட, நெடுவரை - நெடிய மலையின் மேல், ஆடும் - இயங்கும், நாட - நாட்டையுடையவனே! நீ, நல்காய் ஆயினும் - அன்பு காட்டாய் என்றாலும், நயன் இல செய்யினும் - தலைவியின் விருப்பத்திற்கு மாறாயினவற்றைச் செய்தவிடத்தும், என் தோழி - என் அன்பிற் குரிய தலைவி, நின் வழிப்படூஉம் - நீ விரும்பிய வண்ணமே நடக்கும் தன்மையள்; நல்நுதல் இருந்து - அத்தகைய அவளின் சிறந்த நெற்றியிலிருந்து, இறை கூடிய - தங்கி நிலை பெற்று நிற்கும், பசலைக்கு - பசலை நோய்க்கு, மருந்து பிறிது இன்மை - நீயே மருந்தாவது இன்றி வேறொரு மருந்து இல்லாமை, நற்கு அறிந்தனை - நீ நன்கு தெரிந்து கொண்டு, சென்மே - அதன் பின்பு பிரிவாயாக; தெரிந்து கொண்டாற் பிரியாய்.

முடிபு : நாட! நீ ஆயினும், செய்யினும் என் தோழி நின் வழிப்படூஉம். சுடர் நுதல் பசலைக்கு மருந்து பிறிது இன்மை அறிந்தனை சென்மே என்று முடிக்க.

கருத்து : நாட! நீ தந்த நோய்க்கு நீயே மருந்தாவது அறிந்து களவினை நீட்டிக்காது வரைய முயல்க.

அ-ள் : எஃகுதல் - வில்லால் அடித்தல். இறை கூடுதல் - நிலைபெற்று நிற்றல். துப்பு - வலிமை.

வி-ரை : பசலை பாய்தல் என்னும் மெய்ப்பாடு அமைய, நீ வரைந்து பிரியாது உறைந்த வழி அந்நோய் நீங்கும் என்றாள். நின் குறிப்பறிந்து ஒழுகும் தன்மையள் என்பாள் நின் வழிப்படூஉம் என் தோழி என்றாள்.

உள்ளுறை : புலியைக் கொன்ற யானையின் கோடு கழுவும் படி மழை பொழிந்த மேகம் வெளுத்து விடியலில் மலைமேல் சஞ்சரிக்கும் என்றது, பகைமையைக் கொன்ற உன்னுடைய வேட்கை அடங்கும்படி பெரிய இன்பத்தைத் தந்த தலைவி நீ பிரிதலால் விளர்ப்பு அடைவாள் என்பதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

1-2. களிறு புலியைத் தாக்குதல்

"சிறுகட் பெருங்களிறு வயப்புலி தாக்கி" (குறுந். 88:2-3)

"நெடுங்கை வன்மான் கடும்பகை உழந்த
குறுங்கை இரும்புலி" (குறுந். 141:4-5)

"நனைகவுள், அண்ணல் யானை அணிமுகம்
பாய்ந்தென, மிகுவலி இரும்புலிப் பகுவாய் ஏற்றை"
(குறுந். 343:1-3) (மலைபடு. 307:9)

6-7. தலைவன் இன்னாசெயினும் தலைவி அவனை விரும்புதல்
"நின்னூர் நெய்தல் அனையேம் பெரும
..........................
நின்னின்று அமைதல் வல்லா மாறே" (குறுந். 309:6-8)
"இன்னா செய்யினும் இனிதுதலை அளிப்பினும்
நின்வரைப்பினள் என் தோழி" (குறுந். 397:6-7)
"இடர்களையாரேனும் எமக்கு இரங்காரேனும்
அன்பறாது என் நெஞ்சு அவர்க்கு" (அற்புதத்திருவந்தாதி)
"கண்டார் இகழ்வனவே காதலன்தான் செய்திடினும்,
கொண்டானை அல்லால் அறியாக் குலமகள்போல்"
(பெருமாள்திருமொழி)

7-8. நுதல் பசத்தல்
"பசைஇப் பசந்தன்று நுதலே" (குறுந். 87:4, 48:5, 205:7)

9. மருந்து பிறிதில்லை
"மருந்து பிறிதில்லை அவர் மணந்த மார்பே" (குறுந். 68:4)

# 248. முல்லை

## தோழி கூற்று

சிறுவீ முல்லைத் தேங்கமழ் பசுவீ
பொறிவரி நல்மான் புகர்முகம் கடுப்பத்
தண்புதல் அணிபெற மலர வண்பெயல்
கார்வரு பருவம் என்றனர் மன்இனிப்
5 பேரஞர் உள்ளம் நடுங்கல் காணியர்
அன்பு இன்மையிற் பண்பில பயிற்றும்
பொய்இடி அதிர்குரல் வாய்செத்து ஆலும்
இனமயில் மடக்கணம் போல
நினைமருள் வேனோ வாழியர் மழையே.

எ-து : பருவங்கண்டு ஆற்றாளாய தலைவியைத் தோழி மழைமேல் வைத்துப் பருவம் மறுத்தது.

காசிபன் கீரனார்

ப-ரை : மழையே - மேகமே! (தலைவர், பிரிகின்ற அமயம், என்று திரும்புவீர்? என்று யாம் கேட்டதற்கு விடையாக) சிறுவீ

முல்லை - சிறிய சிறிய பூக்களை உடைய முல்லையின், தேம் கமழ் - தேன்மணம் வீசுகின்ற, பசுவீ - பசிய மலர்கள் எல்லாம், பொறி வரி நல்மான் - நல்ல யானையின் புள்ளிகளையும் வரிகளையும் உடைய, புகர் முகம் கடுப்ப - புகர் பொருந்திய முகம் போல, தண் புதல் - தண்ணிய புதர்களில் எங்கும், அணிபெற - அழகு பொருந்தும்படி, மலர - மலரா நிற்ப, வண்பெயல் - மிக்க மழை பெய்தலையுடைய, கார்வரு பருவம் - கார்காலம் அன்றோ யாம் வரும் பருவம், என்றனர்மன் - என்று கூறிச் சென்றனர்; இனி - இப்பொழுது நீ, அன்பு இன்மையின் - இத் தலைவியின் பால் அன்பில்லாமையால், பேர் அஞர் உள்ளம் - தலைவரின் பிரிவினால் உண்டாகிய பெரிய துன்பம் பொருந்திய உள்ளம், நடுங்கல் காணிய - நடுங்குவதைக்காண விரும்பி, பண்பு இல - இயல்பு இல்லாதனவற்றை, பயிற்றும் - மேற்கொள்ளுகின்ற, பொய் இடி - பொய்யாக இடிக்கின்ற, அதிர்குரல் - அதிர்ச்சியைத் தரும் நின் முழக்கத்தை, வாய் செத்து - உண்மையான கார்ப்பருவம் என்று கருதி, ஆலும் - ஆரவாரிக்கின்ற, இனமயில் மடக்கணம்போல - மயில் இனமாகிய அறிவில்லாத அக் கூட்டம்போல, நினை - நின்னைக் கண்டவுடன் அவர் இப்பொழுது வருகுவர் என்று மயங்குவேனோ? அவ்வாறு மயங்கேன். இயல்பாகிய கார்ப்பருவத்தில்தான் வருவார். வீணாக முழங்கேல்! வாழியர் - நீ நீடுழி வாழ்வாயாக.

முடிபு : மழையே! கார்வரு பருவம் வருவேம் என்றனர், இனமயில் மடக்கணம்போல நினை மருள்வேனோ? எனமுடிக்க.

கருத்து : தலைவன் குறித்தவாறே கார்ப்பருவத்தில் வருவது திண்ணம். இம் மழை பொய்ம்மழை, தலைவன் சொல் தவறான். வாழியர் - இகழ்ச்சிக் குறிப்பு. கார்ப்பருவம் வந்தும் தலைவன் வாராமையால் வருந்திய தலைவி தேறும் பொருட்டு மழையைப் பொய்ம்மழை என்று தோழி கூறினாள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

1. சிறுவீ முல்லை

"சிறுவீ முல்லைக் கொம்பிற் றாஅய்" (குறுந். 348:3)
(சிறுபாண். 89)

7-9 மயில் வம்ப மழையைக் கண்டு ஆலுதல்

"மடவ வாழி மஞ்ஞை மாயினம்
காலமாரி பெய்தென அதனெதிர் ஆலலும் ஆலின"
(குறுந். 251:1-3)

# 249. நெய்தல்

## தலைவி கூற்று

இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை
நீலத்து அன்ன பாசிலை அகந்தொறும்
வெள்ளி அன்ன விளங்குஇணர் நாப்பண்
பொன்னின் அன்ன நறுந்தாது உதிரப்
5 புலிப்பொறிக் கொண்டபூநாறு குருஉச்சுவல்
வரிவண்டு ஊதலிற் புலிசெத்து வெரீஇப்
பரியுடை வயங்குதாள் பந்தின் தாவத்
தாங்கவும் தகைவரை நில்லா ஆங்கண்
மல்லல்அம் சேரி கல்லெனத் தோன்றி
10 அம்பல் மூதூர் அலர்எழ
சென்றது அன்றோ கொண்கன் தேரே.

எ-து : வரைவிடை மெலிந்தது.

உலோச்சனார்

ப-ரை : இரும்பின் அன்ன - இரும்பினை ஒத்த, கரும் கோட்டுப் புன்னை - கரிய கிளைகளை உடைய புன்னை, நீலத்து அன்ன - நீலமணி போன்ற, பாசு இலை அகம் தொறும் - பசிய இலையிடம் எங்கும், வெள்ளி அன்ன - வெள்ளியைப் போன்ற, விளங்கு இணர் நாப்பண் - விளங்கிய பூங்கொத்துக்களின் இடையே உள்ள, பொன்னின் அன்ன - பொன்னைப் போன்ற, நறும்தாது உதிர - நறுமணம் வீசும் மகரந்தப் பொடிகள் உதிர, புலிப்பொறிக் கொண்ட - புலியினது புள்ளிகள்போல் தம்பாற் புள்ளிகளைக் கொண்ட, பூ நாறு - அழகு விளங்கிய, குருஉ - நல்ல நிறம் உற்ற, சுவல் - மேற்புறத்தை உடைய, வரி வண்டு - வரி அமைந்த வண்டுகள், ஊதலில் - ஊதுதலால், புலி செத்து - இது புலியோசையோ என்று ஐயுற்று, வெரீஇ - அச்சம்கொண்டு, பரியுடை - சிறந்த நடையினை உடைய, வயங்கு - விளங்கிய; தாள் - குதிரையின் கால்கள், பந்தில் - பந்தைப் போல, தாவ - குதித்து ஓட, மல்லல் அம் சேரி - வளப்பம் மிக்க நம்முடைய சேரியின்கண், கல் என - 'கல்' என்னும் ஆரவாரத்தோடு, தோன்றி - வெளிப்பட்டு, அம்பல் மூதூர்-சிறியபழிச்சொல்லைக் கூறும் பழைய ஊர் எங்கும், அலர் எழ - பெரிதாகிய பழி தூற்றுதலாலே, கொண்கன் தேர் - நம் தலைவனுடைய தேரானது, ஆங்கண் - அவ்விடத்து, தாங்கவும் - தடுக்கவும்.

தகைவரை நில்லாச் சென்றது - தடையையும் மீறிச் சென்று விட்டது அன்றோ? அத் தேரைச் செலுத்திக்கொண்டு மீண்டும் தலைவன் வருவானோ? வரைவானோ?

முடிபு : கொண்கன் தேர் அலர் எழ பரியுடை வயங்குதாள் பந்தில் தாவச் சென்றது என்று முடிக்க.

கருத்து : அலர் எழ, நாம் தடுக்கவும் நில்லாது சென்ற தலைவன் தேர் மீண்டு வந்தால் நான் உய்குவேன்.

கைகோள் - களவு. கேட்போர் யாருமில்லை; எனவே தானே கூறி ஆறினாள்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

1. சருங்கோட்டுப் புன்னை
"கருங்கோட்டுப் புன்னைப் பூம்பொழில் புலம்ப"
(குறுந். 123:3) (ஐங். 161:2), (பெருங். 1. 40:68)

# 250. மருதம்

## தலைவன் கூற்று

நகுகம் வாராய் பாண பகுவாய்
அரிபெய் கிண்கிணி ஆர்ப்பத் தெருவில்
தேர்நடை பயிற்றும் தேமொழிப் புதல்வன்
பூநாறு செவ்வாய் சிதைத்த சாந்தமொடு
5 காமர் நெஞ்சம் துரப்ப யாம்தன்
முயங்கல் விருப்பொடு குறுகினேம் ஆகப்
பிறைவனப்பு உற்ற மாசறு திருநுதல்
நாறுஇரும் கதுப்பின்எம் காதலி வேறுஉணர்ந்து
வெரூஉமான் பிணையின் ஒரீஇ
10 யாரை யோவென்று இகந்துநின் றதுவே.

எ-து : புதல்வனொடு புக்க தலைவன் ஆற்றானாய்ப் பாணற்கு உரைத்தது.

## மதுரை, ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார்

ப-ரை : பாண - பாணனே!, வாராய் - எம் பக்கம் நெருங்கி வருவாய், பகுவாய் - பிளந்த வாய் வழியாலே, அரிபெய் கிண்கிணி - உள்ளே பரல் இடப்பட்ட கிண்கிணி, ஆர்ப்ப - ஆரவாரிக்க, தெருவில் - தெருவின் கண்ணே, தேர் நடை பயிற்றும் - முக்காற் சிறு தேரைப் பிடித்து நடை பழகும், தேமொழிப் புதல்வன் - இனிய மழலை பேசுகின்ற புதல்வனை, எம் மார்புடன் அணைத்தலும், பூ நாறு செவ்வாய் - அவனது செவ் ஆம்பல் மலர் போலும் சிவந்த வாய் நீர் ஒழுகுதலால், சிதைத்த சாந்தமொடு - சிதைந்த சந்தனக் குழம்போடு, காமர் நெஞ்சம் - ஆசைகொண்ட எம் உள்ளம், எம்மைத் துரப்ப - செலுத்த, யாம் - நாம், தன் முயங்கல் விருப்பொடு - எம் காதலியைத் தழுவவேண்டி ஆசையுடன், குறுகினேம் ஆக - அவள் அருகில் நெருங்கினேமாக, பிறை வனப்பு உற்ற - இளம் பிறையைப் போன்ற அழகு பொருந்திய, மாசு அறு - குற்றம் இல்லாத, திருநுதல் - சிறந்த நெற்றியையும், நாறு இரும் கதுப்பின் - நறுமணம் வீசும் கரிய கூந்தலையும் உடைய, எம் காதலி - எம் மாற் காதலிக்கப்பட்ட தலைவி, வேறு உணர்ந்து - தன் உள்ளத்து வேறுபாடாகக் கருதி, வெரூஉ மான் பிணையின் - வெருண்டு மிரளும் பெண் மானைப் போல, ஒரீஇ - எம்மை நீங்கி, யாரையோ என்று - என் பக்கம் வருதற்கு நீ யார்தான் என்று புலந்து, இகந்து நின்றது - அப்பால் நீங்கி நின்ற செயலை நினைக்கும்பொழுது எல்லாம் நகுகம் - நகைப்புத் தோன்றுதலால் நாம் இருவரும் நகைப்போம். வருக.

முடிபு : பாண! முயங்கல் விருப்பொடு குறுகினேம் ஆக, யாரையோ என்று இகந்து நின்றது நினைந்து நகுகம் வாராய் என முடிக்க.

கருத்து : புதல்வனோடு புக்க தலைமகன் தலைவியின் ஊடல் தணியாமை கண்டு பாணனுடன் நகையாடி அவளூடல் நீங்குமாறு செய்தது.

வி-ரை : தலைவியின் கூந்தலையும் நெற்றியையும் தை வந்தவன் ஆதலால் அவற்றைச் சிறப்பித்தான். நெஞ்சம் துரப்ப என்றான் தலைவி மாட்டுத்தான் பேரன்பு கொண்டமை தோன்ற.

மெய்ப்பாடு - பிறர் எள்ளல் பொருளாகப் பிறந்த நகை.

பயன் - ஊடல் தணிவித்தல்.

**ஒப்புமைப்பகுதி**

7. நுதலுக்குப் பிறை

"பிறையென, மதிமயக்குறூஉ நுதலும்" (குறுந். 226:2-3)

"மாக்கடல் நடுவண் எண்ணாட் பக்கத்துப்
பசுவெண் திங்கள் தோன்றி யாங்குக்
கதுப்பு அயல் விளங்கும் சிறுநுதல்" (குறுந். 129:3-5)

(பெருங் 1, 36:265, 4:11-68, 5, 6-11) (சீவக. 165)

8. கூந்தலின் இயற்கை மணம்

"செறியெயிற்று அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீ அறியும் பூவே" (குறுந். 2:4-5)

கூந்தல்........நறுந் தண்ணியவே" (குறுந். 116:1-4)

"கைவள் ஓரி கானந் தீண்டி
எறிவளிகமழும் நெறிபடு கூந்தல்" (குறுந். 199;3-4)

"நறுமென் கூந்தல்" (குறுந். 270:8)

"நாறிருங் கூந்தல்" (குறுந். 272:8) (புறநா. 113:9)

"நறும் கதுப்பு" (குறுந். 312:6)

"மணநாறு கதுப்பினாய்" (கலி. 43:23)

# 251. குறிஞ்சி

## தோழி கூற்று

நெடுநீர் அருவிய கடும்பாட்டு ஆங்கண்
பிணிமுதல் அரைய பெருங்கல் வாழைக்
கொழுமுதல் ஆய்கனி மந்தி கவரும்
நன்மலை நாடனை நயவா யாம்அவன்
5 அளிபேர் அன்பின் நின்குரல் ஒப்பி
நிற்புறம் காத்தலும் காண்போய் நீஎன்
தளிர்ஏர் மேனித் தொல்கவின் அழியப்
பலிபெறு கடவுட் பேணிக் கலிசிறந்து
தொடங்கு நிலைப்பறவை உடங்குகுரல் கவரும்
10 தோடுஇடம் கோடாய் கிளர்ந்து
நீடினை விளைமோ வாழிய தினையே,

எ-து சிறைப்புறமாகச் செறிப்பறிவுறீ இயது.

## மதுரைப் பெருமருதிள நாகனார்

ப-ரை: தினையே - தினைப்பயிரே! ஒன்றுகூறுவேன் கேள்! நெடுநீர் அருவிய - நெடிதாம் நீர்மையுடைய அருவியினது, கடும் பாட்டு ஆங்கண் - மிக்க ஓசையை உடைய அவ்விடத்து, பிணி முதல் அரைய - பிணிப்புண்ட அடியை உடைய, பெருங்கல் வாழை - பெரிய மலையிடத்து நன்கு வளர்ந்த மலைவாழையின், கொழுமுதல் ஆய்கனி - கொழுத்த முற்றிய அழகிய பழத்தை, மந்தி கவரும் - மந்திகள் கவர்ந்து உண்ணும், நல்மலை நாடனை - சிறந்த மலைக்குரிமை பூண்ட தலைவனை, நயவா - காதலித்து, யாம் - நாம், அவன் அளிபேர் அன்பின் - அவனுடைய கருணைமிக்க அன்பினால், நின்குரல் ஓப்பி - உன்னுடைய கதிர் களைக் கிளிகள் கொய்யாதபடி அவற்றை ஓட்டி, நின்புறம் காத்தலும் - நின்னைப் பாதுகாத்திருப்பதையும், நீ காண்போய் - நீ கண்டிருக்கின்றனை அன்றோ? என் தளிர் ஏர்மேனி - தளிர் போன்ற என் உடம்பிலுள்ள, தொலி கவின் அழிய - பழைய அழகு கெடும்படி, பலிபெறு கடவுட்பேணி - ஆடு முதலிய பலி களைப் பெறுகின்ற முருகவேளை வழிபட்டு, வெறியாட்டு அயருங்கால் இற்செறிப்பு ஏற்பட்டு நான் நின்னைக் காத்தலைச் செய்யேன்; எனவே நீ, கலிசிறந்து - நன்குசெழித்து வளர்ந்து, தொடங்கு நிலைப்பறவை - வரிசை வரிசையாய்ப் பறந்து வரும் கிள்ளை முதலாய பறவைகள், உடங்கு - ஒன்று சேர, கவரும் - கொய்து செல்வதற்கு இடம் கொடாய்; தோடு இடம் கோடாய் - நின் கதிர்த் தொகுதியோடு தலை சாயாது, கிளர்ந்து - நிமிர்ந்து நின்று, நீடினை - நெடு நாட்கள் கழித்து விளைமோ - கதிர் ஈன்று முற்றி விளைவாயாக; வாழிய - நெடுங்காலம் வாழ்வாயாக;

முடிபு : தினையே! நிற்புறம் காத்தலும் காண்பாய்; தோடு இடம்கொடாய்; நீடினைவிளைமோ, வாழிய எனமுடிக்க.

கருத்து : தினைமுற்றியமையால் எமர் அறுவடை செய்வர்; இனி இவ்வொழுக்கம் நீட்டிக்க வழிஇல்லை. எனவே விரைக, வரைக என்றாள்.

வி-ரை : களவொழுக்கம் நீட்டிக்கத் துணையாய் நிற்ற லானும் பகற்குறிக்கு இடம் தருதலானும் தினையை வாழிய என்றாள் வெறியாடலில் அறத்தொடு நிற்க நேரும். அது காரண மாக வரைவு நேரும் என்பது காண்க.

உள்ளுறை : அருவி ஒலிக்கின்ற இடத்துத் தோன்றிய வாழையின் கனியை மந்தி கவரும் என்றது, தமரெல்லாம் கூடி மகிழ்கின்ற இடத்து வரைவொடு புகுந்து தலைவன் தலைவியை உவகையுடன் துய்ப்பான் என்றதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்

பயன் - வரைவு கடாதல்

ஒப்புமைப்பகுதி

7. தளிரன்னோள்

"கோலமை குறுந்தொடித் தளிர அன்னோளே"
(குறுந். 356:8) (ஐங் 38:3, 176. 4, 365:5)
(நெடுநல். 148) (கலி. 13:19)

"கொய்தளிர் மேனி கூறுமதி தவறோ" (ஐங். 176)

# 252. பாலை

## தோழி கூற்று

உலவை ஓமை ஒல்குநிலை ஒடுங்கிச்
சில்வீடு கறங்கும் சேய்நாட்டு அத்தம்
திறம்புரி கொள்கையொடு இறந்துசெயின் அல்லது
அரும்பொருட் கூட்டம் இருந்தோர்க்கு இல்என
5 வலியா நெஞ்சம் வலிப்பச் சூழ்ந்த
வினைஇடை விலங்கல போலும் புனைசுவர்ப்
பாவை அன்ன பழிதீர் காட்சி
ஐதுஏய்ந்து அகன்ற அல்குல் மைகூர்ந்து
மலர்பிணைத்து அன்ன மாயிதழ் மழைக்கண்
10 முயல்வேட்டு எழுந்த முடுகுவிசைக் கதநாய்
நல்நாப் புரையும் சீறடிப்
பொம்மல் ஓதிப் புனைஇழை குணனே.

எ-து : 'பொருள் வயிற் பிரியும்' எனக் கவன்ற தலைவிக்குத் தோழி சொல்லியது.

## அம்மெய்யன் நாகனார்

பட்டரை புனை சுவர்ப்பாவை அன்ன - சுவரில் தீட்டப்பட்ட அழகிய பாவையைப் போன்ற, பழிதீர் - குற்றங்கள் நீங்கிய, காட்சி - தோற்றத்தையும், ஐது ஏய்ந்து அகன்ற அல்குல் - மென்மையாகப் பொருந்திய விசாலமான அல்குலையும், மை கூர்ந்து - மைதீட்டப்பட்டு, மலர்பிணைத்து அன்ன - நீலமலர் களை எதிரிட்டு வைத்தாற் போன்ற, மா இதழ் மழைக்கண் - கரிய இமைகளை உடைய குளிர்ச்சியுற்ற கண்களையும், முயல் - முயலினை, வேட்டு எழுந்த - வேட்டையாட விரும்பி எழுந்த, முடுகுவிசைக் கதநாய் - விரைந்த ஓட்டமும் கோபமும் உடைய நாயினது, நல் நாபுரையும் - நல்லநாவினை ஒத்த, சீறடி - சிறிய அடிகளையும், பொம்மல் ஓதி - அடர்த்தியான கூந்தலையும், புனை இழை - அணிந்த அணிகலன்களையும் உடைய, குணன் - இத்தலைவியின் அரிய குணங்கள், உலவை - கொம்புகளையுடைய, ஓமை - ஓமை மரத்தின், ஒல்கு நிலை ஒடுங்கி - பட்டுப்போன கிளைகளுள் மறைந்து தங்கி, சிள்வீடு - வண்டுகள், கறங்கும் - ஒலிக்கும், சேய்நாட்டு அத்தம் - வேற்று நாட்டின் கண்ணே செல்கின்ற வழியில், திறம்புரி கொள்கையொடு - உறுதியும் முயற்சியும் பொருந்திய குறிக்கோளோடு, இறந்து - சென்று, செயின் அல்லது - பாடுபட்டாலன்றி, அரும் பொருட்கூட்டம் - பெறுதற்கு அரிய பொருளை ஈட்டுதல் என்பது, இருந்தோர்க்கு - வீட்டில் சோம்பியிருப்பவர்க்கு, இல் என - ஒருபொழுதும் சேர்த்தல் இயலாதென, வலியாநெஞ்சம் - இதுவரையிலும் உடன்பட்டு எழுதலைச் செய்யாத உள்ளம், வலிப்ப - ஒருபட்டு எழ, சூழ்ந்த - பொருளீட்ட முற்பட்டு வினைஇடை - அதற்கான முயற்சிகளில் நாட்டம் கொண்ட தலைவர் செலவில், விலங்கல போலு - குறுக்கிட்டுத் தடுக்கவில்லை போலும்; ஆகையால் பொறுத்திருக்க வேண்டியதைத் தவிர, வேறு செயத்தக்கது ஒன்றும் இல்லை.

முடிபு : புனையிழை குணன் வினையிடை விலங்கல போலும் என முடிக்க.

கருத்து : பொருள் வயிற் பிரிந்த தலைவரின் போக்கை நம் தலைவியின் குணங்களே தடுக்கும். இல்லாவிடில் அவர் பிரிவினைப் பொறுத்தல் இயலாது.

அ-ள். உலகை - கொம்பு. சிள்வீடு - வண்டு. ஐது - மென்மை. பொம்மல் - அடர்த்தி. கதம் - கோபம். சிள்வீடு ஓமை மரத்தின் பட்டகிளையில் ஒடுங்கி ஒலிக்கும் என்றது, இவள் கொண்ட

காமமானது கற்பின் வலிமையால் வெளிப்படத் தோன்றாது உள்ளேயே புழுங்கித் துன்பம் தரும் என்றதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

கைகோள் - கற்பு

ஒப்புமைப்பகுதி

12. பொம்மலோதி

"பொம்மல் ஓதியும் புனையல்" (குறுந். 191:6)

"பொம்மல் ஓதி நீவியோனே" (குறுந். 379:6)

(அகநா. 214-9, 221:3, 311:7, 353:23) (பெருங்-1:55-19)

11. நாய்நாவைப் போலும் அடி

"நகையார் கவுள கிண்கிணியும் சிலம்பு நாய் நாச் சீறடி" (சீவக: 2694)

(சிறுபாண் 17-8.) (மலைபடு:42-3), (பொருந: 42) (பெருங். 2, 19:176-85)

# 253. குறிஞ்சி

## தோழி கூற்று

புள்ளுப் பதிசேரினும் புணர்ந்தோர்க் காணினும்
பள்ளி யானையின் வெய்ய உயிரினை
கழிபட வருந்திய எவ்வமொடு பெரிதுஅழிந்து
எனவ கேளாய் நினையினை நீநனி
5 உள்ளினும் பனிக்கும் ஒள்இழைக் குறுமகள்
பேர்இசை உருமொடு மாரி முற்றிய
பல்குடைக் கள்ளின் வண்மகிழ்ப் பாரி
பலவுறு குன்றம் போலப்
பெருங்கவின் எய்திய அருங்காப் பினளே.

எ-து : செறிப்பு அறிவுறீஇ வரைவு கடாயது.

கபிலர்

ப-ரை : ஒள் இழைக் குறுமகள் - சிறந்த அணிகலன் களைத் தரித்த இளமகளாகிய தலைவியே! பேர் இசை உருமொடு- பேர் ஒலி பொருந்திய இடியுடனே, மாரி முற்றிய - மழை

இடைவிடாது சூழ்ந்து பெய்தலை உடைய, பலகுடைக் கள்ளின் - பலவாகிய பனங்குடையில் இட்டு உண்ணும் கள்ளாகிய பேருணவை உடைய, வண்மகிழ்ப் பாரி - இரவலர்க்குக் கொடுத்து மகிழும் பாரியினது, பலவுறுகுன்றம் போல - பலா மரம் நிறைந்த பறம்பு மலை போல, பெரும் கவின் எய்திய - பேரழகு உடைமையாலே, அரும்காப்பினள் - தலைவி இல்வயிற் செறிக்கப்பட்டு அரிய காவலுக்கு உட்பட்டவள் ஆயினாள்; அதனாற் களவொழுக்கத்தை நினைத் தாலும் நடுங்குபவளாயுள்ளாள். நீதானும், புள்ளுப் பதி சேரினும் - பறவைக் கூட்டங்கள் தத்தம் கூடுகளிற் சென்று தங்கிக் கூடி இன்புற்றாலும், புணர்ந்தோர்க் காணினும் - தலைவனும் தலைவியுமாகக் கூடி இன்புற்றோரைக் கண்ட விடத்தும், பள்ளி யானையின் வெய்ய உயிரினை - படுக்கையிற் கிடந்து புரளும் யானைபோல வெம்மை செறிந்த மூச்சினை உடையையாய், கழிபட - மிகுதிப்பட, வருந்திய எவ்வமொடு - வருத்தமுற்ற துன்பத்துடனே, பெரிது அழிந்து - பெரிதும் மனம் அழிந்து, எனவ கேளாய் - என்னுடைய சொற்களையும் கேளாது, நினையின - களவிற் கூட எண்ணினை; நீ நனி உள்ளினும் பனிக்கும் - நீ இவ்வாறு எண்ணுவதை நினைக்குமிடத்தும் எம் உள்ளம் நடுங்கும். ஆகையால் நீ வரைவொடு புகுவாய். இவையேயாம் கூறுவன,

முடிபு : ஒள் இழை அருங்காப்பினள்; நீ வெய்ய உயிரினை; நினையினை; உள்ளினும் பனிக்கும், என முடிக்க.

கருத்து : தலைவியின் இற்செறிப்பை அறிவுறுத்தி, வரைந் தால் அன்றி இனித் தலைவியை அடைய முடியாதென அறிவுறுத் தினாள்.

வி-ரை : எடுத்தவினைக்கு இடையூறுகள் ஏற்பட்ட விடத்துச் சோர்வு ஏற்படுதல் இயல்பாதலின், களவொழுக்கம் இடையீடு பட்ட விடத்து நீ பெரிதும் அழிந்தனை; அதனால் என் சொற் களையும் கேட்டாய் இல்லை என்று தோழி வருந்தினாள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

2. உயிர்த்து

"பள்ளிகொள் களிறுபோலப் பரிவுவிட்டு
உயிர்த்து என்பாவை" (சீவக. 905)

"பள்ளியானையின் உயிர்த்து" (குறுந். 142:4)

7. பனங்குடை

"இரும் பனங்குடையின் மிசையும்" (புறநா. 177:16)

"அவல் வகுத்த பசுங்குடையால்" (புறநா. 352.3)

"வேணீருண்ட குடை யோரன்னர்" (கலி. 23)

"ஆறு சென்மாக்கள் சோறு பொதி வெண்குடை"

(அகநா. 121)

"குடைகலனா உப்பிலி வெந்தை தின்று" (நாலடி. 289)

(தணிகை-களவு: 339)

8. பலவுறுகுன்றம்

"அளிதோ தானே பாரியது பறம்பே

..................

நாடுங் குன்றும் ஒருங்கு ஈயும்மே" (புறநா. 109:1-13)

# 254. நெய்தல்

## தோழி கூற்று

வண்டல் தைஇயும் வருதிரை உதைத்தும்
குன்றுஓங்கு வெண்மணல் கொடிஅடும்பு கொய்தும்
துனிஇல் நல்மொழி இனிய கூறியும்
சொல்எதிர் பெறாஅய் ஆகி மெல்லச்
5 செலீஇய செல்லும் ஒலிஇரும் பரப்ப
உமணர் தந்த உப்புநொடை நெல்லின்
அயினி மாஇன்று அருந்த நீவிக்
கணநாறு பெருந்தொடை புரளும் மார்பின்
துணைஇலை தமியை சேக்குவை அல்லை
10 நேர்கண் சிறுதடி நீரின் மாற்றி
வானம் வேண்டா உழவின்எம்
கானல்அம் சிறுகுடிச் சேந்தனை செலினே.

எ-து: தோழி படைத்து மொழிந்தது.

**உலோச்சனார்**

ப-ரை: வண்டல் தைஇயும் - எம்முடன் மணலால் வீடு கட்டி விளையாடியும், வருதிரை உதைத்தும் - கரையை மோத வருகின்ற அலைகளைக் காலால் உதைத்தும், குன்று ஓங்கு - மலைபோல் உயர்ந்த, வெண்மணல் - வெள்ளிய மணற் குன்றிலே,

கொடி அடும்பு கொய்தும் - படர்ந்த கொடி அடும்பின் பூக்களைப் பறித்தும், துனி இல் - வருத்தம் நீங்கிய, நல்மொழி - நல்ல வார்த்தைகளாம், இனிய - இனியனவற்றை, கூறியும் - சொல்லியும், சொல் எதிர் பெறாஅய் ஆகி - அவ்வாறு நீ கூறியவற்றிற்கு மறுமொழியும் பெறாயாகி, மெல்ல - மெல்ல, செலீஇய - நின் ஊருக்குப் போகும் பொருட்டு, செல்லும் - எழும், ஒலி இரும் பரப்ப - பெரிய கடற் பரப்பாம் நெய்தல் நிலத் தலைவனே! நேர்கண் - ஒழுங்கான, சிறுதடி - உப்புப் பாத்தியிலே, நீரின் மாற்றி - கடல் நீரைப் பாய்ச்சி, வானம் வேண்டா - மழையை விரும்பாத, உழவின் - விளைவித்துக்கொள்ளும் வேளாண்மையை உடைய, எம் - எம்முடைய, கானல் அம் சிறுகுடி - கடற்கரைச் சோலை சூழ்ந்து சிறுகுடியின் கண்ணே, சேர்ந்தனை செலின் - இன்று இரவு தங்கிச் செல்குவையானால், உமணர் தந்த - உப்பு வாணிகராலே கொண்டு வரப்பட்ட, உப்பு நொடை நெல்லின் - உப்பை விற்று அதற்கு மாறாகப் பெற்ற, நெல்லை, அயினி - குற்றிய அரிசி உணவாகிய காரணத்தை, மா இன்று அருந்த - நின் குதிரை இன்று உண்ண, நீவி - வருடி மகிழ்ந்து, கணம் நாறும் பெருந் தொடை - மலரின் கூட்டம் நன்மணம் கமழும் பெரிய பூமாலை, புரளும் - துவளும், மார்பில் - மார்பினிடத்து, துணை இலை - அணைக்கும் துணை இல்லாமல், தமியை - தனித்து, சேக்குவை அல்லை - தங்குவாய் அல்லை; தலைவியைத் தழுவி உறங்கவும் பெறுவாய்.

முடிபு : தைஇயும், உதைத்தும், கொய்தும், இனிய கூறியும் பெறாஅயாகிச் செல்லும் இரும்பரப்ப! சிறுகுடிச் சேர்ந்தன செலின் சேக்குவை அல்லை என முடிக்க.

கருத்து : இன்று இரவு சிறுகுடி தங்கிச் செல்லின் தலைவியை அடையலாம் எனப் படைத்து மொழிந்தாள்.

அ-ள் : சிறுதடி - உப்புப் பாத்தி. 'காயற் சிறுதடி கண் கெடப் பாய்தல்'' என்பது அகம் (366). வரைந்துகொண்டால் அன்றி மனையில் தங்கல் இயலாது; தங்கின் அலர் எழும், நமர் கொடியர், எனவே விரைக, வரைக என்றவாறு.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவனை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

1-2. அடும்பு

"மானடியன்ன கவட்டிலை அடும்பின்'' (குறுந். 243:1)

# 255. குறிஞ்சி

## தலைவி கூற்று

கழுதுகால் கிளர ஊர்மடிந் தன்றே
உருகெழு மரபின் குறிஞ்சி பாடிக்
கடியுடை வியல்நகர்க் கானவர் துஞ்சார்
வயக்களிறு பொருத வாள்வரி உழுவை
5 கல்முகைச் சிலம்பில் குழுமும் அன்னோ
மென்தோள் நெகிழ்ந்துநாம் வருந்தினும் இன்றுஅவர்
வாரார் ஆயினோ நன்றுமன் தில்ல
உயர்வரை அடுக்கத்து ஒளிறுபு மின்னிப்
பெயல்கால் மயங்கிய பொழுதுகழி பானாள்
10 திருமணி அரவுத்தேர்ந்து உழல
உருமுச்சிவந்து எறியும் ஓங்குவரை யாறே,

எ-து: ஆறு பார்த்து உற்றது.

### ஆலம்பேரி சாத்தனார்

ப-ரை: கழுது - பேய்கள், கால் கிளர - எங்கும் சஞ்சரிக்க, ஊர் மடிந்தன்று - இவ்வூரினர் இரவு முழுதும் அசந்து தூங்கு கின்றனர்; மேலும், உருகெழு மரபின் - கேட்போர் அச்சம் கொள்ளும்படி மரபுடன், குறிஞ்சி பாடி - குறிஞ்சியென்னும் பண்ணைப் பாடிக் கொண்டு, கடியுடை வியல்நகர் - காவல் தொழிலை மேற்கொண்ட இந்த அகன்ற நகரில் சுற்றிவரும், கானவர் - காவலரும், துஞ்சார் - தூங்கார்; மற்றும், வயக்களிறு - வலிமை வாய்ந்த களிற்றோடு, பொருத - சண்டை செய்த, வாள் வரி - வாள்போலும் நீண்ட கோடுகளை உடைய, உழுவை - புலிவேறு, கல்முகைச் சிலம்பில் - கற்கள் செறிந்த குகைகளையுடைய மலையடியினின்றும், முழங்கும் - உறுமா நிற்கும்; அன்னோ - ஐயோ! உயர்வரை அடுக்கத்து - ஓங்கிய மலைப்பக்கத்து, ஒளிறுபு மின்னி - விளங்கி மின்னி, பெயல் கால் மயங்கிய - மழை பெய்தலில் மயங்கி நிற்கின்ற, பொழுது கழி - முன் இரவு நீங்கிய, பால் நாள் - நடுயாமத்து, திருமணி - அழகிய நீலமணியை, அரவு - பாம்பானது, தேர்ந்து உழல - உமிழ்ந்து வருந்தி துன்புறுமாறு, உருமு - இடிகள், சிவந்து - சினந்து, எறியும் - பேரோசையுடன் வீழா நிற்கும்; ஆகையால், மெல்தோள் நெகிழ்வுற்று - மென்மையான தோள்கள் நெகிழ்ச்சி

அடைந்து, நாம் வருந்தினும் - நமக்கு வருத்தம் மிகும் என்றாலும், இன்று - இந் நள்ளிரவில், அவர் - நம் தலைவர், வாரார் - வராமல் இருத்தலே, நன்று மன் தில்ல - மிகமிக நல்ல தாகும்.

முடிபு : ஊர் மடிந்தன்று; கானவர் துஞ்சார், வேங்கை குழுமும்; உருமு எறியும்: அவர் வாராராயின் நன்றுமன் என முடிக்க.

கருத்து : நெறியினது ஏதம் காட்டித் தலைவனை இரவுக் குறியில் வாரற்க; வரின் யாம்படும் துன்பங்கள் அளவில என்று உரைத்து விரைக, வரைக என்று வரைவு கடாவுமாறு தோழி யிடம் தெரிவித்தாள்.

அ-ள் : கழுது - பேய். கால் கிளர்தல் - சஞ்சரித்தல். உரு - அச்சம். கடி - காவல்.

வி-ரை : பேய்கள் சஞ்சரித்தலும், காவலர் அருமையும், புலி உறுமலும், இடியோசையும் குறிப்பிட்டு ஆற்றது அருமை கூறி, வரைவு கடாயினாள்.

மெய்ப்பாடு - அச்சம்.

பயன் - வரைவு வேண்டல்.

ஒப்புமைப்பகுதி

4. களிறு புலியுடன் பொருதல்

"வரிவயம் பொருத வயக்களிறு போல்" (புறநா. 100:7-8)

"கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு
நெடுவரை மருங்கில் துஞ்சும் யானை" (கலி. 49:1-2)

"புலியொடு பொருது சினம்சிறந்து வலியோடு,
உரவுக் களிறு ஒதுங்கிய மருங்கு" (அகநா. 291)

"குயவரி இரும்போத்துப் பொருத புண்கூர்ந்து
உயங்குபிடி தழீஇய மதனழி யானை" (அகநா. 398)

"குருஉப்புலி பொருத புண்கூர் யானை" (மலைபடு. 517)
(சிலப். 25:29)

6-7. தலைவி வருந்தினாலும் தலைவன் வாராமை நன்று

"அரும்படர் எவ்வம் இன்றுநாம் உழப்பினும் வாரற்க"
(குறுந். 360:3-4)

7. நன்றுமன்தில்ல

"நிறுக்கலாற்றினோ நன்றுமன்தில்ல"
(குறுந். 58:2, 134;2, 269:2)

10-11. பாம்புபட இடிக்கும் உருமு

"நெடுவரை மருங்கிற் பாம்புபட இடிக்கும்
கடுவிசை உருமின் கழறுகுரலனை" (குறுந். 158:1-2)
"உருமுச்சிவந்தெறிந்த உரனழி பாம்பின்" (அகநா. 92:11)
"இடியேறுண்ட நாகம்போல" (பெருங். 10:112)
(குறுந். 190:4-5, 268:3-4, 391:3-4)

# 256. பாலை

## தலைவன் கூற்று

நீயே பாடல் சான்ற பழிதபு சீறடிப்
பல்குறப் பெருநலத்து அமர்த்த கண்ணை
காடே நிழல்கவின் இழந்த அழல்கவர் மரத்த
புலம்பு வீற்றிருந்து நலம்சிதைந் தனவே
5 இந்நிலை தவிர்ந்தனம் செலவே வைந்நுதிக்
களவுடன் கமழப் பிடவுத்தளை அவிழக்
கார்பெயல் செய்த காமர் காலை
மடப்பிணை தழீஇய மாஎருத்து இரலை
காழ்கொள் வேலத்து ஆழ்சினை பயந்த
10 கண்கவர் வரிநிழல் வதியும்
தண்படு கானமும் தவிர்ந்தனம் செலவே.

எ-து : பொருள்வயிற் பிரிந்தான் என்று ஆற்றாளாகிய, தலைவியைத் தலைவன் ஆற்றியது.

பாலை பாடிய பெருங்கடுங்கோ

ப-ரை : நீயே - நீதான், பாடல் சான்ற - பாவலர்களால் பாடுதற்கு அமைந்த, பழிதபு - குற்றம் இல்லாத, சீறடி - அழகிய சிறிய அடிகளுடனே, பல்குற - விசாலமான, பெருநலத்து - பேரழகு பொருந்திய, அமர்த்த - மதர்த்த, கண்ணை - கண்களை உடையாய்; காடே - நான் செல்லும் வழியின் கண்ணுள்ள காடோ, நிழல்கவின் இழந்த - நிழலும் அழகும் கெட்டொழிந்த, அழல் கவர் மரத்த - தீப்பற்றி எரிந்த மரங்களை உடையன; அதனால், புலம்பு வீற்றிருந்து - எவரும் போவார் இன்மையின் தனிமை பொருந்தி நின்று, நலம் - எல்லா நன்மைகளும், சிதைந்தன - சிதைவுற்றன; இந் நிலை - இத்தகைய கொடிய காட்டின் வழியாக, செலவு - உன்னை அழைத்துச் செல்லுதலை,

தவிர்ந்தனம் - கை விட்டேன். அல்லாமல், வைந்நுதி - கூர்மை யான நுனியை உடைய, களவுடன் - களாவின் மலர், கமழ - ஒருங்கே மலர்ந்து மணம் கமழாநிற்ப, பிடவு - பிடாவின் அரும்பு கள், தளை அவிழ - கட்டு அவிழ்ந்து பூக்க, கார் - மேகம், பெயல் செய்த - மழை பொழிதலைச் செய்த, காமர் காலை - அழகிய கார்காலத்தில், மடப்பிணை தழீஇய - இளைய பெண்மானைப் புணர்ந்த, மா எருத்து இரலை - கரிய பிடரியினை உடைய கலை மான், காழ்கொள் வேலத்து - உள்ளே வயிரம் முற்றிய வேல மரத்தின், ஆழ்சினை பயந்த - தாழ்ந்த கிளையினால் அமைந்த, கண்கவர் வரி நிழல் - காண்போர் கண்களை ஈர்க்கும் கோடுகள் செறிந்த நிழலிலே, வதியும் - தங்கியிருக்கும், தண்படுகானமும் - குளிர்ச்சி வாய்ந்த காட்டின் கண்ணே, செலவு தவிர்ந்தனம் - செல்லுவதனையும் கைவிட்டேன். எனவே, யான் நின்னை இரு அயயங்களிலும் பிரியாமல் இருக்க நீ வருந்துவது எதனால்? வருந்தற்க.

முடிபு : நீயே! கண்ணே. காடே சிதைந்தன. செலவு தவிர்ந்தனம்; கானமும் செலவு தவிர்ந்தனம்: அதனால் வருந்தேல்.

கருத்து : காடுகள் கொடியன; காரும் வந்துற்றது. நின்னைப் பிரியேன் என்று ஆற்றினான்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

# 257. குறிஞ்சி

## தோழி கூற்று

விளிவுஇல் அரவமொடு தளிசிறந்து உரைஇ
மழைஎழுந்து இறுத்த நளிர்தூங்கு சிலம்பின்
கழைஅமல்பு நீடிய வான்உயர் நெடுங்கோட்டு
இலங்குவெள் அருவி வியன்மலைக் கவாஅன்
5 அரும்புவாய் அவிழ்ந்த கருங்கால் வேங்கைப்
பொன்மருள் நறுவீ கல்மிசைத் தாஅ
நன்மலை நாட நயந்தனை அருளாய்
இயங்குநர் மடிந்த வயந்திகழ் சிறுநெறிக்
கடுமா வழங்குதல் அறிந்து
10 நடுநாள் வருதி நோகோ யானே.

எ-து : தோழி தலைவனை ஏதம் சொல்லி வரைவு கடாயது.

## வண்ணக்கன் சொருமருங் குமரனார்

ப-ரை : அரும்பு வாய் அவிழ்ந்த - அரும்புகள் கட்டு அவிழ்ந்த, கருங்கால் வேங்கை - கரிய காம்பையுடைய வேங்கை மரத்தின், பொன் மருள் நறுவீ - பொன்னின் நிறத்தை ஒத்திருக்கும் நறிய பூக்கள், கல்மிசைத்தாஅ - பாறையின் மேல் உதிர்ந்து பரவி நிற்கும், நல மலை நாட - நல்ல மலை நாடனே! நயந்தனை அருளாய் - எம்பால் விரும்பி அருள் காட்டாய் ஆகி, விளிவு இல் - இடை விடாத, அரவமொடு - ஓசையோடு, தளி சிறந்து - மழை பொழிந்து, உரைஇ - இடிஇடித்து, மழை எழுந்து இறுத்த - மேகம் உயரச் சென்று பெய்யத் தொடங்கிய, நளிர் தூங்கு சிலம்பின் - குளிர்ச்சி மிக்கமலையிலே, கழை அமல்பு நீடிய - மூங்கில்கள் நெருங்கிப் பரந்த, வான் உயர் நெடுங் கோட்டு - மிக உயர்ந்த நீண்ட சிகரத்தின்கண்ணே, இலங்கு - விளங்கிய, வெள் அருவி - வெள்ளிய அருவியை உடைய, வியன் மலைக்கவாஅன் - அகன்ற மலைப்பக்கத்தில், இயங்குநர் - வழியிற் செல்வார், மடிந்த எவரும் இல்லாத, வயம் திகழ் - நீர் நிறைந்த, சிறுநெறி - சிறிய வழியிலே, கடுமா - கொடிய சிங்கம், புலி, கரடி முதலியன, வழங்குதல் - சஞ்சரித்தலை, அறிந்து - அறிந்து வைத்தும், நடுநாள் - நள்ளிரவில், வருதி - வாரா நின்றனை; யான் நோகு - இதற்காக யான் வருந்துகின்றேன்.

முடிபு : நாட! வழங்குதல் அறிந்தும் நடுநாள் வருதி; யான் நோகு என முடிக்க.

கருத்து : தலைவனே! இரவில் நீ வருங்கால் ஏற்படும் துன்பங்கட்கு அஞ்சி யாம் வருந்துகின்றோம். எனவே இரவில் வாரற்க என்று கூறி வரைவு கடாயினாள்.

பயனின்றி வேங்கையின் நறுமணமலர் கற்பாறையில் உதிர்ந்து வீணாதல்போல, உன்னால் நுகரவேண்டி எம்மேனியின் நலம் பசலையால் உணப்பட்டுப் பயனின்றிக் கழிகின்ற என்னும் குறிப்புப் பொருள் உணர்க.

மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - ஏதம் சொல்லி வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

1-6. வேங்கைப்பூ துறுகல்லின்மேல் உகுதல்

''கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்'' (குறுந். 47:1)

''கருங்கால் வேங்கை மாத்தகட்கு ஒள்வீ,
இருங்கால் வியலறை வரிப்பத் தாஅம்'' (ஐங். 219:1-2)

''மன்ற வேங்கை மணநாட் பூத்த மணிஏர் அரும்பின்
பொன்வீ தாஅய் வியலறை வரிக்கும் முன்றில்''
(அகநா. 232:7-9)

5. கருங்கால் வேங்கை

''அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை'' (குறுந். 26:1)

''கோடையொற்றிய கருங்கால் வேங்கை'' (குறுந். 343:5)

''அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை'' (திணைமா. 26)
(புறநா. 202:18)

10. நள்ளிரவில் தலைவன் வருவதற்குத் தலைவி வருந்துதல்

''நடுநாள் வாரல் வாழியோ வருந்துதும் யாமே''
(குறுந். 69:6) (அகநா. 92:5)

''பெருவிதுப்புற்றன்றால் நோகோ யானே'' (ஐங். 104:4)
(குறுந். 131:6, 178:7, 212-5)
(அகநா. 137:16) (புறநா. 116:9, 234:1)

# 258. நெய்தல்

## தோழி கூற்று

பல்பூங் கானற் பகற்குறி மரீஇச்
செல்வல் கொண்க செறித்தனள் யாயே
கதிர்கால் வெம்பக் கல்காய் ஞாயிற்றுத்
திருவுடை வியல்நகர் வருவிருந்து அயர்மார்
5 பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த
கொக்குஉகிர் நிமரல் மாந்தி எல்பட
அகல்அங் காடி அசைநிழற் குவித்த
பச்சிறாக் கவர்ந்த பசுங்கட் காக்கை
தூங்கல் வங்கத்துக் கூம்பில் சேக்கும்
10 மருங்கூர்ப் பட்டினத்து அன்னஇவள்
நெருங்குஏர் எல்வளை ஓடுவ கண்டே.

எ-து : தோழி செறிப்பு அறிவுறீஇயது.

**நக்கீரர்**

ப-ரை : கொண்க - தலைவனே! கதிர் - ஞாயிறு, கால் வெம்ப - மக்களுடைய கால்கள் வெதும்பும்படிக் காய்தலாலும், கல்காய் - கற்களும் வெடிப்புறும்படி வெம்மை தாக்குதலாலும், எவரும் நடக்க இயலாத, பகற் பொழுதிலே, திருவுடை வியன் நகர்- செல்வம் செழிக்கும் அகன்ற நகரின்கண்ணே, வருவிருந்து - வருகின்ற விருந்தினர்களை, அயர்மார் - உபசரிக்கும்வண்ணம், பொன் தொடி மகளிர் - பொன்னாலாகிய வளையலை அணிந்த மகளிர், புறங்கடை வகுத்த - சமைத்து கடவுட்குப் பலியாட்டு வழிபடும் முற்றத்திலே சிதறிய, கொக்கு உகிர் நிமிரல் மாந்தி - கொக்கினது நகம் போன்ற சோற்றைத் தின்று, எல்பட - பொழுது சாய்கையில், அகல் - அகன்ற, அங்காடி - மீன் கடையில், அசை நிழல் குவித்த - அசைகின்ற நிழலிலே குவித்த, பச்சு இறாக் கவர்ந்த - பசுமையாகிய கண்ணையுடைய காக்கை, தூங்கல் வங்கத்து - அங்குக் கடலிடைச் செல்லும் தொழில் இன்றிக் காற்றால் அசைகின்ற தோணியிலே பிணித்த, கூம்பில் - பாய் மரத்திற் சென்று, சேக்கும் - தங்கும், மருங்கூர்ப்பட்டினத்து அன்ன - மருங்கூர்ப்பட்டினம் போன்ற, இவள் - இத் தலைவியின், நெருங்கு ஏர் எல்வளை- நெருங்கிய அழகும் ஒளியும் பொருந்திய வளைகள், ஓடுவ கண்டு - கழன்று விழுதலைப் பார்த்து, யாய் - தாய், செறித்தனள் - (இந் நிலை தலைவிக்கு அணங்கு தீண்டிய தாற் போலும் என்று வேறுபட எண்ணி) வீட்டுக் காவலில் வைத்துள்ளாள். அதனை உனக்கு உரைத்தற்கு, பல் பூங்கானல் - பலவாய மலர்களையுடைய இக் கடற்கரைச் சோலையிலே, பகற்குறி மரீஇ - பகற்பொழுதின் கண்ணே நீ செய்தகுறி யிடத்து வந்து போகா நின்றேன், தக்கது செய்க.

முடிபு : கொண்க! எல்வளை ஓடுவகண்டு யாய் இற்செறித் தனள், யான் பல்பூங்கானற் பகற்குறி மரீஇச் செல்வல் என முடிக்க.

கருத்து : தலைவ! நின்னால் தலைவிக்கு ஏற்பட்ட நிற வேறுபாட்டைக் கண்டு தாய் இற்செறிப்புச் செய்தனள். அவளை வரைந்து கொண்டாலன்றிக் காணவியலாது என்றாள்.

அ-ள் : நிமிரல் - சோறு. எல் - ஒளி. தூங்கல் - அசைதல். மகளிர் படைத்த பலி சோற்றைத் தின்று, அங்காடியிற் குவித்த மீனைக் கவர்ந்த காக்கை வங்கத்துக் கூம்பிற் சென்று தங்கும்

என்றது, பாங்கற் கூட்டத்தால் நலன் நுகர்ந்து பாங்கியிற் கூட்டமும் பெற்று மகிழ்ந்த நீ நின் ஊரின்கண்ணே கவற்சி யில்லாமல் தங்கியிருக்கின்றாய் என்றவாறு.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

6. கொக்கு உகிர் நிமிரல்

"பெருஞ்செய் நெல்லின் கொக்குகிர் நிமிரல்" (புறநா. 395:36)

"கொக்குகிர் நிமிரல் ஒக்கல் ஆர" (புறநா. 398:25)

"கொக்குகிர் நிமிரல் வெண் சோறாரட்டுறுகறி" (சீவக. 2972)

# 259. குறிஞ்சி

## தோழி கூற்று

யாங்குச்செய் வாங்கொல் தோழி பொன்வீ
வேங்கை ஓங்கிய தேங்கமழ் சாரல்
பெருங்கல் நாடனொடு இரும்புனத்து அல்கிச்
செவ்வாய்ப் பைங்கிளி ஓப்பி அவ்வாய்ப்
5 பெருவரை அடுக்கத்து அருவி ஆடிச்
சாரல் ஆரம் வண்டுபட நீவிப்
பெரிதுஅமர்ந்து இயைந்த கேண்மை சிறுநனி
அரிய போலக் காண்பேன் விரிதிரைக்
கடல்பெயர்ந்து அனைய ஆகிப்
10 புலர்பதம் கொண்டன ஏனற் குரலே.

எ-து: தோழி தலைவியைச் செறிப்பு அறிவுறீஇ வரைவு கடாயது:

கொற்றங் கொற்றனார்

ப-ரை: தோழி - தலைவியே! ஏனல் குரல் - தினைக்கதிர் கள் அனைத்தும், விரிதிரை - விரிந்த அலைகளை உடைய, கடல் பெயர்ந்து அனைய ஆகி - கடல்தான் வற்றினாற் போலும் காயும் பருவம் உடையவாகி, புலர்பதம் கொண்டன - முற்றி

அறுவடை செய்தற்கு ஏற்றவாறு அமைந்துள்ளன. இனி நமர் அறுவடை செய்வதோடன்றி நின்னையும் இற்செறிப்புக்கு உட்படுத்துவர் என்பது உறுதி. பொன்வீ ஓங்கிய வேங்கை - பொன் போன்ற மலரை உடைய வேங்கை மரங்கள் உயர்ந்த தேம் கமழ் சாரல் - நறுமணம் கமழ்கின்ற மலைச்சாரலின் கண்ணே, பெருங்கல் நாடனொடு - பெரிய மலை நாடனொடு, இரும்புனத்து அல்கி - கரிய தினைப்புனத்திலே தங்கி, செவ்வாய்ப் பைங்கிளி - ஓப்பி சிவந்த வாயையுடைய பசிய கிளியை ஓட்டி, அவ்வாய் - அவ்விடத்திலுள்ள, பெருவரை அடுக்கத்து - கரிய பெரிய பக்க மலையிலுள்ள, அருவி - அருவியில் நீர் விளையாடல் புரிந்து, சாரல் - மலைச் சாரலில் தோன்றிய, ஆரம் - சந்தன மரம், வண்டுபட - வண்டுகள் வாசனையால் ஈர்க்கப்பட, நீவி - அச் சந்தனக் குழம்பை நன்கு பூசி, பெரிது அமர்ந்து இயைந்த கேண்மை - பெரிதும் விரும்பி இயைந்த நட்பு, சிறுநனி - மிகவும் சுருங்கி, அரிய போலக் காண்பேன் - இனி அதுதானும் இல்லை யாவதுபோலக் காண்பேன் யான்; ஆதலால் நாம் செயத்தக்கது என்னை?

முடிபு : தோழி! ஏனல் புலர்பதம் கொண்டன. நாடனொடு இயைந்த கேண்மை அரியபோலக் காண்பேன் என முடிக்க.

கருத்து : தினைகள் முற்றின; இனி இற்செறிப்பு நிகழும். களவு இனி கை கூடாது; தலைவன் வரைதலைத் தவிர வேறு வழி இல்லை.

மெய்ப்பாடு - பெருமிதம்.
பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

1. யாங்குச் செய்வாம்
"யாங்குச் செய்வாம்எம் இடும்பை நோய்க்கென"
(குறுந். 217:3, 263:3, 380:5) (அகநா. 252:9)

3.5. தலைவி தலைவனோடு நீராடுதல்
"பாடு இன் அருவி ஆடுதல் இனிதே" (குறுந். 353)

# 260. மருதம்

## தலைவி கூற்று

கழுநீர் மேய்ந்த கருந்தாள் எருமை
பழனத் தாமரைப் பனிமலர் முணைஇத்
தண்டுசேர் மள்ளரின் இயலி அயலது
குன்றுசேர் வெண்மணல் துஞ்சும் ஊர
5 வெய்யை போல முயங்குதி முனைஎழத்
தெவ்வர்த் தேய்த்த செவ்வேல் வயவன்
மலிபுனல் வாயில் இருப்பை அன்னஎன்
ஒலிபல் கூந்தல் நலம்பெறப் புனைந்த
முகைஅவிழ் கோதை வாட்டிய
10 பகைவன் மன்யான் மறந்துஅமை கலனே.

எ-து : ஊடல் மறுத்த தலைமகள் சொல்லியது.

பரணர்

ப-ரை : கழுநீர் மேய்ந்த - கழுநீர் மலரை மேய்ந்த, கருந்தாள் எருமை - கரிய பெரிய கால்களையுடைய எருமை, பழனத் தாமரை - அயலில் உள்ள வயலிலே முளைத்த தாமரையின் பனிமலர் - குளிர்ந்த மலரைத் தின்று, முணைஇ - பின் அதனை வெறுத்துவிட்டு, தண்டுசேர் மள்ளரின் - கையிலே தடிஏந்திய வீரரைப்போல, இயலி - நிமிர்ந்து நடந்து, அயலது - அதன் பக்கத்திலுள்ள. குன்றுசேர் வெண்மணல் - குன்று போற் குவிந்திருக்கும் வெள்ளிய மணலிடத்து, துஞ்சும் - உறங்கும், ஊர - ஊரனே!, வெய்யைபோல - நீ மிகவும் அன்பு உடையைபோல், முயங்குதி - என்னைப் பலகாலும் தழுவுகின்றனை; முனை எழ - பகைமிகுதலால், தெவ்வர் - பகைவரை, தேய்த்த - அழித்த, செவ்வேல் - இரத்தம் படிந்த வேற்படையை உடைய, வயவன் - வீரனாகிய 'விராஅன்' என்பவனுக்குச் சொந்தமான, மலிபுனல் வாயில் - நிறைந்த புனல்வாயிலை அடுத்த, இருப்பை அன்ன - இருப்பையூர் போன்ற என்னை விட்டு ஒழிதலால், என் - என்னுடைய, ஒலிபல் கூந்தல் - தழைத்த பலவாகிய கூந்தல், நலம்பெற - அழகு பொருந்த, புனைந்த - சூடிய, முகை அவிழ் கோதை - அரும்பு மலர்ந்த பூமாலை, வாட்டிய - வாடும் படிச் செய்த, பகைவன் மன் - நீ பெரிய பகைவன் அல்லனோ, யான் மறந்து அமைகலேன் - யான் நின்

செய்கையை மறந்திருப்பேன் அல்லேன், ஆதலின் என்னைத் தொடேல்.

முடிவு : ஊர! நீ கோதை வாட்டிய பகைவன்; யான் மறந்து அமைகலன் என முடிக்க.

கருத்து : தலைவ! நீ இப்பொழுது அன்புடன் தழுவுகின்றனை என்றாலும் என் கூந்தலை அலங்கரித்த பூமாலை வாடுமாறு பரத்தையிற் பிரிந்த செயலை யான் மறப்பனோ என்று கூறி ஊடல் தணிந்தாள்.

ப-ரை : தன்பால் தலைவனுக்கு அன்பில்லாமையை 'வெய்யைபோல முயங்குதி' என்பதனாற் குறிப்பித்தாள். தன் ஒப்பனையை அவன் நுகராமையின் 'பகைவன்' என்றாள். தான் அவன் பாற்கொண்ட வெறுப்பை உணர்த்துவாள் 'மறந்து அமைகலன்' என்றாள். தலைவன் பணியவே ஊடல் தணிவாள் என்க.

உள்ளுறை : தாமரை மலரை வெறுத்துக் கழுநீரை மேய்ந்த எருமை மணற் குன்றிலே சென்று தங்கும் என்றது, தலைவியின் நலனை வெறுத்து காதற்பரத்தையிடம் இன்பம் நுகர்ந்த தலைவனே நீ ஆண்டும் தங்காயாய்ச் சேரிப்பரத்தையின் மனையின் கண்ணே சென்று உறங்குவாய் ஆயினை என்பதாம்.

மெய்ப்பாடு - வெகுளி

பயன் - ஊடல் தீர்தல்.

ஒப்புமைப்பகுதி

1-3. எருமை

"மள்ளரன்ன தடங்கோட்டு எருமை" (ஐங். 94)

4. மணலிடை எருமையும் மணற்சிமையமும்

"மணலாடு சிமையத்து எருமை கிளக்கும்" (ஐங். 100)

"கடுவளி தொடுத்த நெடுவெண் குப்பைக்
கணங்கொள் சிமைய அணங்குங் கானல்" (குறுந். 372:2-3)
(அகநா. 190:5-7)

7. இருப்பை விராஅனுக்குரியது

"கைவண் விராஅன் இருப்பை அன்ன" (ஐங். 58)

8. ஒலிமென்கூந்தல்

"ஒலிமென் கூந்தல் உரியவாம் நினக்கே" (குறுந். 225:7)
(குறிஞ்சிப். 2) (கலி 64:6) (புறநா-109: 16, 306:3)

# 261. குறிஞ்சி

## தோழி கூற்று

## [தலைவி கூற்றும் ஆம்]

அருளிலர் வாழி தோழி மின்னுவசிபு
இருள்தூங்கு விசும்பின் அதிரும் ஏறொடு
வெஞ்சுடர் கரந்த கமஞ்சூல் வானம்
நெடும்பெரும் குன்றத்துக் குறும்பல மறுகித்
5 தாஇல் பெரும்பெயல் தலைஇய யாமத்துக்
களிறுஅகப் படுத்த பெருஞ்சின மாசுணம்
வெளிறுஇல் காழ்மரம் பிணித்து நனிமிளிர்க்கும்
சாந்தம் போகிய தேம்கமழ் விடர்முகை
எருவை நறும்பூ நீடிய
10 பெருவரைச் சிறுநெறி வருத லானே.

எ-து : சிறைப்புறமாகத் தோழி இரவுக்குறி விலக்கி வரைவு கடாயது.

(அல்லது)

தலைவி இயற்பட மொழிந்த தூஉம் ஆம்.

**சேந்தன் பூதனார்**

ப-ரை : தோழி - தோழியே! - வாழி - நீ நெடிது நாள் வாழ்க. மின்னுவசிபு - மின்னல்கள் பிளந்து எழுந்து, இருள் தூங்கு - இருள் செறிந்த, விசும்பில் - ஆகாயத்தில், அதிரும் - அதிர்கின்ற. ஏறொடு - இடிமுழக்கத்துடனே, வெஞ்சுடர் - வெப்பம் தரும் ஞாயிறு. கரந்த - கட்புனன் ஆகாவண்ணம் மறையச் செய்த, கமம் சூல்வானம் - நிறைந்த கருக்கொண்ட கரியமேகம், நெடும்பெருங்குன்றத்து - நெடிய பெரிய மலையிடத்து, குறும்பல மறுகி - சிறிய பலவாக இயங்கி, தாஇல் - வருத்தம் அற்ற, பெரும் பெயல் தலைஇய பெரிய மழையைப் பெய்துவிட்ட, யாமத்து - நள்ளிரவில் களிறு அகப்படுத்த ஆண் யானையைப் பற்றிச் சுற்றிக்கொண்ட, பெருஞ்சின மாசுணம் - கடுங்கோபம் வாய்ந்த பெரும்பாம்பு, வெளிறுஇல் - வெண்மையில்லாது: காழ் மரம்பிணித்து - முற்றிய வயிரம் பாய்ந்த மரத்தில் சேரப் பிணித்து, நனி மிளிர்க்கும் - மிகவும் புரட்டும், சாந்தம் போகிய - சந்தன மரத்தினின்றும் வெளிப்பட்ட, தேம்

கமழ் - நறுமணம் கமழ்கின்ற, விடர் முகை - மலைப் பிளப்பினை உடைய துறுகல்லின் பக்கத்திலே, எருவை நறும்பூ - கொறுக்கத்தியின் நல்ல பூ, நீடிய - நீடி மலர்ந்த, பெருவரைச் சிறுநெறி - பெரிய மலையிலுள்ள சிறிய வழியில், வருதலால் - நீ வருகின்ற காரணத்தால், அருளிலர் - நம் தலைவர் நம்மாட்டுச் சிறிதும் அருள் உடையார் அல்லர்; இனி, இரவில் அவ்வழியில் வாரற்க என்று கூறாய்.

முடிபு : தோழி! வானம் ஏறொடு மறுகி தலைஇய யாமத்துச் சிறு நெறிவருதலால் அருளிலர் என முடிக்க.

கருத்து : தோழி தலைவியிடம் நம் தலைவர் நள்ளிரவில் கொடிய வழியில் வருதலால் சிறிதும் அருளிலார் என்று கூறி வரைவு கடாயினாள்.

அ-ள் : வசிபு - பிளந்து. கமம் - செறிவு. தா - வருத்தம். காழ் - உறுதி.

வி-ரை : கொடிய வழியில் வரும் தலைவனை இகழ்ந்து தோழி கூறவே அதனைக் கேட்ட தலைவி அவ் இகழ்ச்சியைப் பொறுக்காது நம்மாட்டு அன்புடையராய் நாம் படும் துன்பம் கருதி இருளில் வருதலால் அவர் நீண்டநாள் வாழ்வாராக என்று இயற்பட மொழிந்தாள்.

ஒப்புமைப்பகுதி

4. குறும்பல

"குழல்இசைக் குரல குறும்பல அகவும்" (குறுந். 151:3)
(புறநா. 159:3, சிலப். 10:39; 12:3)

6. யானையை விழுங்கும் பாம்பு

"களிறு மதனழிக்குந் துஞ்சுமரங்
கடுக்கு மாசுணம் விலக்கி" (மலைபடு. 260-61)
(அகநா. 68:1920)

8. விடர்முகை

"விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்கும்"
(குறுந். 218:1 239:2, 343:4), (ஐங். 395:2)

10. பெருவரைச் சிறுநெறி

"கல்வரை அயலது தொல்வழங்கு சிறுநெறி"
(குறுந். 207:5)

# 262. பாலை

## தலைவன் கூற்று

தண்புனக் கருவிளைக் கண்போல் மாமலர்
ஆடுமயிற் பீலியின் வாடையொடு துயல்வர
உறைமயக்கு உற்ற ஊர்துஞ்சு யாமத்து
நடுங்குபிணி நலிய நல்எழில் சாஅய்த்
5 துனிகூர் மனத்தள் முனிபடர் உழக்கும்
பணைத்தோள் அரும்பிய சுணங்கின் கணைக்கால்
குவளை நாறும் கூந்தல் தேமொழி
இவளின் தீர்ந்தும் ஆள்வினை வலிப்பப்
பிரிவன் நெஞ்சென்னும் ஆயின்
10 அரிதுமன்று அம்ம இன்மையது இளிவே.

எ-து : தலைவியின் ஆற்றாக் குறிப்பறிந்து பிரிவிடை விலக்கியது.

பெருந்தலைச் சாத்தனார்

ப-ரை : தண் - குளிர்ந்த, புனம் - தோட்டத்திலுள்ள, கருவிளை - கரிய காக்கணத்தின், கண்போல் - கண்ணைப்போல், மாமலர் - மலரும் கரிய மலர், ஆடு - ஆடுகின்ற, மயிற்பீலியின் - மயிலின் தோகைபோல, வாடையொடு - வாடைக் காற்றுடன், துயல்வர - அசைய, உறை மயக்கு உற்ற - இடைவிடாது மழைத் தூவல் பொருந்திய, ஊர்துஞ்சு யாமத்து - ஊரினர் உறங்கும் நள் இரவில், நடுங்குபிணி நலிய - நடுக்கம் செய்யும் காம நோய் துன்புறுத்தலால், நல் எழில் சாஅய் - நல்ல அழகு கெட்டு, துனி கூர் மனத்தாள் - துன்பம் நிறைந்த உள்ளத்தளாய், முனிபடர் உழக்கும் - தன்னை வெறுத்து வாட்டும் காம நோயாலே வருந்துகின்ற, பணைத் தோள் - பருத்த தோளையும், அரும்பிய சுணங்கின் - தோன்றிய தேமலையும், கணைக்காற் குவளை - திரண்ட அடியை உடைய குவளை மலர்போல், நாறும் - மணம் வீசும், கூந்தல் - கூந்தலையும், தே மொழி - இனிய சொற்களையும் உடைய, இவளின் - இவளை, தீர்ந்து - பிரிந்தும், ஆள்வினை - பொருளை ஈட்ட வேண்டும் என்ற முயற்சி, வலிப்ப - என் நெஞ்சை ஈர்த்தலால், நெஞ்சு - என் மனம், பிரிவன் - 'யான் இவளைப் பிரிவேன்', என்னும் - என்று கூறும்; ஆயின் - அவ்வாறு கூறுமானால், இன்மையது இளிது - வறுமையால

வரும் தாழ்வு, அம்ம - உறுதியாக, அரிதுமன் - மிகவும் கொடியதே யாம்: இஃது என்ன வியப்பு?

முடிபு : என் நெஞ்சு பிரிவன் என்னுமாயின் இன்மையது இளிவு அரிதுமன் எனமுடிக்க.

கருத்து : தலைவியை விட்டுப் பிரிய என் நெஞ்சு கருதுமாயின், வறுமையின் இளிது மிகமிகக் கொடியது.

அ-ள் : கருவிளை - கருங்காக்கணம். (இதனைக் கருங்காக கரட்டை என்பர்.) உறை - மழைத்துளி.

வி-ரை : காமநோயால் நலிவுற்றுத் தேற்றுவார் யாருமின்றி நள்ளிரவில் வருந்துதலால் யாமத்தை முதலிலும், தன் நினைவில் தலைவியின் கூந்தலும் தோளும் நினைவில் வர அதனை அடுத்தும், பிரியின் இன்சொல்லைக் கூடக் கேட்க இயலாது போமே என இறுதியிலும் தலைவன் கூறினான் என்க.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - இல்லத்து அழுங்கல்.

ஒப்புமைப்பகுதி

3. ஊர் துஞ்சியாமம்

"ஊர்துஞ்சியாமம் விடியலும் என்றி" (குறுந். 32:2)

"துஞ்ஞர் யாமத்தானும்" (குறுந். 302:7)

"துஞ்ஞர் யாமத்தும் துயில் அறியலரே" (ஐங். 13:1)

(அகநா. 360:12) (கலி. 65:3)

7. கூந்தலணை

"நறுமென் கூந்தல் மெல்லணையேமே"

(குறுந். 270:8, 254:5, ஒப்பு. 6-8)

"குவளை நாறுங் குவையிருங் கூந்தல்" (குறுந். 300:1)

# 263. நெய்தல்

## தோழி கூற்று

பிறைவனப்பு இழந்த நுதலும் யாழநின்
இறைவரை நில்லா வளையும் மறயைாது
ஊர்அலர் தூற்றும் கௌவையும் நாண்இட்டு
உரையவற்கு உரையாம் ஆயினும் இரைவேட்டுக்
5 கடுஞ்சூல் வயவொடு கானல் எய்தாது
கழனி ஒழிந்த கொடுவாய்ப் பேடைக்கு
முடமுதிர் நாரை கடல்மீன் ஒய்யும்
மெல்லம் புலம்பற் கண்டு நிலைசெல்லாக்
கரப்பவும் கரப்பவும் கைமிக்கு
10 உரைத்த தோழி உண்கண் நீரே.

எ-து சிறைப்புறமாகத் தோழி தலைவனை வரைவுகடாயது.

**இளவெயினனார்**

ப-ரை : தோழி - தலைவீ! பிறை வனப்பு இழந்த நுதலும் - பிறையினை ஒத்த அழகு எல்லாம் இழந்த உனது நெற்றியும், நின் - நினது, இறைவரை - முன்கையளவில், நில்லா - நில்லாது, வளையும் - நழுவும் வளையும், மறையாது - மறைவின்றி நேருக்கு நேராகவே, ஊர் - ஊரினர், அலர் தூற்றும் கௌவையும் - அலர் தூற்றும் பழிச் சொல்லையும், நாண இட்டு - நாணம் மிகுதலால், உரையவற்கு - சொல்ல வேண்டிய காதலனுக்கு, உரையாம் எனினும் - சொல்லாது ஒழிந்தோம் என்றாலும், இரை வேட்டு - இரையை விரும்பி, கடுஞ்சூல் - நிறைந்த சூலுடனே, வயவொடு - வேட்கை நோய் மிக, கானல் எய்தாது - கடற்கரைச் சோலையில் இயங்க இயலாது, கழனி - மருத நிலத்தின் கண்ணதாகிய வயலிலே, ஒழிந்த - தங்கியிருந்த, கொடுவாய்ப் பேடைக்கு - வளைந்த வாயை உடைய பெட்டை நாரைக்கு, முட முதிர் நாரை - முடம் முதிர்ந்த நாரைப் போத்து, கடல் மீன் ஒய்யும் - கடல் மீனைக் கொண்டு போய்க் கொடுக்கும், மெல்லம் புலம்பன் - மெல்லிய கடற்கரைத் தலைவனை, கண்டு - பார்தது, கரப்பவும் கரப்பவும் - பலகால் நாம் மறைக்கவும் மறைக்கவும், நிலை செல்லா - ஒரு நிலையில் நில்லாமல், கைமிக்கு - அளவு கடந்து, உண்கண்நீரே, உரைத்த - வெளிவந்து உரை செய்துவிட்டன, யாம் யாது செய்ய வல்லேம்.

முடிபு : நுதலும், வளையும், தோளும், உரையாம் ஆயினும், புலம்பற்கு உண்கண்நீர் கைமிக்கு உரைத்த என முடிக்க.

கருத்து : தோழி தலைவியை நோக்கி, தலைவற்கு நம் துன்பத்தை நேராகக் கூறாவிடினும், நம் கண்கள் உரைப்பதனால் யாது செய்வோம் என்றாள்.

உள்ளுறை : வயலிலே தங்கிய பேடைக்கு நாரைப் போத்து கடலின் மீனைக் கொண்டு வந்து சொரிதல் போலத் தலைவன் தலைவியை வரைந்து தன் இல்லத்தே கொண்டு சென்று வைத்துத் தானும் பொருள் ஈட்டி வந்து முட்டின்றி இல்லறம் நடத்துவன் என்பதாம்.

இன்னும், இதனால் தன் நாட்டுப் பறவையும் மனைவியோடு வாழக் கண்டும் தான் மட்டும் அவ்வாறு வாழ்ந்திலனே என்ன வியப்பு என மற்றொரு பொருளும் போந்தது.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

1. நுதலுக்குப் பிறை

"பிறையென, மதிமயக்குறூஉ நுதலும்" (குறுந். 129:3-5)
(பெருங். 1, 36:265, 4-11:68, 5-6:11)

5-6. கமஞ்சூல் வயவுப்பெடை

"கடுஞ்சூல், வயவுப்பெடை அகவும் பானாட் கங்குல்"
(குறுந். 301)

9-10. கண்கள் தாமே அழுதல்

"யாமே காமந் தாங்கவும் தாம்தம்
கெழுதகைமையின் அழுதன தோழி
.......................
குன்ற நாடற் கண்ட எங்கண்ணே" (குறுந். 241:2-7)

# 264. பாலை

## தலைவன் கூற்று

பாம்புஅளைச் செறிய முழங்கி வலன்ஏர்பு
வான்தளி பொழிந்த காண்புஇன் காலை
அணிகிளர் கலாவம் ஐதுவிரித்து இயலும்
மணிபுரை எருத்தின் மஞ்சை போலநின்
5 வீபெய் கூந்தல் வீசுவளி உளர
ஏகுதி மடந்தை எல்லின்று பொழுதே
வேய்பயில் இறும்பில் கோவலர் யாத்த
ஆபூண் தெண்மணி இயம்பும்
ஈகாண் தோன்றும் எம்சிறுநல் ஊரே.

எ-து : உடன்போகா நின்ற தலைவன் தலைமகளை வற்புறீஇயது.

(அல்லது)

உடன்போய் மறுத்தரா நின்றான் (மீண்டு வருகின்றான்) ஊர்காட்டி வற்புறீஇயதும் ஆம்.

### ஆவூர்க் காவிதிகள் சாதேவனார்

ப-ரை : மடந்தை - மடந்தாய்! எல் இன்று பொழுது - கதிரவன் மேற்றிசையில் மறையவே எங்கும் ஒளி மழுங்கியது. வேய்பயில் இறும்பில் - மூங்கில் நிறைந்த சிறிய மலையின் கண்ணே, கோவலர் யாத்த - ஆயர்களாற் கட்டப்பட்ட, ஆபூண் - பசுக் கூட்டங்களின் கழுத்திலுள்ள, தெள்மணி - தெளிந்த ஓசையை உடைய மணி, இயம்பும் - ஒலிக்கும், எம் - எம்முடைய, சிறு நல் ஊர் - சிறிய நல்ல ஊர், ஈகாண் - இதோ பாராய்! பாம்பு - பாம்புகள், அளைச் செறிய - பொந்துகளுக்குள் அடங்கி இருக்குமாறு, முழங்கி - பேரோசை செய்து, வலன் ஏர்பு - வலமாக எழுந்து, வான் தளி பொழிந்த - மேகம் மழை பொழிந்த, காண்பு இன் காலை - காண்பதற்கு இன்பம் தரும் காலைப் பொழுதிலே, அணி கிளர் - அழகு விளங்கிய, கலாவம் - தோகையை, ஐது - வியப்புத் தருமாறு, விரித்து - நன்கு விரித்து, இயலும் - ஆடுகின்ற, மணிபுரை - நீலமணியின் நிறத்தை ஒத்த, எருத்தின் - பிடரியினை உடைய, மஞ்ஞை போல - மயில்போல, நின் - உன்னுடைய, வீபெய் கூந்தல் - மலர்

சூடிய கூந்தல், வீசுவளி உளர - வீசுகின்ற காற்று உளரி விரித்து விட, ஏகுதி - விரைந்து வருவாயாக.

முடிபு : மடந்தை! பொழுது எல்லின்று; எம் சிறுநல்லூர் உதுக்காண்; கூந்தல் வீசுவளி உளர ஏகுமதி என முடிக்க.

கருத்து : கொண்டு தலைக் கழியும் தலைவன் மடந்தாய்! எம் ஊர் அதோ பாராய்; விரைந்து வருவாய் என்று தலைவியை வழிநடை வருத்தம் நீங்க ஆற்றினான்.

வி-ரை : தலைவிக்கு மயிலையும், கூந்தலுக்கு அதன் கலாவத்தையும் உவமித்த அழகை உன்னுக.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - தலைவியை அயர்வகற்றிக் கொண்டேகல்.

பி-ம். 9. 'உதுக்காண்'

ஒப்புமைப்பகுதி

3-5. கூந்தலுக்கு மயிற் கலாவம்

"கலிமயிற் கலாவத்து அன்ன இவள்
ஒலிமென் கூந்தல் உரியவா நினக்கே" (குறுந். 225:6-7)

"விசும்பிழி தோகைச் சீர்போன்று இசினே
பசும்பொன் விரியிழை பைய நிழற்றக்
கரைசேர் மருதமேறிப் பண்ணைப்
பாய்வோள் தண்ணறுங் கதுப்பே" (ஐங். 74)

"கலிமயிற் கலாவம் கால்குவித்தன்ன ஒலிமென் கூந்தல்" (புறநா. 146:8-9)

5. வளிஉலர்தல்

"பெருங்காட்டுளரு மசைவளிபோல" (குறுந். 273:2, 278:1)

"விரைவளர் கூந்தல் வரை வளியுளர" (புறநா. 133:4)

6. எல்லின்று பொழுது

"பெய்தற்கு எல்லின்று பொழுதே அதனால்" (புறநா. 319:7)

8. பூண்மணி

"புல்லார் நல்லான் பூண்மணி கொல்லோ"
(குறுந். 275:4, 86:5-6, 190:6-7) (மலைபடு. 573)

9. சிறுநல்லூர்

"மடல்தாழ் பெண்ணைஎஞ் சிறுநல்லூரே" (அகநா. 380;15)

# 265. குறிஞ்சி

## தலைவன் கூற்று

இறுகுபுனம் மேய்ந்த அறுகோட்டு முற்றல்
அள்ளல் ஆடிய புள்ளி வரிக்கலை
வீளை அம்பின் வில்லோர் பெருமகன்
பூந்தோள் யாப்பின் மிஞிலி காக்கும்
5 பாரத்து அன்ன ஆர மார்பின்
சிறுகோற் சென்னி ஆரேற்று அன்ன
மாரி வண்மகிழ் ஓரி கொல்லிக்
கலிமயிற் கலாவத் தன்னவிவள்
ஒலிமென் கூந்தல் நம்வயி னானே.

எ-து : பின்னின்ற தலைவன் நெஞ்சிற்கு உரைத்தது.

பரணர்

ப-ரை : இறுகு புனம் - காய்ந்த கொல்லையை, மேய்ந்த - மேய்கின்ற, அறுகோட்டு - உதிர்ந்த கொம்பினை உடைய, முற்றல் - நன்கு முதிர்ச்சியை உடைய, அள்ளல் - சேற்றில், ஆடிய - ஓட்டி வருந்தச் செய்த, புள்ளி - புள்ளிகளை உடைய, வரிக்கலை - வரியையுமுடைய கலைமானை, வீளை அம்பின் - ஒலியை உடைய அம்பினையும் வில்லினையும் உடைய, வில்லோர் பெருமகன் - வீரர்களின் தலைவனாகிய, பூந்தோள் - பூமாலை யணிந்த தோளிலே, யாப்பின் - கவசம் பூட்டிய, மிஞிலி காக்கும் - மிஞிலி என்பவனாற் காக்கப்படுகின்ற, பாரத்து அன்ன - 'பாரம்' என்னும் ஊரைப்போன்ற, ஆரமார்பின் - ஆத்தி மாலையை அணிந்த மார்பினை உடைய, சிறுகோல் சென்னி - சிலவாகிய ஊர்களை ஆளுதலை மேற்கொண்ட செங் கோலை ஏந்திய சோழனுடைய, ஆர் ஏற்று அன்ன - ஆரேற்றைப் போன்ற, தலைவியாம், மாரி - மழைபோன்ற கொடையையும், வண்மகிழ் - கள் உணவையும் உடைய, ஓரி - ஓரி என்னும் கொடை வள்ளலது, கொல்லி மலையிலிருக்கின்ற, கலி மயில் - செருக்கிய மயிலின், கலாவத்தன்ன - தோகையை ஒத்த, ஒலிமென் கூந்தல் - தழைத்த மெல்லிய கூந்தலையுடைய, இவள் - இத்தலைவி, நம்வயினான் - நம்மிடம் அன்புடையவள் அல்லளோ? ஆகையால் கவலற்க - உன் செயல் விரைய முடியும் காண்.

முடிபு பாரத்தன்ன, ஆரேற்றன்ன, மயிலன்ன காதலி யாகிய இவள் கூந்தல் நம்வயினான; அதனால் நெஞ்சே கவலற்க எனமுடிக்க.

கருத்து : தலைவி நம்மிடம் பெரிதும் அன்புடையள் ஆதலின் நெஞ்சே நீ கவலற்க என்று பின்னின்ற தலைவன் கூறினான்.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய ஆக்கம் பற்றிய இளிவரல்.

பயன் - தலைவன் ஆற்றல்.

ஒப்புமைப்பகுதி

3. வேடர் கலையை எய்தல்

''வில்லுடை வீளையர் கல்லிடுபு எடுத்த
நனந்தலைக் கானத்து இனந்தலைப் பிரிந்த''
(குறுந். 272:2-3) (அகநா. 33:5, 182:4, 274)
(கைந்நிலை. 13) (சீவக. 120)

7. கொல்லிமலை ஓரிக்குரியது

''வல்வில் ஓரி கொல்லிக் குடவரை'' (குறுந். 100:5)
''ஓரி பல்பழப்பலவின் பயங்கெழு கொல்லி''
(அகநா. 208:21-2)
''ஓங்கிருங் கொல்லிப் பொருநன்'' (புறநா. 152:31)
''கொல்லியாண்ட வல்வில் ஓரி'' (புறநா. 158:5)

8-9. கூந்தலுக்கு மயிற்கலாபம்

''கலிமயிற் கலாவத்தன்ன இவள்
ஒலிமென் கூந்தல் உரியவால் நினக்கே'' (குறுந். 225:6-7)

# 266. முல்லை

## தோழி கூற்று

கொல்லைக் கோவலர் குறும்புனம் சேர்ந்த
குறுங்காற் குரவின் குவிஇணர் வான்பூ
ஆடுடை இடைமகன் சூடப் பூக்கும்
அகலுள் ஆங்கண் சீறூர் ஏமே
5 அதுவே சாலும் காமம் அன்றியும்

எம்விட்டு அகறிர் ஆயின் கொன்ஒன்று
கூறுவல் வாழியர் ஐய வேறுபட்டு
இரீஇய காலை இரியின்
பெரிய அல்லவோ பெரியவர் நிலையே.

எ-து : தலைவனைச் செலவு உடன்பட்டது.

(அல்லது)

கடிநகர் வரைப்பில் கண்டு மகிழ்ந்த தலைவற்குத் தோழி "நும்மாலே ஆயிற்று" என்று சொல்லியதூஉம் ஆம்.

## கச்சிப்பேட்டு இளந்தச்சனார்

ப-ரை : ஐய - ஐயனே! வாழியர் - வாழ்வீராக! எம் விட்டு - நீவிர் எம்மைப் பிரிந்து, அகறிர் ஆயின் - வேற்று நாட்டிற்குச் செல்வீராயின், (அக்காலத்தில்) கொல்லை - (யாம்) கொல்லைகளிலே, கோவலர் - தனித்திருக்கும் கோவலருடைய, குறும்புனம் சேர்ந்த - சிறிய புனத்தைச் சார்ந்த, குறுங்கால் - குறுகிய கால்களை உடைய, குரவின் - குரவ மரங்களினின்றும், குவி இணர் - உதிர்ந்து குவிந்த மலர்க் கொத்திலுள்ள, வான் பூ - வெள்ளிய பூ, ஆடு உடை - ஆடு மேய்க்கும் தொழிலை உடைய, இடைமகன் - இடையன், சூட - அணிந்து கொள்ளுமாறு, பூக்கும் - மலரும், அகலுள் ஆங்கண் - அகன்ற இடத்தை உடைய, சீறூரேமே - சிற்றூரின்கண்ணே இருக்கின்றேம். அதுவே காமம் சாலும் - அஃது ஒன்றுமே எங்கள் விருப்பத்திற்குப் பொருந்துவதாகும், அன்றியும் - அஃது அல்லாமலும், கொன் ஒன்று கூறுவல் - இன்னொன்றும் கூறுவேன்;, வேறுபட்டு - பிரிய எண்ணி, இரீஇய காலை - எம்மை வீட்டின்கண் இருக்கச் செய்த காலத்து, இரியின் - யாம் வருந்தின், பெரியவர் நிலை - பெருங்குடியிற் பிறந்தாரின் பண்பு, பெரிய அல்லவோ - வருந்தாது பொறுத்தல் அன்றோ.

முடிபு : ஐய! வாழியர்! இரியின் சீறூரேம்; பெரியவர் நிலை பெரிய அல்லவோ என முடிக்க.

கருத்து : பிரிந்தவர் மீண்டு வரும்வரை ஆற்றியிருத்தல் கற்புடை மகளிரின் இயல்பன்றோ? ஆகலின் நீவிர் செல்வீர்; வினைமுடித்து மீள்வீர்.

வி-ரை : பெரிய அல்லவோ பெரியவர்நிலை என்பது பிறிது மொழிதலணியாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - செலவுடன்படுதல்.

ஒப்புமைப்பகுதி

2. இணர் பூ

"கொம்புசேர் கொடியிணர் ஊழ்த்த" (குறுந். 66:4)

"கொன்றை கொடியிணர் ஊழ்ப்ப" (பரி. 8:24)

3. ஆடுடை இடைமகன்

"ஆடுடை இடைமகன் சென்னிச்
சூடிய எல்லாம் சிறுபசு முகையே" (குறுந். 221:4)

"அஉஅறியா அறிவில் இடைமகனே" (யா:கா:மேற்)

# 267. நெய்தல்

## தோழி கூற்று

நொச்சி மாஅரும்பு அன்ன கண்ண
எக்கர் ஞெண்டின் இருங்கிளைத் தொழுதி
இலங்குஎயிற்று ஏஎர் இன்நகை மகளிர்
உணங்குதினை துழவும் கைபோல் ஞாழல்
5 மணம்கமழ் நறுவீ வரிக்கும் துறைவன்
தன்னொடு புணர்த்த இன்அமர் கானல்
தனியே வருதல் நனிபுலம்பு உடைத்தென
வாரேன் மன்யான் வந்தனென் றெய்ய
சிறுநா ஒண்மணித் தெள்இசை கடுப்ப
10 இனமீன் ஆர்கை ஈண்டுபுள் ஒலிக்குரல்
இவைமகன் என்னா அளவை
வயமான் தோன்றல் வந்துநின் றனனே.

எ-து: தோழி காப்புக் கைம்மிக்குக் காமம் பெருகிய காலத்துச் சிறைப்புறமாகச் சொல்லியது.

(அல்லது)

வரைவு கடாயதூஉம் ஆம்.

கபிலர்

ப-ரை: நொச்சி - நொச்சியின், மா அரும்பு அன்ன - கரிய அரும்பைப் போன்ற, கண்ண - கண்ணை உடைய, எக்கர் - மணல் மேட்டின் கண்ணுள்ள, இருங்கிளை ஞெண்டின் தொழுதி - பெரிய சுற்றத்தையுடைய நண்டின் கூட்டம், இலங்கு எயிற்று - விளங்கிய பற்களின், ஏஎர் - அழகிய, இன் நகை - இனிய புன்முறுவலை

யுடைய, மகளிர் - மாதர்கள், உணங்கு தினை துழவும் கைபோல் - வெயிலிலே காயுந் தினையைக் கைவிரல்களால் துழாவுதல் போல, ஞாழல் - ஞாழலின், மணம் கமழ் நறுவீ - மணம் வீசும் உதிர்ந்த மலரை, வரிக்கும் - காலால் வரித்துக் கோலம் செய்யும், துறைவன் தன்னொடு - துறையை உடைய தலைவனொடு புணர்த்த - சேர்த்த, இன் - இனிய, அமர்த்த - விருப்பத்தை உடைய, கானல் - கடற்கரைச் சோலையில், தனியே வருதல் - இப்பொழுது அவள் இன்றித் தனியே வருதல் - புலம்பு நனியுடைத்தென - வருத்தம் மிக உடையது என்று கருதி, யான் மன் வாரேன் - பெரும்பாலும் அதனால் வாராதிருந்த யான், வந்தனென் - முன்பு ஒருநாள் வந்துளேனாகி, சிறுநா ஒண்மணி - சிறிய நாவை உடைய ஒள்ளிய மணிகளின், தெள் இசை கடுப்ப - தெளிந்த ஓசையைப்போல, இன மீன் ஆர்கை - கூட்டமாகிய மீன்களைத் தின்னுதற்கு, ஈண்டு - வந்து சேர்கின்ற, புள் ஒலிக்குரல் - பறவைகள் ஒலிக்கும் குரலைக் கேட்டு, இவை மகன் என்னா - இவை தலைவன் வரும் தேரின் மணியோசை போலும் என்று கருதி, அளவை - 'இவ் ஓசை' என்று சொல் எடுக்கும் முன், வயமான் தோன்றல் - வலிய குதிரையை உடைய தோன்றலாவான், வந்து நின்றனன் - ஆங்கு வந்து நின்றனன்; இப்பொழுது அதுவும் காண முடியாதபடி காவல் செய்தாயிற்று.

முடிபு : இன்னமர் கானல் வருதல் புலம்புடைத்தென வாரேன்மன்; யான் வந்தனென்; என்ன அளவை தோன்றல் வந்து நின்றனன் என முடிக்க.

கருத்து : தலைவனைக் காணவொண்ணாதவண்ணம் இற்செறிப்பு ஏற்பட்டுவிட்டது. இனி அவன் வரைந்துகொள்வதைத் தவிர வேறு வழியில்லை.

இறைச்சி - ஞாழலின் உதிர்ந்த பூவை நண்டு துழாவும் என்றது, இல்வயிற் செறிக்கப்பட்ட தலைவியை அயலவர் அலர் தூற்றி வருத்துவர் என்றதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - அறத்தொடு நிற்றல்.

ஒப்புமைப்பகுதி

4-5. நறுவீ ஞாழல்

"நறுவீ ஞாழலொடு புன்னைதா அய்" (குறுந். 318:2)

"எக்கர் ஞாழல் நறுமலர்" (ஐங். 150:1)

9. சிறுநா வொண்மணி

"சிறுநா வொண்மணி விளரியார்ப்ப" (குறுந். 336:3)

# 268. குறிஞ்சி

## தோழி கூற்று

சூருடை நனந்தலைச் சுனைநீர் மல்க
மால்பெயல் தலைஇய மன்னெடுங் குன்றத்துக்
கருங்காற் குறிஞ்சி மதனில வான்பூ
ஓவுக்கண்டு அன்ன இல்வரை இழைத்த
5 நாறுகொள் பிரசம் ஊறு நாடற்குக்
காதல் செய்தலும் காதலம் அன்மை
யாதெனிற் கொல்லோ தோழி வினவுகம்
பெய்ம்மணல் முற்றம் கடிகொண்டு
மெய்ம்மலி கழங்கின் வேலற் றந்தே.

எ-து. தலைவிக்குச் சொல்லியது.

(அலைது)

தலைவன் வந்தொழுகவும் வேறுபாடு கண்டாள் 'அவன் வருவானாகவும் நீ வேறுபட்டாய், வெறி எடுத்துக் கொள்ளும் வகையானன் என்றதூஉம் ஆம்.

### வெறிபாடிய காமக் கண்ணியார்

ப-ரை : தோழி - தோழியே! பெய்மணல் முற்றம் - மணல் பரப்பிய முற்றத்தை, கடிகொண்டு - சிறப்புச் செய்து, மெய்ம்மலி கழங்கின் - உண்மையைக் கூறுகின்ற, கழங்கின் - கழங்கு இட்டுக் குறி பார்த்தலை உடைய, வேலன் - பூசாரியை, தந்து - வீட்டிற்கு அழைத்து வந்து குறிகேட்டலால், சூர்உடை - அச்சத்தைத் தரு கின்ற, நனந்தலை - இடம் அகன்ற, சுனை - சுனையிடத்து, நீர்மல்க - நீர் நிறைய, மால் பெயல் தலைஇய - மேகம் மழை பெய்துவிட்ட, மன்நெடுங் குன்றத்து - மிக்க நெடிய குன்றத்தின் கண்ணே, கருங்காற் குறிஞ்சி - கரிய காம்பையுடைய குறிஞ்சி யின், மதன் இல - வலிமையில்லாத், வான் பூ - மெல்லிய சிறந்த வெள்ளிய பூ, ஓவுக் கண்டன்ன - ஓவியனொருவன் சித்திரித்தாற் போன்ற, இல்வரை இழைத்த - வேட்டுவர் இல்லங்களிலே இழைக்கப்பட்ட, நாறுகொள் பிரசம் - தேனடைக்கு வேண்டிய அளவு மணம்கொண்ட, ஊறு - தேன் ஊறுகின்ற, நாடற்கு - நாட்டையுடைய தலைவனுக்கு, காதல் செய்தலும் - யாம் பலவாறாக அன்பு காட்டியும், காதலம் அன்மை - அவன் நம்மேல் அன்பு காட்டாமைக்கு, யாதெனிற் கொல்லோ - யாது காரணம் என்பதை, வினவுகம் - கேட்டு அறிவோம்.

முடிபு : தோழி! அன்னை தந்த வேலனிடம் ஊரும் நாடற்குக் காதல் செய்தலும் காதலம் அன்மையாதெனில் வினவுகம் என முடிக்க.

கருத்து : தோழி அறத்தொடு நின்று களவொழுக்கத்தை வெளிப்படுத்தினால் வரும் ஏதம் யாது? என்றாள்!

உள்ளுறை : கருங்கோற் குறிஞ்சியின் மெல்லிய பூ, இல்லகத்து இழைத்த தேனடைக்கு மிக்க தேனூறும் என்றது குறிஞ்சி நிலமகளிரேமாகிய யாம் மருத நிலத்தலைவனாம் ஊரன் பால் நட்பு வைத்தும், அவன் அதனை அறிந்தான் இல்லையே என்று வருந்தியதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

3. கருங்கோற் குறிஞ்சி
"கருங்கோற் குறிஞ்சி அடுக்கம்பாய்" (புறநா. 374:8)
"கருங்கோற் குறிஞ்சிப் பூ" (குறுந். 3:4)
"கருங்கோற் குறிஞ்சி" (அகநா. 308:16)

4. ஓவு - ஓவியம்
"யோவுக் கண்டனை விரு பெரு நியமத்து" (பத். மதுரை. 365)
"ஓவுறழ் நெடுஞ்சுவர்" (பதிற். 68:17)

# 269. பாலை

## தோழி கூற்று

குரும்பை மணிப்பூண் பெருஞ்செங் கிண்கிணிப்
பால்ஆர் துவர்வாய்ப் பைம்பூண் புதல்வன்
மாலைக் கட்டில் மார்ஊர்பு இழிய
அவ்எயிறு ஒழுகிய வெவ்வாய் மாண்நகைச்
5 செயிர்தீர் கொள்கை நம்உயிர் வெங்காதலி
திருமுகத்து அலமரும் கண்இனைந்து அல்கலும்
பெருமர வள்ளியின் பிணிக்கும் என்னார்
சிறுபல் குன்றம் இறப்போர்
அறிவார் யாரவர் முன்னி யவ்வே.

எ-து : தோழில் வாயில் மறுத்தது.
(அல்லது)
செலவழுங்கு வித்ததூம் ஆம்.

## எயினந்தை மகன் இளங்கீரனார்

ப-ரை : குரும்பை - குரும்பையைப் போன்ற, மணிப்பூண் - மணியை உடைய பூணாகிய, பெருஞ்செங்கிண்கிணி - பெரிய சிறந்த கிண்கிணியையும், பால் ஆர் - பால்பருகும், துவர் வாய் - பவளம் போற் சிவந்த வாயையும், பைம்பூண் - மேலும் பலவாகிய அணிகலன்களையும் உடைய, புதல்வன் - அருமைச் செல்வன், மாலை கட்டின் - மாலை அணிதலை உடைய, மார்பு - இன்பத்திற்குக் காரணமாகிய மார்பில், ஊர்பு இழிய - ஊர்ந்து இறங்குதலால், அவ்எயிறு ஒழுகிய- அழகிய பற்களினின்று ஒழுகிய, வெவ்வாய் மாண்நகை - விருப்பமுற்ற மாட்சிமைப்பட்ட நகையையும், செயிர் தீர்கொள்கை - குற்றம் அற்றகொள்கையை யும் உடைய, நம் உயிர் வெங்காதலி - நம் உயிர் போன்ற விருப்பம் மிக்க காதலியினது, திருமுகத்து - அழகிய முகத்திலே, அலமரும் - உலாவுகின்ற, கண் - கண்கள், இனைந்து - வருந்தி, அல்கலும்-எப்பொழுதும், பெருமரவள்ளியின் - பெரிய மரத்தைச் சுற்றிய வள்ளிக் கொடியைப்போல, பிணிக்கும் என்னார் - நம்மைப் பிணிக்கும் என்று கருதாராய், சிறுபல்குன்றம் இறப்போர் - சிறிய பலவாகிய குன்றுகளைக் கடந்து சுரம் செல்வாராயினார். என்னதான் செய்யார்? அவர் முன்னிய அறிவார் யார்? அவர் கருதியுள்ளவை யாவர் தாம் அறிய வல்லார்.

முடிபு : குன்றம் இறப்போர் என்னார், அவர் முன்னிய அறிவார் யார்? எனமுடிக்க.

கருத்து : தலைவியின் கண்கள் தம்மைப் பிணிக்கும் என்பதை அறிந்தும் பரத்தையிற் பிரியும் தலைவரின் கருத்தை யார் அறிவார் என்று வாயில் மறுத்தது.

வி-ரை : தலைவனின் பிரிவுத் துன்பத்தைப் பக்கத்தில் இருக்கும் புதல்வனின் முகம் பார்த்துப் போக்கிக் கொள்வேன் என்பாள் புதல்வனை முதற்கண் கூறினாள்.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - வாயில் மறுத்தல்.

ஒப்புமைப்பகுதி

1. குரும்பை மணிப்பூண்
"குரும்பை மணிப்பூண் புதல்வன் தாயே" (ஐங். 442)

# 270. நெய்தல்

## தோழி கூற்று

தடந்தாள் தாழைக் குடம்பை நோனாத்
தண்டலை கமழும் வண்டுபடு நாற்றத்து
இருள்புரை கூந்தல் பொங்குதுகள் ஆடி
உருள்பொறி போல எம்முனை வருந்தல்
5 அணித்தகை அல்லது பிணித்தல் தேற்றாப்
பெருந்தோட் செல்வத்து இவளினும் எல்லா
எற்பெரிது அளித்தனை நீயே பொற்புடை
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வேந்தர் ஓட்டிய ஏந்துவேல் நன்னன்
10 கூந்தல் முரற்சியிற் கொடிதே
மறப்பன் மாதோ நின்விறல் தகைமையே.

எ-து : தோழி வாயில் நேர்கின்றாள் தலைமகனை நெருங்கிச் சொல்லி, வாயில் எதிர் கொண்டது. உடனிலைக் கிளவி வகையால்.

பரணர்

ப-ரை : எல்லா - எடா! நீ தலைவியைப் பிரிந்த காலத்து, தடம் - பெரிய, தாள் - அடியினை உடைய, தாழை - தாழைப் புதலினாலே கட்டப்பட்ட, குடம்பை - எங்களுடைய சிறிய வீட்டின்கண்ணே, நோனா - பொறுக்க முடியாத நிலையில், தண்டலை - சோலையிலுள்ள, கமழும் - பல்வேறு மலர்களை உடைமையால் நறுமணம் வீசும், வண்டுபடு - வண்டுகள் மொய்க்கின்ற, நாற்றத்து - நல்ல வாசனையை உடைய, இருள்புரை - இருளை ஒத்த கரிய, கூந்தல் - கூந்தலில், பொங்கு துகள் ஆடி - மிக்க துகள் படிய, உருள் பொறிபோல - நிலத்திடை உருளும் சக்கரம்போல, எம் முனை - எமக்கு முன்னால், வருந்தல் - வருத்தத்தை மேற்கொண்டு, அணித்தகை அல்லது - அழகு இழந்து நிற்றலையன்றி, பிணித்தல் - நின்னைத் தன் வசப்

படுத்தலை, தேற்றா - சிறிதும் அறியாத, பெருந்தோள் - பெரிய தோளை உடைய, செல்வத்து - செல்வ மகளாகிய, இவளினும் - இத் தலைவியைக் காட்டிலும், நீயே என் பெரிது அளித்தனை - நீதான் என்னிடத்து மிகவும் அன்பு கொண்டிருக்கின்றனை; இருப்பினும் நின் பிரிவுதான், பொற்புடை - அழகு பொருந்திய, விரியுளை - விரிந்து பரவிய பிடரி மயிரினை உடைய, பொலிந்த - பொலிவு பெற்ற, பரியுடை - விரிந்த செலவினை உடைய, நல்மான் - சிறந்த குதிரைப் படைகளை உடைய, வேந்தர் ஓட்டிய - பகை மன்னவராம் பிண்டன் போன்றோரை, ஏந்து வேல் - வேற்படையை ஏந்திய, நன்னன் - நன்னன் என்னும் மன்னன், கூந்தல் முரற்சியின் - பகையரசரின் மனைவிமார்களின் கூந்தலை மழித்துக் கயிறாகத் திரித்து, அதனால் அப் பகை மன்னரின் யானையைப் பிணித்த கொடுமையினும், கொடிது - மிகக் கொடியதாய் இராநின்றது. ஆதலால் உன் தகுதியை யான் மறந்தே விடுகின்றேன்.

முடிபு : எல்லா! இவளினும் எற்பெரிது அளித்தனை; நின் செயல் கூந்தல் முரற்சியிற் கொடிது; நின் தகைமையை யான் மறப்பேன் காண் என முடிக்க.

கருத்து : தலைவ! நின்னைத் தன் வசம் ஈர்க்கத் தெரியாது வருந்தும் தலைவியைக் காட்டிலும் என்பால் அன்புடையை. நின் செயல் கொடிது. நின் தகுதியை மறப்பேன்.

அ-ள் : தோன்றல் - பொறுத்தல். நோனாமை - பொறுக்க முடியாமை. தகை - தடுப்பது. எல்லா - ஏட என்னும் முன்னிலைச் சொல். இருபாற்கும் இச்சொல் பொது. முரற்சி - கயிறு.

வி-ரை : கணவனைத் தன் பக்கம் ஈர்க்க அறியாதவள் வருந்தி என் பயன் என்றாள். தலைவியுடன் இணைந்து தோழி தலைவனை எதிர்கொண்டமையால் உடனிலைக்கிளவி வகையின் பாற்பட்டது. 'இவளினும்' என்றமையால் தலைவி அருகி லிருந்தமை பெற்றாம். ஊடல், தணிக்க யான் முற்படாத அமயத்தும், என்னுடன் நீ பேச முற்படுகின்றனை என்பாள் 'எற்பெரிது அளித்தனை' என்றாள்.

மெய்ப்பாடு - உவகையைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - வாயினேர்தல்.

# 271. பாலை

## நற்றாய் கூற்று

இரும்புனிற்று எருமைப் பெருஞ்செவிக் குழவி
பைந்தாது எருவின் வைகுதுயில் மடியும்
செழுந்தண் மனையோடு எம்இவண் ஒழியச்
செல்பெருங் காளை பொய்மருண்டு சேய்நாட்டுச்
5 சுவைக்காய் நெல்லிப் போக்குஅரும் பொங்கர்
வீழ்கடைத் திரள்காய் ஒருங்குடன் தின்று
வீசுனைச் சிறுநீர் குடியினள் கழிந்த
குவளை உண்கண் என்மகள் ஓரன்ன
செய்போழ் வெட்டிப் பெய்தல் ஆய
10 மாலைவிரி நிலவில் பெயர்புபுறங் காண்டற்கு
மாஇருந் தாழி கவிப்பத்
தாஇன்று கழிக எற்கொள்ளாக் கூற்றே.

எ-து : மனை மருண்டு சொல்லியது.

பாடியோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : இரும்புனிற்று எருமை - அண்மையில் ஈனப்பட்ட கரிய எருமையின், பெருஞ் செவிக் குழவி - பெரிய காதுகளை யுடைய கன்று, பைந்தாது எருவின் - பசுமையான மலர்களி லிருந்து உதிர்ந்த மகரந்தங்களாகிற எரு பொருந்திய தொழுவத் தில், வைகு துயில் மடியும் - தங்கி உறங்கும், செழும் தண் மனை யொடு - வளம் கொழிக்கும் குளிர்ச்சியுற்ற மாளிகையொடு, எம் இவண் ஒழிய - எம்மை இங்கே ஒழியவிட்டு, செல் பெருங்காளை- தன்னை அழைத்துச் செல்லும் பெரிய காளை போன்றவனொடு, பொய் மருண்டு - அவன் கூறும் பொய் மொழிகளில் மயங்கி, சேய் நாட்டு - வெகு தூரத்திலுள்ள அவன் நாட்டை அடைய விரும்பி, சுவைக்காய் நெல்லி - இனிய சுவை தரும் காய்களை உடைய நெல்லி மரங்கள் நிறைந்த, போக்கு அரும் பொங்கர் - செல்லற்கு அரிய சோலையில், வீழ் - உதிர்ந்த, கடைதிரள்காய் - கடையில் உருண்டு திரண்ட நெல்லிக்காய்களை, ஒருங்கு உடன் தின்று - ஒன்று சேரத் தின்று, வீசுனைச் சிறுநீர் - வறந்த சுனையிலுள்ள சிலவாகிய நீரை, குடியினள் - பருகியவளாய், கழிந்த - சென்ற, குவளை - குவளை மலர் போன்ற, உண்கண் - மை எழுதிய கண்களையுடைய, என் மகள் - என் மகளை, ஓரன்ன - ஒரு

தன்மைப்பட, செய்போழ் வெட்டிப் பெய்தல் ஆய - சிவந்த பனங் குருத்தைக் கிழித்து பதப்படுத்தப் போடும், மாலைவிரி நிழலில் - மாலைப் பொழுதில் விரிந்த நிழலில், பெயர்பு புறங் காண்டற்கு - சென்று பின்னே போய்க் காணும்படிவிட்ட இந்நிலைக்கு முன்னதாகவே, மா இரும் தாழி கவிப்ப - பெரிய கரிய தாழியில் இட்டுக் கவிக்கும்படி,என் கொள்ளாக் கூற்று - என் உயிரைக் கொண்டு போகாத கூற்றானது, தா இன்று - தன் வலிமை குன்றி, கழிக - அழிந்து போவதாகுக.

முடிபு : காளை பொய் மருண்டு புறங்காண்டற்குச் செல்லும் என்னைக் கொள்ளாக் கூற்று கழிக என முடிக்க.

கருத்து : "என் மகளின் குறிப்பு அறியாது காளையுடன் போகவிட்ட யான் மடிவேனாக" என்று நற்றாய் தலைவி யில்லாத மனையைக் கண்டு மருண்டு கூறினாள். எருமைக் கன்று எருவிலே துயிலும் என்றது, தன் மகளை மயக்கி அழைத்துச் செல்லும் காளை தன் மார்பிலே அவளைத் துயிலப் பண்ணுவான் என்றவாறு.

மெய்ப்பாடு - உவகைக் கலுழ்ச்சி.

பயன் - ஆற்றியிருத்தல்.

ஒப்புமைப்பகுதி

1. எருமைக் குழவி

"இருமருப்பு எருமை ஈன்றணிக் காரான்
உழவன் யாத்த குழவியின் அகலாது" (குறுந்- 181:3-4)
(பட். 14), (ஐங். 92:1-2)

2. எருவின் தாது

"தெருவின் நுண்தாது குடைவன் ஆடி"

3-8. நெல்லிக்காயைத் தின்றபின்னர் நீரைக் குடித்தால் இனிக்கும்.

"நெல்லி தின்ற முள்ளெயிறு தயங்க" (குறுந். 262)

# 272. நெய்தல்

## தலைவி கூற்று
## (தோழி கூற்றும் ஆம்)

கடலம் காக்கைச் செவ்வாய்ச் சேவல்
படிவ மகளிர் கொடிகொய்து அழித்த
பொம்மல் அடும்பின் வெண்மணல் ஒருசிறைக்
கடுஞ்சூல் வதிந்த காமர் பேடைக்கு
5 இருஞ்சேற்று அயிரை தேரிய தெண்கழிப்
பூவுடைக் குட்டம் துழவும் துறைவன்
நல்கா மையின் நசைபழுது ஆகப்
பெருங்கை யற்றஎன் சிறுமை அலர்வாய்
அம்பல் மூதூர் அலர்தந்து
10 நோயா கின்றது நோயினும் பெரிதே.

எ-து: வரையாது நெடுங்காலம் வந்து ஒழுக, ஆற்றாளாய தலைவி சொல்லியது.

(அல்லது)

தோழி தலைவிக்குச் சொல்லுவாளாய், தலைவன் கேட்பச் சொல்லியதூஉம் ஆம்.

### முக்கல் ஆசான் நல்வெள்ளையார்

ப-ரை: கடல் - கடலின்கண் இயங்கும், காக்கை - காக்கையில், செவ்வாய்ச் சேவல் - சிவந்த வாயை உடைய ஆண் காக்கையானது, படிவ மகளிர் - நோன்பினை உடைய மகளிர், கொடி கொய்து - தாங்கள் தங்க வேண்டி அங்குப் படர்ந்துள்ள கொடிகளைக் கொய்தலால், அழித்த - அழிபட்ட, பொம்மல் - சொறிந்த, அடும்பின் - அந்த அடும்பின் கொடியை உடைய, வெண்மணல் ஒரு சிறை - வெளிய மணற்பரப்பின் ஒரு பால், கடுஞ் சூல் வதிந்த - முற்றிய கருவுடனே தங்கிய, காமர் பேடைக்கு - தான் விரும்பும் பேடைக்கு, இரும்சேற்று - கரிய சேற்றின் கண்ணே, அயிரை தேரிய - அயிரை மீனைத் தேர்ந் தெடுக்க வேண்டி, தெண் கழி - தெளிந்த கழியிடத்து, பூவுடைக் குட்டம் - பூக்கள் உதிரப் பெற்று மூடிக்கிடக்கும் பள்ளத்தினை, துழவும் - தன்னுடைய மூக்காலும், கால்களாலும் துழாவி நிற்கும் இயல்பமைந்த, துறைவன் - துறையினை உடைய தலைவன், நல்காமையின் - வந்து அன்பு காட்டாமையின், நசை

பழுது ஆக - யான் அவன் மாட்டுக் கொண்ட விருப்பம் வீணாக, பெருங்கையற்ற - அதனாற் செயல் இழந்த, என் சிறுமை - என் நோயானது, அம்பல் மூதூர் அலர் தந்து - பழி மொழி கூறுகின்ற அம்பலையுடைய பழைய நமது ஊரினரால் அறியப்பட்டு, நோயினும் பெரிது - முன்பு கொண்டிருந்த நோயைக் காட்டிலும், நோய் ஆகின்றது - மிக்க நோயுடையதாகின்றது.

முடிபு : துறைவன் நல்காமையின் அலர் தந்து நோயினும் பெரிது நோயாகின்றது எனமுடிக்க.

கருத்து : தலைவன் அன்புகாட்டாமையின் எங்கும் அலர் எழுகின்றது; நோய் மிகுகின்றது, என் செய்வேன் என்று தலைவி வருந்தினாள்.

உள்ளுறை : சேவல் தன் பெடைக்கு மீனைத் தேடும் என்றது, என்னை மணஞ் செய்து கொண்டு இன்புறுத்துமாறு பொருள் தேடச் சென்று ஈட்டி மீண்டு வந்து இல்லறம் நிகழ்த்து வான் என்பதாம்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

# 273. குறிஞ்சி

## தோழி கூற்று

இஃது எவன் கொல்லோ தோழி மெய்பரந்து
எவ்வங் கூர்ந்த ஏமுறு துயரம்
வெம்மையின் தான்வருத் துறீஇ நம்வயின்
அறியாது அயர்ந்த அன்னைக்கு வெறியென
5 வேலன் உரைக்கும் என்ப ஆகலின்
வண்ணம் மிகுந்த அண்ணல் யானை
நீர்கொள் நெடுஞ்சுனை அமைந்து வார்ந்துஉறைந்துஎன்
கண்போல் நீலம் தண்கமழ் சிறக்கும்
குன்ற நாடனை உள்ளுதொறும்
10 நெஞ்சு நடுக்குறூஉம் அவன்பண்புதரு படரே.

எ-து : தோழி தலைவனது வரவுணர்ந்து தலைவிக்கு உரைப்பாளாய் 'நின்வேறுபாடு, தாய்க்குப் புலனாக அவள் வேலனைக் கூவி வெறி அயரும்' என்பதுபடச் சொல்லியது.

## மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனார்

ப-ரை : தோழி! மெய்பரந்து - உடல் முழுதும் பரந்து, எவ்வம் கூர்ந்து - துன்பம் மிக்க, ஏமுறு துயரம் - மயங்கிய துயரத்தை நோக்கி, வெம்மையில் தான் வருத்துறீஇ - நம்பால் உள்ள விருப்பத்தாலே தானும் வருத்தம் உற்று, நம்வயின் - நம் களவினை, அறியாது - உணராது, அயர்ந்த - முருகக் கடவுட்கு வெறி விளையாடிய, அன்னைக்கு - தாய்க்கு, வேலன் - பூசாரி, வெறி என உரைக்கும் என்ப ஆகலின் - இது தெய்வம் தீண்டிற்று என்று கூறுவானாதலின், வண்ணம் மிகுத்த அண்ணல் யானை - நிறம் செறிந்த பெரிய யானை. நீர்கொள் நெடும் சுனை - நீர் முகந்து கொள்கின்ற நெடிய சுனையின் கண்ணே, அமைந்து - பொருந்தி, வார்ந்து - நீண்டு, உறைந்து - தங்கி, என் - என்னுடைய, கண்போல் - கண்ணைப்போல் விளங்குகின்ற, நீலம் - நீலமலர், தண் கமழ் சிறக்கும் - குளிர்ச்சிய வாய் மணந்து பொலியும், குன்ற நாடனை - மலை நாடனை, உள்ளுதொறும் - நினைக்கும்தோறும், அவன் பண்பு தரு படர் - அவன் இயல் பாகத் தந்த துன்பமானது, நெஞ்சு - எனது நெஞ்சை, நடுக்குறூஉம் - நடுங்கச் செய்யும். இதன் விளைவு என் ஆகுமோ?

முடிபு : தோழி! நம் வயின் அறியாது அயர்ந்த அன்னைக்கு வேலன் வெறியென உரைக்கும் என்ப; ஆகலின் குன்ற நாடனை உள்ளுதொறும், படர் நெஞ்சு நடுக்குறூஉம் எனமுடிக்க.

கருத்து : தலைவி! கூட்டத்தால் நினக்கு ஏற்பட்ட நிறவேறு பாட்டைத் தெய்வம் தீண்டிற்றென நினைத்து அன்னை வெறி யாட முற்பட்டனள்; இதன் விளைவு என்னவோ? என்று தலைவன் கேட்கக் கூறி வரைவு கடாயினாள்.

வி-ரை : இதனைக் கேட்ட தலைவன் வரைவொடு புகுவான் ஆகலின் இது வரைவு கடாதலாயிற்று.

உள்ளுறை : யானை தலைவனாகவும், சுனை குடியாகவும், நீர் தலைவியாகவும்; அவ்யானை உண்ணுதல் தலைவன் தலைவியை மணந்து நலன் நுகர்தலாகவும் நீலம் மலர்தல் இரு திறத்துப் பெற்றோரும் மகிழ்வதாகவும் கொள்க.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

# 274. பாலை

## தோழி கூற்று

நெடுவான் மின்னிக் குறுந்துளி தலைஇப்
படுமழை பொழிந்த பகுவாய்க் குன்றத்து
உழைமான் அம்பிணை தீண்டலின் இழைமகள்
பொன்செய் காசின் ஒண்பழம் தாஅம்
5 குமிழ்தலை மயங்கிய குறும்பல் அத்தம்
எம்மொடு வருதியோ பொம்மல் ஓதிஎனக்
கூறின்றும் உடையரோ மற்றே வேறுபட்டு
இரும்புலி வழங்கும் சோலைப்
பெருங்கல் வைப்பின் சுரன்இறந் தோரே.

எ-து : தோழி பருவம் மாறுபட்டது.

### காவன் முல்லைப் பூதனார்

ப-ரை : இரும் புலி வழங்கும் - கரிய புலிகள் சினம் கொண்டு சஞ்சரிக்கும், சோலை - சோலைகளை உடைய, பெருங் கல்வைப்பின் - பெரிய மலையிடத்து உள்ளதாகிய, சுரன் - பாலையின் கண்ணே, இறந்தோர் - சென்ற காதலர், நெடுவான் - நீண்ட மேகங்கள், மின்னி - மின்னுதலைச் செய்து, குறுந் துளி தலைஇ - சிறிய துளிகளாய்ப் பெய்யத் தொடங்கி, படுமழை பொழிந்த - மிக்க மழை பெய்த, பகுவாய்க் குன்றத்து - வெடிப்பு களை உடைய மலைக் சாரலிலே, உழை மான் அம்பிணை - உழையாகிய அழகிய பிணைமான், தீண்டலின் - உராய்தலி னால், இழை - அணிகலன்கள் தரித்த, மகள் - மடந்தை ஒருத்தி யின், பொன் செய் காசின் - பொன்னாற் செய்த கலன்களைப் பரப்பினாற்போல, ஒண்பழம் தாஅம் - ஒள்ளிய பழங்கள் உதிரப் பெற்ற, குமிழ் - குமிழ மரங்கள், தலை மயங்கிய - ஒன்றோடு ஒன்று செறிந்து கிடக்கும், குறும்பல் அத்தம் - குறிய பலவழிகளை உடைய சுரத்தின் வழியிலே, பொம்மல் ஓதி - அடர்த்தியான கூந்தலை உடையாய்! எம்மொடு - நீ எம்முடன், வருதியோ என - வருகின்றனையோ என்று, கூறின்றும் உடையர் - சொல்லையும் உடையர் காண்; மற்று - ஆதலின் அவ்வழி மழை பெய்து தட்பம் பொருந்தியுள்ளது: எனவே நீ வருந்தற்க.

முடிபு : தலைவீ! குறும்பல் அத்தம் சுரன் இறந்தோர் பொம்மல் ஓதி எம்மொடு வருதியோ எனக் கூறின்றும் உடையர்; ஆதலின் வருந்தற்க: எனமுடிக்க.

கருத்து : தலைவன் சென்ற காட்டது கடுமை கருதி வருந்திய தலைவிக்கு காடு மழை பெய்து தட்பம் பொருந்திற்று; வருந்தற்க என்று தோழி கூறினாள்.

இறைச்சி : மான் உராய்ந்த அளவில் குமிழ் பழத்தை உதிர்க்கும் என்றது, தலைவர் பொருள் ஈட்ட முற்பட்ட அளவில பொருள் கிடைக்கப் பெற்று விரைந்து வரைய வருவர் என்ற வாறு.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

4-5. பொன்செய் காசின் ஒண்பழம்

"வளைவாய்க் கொண்ட வேப்ப ஒண்பழம்
புதுநாண் நுழைப்பான் நுதிமாண் வள்உகிர்"
(குறுந். 67:2-3)

"பொலஞ் செய் கிண்கிணிக், காசின்
அன்ன போதீன் கொன்றை" (குறுந். 148:3)

"காசினை அன்ன நளிகனி உதிர" (குறுந். 274:2)

# 275. நெய்தல்

## தலைவி கூற்று

செந்நெல் அரிநர் கூர்வாட் புண்ணுறக்
காணார் முதலொடு போந்தெனப் பூவே
படையொடும் கதிரொடும் மயங்கிய படுக்கைத்
தன்னுறு விழுமம் அறியா மென்மெலத்
5 தெறுகதிர் இன்துயில் பசுவாய் திறக்கும்
பேதை நெய்தற் பெருநீர்ச் சேர்ப்பற்கு
யான்நினைந்து இரங்கேன் ஆக நோய்இகந்து
அறனி லாளன் புகழஎற்
பெறினும் வல்லேன்மன் தோழி யானே.

எ-து : சிறைப்புறமாகத் தலைவனது வரவுணர்ந்து வற்புறுப்ப, வன்புறை எதிர் மொழிந்தது.

## அம்மூவனார்

ப-ரை : தோழி - தோழீ; செந்நெல் அரிநர் - சிவந்த நெற் கதிர்களை அறுவடை செய்யும் உழவர், கூர்வாள் - தம் கூரிய அரிவாளினால், புண்உற - புண்பட, காணாராக - அதனை அறியாதவராய், முதலொடு - கதிர்த்தூற்றோடும், போந்தென - போந்ததனாலே, பூ - விழுந்த நெய்தற் பூக்கள், படையொடும் - அரிவாளொடும், கதிரொடும் - கதிர்களொடும், மயங்கிய - ஒன்று கலந்தனவாகிய, படுக்கை - கதிர்களுக்கு இடையிலே அமைந்த படுக்கையிற் கிடந்து, தன் உறு விழுமம் அறியா - தான் உற்ற துன்பத்தை ஆராயாமல், மென்மெல - மெல்ல மெல்ல, தெறு கதிர் இன் துயில் - கொடிய ஞாயிற்றைக் கண்ட அளவில் இனிய துயிலிடத்து, பசுவாய் திறக்கும் - பசிய வாயைத் திறக்கும், பேதை நெய்தல் - பேதைமையுற்ற நெய்தல் மலர்கள் மிக்க, பெருநீர்ச் சேர்ப்பற்கு - பெரிய கடற்கரைத் தலைவனுக்காக, யான் நினைந்து - யான் படுகின்ற துன்பத்தையும் மறந்து, அவனை நினைந்து, இரங்கேன் ஆக - இரக்கும் உறுவன் அல்லேன் ஆதலால், அவனை வெறுத்தேனும் அல்லேன்; நோய் இகந்து - வருத்தம் நீங்கி, அறனில்லாளன் - கருணையற்ற அவன், புகழ - எல்லோரும் புகழும்படி, என் - என்னை, பெறினும் - மீண்டும் பெறுவதாயினும், யான் வல்லேன் - யான் அதற்கும் உடம்படு கின்றேன். அங்ஙனம் வெறாது விடப்பட்டதனால் அதுவும் இல்லையாயிற்று;

முடிபு : தோழீ! சேர்ப்பற்கு, இரங்கேன், அறன் இல்லாளன் புகழ எற்பெறினும் யான் வல்லேன் எனமுடிக்க,

கருத்து : தலைவனை யான் நினைந்து வருந்தவும் இல்லை; வெறுக்கவும் இல்லை, பிறர் புகழ என்னை மீட்டும் அடைய விரும்பின் அதற்கும் உடம்படுவேன் என்றாள்.

உள்ளுறை : உழவர்களால் அறுபட்ட நெய்தற் பூக்கள் கதிரோடு, அதனிடையில், வாடிக் கிடந்தும், தன் துன்பத்தை ஆராயாமல் கதிரை நோக்கினவுடன் மலரும் என்றது, அயலவர் கூறும் அலராலே தலை எழாதபடி படுக்கையிற் கிடந்தும் யான் தலைவனைக் காணில் என் நோயைக் காட்டாது முகமலர்ச்சி யோடு அவற்கு உடம்படுவேன் என்றதாம்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

இவ் உள்ளுறைக் கருத்தை,

"கடுங்கண் வயலுழவர் காலைத் தடிய,
மடங்கி அரியுண்ட நீலம்—தடஞ்சேர்ந்து,
நீளரிமேற் கண்படுக்கும்" என்ற பழம்பாடலிலும் காண்க.

# 276. குறிஞ்சி

## தோழி கூற்று

கோடு துவையாக் கோள்வாய் நாயொடு
காடுதேர் நசைஇய வயமான் வேட்டு
வயவர் மகளிர் என்றி யாயிற்
குறவர் மகளிரேம் குன்றுகெழு கொடிச்சியேம்
5 சேணோன் இழைத்த நெடுங்காற் கழுதிற்
கான மஞ்ஞை கட்சி சேக்கும்
கல்லகத் ததுஎம் மூரே செல்லாது
சேர்ந்தனை சென்மதி நீயே பெருமலை
வாங்கமை பழுனிய நறவுண்டு
10 வேங்கை முன்றிற் குரவையுங் கண்டே.

எ-து: பகற்குறி வந்து பெயரும் தலைவனை உலகியல் சொல்லியது.

**தொல்கபிலர்**

ப-ரை: தலைவ! கோடு துவையா - கொம்பை ஊதி ஒலிப்பித்து, கோள்வாய் நாயொடு - கௌவிப் பிடிக்கும் நாயோடு, காடு தேர் நசைஇய - காட்டின் கண்ணே ஆராய்கின்ற விருப்பமுற்ற, வயமான் வேட்டு - வலிய மானை வேட்டையாற் கொள்ளும், வயவர் மகளிர் - வேட்டுவ வீரரின் மகளிரென்' என்றியாயின் - எம்மைக் கூறுவையாயின், குறவர் மகளிரேம் - யாம் வேடர் மகளிர் அல்லேம், குறமகளிரேம். குன்றுகெழு கொடிச்சியேம் - மலையில் வாழ்கின்ற கொடிச்சியரேம். சேணோன் - தினை காவலன், இழைத்த - அமைத்த, நெடுங்கால் -

நீண்ட கால்களை உடைய, கழுநில் - கட்டிய பரணை, கான மஞ்ஞை - காட்டில் வாழ்கின்ற மயில்கள், கட்சி சேக்கும் - தாம் தங்குதற்குரிய இடமாகக்கொண்டு, அதன்கண்ணே தங்கும், கல் அகத்தது - இம் மலையின் அகத்ததாக உள்ளது, எம் ஊர் - யாம் வாழும் ஊர். ஆதலால், செல்லாது-இப்பொழுது நீ நின்னூர்க்குச் செல்லாது, சேர்ந்தனை - எம் ஊரை அடைந்து, பெருமலை - பெரிய மலையின் கண்ணே தோன்றி, வாங்கு அமை - வளைந்த மூங்கிலால் ஆகிய குழாயில் நிரப்பி, பழுனிய - முற்ற வைத்த, நறவு - கள்ளை, உண்டு - பருகி, வேங்கை முன்றில் - வேங்கை மரத்தை உடைய முற்றத்திடத்து, குரவையும் கண்டு - யாம் ஆடும் குரவைக் கூத்தையும் கண்டு மகிழ்ந்து, சென்மதி - பிறகு நின் ஊர்க்குச் செல்வாயாக;

முடிபு : தலைவ! யாம் வயவர் மகளிர் அல்லேம்; குறவர் மகளிரேம்; கொடிச்சியேம்; நறவுண்டு, குரவையுங் கண்டு சேர்ந்தனை செல், என முடிக்க.

கருத்து : பாங்கியிற் கூட்டத்து இறுதியில் தன்னூர்க்குச் செல்ல முற்பட்ட தலைவனைப் பார்த்து, தோழி எம்மூர் வந்து நறவுண்டு குரவை கண்டு செல்வீராக என்று கூறி வரைவு கடாயினாள்.

அ-ள் : கோடு - கொம்பென்னும் ஊது கருவி. துவை - ஒலி. நசை - வேட்கை. கழுது - கட்டுப் பரண். கட்சி - கூடு. பழுனிய - முற்றிய. சேணோன் - தினை காவலன்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவுகடாதல்.

ஒப்புமைப்பகுதி

5. சேணோன்

"சேணோன் மாட்டிய நறும்புகை ஞெகிழி (குறுந். 150:1)
"சேணோன் அகழ்ந்து மடிவாய்ப் பயம்பு" (மதுரைக். 294)
"கழுதிற் சேணோன்" (மலைபடு. 243)
"ஏனலஞ் சிறுதினைச் சேணோன்
கையதைப் பிடிக்கை அமைந்த கனல்
வாய்க் கொள்ளி" (அகநா. 73:14-5)
"கல்லுயர் கழுதிற் சேணோன்" (அகநா. 392:14)
"கலி கெழுமீமிசைச் சேணோன் ஓசையும்" (சிலப். 25:30)

9-10. முன்றிற் குரவை

"பழுநிய தேறல் மகிழ்ந்து, வேங்கை முன்றில்
குரவை அயரும்" (புறநா. 129:1-3)

"முன்றிற் குறவர், மனைமுதிர் மகளிரொடு
குரவை தூங்கும்" (அகநா. 232:6-10)

"நறவு நாட்செய்த குறவர் தம் பெண்டிரொடு
மான்றோல் சிறுபறைகறங்கக் கல்லென
வான்றோய் மீமிசை அயரும் குரவை, (மலைபடு. 320-22)

# 277. பாலை

## தலைவி கூற்று

கொடியை வாழி தும்பி இந்நோய்
படுகதில் அம்ம யான்நினக்கு உரைத்தென
மெய்யே கருமை அன்றியும் செவ்வன்
அறிவும் கரிதோ அறனிலோய் நினக்கே
5 மனையுறக் காக்கும் மாண்பெரும் கிடக்கை
நுண்முள் வேலித் தாதொடு பொதுளிய
தாறுபடு பீரம் ஊதி வேறுபட
நாற்றம் இன்மையிற் பசலை ஊதாய்
சிறுதறும் பறவைக்கு ஓடி விரைவுடன்
10 நெஞ்சுநெகிழ் செய்ததன் பயனோ அன்பிலர்
வெம்மலை அருஞ்சுரம் இறந்தோர்க்கு
என்னிலை உரையாய் சென்றவண் வரவே.

எ-ரு: பட்ட பின்றை வரையாது, கிழவோன் நெட்டிடைக் கழிந்து பொருள் வயிற் பிரிய ஆற்றாளாய தலைவி, தும்பிக்குச் சொல்லியது.

### தும்பிசேர் கீரனார்

ப-ரை: தும்பி - வண்டே!, அறன் இலோய் - நல் வழியிற் செல்லாதோய், கொடியை - நீ மிகவும் கொடியை; மனையுற - நம் வீட்டைச்சுற்றி, காக்கும் - காவலாக இருக்கும், மாண்பெரும் கிடக்கை - மாட்சிமைப்பட பெரியதாக அமைக்கப்பட்ட, நுண் முள்வேலி - நுண்ணிய முள்வேலியில் பட்ர்ந்து, தாதொடு

பொதுளிய - மகரந்தங்களோடு செறிந்த, வீரம் - பீர்க்கம் பூக்களை, ஊதி - குடைந்து சென்று தேனைப் பருகி, வேறுபட - அதற்கு மாறாக, நாற்றம் இன்மையின் - நல்ல வாசனை இல்லாமையினாலே, பசலை ஊதாய் - என் மேற் பரவிய பசலை யிடத்துப் பொருந்தி ஊதவும் செய்திலை: சிறு குறும் பறவைக்கு - சிறிய குறிய நின் பேடை விரும்புதலும், விரைவுடன் ஓடி - நீ விரைவாகப் பறந்து சென்று, நெஞ்சு நெகிழ - அப் பேடை மனம் மகிழ, செய்ததன் பயனோ - புணர்ந்து அன்பு காட்டியதன் பயனோ? அன்பிலர் - என்பால் அன்பு அற்றவராய்,வெம் மலை - கொடிய மலையில் அமைந்துள்ள, அரும் சுரம் - போதற்கு அருமையான வழியில், இறந்தோர்க்கு - கடந்து சென்ற தலைவரிடம் பறந்து சென்று, என் நிலை உரையாய் - யான் படும் துன்பத்தைச் சொன்னாயும் இல்லை, அவண் சென்று - அங்குச் சென்று, வரவு - அவர் வரவை வேண்டினாயும் இல்லை. யான் நினக்கு - யான் உனக்கு உரைத்தென - சொன்னவை யாவும், மெய்யே - உண்மையே; கருமை அன்றியும் - உன் நிறம் கருமை யாக இருத்தலோடல்லாமல் செவ்வன் அறிவும் கரிதோ - அறிவும் நல்ல கரிய நிறமுடையதோ? கூறுவாய்? இந் நோய் படுக - இந்த நோயால் நான் இறந்துபடுவேனாக; வாழி - நெடுங்காலம் நீ வாழ்வாயாக.

முடிபு : தும்பி! பீரம் ஊதி பசலை ஊதாய்! இறந்தோர்க்கு என் நிலை உரையாய்? கொடியை, யான் நோய் படுக, என முடிக்க.

வி-ரை : இச் செய்யுள் பசலை பாய்தலும் தூது முனிவின்மை யும் ஆம். பேடையுடன் கூடி இன்பம் துய்க்கின்ற நீ பிறரும் அவ்வாறு இன்பம் பெற வேண்டிலை, தலைவர்பாற் பறந்து சென்று உரைக்கிலை, அதனால் நின் அறிவு கரிதோ என்றாள்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

கருத்து : வண்டே! நீ கூடி முயங்குவதுபோல எம்மை முயங்குமாறு செய்திலை, ஆதலின் கொடியை.

ஒப்புமைப்பகுதி

1. வண்டு விடு தூது

"அம்ம வாழியோ அணிச் சிறைத் தும்பி" (குறுந். 392)

6-8. பசலைக்குப் பீர்க்கின் மலர்
"இன்னள் ஆயினள் நன்னுதல் என்றவர்
.........................
மாரிப் பீரத்து அலர்சில கொண்டே" (குறுந். 98:1-5)

# 278. நெய்தல்

## தோழி கூற்று

படுகாழ் நாறிய பராரைப் புன்னை
அடுமரன் மொக்குளின் அரும்புவாய் அவிழப்
பொன்னின் அன்ன தாதுபடு பன்மலர்
சூடுநர் தொடுத்த மிச்சில் கோடுதொறும்
5 நெய்கனி பசுங்காய் தூங்கும் துறைவனை
இனியறிந் திசினே கொண்கன் ஆகுதல்
கழிச்சேறு ஆடிய கணைக்கால் அத்திரி
குளம்பினும் சேயிறா ஒடுங்கின
கோதையும் எல்லாம் ஊதை வெண்மணலே.

எ-து : தோழி தலைவிக்கு வரைவு மலிந்தது.

### உலோச்சனார்

ப-ரை : அடுமரல் மொக்குளின் - பொருந்திய மரலின் மொக்குளைப்போல, படுகாழ் நாறிய - முற்றிய வயிரம் விளங்கிய, பராரை - பருத்த அடியை உடைய, புன்னை - புன்னையின், அரும்பு வாய் அவிழ - அரும்புகள் கட்டு அவிழ்ந்து மலர, பொன்னின் அன்ன - [அங்ஙனம் மலர்ந்த] பொன்னை ஒத்த, தாதுபடு - மகரந்தங்கள் பொருந்திய, பன்மலர் - பலவாகிய மலர்களில், சூடுநர் தொடுத்த - சூட்டிக் கொள்பவர் பறித்துத் தொடுத்தனபோக, மிச்சில் - மிகுந்தன, கோடுதொறு - கிளைகள் தோறும், நெய்கனி பசுங்காய் - நெய்மிக்க பசிய காயாக, தூங்கும் - தொங்கும், துறைவனை - கடல் துறையை உடைய தலைவனை, கழிச்சேறு ஆடிய - கழியின் கரையில் உள்ள சேறுபட்ட, கணைக்கால் - திரண்ட கால்களை உடைய, அத்திரி - அவனது தேரில் பூட்டிய கோவேறு கழுதையின், குளம்பினும் - குளம்பில் எங்கும், சேஇறா - சிவந்த இறா மீன்கள், ஒடுங்கின - மிதிபட்டு அழிந்தன, கோதையும் - அவனது மாலை

யிலும், எல்லாம் - மற்று எல்லாவற்றிலும், ஊதை வெண்மணல் - காற்றால் எறியப்படும் வெள்ளிய மணல் ஒடுங்கின. ஆதலின், கொண்கன் ஆகுதல் இனி அறிந்திசின் நினக்கே கணவன் ஆக விரைவில் வந்தனன் என்பதை இப்பொழுதுதான் அறிந்து கொண்டேன்.

முடிபு : தூங்குநீ துறைவனைக் கொண்கன் ஆதல் அறிந்திசின் என முடிக்க.

வி-ரை : பகலிலே அனைவரும் அறிய அத்திரியின் மேல்ஏறி அருங்கலன் கொண்டு ஆசை மிகுதியால் தலைவன் விரைந்து வருதலின் குளம்புகளில் இறால் மீன்கள் ஒடுங்கின என்க. புன்னை மலரில் கொய்யாது ஒழிந்தன நெய் கனிந்த காயாகத் தொங்கும் என்றது, அயலவர் கூறும் பழிச்சொற்களால் வருந்தியது போக இனி, நெகிழ்ந்த உள்ளத்துடன், மகிழ்வாய் என்றபடி.

மெய்ப்பாடு - உவகை.

ப்யன் - ஐயம் தீர்த்தல்.

# 279. பாலை

## நற்றாய் கூற்று

வேம்பின் ஒண்பழம் முணைஇ இருப்பைத்
தேம்பால் செற்ற தீம்பழம் நசைஇ
வைகுபனி உழந்த வாவல் சினைதொறும்
நெய்தோய் திரியின் தண்சிதர் உறைப்ப
5 நாட்சுரம் உழந்த வாள்கேழ் ஏற்றையொடு
பொருத யானைப் புட்டாள் ஏய்ப்ப
பசிப்பிடி உதைத்த ஓமைச் செவ்அரை
வெயில்காய் அமையத்து இமைக்கும் அத்தத்து
அதர்உழந்து அசையின கொல்லோ ததர் வாய்ச்
10 சிலம்பு கழீஇய செல்வம்
பிறர்உழைக் கழிந்தஎன் ஆயிழை அடியே.

எ-து : மகட்போக்கிய தாய் சொல்லியது.

**கயமனார்**

ப-ரை : ததர்வாய்ச் சிலம்பு கழீஇய செல்வம் - தலைவனைச் சார்ந்து மணம் முடிக்கையிற் காலில் அணிந்திருந்த சிலம்பைக் கழற்றுதற்குச் செய்யும் விழாச் சிறப்பை, பிறர் உழைக் கழிந்த - யான் கண்டு மகிழாது பிறர் கண்டு மகிழுமாறு சென்றொழிந்த, ஆயிழை - அழகிய அணிகலன்களைத் தரித்த, அடி - என் மகளின் பாதங்கள், வேம்பின் ஒண்பழம் முணைஇ - வேம்பின் ஒள்ளிய பழத்தைத் தின்னுதல் வெறுத்து, இருப்பை - இருப்பையின், தேம்பால் செற்ற - தேன்போலும் பால்வற்றிய, தீம்பழம் - இனிய பழத்தை, நசைஇ - விரும்பி, வைகு பனி உழந்த - உறைக்கும் பனியால் வருந்திய, வாவல் - வௌவால், சினை தொறும் - கிளைகள் தோறும் பறந்து செல்லுதலால் அவற்றின் மேல், நெய்தோய் திரியில் - நெய்யில் தோய்ந்த திரிச்சுடர் விழுதல்போல, தண்சிதர் உறைப்ப - தண்ணிய பனித்துளிகள் மிக விழ, நாள் - விடியற் காலையில், சுரம் - சுரத்திற் சென்று, உழந்த - வருந்திய, வாள்கேழ் ஏற்றையொடு - வாள்போலும் நிறமுற்ற வரிகளை உடைய ஆண் புலியோடு, பொருத - போர் செய்த, யானை - யானையின், புண்தாள் ஏய்ப்ப - புண்ணை யுடைய கால்களைப்போல, பசி - பசியால், பிடி உதைத்த - வருந்திய பெண்யானை உதைத்து, ஓமைச் செவ் அரை - மேற் பட்டையை உரித்துப் பெயர்த்த, ஓமை மரத்தின் சிவந்த அடிமரம், வெயில் காய அமையத்து - ஞாயிறு எழுந்து வெயில் வீசும்பொழுது, இமைக்கும் - விளங்கித் தோன்றும், அத்தத்து அதர் உழந்து பாலையின் கொடிய வழியில் சென்று வருந்தி, அசையின கொல்லோ - தளர்ந்து போயினவோ?

முடிபு : ஆயிழை அடி அதர் உழந்து அசையின கொல்லோ என முடிக்க.

கருத்து : சிலம்பி கழி நோன்பை யான் காணாது சுரத்திடைச் சென்ற என் மகளின் பாதங்கள் பெரிதும் நொந்தன கொலோ? யான் என் செய்வேன்?

பி-ம் : 3. 'வைகுபனி உறந்த'

நயம் : வேம்பின் பழத்தை வெறுத்து, இருப்பையின் பழத்தை விரும்பி, வௌவால் வெய்யபனி உறைப்ப இருக்கும் என்றது, தன் தந்தையின் செல்வத்தை வெறுத்து, கணவனது செல்வத்தை விரும்பி இரவிலே சென்ற என் மகள் புகுந்த வீட்டில் எங்ஙனம் இருக்குமோ என்றதாம். மேலும், பிடியால் உதைபட்ட ஓமை ஞாயிறு தோன்றியவுடன் நந்து விளங்கித் தோன்றும்

என்றது, மகளால் வெறுத்து நீக்கப்பட்டயான், விடிந்தவுடன் எல்லோராலும் பழிக்கப்பட்டு எங்கும் தெரியலாயினேன் என்றதாம்.

மெய்ப்பாடு - உவகைக் கலுழ்ச்சி.

பயன் - ஆற்றாமை நீங்குதல்.

ஒப்புமைப்பகுதி

7. ஓமை

"புன்றாள் ஓமைச் சுரன் இறந்தோரே" (குறுந். 260:8)

யானை ஓமையின் பட்டையைத் தின்னுதல்

கான யானை தோல்நயந்துண்ட
பொரிதாளோமை வளிபொரு நெடுஞ்சினை"

(குறுந். 79:1-2)

அத்த ஓமை

"அத்த ஓமை அங்க வட்டிருந்த" (குறுந். 207:2)

"ஓமைப்பெரும் பொளிச் சேயரை நோக்கி"

(அகநா. 397:11-2)

"அரக்கார்ந்த ஓமை" (கைந்நிலை. 19)

10-11 சிலம்புகழி நோன்பு

"நும்மனைச் சிலம்பு கழீஇயயரினும்" (ஐங். 399)

# 280. மருதம்

## தலைவி கூற்று

கொக்கினுக்கு ஒழிந்த தீம்பழம் கொக்கின்
கூம்புநிலை அன்ன முகைய ஆம்பல்
தூங்குநீர்க் குட்டத்துத் துடுமென வீழும்
தண்டுறை ஊரன் தண்டாப் பரத்தமை
5 புலவாய் என்றி தோழி புலவேன்
பழன யாமைப் பாசறைப் புறத்துக்
கழனி காவலர் சுடுநந்து உடைக்கும்
தொன்றுமுதிர் வேளிர் குன்றூர் அன்னஎன்
நல்மனை நனிவிருந்து அயரும்
10 கைதூ இன்மையின் எய்தாம் மாறே.

எ-து : வாயில் வேண்டிச் சென்ற தோழிக்குத் தலைவி மறுத்து மொழிந்தது.

(அல்லது)

தலைவனை ஏற்றுக் கொண்டு வழிபட்டாளைப் புகழ்ந்து புக்க தோழிக்குத் தலைவி சொல்லியதூஉம் ஆம்.

பரணர்

ப-ரை : தோழி - தோழீ, கொக்கின் உக்கு ஒழிந்த தீம்பழம் - கொக்கு வந்து இருக்க அதனாற்கிளை அசையவே உதிர்ந்து விழுந்த இனிய மாம்பழம், கொக்கின் கூம்பு நிலை அன்ன - கொக்கினது குவிந்திருந்த நிலைபோன்ற, முகைய - அரும்புகளை உடைய, ஆம்பல் தூங்கு நீர்க் குட்டத்து - ஆம்பல் மிக்க நிறைந்த ஆழமுள்ள நீரிலே, துடும் என வீழும் - துடும் என விழும், தண்துறை ஊரன் - தண்ணிய துறைகளை உடைய மருத நிலத் தலைவனது, தண்டாப் பரத்தமை - அமையாத புறத்து ஒழுக்கமாம் செய்கையைக் கண்டு வைத்தும், புலவாய் - நீ ஊடல் கொள்ளற்க, என்றி - என்று என்னைத் தேற்றுகின்றனை; பழன யாமை - வயலிலுள்ள யாமையின், பாசறைப் புறத்து - பசிய கல்லைப் போன்ற முதுகிலே,கழனி காவலர் - அவ்வயலைக் காவல் புரியும் உழவர், சுடுநந்து உடைக்கும் - தாம் சுடுகின்ற நத்தையை உடைத்துத் தின்னும், தொன்று முதிர் வேளிர் - பழமை முதிர்ந்த வேளிருடைய, குன்றூர் அன்ன - குன்றூர் போன்ற, என் நல்மனை - எனது நல்ல மனையில், நனி விருந்து அயரும் - வருகின்ற மிக்க விருந்தினரை உபசரித்தலில், கைதூ இன்மையின் - கை ஒழியாமையால், எய்தாமாறு - அவனை எதிர் படப் பெற்றிலேன்; புலவேன் - அதனாற் புலவேன். அன்றேல் புலவி மிகின் இங்குவர உடன்படேன் கண்டாய்.

முடிபு : தோழி! பரத்தமை புலவாய் என்றி; கைதூவின் மையின் எய்தாமாறு புலவேன் எனமுடிக்க.

கருத்து : பரத்தமை காரணமாக ஊடேல் என்கின்றனை; தோழீ! விருந்து அயர்தலில் ஓவாது ஈடுபட்டுள்ள யான் எவ்வாறு புலவேன் என்று தலைவி கூறினாள்.

அ-ள் : பாசறை - பசிய கல். கைதூவல் - கை ஒழிதல். இதன் எதிர்மறை கைதூவின்மை.

உள்ளுறை : கொக்கினால் உதிர்ந்த பழம் ஆம்பற் பொய்கையிலே துடுமென வீழும் என்றது, பரத்தையாற்

கைவிடப்பட்ட தலைவன் விரைந்து நின்னை வாயிலாகக் கொண்டு இங்கு வருகின்றான் போலும் என்றபடி.

இறைச்சி : கடைஞர் சிறப்பற்ற நத்தை ஊனை அழுத்த மகன ஆமை ஒட்டில் வைத்து உடைத்துத் தின்பர் என்றதனால், தலைவன் சிறப்பற்ற பரத்தையரைத் தழுவி நலன் நுகர்ந்தான் என்பது பெறப்பட்டது.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - வாயில் மறுத்தல்.

ஒப்புமைப்பகுதி

1-3. குட்டத்துப் பழம் விழுதல்

"தீம்பழம், நெடுநீர்ப் பொய்கைத் துடுமென விழூஉம்"

(ஐங். 61)

"கழனி மாத்து விளைந்துகு
தீம்பழம், பழனவாளை கதூஉம் ஊரன்" (குறுந். 8:1-2)

"தேக்கொக்கு" (குறுந். 26:6)

"பால்கலப்பன்ன தேக்கொக்கு" (குறுந்.201:2)

1-2. கொக்கின் புறத்திற்கு ஆம்பற் பூ

"மாரியாம்பலன்ன கொக்கின்" (குறுந். 17:1, 122:1-2)

8. தொன்று முதிர்வேளிர் குன்றூர்

"தொன்று முதிர்வேளிர் குன்றூர்க் குணாது"

(குறுந். 164:3)

# 281. பாலை

## தலைவி கூற்று

மாசுஇல் மரத்த பலிஉண் காக்கை
வளிபொரு நெடுஞ்சினை தளியொடு தூங்கி
வெல்பொர்ச் சோழர் கழாஅர்க் கொள்ளும்
நல்வகை மிகுபலிக் கொடையோடு உகுக்கும்
5 அடங்காச் சொன்றி அம்பல் யாணர்

விடக்குடைப் பெருஞ்சோறு உள்ளுவன இருப்ப
மழையமைந்து உற்ற மால்இருள் நடுநாள்
தாம்நம் உழையர் ஆகவும் நாநம்
பனிக்கடு மையின் நனிபெரிது அழுங்கித்
10 துஞ்சாம் ஆகலும் அறிவோர்
அன்பிலர் தோழிநம் காத லோரே.

எ-து : வன்பொறை எதிர்அழிந்த தலைவி தோழிக்குச் சொல்லியது.

அல்லது

ஆற்றாள் எனக் கவன்ற தோழி தலைவிக்கு உரைத்ததூஉம் ஆம்.

## கழார்க் கீரன் எயிற்றியார்

ப-ரை : தோழி - தோழீ! நம் காதலர் - நமது தலைவர், மாசு இல்மரத்த - குற்றம் அற்ற மரத்தில் உள்ளனவாகி, பலி உண் காக்கை - மக்கள் படைக்கும் பலியை உண்ணும் காக்கை, வளிபொரு நெடுஞ்சினை - காற்று மோதுகின்ற நெடிய கிளையில், தளியொடு - தன்மேல் விழுகின்ற மழைத்துளியுடனே, தூங்கி - அசைந்து கொண்டு, வேல்போர்ச் சோழர் - வெல்லுகின்ற போரை உடைய சோழரது, 'கழாஅர்க்' கொள்ளும் - 'கழார்' என்னும் ஊரிலே இடப்படுகின்ற, நல்வகை மிகு பலிக் கொடையோடு - நல்ல பல்வகைப்பட்ட மிகுந்த பலிக் கொடையோடு, உகுக்கும் - சேரப்படைக்கப்படும், அடங்கா - குறைவில்லாத, சொன்றி - சோற்றுத் திரட்சியுடன், அம்பல் யாணர் - அழகிய பலவாகிய புதிய, விடக் குடைப் பெருஞ் சோறு - ஊனொடு கலந்து இடப்படுகின்ற பெரிய சோற்றை, உள்ளுவன இருப்ப - தின்னக் கருதி இருக்குமாறு, மழை அமைந்துற்ற - மழை பொருந்திப் பெய்தலையுற்ற, மால் இருள் நடுநாள் - பெரிய மயக்கத்தைச் செய்யும் நடுநசியில், தாம் - தலைவர் தாம், நம் - நம்மை, உழையராகவும் - முயங்கிப் பக்கத்தில் இருப்பாராகவும், நாம் நம் பனிக் கடுமையின் - நாம் நமக்கு உண்டாகிய குளிரின் கடுமையால், நனி பெரிது அழுங்கி - மிகப் பெரிய வருத்தம் அடைந்து, துஞ்சாம் ஆகலும் அறிவோம் - உறங்காது இருந்ததையும் அறிந்தவர். (இப்பொழுது நம்மைப் பிரிந்தமையால்) அன்பிலர் - நம்மாட்டுச் சிறிதும் அன்புடையார் அல்லர்.

தோழி, நம் காதலர் நடுநாள் நம் துஞ்சாம் ஆகலும் அறிவோர் பிரிந்தமையின் அன்பிலர் எனமுடிக்க.

கருத்து : தலைவர் என் அருகில் இருக்கவும் நான் உறங்காது இருத்தலை அறிந்தவர் இப்பொழுது பிரிந்தமையாற் சிறிதும் அன்பில்லாதவரானார் என்று தலைவி உள்ளம் அழிந்தாள்.

சொன்றி - சோற்றுருண்டை.

இறைச்சி : பலி தின்னும் காக்கை மழையால் நனைந்து உடல் வருந்திய சமயத்தும், புலாலுணவை விரும்பி இருக்கும் என்றது, அவர் அருள் காட்டியமையால் மகிழ்ச்சி கொண்ட நான் இப்பொழுது பனி, குளிர் இவற்றால் வருத்தம் அடையினும் அவர் வருவாரோ என்னும் ஆசையால் உயிருடன் இருக்கின்றேன் என்பதாம்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

1. காக்கையது பலி
"விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே" (குறுந். 210:6)
"செஞ்சோற்ற பலி மாந்திய கருங்காக்கை"
(பொருந. 183:4)

# 282. குறிஞ்சி

## தோழி கூற்று

தோடுஅமை செறிப்பின் இலங்குவளை நெகிழக்
கோடுஏந்து அல்குல் அவ்வரி வாட
நல்நுதல் பாய படர்மலி அருநோய்
காதலன் தந்தமை அறியாது உணர்த்த
5 அணங்குறு கழங்கின் முதுவாய் வேலன்
கிளவியின் தணியின் நன்றுமன் சாரல்
அகில்சுடு கானவன் உவல்சுடு கமழ்புகை
ஆடுமழை மங்குலின் மறைக்கும்
நாடுகெழு வெற்பனொடு அமைந்த நம் தொடர்பே.

எ-து : சிறைப்புறமாகத் தோழி செறிப்பு அறிவுறீஇ வரைவு கடாயது.

நல்லூர்ச் சிறுமேதாவியார்

ப-ரை : தோடு அமை செறிப்பின் - தொகுதியாக அமைத்துச் செறித்தலை உடைய, இலங்குவளை ஞெகிழ - இலங்குகின்ற வளைகள் நெகிழ்ச்சியுற, கோடு - பக்கங்களில், ஏந்து - உயர்ந்த, அல்குல் - அல்குலினுடைய, அவ்வரி வாட - அழகிய வரிகள் வாட்டம் அடைய, நல் நுதல் பாய - அழகிய நெற்றியிலே பசலை நோய் படர, படர் மலி அருநோய் - கவலை நிறைந்த நீக்குதற்கு அரிய காம நோய், காதலன் தந்தமை - தலைவனால் தரப்பட்டது என்பதை, அறியாது - உணராது, உணர்த்த - உண்மையை உணர்த்த வேண்டும் என்று வேலனை அழைத்து வினாவ, முதுவாய் வேலன் - குறி சொல்லும் சிறந்த வாயை உடைய வேலன், அணங்குஉறு கழங்கின் - வெறிக்களத்து கழங்கு இட்டு ஆராய்ந்து கூறும், கிளவியின் - முருகனை வணங்கிப் பலியிட்டால் இந் நோய் நீங்கும் என்ற சொற்களால், தணியின் - இப் பசலை நோய் நீங்குமாயின், நன்று - மிகவும் நல்லதே. அவ்வாறின்றி இல்வயிற் செறிக்கப்பட்டமையால், சாரல் - மலைச் சாரலில், அகில் சுடுகானவன் - அகிற் கட்டைகளைத் தீயிட்டுக் கொளுத்தும் கானவன், உவல் சுடு கமழ் புகை - அதற்குமுன் சருகுகளிலே நெருப்பு வைத்தலின் எழுந்த நறுமணப் புகை, ஆடு மழை மங்குலின் - இயங்குகின்ற மழை மேகம்போல, மறைக்கும் - மறைக்கப்பட்ட, நாடுகெழுவெற்பனொடு - நாடு விளங்கிய சிலம்பனுடன், அமைந்த - ஏற்பட்ட, நம் - நம்முடைய, தொடர்பு - நட்பு, மன் - நீங்கிவிட்டது போலும்.

முடிபு : நாடுகெழுவெற்பனொடு அமைந்த நம் தொடர்பு வேலன் கிளவியின் தணியின் நன்றுமன் என முடிக்க.

இறைச்சி - கானவன் சுடுபுகை மேகம் போலத் தோன்றி மறைக்கும் என்றது, நம் தீவினை, தலைவனுக்குக் களவுப் புணர்ச்சியே சிறந்தது எனக் காட்டி அவன் தகையைக் கெடுக்கும் என்றதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

2. அல்குற் கோடு

"இத்தி பரந்த பைத்தகல் அல்குல்" (குறுந். 294:5)

7-8. புகைக்கு மேகம்

"நறையகில் வயங்கிய நளிபுன நறும்புகை
உறையறு மையிற் போகி" (குறுந். 339:1-2)

"கறையில் கார்மழை பொங்கி அன்ன
நறையில் நறும்புகை" (பரி. 14:19-20)

"புகைபுரை அம்மஞ்சுர" (அகநா. 97:22)

"வெண்மழை கவைஇக் கலஞ்சுடு
புகையில் தோன்றும் நாட" (அகநா. 308:5-6)

"அகிலெழு கொழும்புகை மஞ்சின் ஆடவும்"
(சூளா. நகரம். 6)

# 283. நெய்தல்

## தோழி கூற்று

ஒண்ணுதல் மகளிர் ஓங்குகழிக் குற்ற
கண்ணேர் ஒப்பின கமழ்நறு நெய்தல்
அகல்வரிச் சிறுமனை அணியும் துறைவ
வல்லோர் ஆய்ந்த தொல்கவின் தொலைய
5 இன்னை ஆகுதல் தகுமோ ஓங்குதிரை
முந்நீர் மீமிசைப் பலர்தொழத் தோன்றி
ஏமுற விளங்கிய சுடரினும்
வாய்மை சான்ற நின்சொல் நயந்தோர்க்கே.

எ-து: பகற்குறி வந்த தலைவனைத் தோழி வரைவு கடாயது. (அல்லது)

கடிநகர்புக்க தோழி பிற்றை ஞான்று வேறுபடாது ஆற்றினாய் என்று சொல்லியதூஉம் ஆம்.

மதுரை மருதன் இளநாகனார்

ப-ரை: ஒள் நுதல் மகளிர் - சிறந்த நெற்றியை உடைய நெய்தல் நிலத்து நுளைச்சியர், ஓங்கு கழி - அகன்ற கழியினிடத்து, குற்ற - பறித்து வந்த, கண் நேர் ஒப்பின - மகளிர் கண்ணை நேராக ஒத்தலை உடைய, கமழ் - வாசனை மிகுந்த, நறுநெய்தல் - நறிய நெய்தல் மலர், அகல்வரிச் சிறுமனை - அகன்றகையால் அழகுபடுத்திய சிறிய மனையை, அணியும்,

அலங்கரிக்கும் துறையை உடைய, துறைவ - தலைவனே! ஓங்கு திரை - உயர்ந்து வரும் அலைகளை உடைய, முந்நீர் மீமிசை - கடலின் மேல், பலர் தொழத் தோன்றி - பலரும் போற்றுமாறு தோன்றி, எம்உற விளங்கிய - யாவரும் மகிழும்படி விளங்கி எழுந்த, சுடரினும் - ஞாயிற்றைக் காட்டிலும்; வாய்மை சான்ற - வாய்மை விளங்கிய, நின் சொல் நயந்தோர்க்கு - நின் சொல்லை விரும்பிய எம்மிடத்துள்ள, வல்லோர் - அறிவு சான்ற வல்லவர் களால், ஆய்ந்த - ஆராய்ந்து கண்ட, தொல்கவின் - பழைய அழகு, தொலைய - கெடுமாறு; இன்னை ஆகுதல் - நீ இத் தன்மையைப் பெற்றிருத்தல், தகுமோ - நின் தகைமைக்கு ஏற்புடைத்தோ? எனவே செய்வது ஒன்றனைச் சிந்தித்துச் செய்வாயாக.

முடிபு : துறைவ! நின் சொல் நயந்தோர்க்குத் தொல்கவின் தொலைய இன்னை யாகுதல் தகுமோ? என முடிக்க.

கருத்து : நின் சொற்களை மெய்யென்றெண்ணிய தலைவியை விட்டுக் களவில் நீ நீட்டித்து ஒழுகுவது நின் தகுதிக்கு நன்று அன்று என்று தோழி கூறி வரைவு கடாயினாள்.

நயம் - மகளிர் கொய்து வந்த நெய்தல் சிறு மனையை அணி செய்யும் என்றது, தலைவியை மணந்து நின் மனை புகுந்து உன் இல்லறத்தை அணி செய் என்றபடி.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - வரைவு கடாதல்.

எட்டடிகொண்ட நற்றிணைப் பாடல் இஃது ஒன்றேயாம்.

ஒப்புமைப்பகுதி

1-2. நெய்தற் பூவிற்குக் கண் உவமை

"கணைக்கால் நெய்தல்
கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்" (குறுந். 9:4-6)
"கண்போல் நெய்தல்" (ஐங். 151:3)
"இருங்கழி மலர்ந்த கண்போல் நெய்தல்" (அகநா. 170:4)
"கண்ணவிழ் நெய்தலும்" (சிலப். 14:77)

4. தொல்கவின் தொலைதல்

"தொல்கவின் தொலைந்து தோள்நலம் சாஅய்";
(குறுந். 381:1) (கலி. 2:23, 16:5, 26:10)
(அகநா. 147:12; 177:1, 235:18, 270:10)

4. ஆயம் தோய்ந்த நலம்

"கடலம் கானல் ஆயம் ஆய்ந்தஎன்
நலம் இழந்த தனினும் நனி இன்னாதே" (குறுந். 245:1-2)
"பலராய் மாண்கவின்" (அகநா. 98:12)

# 284. பாலை

## தலைவன் கூற்று

புறம்தாழ்பு இருண்ட கூந்தற் போதின்
நிறம்பெறும் ஈர்இதழ்ப் பொலிந்த உண்கண்
உள்ளம் பிணிக்கொண் டோள்வயின் நெஞ்சம்
செல்லல் தீர்கம் செல்வாம் என்னும்
5 செய்வினை முடியாது எவ்வம் செய்தல்
எய்யா மையோடு இளிவு தலைத்தரும் என
உறுதி தூக்கத் தூங்கி அறிவே
சிறிதுநனி விரையல் என்னும் ஆயிடை
ஒளிறுஏந்து மருப்பிற் களிறுமாறு பற்றிய
10 தேய்புரிப் பழங்கயிறு போல
வீவதுகொல் என் வருந்திய உடம்பே.

எ-து : பொருள் முடியா நின்ற தலைவன் ஆற்றானாகிச் சொல்லியது.

### தேய்புரிப் பழங்கயிற்றினார்

ப-ரை : நெஞ்சம் - என் நெஞ்சமானது, புறம்தாழ்பு - முதுகுப்புறம் தாழ்ந்து, இருண்ட - கருமையயான, கூந்தல் - கூந்தலையும், போதின் - கருங்குவளை மலரைப் போன்ற, நிறம் பெறும் - கருமை நிறத்தைப் பெற்ற, ஈர் இதழ் - குளிர்ந்த இமைகளால், பொலிந்த - அழகு பொருந்திய, உண்கண் - மை தீட்டப்பட்ட கண்களையும் உடைய, உள்ளம் பிணிக் கொண் டோள் வயின் - என் உள்ளத்தைத் தன்பால் ஈர்த்துக் கொண்டவளிடத்து, செல்வாம் - போவோம், செல்லல் தீர்கம் - போய் அவளுடைய துன்பத்தைப் போக்குவோம் என்று கூறும்; அப்பொழுது என் அறிவோ அதற்கு மாறாக, செய்வினை - மேற் கொண்ட காரியத்தை, முடியாது - முற்றுப் பெற முடிக்காது, எவ்வம் செய்தல் - இடையிலேயே நெகிழ்ந்து விட்டுவிடுதல்,

எய்யாமையோடு - அறியாமையோடு மட்டும் அன்றி, இளிவு - இகழ்ச்சியையும், தலைத்தரும் என - கொடுக்கும் என்று கருதி, உறுதி தூக்கத் தூங்கி - இவ்விரண்டையும் சீர்தூக்கி ஆராய்ந்து, சிறிது நனி விரையல் - சிலபொழுதாகிலும் மிகவும் விரையாது செயல்படு, என்னும் - என்று கூறும்; ஆயிடை - அந்த மாறுபாட்டின் இடையில், என் வருந்திய உடம்பு - வருந்துகின்ற என் உடம்பானது, ஒளிறு ஏந்துமருப்பின் - விளங்கிய தலையிலே தாங்கிய கொம்பினை உடைய, களிறு - களிற்று யானைகள், மாறு - ஒன்றோடொன்று மாறுபட்டு, பற்றிய - கைப்பற்றி இழுத்த, தேய்புரிப் பழம் கயிறுபோல - தேய்ந்தபுரியை உடைய பழைய கயிறு அறுபட்டுக் கெடுவதுபோல, வீவதுகொல் - அழிய வேண்டுவது தானோ? இஃது என்ன கொடுமை.

பி-ம். 2. 'நிறங்கிளர் நிரையிதழ்'

முடிபு : நெஞ்சம் செல்வாய் என்னும்; அறிவு விரையல் என்னும்; உடம்பு கயிறுபோல வீவதுகொல் எனமுடிக்க.

கருத்து : இடைச் சுரத்துத் தலைவன் நெஞ்சினைத் தலைவி ஈர்க்க, அறிவு வினையின் பாற்செலுத்த உய்வகை அறியாது வருந்தினன்.

வி-ரை : செல்லல் தீர்கம்; செல்வாம் என்றது. காதல் கைம்மிகல் என்னும் மெய்ப்பாடாம். மகளிரால் மதி நலன் இழக்கும் என்னும் உண்மை பெற்றாம்.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - இடைச்சுரத்து அழுங்கல்.

"தேய்புரிப் பழங் கயிறுபோல" என்று உவமை கூறிய சிறப்பான இப் பாடல் ஆசிரியர் இப் பெயரைப் பெற்றார் போலும்.

ஒப்புமைப்பகுதி

9-11 மெல்லமெல்ல அழிதல்

"கல்பொரு சிறு நுரைபோல
மெல்லமெல்ல இல்லாகுதுமே" (குறுந். 290:5-6)

# 285. குறிஞ்சி

## தோழி கூற்று

அரவுஇரை தேரும் ஆரிருள் நடுநாள்
இரவின் வருதல் அன்றியும் உரவுக்கணை
வன்கைக் கானவன் வெம்சிலை வணக்கி
உளமிசைத் தவிர்த்த முளவுமான் ஏற்றையொடு
5 மனைவாய் ஞமலி ஒருங்குபுடை ஆட
வேட்டுவலம் படுத்த உவகையன் காட்ட
நடுகாற் குரம்பைத்தன் குடிவயிற் பெயரும்
குன்ற நாடன் கேண்மை நமக்கே
நன்றால் வாழி தோழி என்றும்
10 அயலோர் அம்பலின் அகலான்
பகலின் வருஉம் எறிபுனத் தானே.

எ-து : தோழி சிறைப்புறமாகத் தலைவிக்குச் சொல்லு வாளாய், தலைவன் கேட்ப, 'அம்பலும் அலரும் ஆயிற்று' என்று சொல்லியது.

## மதுரைக் கொல்லன் வெண்ணாகனார்

ப-ரை : தோழி - தலைவியே! வாழி - நீ நெடிது நாள் வாழ்க, வன்கை - வலிய கைகளை உடைய, கானவன் - வேடன், வெம் - கொடிய, சிலை - வில்லை, வணக்கி - நன்கு வளைத்து, உரவுக்கணை - வலிய கூர்மையான அம்பினால், உளம்மிசைத் தவிர்த்த - நெஞ்சிலே எய்து கொன்ற, முளவுமான் ஏற்றை யொடு - சிறந்த ஆண் முள்ளம் பன்றியோடு, வேட்டு வலம் படுத்த உவகையன் - வேட்டையிலே தான் பெற்ற வெற்றியா லாகிய உவகையனாகி, மனை வாய் ஞமலி - மனையகத்துள்ள நாய்கள் எல்லாம், ஒருங்குபுடை ஆட - ஒரு சேரப்பக்கத்திற் சூழ்ந்து விளையாடிவர, காட்ட - காட்டகத்துள்ள, நடுகால் குரம்பை - நட்ட கால்களிலே கைகள் கொடுத்துக் கட்டப்பட்ட குடிசையை உடைய, தன்குடிவயின் - தன் சேரியின் கண்ணே, பெயரும் - திரும்பி வரும், குன்ற நாடன் - வேடவர்கள் வாழும் குன்றத்தையுடைய நம் தலைவன், அரவு இரை தேரும் - பாம்பு கள் தமக்கு வேண்டிய இரையைத் தேடிச் சுற்றி வரும், ஆர் இருள் நடுநாள் - எவரும் இயங்குதற்கரிய இருள்

செறிந்த நடுநிசியில், இரவின் வருதல் அன்றியும் - இரவுக் குறியில் வருவதல்லாமலும், என்றும் - எப்பொழுதும், அயலோர் அம்பலின் அகலான் - அயலவர் கூறும் பழிச்சொல்லைக் கேட்டும் அகன்று போகானாகி, எறிபுனத்தான் - வெட்டி உழுது விதைக்கப்பட்ட தினைப்புனத்தின்கண், பகலின் வருஉம் - பகற் பொழுதிலும் வருகின்றான்; ஆதலின், நமக்கு கேண்மை நன்றால் - நமக்கு அவன் நட்பானது நல்லதோ? அன்று காண்.

முடிபு : குன்ற நாடன் இரவில் வருதல் இன்றியும் பகலின் வருஉம், கேண்மை நன்றால், என்று முடிக்க.

கருத்து : தலைவ! இரவில் வரின் அரவினால் ஏதம் வரும்; பகலில் வரின் அம்பலும் அலரும் எழும் எனவே களவு தவிர்ந்து விரைக வரைக.

வி-ரை : நன்று - என்பது நல்லது அன்று என்னும் பொருளைத் தந்தது. எடுத்துச் சொல்லி அப்பொருள் காண்க. இதனை அவன் புணர்வு மறுத்தல் என்றார் தொல்காப்பியனார்.

குறிப்பு : வேடன் தான் பிடித்த ஆண் முள்ளம் பன்றியுடன் நாய்கள் குரைத்து மகிழக் குடிவயிற் பெயர்ந்தான் என்றது, தலைவன் களவொழுக்கத்தில் தான் பெற்ற தலைவியை இரவில் உடன் கொண்டு சென்று தன் மனை புகுந்து தமர் வாழ்த்த மணம் செய்து கொள்வானாக என்றபடி.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

# 286. பாலை

## தோழி கூற்று

ஊசல் ஒண்குழை உடைவியத் தன்ன
அத்தக் குமிழின் ஆயிதழ் அலரி
கல்லென வரிக்கும் புல்லென் குன்றம்
சென்றோர் மன்ற செலீஇயர்என் உயிரெனப்
5 புனையிழை நெகிழ விம்மி நொந்து நொந்து
இனைதல் ஆன்றிசின் ஆயிழை நினையின்
நட்டோர் ஆக்கம் வேண்டியும் ஒட்டிய
நின்தோள் அணிபெற வரற்கும்
அன்றோ தோழி அவர்சென்ற திறமே.

எ-று : பிரிவிடை மெலிந்த தலைவியைத் தோழி வற்புறுத்தது.

## துறைக்குறுமாவிற் பாலங் கொற்றனார்

ப-ரை : ஆய் இழை - ஆராய்ந்தெடுத்த அணிகலன்களைப் பூண்டவளே!, தோழி - என் அருமைத் தலைவியே! உடை - உடை மரங்கள் செறிந்த, வியத்து அன்ன - மிக்க வழியின் கண்ணே, ஒண்குழை ஊசல் அத்தம் - மகளிரின் காது குண்டலத்திற் பொருந்திய ஊசல் போன்ற, அத்தம் - மலைப் பாதையிலுள்ள, குமிழின் - குமிழ மரத்தின், ஆய் இதழ் அலரி - அழகிய இதழ்களை உடைய மலர்கள், 'கல்' என வரிக்கும் - 'கல் என்னும் ஒலியோடு உதிர்ந்து அழகு செய்யும், புல் என் குன்றம் - இயங்குவார் இன்மையின் பொலிவு இழந்த குன்றத்து, சென்றோர் - சென்றனர் நம் அன்பிற்குரிய தலைவர், மன்ற - உறுதியாக, என் உயிர் - எனது உயிர், செலீஇயர் என - சென்றொழிவதாக என்று, புனை இழை - அணிந்த அணிகலன்கள், நெகிழ - கழன்று விழும்படி, விம்மி நொந்து நொந்து - விம்மி அழுது மிக நொந்து, இனைதல் - வருந்துதலை, ஆன்றிசின் - சிறிது பொறுப்பாயாக; நினையில் - யோசிக்குமிடத்து, நட்டோர் - நம்மிடம் நட்புக் கொண்டவர் தாம், ஆக்கம் - செல்வம் பெற, வேண்டியும் - வேண்டியதற்காகவும், ஒட்டிய - உன்னிடம் வந்து பொருந்திய, நின் தோள் - உன்னுடைய அழகிய தோள்கள், அணிபெற வரற்கும் - நல்ல ஆபரணங்களைப் பூண்பதற்காகவும், அன்றோ - அல்லவோ, அவர் - தலைவர், சென்ற திறம் - பொருள்வயிற் பிரிந்தனர் என்பதை உணர்வாய்.

முடிபு : ஆயிழை இனைதல் ஆன்றிசின்; அவர் சென்ற திறம் ஆக்க வேண்டியும், அணிபெறவரற்கும் அன்றோ என்று முடிக்க.

கருத்து : நட்டோர்க்கு ஆக்கமும், தலைவிக்கு நல்வாழ்வும் தரும் பொருட்டே தலைவன் பொருள்வயிற் பிரிந்தான் என்பதை உட்கொண்டு தோழி தலைவியைப் பொறுத்திரு என்று போற்றினாள்.

அ-ள் : உடை - உடை மரம். வியம் - வழி. உடை வியத்துக் கற்பாறையிலே குழை ஊசலன்ன அலரி கோலம் செய்யும் என்க. தற்போது மகளிர் இதனைச் சிமிக்கி எனவும் தொங்கட்டான் எனவும் தெரிப்பர். அத்தகைய தோற்றத்தைக் குமிழம் பூவும் தாரா நிற்கும். இதில் வரும் தலைமகன் வணிகனாதலை

உய்த்துணர்க. பாறைகளின்மேல் குமிழ மலர்கள் உதிர்ந்து அழகு செய்யும் என்பது, தலைவன் பல்வேறு அணிகலன்கள் ஈட்டிக் கொணர்ந்து நினக்குப் பூட்டி மகிழ்வன் என்பதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

# 287. நெய்தல்

## தலைவி கூற்று

விசும்புஉறழ் புரிசை வெம்ப முற்றிப்
பைங்கண் யானை வேந்துபுறத்து இறுத்த
நல்எயில் உடையோர் உடையம் என்னும்
பெருந்தகை மறவன் போலக் கொடுங்கழிப்
5 பாசடை நெய்தற் பனிநீர்ச் சேர்ப்பன்
நாம முதலை நடுங்குபகை அஞ்சான்
காமம் பெருமையின் வந்த ஞான்றை
அருகாது ஆகிய வன்கண் நெஞ்சம்
நள்ளென் கங்குல் புள்ஒலி கேட்டொறும்
10 தேர்மணித் தெள்இசை கொல்என
ஊர்மடி கங்குலும் துயில்மறந் ததுவே.

எ-து : காப்பு மிகுதிக்கண் ஆற்றாளாகிய தலைவி சொல்லியது.

உலோச்சனார்

ப-ரை : கொடுங்கழி - வளைந்த நீர்க்கழியின் கண்ணே, பாசடை - பசிய இலைகளை உடைய, நெய்தல் - நெய்தல் மலர்கள் நிறைந்த, பனி நீர் - குளிர்ந்த நீரையுடைய, சேர்ப்பன் - தலைவன், நாமம் - அச்சத்தைத் தருகின்ற, முதலை - முதலையின், நடுங்கு பகை - நடுங்குதலைச் செய்யும் பகைமைக்கும், அஞ்சான் - பயப்படாதவனாகி, காமம் பெருமையின் - வேட்கையின் பெருக்கால், வந்த ஞான்றை - இங்கு வந்தபொழுது, விசும்பு உறழ - வானிலே நீண்டுயர்ந்த, புரிசை - மதிலை, வெம்ப - உள்ளே இருப்பவர் நடுங்கும்படி, முற்றி - முற்றுகை செய்து, பைங்கண் யானை - பசிய கண்ணையுடைய யானைப் படையோ, வேந்து புறத்து இறுத்த - பகை மன்னன் அதன் புறத்தே தங்கப்

பெற்றதனால், நல்எயில் உடையோர் உடையம் - அம் பகை மன்னன் உள்ளே நுழையாதபடி நல்ல மதில் காவலுடை போரை யாம் பெற்றிருக்கின்றோம், என்னும் - என்று கருதியிருக்கின்ற, பெருந்தகை மறவன்போல - பெருந்தன்மையை உடைய உள் அடைபட்டிருந்த பெருமறவனைப்போல, அருகாதாகிய - குறையாததாகிய, வன் கண் நெஞ்சம் - வன்கண்மையை உடைய என் நெஞ்சமானது, நள் என் கங்குல் - 'நள்' என்னும் ஓசையை உடைய நடுநிசியில், புள் ஒலி கேட்டொறும் - பறவை ஒலிப்பதைக் கேட்குந்தோறும், தேர் மணித் தெள் இசைகொல் என - தேரிலே கட்டிய மணியின் தெளிந்த ஓசையோ என்று, ஊர் மடி கங்குலும் - ஊரினர் அனைவரும் உறங்கும் இராப்பொழுதிலும், துயில் மறந்தது - உறங்குவதைத் தவிர்ந்தது.

முடிபு : வந்த ஞான்றை, வன்கண் நெஞ்சம் கேட்டோறும் தெள் இசைகொல் என, கங்குலும் துயில் மறந்தது என முடிக்க.

தலைவி இற்செறிக்கப்பட்டதை முற்றுகையுட்பட்ட வீரனோடு உவமித்துக்கொண்டாள். அம் மறவன் எயில் காவலரைப் பெற்றிருத்தல்போல, யானும் தலையளி செய்யும் தலைவனை உடையேன் என்றாள். அது நீங்கியது என்பாள் இப்பொழுது காவல் மிகுதியாலும், அவன் வாராமையாலும் புள்ளொலி கேட்கும் தன்மையது ஆயிற்று என்றாள்.

துயின் மறத்தலைத் தொல்காப்பியர் கண் துயில் மறத்தல் என்பர்.

மெய்ப்பாடு - பிறன் கட்டோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

7-10. தலைவன் மணி ஒலிக்கத் தேரில் வருதல்

"பகுவாய்த் தெண்மணி

....................

தேர்வரும் என்னும் உரைவா ராதே"

(குறுந். 155:4-7) (குறுந். 336:3-4)

"தாதுண்பறவை பேதுறலஞ்சி

மணிநா வார்த்த மாண் வினைத்தேரன்" (அகநா. 4:11-3)

9. நள்ளென் யாமம்

"கையற நரலும் நள்ளென் யாமத்து" (குறுந். 160:4)

(நெடுநல். 186) (ஐங். 324:3)

(அகநா. 103:12, 129:2; 142:20, 170:12, 279:6)

# 288. குறிஞ்சி

## தோழி கூற்று

அருவி ஆர்க்கும் அணங்குடை நெடுங்கோட்டு
ஞாங்கர் இளவெயில் உணீஇய ஓங்கு சினைப்
பீலி மஞ்ஞை பெடையோடு ஆடும்
குன்ற நாடன் பிரிவிற் சென்று
5 நல்நுதல் பரந்த பசலைகண்டு அன்னை
செம்முது பெண்டிரொடு நெல்முன் நிறீஇக்
கட்டிற் கேட்கும் ஆயின் வெற்பில்
ஏனற் செந்தினைப் பால்ஆர் கொழுங்குரல்
குறுகிளி கடிகம் சென்றும் இந்
10 நெடுவேள் அணங்கிற்று என்னும்கொல் அதுவே.

எ-து: சிறைப்புறமாகத் தலைவிக்கு உரைப்பாளாய் வெறி அறிவுறீஇ வரைவுகடாயது.

குளம்பனார்

ப-ரை: ஓங்கு சினை - உயர்ந்த மரக்கிளையிலுள்ள, பீலி மஞ்ஞை - பீலியையுடைய மயில், இளவெயில் உணீஇய - காலையில் விரிந்த இளவெயிலிற் காய வேண்டி, அருவி ஆர்க்கும் - அருவி ஒலிக்கின்ற, அணங்குடை நெடுங்கோட்டு ஞாங்கர் - அச்சமுடைய உயர்ந்த நெடிய கொடுமுடியின் பக்கத்திலே, பெடையோடு - தன் பெடையுடன், ஆடும் - விளையாடும், குன்ற நாடன் - மலை நாடன், பிரிவிற் சென்று - நம்மைப் பிரிதலினாலே சென்று, நல் நுதற் பரந்த - நல்ல நினது நெற்றியிலே பரந்த, பசலை கண்டு - பசலையை நோக்கி, அன்னை - செவிலியும் நற்றாயும், செம்முது பெண்டிரொடு - சேரியில் வாழும் நன்கு முதுமையடைந்த கட்டுவிச்சி முதலாயினாரோடு இல்லம் புக்கு, நெல் முன் நிறீஇ - முன்னர் முறத்திலே நெல்லைப் பரப்பி, கட்டின் கேட்கும் ஆயின் - கட்டு வைத்து நம்மை எதிரில் நிறுத்திக் குறி கேட்குமாயின், அக் குறியானது, வெற்பில் - மலையிடத்துள்ள, ஏனற் செந்தினை - ஏனலாகிய சிவந்த தினையின், பால் ஆர் - பால் நிரம்பிய, கொழும் குரல் - கொழுவிய கதிர்களை, குறுகிளி கடிகம் சென்றும் - கொய்ய வரும் கிளிகளை ஓட்டுவேமாகிச் சென்றி

ருந்தும், அது நெடுவேள் அணங்கிற்று என்னும் கொல் - இந் நோய் முருகவேள் அணங்கியது என்று அது கூறுமோ?

முடிபு : அன்னை பசலைகண்டு கட்டிற் கேட்குமாயின் நெடுவேள் அணங்கிற்று என்னும் கொல்லோ எனமுடிக்க.

கருத்து : தலைவன் பிரிவால் ஏற்பட்ட பசலை நோயைத் தெய்வத்தால் ஏற்பட்டது என்று தவறாகக் கருதி அன்னை கட்டுக்காண முற்படுகையில் கட்டுவிச்சி முருகனால் ஏற்பட்டது எனின் என்னாம்—இற்செறிப்பு நிகழும். எனவே விரைக வரைக என்றபடி.

உள்ளுறை : இளவெயிலுண வேண்டி மயில் பேடையோடு கோட்டின் பக்கம் சென்று ஆங்கு ஆடும் என்றது, காம இன்பம் துய்த்து இல்லறம் நிகழ்த்த வேண்டித் தலைவன் தலைவியைக் கொண்டு தலைக் கழிந்து மணந்து வைகுவானாக என்றதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

5. நுதல் பசத்தல்
"பசைஇப் பசந்தன்று நுதலே" (குறுந். 87:4, 48:5, 205:7)

8. பால்வார்ந்த தினை
"பைந்தாட் செந்தினை, மடப்பிடித் தடக்கை அன்ன பால் வார்பு" (குறுந். 198:2-3)

9. கிளி கடிகம் சேறும்
"படுகிளி கடிகம் சேறும் அடுபோர்" (குறுந். 198:5)

## 289. முல்லை

### தலைவி கூற்று

அம்ம வாழி தோழி காதலர்
நிலம்புடை பெயர்வது ஆயினும் கூறிய
சொற்புடை பெயர்தலோ இலரே வானம்
நளிகடல் முகந்து செறிதக இருளிக்
5 கனைபெயல் பொழிந்து கடுங்குரல் பயிற்றிக்

கார்செய்து என்உழை யதுவே ஆயிடைக்
கொல்லைக் கோவலர் எல்லி மாட்டிய
பெருமர வேரடிப் போல
அருள்இலேன் அம்ம அளியேன் யானே.

எ-து: பிரிவிடைப் பருவங்கண்டு சொல்லியது.

மருங்கூர்ப் பட்டினத்துச் சேந்தன் குமரனார்

ப-ரை: தோழி - தோழியே! வாழி - நீ வாழ்க, அம்ம - யான் கூறுகின்றதனைக் கேட்பாயாக; நிலம் - இந்நிலமானது, புடைபெயர்வது ஆயினும் - தன் நிலையில் நின்று பெயர்வதாக இருந்தாலும், கூறிய - நம் காதலர் தாம் கூறிய, சொல் - சொல்லினின்றும், புடைபெயர்தலோ - தவறி நடப்பவர் அல்லர், ஆதலால், தாங்குறித்த பருவத்து வழுவாது வருவர்; அதற்கு முன், வானம் - மேகமானது, நளிகடல் முகந்து - நெருங்கிய கடல் நீரை முகந்து. செறிதக இருளி - செறிவு அமைய இருண்டு, கனை பெயல் பொழிந்து - மிக்க மழையைப் பெய்து, கடுங்குரல் பயிற்றி - கடிய இடியோசையை எழுப்பி, கார் செய்து - கார்ப் பருவத்தைக் காண்பித்து, என் உழையதுவே - என்னைத் துன்புறுத்தற்கு வந்துற்றது. ஆயிடை - இப்பொழுது, அளியேன் யான் - கண்டாரால் அளிக்கத் தக்க யான். கொல்லைக் கோவலர் எல்லி மாட்டிய - கொல்லையில் இடையர்கள் இரவில் எரி கொளுத்திய, பெருமர வேர் அடிப் போல - பெரிய மரத்தினது வேரடிக் கட்டையைப்போல, அருள் இலேன் - காமநோய் கனற்றலான் அவரால் அருள் செய்யப் பெறேனாக இருக்கின்றேன்.

முடிபு: தோழி! காதலர் சொற்பெயர்தலோ இலர்; வானம் கார்செய்து என் உழையதுவே. அளியேன் யான் அருள் இலேன் எனமுடிக்க.

கருத்து: தலைவர் சொன்ன சொல் தவறார். அவர் குறித்த கார்ப் பருவம் வந்துற்றது. அவர் அருளை யான் பெற்றிலேன் என்று தலைவி வருந்தினாள்.

தீப்பற்றிய வேர்க்கட்டை அவிப்பாரின்றித் தானே கருகி அழிந்து ஒழிவது போன்று யானும் அருள்செய்யும் தலைவரின்றிக் காமத் தீயால் அழிந்து ஒழிவேன்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

2. நிலம்புடை பெயர்தல்

"நிலம்புடை பெயர்வதாயினும் ஒருவன்" ((புறநா. 34:5, 3:14)

"நிலம் பெயரினும் நின் சொற் பெயரல்" (பு.வெ. 167)

"நிலம்புடை பெயரினும் நீர்திப் பிறழினும்" (குறுந். 373:1)

"நிலம்திறம் பெயருங் காலை ஆயினும்" (பதிற். 63:6)

"இருநிலம்பெயரினும்" (பெருங். 1:58:92)

# 290. மருதம்

பரத்தை கூற்று

[தோழி கூற்றும் ஆம்]

வயல்வெள் ஆம்பல் சூடுதரு புதுப்பூக்
கன்றுடைப் புனிற்றா தின்ற மிச்சில்
ஒய்விடு நடைப்பகடு ஆரும் ஊரன்
தொடர்புநீ வெஃகினை ஆயின் என்சொல்
5 கொள்ளன் மாதோ முள்எயிற் றோயே
நீயே பெருநலத் தகையே அவனே
நெடுநீர்ப் பொய்கை நடுநாள் எய்தித்
தண்கமழ் புதுமலர் ஊதும்
வண்டென மொழிப மகன்என் னாரே.

எ-து : *பரத்தை விறலிமேல் வைத்துத் தலைவனை நெருங்கிச் சொல்லியது.*

(அல்லது)

*பரத்தையிற்பிரிய வாயிலாய்ப்புக்க பாணன் கேட்பத் தோழி சொல்லியதூஉம் ஆம்.*

மதுரை மருதனிள நாகனார்

ப-ரை : *முள் - முட்களைப் போன்ற, கூர் - கூர்மையான, எயிற்றோய் - பற்களை உடையோய், வயல் - வயலின்கண், வெள் - வெள்ளிய, ஆம்பல் - ஆம்பலின், சூடுதரு - கதிரோடு உழவர்கள் அறுத்து இட்ட, புதுப்பூ - புதிய பூக்களில், கன்று*

உடைப் புனிற்றா - கன்றை அப்பொழுது ஈன்ற பசுவானது, தின்ற - தின்று, மிச்சில் - எஞ்சிக் கிடந்தனவற்றை, ஓய்விடு நடைப்பகடு - உழுதுவிட்டு ஓய்ந்த நடையை உடைய எருது, ஆரும் - தின்னும், ஊரன் - ஊரை உடைய தலைவனின், தொடர்பு - கூட்டத்தை, நீ வெஃகினை ஆயின் - நீ விரும்பினை என்றால், என் சொல் கொள்ளல் - என் வார்த்தையைக் கேட்பாயாக; (அது யாது எனில்) நீயே பெரு நலத்தகையை - பெரிய இளமையையும் தகுதிப்பாட்டையும் நீ உடையை ஆதலால், நீ அவனொடு மாறுபடுவது அவற்றிற்கு அழகு அன்று என்றாள்: அவன் அவனை, நெடுநீர்ப் பொய்கை - நெடிய நீரையுடைய பொய்கையில், நடுநாள் - நடுயாமத்திலே, தண்கமழ் புதுமலர் எய்தி - தண்ணியதாய் நறுமணம் கமழும் புதிய மலரிலே சென்று, ஊதும் - தேன் உண்ணும், வண்டு என மொழிப - வண்டு என்றே கூறுவாரன்றி, மகன் என்னார் - நல்ல ஆண்மகன் என்று யாரும் கூறார். ஆதலின் அவனோடு ஊடாதே;

முடிபு : முள் எயிற்றோய்! ஊரன் தொடர்பு நீ வெஃகினை ஆயின், என் சொற்கொள்ளல். அவனை வண்டெடன் மொழிப, மகன் என்னார், ஊடேல் என முடிக்க.

கருத்து : தலைவி! பரத்தையிற் பிரிந்தான் என்று தலைவனோடு ஊடேல். அவன் வண்டை ஒத்தவன் என்று அறிக.

வி-ரை : நடுநிசியில் பறந்து சென்று விரியும் பூவிலுள்ள தேனைப் பருகும் இயல்பையுடைய வண்டை உவமித்த அதனால், தலைவன் நள்ளிரவிற் சேரிக்குச் சென்று புதிய பரத்தையை விரும்பித் துய்க்கும் இயல்பினன் என்பதைக் குறிப்பிட்டாள்.

நயம் : 1. புனிற்றா தின்ற மிச்சிலை உழுதுவிட்ட பகடு சென்று தின்றாற்போல, நீ தலைவனிடம் இளமையை நுகர்ந்து மகனைப் பெற்ற பின்னர் நீ உண்ட மிச்சில் போன்ற அவனைப் பிறர் நுகர்கின்றனர்; அது நினக்கு இழுக்கு அன்று என்றவாறு.

மெய்ப்பாடு - பெருமிதம்.
பயன் - ஊடல் தணித்தல்.

நயம் : 2. என் சொல்லை நம்பி நீ ஊரனை ஏற்க வேண்டா; ஏலின், நீ பெருவனப்புப் பெற்றிருந்தும் அவனை வண்டென்பதல்லாமல் ஆண்மகன் என்று கூறார் ஆகலின் அவன் தொடர்பு யாது பயனைத் தரும்.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - வாயின் மறுத்தல்.

# 291. நெய்தல்

## தோழி கூற்று

நீர்பெயர்ந்து மாறிய செறிசேற்று அள்ளல்
நெய்த்தலைக் கொழுமீன் அருந்த இனக்குருகு
குப்பை வெண்மணல் ஏறி அரைசர்
ஒண்படைத் தொகுதியின் இலங்கித் தோன்றும்
5 தண்பெரும் பௌவநீர்த் துறைவற்கு நீயும்
கண்டாங்கு உரையாய் குணமோ பாண
மாஇரு முள்ளூர் மன்னன் மாவூர்ந்து
எல்லித் தரீஇய இனநிரைப்
பல்லான் கிழவரின் அழிந்தஇவள் நலனே.

எ-து : வாயிலாகப் புக்க பாணற்குத் தோழி தலைவியது குறிப்பறிந்து நெருங்கிச் சொல்லியது.

**கபிலர்**

ப-ரை : பாண - பாணனே!, மா இரு முள்ளூர் - மிக்க பெரிய முள்ளூர்க்கு, மன்னன் - அரசனாகிய மலையமான் திருமுடிக்காரி, மா ஊர்ந்து - குதிரை ஏறிச் சென்று, எல்லி - இரவில், தரீஇய - பகைவரிடமிருந்து கைப்பற்றிக் கொண்டுவந்த, இனநிரை பல் ஆன் கிழவரின் - பசுவின் நிரைக்கு உரியவர், அவனை எதிர்த்து நின்று போர்முனையில் அழிந்தாற்போல, அழிந்த இவள் நலன் - அழிந்து போகிய இவளது அழகை, கண்டாங்கு - கண்கூடாக நீ கண்டபடி, நீர் - தண்ணீர், பெயர்ந்து - தன் நிலையில் ஓடி, மாறிய - பின்னர் வற்றிய, செறி சேற்று அள்ளல் - செறிந்த அள்ளற் சேற்றின் கண்ணுள்ள, நெய்தலைக் கொழுமீன் அருந்த - நிணம் நிறைந்த கொழுத்த மீனைத் தின்ன விரும்பி, இனக்குருகு - நாரையினங்கள், குப்பை வெண் மணல் ஏறி - குவிந்த வெள்ளிய மணல் மேட்டில் ஏறியிருந்து, அரைசர் - அரசரது, ஒண்படைத் தொகுதியின் - சிறந்த காலாட்படையின் கூட்டம்போல, இலங்கி - விளங்கி, தோன்றும் - தோன்றா நிற்கும், தண்பெரும் - தண்ணிய பெரிய, பௌவ நீர்த் துறைவற்கு - கடல் நீர்த் துறையை உடைய தலைவனுக்கு, உரையாய் - உரைத்தாயில்லை, குணமோ - அது உனக்குத் தகுமோ? கூறியிருப்பின் உடன் வந்து தலையளி செய்திருப்பன்

அல்லனோ? அவனும் வந்திலன். இவளழகும் தொலைந்தது காண்.

முடிபு : பாண! இவள் நலன் தலைவற்குக் கண்டாங்கு நீயும் உரையாய்! குணமோ என முடிக்க.

உள்ளுறை : மீன்களைத் தின்ன விரும்பி, நாரைகள் இருத்தல்போல, தலைவன்பால் வேண்டியன பெறுதற்கு விறலி முதலியவரோடு இருக்கின்றீர்; நாரைகள் படைகள் ஆகாதவாறு போல, நீவிரும் வாயில்கள் ஆகீர் என்றவாறு.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவனைத் தலைவியோடு கூட்டுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

2\. கொழுமீன்

"கொழுமீன் குறைஇய துடிக்கட்டுணியல்" (பத். மதுரைக். 320)

"கொழுமீனுண்ட வன்னங்களே" (திருச்சிற். 188)

"கொழுமீன் குறைய வொதுங்கி" (சிறுபாண். 41)

"துளையர்கள் கொடுப்பன கொழுமீன்" (பெரிய. திருக்குறிப்புத். 35)

# 292. குறிஞ்சி

## தோழி கூற்று

நெடுங்கண் ஆரத்து அலங்குசினை வலந்த
பசுங்கேழ் இலைய நறுங்கொடித் தமாலம்
தீந்தேன் கொள்பவர் வாங்குபு பரியும்
யாணர் வைப்பின் கானம் என்னாய்
5 களிறுபொரக் கரைந்த கயவாய்க் குண்டுகரை
ஒளிறுவான் பளிங்கொடு செம்பொன் மின்னும்
கருங்கற் கான்யாற்று அருஞ்சுழி வழங்கும்
கராஅம் பேணா இரவரின்
வாழேன் ஐய மைகூர் பனியே.

எ-து இரவுக்குறி மறுத்தது.

## நல்வேட்டனார்

ப-ரை : ஐய - தலைவனே! நெடுங்கண் - நெடிய கணுக்களை உடைய, ஆரத்து - சந்தனமரத்தின், அலங்கு - அசைகின்ற, சினை வலந்த - கிளையைச் சுற்றிப்படர்ந்த, பசும்கேழ் - பசுமை யான நிறம் அமைந்த, இலைய - இலைகளை உடைய, நறும் கொடித் தமாலம் - நறிய தமாலக் கொடியை, தீம் தேன் கொள்பவர் - இனிக்கும் தேனை எடுக்க விரும்புபவர், வாங்குபு - வளைத்து, பரியும் - அறுத்துச் செல்லும், யாணர் - புதிய வருவாயை உடைய, வைப்பின் - பல இடங்களைக் கொண் டிருக்கும், கானம் - காடு, என்னாய் - என்று நினையாமல், களிறு - யானைகள், பொர - ஒன்றோடொன்று மாறுபட்டுப் போர் செய்ய, கரைந்த - அதனால் இடிந்து ஒழிந்த, கயவாய்க் குண்டு கரை - பெரிய குழிகள் பொருந்திய ஆழ்ந்த கரையிடம் எல்லாம், ஒளிறுவான் பளிங்கொடு - விளங்கிய வெள்ளிய பளிங்குக் கற்களும், செம்பொன் - சிவந்தபொன்னும், மின்னும் - மின்னுதலைச் செய்யும்; கருங்கல் - கரிய கற்பாறையின் ஊடே, கான்யாறு - ஓடிச்செல்லும் காட்டாற்றில், அருஞ்சுழி - நீந்துதற்கு அரிய நீர்ச் சுழிகளில், கராஅம் - முதலைகள், வழங்கும் - சஞ்சரிக்கும், பேணா - இத் துன்பங்களினின்றும் நின்னைப் பாதுகாத்துக் கொள்ளாமல், இரவரின் - இரவின் கண்ணே நீ இங்கு வருவையாயின், வாழேன் - யான் உயிர் வாழேன்; மேலும், மைகூர் பனியே - இந்த இருள் நிரம்பிய பனிக் காலத்தில் தனித்தும் வாழேன்; ஆதலின் இதனை ஆராய்ந்து ஒன்றனை இன்னே செய்க.

முடிபு : ஐயா! கானம் என்னாய்; பேணா இரவரின் வாழேன் என முடிக்க.

கருத்து : யானைகளும் முதலைகளும் இயங்கும் கானத் திலும் காட்டாற்றிலும் நடுநிசியில் உன்னைப் பாதுகாத்துக் கொள்ளாது வருதலைத் தலைவி வேண்டாள். வரின் உயிர் வாழாள்.

வி-ரை : அருள் சிறிதும் இன்றிக் கொடியை அறுப்பவரான படியால் தலைவியின் தமர் நின்னைக் காணின் ஒறுப்பர் என்றபடி. வழியில் வரும் இடையூறுகளை எண்ணிக் கவல்வாள் என்றமையின் வரைந்து கொள்க என்று குறிப்பித்தாள். இஃது அழிவில் கூட்டத்து அவன் புணர்வு மறுத்தல்.

இறைச்சி : தேன் எடுப்போர் சந்தனமரத்திற் சுற்றிய கொடியை அறுப்பர் என்றதனால், தலைவியைக் காண வருகின்ற

நீ இரவில் வருதலான் கவல்கின்ற நிலை போக்கி வரைக என்றாள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - இரவுக்குறி மறுத்து வரைவு கடாதல்

## 293. பாலை

### தலைவி கூற்று

மணிக்குரல் நொச்சித் தெரியல் சூடிப்
பலிகள் ஆர்கைப் பார்முது குயவன்
இடுபலி நுவலும் அகன்றலை மன்றத்து
விழவுத்தலைக் கொண்ட பழவிறல் மூதூர்ப்
5 பூங்கண் ஆயம் காண்டொறும் எம்போற்
பெருவிதுப்பு உறுக மாதோ எம்மில்
பொம்மல் ஓதியைத் தன்மொழிக் கொளீஇக்
கொண்டுஉடன் போக வலித்த
வன்கண் காளையை ஈன்ற தாயே.

எ-து : தாய் மனை மருண்டு சொல்லியது.

(அல்லது)

அவரிடத்தாரைக் கண்டு சொல்லியதூஉம் ஆம்.

கயமனார்

ப-ரை : மணிக்குரல் நொச்சி - நீலமணி போலும் பூங்கொத்தினை உடைய நொச்சியின், தெரியல் - மாலையை, சூடி - அணிந்து, பலிகள் ஆர், கை - பலிகள் இடுதற்கு ஏற்ற பெரிய கையை உடைய, பார்முது குயவன் - பரிய முதிய குயவன், இடுபலி - தான் வைக்கும் பலியை உண்ணுதற்கு, நுவலும் - அணங்குகளையும் காக்கைகளையும் கூவி அழைக்கும், அகன்றலை - இடம் அகன்ற, மன்றத்து - மன்றத்தின்கண்ணே, விழவுத் தலைக்கொண்ட - திருவிழாக்கள் நடத்தலை மேற்கொண்ட, பழவிறல் மூதூர் - பழமையான வெற்றியை உடைய இம் மூதூரில், பூங்கண் ஆயம் காண்தொறும் - என் மகளுடன் விளையாடும் நெய்தல் மலர்போலும் கண்களை உடைய தோழியரைக் காணும்பொழுது எல்லாம், எம்போல் - யாம் பெரிய நடுக்கம் அடைந்து துன்பப்படுவதுபோல, எம்இல் - எம் மனையி

லிருந்து, பொம்மல் ஓதியை - செறிந்த கூந்தலை உடைய தலைவியை, தன் மொழிக் கொளீஇ - தன்னுடைய மயக்கும் சொற்களாற் கட்டுப்படுத்தி, உடன்கொண்டு போக - தன்னுடன் அழைத்துக்கொண்டு செல்ல, வலித்த - எண்ணித் துணிந்த, வன்கண் - அஞ்சாமை மிக்க, காளையை - காளை போன்ற ஆண்மகனை, ஈன்ற - பெற்ற, தாய் - அன்னையானவளும், பெரு விதுப்பு உறுக - நடுக்கமுற்றுத் துன்பம் அடைவாளாக.

முடிபு : எம்மில் ஓதியை உடன்போக வலித்த காளையை ஈன்ற தாய் எம்போல் பெருவிதுப்புறுக என முடிக்க.

கருத்து : மகள் உடன்போக்கிற் சென்றமையை அறிந்த நற்றாய், யான் நொந்து அழிவதுபோல, அவனை ஈன்ற தாயும் நோவாளாகி என்று சபித்தாள்.

அ-ள் : விதுப்பு - நடுக்கம். பழவிறல் - பழைய வெற்றி. பொம்மல் - செறிவு.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - ஆற்றுதல்.

ஒப்புமைப்பகுதி

1. நொச்சி
"மணிதுணர்ந்தன்ன மாக்குரல் நொச்சி" (புறநா. 272:1)

6. பெருவிதுப்புறுதல்
"என்போற் பெருவிதுப்புறுக வேந்தே"
(புறநா. 291:5, 255:3)

# 294. குறிஞ்சி

## தோழி கூற்று

தீயும் வளியும் விசும்புபயந் தாங்கு
நோயும் இன்பமும் ஆகின்று மாதோ
மாயம் அன்று தோழி வேய்பயின்று
எருவை நீடிய பெருவரை அகந்தொறும்
5 தொன்றுறை துப்பொடு முரண்மிகச் சினைஇக்

கொன்ற யானைக் கோடுகண்டு அன்ன
செம்புடைக் கொழுமுகை அவிழ்ந்த காந்தள்
சிலம்புடன் கமழும் சாரல்
இலங்குமலை நாடன் மலர்ந்த மார்பே.

எ-து : மணமனையுட் புக்க தோழி தலைவியது கவின் கண்டு சொல்லியது.

புதுக்கயத்து, வண்ணக்கன் கம்பூர்கிழான்

ப-ரை : தோழி - தலைவியே! வேய் பயின்று - மூங்கில் செறிந்து, எருவை - கொறுக்கச்சி, நீடிய - எங்கும் படர்ந்து பரவிய, பெருவரை அகம்தொறும் - பெரிய மலையிடம் எங்கும், தொன்றுறை துப்பொடு - தொன்றுதொட்டு எழுந்து வந்த பகைமையின் அடிப்படையில், முரண் மிகச் சினைஇ - மாறுபாடு கொண்டு மிகவும் சினந்து, கொன்ற யானை - புலியைக் கொன்ற யானையின், கோடு கண்டு அன்ன - தந்தத்தைக் கண்டாற் போன்ற, செம்புடை - சிவந்த புறத்தையுடைய, கொழு - கொழுவிய, முகை - அரும்புகள், அவிழ்ந்த - மலர்ந்த, காந்தள் - காந்தட் பூக்கள், சிலம்புடன் - மலையிடம் எங்கும், கமழும் - நறுமணம் வீசும், சாரல் - சாரலையுடைய, இலங்கு - விளங்குகின்ற, மலைநாடன் - மலை நாடனது, மலர்ந்த - அகன்ற, மார்பு - மார்பானது, தீயும் - பொறுத்தற்கு அரிய நெருப்பையும், வளியும் - பொறுக்க இனிய காற்றையும், விசும்பு - ஆகாயம் ஒன்றே, பயந்தாங்கு - பெற்றாற்போல, நோயும் - துன்பத்தையும், இன்பமும் - இன்பத்தையும், ஆகின்று - ஒரு சேரப் பெற்றுள்ளது; மாயம் அன்று - இது பொய்யன்று; உண்மையே என்பதை நீ நன்கு அறிவாயாக.

முடிபு : தோழி! மலைநாடனின் மலர்ந்த மார்பு நோயும் இன்பமும் ஆகின்று; மாயம் அன்று என முடிக்க.

கருத்து : தலைவன் அருகிலிருக்க தலைவி கவின்கொண்டு இன்புற்று மகிழ்வதும், அவன் பிரிவில் துன்புற்று நோவதும் மாயம் அன்று.

பி-ம் 5 : 'தொண்டு'

மெய்ப்பாடு - உவகை.

பயன் - மகிழ்தல்.

ஒப்புமைப்பகுதி

5-7. செங்கோட்டி யானை

"செங்கோலம்பிற் செங்கோட்டி யானை" (குறுந். 1-2)

"பொருதுஇகல் புலிபோழ்ந்த பூ நுதல்
எழில்யானைக் குருதிக் கோட்டழிகறை
தெளிபெறக் கழீஇயின்று" (பரி. 20:4-5)

"மறமிகு வேழம் தன்மாறுகொள் மைந்தினால்
புகர்நுதல் புண்செய்த புய்கோடுபோல,
உயர்முகை நறுங்காந்தள்நாள்தோறும் புதிதுஊன்" (கலி. 53:3-5)

# 295. நெய்தல்

## தோழி கூற்று

முரிந்த சிலம்பின் எரிந்த வள்ளியிற்
புறனழிந்து ஒலிவரும் தாழிருங் கூந்தல்
ஆயமும் அழுங்கின்று யாயும்அஃது அறிந்தனள்
அருங்கடி அயர்ந்தனள் காப்பே எந்தை
5 வேறுபல் நாட்டிற் கால்தர வந்த
பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறைக்
கலிமடைக் கள்ளின் சாடி அன்னஎம்
இளநலம் இற்கடை ஒழியச்
சேறும் வாழியோ முதிர்கம் யாமே.

எ-து : தோழி செறிப்பறிவுறீஇ வரைவு கடாயது.
(அல்லது)
சிறைப்புறமும் ஆம்.

ஔவையார்

ப-ரை. முரிந்த - வெம்மையாற் பிளவு பட்ட, சிலம்பின் - மலையின் கண், எரிந்த - வெப்பந்தாங்காது கருகிய, வள்ளியின் - வள்ளிக் கொடியினைப்போல, புறன் அழிந்து - மேலழகுகெட்டு, ஒலிவரும் - தழைந்த, தாழ் - தாழ்ந்த, இரும் - கரிய, கூந்தல் - கூந்தலை உடைய, ஆயமும் - தோழியர் கூட்டமும், அழுங்கின்று - தலைவி இற்செறிக்கப்பட்டமையாற் காணாது வருந்தி அழுங்குகிறது. யாயும் - தாயும், அஃது அறிந்தனள் - களவொழுக்கத்தை அறிந்தனளாகி, அருங்கடி அயர்ந்தனள் காப்பு - வீட்டின் கண்

வெளியிற் செல்லவொண்ணாதபடிச் சிறைப்படுத்தினள். எந்தை வேறுபல் நாட்டில் - பல்வேறு நாடுகளிலிருந்து மரக்கலங்கள் வாயிலாக எம்தந்தை, கால்தர - காற்றுச் செலுத்த, வந்த - கொணர்ந்த, பலவினை நாவாய் - பலவாய தொழிலின் சிறப்பால் விளக்கம் பெற்ற கலங்கள், தோன்றும் பெருந்துறை - ஓங்கித் தோன்றும் பெரிய துறையின் கண்ணே, கலிமடைக் கள்ளின் - உண்பதற்கென செருக்குடன் சேர்த்து வைத்திருக்கும் மதுவின், சாடி அன்ன - சாடியைப் போன்ற, எம் - எம்முடைய, இளநலம் - இளமையும் அழகும் அனைத்தும், இற்கடை ஒழிய - இல்லின் கண்ணேயே தங்கிக்கெடும்படியாக, சேறும் - எம் மனைக்குச் செல்வோம்; யாம் முதிர்கம் - எம் வீட்டிலிருந்தே முதுமையுற்று மடிவோம், வாழி - நீ நெடுங்காலம் வாழ்ந்து இன்புறுக.

முடிபு : ஆயமும் அழுங்கின்று; யாயும் அயர்ந்தனள் காப்பு; இளநலம் ஒழிய இற்கடைச் சேறும்; யாம் முதிர்கம்; நீ வாழி எனமுடிக்க.

கருத்து : களவினை அன்னை அறிந்து தலைவியை வீட்டின் கண் சிறை செய்தனள். இனி இவ்வொழுக்கம் நிகழ வழியில்லை. நீ வாழி என்றுகூறி விரைக, வரைக என்றாள்.

வி-ரை : சாடி - தலைவி, கள் - அவளின் அழகு. இது "இழக்கிடு பொருளோடு ஐந்தும் ஆகும்" தொல் - பொருள் - 276 என்பதனாற் பெற்றாம். முதிர்கம் என்றமையால் வேறொரு வரை மணவோம் என்று குறிப்பித்தாள். களவுக்கு இனி இயலாது என்றதனால் வரைவு கடாயினாள்.

மெய்ப்பாடு - பெருமிதம்

பயன் - வரைவு கடாதல்

ஒப்புமைப்பகுதி

2. ஒலிமென் கூந்தல்
"ஒலிமென் கூந்தல் உரியவால் நினக்கே" (குறுந். 225:7)
(குறிஞ்சிப்.2.) ((கலி.64:6) (புறநா. 109:16, 306 3.)

# 296. பாலை

## தலைவி கூற்று

என்னா வதுகொல் தோழி மன்னர்
வினைவல் யானைப் புகர்முகத்து அணிந்த
பொன்செய் ஓடைப் புனைநலம் கடுப்பப்
புழற்காய்க் கொன்றைக் கோடுஅணி கொடிஇணர்
5 ஏகல் மீமிசை மேதக மலரும்
பிரிந்தோர் இரங்கும் அரும்பெறல் காலையும்
வினையே நினைந்த உள்ளமொடு துனைஇச்
செல்ப என்ப காதலர்
ஒழிதும் என்பநாம் வருந்துபடர் உழந்தே.

எ-து: தோழியால் பிரிவு உணர்த்தப்பட்ட தலைவி சொல்லியது.

### குதிரைத் தறியனார்

ப-ரை: தோழி - தோழியே! மன்னர் - அரசருடைய, வினை வல்யானை - போர் செய்வதில் வல்ல யானையின், புகர் முகத்து - புள்ளிகளையுடைய முகத்தில், அணிந்த - அணிந்த, பொன் செய் ஓடை - நெற்றிப் பட்டத்தில், புனைநலம் கடுப்ப - அலங்கரித்த அழகிய தோற்றம்போல, புழல்காய் கொன்றை - உள்ளே துளைபொருந்திய காயைஉடைய சரக்கொன்றையின், கோடுஅணி - கிளைகளில் அழகிய. கொடி இணர் - கொடி போன்ற பூங்கொத்துக்கள், ஏகல் மீமிசை - பெரிய மலையின் மிக உயர்ந்த இடத்தில், மேதக - மேன்மை பட மலரும், பிரிந்தோர் இரங்கும் - காதலரைப் பிரிந்தோர் வருந்தும், அரும்பெறல் காலையும் - பெறுதற்கு அரிய கார்காலத்திலும், வினையே - தாம் மேற்கொண்ட செயலிலேயே, நினைந்த உள்ளமொடு - சென்ற மன எழுச்சியோடு, துனைஇ - விரைந்து, செல்ப - செல்வாராயினர், நாம் - அவரைப் பிரிந்து நாம், வருந்துபடர் உழந்து - வருந்துகின்ற அரிய துன்பத்தில் ஆழ்ந்தி, ஒழிதும் - அழிவோம்; இஃதென்ன கொடுமை? இவர் பிரிவு இனிமை பயக்குமோ? கூறாய். என் ஆவதுகொல் - யாதாய் முடியுமோ? அறியேன்.

முடிபு: தோழீ! காலையும் நினைந்த உள்ளமொடு காதலர் செல்ப; நாம் ஒழிதும், என் ஆவது கொல் எனமுடிக்க.

கருத்து : நம் தலைவர் கார்காலம் என்று அறிந்தும் பிரிய முற்பட்டனர். அவரைப் பிரிந்த நாம் நலங்குன்றிக் கெடுவோம். வேறு செயத்தக்கது என்?

இறைச்சி : யானையின் நெற்றிப் பட்டம்போல, கொன்றை கார்காலத்து மலரும் என்றது, யான் தலைமகற்கு உரிமை பூண்டு வாழும் கிழத்திபோல மகிழ்கின்றேன் என்றும், கார்காலம் போனவுடன் மலர்கள் உதிர்ந்து அழிதல்போல, அவர் பிரிவினால் யான் இறந்து ஒழிவேன் என்றும் கூறினாள்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

# 297. குறிஞ்சி

## தோழி கூற்று

பொன்செய் வள்ளத்துப் பால்கிழக்கு இருப்ப
நின்ஒளி ஏறிய சேவடி ஒதுங்காய்
பன்மாண் சேக்கைப் பகைகொள நினைஇ
மகிழா நோக்கம் மகிழ்ந்தனை போன்றனை
5 எவன்கொல் என்று நினைக்கலும் நினைத்திலை
நின்னுள் தோன்றும் குறிப்புநனி பெரிதே
சிதர்நனை முணைஇய சிதர்கால் வாரணம்
முதிர்கறி யாப்பில் துஞ்சும் நாடன்
மெல்ல வந்து நல்லகம் பெற்றமை
10 மையல் உறுகுவள் அன்னை
ஐயம் இன்றிக் கடுங்கூ வினளே.

எ-து : தோழி சிறைப்புறமாகத் தலைவிக்கு உரைப்பாளாய்த் தலைவன் கேட்பச் சொல்லியது.

(அல்லது)

தோழி தலைவியை அறத்தொடு நிலைக்கு உடன்படுத்தியது உம் ஆம்.

மதுரை, அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார்

ப-ரை : தோழீ - தலைவீ! பொன்செய் வள்ளத்து - பொன்னாற் செய்யப்பட்ட கிண்ணத்தில் ஊற்றி வைத்த, பால் -

பாலானது நின்னாற் பருகப்படாமல், கிழக்கு இருப்ப - கீழே வைத்தபடியே இருப்பதைக் காணாய்; நில் எளி ஏறிய - உன் மேனியின் நிறத்துக்கு அந்தப் பாலும் வேறு நிறமாகவே தோன்று கின்றது; பாராய். சேவடி ஒதுங்காய் - மேலும், உன் சிவந்த அடிகளால் நடக்கவும் செய்திலை; தவிர, பன்மாண் சேக்கை - பல்வேறு மாண்புகளைக்கொண்ட படுக்கையை, பகைகொள - பகையாக, நினைஇ - நினைத்து, மகிழா நோக்கம் மகிழ்ந்தனை போன்றனை - மகிழ்ந்த பார்வையை உடைய கட்குடியனின் மகிழ்ந்த தோற்றம்போல் மயங்கி நின்றனை; எவன்கொல் என்று - இம் மாற்றங்கள் ஏற்படுவதற்கு என்ன காரணம் என்று நினைக்க வும் செய்திலை; நின்னுள் தோன்றும் - ஆகையால் நின் உள்ளத் தில் தோன்றும், குறிப்பு - எண்ணம், நனி பெரிது - மிகவும் பெரியதாக உள்ளது. சிதர் நனை முணைஇய - வண்டுகள் மொய்க்கின்ற மலரும் பருவத்தினை உடைய பூவினை வெறுத்த, சிதர் கால் வாரணம் - மெல்லிய கால்களை உடைய கோழி, முதிர் கறி யாப்பில் - முதிர்ந்த மிளகுக் கொடிகள் ஒன்றோ டொன்று பின்னியிருப்பதன் கண்ணே, துஞ்சும் நாடன் - தூங்குதலைச் செய்யும் மலைநாடன், மெல்ல வந்து - மென்மை யாக வந்து, நல் அகம் பெற்றமை - நின்பாற் கூட்டம்கொண் டமையால் நின் மார்பில் ஏற்பட்ட மாற்றங்களைக் கண்டு, ஐயம் இன்றி - ஐயம் சிறிதும் இல்லாமல், அன்னை - தாய், மையல் உறுகுவள் - மயங்குவாள். கடும் கூவினள் - கடுமையான குரலுடன் உன்னை உரப்பிக் கூவுகின்றனள், காண்.

முடிபு : தலைவீ! இருப்ப, ஒதுங்காய், நினைஇ, போன்றனை நினைத்திலை, பெரிது, நாடன் நல்லகம் பெற்றமை அன்னை உறுகுவள், கடுங்கூவினள் என முடிக்க.

கருத்து : தலைவனோடு உனக்குள்ள கூட்டத்தைப் புணர்ச்சிக் குறிப்பால் அன்னை அறியின் ஏதமாகும். ஆகலின் அதற்கு முன்பே தலைவன் வரைந்து கோடல் தக்கது.

அ-ள் : கிழக்கு - கீழிடம். சிதர் - வண்டு. மகிழ்தல் - கட் குடித்தல். சிதர்கால் - மெல்லிய கால். இருப்ப - முற்று.

உள்ளுறை : பூவரும்புகளை வெறுத்த கோழி மிளகுக்கொடி யிலே துஞ்சும் என்றது, தலைவி வருந்த தலைவன் மறைந்து சென்று தன்னூரகத்துத் தங்குவானாயினான் என்றவாறு.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

பால்கிழக்கு இருப்ப என்றதனால் உண்டி சுருக்கலும், கண்ணும் தோளும் முலையும் கதிர்ப்புக் கொண்டமையால் நிற வேறுபாடும், ஒதுங்கி நிற்றல், துயிலாமை, செய்வினை மறைப்பு இவற்றால் ஐயத்திற்கு இடமுண்டாதலும் பெறப்பட்டது.

## 298. பாலை

### தலைவன் கூற்று

வம்ப மாக்கள் வருதிறம் நோக்கிச்
செங்கணை தொடுத்த செயிர்நோக்கு ஆடவர்
மடிவாய்த் தண்ணுமைத் தழங்குகுரல் கேட்ட
எருவைச் சேவல் கிளைவயிற் பெயரும்
5 அருஞ்சுரக் கவலை அஞ்சுவரு நனந்தலைப்
பெரும்பல் குன்றம் உள்ளியும் மற்று இவள்
கரும்புடைப் பணைத்தோள் நோக்கியும் ஒருதிறம்
பற்றாய் வாழிஎன் நெஞ்சே நற்றார்ப்
பொற்றேர்ச் செழியன் கூடல் ஆங்கண்
10 ஒருமை செப்பிய அருமை வான்முகை
இரும்போது கமழும் கூந்தல்
பெருமலை தழீஇயு நோக்கு இயையுமோ மற்றே.

எ-து: தோழியால் பொருள் வலிப்பித்துத் தலைவியை எய்தி ஆற்றாளாய நெஞ்சினை நெருங்கிச் சொல்லி, தலைவன் செலவு அழுங்கியது.

### விற்றூற்று, வண்ணக்கன் தத்தனார்

ப-ரை: நெஞ்சே - என் நெஞ்சமே! வம்ப மாக்கள் - வணிக நிமித்தம் வேற்று நாடுகளிலிருந்து புதியராய் வருகின்ற மக்கள், வருதிறம் நோக்கி - வரும் வழியை நோக்கி அவரிடம் வழிப்பறி செய்வான் வேண்டி, செங்கணை தொகுத்த - சிவந்த அம்புகளை அவர்மேற் செலுத்திய, செயிர் நோக்கு- சீற்றமொடு பார்க்கின்ற, ஆடவர் - மறற்வருடைய, மடிவாய்த் தண்ணுமை - தோலை மடித்து மூடிய வாயை உடைய தண்ணுமை என்னும் வாச்சியத்தை, தழங்கு குரல் - முழக்கி எழுப்பும் ஓசையை, கேட்ட - கேட்டவுடன், எருவைச் சேவல் - ஆண் பருந்து, கிளைவயிற் பெயரும் - அஞ்சித் தம் சுற்றத்திடத்துப் பாதுகாப்

பாகச் செல்லும், அரும்சுரக் கவலை - எவரும் கடத்தற்கு அரிய பாலை நிலத்தின் கண்ணுள்ள கவர்த்த வழிகளை உடைய, அஞ்சுவரு - அச்சம் தருகின்ற, நனம் தலை - அகன்ற இடங்களை உடைய, பெரும்பல் குன்றம் - பெரிய பலதிறப்பட்ட குன்றுகளை; உள்ளியும் - பொருள் ஈட்டும் விருப்பினால் செல்ல நினைந்தும், மற்று - மாறாக, இவள் - இக் காதலியின், கரும்புடைப் பணைத் தோள் நோக்கியும் - கரும்பு எழுதப் பெற்ற பருத்ததோளைப் பிரிவதற்கு அஞ்சி உற்று நோக்கியும், ஒருதிறம் பற்றாய் - ஒரு வழியில் துணிந்து ஒழுகினாய் இல்லை; வாழி - வாழ்வாய்! நல் தார் - நல்ல மாலையை அணிந்த, பொன் தேர்ச் செழியன் - பொன்னாற் செய்யப்பட்ட தேரை உடைய பாண்டியனது, கூடல் ஆங்கண் - மதுரையம்பதியில், ஒருமை செப்பிய அருமை - இவன் தோழி ஒருமையாகப் பொருள்வயிற் செல்லுமாறு வற்புறுத்திக் கூறினபடியால், பெருமலை தழீஇயும் -பெரியமலை வழியில் வந்த இடத்தும், வான் முகை - வெளிய அரும்பு மலர்ந்த, இரும்போது- பெரிய மலரின், கமழும் - நறுமணம் வீசும், கூந்தல் - கூந்தலை உடையாளை, நோக்கு இயையுமோ - பார்க்க முடியுமோ? மற்று - முடியுமாயின் பொருள்வயிற் பிரிவாய்.

முடிபு : என் நெஞ்சமே! உள்ளியும் நோக்கியும் ஒருதிறம் பற்றாய். பெருமலை தழீஇயும் நோக்கு இயையுமோ என முடிக்க.

கருத்து : பொருள் வயிற்பிரியினும் தலைவியின் நோக்கு அஞ்ஞான்று காண இயலாது ஆகையால் பிரியேன் என்றபடி.

இறைச்சி - ஆண் பருந்து தண்ணுமை ஒலிக்கு அஞ்சித் தன் சுற்றத்திடத்துப் பெயர்ந்து செல்லும் என்றது, யான் பொருள் வயிற் பிரிந்தாலும் இவள் படும் இடர் கருதித் திரும்புவேன் என்றபடி.

மெய்ப்பாடு - அவலம்.
பயன் - இல்லத்து அழுங்கல்.

# 299. நெய்தல்

## தோழி கூற்று

உருகெழு யானை உடைகொண்டு அன்ன
ததர்பிணி அவிழ்ந்த தாழை வான்புதர்
தயங்கிருங் கோடை தாக்கலின் நுண்தாது
வயங்கிழை மகளிர் வண்டில் தாஅம்
5 காமர் சிறுகுடி புலம்பினும் அவர்காண்
நாம்இலம் ஆகுதல் அறிது மன்னோ
வில்எறி பஞ்சி போல மல்குதிரை
வளிபொரு வயங்குபிசிர் பொங்கும்
நளிகடற் சேர்ப்பனொடு நகாஅ ஊங்கே.

எ-து : தோழி தலைவன் சிறைப்புறமாகச் சொல்லியது.

வடமவண்ணக்கன் பேரி சாத்தனார்

ப-ரை : உருகெழு யானை - கண்டார்க்கு அச்சத்தைத் தருகின்ற யானை, உடை கொண்டு அன்ன - நல்ல ஆடையை அணிந்து கொண்டாற் போன்ற, ததர்பிணி அவிழ்ந்த - நெருங்கிய பிணிப்பு அவிழ்ந்த, தாழை வான்புதர் - தாழையின் பெரிய புதரில், தயங்கு இரும் கோடை - இயங்குகின்ற கடிய மேல் காற்று, தாக்கலின் - மோதுதலால், நுண்தாது - மலரில் உள்ள நுண்ணிய மகரந்தப் பொடிகள், வயங்கு இழை மகளிர் வண்டில் - விளங்கிய அணிகலன்களைத் தரித்த மகளிரின் வளை கள் உடைந்து சிதறி விழுந்தாற்போல, தாஅம் - உதிர்ந்து எங்கும் பரவி நிற்கும், காமர் சிறுகுடி-அழகிய கடற்கரையிலுள்ள சிறிய நம்மூர், புலம்பினும் - வருந்திப் புலம்புவதாயினும், அவரே நம் தலைவர், வில்எறி பஞ்சின் - வில்லால் அடிபட்ட பஞ்சு போல, மல்குதிரை - நிரம்பிய அலைகளிலே, வளி - காற்று, பொரு - மோதுதலால், வயங்கு பிசிர்பொங்கு - விளங்கிய பிசிர் கள் மிகுகின்ற, நளிகடற் சேர்ப்பனொடு - நெருங்கிய கடற்கரை யின் தலைவராகிய நம் தலைவனோடு, நகாஅ ஊங்கு - மகிழ்ந்து கூடாத நாளில், நாம் இலம் ஆகுதல் அறிதுமன் - நாம் வாழ்ந்தும் வாழாத் தன்மையை உடையேம் என்பதை நன்கு அறிவோம்; எம்நிலை இப்படியிருக்க, அவர் தொடர்பு கழிந்தது காண். இஃதென்ன கொடுமை.

முடிபு : காமர் சிறுகுடி புலம்பினும் சேர்ப்பனொடு நகாஅ ஊங்கு நாம் இலம் ஆகுதல் அறிதும் எனமுடிக்க.

கருத்து : அலர் தூற்றினும் அவரே நம் தலைவர். அவரைக் கூடாத நாள் நாம் இருந்தும் இல்லாதேம். ஆகலின் இஃதுணர்ந்து தலைவர் வரைய விரைதல் வேண்டும்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவுகடாதல்.

ஒப்புமைப்பகுதி

6\. இலமாகுதும்
"மெல்ல மெல்ல இல்லா குதுமே" (குறுந். 290:6)

9\. நகாஅ ஊங்கு
"வான் தோய் வெற்பன் மணவா வூங்கே" (குறுந். 357:8)
"விரிநீர்ச் சேர்ப்பனோடு நகாஅ வூங்கே" (குறுந். 226:7)

## 300. மருதம்

### விறலி கூற்று

### (தோழி கூற்றும் ஆம்)

சுடர்த்தொடிக் கோமகள் சினந்தென அதன்எதிர்
மடத்தகை ஆயம் கைதொழு தாங்கி
உறுகால் ஒற்ற ஒல்கி ஆம்பல்
தாமரைக்கு இறைஞ்சும் தண்துறை ஊரன்
5 சிறுவளை விலைஎனப் பெருந்தேர் பண்ணிஎம்
முன்கடை நிறீஇச் சென்றிசி னோனே
நீயும் தேரொடு வந்து போதல் செல்லாது
நெய்வார்ந் தன்ன துய்அடங்கு நரம்பின்
இரும்பாண் ஒக்கல் தலைவன் பெரும்புண்
10 ஏஎர் தழும்பன் ஊணூர் ஆங்கண்
பிச்சைசூழ் பெருங்களிறு போலஎம்
அட்டில் ஓலை தொட்டனை நின்மே.

எ-து: வாயில் மறுத்தது. வரைவு கடாயதூஉம் ஆம். (அயலவர் - நொதுமலாளர் வரைவின் மேலிட்டு மறுதத்துக் களவு வந்தது)

**பரணர்**

ப-ரை: நெய் வார்ந்தன்ன - நெய்யை வடித்தாற்போல, துய் அடங்கு - பிசிர் அடங்கிய, நரம்பின் - இழுத்துக் கட்டிய யாழை உடைய, இரும் - பெரிய, பாண் - பாணர்களின், ஒக்கல் - சுற்றத்திற்கு, தலைவன் - தலைமை தாங்கி நிற்பவனே!, சுடர்த்தொடி - பிரகாசம் மிகுந்த வளையல்களை உடைய' கோமகள் - அரசகுமாரியாம் எம் பெருமாட்டி, சினந்தென - சீற்றம் கொண்டவுடன், அதன் எதிர் - அவளுக்கு எதிராக' மடத்தகை ஆயம் - மடப்பத்தை உடைய தோழியர்கள், கைதொழுதாங்கு - அவள் சினம் தணிதற்குக் கைதொழுது வணங்கினாற்போல, உறுகால் ஒற்ற - மிக்க காற்று மோதுதலால், ஆம்பல் ஒல்கி - ஆம்பல் மலர்கள் குவிந்து, தாமரைக்கு - தாமரை மலரிடத்திலே, இறைஞ்சும் - வந்து சாய்ந்து வணங்கி நிற்கும், தண்துறை ஊரன் - தண்ணிய நீர்த்துறைகளை உடைய ஊரன், (ஏனையொருத்திக்குப் பரிசம் போடச் சொல்பவன், இடையே எம்மைக் காண நேரிட்டதனால்) சிறுவளை - சிறிய வளையல்களை உடைய இத்தலைவிக்கு, விலை என - இதுவே விலையாகும் என்று கருதி, பெருந்தேர் - தன் பெரிய தேரை, பண்ணி - அலங்கரித்து, எம் முன் கடை நிறீஇ - எமது மனை முன்றிலின் கண் நிறுத்தி விட்டு, சென்றிசினோன் - பரத்தையின் மனையகம் தேடிச் சென்றொழிந்தனன் கண்டாய்; நீயும் - பாணர் தலைவனாகிய நீயும், தேரொடு வந்து - அவன் தேரொடு வந்தனை; போதல் செல்லாது - அவன் பின் போதலைச் செய்யாது, பெரும் புண் ஏஎர் தழும்பன் - போரிலே பெரிய விழுப்புண் பெற்று அதனால் அழகுபெற்ற, 'தழும்பன்' - 'தழும்பன்' என்பவனது, ஊண்ஊர் ஆங்கண் - ஊணூரிடத்தில் உள்ள, பிச்சை சூழ் பெருங் களிறு போல - பிச்சைக்கு வந்த பெருங் களிறு நின்றாற்போல, எம் - எம்முடைய, அட்டில் ஓலை - உணவுச் சாலையின் கூரையை, தொட்டனை நின்மே - தொட்டு நிற்கின்றனை; அவ்வாறே நின்று கொண்டே இருப்பாயாக, என்று விறலி வெகுண்டு உரைத்தாள்.

முடிபு: பாண! தண்துறை ஊரன் நிறீஇச் சென்றிசினோன், நீயும் களிறுபோல் தொட்டனை நின்மே எனமுடிக்க.

கருத்து : அயலவர் வந்து வரைவதற்கு முன் பாண! நின் தலைவனைப் பரிசம் இட்டு விரைந்து வந்து வரைந்து கொள்ளச் செய்.

நயம் : காற்றினால் தாக்கப்பட்ட ஆம்பல் தாமரை மலரிடத்துத் தாழும் என்றது, தலைவன் நின்னைத் தூதாக ஏவ நீ இங்கு வந்து தாழ்ந்து வணங்குகின்றனை என்பதைக் குறிப்பித்தது.

மருத நிலத்துத் தலைவன் ஒருவன் எம் தலைவியை மணக்க வேண்டிப் பரிசமாகத் தேரை நிறுத்திப் போயுள்ளான், நீயும் தலைவனோடு அவ்வண்ணம் வந்து நில்லாது களிறு நிற்றல் போல நிற்கின்றனை என்றவாறு.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - வாயில் மறுத்தல்.

ஒப்புமைப்பகுதி

10. தழும்பன்

"வாய்மொழித் தழும்பன் ஊணூரன்ன" (புறநா. 348:5)

"பிடிமிதி வழுதுணைப் பெரும் பெயர்த்
தழும்பன், கடிமதில் வரைப்பின் ஊணூர்"
(அகநா. 227:17-8)

8. ஆன் நெய் நரம்புக்கு

"ஆடகச் செம்பொனாணி ஆன்நெய் வார்ந்தனைய"
(சீவக. 1697)

# 301. குறிஞ்சி

## தோழி கூற்று

நீள்மலைக் கலித்த பெருங்கோற் குறிஞ்சி
நாள்மலர் புரையும் மேனிப் பெருஞ்சுனை
மலர்பிணைத்து அன்ன மாஇதழ் மழைக்கண்
மயிலோர் அன்ன சாயல் செந்தார்க்
5 கிளியோர் அன்ன கிளவிப் பணைத்தோள்

பாவை அன்ன வனப்பினள் இவளெனக்
காமர் நெஞ்சமொடு பலபா ராட்டி
யாய்மறப்பு அறியா மடந்தை
தேம்மறப்பு அறியாக் கமழ்கூந் தலளே.

எ-து : சேட்படுத்து, பிரிவின்கண் அன்பின் இயற்கையில் தருவகையதோர் ஆற்றாமையினான் என்று, தோழி தன்னுள்ளே சொல்லியது.

## பாண்டியன் மாறன் வழுதி

ப-ரை : தேம் - நறுமணம் வீசும் எண்ணெய் முதலியன வற்றை, மறப்பு அறியா - தடவிக்கொள்வதில் மறந்து அறியாத, கமழ் - வாசனை வீசுகின்ற, கூந்தலள் - கூந்தலை உடைய தலைவி, நீள்மலை - நெடியமலையிலே, கலித்த-தழைத்த, பெருங் கோல் - பெரிய தண்டினை உடைய, குறிஞ்சி - குறிஞ்சியின், நாள்மலர் புரையும் - விடியற் காலையில் மலர்ந்த பூவைப் போன்ற, மேனி- உடலையும், பெருஞ்சுனை- பெரிய நீர்ச்சுனையி லுள்ள, மலர் பிணைத்து அன்ன - குவளை மலர்கள் இரண்டை எதிர் எதிரே வைத்தாற் போன்ற, மா - கரிய, இதழ் - இமை களை உடைய, மழை - குளிர்ச்சி அமைந்த, கண் - கண்களையும், மயிலோரன்ன சாயல் - மயிலை ஒரு தன்மையாக ஒத்த சாயலை யும், செந்தார் - கழுத்தில் சிவந்த கோடுகளை உடைய, கிளியோரன்ன - கிளியை ஒரு தன்மையாக ஒத்த, கிளவி - சொல்லையும், பணைத்தோள் - பருத்த தோள்களையும், பாவை அன்ன வனப்பின் - கொல்லிப் பாவை போன்ற அழகினையும் உடையவள், இவள் - இத் தலைவி, என - என்று, காமர் நெஞ்ச மொடு - விருப்பம் நிறைந்த உள்ளத்தோடு, பல பாராட்டி - பலவாறாகப் பாராட்டிக் கூறி, யாம் - எமது அன்னையால், மறப்பு அறியா - சிறிதும் மறக்கப்படாத, மடந்தை - பெண்ணாக இருக்கின்றாள்; ஆகையால், இவளின் துயரத்தை அறிந்த யான் அது நீங்க, தலைவனோடு இவளை அனுப்பிவைத்தால் அவ் அன்னை என்ன பாடுபடுவள்; இதற்கு யான் அஞ்சுகின்றேன்.

முடிபு : மேனியும், கண்ணும், சாயலும், கிளவியும், தோளும், வனப்பும் பெற்றவள் எனப் பாராட்டி யாய் மறப் அறியா மடந்தை கமழ் கூந்தலள் என முடிக்க.

கருத்து : "தாய் தலைவியிடம் பேரன்புள்ளவள்; தலைவனுடன் கூட்டுவிப்பின் தாய்படும் துன்பம் அளவில, என் செய்வேன்" என்று தோழி அஞ்சினாள்.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய அவலம்.

பயன் . தனக்குத் தானே கூறி ஆறுதல்.

ஒப்புமைப்பகுதி

1. பெருங்கோற் குறிஞ்சி

"கருங்கோற் குறிஞ்சி அடுக்கம் பாட" (புறநா. 374:8)

"கருங்கோற் குறிஞ்சிப்பூ" (குறுந். 3:3)

"கருங்கோற் குறிஞ்சி" (அகநா. 308:16)

# 302. பாலை

## தலைவி கூற்று

இழைஅணி மகளிரின் விழைதகப் பூத்த
நீடுசுரி இணர சுடர்வீக் கொன்றைக்
காடுகவின் பூத்த ஆயினும் நன்றும்
வருமழைக்கு எதிரிய மணிநிற இரும்புதல்
5 நரைநிறம் படுத்த நல்இணர்த் தெறுழ்வீ
தாஅம் தேரலர் கொல்லோ சேய்நாட்டுக்
களிறுஉதைத்து ஆடிய கவிழ்கண் இடுநீறு
வெளிறுஇல் காழ வேலம் நீடிய
பழங்கண் முதுநெறி மறைக்கும்
10 வழங்குஅரும் கானம் இறந்திசி னோரே.

எ-து : பருவம் கழிந்தது கண்டு தலைவி சொல்லியது.

மதுரை மருதன் இளநாகனார்

ப-ரை : சேய் நாட்டு - அயல் நாட்டிலே, களிறு - யானைகள், உதைத்து - கால்களால் உதைத்து, ஆடிய - விளையாடிய, கவிழ்கண் இடுநீறு - மேலும் கீழும் எங்கும் படிந்த புழுதி, வெளிறுஇல் - வெளிறு இல்லாமல், காழ - நன்கு வயிரம் பாய்ந்த, வேலம் நீடிய - வேலமரங்கள் செறிந்த, பழங்கண் - வழியிற் போவோருக்கும் பெரிய துன்பத்தைச் செய்யும், முது நெறி - நீண்ட பழைய வழியை, மறைக்கும் - மறைத்து விடும், வழங்கு அரும் கானம் - மக்கள் போவதற்கு அருமையான, கானம் - காட்டின் வழியே, இறந்திசினோர் - சென்ற நம்

தலைவர், இழை அணி மகளிரின் வழியில் - பொன்னாலான அணிகலன்களை அணிந்த மகளிரைப்போல, விழைதக - யாவரும் விரும்பும் வண்ணம், பூத்த - மலர விரிந்த, நீடு சுரி - நீண்டு சுரிந்த, இணர - பூங்கொத்திலுள்ள, சுடர்வீக் கொன்றைக்காடு - ஒளிபொருந்திய பூக்களைக் கொண்டிருக்கும் கொன்றைக்காடு, கவின் பூத்த ஆயினும் - அழகு பொதிந்திருத் தலை அறிந்திலர் ஆனாலும், நன்றும் - பெரிதும், வருமழைக்கு - வருகின்ற மழைக்கு, எதிரிய - நோக்கி, மணிநிற - மலர்ந்த நீல மணியின் நிறத்தைப் போன்ற, இரும்புதல் - கரிய புதர்களில் உள்ள, நல்இணர்த் தெறுழ்வீ - நல்ல பூங்கொத்துக்களை உடைத் தாகிய எறுழ மலர்கள், நரை நிறம் படுத்த - மழைக்காலம் நீங்கு தலால் தன் நிறம் மாறி வெண்மை நிறம் பொருந்தி இருத்தலை, தாம் - தலைவர் தாம், தேரலர் கொல்லோ - அறியாரோ? அறிந் திருப்பின் குறித்த கார்ப் பருவம் வந்துற்றதே என்று மீண்டு வந்திருப்பார் அன்றோ.

முடிபு : கானம் இறந்திசினோர், தேரலர் கொல்லோ என முடிக்க.

கருத்து : கொன்றைகள் மலர்ந்து கார்காலம் கழிந்தமையை அறிந்திலர் என்றாலும் கூதிர்காலம் வந்துற்றமை யைக்கூட அறியார் போலும்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

5. தெறுழ்வீ

"களிற்று முகவரியில் தெறுழ்வீ பூப்ப" (புறநா. 119:2)
"தண்புறவில் தெறுழ்வீ மலர்ந்தன" (கார்நாற்பது. 25)

1-3. கொன்றைக்கு இழையணிந்த மகளிர்

"வண்டுப்படத் ததைந்த கொடியிணர் இடைஇடுபு
பொன்செய் புனைஇழை கட்டிய மகளிர்
கதுப்பில் தோன்றும் புதுப் பூங்கொன்றை" (குறுந். 21:1-3)

# 303. நெய்தல்

### தலைவி கூற்று
### (தோழி கூற்றும் ஆம்)

ஒலிஅவிந்து அடங்கி யாமம் நள்ளெனக்
கலிகெழு பாக்கம் துயில் மடிந்தன்றே
தொன்றுஉறை கடவுள் சேர்ந்த பராரை
மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத்
5 துணைபுணர் அன்றில் உயவுக்குரல் கேட்டொறும்
துஞ்சாக் கண்ணள் துயர்அடச் சாஅய்
நம்வயின் வருந்தும் நன்னுதல் என்பது
உண்டுகொல் வாழி தோழி தெண்கடல்
வன்கைப் பரதவர் இட்ட செங்கோல்
10 கொடுமுடி அவ்வலை பரியப் போகிக்
கடுமுரண் எறிசுறா வழங்கும்
நெடுநீர்ச் சேர்ப்பன்தன் நெஞ்சத் தானே.

எ-து : வேட்கை தாங்ககில்லாளாய்த் தோழிக்குத் தலைவி சொல்லியது. சிறைப்புறத்தான் என்பது மலிந்ததூஉம் ஆம்.

மதுரை, ஆருலவிய நாட்டு, ஆலம்பேரி, சாத்தனார்

ப-ரை : தோழி - தோழி! வாழி - நெடிது நாள் வாழ்க! ஒலி அவிந்து - ஊர் ஓசை அனைத்தும் அவிந்து, அடங்கி - அடங்கி, யாமம் - நடுநிசியின்கண், நள்என - நள் என்னும் ஓசையுடன், கலிகெழு பாக்கம் - கட்குடியர்களும் தம் செருக்கு அடங்கி இருக்கும் பாக்கமும், துயில் மடிந்தன்றே - உறங்குகின்றது, (நாம் நம் தலைவனைப் பிரிந்து வருந்துதல்போல), தெண்கடல் - தெளிந்த நடுக்கடலின் கண்ணே, வன்கை - வலிய கையை உடைய பரதவர்கள், இட்ட - மீனைப் பிடிப்பதற்கென வீசிய, செங்கோல் கொடுமுடி அவ்வலை - சிவந்த நிறத்தையும் வலித்துக் கட்டிய முடியையும் உடைய அழகிய வலையானது, பரியப்போகி - அறுபடக் கிழித்துச் சென்று, கடுமுரண் - அச்சம் தரும் வலிமையை உடைய, எறி சுறா - தன்மருப்பினாற் பிற உயிர்களைக் கொல்ல வல்ல சுறாமீன், இயங்கும் - சஞ்சரிக்கும், நெடுநீர்ச் சேர்ப்பன் தன் - நீண்ட நீர்த்துறைகளை உடைய தலைவனது, நெஞ்சத்தான் - உள்ளத்திலும், தொன்று உறை -

நெடுநாட்களாக வாழ்கின்ற, கடவுள் - தெய்வம், சேர்ந்த - தங்கப்பெற்ற, பராரை - பருத்த அடியை உடைய, மன்றப் பெண்ணை - ஊர்ப்பொதுவில் உள்ள பனையின், வாங்கு மடல் - வளைந்த மடலிடத்துக் கட்டிய, குடம்பை - கூட்டிலிருந்து, துணை புணர் அன்றில் - தன் பெடையைப் புணர்கின்ற அன்றிலின், உயவு - வருத்தம் தரும், குரல் - குரலை, கேட்டொறும் - கேட்கும் தோறும், நல்நுதல் - நல்ல நெற்றியை உடைய நமது காதலியும், துஞ்சாக் கண்ணள் - இந் நடுநிசியிலும் நம்மைப் பிரிந்தமையால் உறங்காதவளாய், துயர் அடச் சாஅய் - காமநோய் வருத்த உடம்பு மெலிந்து, நம் வயின் - நம்மிடம், வருந்தும் - வருத்தம் அடைவாள் என்பது - என்பதும், உண்டு கொல்? - உண்டாகுமோ? எண்ணிக் கூறுவாய்.

முடிபு : தோழி! நெடுநீர்ச் சேர்ப்பன் தன் நெஞ்சத்தான் குரல்கேட்டொறும் நன்னுதல் நம்வயின் வருந்தும் என்பது உண்டு கொல்? எனமுடிக்க.

கருத்து : இந் நடுநிசியில் தலைவனைப் பிரிந்து நாம் துயர் உறுவதுபோல் தலைவனும் உறுவனோ? உறுவனாயின் உரைப்பாயாக.

குறிப்பு : பரதவர் வீசிய வலையை அறுத்துச் சென்று சுறா இயங்கும் என்றதனால், நம் அன்பாகிய வலையால் தலைவனைக் கட்டவும் அவன் நம்மை நீங்கிச் சென்றான் என்பது பெறப் பட்டது.

ஒப்புமைப்பகுதி

1. நள்என் யாமம்

"நள்ளென்றன்றே யாமம் சொல்லவிந்து
இனிது அடங்கினரே மாக்கள்" (குறுந். 6:1-2)

"துஞ்சாதுறைநரொடு சாவாத் துயிற்கண்
மாக்களொடு நெட்டிராவுடைத்தே" (குறுந். 145:4-5)

"பல்லோர் துஞ்சும நள்ளென்யாமம்" (குறுந். 244:1)

"ஊரெலாம் துஞ்சி உலகெலாம நள்ளென்று
பாரெலாம் பாடவிந்த பாயிருட்கண்"
(திருவாரூர் மும்மணி. 26)

1-7 அன்றில் யாமத்து நரலுதல்

"நெருப்பின் அன்ன செந்தலை அன்றில்
........................
கையற நரலும் நள்ளென் யாமத்து".
(குறுந். 160:1-4) (தொல். களவு. 16; ந. மேற். இருவி)

"மன்றஅம் பெண்ணை மடல்சேர் வாழ்க்கை
அன்றிலும் பையென நரலும்" (குறுந். 177:3-4)

# 304. குறிஞ்சி

### தலைவி கூற்று

வாரல் மென்றினைப் புலவுக்குரல் மாந்திச்
சாரல் வரைய கிளையுடன் குழீஇ
வளிஎறி வயிரின் கிளிவிளி பயிற்றும்
நளிஇருஞ் சிலம்பின் நல்மலை நாடன்
5 புணரின் புணருமார் எழிலே பிரியின்
மணிமிடை பொன்னின் மாமை சாயஎன்
அணிநலம் சிதைக்குமார் பசலை அதனால்
அசுணம் கொல்பவர் கைபோல் நன்றும்
இன்பமும் துன்பமும் உடைத்தே
10 தண்கமழ் நறுந்தார் விறலோன் மார்பே.

எ-து : வரையாது நெடுங்காலம் வந்தொழுக, ஆற்றாளாகிய தலைவி வன்புறை எதிர் மொழிந்தது.

### மாறோக்கத்து நப்பசலையார்

ப-ரை : சாரல் வரைய - மலைச்சாரலின்கண், கிளி- வாழும் கிளிகள் எல்லாம், கிளையுடன் - தம் இனத்துடன், குழீஇ - ஒன்று திரண்டு, வாரல் - நீட்சி பொருந்திய, மென் தினை - மெல்லிய தினையின், புலவுக் குரல் - மணம் நிரம்பிய கதிரை, மாந்தி - தின்று, வளி எறி வயிரின் - காற்றினால் ஓசையெழும்பும் கொம்பு வாத்யம் போல, விளி பயிற்றும் - ஒன்றனை ஒன்று அழையா நிற்கும், நளி - செறிந்த, இரும் - பெரிய, சிலம்பின் - பக்க மலை களை உடைய, நல் - சிறந்த, மலைநாடன்- மலைக்குரிய நாடன், புணரின் - என்னைச் சேர்ந்த பொழுதெல்லாம், எழில் - அழகு, புணரும் - எனக்குக் கூடுதலாகும். பிரியின் - அவன் என்னைக் கூடாது பிரிந்தவிடத்து, மணிமிடை பொன்னின் - நீலமணி இடைப்பட்ட பொன்போல, மாமை சாய - மாந்தளிர் போன்ற என் மேனியின் அழகு அனைத்தும் கெட, பசலை - பசலை நோய் படர்ந்து, என் அணிநலம் சிதைக்கும் - என் அழகையும் நலத்தை யும் கெடுக்கும்; அதனால் - ஆகையால், தண் கமழ் - குளிர்ச்சி பொருந்திய நறுமணம் வீசும், நறும் - சிறந்த, தார் - மாலையை அணிந்த, விறலோன் - வெற்றி வாய்ந்த நமது காதலனது, மார்பு - மார்பானது, அசுணம் கொல்பவர் கை போன்று - அசுணப் பறவையைக் கொல்பவருடைய கையைப் போன்று,

இன்பமும் - இன்பத்தையும், துன்பமும் - துன்பத்தையும், உடைத்து ஒருசேரப் பெற்றுள்ளது.

முடிபு : நன்மலை நாடன் புணரின் எழில் புணரும்; பிரியின் பசலை நலம் சிதைக்கும்; அதனால் விறலோன் மார்பு உடைத்து என முடிக்க.

கருத்து : தலைவன் முயங்குகையில் எழிலும், முயங்கா விடத்துப் பசலையும் உண்டாவதால் இன்பத்தையும் துன்பத்தையும் தன்பாற் கொண்டிருக்கும் தலைவன் வரைந்து கோடலே தக்கது.

வி-ரை : அசுணம் - இதனை விலங்கு எனவும் பறவை எனவும் கூறுவர். தாம் பிடிக்க விரும்பிய அசுணத்தை இனிய ஓசை எழுப்பி ஒன்றுதிரளச் செய்து, பின்னர் இன்னாத ஓசை எழுப்பி அதனைச் சாகப் பண்ணுவது வேடர்களின் வழக்கம். செவிப்புலனில் நுட்பம் வாய்ந்தது அசுணம் என்பர். தலைவனுக்கு ஏற்ற உவமையாதல் அறிக.

உள்ளுறை : கிள்ளைகள் கூட்டத்துடன் பறந்து வந்து தினைக் கதிர்களை மேய்ந்து விளிபயிற்றும் நாடன் என்றது, அக் கிள்ளைகள் போலவே தலைவனும் சான்றோர் பலருடன் கூடி வந்து, என்னை மணம் புரிந்துகொண்டு என்பால் இன்பம் துய்த்து மகிழ்ந்து விளையாடுவானாக என்றவாறு.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

4-7. பசலையினால் மாமை அழிதல்

"பசலை உணீஇயர் வேண்டும்
திதலை அல்குல்என் மாமைக் கவினே" (குறுந். 27.4-5)

"நன்மாமேனி பசப்ப" (குறுந். 331:7)

"வண்ணம் பசந்து புலம்புறு காலை"(தொல்:பொருளியல்:8)

"இனிப் பசந்தன்று என் மாமைக் கவினே"
(ஐங். 35:4 144:3)

"செயலையந் தளிரேய்க்கும் எழில்நலம்
அந்நலம், பசலையாலுணப்பட்டு" (கலி. 15:22-3)

"பன்னாளும் படரடப் பசலையாலுணப்பட்டாள்,
பொன்னுரை மணியன்ன மாமைக்கட் பழியுண்டோ"
(கலி. 48:16-7)

"வாமான் தேர்க்கோதையை மான்தேர்மேல் கண்டவர்
மாமையே யன்றோ விழிப்பது - மாமையிற்
பன்னூறு கோடிப் பழுதோ என் மேனியிற்
பொன்னூறியன்ன பசப்பு" (முத். 53)

"பேர்கின்றது மணிமாமை பிறங்கி அள்ளற்
பயலை ஊர்கின்றது" (திவ். திருவிருத்தம்:12)

"மாமை பொன்னிறம் பசப்ப" (பு.வெ:199)

4-10. "முழந்தாள் இரும்பிடிக் கயந்தலைக் குழவி
...............
பகையாகின்றவர் நகை விளையாட்டே" (குறுந். 394)

6-7. மணிக்கேழ் மாமை
"பொன்னுரை மணியன்ன மாமை" (கலி. 48:17)

6. மணிநிறம்
"மணிநிற மாமைசாயல்" (சீவக. 1665)

# 305. பாலை

## நற்றாய் கூற்று

வரிஅணி பந்தும் வாடிய வயலையும்
மயில்அடி அன்ன மாக்குரல் நொச்சியும்
கடியுடை வியல்நகர் காண்வரத் தோன்றத்
தமியே கண்டதண் தலையும் தெறுவர
5 நோயா கின்றே மகளைநின் தோழி
எரிசினம் தணிந்த இலைஇல் அம்சினை
வரிப்புறப் புறவின் புலம்புகொள் தெள்விளி
உருப்பவிர் அமையத்து அமர்ப்பனள் நோக்கி
இலங்குஇலை வென்வேல் விடலையை
10 விலங்குமலை ஆர்இடை நலியுங்கொல் எனவே.

எ-து : நற்றாய் தோழிக்குச் சொல்லியது.

(அல்லது)

மனை மருட்சியும் ஆம்.

கயமனார்

ப-ரை : மகள் - மகளே! நின் தோழி - நினது தோழி, விளையாடிய, வரி அணி பந்தும் - வரிந்து அணிந்த பந்தும்,

வாடிய வயலையும் - தன்னைத் தண்ணீர் ஊற்றிப் பாதுகாப்பார் இன்மையின் வாடிப்போன வயலைக் கொடியும், மயில் அடி அன்ன - மயிலின் அடியை ஒத்த இலையையும் கரிய பூங்கொத்தையுமுடைய நொச்சியும், கடியுடை வியல்நகர் - காவல் பொருந்திய அகன்ற மாலையிடத்து, காண்வரத் தோன்ற - யான் வருத்தம் கொள்ள என் கண்முன் தோன்றா நிற்க, தமியே கண்ட - அவளில்லாமல் தனித்து யான் கண்ட, தண்தலையும் - குளிர்ந்த சோலையும், செறுவர - என்னை வருத்தா நிற்க, இவை மட்டும் இன்றி, நின் தோழி, எரிசினம் தணிந்த - ஞாயிறு வெம்மை சிறிது அடங்கிய மாலை வேளையில், இலைஇல் அஞ்சினை - இலைகள் உதிர்ந்த அழகிய மரக்கிளைகளிலிருந்து, வரிப்புறப் புறவின் - வரிகள் மிகுந்த முதுகினை உடைய புறாவின்து, புலம்புகொள் தெள்விளி - அச்சத்தைத் தரும் தெளிந்த கூவுதலால் ஆகிய ஓசையைக் கேட்டு, உருப்பு அவிர் அமையத்து - வெப்பம் விளங்கும் பொழுதின்கண், அமர்ப்பனள் நோக்கி - போர்மேற் செல்வார் போன்ற கண்களை உடையவளாய்ப் பார்த்து, இலங்கு இலை - விளங்கும் இலை வடிவமாகிய, வென்வேல் - வெற்றி பொருந்திய வேற்படையைத் தாங்கிய, விடலையை - காதலனை, விலங்கு மலை ஆர்இடை - மலை குறுக்கிட்ட கடத்தற்கு அரிய வழியில், நலியும் கொல் என - துன்புறுத்துவளோ என்று, நோயாகின்று - எனக்கு வருத்தமுண்டாகின்றது.

முடிபு : மகளை! நின் தோழி விடலையை நலியுங்கொல் என்று நோயாகின்று, என முடிக்க.

கருத்து : நற்றாய் உடன் சென்ற மகள் ஆடிய இடம் கண்டு இவை துன்புறுத்துவதோடன்றி, போகும் வழியில் என் மகளால் தலைவன் துன்புறுவனோ என்று வருந்தினாள்.

மெய்ப்பாடு - உவகைக் கலுழ்ச்சி.

பயன் - ஆற்றாமை நீங்குதல்.

ஒப்புமைப்பகுதி

2. நொச்சி

"கருங்குரல் நொச்சிக் கண்ணார் குரூஉத் தழை" (புறநா. 271:2)

"கருங்குரல் நொச்சி" (தகடூர் யாத்திரை)

நொச்சியின்இலைக்கு மயிலின் அடி

"மயிலடி இலைய மாக்குரல் நொச்சி" (குறுந். 138:3)

"நொச்சிப் பாசிலை அன்ன பைந்தாள் மஞ்ஞை" (திருவிளை-இந்திரன்-74)

7. தெள்விளி
"இனநீர் பருந்தின் புலம்புகொள் தெள்விளி"
(குறுந். 207:3)

# 306. குறிஞ்சி

## தோழி கூற்று

தந்தை வித்திய மென்றினை பைபயச்
சிறுகிளி கடிதல் பிறக்கியா வணதோ
குளிர்படு கையள் கொடிச்சி செல்கென
நல்ல இனிய கூறி மெல்லக்
5 கொயல் தொடங்கினரே கானவர் கொடுங்குரல்
சூல்பொறை இறுத்த கோல்தலை இருவி
விழவுஒழி வியன்களம் கடுப்பத் தெறுவரப்
பைதல் ஒருநிலை காண வைகல்
யாங்கு வருவது கொல்லோ தீஞ்சொற்
10 செறிதோட்டு எல்வளைக் குறுமகள்
சிறுபுனத்து அல்கிய பெரும்புற நிலையே.

எ-து : புனம்மடிவு உரைத்துச் செறிப்பு அறிவுறீஇயது.

(அல்லது)

சிறைப்புறமும் ஆம்.

உரோடோகத்துக் கந்தரத்தனார்

ப-ரை : கானவர் - எம் தந்தை, தமையன்மார் போன்றோர், குளிர் படுகையள் - தட்டை என்னும் கிளிகடி கருவி பொருந்திய கையை உடைய, கொடிச்சி - கொடிச்சியே! செல்க - நீ மனையகம் புகுவாயாக, என - என்று, நல்ல இனிய கூறி - நல்லனவாயும் இனியனவாயும் அமைந்த சொற்களைக் கூறி, மெல்ல கொயல் தொடங்கினர் - மெல்ல தினைக்கதிர்களை அறுவடை செய்யத் தொடங்கி விட்டனர், ஆகையால், தந்தை - எமது தந்தை, வித்திய - விதைத்த, மெல்தினை - மெல்லிய தினையைக் கொய்து கொண்டு போகுமாறு, பைபய - மெல்ல மெல்ல வருகின்ற, சிறுகிளி - சிறிய கிளிகளை, கடிதல் - ஒட்டுதல், யாவணது - இனி எப்படி இயலும்; மேலும், கொடுங்

குரல் - வளைந்த கதிர்களாகிய, சூல்பொறை - கருச்சுமையை, இறுத்த - கொய்து அழித்த பின்னர், கோல் தலை இருவி - கொம்பாகிய தாள்களை உடைய தினைத் தாள்கள் தாம், விழவு ஒழி வியன்களம் கடுப்ப - திருவிழா முடிந்த அகன்ற விழவுக்களம் போல, தெறுவர - எம்மைப் பொலிவு குன்றுமாறு வருத்தா நிற்கையில், கொல்லை அழிவுற்ற நிலையையும், தீஞ்சொல் - இனிய சொற்களையும், செறிதோட்டு-நெருங்கிய தொகுதியான, எல் - ஒளி பொருந்திய, வளை - வளைகளையும் உடைய, குறுமகள் - இளையமகளாம் தலைவி, சிறுபுனத்து - முன்பு தினைக் கொல்லையில், அல்கிய - காவல் காத்துக் கொண்டு பரண்மேல் தயங்கி, பெரும்புறநிலை -உயர்ந்த புறத்தில் நின்ற நிலையையும், பைதல் ஒரு நிலை - வருந்தி நிற்கும் தோற்றத்தை யும், காண - பார்க்கும் பொருட்டு, வைகல் - காலையில், யாங்கு வருவது கொல் - தலைமகனால் எப்படி வருதல் முடியும்? முடியாதே.

முடிபு : கானவர் கொயல் தொடங்கினர்; குறுமகள் அல்கிய நிலை காண யாங்கு வருவது கொல்? எனமுடிக்க.

கருத்து : தினை முற்றி இற்செறிப்பு ஏற்பட்டமையால் தலைவன் இனி வரைந்து கோடலே தக்கது.

அ-ள் : பிறக்கு - அசைநிலை. பொறை - சுமை. இருவி - தினைத்தாள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

2-3. குளிரால் கிளிகடிதல்

"படுகிளி கடியும் கொடிச்சிகைக் குளிரே" (குறுந். 291)

"ஏனல் உண்கிளி கடியும் கொடிச்சிகைக் குளிரே" (குறுந். 360:5-6)

"குளிரும் பிறவும் கிளிகடி மரபின ஊழூழ் வாங்கி" (குறிஞ்சி. 43:4)

# 307. நெய்தல்

## தோழி கூற்று

கவர்பரி நெடுந்தேர் மணியும் இசைக்கும்
பெயர்பட இயங்கிய இளையரும் ஒலிப்பர்
கடலாடு வியலிடைப் பேரணிப் பொலிந்த
திதலை அல்குல் நலம்பா ராட்டிய
5 வருமே தோழி வார்மணற் சேர்ப்பன்
இற்பட வாங்கிய முழவுமுதற் புன்னை
மாவரை மறைகம் வம்மதி பானாள்
பூவிரி கானற் புணர்குறி வந்துநம்
மெல்லிணர் நறும்பொழிற் காணாதவன்
10 அல்லல் அரும்படர் காண்கநாம் சிறுதே.

எ-து: குறிநீட ஆற்றாளாகிய தலைவியைத் தோழி வற்புறுத்தியது.

### அம்மூவனார்

ப-ரை: தோழி - தலைவீ! கவர் - ஒடுதலில் ஆர்வமுள்ள, பரி - குதிரை பூட்டிய, நெடுந்தேர் - நெடிய தேரிலே கட்டிய, மணியும் - மணிகளும், இசைக்கும் - ஒலிக்கும்; பெயர்பட - பெயர்ந்துபட, இயங்கும் - உடன் தொடர்ந்து வரும், இளையரும் - வீரரும், ஒலிப்பர் - ஆரவாரிப்பர்; வார்மணல் சேர்ப்பன் - நெடிய மணற்குன்றினை உடைய தலைவன், கடலாடு வியல் இடை-மகளிர்சென்று கடல் நீராடு விழா செய்கின்ற, வியல் இடை - அகன்ற இடத்தில், பேர்அணி பொலிந்த - உன் அழகு டன் பொருந்தி விளங்குகின்ற, திதலை - துத்தி என்னும்தேமல் படர்ந்த, அல்குல் - அல்குலின், நலம் பாராட்டிய - சிறப்பைப் பாராட்ட, வரும் - இப்பொழுதே வருவான். (ஆதலால் நாம் இப்பொழுது) இல்பட வாங்கிய - நம் மனையருகில் வளைந்த, முழவு முதல் - முழவு போன்ற அடியினை உடைய, புன்னை - புன்னை மரத்தின், மா அரை - கரிய அடி மரத்தின் பின்னே சென்று, மறைகம் - மறைந்து கொள்வோம்; ஏனெனில், பால் நாள் - நடுநிசியில், பூவிரி கானல் - மலர்கள் விரிந்த கடற்கரைச் சோலையில், புணர்குறி வந்து - நாம் புணர்கின்ற குறியிடத்து வந்து, நம் - நம்மை, மெல் இணர் நறும் பொழில் - மெல்லிய பூங்கொத்துக்களைக் கொண்டிருக்கும் நறிய சோலையின் கண்,

காணாது - காணாதவனாகி, அவன் - அத்தலைவன் படும், அல்லல் அரும்படர் - துன்பமாகிய வருத்தத்தை, நாம் - நாம், சிறிது - கொஞ்ச நேரம், காண்கம் - கண்டு மகிழ்வோம், வம்மதி - வருவாயாக.

முடிபு : தோழி! இசைக்கும், ஒலிப்பர், சேர்ப்பன் வரும்; அவன் படர் காண்க நாம் சிறிது மறைகம், வம்மதி எனமுடிக்க.

கருத்து : குறித்த குறியிடத்திற்குத் தலைவன் வர நீட்டித்த தனால், நாம் மரத்தின் பின் மறைந்து நின்று அவன் படும் துன்பத்தைச் சிறிது நேரம் காண்போம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

# 308. பாலை

## தலைவன் கூற்று

செலவிரைவு உற்ற அரவம் போற்றி
மலர்ஏர் உண்கண் பனிவர ஆயிழை
யாம்தற் கரையவும் நாணினள் வருவோள்
வேண்டா மையின் மென்மெல வந்து
5 வினவலும் தகைத்தலும் செல்லாள் ஆகி
வெறிகமழ் துறுமுடி தயங்க நல்வினைப்
பொறிஅழி பாவையிற் கலங்கி நெடிதுநினைந்து
ஆகம் அடைதந் தோளே அதுகண்டு
ஈர்மண் செய்கை நீர்படு பசுங்கலம்
10 பெருமழைப் பெயற்கேற் றாங்குஎம்
பொருள்மலி நெஞ்சம் புணர்ந்துவந் தன்றே.

எ-து : நெஞ்சினால் பொருள் வலிக்கப்பட்ட தலைவன் தலைவியை எய்தி ஆற்றானாய், நெஞ்சினிற் சொல்லிச் செலவு அழுங்கியது.

எயினந்தை மகன் இளங்கீரனார்

ப-ரை : ஆயிழை - தேர்ந்தெடுக்கப்பட்ட ஆபரணங்களையே தரித்த நமது காதலி, செலவு - நாம் பொருள்வயிற் பிரிந்து

செல்லுதலின், விரைவு உற்ற - விரைவினால் உண்டாகிய அரவம் - சொற்களை, போற்றி - விரும்பிக் கேட்டு, மலர்ஏர் - மலரினை ஒத்த, உண்கண் - மை எழுதிய கண்களில், பனிவர - நீரை வழிய விடுதலும், யாம் - அதைக் கண்டு நாம், தன் கரைய வும் - இஃது என்ன என்று பலபடியாகப் பாராட்டி வினவவும், நாணினள் - அதற்கு விடை கூற நாணம் கொண்டவளாகி, வருவோள் - வருபவள், வேண்டாமையில் - யாம் பிரிந்து போதலை விரும்பாதவளாகி, மென்மெல வந்து - மெல்ல மெல்ல வந்து, வினவலும் - நீ எங்கே போகின்றாய் என்று வினாவலும், தகைத்தலும் - எங்கும் போகேல் என்று தடுத்தலும், செல்லாள் - செய்யாதவளாகி, வெறி கமழ் - நறுமணம் வீசுகின்ற, துறுமுடி - நெருங்கிய கொண்டை, தயங்க - விளங்க, நல்வினைப் பொறி அழிபாவையில் - நல்ல சித்திரத் தொழில் அமைந்த பாவை யொன்று இயந்திரப்பொறி அற்று மேலே விழுந்தாற்போல, கலங்கி - மயங்கி, நெடிது நினைந்து - நெடும்பொழுது நினைந்து நின்று, ஆகம் - என் மார்பின் மேல், அடை தந்தோள் - சாய்ந்து விழுந்தனள். அது கண்டு - அதனைக் கண்டு, ஈர்மண் செய்கை - ஈர மண்ணாற் செய்யப்பட்டு, நீர்படு பசுங்கலம் - ஈரம் காயாத பசிய மட்பாண்டம், ஒன்று, பெருமழை பெயற்கு - இடைவிடாது பெய்யும் பெரிய மழைக்கு, ஏற்றாங்கு - நீர் ஏந்த வைத்தவிடதது அம் மண் அந் நீரோடு கலந்து கரைந்து அழியுமன்றே அதுபோல, எம் - எம்முடைய, பொருள்மலி நெஞ்சம் - பொருள் வயிற் பிரியக் கருதிய உள்ளம், புணர்ந்து வந்தன்று - அவளுடன் ஒன்று பட்டுக் கலந்து கரைந்து வேறுபாடின்றி அடங்குவதா யிற்று. இனி எவ்வாறு பிரிகுவேன்?

முடிபு : ஆயிழை வருவோள் வந்து செல்லாள் ஆகித் தயங்க' கலங்கி, நினைந்து அடைதந்தோளே; அது கண்டு எம் நெஞ்சம் புணர்ந்து வந்தன்று என முடிக்க.

கருத்து : தலைவன் செலவு தவிர்ந்தான்.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - இல்லத்து அழுங்கல்.

ஒப்புமைப்பகுதி

9-10. நீரை ஏற்ற பசுங்கலம்

"பெயல்நீர்க்கு ஏற்ற, பசுங்கலம் போல" (குறுந். 29:2)

"பசுமட்கலத்துள் நீர்பெய்து இரீஇ யற்று" (குறள். 660)

"ஏழிலை யாழ் செய்கைப் பசுங்கலன்
விசும்பினின் றுளிபட நனைந்து உருகி" (திருவிசைப்பா)

# 309. குறிஞ்சி

## தலைவி கூற்று

நெகிழ்ந்த தோளும் வாடிய வரியும்
தளிர்வனப்பு இழந்த என்நிறனும் நோக்கி
யான்செய் தன்றுஇவள் துயரென அன்பின்
ஆழல் வாழி தோழி வாழைக்
5 கொழுமடல் அகல்இலைத் தளிதலைக் கலாவும்
பெருமலை நாடன் கேண்மை நமக்கே
விழுமம் ஆக அறியுநர் இன்றெனக்
கூறுவை மன்னோ நீயே
தேறுவன் மன்யான் அவருடை நட்பே.

எ-து: வரைவு நீட ஆற்றாளெனக் கவன்று தான் ஆற்றாளாகிய தோழியைத் தலைவி ஆற்றுவித்தது.

**கபிலர்**

ப-ரை: தோழி - தோழியே!, நெகிழ்ந்த - தளர்ச்சி அடைந்த, தோளும் - தோள்களையும், வாடிய - வாட்டம் உற்ற, வரி - இரேகைகளையும், தளிர்வனப்பு இழந்த - மாந்தளிர் போன்ற அழகு இழந்த, என் நிறனும் - என் நிறத்தையும், நோக்கி - பார்த்து, இவள் துயர் யான் செய்தன்று என - இவள் அடைந்த துன்பம் என்னால் ஏற்பட்டது என்று கூறி, அன்பின் - என்பாலுள்ள அன்பின் பெருக்கால், ஆழல் - நீ அழாதே, வாழி - நெடுங்காலம் வாழ்வாயாக; வாழை - வாழையின், கொழுமடல் - கொழுவிய மடலின், அகல் இலை - அகன்ற கட்டைக் குருத்தாகிய இலையிலே, தளிதலைக்கலாவும் - தாற்றினுள்ள இனிய நீர் கலந்து தங்கி இருக்கும், பெருமலை நாடன் - பெரிய மலை நாடனுடைய, கேண்மை - நட்பானது, நமக்கு - நமக்கு, விழுமம் ஆக - துன்பமாயிருக்கவும், அறியுநர் இன்று என - அதனை அறிபவர் இல்லை என்று, நீயே - நீதான், கூறுவை மன் - கூறுவாய் மன்; யான் - யான், அவருடை நட்பை - அத் தலைவர் பால் நமக்கு ஏற்பட்ட நட்பை, தேறுவன் மன் - நான் மிக நன்றாகத் தெளிந்திருக்கின்றேன் ஆதலால் ஆற்றியிருப்பேன்;

முடிபு: தோழி! அன்பின் ஆழல்; நாடன் கேண்மை அறியுநர் இன்று என நீயே கூறுவைமன்; யான் நட்பு தேறுவன் எனமுடிக்க.

கருத்து : தலைவனது நட்பின் இயல்பை நான் நன்கு உணர்ந்துளேன், ஆதலின் அவன் பிரிவு கருதியான் வருந்துவேன் என்று தோழி! நீ அழாதே. இதன்கண் தோழி, தலைவனை ஒருமையாகவும் தலைவி அவனைப் பன்மையாகவும் கூறிய நயத்தை அறிக.

மெய்ப்பாடு - பெருமிதம்

பயன் - தோழியை ஆற்றுவிதல்.

வானமழயின் மடலில் நீர்தங்கிக் கலந்திருக்கும் என்றது, என் உள்ளத்திலே எப்பொழுதும் அவர் தங்கிக் கலந்திருப்பார் என்பதைக் குறிப்பித்தது.

ஒப்புமைப்பகுதி

1. தலைவனைப் பிரிந்தமையால் தோள்நெகிழ்தல்
"தணப்பின் ஞெகிழ்ப என் தட மென்றோளே" (குறுந். 299:6)
"ஞெகிழ ஞெகிழ்ந் தன்று தடமென்றோளே" (குறுந். 87:5)
(குறிஞ்சிப். 9) (ஐங். 230:3) (கலி. 37:11, 45:15)

# 310. மருதம்

## தோழி கூற்று

### (பரத்தை கூற்றும் ஆம்)

விளக்கின் அன்ன சுடர்விடு தாமரைக்
களிற்றுச்செவி அன்ன பாசடை தயங்க
உண்துறை மகளிர் இரியக் குண்டுநீர்
வாளை பிறழும் ஊரற்கு நாளை
5 மகட்கொடை எதிர்ந்த மடங்கெழு பெண்டே
தொலைந்த நாவின் உலைந்த குறுமொழி
உடன்பட்டு ஓராத் தாயரோடு ஒழிபுடன்
சொல்லலை கொல்லோ நீயே வல்லைக்
கன்றுபெறு வல்சிப் பாணன் கையதை
10 வள்ளுயிர்த் தண்ணுமை போல
உள்யாதும் இல்லதோர் போர்வைஅம் சொல்லே.

எ-து: வாயிலாகப் புக்க விறலியைத் தோழி சொல்லியது.

(அல்லது)

விறலியை எதிர்ப்பட்ட பரத்தை சொல்லியதூஉம் ஆம்.

பரணர்

ப-ரை: விளக்கின் அன்ன - விளக்கைப் போன்ற, சுடர்விடு- ஒளி விடுகின்ற, தாமரை - செந்தாமரையின், களிற்றுச் செவி அன்ன - களிற்றின் செவியினை ஒத்த, பாசடை - பசுமையான பெரிய இலைகள், தயங்க - விளங்க, உண்துறை - நீர் உண்ணும் துறையின்கண், மகளிர் - இறங்கிய மகளிர், இரிய - அஞ்சி ஓட, குண்டு - ஆழமான, நீர் - நீரையுடைய பொய்கையில், வாளை - வாளை மீன்கள், பிறழும் - துள்ளி விளையாடும், ஊரற்கு - தலைவனுக்கு, நாளை - நாளையன்று, மகட்கொடை நேர்ந்த - பரத்தையைக் கொணர்ந்து கொடுக்கும் தொழிலை மேற் கொண்ட, மடம்கெழு பெண்டே - அறிவற்ற விறலியே! தொலைந்த நாவின் - மெய் பேசுதலைத் தொலைந்த நாவினால், உலைந்த குறுமொழி - நிலைகுலைந்த இழிந்த நின் சொல்லுக்கு, உடன்பட்டு - உடன்பட்ட, தாயரோடு - பரத்தையின் தாய்மாரோடு சென்று எய்தி, வல்லை - விரைவாக, கன்று பெறு வல்சி - ஆவின் கன்றை உரித்து உணவாகப் புசிக்கின்ற, பாணன் கையதை - பாணன் கையிடத்து இருக்கும், தண்ணுமைபோல - பெரிதாக ஒலிக்கும் தண்ணுமை என்னும் வாத்யம்போல, உள் யாதும் இல்லதோர் - உள்ளே யாதும் அற்ற, போர்வை அம் சொல் - ஒரு மேற் போர்வை உடைய சொற்களை, ஒழிபுடன் சொல்லலை கொல்லோ? - உடன் தவிர்ந்து சொல்லு கின்றிலையோ? அவரையும் முயங்கச் செய்வாய்.

முடிபு: தயங்க இரிய பிறழும் ஊரற்கு எதிர்ந்த பெண்டே; போர்வை அம் சொல் சொல்லலை கொல் என முடிக்க.

கருத்து: விறலி! பயனற்ற சொற்களை பரத்தையரின் தாயர்பாற் கூறுக, யான் நின் சொல் தேறேன் என்று வெகுண்டு தலைவி கூறினாள்.

வி-ரை: கண்டார்க்கு இனியன கூறும் தன்மையள் என்பாள் விறலியைத் தொலைந்த நாவினள் என்றாள். பிறர் அறியாதபடி மறைவாகப் பேசும் தன்மையள் என்பாள் குறுமொழியினள் என்றாள். இழிவு கருதாது மூத்தோரையும் புணர்க்கும் பெற்றியள் என்பாள் தாயரொடு சொல்லலை கொல் என்றாள். நின் சொல் என்னிடம் பலிக்காது என்றபடி.

இறைச்சி : வாளைமீன் தாமரை மலர் துன்புற, நீராடும் மகளிர் அஞ்சி ஓட, பொய்கை நீரிற் பாய்ந்து துள்ளும் என்றதன் குறிப்பு. தலைவன் யான் வருந்த, காமக் கிழத்தியர் அஞ்சி அகல, புதியதாக நீ புணர்த்திய பரத்தையிடத்தே சென்று தங்குவன் என்றபடி.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - வாயின் மறுத்தல்.

ஒப்புமைப்பகுதி

2. பெரிய இலைக்குக் களிற்றுச் செவியை உவமை கூறுதல் மரபு.

"சிலம்பிற் சேம்பின் அலங்கல் வள்ளிலை
பெருங்களிற்றுச் செவியின் மான" (குறுந். 76:3-4)

பாசடைக்குக் களிற்றுச் செவி

"களிற்றுச் செவி அன்ன பாசடை மயக்கி" (குறுந்.246:2)
"களிற்றுச் செவிஅன்ன பாசடை மருங்கின்" (அகநா. 176:4)
"நீர்மிசை நிவந்த நெடுந்தாள் அகலிலை.........
பெருங்களிற்றுச் செவியின் அலைக்கும்" (அகநா, 186:4-6)

1. தாமரைக்கு நெருப்பு

"நீத்துடை நெடுங் கயந்தீப்பட மலர்ந்த
கடவுளொண் பூவடைதலோம்பி"
(பத்துப்-பெரும்பா-289-90)
"சுடர்த் தாமரை" (மதுரைக். 249)
"சுடர்ப் பூந்தாமரை", "எரியகைந்தன்ன தாமரை"
(அகநா. 6:16 106:1 116:1)
"செறுவிற்பூத்த சேயிதழ் தாமரை, அறுதொழி
லந்தண ரறம்புரிந்தெடுத்த, தீயொடுவிளங்கு நாடன்"
(புறநா. 397:19-21)
"தாமரை யழற் போது" (பெருங். 1:40:245)
"நிரை நெடுங் கயநீரிடை நெருப்பெழுந்தனைய,
விரை நெகிழ்ந்த செங்கமலமென் பொய்கையின் மேவி"
(பெரிய. உருத்திர. 5)

# 311. நெய்தல்

## தோழி கூற்று

பெயினே விடுமான் உழையினம் வெறுப்பத் தோன்றி
இருங்கதிர் நெல்லின் யாணர் அஃதே
வறப்பின் மாநீர் முண்டகம் தாஅய்ச் சேறுபுலர்ந்து
இருங்கழிச் செறுவின் வெள்உப்பு விளையும்
5 அழியா மரபின் நம்மூதூர் நன்றே
கொழுமீன் சுடுபுகை மறுகினுள் மயங்கிச்
சிறுவீ ஞாழல் துறையுமார் இனிதே
ஒன்றே தோழி நம்கானலது பழியே
கருங்கோட்டுப் புன்னை மலர்த்தாது அருந்தி
10 இருங்களிப் பிரசம் ஊத்அவர்
நெடுந்தேர் இன்ஒலி கேட்டலோ அரிதே.

எ-து: அலர் கூறப்பட்டு ஆற்றாளாகிய தலைவியைத் தோழி ஆற்றுவித்தது.

**உலோச்சனார்**

ப-ரை: தோழி - தலைவீ! அழியா - கெடாத, மரபின் - முறைமையினை உடைய, நம் மூதூர் - நம்முடைய பழமை வாய்ந்த ஊரானது, பெயினே - மழை பெய்தக்கால், விடுமான் உழைஇனம் - எங்கும் துள்ளி ஓடுகின்ற உழையாகிய மான் ஈட்டங்கள், வெறுப்ப - செறிய, தோன்றி - தோன்றப் பெற்றும், இருங்கதிர் - பெரிய கதிர்களையுடைய, நெல்லின் - நெல்லின், யாணர் அஃது - புதிய வருவாயினைப் பெற்றுள்ளது. வறப்பின் - மழை பெய்யாவிடினோ, மாநீர் - பெரிய நீர்க்கழி களில், முண்டகம்தாஅய் - முள்ளிச் செடியின் மலர்கள் உதிரப் பெற்று, சேறு புலர்ந்து - பரந்துபட்ட சேறு எல்லாம் ஒருசேர உலர்ந்து, இருங்கழிச் செறுவில் - கருமை படர்ந்த கழிச் சேற்றிடம் எங்கும், வெள் உப்பு விளையும் - வெள்ளையாகிய உப்பு விளையும் செல்வம் உடையது. இவற்றோடு, கொழுமீன் சுடுபுகை - கொழுத்த மீன்களைச் சுடுதலால் எழும் புகை, மறுகினுள் மயங்கி - தெருக்களினுள்ளே எங்கும் கலந்து, சிறுவீ ஞாழல் துறையும் - சிறிய மலர்களை உடைய ஞாழல் மரங்கள் மிக்க துறையும், இனிது - இனியதாக இருக்கின்றது. இத்தகைய வளங்கள் நிறைந்த நம்மூரிடத்துள்ள, நம் கானலது - நம்

கடற்கரைச் சோலை மட்டுமே பழி, ஒன்றே-நம் ஊரினர் தூற்றும் பழியொன்றைப் பெற்றிருக்கின்றது. அப் பழிதான் யாதோ எனில், கருங்கோட்டுப் புன்னை - கரிய கிளைகளை உடைய புன்னையின், மலர்த்தாது அருந்தி - மலர்களிற் படிந்துள்ள மகரந்தங்களை உண்டு, இரும்களி - கரிய வண்டுகள், பிரசம் ஊத - தேனைக் குடித்து நல் நிமித்தமாக ஊத, அவர் நெடுந்தேர் இன் ஒலி - அவர் வருகின்ற தேரின் செவிக்கு இனிய ஓசையை, கேட்டலோ - கேட்பதுதான், அரிது - அரிதாக இருக்கின்றது; இவ் அரிய பழி ஒன்றில்லையாய்விடின், நம் ஊரும் சோலையும் இனியனவாதலோடு மட்டும் அன்றி, நம் தலைவரும் நமக்கு நல்லவராக ஆகுவர் காண்.

முடிபு : தோழி! நம் மூதூர் பெயின் யாணரஃது; வறப்பின் விளையும்; துறையும் இனிது; கானல் தேரின் ஒலிகேட்டல் அரிது; பழி ஒன்றே; என்று முடிக்க.

கருத்து : எல்லா வளங்களும் நிறைந்து நம்மூர் இனியதாக இருப்பினும் தலைவர் வாராவிடின் விளையும் துன்பம் மிகப் பெரிது என்றபடி.

அ-ள் : வெறுத்தல் - செறிதல். "வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன்" என்பது புறம். நன்னிமித்தமாவது வண்டுகளாகிய யாம் தேனைப் பருகிக் களிப்படைவதுபோல நீயும் தலைவி மாட்டு இன்பம் துய்த்து மகிழ்வை என்பது தோன்ற ஒலித்தல். காட்டில் மழைபெயின் மான்கள் அஞ்சிக் கூட்டமாக நாட்டிற்கு ஓடிவரும் என்பதும், அவை வேண்டியவாறு தின்று அழித்தாலும் நாடு வளம் குன்றாது என்பதும் முதலிருவரிகளால் உணர்த்தப் பட்டது. மழை பெய்யினும் பெய்யாதொழியினும் நெய்தல் நிலத் திற்கு வறுமையின்று என்பதுபோல, தலைவன் தழுவினும், தழுவாது நீங்கினும் ஒரு நிகர்த்தாய அன்பினன் என்றவாறு.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

6. மீன் சுடு புகை
"மீன்சுடு புகையின் புலவுநாறு நெடுங்கொடி" (புறநா. 52:9)
"தூமக் கொடியும்" (மணி. 6:64)

9. கருங்கோட்டுப் புன்னை
"கருங்கோட்டுப் புன்னைப் பூம்பொழில் புலம்ப"
(குறுந். 123:3) (ஐங். 161:2) (பெருங், 1:40:68.)

# 312. பாலை

## தலைவன் கூற்று

நோகோ யானே நோமென் நெஞ்சே
பனிப்புதல் ஈங்கை அங்குழை வருடச்
சிறைகுவிந்து இருந்த பைதல் வெண்குருகு
பார்வை வேட்டுவன் காழ்களைந்து அருள
5 மாரி நின்ற மையல் அற்சிரம்
அயர்ந்தனள் உழையம் ஆகவும் தானே
எதிர்த்த தித்தி முற்றா முலையள்
கோடைத் திங்களும் பனிப்போள்
வாடைப் பெரும்பனிக்கு என்னள்கொல் எனவே.

எ-து: பிரிவு வலித்த தலைவன் நெஞ்சினை நெருங்கிச் சொல்லியது.

### கழார்க் கீரன் எயிற்றியார்

ப-ரை: என் நெஞ்சே - என் மனமே! பொருள் ஈட்ட நின்னோடு வாரேன் என்று என்னுடன் ஊடல்கொள்ளுகின்றனை! நோம் - வருந்துகின்றனை; எதிர்த்த - படர்ந்த, தித்தி - தேமலையும், முற்றா - இளைய, முலையள் - கொங்கைகளையும் உடைய நம் காதலி, நாம் பக்கத்திற் பிரியாது இருக்கவும், கோடைத் திங்களும் - கோடைக் காலத்திலும், பனிப்போள் - பிரிவமோ என்று கருதி மயங்கி நடுங்குபவள், பனிப்புதல் ஈங்கை- குளிர்ந்த புதரிடத்தைக்கொண்ட, ஈங்கை - ஈங்கையினது, அம் குழை வருட - அழகிய தழை முதுகைத் தடவ, சிறை குவிந்து இருந்த - தன் சிறகுகளை குவித்துக்கொண்டிருந்த, பைதல் - வருத்தம் மிக்க, வெண் குருகு - வெளிய கொக்கை, பார்வை வேட்டுவன் - பார்வையாக்கி வேட்டுவன், காழ் களைந்து அருள - அதன் கால்கட்டை அவிழ்த்துவிட, நின்ற மாரி - நின்ற கார் காலத்திலும், மையல் அற்சிரம் - பகல் இரவு என்று அறிய முடியாதபடி மயங்கிக் கிடக்கும் கூதிர்காலத்திலும், வாடைப் பெரும்பனிக்கு - வாடைக் காற்றோடு கலந்து வீசும் பெரிய முன்பனிப் பருவத்திலும் பின்பனிப் பருவத்திலும், என்னள் கொல் - தனித்து இருந்து என்ன துன்பம் அடைவாளோ என்று, யான் நோகு - யான் நோகின்றேன்; என் நிலை உணராது நீ என்னுடன் புலக்கின்றாய்! இஃது வியப்பினும் வியப்பே.

முடிபு : உழையமாகவும் பனிப்போள் பெரும்பனிக்கு என்னள் கொல் என்று யான் நோகு என முடிக்க.

கருத்து : கோடையிலும் நம் பிரிவால் நடுங்குபவள் பனிக் காலத்தில் எத்துணைப் பாடுபடுவள். எனவே பிரியேன் என்றான்.

அ-ள் : அற்சிரம் - கூதிர்காலம், முன்பனி பின்பனி இரண்டையும் அடக்கிப் பொதுவாகப் பனிப்பருவம் என்றார். காழ் - தளை - கட்டு.

உள்ளுறை : கானவனால் பார்வைப் பறவையாகக் கால்கட்டு நீக்கி வைக்கப்பட்ட வெள்ளைக் குருகு ஈங்கை வருடத் துன்புற்று மாறி நிற்கும் என்றது, நாம் பிரிய வீட்டில் தனித்து உறையும் தலைவி வருந்தித் தோழி தேற்ற மாரிக் காலத்தைக் கழிக்கும் என்றபடி.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - இல்லத்து அழுங்கல்.

ஒப்புமைப்பகுதி

1. நோமென் நெஞ்சு
"நோமென் நெஞ்சே நோமென் நெஞ்சே"
(குறுந். 4:1, 202:1-5)
"இவட்கு மருந்தன்மை நோமென் நெஞ்சே" (ஐங். 59:4)

1. 'நோகோ யானே'
"பெருவிதுப்பு உற்றன்றோ நோகோ யானே"
(குறுந். 131:6, 178:7, 212-5) (ஐங். 107:4)
அகநா. 137:16) (புறநா. 116:9, 234:1)

# 313. குறிஞ்சி

## தோழி கூற்று

கருங்கால் வேங்கை நாளுறு புதுப்பூப்
பொன்செய் கம்மியன் கைவினை கடுப்பத்
தகைவனப்பு உற்ற கண்ணழி கட்டழித்து
ஒலிபல் கூந்தல் அணிபெறப் புனைஇக்
5 காண்டற் காதல் கைம்மிகக் கடிஇயாற்கு

யாங்கு ஆகுவம்கொல் தோழி காந்தள்
கமழ்குலை அவிழ்ந்த நயவரும் சாரல்
கூதள நறும்பொழில் புலம்ப ஊர்வயின்
மீள்குவம் போலத் தோன்றும் தோடுபுலர்ந்து
10 அருவியின் ஒலித்தல் ஆனா
கொய்பதம் கொள்ளும் நாம்கூஉம் தினையே.

எ-து : தோழி சிறைப்புறமாகத் தலைவிக்குச் சொல்லுவாளாய், புனம் அழிவு உரைத்து, செறிப்பு அறிவுறீ இயது.

## தங்கால் பொன்கொல்லன் வெண் நாகனார்

ப-ரை : தோழி - தலைவீ! கொய் பதம் கொள்ளும் - அறுவடை செய்தற்குரிய நல்ல பக்குவத்தைப் பெற்று நின்ற, நாம் கூஉம் தினை - நாம் கூவிக்கிளிகளை ஓட்டும் தினைப்புனம் எல்லாம், தோடு புலர்ந்து - இலைகள் வாடி, அருவியின் - அருவி ஒலித்தாற்போல, ஒலித்தல் ஆனா - ஒலித்தலிற் குறையாமல் இருக்கின்றன. அதனால் யாம், காந்தள் கமழ் குலை அவிழ்ந்த - காந்தளின் கமழ்கின்ற குலை மலர்ந்த, நயவரும் - ஆசையை மிகுவிக்கும், சாரல் - சாரலின் கண்ணே, கூதள நறும்பொழில் - கூதாளி படர்ந்து மலர்ந்திருக்கும் நறிய சோலை, புலம்ப - தனிமையுற, ஊர்வயின் - நம் ஊரிடத்து, மீள்குவம்போலத் தோன்றும் - திரும்பிச் செல்வேம் என்று எண்ணம் தோன்றும், இப்படியிருக்க, கருங்கால் - கரிய அடியினை உடைய, வேங்கை - வேங்கை மரத்தின், நாள் உறு - அன்று அலர்ந்த, புதுப் பூ - புதிய பூக்கள், பொன் செய் கொல்லன் - பொன்னை நகையாகச் செய்யும் பொற் கொல்லனுடைய, கைவினை - கைவினையை, போல - ஒத்திருக்கும், தகை வனப்பு உற்ற - மிக அழகு பொருந்திய, ஒலிபல் கூந்தல் - தழைத்த பலவாகிய கூந்தலில், அணிபெற - மேலும் அழகு பொருந்த, புனைஇ - சூடி, காண்டற்கு - கண்டு மகிழ்வதற்கு, காதல் - ஆசை, கைம்மிக - அளவு கடக்க, கடீஇயாற்கு - நம்மை விட்டுப் பிரிந்து சென்ற தலைவனை, கண்ணழி கட்டு அழித்து - தடை முழுதையும் அறுத்தெறிந்து, யாங்கு ஆகுவம் கொல் - எவ்வாறு சென்று அடைவோம்?

முடிபு : தோழீ! தினை ஒலித்தல் ஆனா, புதுப்பூ புனைஇக் கடீஇயாற்கு யாங்காகுவம்கொல் எனமுடிக்க.

கருத்து : தலைவீ தினைமுற்றிவிட்டது. இனி அறுவடை நிகழும். யாம் மனைபுகுவோம். தலைவன் நம்மைக் காண முடியாது. அவன் வரைதலே செயற்பாற்று என்றபடி.

அ-ள் : கண்ணழிவு - தடை. கட்டழித்தல் - முற்ற அழித்தல். இதனைத் 'தொல்காப்பியர் 'அழிவில் கூட்டத்து அவன் புணர்வு மறுத்தல்' என்பர்.

தினை முற்றிவிட்டமையால் பகற்குறி இனி ஏலாது என்றாள். காதல் கைம்மிகல் என்றமையால் விரைவில் வரைந்தெய்தல் வேண்டும் என்றாள். ஊர்வயின் மீள்குவம் என்றதால் விரைவில் வரைய இயலாவிடின் இரவுக்குறியில் வருகஎன்று குறிப்பித்தாள். கடீஇயான் என்றதனால் இத் துன்பத்தைத் தந்த தலைவனை நொந்தாள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்

ஒப்புமைப்பகுதி

1. கருங்கால் வேங்கை

"கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்"

(குறுந். 47:1, 26:1, (ஒப்பு, 343:4) (மதுரைக். 296)
(புறநா. 137:9)

1-4 : வேங்கை மலரை மகளிர் அணிந்துகொள்ளுதல்

"அகலறை மலர்ந்த அரும்பு முதிர் வேங்கை
ஒள்ளிலைத் தொடலை தைஇ" (அகநா. 105:1-2)

"பொன் என, மலர்ந்த வேங்கை மலிதொடர்
அடைச்சிப் பொலிந்த ஆயமொடு காண்கட இயலி"
(அகநா. 188:8-10)

"கருங்கால் வேங்கைச் செம்பூம்
பிணையல்......யாமணிந்துவக்கும்" (அகநா. 345:8-9)

"பொரியரை வேங்கைத் தண்கமழ்
புதுமலர் நாறும் அஞ்சில் ஓதி" (அகநா. 365:13-5)

"வதுவை மகளிர் கூந்தல் கமழ்கொள
அங்கூழ் ஆட்டிய அங்குழை வேங்கை" (அகநா. 378:2-3)

6:7. குலைக்காந்தள்

"குருதிப் பூவின் குலைக்காந் தட்டே" (குறுந். 1-4)

"சிலம்புடன் கமழும் அலங்குலைக்காந்தள்" (குறுந். 239:3)

"எடுத்த நறவின் குலையலங்காந்தள்" (கலி. 40:13)

"பஃறுப்பெடுத்த அலங்குலைக்காந்தள்" (அகநா. 108:15)

"பூந்தண் சாரற்பொங்கு குலையெடுத்த காந்தட்
கொழுமுகை" (பெருங். 2:12:57-8)

# 314. பாலை

## தலைவி கூற்று

முதிர்ந்தோர் இளமை அழிந்தும் எய்தார்
வாழ்நாள் வகைஅளவு அறிஞரும் இல்லை
மாரிப் பித்திகத்து ஈர்இதழ் அலரி
நறுங்காழ் ஆரமொடு மிடைந்த மார்பில்
5 குளம்பொறிக் கொண்ட கொம்மைஅம் புகர்ப்பின்
கருங்கண் வெம்முலை ஞெமுங்கப் புல்லிக்
கழிவது ஆக கங்குல் என்றுதாம்
மொழிவன் மையிற் பொய்த்தனர் வாழிய
நொடிவிடு அன்ன காய்விடு கள்ளி
10 அலங்கல்அம் பாவை ஏறிப் புலம்புகொள்
புன்புறா வீழ்பெடைப் பயிரும்
என்றூழ் நீளிடைச் சென்றிசி னோரே.

எ-து : பிரிவிடை மெலிந்த தலைவி சொல்லியது.

முப்பேர் நாகனார்

ப-ரை : நொடி விடு அன்ன - விரல்களை நொடித்து விட்டாற் போன்ற, காய்விடு - காய்கள் ஒலிஎழும்ப வெடித்துத் தெறிக்கின்ற, கள்ளியின், அலங்கல் - அசைகின்ற, அம் - அழகிய, பாவை - பாவை போன்ற கிளைகளில், ஏறி - தத்தித்தத்தி ஏறி, புலம்புகொள் - தனியே இருத்தலைக் கொண்ட, புன்புறா - புல்லிய புறாவானது, வீழ் - தான் விரும்பிய, பெடை - பெண் புறாவை, பயிரும் - அழைக்கும், என்றூழ் - கதிரவனின் வெம்மை குறையாத, நீள்இடை - நெடிய பாலை வனவழியிலே, சென்றிசினோர் - சென்ற நம் அன்பிற்குறிய தலைவர், முதிர்ந்தோர் - முதுமைப்பருவம் அடைந்தோர், அழிந்தும் - தவறியேனும், இள்மை - இளமைப்பருவத்தை மீண்டும், எய்தார் - அடையமாட்டார், வாழ்நாள் - தம்முடைய வாழும் நாள் வகை அளவு - எத்துணை என்னும் வகை எல்லையை, அறிஞரும் - அறுதியிட்டு அறிந்தவரும், இல்லை - இவ்வுலகில் எவரும் இல்லை; ஆதலால், மாரி - மழைக்காலத்தில், பித்திகத்து - மலர்கின்ற சிறுசண்பகத்தின், ஈர்இதழ் அலரி - குளிர்ந்த இதழ் களை உடைய மலரை, நறும் காழ் ஆரமொடு - நரிய வயிரம் முற்றிய சந்தனத்தை அரைத்துப்பூசி, மிடைந்த - சந்தன

மாலையையும் தரித்த, மார்பில் - மார்பிலே, குறும்பொறிக் கொண்ட - குறுகிய புள்ளிகளைத் தன்பாற்கொண்ட, கொம்மை - இளமை வாய்ந்து திரண்ட, அம் - அழகிய, புகர்ப்பில் - நிறத்தை உடைய, கருங்கண் - கரிய கண்கள் பொருந்திய, வெம்முலை - விருப்பம் தரும் முலைகள், ஞெமுங்க - அழுந்த, புல்லி - தழுவி, கங்குல் - இரவு முழுதும், கழிவது ஆக - அணைத் திருந்தபடியே கழிவது ஆக, என்று - என்று, தாம் மொழி வன்மையில் - தம் பேச்சு வன்மையால், பொய்த்தனர் - எம் அளவிற் பொய் கூறினர். வாழிய - அப்பொய்மையால் அணங்கின் சீற்றம் கொள்ளாது நெடுங்காலம் வாழ்வாராக.

முடிபு : சென்றிசினோர், எய்தார், இல்லை, என்று தாம் பொய்த்தனர், வாழிய என்று முடிக்க.

கருத்து : பருவ வரவின் கண் தலைவன் வாராமையால் அவர் கூறியன நினைந்து நொந்து தலைவனை வாழிய என்று வாழ்த்தினாள்.

அ-ள் : பிச்சி - சிறுசண்பகம். ஞெமுங்கல் - அழுந்தல். நொடி விடல் - நொடித்து விடல். கொம்மை - திரட்சி, கள்ளியின் தலை தோற்றத்திற் பாவையை ஒத்திருக்கும்.

வி-ரை : இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த ஞான்று அணங்கை முன் நிறுத்திப் 'பிரியேன்' என்று சூளுறவு செய்தவன் பிரிந்தனன் ஆகலின் அணங்கால் ஏதம் வருங்கொல் என்றஞ்சி 'வாழிய' என்றாள்.

புறவு பெடையை விளித்துப் புணரும் இயல்புடைய வழியிற் செல்பவர் அதனை நோக்கியும் மீள்வாரில்லையே என்று நொந்தாள். இதனுள் இளமையது அருமையும், நாளது சின்மையும், அன்பினது அகலமும் அமைந்து கிடக்கும் அழகைச் சுவைக்க.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

3. மாரிப்பித்திகம்

"பெருந்தண்மாரிப் பேதைப் பித்திகத்து" (குறுந். 94:1)

"மாரிப்பித்திகத்து நீர்வார் கொழுமுகை" (குறுந். 168:1)

(அகநா. 295:19)

9. கள்ளிக்காய் விடுகடு நொடி
"கவை முட்கள்ளிக்காய் விடு கடுநொடி (குறுந். 174:2)
"அருமைக்கண் விடுநொடி" (அகநா. 47:7)
"கொள்ளும் கடுங்கதிரிற் கள்ளிதீச் சிலவே"
"யுலறிள்ளும் வெடிபடும் பாலை"
(திருவேகம்ப, திருவந்:68)

# 315. நெய்தல்

## பரத்தை கூற்று

ஈண்டுபெருந் தெய்வத்து யாண்டுபல கழிந்தெனப்
பார்த்துறைப் புணரி அலைத்தலிற் புடைகொண்டு
மூத்து வினை போகிய முரிவாய் அம்பி
நல்எருது நடைவளம் வைத்தென உழவர்
5 புல்லுடைக் காவில் தொழில்விட் டாங்கு
நறுவிரை நன்புகை கொடாஅர் சிறுவீ
ஞாழலொடு கெழீஇய புன்னைஅம் கொழுநிழல்
முழவுமுதற் பிணிக்கும் துறைவ நன்றும்
விழுமிதிற் கொண்ட கேண்மை நொவ்விதின்
10 தவறும் நற்குஅறியா யாயின் எம்போல்
ஞெகிழ்தோள் கலுழ்ந்த கண்ணர்
மலர்தீய்ந்து அனையர் நின்நயந் தோரே.

எ-து: தலைவனைப் பரத்தை நொந்து சொல்லியது.

அம்மூவனார்

ப-ரை: ஈண்டு - அடுத்து அடுத்து வருகின்ற, பெருந் தெய்வத்து - பெரிய தெய்வங்களின் பெயர்களைக் கொண்ட, யாண்டு - ஆண்டுகள், பலகழிந்தென - ஒவ்வொன்றாகக் கழிந்து விட்டதனாலே, பார்த்துறை - கரையைச் சார்ந்த துறையின் கண், புணரி - கடலின் அலைகள், அலைத்தலில் - அலைத்தலி னால், புடை கொண்டு - தாக்குண்டு, மூத்து - முதுமையுற்று (பழையதாய்), வினை போகிய - கடல் மேற்செல்ல உதவாது ஒழிந்த, முரிவாய் அம்பி - முரிந்த வாயை உடைய படகினை, நல்எருது - உழவிற்குப் பயன்பட்ட சிறந்த எருதினை, நடை வளம் வைத்தென - நடையின் சிறப்பு நீங்கி முதுமையுற்றதே

என்று, உழவர் - உழவுத் தொழில் செய்வோர் புல்லுடைக் காவில் - புல்லை உடைய தோட்டத்திலே, தொழில் விட்டாங்கு - தொழில் செய்யாதபடி விட்டொழிந்தாற்போல, நறுவிரை - நறிய வாசனையை உடைய, நன்புகை - நல்ல அகிற் புகை முதலியன காட்டி, கொடாஅர் - வழிபடாராய், சிறுவீ - சிறிய மலர்களை உடைய, ஞாழலொடு கெழீஇய - ஞாழலொடு சேர்ந்து ஓங்கிய, புன்னை அம் கொழுநிழல் - புன்னை மரத்தின் கொழுவிய நிழலிலே, முழவு முதல் - முழவு போன்ற அந்த மரத்தின் அடிவேரிலே, பிணிக்கும் - கட்டி வைக்கும், துறைவ - துறையை உடைய தலைவனே!, நன்றும் - பெரிதும், விழுமிதிற் கொண்ட - சிறப்பாகக் கொண்ட, கேண்மை - நட்பின் கண்ணே, நொவ்வதின் - மிக நுட்பமாகிய, தவறும் - பிழையும் வாராத படிக் கவனமாக இருத்தல் வேண்டும், நற்கு அறியாயாயின் - அதனை நீ நன்றாகத் தெரிந்து கொள்ளாவிடில், நின் நயந்தோர் - உன்னை விரும்பும் மகளிர், எம்போல் - எம்மைப்போல, ஞெகிழ்தோள் - நெகிழ்ந்த தோள்களையும், கலுழ்ந்த கண்ணர் - அழுத கண்களையும் உடையவராய், மலர் தீய்ந்து - மலர்ந்த உடனேயே கருகிப் போன, அனையர் - பூக்களை ஒப்பர்.

முடிபு : துறைவ! கேண்மை அறியாய் ஆயின் நின் நயந்தோர் எம்போல் கலுழ்ந்த கண்ணராய் மலர்தீய்ந்து அனையர் எனமுடிக்க.

கருத்து : தலைவ! நின் நட்பில் பிழைநேரின் நின்னை விரும்பியவர் தீயிடைப் பட்ட மலர்போல் கருகிப் போவர், என்பதை அறிந்து தலைவியை விட்டுப் பிரியாது உறைக என்று பரத்தை கூறினாள்.

பிடம். 4. 'வளம் வாய்த்து'

அ-ள் : தெய்வம் - வ ரு ட ம். தெய்வத்தியாண்டு - இரு பெயரொட்டு. அம்பி - தோணி, மரக்கலம். புகை கொடுத்தல் - கடல் வேட்டம் செல்கையில் பேய்களால் அல்லல் ஏற்படாதபடி வழிபடல். நொவ்விது - நுண்ணியது. தன்னையும் அவன் கை விட்டுப் சேரிப் பரத்தையர்பாற்சேரலின் எம்போல் என்றாள்.

உள்ளுறை : படகு பழமையுற்றதும் பயன் படுத்தப்படாது புன்னையின் அடிவேரிலே பிணிக்கப்படும் என்றது, முன்பு நின்னை நயந்த மகளிர் பலரும் சற்று முதிர்தலும் அவரை நீ பாதுகாவாது இல்லவயின் விட்டகன்றனை என்பதாம்.

நின்னை நயந்தோர் 'மலர் தீய்ந்தனையர்' என்றது, இத் தலைவியும் முதிர்ச்சியுற்றால் அன்றோ நின்னாற் கைவிடப் படுவாள், மாறாக இவ் இள்மையிலேயே நீ விட்டுப் பிரிவதனால் எம்போல முதுமையுற்கு முன்பே கருகிப் போனாள் என்றவாறு.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - ஊடல் தீர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

7. ஞாழலும் புன்னையும்

"எறிசுறாக் கலித்த இலங்குநீர்ப் பரப்பின்
நறுவீ ஞாழலொடு புன்னை தாஅய்" (குறுந். 318:1-2)

"புன்னையொடு ஞாழல் பூக்கும் தண்ணந் துறைவன்" (ஐங். 103:1-2)

"ஞாழல் முனையிற் பொதியவிழ் புன்னையம் பூஞ்சினைச்
சேக்கும் துறைவன்" (ஐங். 169:2-3)

"பொன்வீ ஞாழலொடு புன்னை வரிக்கும் கானலம்
பெருந்துறை" (அகநா. 70:9-10)

"ஞாழலொடு கெழீஇப் படப்பை நின்ற
முடத்தாட் புன்னைப் பொன்ஏர் நுண்தாது" (அகநா. 180:12-4)

7-8 புன்னை வேரில் படகு பிணித்தல்

"பெருங்காற் புன்னைக் கருங்கோட்டு அணைத்த
நாவாய் பண்ணு மாவிறல் மள்ளர்க்கு" (பெருங். 1:40, 68-9)

# 316. பாலை

## தோழி கூற்று

மடவது அம்ம மணிநிற எழிலி
மலரின் மௌவல் நலம்வரக் காட்டிக்
கயல்ஏர் உண்கண் கனங்குழை இவைநின்
எயிறுஏர் பொழுதின் எய்தருவேம் என
5 கண்அகன் விசும்பின் மதிஎன உணர்ந்தநின்

நன்னுதல் நீவிச் சென்றோர் நம் நசை
வாய்த்துவரல் வாரா அளவை அத்தக்
கல்மிசை அடுக்கம் புதையக் கால்வீழ்த்துத்
தளிதரு தண்கார் தலைஇ
10 விளிஇசைத்து அன்றால் வியலிடத் தானே.

எ-து : பிரிவிடை மெலிந்த தலைவியைத் தோழி வற்புறுத்தது.

## இடைக்காடனார்

ப-ரை : தலைவீ! அம்ம - நீ கேட்பாயாக, மலரின் மௌவல் - முன்பெல்லாம் மலரையுடைய முல்லையை, நலம்வர - செவ்வையாக, காட்டி - காண்பித்து, கயல் - கயல் மீனை ஒத்த, ஏர் - அழகிய, உண்கண் - மைதீட்டிய கண்களையும், கனம் குழை - கனவிய குழையையும் உடையாய்! இவை - இம் முல்லை, நின் எயிறு ஏர்பொழுதின் - நின்பற்கள் போன்ற அரும்பை ஈனும் கார்காலத்தில், எய்தருவேன் - நின்னைக் காண வருவேம், என - என்று கூறி, கண் அகல் விசும்பின் - இடம் அகன்ற ஆகாயத்தில் எழுகின்ற; மதிஎன - பிறை நிலவினை, உணர்ந்தென - ஒத்திருக்கும்படியாகிய, நின் - உன்னுடைய, நல்நுதல் - அழகிய நெற்றியை, நீவி - தடவிப் பாராட்டி, சென்றோர் - பிரிந்து சென்ற நமது காதலர், நம்நசை - நம்மேல் விருப்பம் கொண்டு, வாய்த்து வரல் வாரா அளவை - தம்வினை முடித்துத் திரும்பி வருவதற்கு முன்பே, அத்தம் - சுரத்து நெறியை உடைய, கல்மிசை அடுக்கம் - மலைமேலே அதன் பக்கம் எல்லாம், புதைய - மறைய, கால் வீழ்த்து - நீர்க்கால் இறங்கி, தளி - மழைத்துளியை, தரு - இடைவிடாது பெய்கின்ற, தண் - குளிர்ந்த, கார் - மேகம், தலைஇ - அம்முல்லைகள் அரும்பும் படி மழையைப்பெய்து, வியல் இடத்தான் - அகன்ற ஆகாயத் தினிடத்திலே, விளி இசைத்தன்று - இடியோசையுடன் குமுமி உள்ளது. ஆதலால், மணிநிற எழிலி - நீலமணியை ஒத்த நிறம் வாய்ந்த இம்மேகம், மடவ - அறியாமையை உடையது காண்; இஃது வம்பு என்று அறிவாய்;

முடிபு : சென்றோர் வாரா அளவை கார் வியல் இடத்தான் விளி இசைத்தன்று; ஆகலின் எழிலி அம்ம மடவது எனமுடிக்க.

கருத்து : தலைவன் குறித்த பருவம் அன்று. இஃது வம்பு எனவே நீ கவலற்க என்று தோழி தேற்றினாள்.

தலைவர் குறித்த பருவத்தே வருவர்; பொய் கூறார்; பொய் கூறின் தெய்வத்தால் ஒறுக்கப்படுவர், இது அவர் குறித்த கார்ப்பருவம் அன்று கவலற்க என்று தோழி வற்புறுத்தினாள் என்க.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புப்மைபகுதி

1. மடவ
"மடவ வாழி வஞ்ஞை மாயினம்" (குறுந். 251:1)

6. நுதல் நீவுதல்
"சிறுமறி கொன்று இவள்நறு நுதல்நீவி" (குறுந். 362:4)
(கலி- 21:6) (அகநா. 49:6, 165:9, 240:10)
(தமிழ்நெறி. 96:1-4)

# 317. குறிஞ்சி

## தோழி கூற்று

நீடுஇருஞ் சிலம்பிற் பிடியொடு புணர்ந்த
பூம்பொறி ஒருத்தல் ஏந்துகை கடுப்பத்
தோடுதலை வாங்கிய நீடுகுரற் பைந்தினை
பவளச் செவ்வாய்ப் பைங்கிளி கவரும்
5 உயர்வரை நாடநீ நயந்தோள் கேண்மை
அன்னை அறிகுவள் ஆயின் பனிகலந்து
என்ஆ குவகொல் தானே எந்தை
ஒங்குவரைச் சாரல் தீஞ்சுனை ஆடி
ஆயமொடு குற்ற குவளை
10 மாஇதழ் மாமலர் புரைஇய கண்ணே.

எ-து : தோழி தலைவனை வரைவு கடாயது.

மதுரைப் பூவண்டனாகன் வேட்டனார்

ப-ரை : நீடு இரும் சிலம்பில் - நீண்ட கரிய மலையின் கண்ணே, பிடியொடு - பெண் யானையுடன், புணர்ந்த - சேர்ந்த, பூம்பொறி ஒருத்தல் - அழகிய புள்ளிகளை உடைய ஆண் யானை

யின், ஏந்துகை - தூக்கிய கையை, கடுப்ப - ஒப்ப, தோடுதலை வாங்கிய - மேலேயுள்ள இலைக்குள்ளிருந்து நீண்டு வளைந்த, நீடு குரல் பைந்தினை - நீட்சி மிக்க பசிய தினைக் கதிரை, பவளச் செவ்வாய் - பவளம்போல் சிவந்த வாயை உடைய, பைங்கிளி - பசுமையான கிளிகள், கவரும் - கொய்து கொண்டு பறக்கும், உயர் வரை - உயர்ந்த மலையை உடைய, நாட - நாடனே! நீ நயந்தோள் - உன்னால் விரும்பப்பட்ட எம் தலைவியிடத்து, கேண்மை - நீ கொண்டிருக்கும் களவொழுக்கத்தை, அன்னை - எமது தாய், அறியின் - அறிய நேர்ந்தால், எந்தை - எம் தந்தை யினது, ஓங்கு - உயர்ந்த, வரைச் சாரல் - மலைச் சாரலிலுள்ள, தீம் சுனை - இனிய சுனை நீரில், ஆயமொடு ஆடி-தோழிமாருடன் நீராடிய போழ்து, குற்ற - பறித்த, குவளை - அந்தச் சுனைக் குவளையின், மா - கரிய, இதழ் - இதழ்களையுடைய, மாமலர் புரைஇய - சிறந்த மலரைப் போன்ற, கண் - கண்கள், பனி கலந்து - நீர் கலந்து வடியப் பெற்று, என் ஆகுவ - என்ன நிலையை அடையுமோ?

முடிபு : நாட! கேண்மை அன்னை அறிகுவள் ஆயின் கண் பனி கலந்து என் ஆகுவகொல்! என முடிக்க.

கருத்து : தலைவ! களவினை அன்னை அறியின் தலைவி பெருந் துன்பத்திற்கு உள்ளாவாள். எனவே விரைக வரைக என்றாள்.

உள்ளுறை : உண்ணும் கிளிக்குப் பயன்படா நிற்கும் தினைக் கதிர் தான் விளைந்த கொல்லைக்குப் பயன்படாது அன்றே! அவ்வாறே நினக்குப் பயன்படும் தலைவி தான் வாழும் பிறந்த இல்லிற்குப் பயன்படாள் என்பதை உணர்ந்து வரைந்துகொள் என்பதாம்.

### ஒப்புமைப்பகுதி

1-3. தினைக் கதிருக்குப் பிடியின் கை

"மடப்பிடித் தடக்கை அன்ன பால்வார்பு
கரிக்குறட்டு இறைஞ்சிய செறிகோட் பைங்குரல்"
(குறுந். 198:3-4)

"பிடிக்கை அன்ன பெருங்குரல் ஏனல்" (குறுந். 360:5)

"யானை......இறங்குகை கடுப்பத் துய்த்தலை
வாங்கிய புனிறுதீர் பெருங்குரல், நற்கோட் சிறுதினை"
(குறிஞ்சி. 35:8)

"பொய்பொரு கயமுனி முயங்குகை கடுப்பக்
கொய்பதம் உற்றன குலவுக் குரலேனல்"

(மலைபடு. 107:8)

"உறங்கு பிடித் தடக்கை யொருங்கு நிரைத்தவை
போல் இறங்கு குரலிறடி. (பெருங். 1:49-103.4)

## 318. பாலை

### தோழி கூற்று

நினைக்கலும் நினைதிரோ ஐய அன்றுநாம்
பணைத்தாள் ஓமைப் படுசினை பயந்த
பொருந்தாப் புகர்நிழல் இருந்தனம் ஆக
நடுக்கம் செய்யாது நண்ணுவழித் தோன்றி
5 ஒடித்துமிசை கொண்ட ஓங்குமருப்பு யானை
பொறிபடு தடக்கை சுருக்கிப் பிறிதோர்
அறியிடை இட்ட அளவைக்கு வேறுணர்ந்து
என்றூழ் விடரகம் சிலம்பப்
புன்றலை மடப்பிடி புலம்பிய குரலே.

எ-து : பிரிவு உணர்த்தப்பட்ட தலைவனைத் தோழி சொல்லியது.

பாலை பாடிய பெருங் கடுங்கோ

ப-ரை : ஐய- ஐயனே! அன்று - காட்டின்வழியே தலைவியை அழைத்து வந்த அந்நாளில், நாம் - நாம் வழிநடை வருத்தம் தீர, பணைத்தாள் - பருத்த அடியினை உடைய, ஓமை - ஓமை மரத்தின், படுசினை - பெரிய கிளைகளின் அடியில், பயந்த - இருந்த, பொருந்தா - பொருந்தாத, புகர் - புள்ளிகளை உடைய, நிழல் - நிழலின்கண்ணே, இருந்தனம் ஆக - இருந்தோமாக, அப்பொழுது, நடுக்கம் செய்யாது - நமக்குத் துன்பத்தைத் தாராது, நண்ணுவழி - தான் வரும் வழியில், தோன்றி - வந்து ஒடித்து - தழைகளை ஒடித்து, மிசைகொண்ட - தின்னுதலைக் கொண்ட, ஓங்கு மருப்பு யானை - உயர்ந்த தந்ததிதை உடைய யானை, பொறிபடு தடக்கை சுருக்கி - தன் புள்ளிகளை உடைய நீண்ட கையைச் சுருட்டித் தூக்கி, பிறிதஓர் - வேறு ஒன்றினை, அறியிடை இட்ட - அறிகின்றதன் காரணமாக இடையீடுபட்டு,

அளவைக்கு - பிளிறிய ஓசைக்கு, வேறு உணர்ந்து - புலி தாக்கிற்றோ என மாறுபட உணர்ந்து, என்றூழ் விடரகம் - வெயில் பரவிய மலை பிளப்பிடம் முழுதும், சிலம்ப - எதிரொலி எழுமாறு, புன்றலை - புல்லிய தலையை உடைய, மடப்பிடி - இளமை செறிந்த பெண் யானை, புலம்பிய குரல் - கதறிய குரலைக் கேட்டீர் அன்றோ? அதனை, நினைக்கலும் - இப்பொழுது நினைத்தலும், நினைதிரோ - நினைப்பீரோ? நினைப்பீராயின் கொடிய அவ் வழியில் இவளைப் பிரிந்து போதலைத் தவிர்வீர் அன்றோ.

முடிபு : ஐய! அன்று நாம் நிழல் இருந்தனமாக, பிடி புலம்பிய குரல் நினைக்கலும் நினைதிரோ, என முடிக்க.

கருத்து : வரைவிற்குப் பின், பொருள்வயிற் பிரிய இருக்கும் தலைவனை நோக்கி சுரத்திடை பண்டு நிகழ்ந்த நிகழ்ச்சியைச் சுட்டிப் போகேல் என்று தோழி கூறினாள்.

இறைச்சி : களிறு வேறொன்றனை நினைத்துப் பிளிறிய ஓசையைக் கேட்டுப் புலி தாக்கிற்றோ என மாறுபட உணர்ந்து பிடிபுலம்பிற்று என்றது, நீவிர் பிரிந்து குறித்த நாளில் வாராது நீட்டிப்பின் தலைவி புலம்பி மடிவள் என்பதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - செலவழுங்குவித்தல்.

ஒப்புமைப்பகுதி

1. 'நினைக்கலும் நினைதிரோ' என்பது போன்ற சொல்லாட்சி
"நல்கலும் நல்குவர்" (குறுந். 37:1) (ஐங். 36:3)
(கலி. 23:7, 54:8, 55:19) (அகநா. 8:18)
(புறநா. 1:5 அடிக்.)

2-5. யானை ஓமைத் தோலை உண்ணல்
"கான யானை தோல் நயந்துண்ட
பொரிதாள் ஓமை வளிபொரு நெடுஞ்சினை"
(குறுந். 79:1-2)

# 319. நெய்தல்

## தலைவன் கூற்று

ஓதமும் ஒலிஓ வின்றே ஊதையும்
தாதுளர் கானல் தௌவென் றன்றே
மணல்மலி மூதூர் அகல்நெடும் தெருவில்
கூகைச் சேவல் குராலோடு ஏறி
5 ஆர்இரும் சதுக்கத்து அஞ்சுவரக் குழறும்
அணங்குகால் கிளரும் மயங்குஇருள் நடுநாள்
பாவை அன்ன பலர்ஆய் வனப்பின்
தடமென் பணைத்தோள் மடம்மிகு குறுமகள்
சுணங்குஅணி வனமுலை முயங்கல் உள்ளி
10 மீன்கண் துஞ்சும் பொழுதும்
யான்கண் துஞ்சிலன் யாதுகொல் நிலையே.

எ-து : காப்பு மிகுதிக்கண் ஆற்றானாகிய தலைவன் தலைவியை நினைந்து தன்னுள்ளே சொல்லியது.

### வினைத் தொழிற் சோகீரனார்

. ப-ரை : ஓதமும் - கடலும், ஒலிஓவின்று - ஓசை அடங்கி விட்டது, ஊதையும் - ஊதைக்காற்றும், தாது - மகரந்தத்தை, உளர் - பரவவிட, கானல் - கடற்கரைச் சோலையும், தௌ வென்றன்றே - பொலிவு குன்றிவிட்டது. மேலும், மணல்மலி மூதூர் - மணல் நிறைந்த இப் பழைய ஊரின்கண்ணுள்ள, அகல் நெடுந்தெருவில் - அகன்ற நெடிய தெருவிலே, கூகை சேவல் - கூகையின் சேவல், குரலோடு ஏறி - அதன் பெண் பறவையோடு சென்று, ஆர் அரும் - மனித சஞ்சாரம் அற்ற, சதுக்கத்து - மக்கள் இயங்காத பெரிய நாற்சந்தி கூடும் இடத்தில், அஞ்சுவர - யாவர்க்கும் அச்சம் உண்டாகும்படி, குழறும் - கத்தும், அணங்கு கால் கிளரும் - பேய்களும் வெளிப்பட்டு நடமாடும், மயங்கு இருள் நடுநாள் - ஒருவர் ஒருவரைக் காண இயலாது மயங்குதற் குரிய நள் இரவில், பாவை அன்ன - கொல்லிப் பாவையைப் போன்ற, பலர் ஆய் வனப்பில் - பலராலும் ஆராயப்படுகின்ற பேரழகையும், தாமென் பணைத்தோள் - அகன்ற மெல்லிய பருத்த தோளையும் உடைய, மடம்மிகு குறுமகள் - மடப்பம் மிக்க இளைய மகளின், சுணங்கு அணி - தேமல் படர்ந்த, வனமுலை - அழகிய மார்பை, முயங்கல் உள்ளி - தழுவுதல்

கருதி, மீன் கண்துஞ்சும் பொழுதும் - மீன்கள் தூங்கும் இந்த நள்ளிரவிலும், யான் கண் துஞ்சிலன் - யான் உறங்கேன்; யாது கொல் நிலை - என் நிலை யாதாய் முடியுமோ? அறிகிற்றிலேன்.

முடிபு : ஓதமும் ஒலி ஓவின்று, ஊதையும் தௌவென்றன்று, சேவல் குழறும், அணங்கு கிளரும், நடுநாள் முயங்கல் உள்ளி துஞ்சிலன், யாது கொல் நிலை என முடிக்க.

கருத்து : இற்செறிக்கப்பட்ட தலைவியைக் காண இயலாது தலைவன் நள்ளிரவிலும் உறங்காது தன் நிலைபற்றி வருந்தினான்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

2. தவ்வென

"வெவ்வெங் கலுழி தவ்வெனக் குழக்கிய"

(நெடுநல், *185*) (குறள். *1144*)

7-8. தலைவிக்குப்பாவை

"செய்வுறு பாவை அன்ன என்"

(குறுந். *195:6*) (அகநா. *98:12*)

# 320. மருதம்

## பரத்தை கூற்று

விழவும் உழந்தன்று முழவும் தூங்கின்று
எவன்குறித் தனள்கொல் என்றி யாயின்
தழைஅணிந்து அலமரும் அல்குல் தெருவின்
இளையோள் இறந்த அனைத்தற்குப் ப்ழவிறல்
5 ஓரிக் கொன்ற ஒருபெருந் தெருவில்
காரி புக்க நேரார் புலம்போல்
கல்லென் றன்றால் ஊரே அதற்கொண்டு
காவல் செறிய மாட்டி ஆய்தொடி
எழில்மா மேனி மகளிர்
10 விழுமாந் தனர்தங் கொழுநரைக் காத்தே.

எ-து : பரத்தை தனக்குப் பாங்காயினார் கேட்ப நெருங்கிச் சொல்லியது.

## கபிலர்

ப-ரை : விழவும் - ஊரினர் நடத்தும் திருவிழாக்களும், உழந்தன்று - முடிவுற்றன; முழவும் - மத்தளங்களின் ஓசையும், தூங்கின்று - அடங்கி விட்டது, எவன் குறித்தனள் கொல் - இக் காலத்து இவள் யாது கருதினாளோ, என்றியாயின் - என்று கேட்பாயாயின், கூறுவன் கேள்; தழை அணிந்து - ஒருநாள், தழை ஆடையைக் உடுத்திக் கொண்டு, அலமரும் - அத் தழை அசையும், அல்குல் - அல்குலை உடையவளாய், தெருவில் - தெருவின் கண்ணே, இளையோள் - இந்த இளையோள், இறந்த - சென்ற, அனைத்தற்கு - அவ்வொரு காரணத்திற்காக, பழவிறல் - பழமையாகிய வெற்றியை உடைய, ஓரி - கொல்லி மலைக்குரிய வல்வில் ஓரியை, கொன்ற - போரிற் கொன்ற, காரி - மலையமான் திருமுடிக் காரி என்பான், ஒரு பெருந் தெருவில் - அவ் ஓரியினது ஒப்பற்ற பெரிய தெருவிலே, புக்க - புகுந்தபோது, நேரார் - காரியின் பகைவராகிய ஓரியைச் சேர்ந்த அனைவரும், புலம்போல் - ஒன்றுகூடிப் பேர் இரைச்சல் இட்டாற்போல, ஊர் - இந்த ஊரில், கல்லென்றன்று - கல்லென்றும் நகை ஒலி உண்டாயிற்று; அதற்கொண்டு - அந்த நகையொலியைக் கேட்ட அளவில், ஆய்தொடி எழில் மாமேனி மகளிர் - ஆராய்ந்து அணிந்த வளையல்களை உடைய அழகிய மாந்தளிர் போன்ற மேனியை உடைய மகளிர் அனைவரும், தம் கொழுநரைக் காத்து - தத்தம் கணவரைப் பரத்தையர் வவ்வுவரோ என்றஞ்சிக் கைப்பற்றிக் கொண்டு, காவல் செறிய மாட்டி - காவல் செறியச் செய்து, விழுமாந்தனர் - நன்மையடைந்தனர். அவ்வாறு அவர்கள் கணவரைப் பாதுகாத்துக் கொண்டமையால் இப் பரத்தைஇவனைக் கைக் கொண்டனள் போலும்; இஃது அரிய தொரு செயலோ.

முடிபு : உழந்தன்று, தூங்கின்று, எவன் குறித்தனள் என்றி யாயின், மகளிர் கொழுநரைக் காத்து விழுமாந்தனர், வியப்பு என்னை? என முடிக்க.

கருத்து : தலைவன் புதியதொரு பரத்தை மனைபுக, முதற் பரத்தை வெகுண்டு குலமகளிர் தம் கொழுநரைக் காக்க இவள் இத் தலைவனைப் பற்றினள் போலும் என நகையாடினள்.

ஆண் பாலரைத் தம்வயம் ஈர்க்க, பரத்தையர் தெருவில் அங்கும் இங்கும் உலாவுவர் போலும். மாதர்கள் கொழுநரைக் காவல் செய்வர் எனவே இத் தலைவன் காவல் கடந்து சென்றவன் போலும்.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - பரத்தையைப் பழித்தல்.

# 321. முல்லை

## தலைவன் கூற்று

செந்நிலப் புறவின் புன்மயிர்ப் புருவை
பாடின் தெண்மணித் தோடுதலைப் பெயரக்
கான முல்லைக் கயவாய் அலரி
பார்ப்பன மகளிர் சாரற்புறத்து அணியக்
5 கல்சுடர் சேரும் கதிர்மாய் மாலைப்
புல்லென் வருமனை நோக்கி மெல்ல
வருந்துங் கொல்லோ திருந்திழை அரிவை
வல்லைக் கடவுமதி தேரே சென்றிக
குருந்தவிழ் குறும்பொறை பயிற்றப்
10 பெருங்கலி மூதூர் மரந்தோன் றும்மே.

எ-து : வினைமுற்றி மீள்வான் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார்

ப-ரை : திருந்து இழை அரிவை - நன்றாகச் செய்யப்பட்ட அணிகலன்களை அணிந்த நம் காதலி, செந்நிலப் புறவின் - சிவந்த மண்ணை உடைய காட்டின் கண்ணே, புன்மயிர்ப் புருவை - சிறிய மயிரை உடைய யாடுகளின், பாடுஇன் தெள்மணி - தெளிந்த இனிய ஓசையுடன் கூடிய மணிகளை, தோடு - கழுத்திலே கட்டப்பட்ட கூட்டமனைத்தும், தலைப்பெயர் - தாம் மேய்வதைத் தவிர்த்துத் தொழுவம் புக, கானம் - கானத்தின் கண் வளர்ந்த, முல்லை - முல்லையின், கயவாய் - அகன்ற வாயை உடைய, அலரி - பூக்களை, சாரற் புறத்து - சாரலின் புறத்தே

வாழ்கின்ற, பார்ப்பன மகளிர் - அந்தணச் சிறுமியர், அணிய - பறித்துச் சூட, கல்சுடர் சேரும் - மேற்கு மலையிற் சென்று மறையும், கதிர்மாய் மாலை - கதிரவன் வீழும் மாலைப் பொழுதில், புல்என் வறுமனை நோக்கி - யான் இல்லாமையால் பொலிவுகுன்றிய வறிய மனையைப் பார்த்து, மெல்ல வருந்துங் கொல்லோ - மெல்ல வருந்துவளோ? பாகனே! தேர் - நம் தேரை, வல்லை - விரைவில், கடவுமதி - செலுத்துவாயாக, குருந்தவிழ் - குருந்து மலர்கின்ற, குறும்பொறை - காட்டை, பயிற்ற - நெருங்கலும், பெருங்கலி - பேர் ஆரவாரத்தை உடைய, மூதூர் - பழைமையான நம்மூரில் ஓங்கி நிற்கும், மரம் தோன்றும் - மரங்கள் தோன்றா நிற்கும், சென்றிக - ஆதலில் நின்தேர் விரைவிற்செல்லுக;

முடிபு : பெயர, அணிய, நோக்கி அரிவை வருந்துங்கொல்? மூதூர் மரம் தோன்றும், தேர் கடவுமதி என முடிக்க.

கருத்து : மீண்டு வரும் தலைவன் பாகனை நோக்கி நாம் இன்மையால் மனைநோக்கித் தலைவி வருந்துவள். ஆகலின் விரைந்து தேரைச் செலுத்துக என்று வேண்டினன்.

அ-ள் : புருவை - ஆடு. கயவாய் - அகன்றவாய். குறும்பொறை - காடு.

தீயோம்பும் கொழுநரைப் பெற்றிருக்கும் மகளிர் அவரைஎஞ் ஞான்றும் பிரியப் பெறாள் ஆகலின் முல்லையணிந்தமை கூறினான், அதுபோல நம் காதலியும் இருக்கக் கருதுவள் என்பதைக் குறிப்பித்தான்.

மெய்ப்பாடு - உவகை

பயன் - கேட்டபாகன் தேர் கடாவல்

ஒப்புமைப்பகுதி

1. புன்மயிர்ப் புருவை
"வார்கோட்டு வயத்தகர் வாராது மாறினும்
குருமயிர்ப் புருவை ஆசையின் அல்கும்" (ஐங். 238)

# 322. குறிஞ்சி

## தோழி கூற்று
## [தலைவி கூற்றும் ஆம்]

ஆங்கனம் தணிகுவது ஆயின் யாங்கும்
இதனிற் கொடியது பிறிதொன்று இல்லை
வாய்கொல் வாழி தோழி வேயுயர்ந்து
எறிந்து செறித்துஅன்ன பிணங்குஅரில் விடர்முகை
5 ஊன்தின் பிணவின் உட்குபசி களைஇயர்
ஆள்இயங்கு அரும்புழை ஒற்றி வாள்வரிக்
கடுங்கண் வயப்புலி ஒடுங்கும் நாடன்
தண்கமழ் வியல்மார்பு உரிதினின் பெறாது
நல்நுதல் பசந்த படர்மலி அருநோய்
10 அணங்குஎன உணரக் கூறிவேலன்
இன்இயம் கறங்கப் பாடிப்
பல்மலர் சிதறிப் பரவுறு பலிக்கே.

எ-து : தோழி, சிறைப்புறமாகச் சொல்லியது.
(அல்லது)
தலைவி பாங்கிக்கு உரைத்ததூஉம் ஆம்.

மதுரை பாலாசிரியன் சேந்தன் கொற்றனார்

ப-ரை : தோழி - தோழியே! வாழி - நீ வாழ்வாயாக, வேய் - மூங்கில்கள், உயர்ந்து - ஓங்கி வளர்ந்து, எறிந்து - இடையே வெட்டி, செறித்து அன்ன - நெருக்கி வைத்தாற் போன்ற, பிணங்கு அரில் விடர் முகை - பின்னிய புதர்களைப் பெற்றிருக்கும் மலைப்பிளப்பை அடுத்த பாறையின் ஊடே, ஊன் தின் பிணவின் - ஊனைத் தின்னுகின்ற பெண் புலிக்கு ஏற்படும், உட்குபசி - அஞ்சத்தக்க பசியினை, களைஇய - போக்குவான் வேண்டி, ஆள் - மக்கள், இயங்கு அரும் புழை ஒற்றி - இயங்குகின்ற நுழைதற்கு அரிய சிறுவழியை அடுத்து, வாள்வரிக் கடுங்கண் - வாள்போன்ற கோடுகளையும் கொடிய கண்களையும் உடைய, வயப்புலி - வலிய ஆண்புலி, ஒடுங்கும் - பதுங்கிப் பார்க்கும், நாடன் - மலை நாடனது, தண்கமழ் - தண்ணிதாய்க் கமழ்கின்ற, வியல்மார்பு - அகன்ற மார்பை, உரிதினின் - உரிமையுடன், பெறாது - பெறாமையால், நல் -

அழகிய, நுதல் - நெற்றியில், பசந்த - பசலை படர, படர்மலி அருநோய் - நினைத்தல் மிக்க நீங்குதற்கு அரிய இந்நோய், அணங்கு என - முருகவேள் தீண்டினமையால் உண்டாயிற்று என்று, உணர - அன்னை நம்பும் வண்ணம், கூறி - எடுத்து உரைத்து, வேலன் - பூசாரி, இன்இயம் கறங்க - தன்னுடைய துடி, முழவு முதலிய இனிய வாச்சியங்கள் ஒலிக்க முழக்கி, பாடி - இசைத்து, பல்மலர் சிதறி - பலவாகிய மலர்களைத் தூவி, பரவுறு பலிக்கு - இந்த யாட்டுப் பலியை ஏற்றுக்கொள்க என்று படைத்த பலிக்காக, ஆங்கனம் - அவ்வாறே, தணிகுவது ஆயின் - இந்நோய் நீங்குவதானால், யாங்கும் - எவ் விடத்தும், இதனில் - இதனை விட, கொடியது - கொடுமையானது, பிறிது ஒன்று இல்லை - வேறொன்றில்லை, எண்ணிப்பாராய்; வாய்கொல் - அவ்வாறு தணிவது என்பது உண்மைதானோ? உண்மையெனிற் கூறுவாய்.

முடிபு : தோழி! பரவுறு பலிக்கு அருநோய் தணிகுவதாயின் கொடியது பிறிதொன்றில்லை வாய்கொல்? என முடிக்க.

கருத்து : தலைவனால் ஏற்பட்ட பசலைநோய் வேலன் பலியால் நீங்குமாயின் கொடியது ஒன்றில்லை என்றவாறு.

அ-ள் : வாய் - உண்மை. அரில் - புதர். முகை - துறுகல். உட்கு - அச்சம்.

வி-ரை : களவு நீட்டித்தால் அன்னை வெறி காண நேரிடும், அதனால் தலைவி இறக்கும் துன்பம் அடைவள், எனவே வரைக என்றாள். இது பசலை பாய்தல்.

உள்ளுறை : பெண் புலியின் பசியைப் போக்க ஆண் புலி இரை தேடிப் பதுங்கியிருக்கும் என்றது தலைவியின் நோய் நீங்க, தலைவன் பொருள் ஈட்டி வருவான், விரைவில் வரைந்துகொள்வான் என்றவாறு.

மெய்ப்பாடு - மருட்கையைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

4. விடர்முகை

"விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்கு"

(குறுந். 218:1, 239:2, 343:4) (ஐங்.395:2)

9. நுதல் பசத்தல்
"பசைஇப் பசந்தன்று நுதலே." (குறுந். 87:4 48:5, 205:7)

# 332. நெய்தல்

### தோழி கூற்று

ஓங்கித் தோன்றும் தீம்கள் பெண்ணை
நடுவ ணதுவே தெய்ய மடவரல்
ஆயமும் யானும் அறியாது அவணம்
மாய நட்பின் மாண்நலம் ஒழிந்துநின்
5 கிளைமை கொண்ட் வளைஆர் முன்கை
நல்லோள் தந்தை சிறுகுடிப் பாக்கம்
புலிவரி எக்கர்ப் புன்னை உதிர்த்த
மலிதாது ஊதும் தேனொடு ஒன்றி
வண்டுஇமிர் இன்இசை கறங்கத் திண்தேர்த்
10 தெரிமணி கேட்டலும் அரிதே
வரும்ஆறு ஈது அவண் மறவாதீமே.

எ-து : தோழி இரவுக்குறி நேர்ந்தது.

### வடமவண்ணக்கன் பேரி சாத்தனார்

ப-ரை : தலைவனே! மாய நட்பின் - நின்னிடம் மயக்கம் கொண்ட நட்பின் காரணமாக, மாண் நலம் ஒழிந்து - தன் பேரழகினையும் நீங்கி, நின் - உன்னுடைய, கிளைமைகொண்ட - உறவைக்கொண்ட, வளையார் முன்கை - வளையல்கள் அணிந்த முன்னங் கைகளை உடைய, நல்லோள் - நின்னாற் காதலிக்கப் பட்ட தலைவிக்கு, தந்தை - தந்தை வாழும், சிறுகுடிப்பாக்கம் - சிறுகுடியை உடைய பாக்கமானது, ஓங்கித் தோன்றும் - உயர்ந்து தோன்றுகின்ற, தீம்கள் - இனிய கள்ளைத் தன்பாற்கொண்ட, பெண்ணை - பனைமரங்களின், நடுவணது - நடுவில் உள்ளது அறிவாய்; மடவரல் - மடப்பம் வாய்ந்த, ஆயமும், தோழியர் கூட்டமும், யானும் - உயிர்த்தோழியாகிய யானும், அறியாது - ஒருவரை ஒருவர் அறியாதபடி, அவணது - அவ்விடத்திலேயே இருப்பேம்; புலிவரி எக்கர் - அங்கே புலியின் வரி போன்ற மணல் மிக்க திடரில் இருக்கும், புன்னை - புன்னை மரங்களினின்றும், உதிர்த்த - உதிர்ந்த, மலிதாது - நிரம்பிய மகரந்தப்

பொடிகளை, ஊதும் தேனோடு - உண்ணும் பெண் வண்டு களோடு, ஒன்றி - சேர்ந்து, வண்டு - ஆண் வண்டுகளும், இமிர் - முரலுகின்ற, இன்இசை - இனிய ஓசை, கறங்க - மிக்கொலித் தலால், திண் தேர் - நீ ஏறி வரும் திண்ணிய தேரின், தெரிமணி - விளங்கிய மணிகளின் ஓசை, கேட்டலும் - பிறர் கேட்டலும், அரிது - இயலாது. அவண் வருமாறு ஈது - அங்கு நீ வருதற்குரிய வழியும் இதுவே ஆகும், ஆகையால் சேர்ப்பனே! மறவாதீம் - மறவாமல் வருவாயாக.

முடிபு : சேர்ப்ப! பாக்கம் நடுவணது; யானும் அவணம் கேட்டலும் அரிது, ஈது வரும் ஆறு, மறவாதீம் என முடிக்க.

கருத்து : தலைவனை இரவுக் குறியில் வருக, எம் வாழ்விடம் இது, எவரும் நின் வருகையை ஓரார் என்று தோழி இடஞ்சுட்டி வேண்டினாள். அவணம் என்றாள் நின் வரவை எதிர்நோக்கி அங்குக் காத்திருப்போம் என்றபடி. பெண்ணை நடுவணது என்றாள் நின் வருகையை அறிவார் எவரும் இலர் என்றற்கு. இதனாற் குறியிடமும் சுட்டினாயிற்று. மணியோசை கேட்டல் அரிது என்றதனால் அஞ்சாது வருக என்று கூறினாளுமாயிற்று. உலகியலை ஒட்டி விருந்துண்டு செல்லலாம் என்பாள் தீங்கட் பெண்ணை என்றாள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - இரவுக்குறி நேர்தல்.

இறைச்சி : புன்னை மலர்கள் உதிர்த்த பூந்தாதுக்களை வண்டு உண்டு இமிரும் என்றதனால் நீயும் தலைவியின் நலத்தை அஞ்சாது உண்டு மகிழலாம் என்னும் குறிப்பும் பெறப்பட்டது.

## 324. குறிஞ்சி (அ) பாலை

### கண்டோர் கூற்று

அந்தோ தானே அளியள் தாயே
நொந்துஅழி அவலமொடு என்ஆ குவள்கொல்
பொன்போல் மேனித் தன்மகள் நயந்தோள்
கோடுமுற்று யானை காடுடன் நிறைதர
5 நெய்பட்டு அன்ன நோன்காழ் எஃகின்

செல்வத் தந்தை இடனுடை வரைப்பின்
ஆடு பந்து உருட்டுநள் போலஓடி
அம்சில் ஓதி இவள்உறும்
பஞ்சி மெல்லடி நடைபயிற் றும்மே.

எ-து : தலைவன் பாங்கற்குச் சொல்லியது.
(அல்லது)
இடைச்சுரத்துக் கண்டோர் சொல்லியதூஉம் ஆம்.

**கயமனார்**

ப-ரை : பொன்போல் மேனி - பொன்னைப் போன்ற மேனியை உடைய, தன் மகள் - தன் புதல்வியாகிய, நயந்தோள் - இவளுடைய விருப்பத்தின்படி நடத்துபவளாதலால், தாய் - இவளைப்பெற்ற அன்னை, அளியள் - மிகவும் அளிக்கத் தக்காள், தான் - அவள்தான், நொந்து அழி அவலமொடு - நொந்து அழிகின்ற துன்பத்தோடு, என் ஆகுவள் கொல் - இனி என்ன பாடுபடுவளோ? அந்தோ - ஐயோ; கோடுமுற்று யானை - கொம்புகள் முதிர்ந்த யானை, காடு உடன் நிறைதர - காட்டில் எங்கும் நிறைய, நெய்பட்டன்ன - நெய் பூசினால் ஒத்த, நோன் காழ் - வலிய காம்பு செருகிய, எஃகின் - வேற்படையை ஏந்திய, செல்வத் தந்தை - யானைச் செல்வத்தை உடைய தந்தையினது, இடனுடை வரைப்பில் - அகற்சியை உடைய இடத்தில், ஆடு பந்து உருட்டுநள் போல - விளையாடுகின்ற பந்தைக் காலால் உருட்டுபவள் போல, ஓடி - ஓடிஓடி, அஞ்சில் ஓதி - அழகிய சிலவாகிய கூந்தலை உடைய, இவள் - இவளின், பஞ்சி - பஞ்சு போன்ற, மெல்அடி - மெல்லிய அடிகள், நடை பயிற்றும்மே - பரலில் நடை பயிற்றுமே; என்ன பாபம்;

முடிபு : ஓதி மெல்லடி நடை பயிற்றும், தாய் என் ஆகுவள் கொல், அந்தோ என முடிக்க.

கருத்து : தலைவி மெல்லியள், இவள் சுரத்திடைச் செல்வதைக் கண்ட தாய் என்ன துன்பம் அடைவள் என்று கண்டோர் இரங்கினர். தலைவன் கூற்றிற்கு, பாங்கனிடம் தலைவியின் இயல்இடம் கூறியதாகப் பொருள் கொள்க.

தலைவன் கூற்றிற்கு மெய்ப்பாடு - உவகை.

பயன் - பாங்கற்கு உணர்த்தல்.

கண்டோர் கூற்றிற்கு மெய்ப்பாடு - அழுகை.

பயன் - ஆற்றாது உரைத்தல்.

ஒப்புமைப்பகுதி

8. அஞ்சிலோதி
"அஞ்சிலோதி ஆய்வளை நெகிழ" (குறுந். 211:1)
"அஞ்சிலோதி அசைஇயற் கொடிச்சி" (குறுந். 214:3)
(குறிஞ்சி. 180) (ஐங். 48:1, 391:6, 448:5)
(அகநா. 261:3) (சீவக. 2576)

# 325. பாலை

## தோழி கூற்று

கவிதலை எண்கின் பருஉமயிர் ஏற்றை
இரைதேர் வேட்கையின் இரவிற் போகி
நீடுசெயற் சிதலைத் தோடுபுனைந்து எடுத்த
அரவாழ் புற்றம் ஒழிய ஒய்யென
5 முர்வாய் வள்உகிர் இடப்ப வாங்கும்
ஊக்குஅரும் கவலை நீந்தி மற்றுஇவள்
பூப்போல் உண்கண் புதுநலம் சிதைய
வீங்குநீர் வாரக் கண்டும்
தகுமோ பெரும தவிர்கநும் செலவே.

எ-து: தோழி செலவு அழுங்குவித்தது. (செலவு அழுங்குவித்தல் - செல்லாமல் தடுத்தல்)

மதுரை காருலவியங் கூத்தனார்

ப-ரை: பெரும - பெருமானே! இவள் - இத் தலைவியின், பூப்போல் - நீலமலர் போன்ற, உண்கண் - மைதீட்டப்பட்ட கண்களின், புதுநலம் - புதிய அழகு, சிதைய - கெடுமாறு, வீங்கு நீர் வரக்கண்டும் - கண்ணீர் பெருகிவழிதலைக் கண்டு வைத்தும், கவிதலை - கவிந்த தலையையும், பருஉ மயிர் - பருத்த மயிரையும் உடைய, எண்கின் ஏற்றை - ஆண்கரடி, இரைதேர் வேட்கையின் - தான் இரைதேடி உண்ணும் விருப்பத்தினால், இரவிற் போகி - இரவிலே சென்று, நீடு செயல் - நீடிய செய்கையை உடைய, சிதலைத்தோடு - கறையான் கூட்டங்கள், புனைந்து எடுத்த - செய்து உயர்த்திய, அரவு வாழ் புற்றம் - பாம்புகள் வாழ்கின்ற புற்றில் உள்ள, ஒழிய - அக் கறையான்கள் முற்றும் ஒழியும் வண்ணம், ஒய்யென - விரைவாக, முரவாய் - வலிய

கூர்மையை உடைய, வள் உகிர் - பெரிய நகங்களாலே, இடப்ப வாங்கும் - பறித்து உள் இருக்கும் குரும்பி முதலியவற்றை உறிஞ்சா நிற்கும், ஊக்கு அரும் கவலை - உள்ளத்தால் நினைத் தற்கும் அரிய கவர்த்த சுரநெறியிலே, நீந்தி - கடந்து செல்லத் தகுமோ? நும் செலவு தவிர்க - ஆகையால் நீ செல்லுதலை ஒழிவாயாக.

முடிபு : பெரும! நலம் சிதைய நீர் வரக் கண்டும் செலவு தகுமோ? என முடிக்க.

கருத்து : பெருமானே! நின் பிரிவினை அறிந்த தலைவியின் கண்கள் நீர் பெருகி நிற்றலைக் கண்டும் நீ பிரிய எண்ணுவது தகுமோ? தகாது காண்.

இறைச்சி : ஆண் கரடி இரை தின்ன விரும்பி புற்றைக் குடைந்து இரவில் தின்னும் என்றது, இவளது வேட்கை உன்னைக் கூடும் ஆசையால் இவளுயிரைத் தின்னும் என்பதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - செலவழுங்குவித்தல்.

ஒப்புமைப்பகுதி

7. பூப்போல் உண்கண்

*"பூப்போல் உண்கண் பொன்போல் மேனி"* (குறுந். *101:4*)
(ஐங். *16:4, 101:4*)

*"மலர் ஏர் உண்கண்"* (குறுந். *377:1*)

# 326. குறிஞ்சி

## தோழி கூற்று

கொழுஞ்சுளைப் பலவின் பயங்கெழு கவாஅன்
செழுங்கோள் வாங்கிய மாச்சினைக் கொக்கின்
மீன்குடை நாற்றம் தாங்கல் செல்லாது
துய்த்தலை மந்தி தும்மும் நாட
5 நினக்கும் உரைத்தல் நாணுவல் இவட்கே

நுண்கொடிப் பீரத்தின் ஊழ்உறு பூஎனப்
பசலை ஊரும் அன்னோ பல்நாள்
அறிஅமர் வனப்பின் எம்கானம் நண்ண
உண்டுஎனும் உணரா வாகி
10 மலர்என மரீஇ வருஉம் இவள்கண்ணே.

எ-து : தோழி தலைவனை வரைவு கடாயது.

## மதுரை மருதன் இளநாகனார்

ப-ரை : கொழும் சுளைப் பலவின் - கொழுத்த சுளைகளை உடையபலாவின், பயம்கெழு கவாஅன்-பயன்மிக்க மலைப்பக்கத்தில், செழுங்கோள் வாங்கிய - செழுமையாகிய காய்காய்த்துப் பருத்தலாலே தாங்கமாட்டாது வளைந்த, மாச்சினை - பெரிய கிளையிலே வந்து தங்கிய, கொக்கின் - கொக்கானது, மீன்கடை நாற்றம் - மீனைக் கொண்டுவந்து குடைந்து தின்னுதலால் உண்டாகிய புலால் நாற்றம், தாங்கல் செல்லாது - பொறுக்க முடியாமல், துய்த்தலை - பஞ்சு போன்ற தலையை உடைய, மந்தி - மந்தி, தும்மும் - தும்மா நிற்கும், நாட - நாடனே! பல் நாள் - பல நாட்களாக, அறி அமர் வனப்பின் - அறியப் படுகின்ற அமர்ந்த அழகுடைய, எம் - எம்முடைய, கானம் - தினைப் புனத்தை, நண்ண உண்டெனும் - நீ அடைதல் உண்டெனினும், உணராவாகி - காரணம் உணரப்படாதனவாகி, மலர் என - நீலமலர்போல, மரீஇவரும் - பொருந்தி வரும், இவள்கண் - இவளுடைய கண்களில், நுண்கொடிப் பீரத்தின் ஊழுறு பூவென - நுண்ணிய கொடிப் பீர்க்கின் முதல்நாள் உதிர்ந்த பழம்பூவின் நிறம்போல, இவட்கு - இத் தலைவிக்கு, பசலை ஊரும் - பசலை உண்டாகா நிற்கும், நினக்கு - உனக்கு, உரைத்தல் - இதனைச் சொல்லுதற்கு, நாணுவல் - நான் வெட்க முறுவள்; இதனை வாராமாற் காப்பாயாக.

முடிபு : நாட! இவள் கண் பசலை ஊரும்; நினக்கு உரைத்தல் நாணுவல் என முடிக்க.

கருத்து : தலைவ! நின் கூட்டத்தை இடையறாது பெற்றும் தலைவி நின் பிரிவு கருதி அஞ்சுவள். எனவே பிரிவு ஏற்படா வண்ணம் விரைக வரைக என்றாள்.

அ-ள் : ஊழுறுபூ - முதல் நாள் பூத்துப் பின்னர் விழும் பூ. தலைவியின் பெருவேட்கையை நின்பாற் கூற நாணுவல் என்றாள்.

உள்ளுறை : பலாமரம் தினைப்புனமாகவும், கொக்கு தலைவனாகவும் மீன் தலைவியாகவும், குடைதல் இன்பம் துய்த்தலாகவும், நாற்றம் அலராகவும், மந்தி அன்னையாகவும் உவமம் கொண்டு, பலாமரத்தின் மேல் கொக்கு இருந்து மீனைத் தின்னுதலால் எழும் நாற்றம் தாங்கமாட்டாது மந்தி தும்முதல் போல, தினைப் புனத்தின்கண் நீ வந்து தலைவியைக் காண்டலால் எழும் அலரைத் தாங்கமாட்டாது அன்னை வெகுண்டு பன் முறை நோக்குவள் என்றதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

6-7. பசலைக்குப் பீர்க்கின் மலர்

*"மாரிப் பீரத்து அலர்சில கொண்டே"* (குறுந். *98:5*)

(கலி. *31:4, 53:14-5, 124:8, 143:49*)

(அகநா. *45:7-8, 57:12-3, 135:2-3*)

(ஐந்திணை ஐம்பது. *2*) (திணைமாலை நூற். *100, 116*)

(சிலப். *7:38*)

# 327. நெய்தல்

## தலைவி கூற்று

நாடல் சான்றோர் நம்புதல் பழிஎனில்
பாடில கலுழும் கண்ணொடு சாஅய்ச்
சாதலும் இனிதே காதல்அம் தோழி
அந்நிலை அல்ல ஆயினும் சான்றோர்
5 கடன்நிலை குன்றலும் இலர்என்று உடனமர்ந்து
உலகம் கூறுவது உண்டென நிலைஇய
தாயம் ஆகலும் உரித்தே போது அவிழ்
புன்னை ஓங்கிய கானல்
தண்ணம் துறைவன் சாயல் மார்பே.

எ-து : வரையாது நெடுங்காலம் வந்தொழுக, ஆற்றாளாய தலைவி வன்புறை எதிர் அழிந்தது.

அம்மூவனார்

ப-ரை : காதல் அம்தோழி - என்னிடம் மிகவும் அன்பு கொண்ட தோழியே! நாடல் சான்றோர் - தேடி வந்து களவில் நம்மை முயங்கும் சான்றோனாகிய தலைவனை, நம்புதல் - நம்பி ஒழுகுதல், பழி எனில் - குற்றம் உடைத்து என்றால், பாடுஇல - உறக்கம் சிறிதும் இன்றி, கலுழும் - எப்பொழும் அழுது கொண் டிருக்கும், கண்ணொடு - கண்களோடு, சாஅய் - தலைவனைக் காண இயலாதோ என்னும் ஏக்கத்தால் இளைத்து, சாதலும் - இறந்து போதலும், இனிதே - இனியதொன்றே; அந்நிலை அல்ல ஆயினும் - அவ்வாறு இறப்பது இயல்புடையது அன்றாயினும், சான்றோர் - நற்பண்புகள் கொண்ட உயர்ந்தோர், கடன் நிலை குன்றலும் - தாம் செய்யும் கடமைகளிற் சிறிதும் குறைவு படார் என்று, உடன் அமர்ந்து - சேரப் பொருந்தி, உலகம் கூறுவது - உலகத்தார் சொல்வது, உண்டெனக் கொண்டு - உண்மையே என்று எண்ணி, போது அவிழ் - அரும்புகள் மலர்கின்ற, புன்னை - புன்னை மரங்கள் ஓங்கிய, கானல் - கடற்கரைச் சோலையில், தண்ணம் துறைவன் - குளிர்ந்த அழகிய நீர்த்துறையினை உடைய தலைவனின், சாயல் - மென்மை வாய்ந்த, மார்பு - மார்பை, நிலைஇய - நிலையாக, தாயம் ஆகலும் - உரிமையுடன் பெறும் தன்மையுடையேன் என்றாலும், உரித்து - அஃது தகுமே யாகும். இவ்விரண்டில் ஒன்றை அடைவது எனக்கு நலம் அன்றோ,

முடிபு : தோழி! பழிஎனில் சாதலும் இனிது, மார்பு தாயம் ஆகலும் உரித்தே எனமுடிக்க.

கருத்து : தலைவனை விரும்புதல் பழிஎனில் சாதலே இனியது, சாதல் கூடாதாயின் மார்பை அடைதல் இனியது; இவ் இரண்டில் ஒன்றை அடைவதே எனக்கு நலம் என்று தலைவி எதிர் அழிந்து கூறினாள்.

வி-ரை : உலகத்தார் கூறுவதுபோல் தலைவன்பால் உறுதி இல்லை, எனவே இறத்தலே தக்கது என்று முதலில் எண்ணி யவள், இறத்தலாற் பயன் இன்றென உணர்ந்து ஒருகால் அவன் மார்பு உரிமையாக்கினும் அமையும் என்றாள்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

இறைச்சி : அடைந்தாரை ஒருவிய தலைவனது சோலையா யிருந்தும் புன்னை அரும்பு மலர்கின்றதே என்ன ஆச்சரியம் எனப் பொருட்புறத்தே நயம் தோன்றியது.

ஒப்புமைப்பகுதி

2. தலைவி துயிலாமை
"முனிபடர் உழந்த பாடுஇல் உண்கண்" (குறுந். 357:1)
"ஓர்யான் மன்ற துஞ்சா தேனே" (குறுந். 6:4)

7-9. நாடன் மார்பு தலைவிக்கு உரியது
"ஆர்துயில் இயம்பு நாடன்
மார்புரித்தாகிய மறுவில் நட்பே" (குறுந். 247:6-7)

# 328. குறிஞ்சி

## தோழி கூற்று

கிழங்குகீழ் வீழ்ந்து தேன்மேல் தூங்கிச்
சிற்சில வித்திப் பற்பல விளைந்து
தினைகிளி கடியும் பெருங்கல் நாடன்
பிறப்புஓர் அன்மை அறிந்தனம் அதனால்
5 அதுஇனி வாழி தோழி ஒருநாள்
சிறுபல் கருவித்து ஆகி வலன்ஏர்பு
பெரும்பெயல் தலைக புனனே இனியே
எண்பிழி நெய்யொடு வெண்கிழி வேண்டாது
சாந்துதலைக் கொண்ட ஓங்குபெரும் சாரல்
10 விலங்குமலை அடுக்கத் தானும்
கலம்பெறு விறலி ஆடும் இவ் ஊரே.

எ-து: தோழி வரைவிடை ஆற்றாளாகிய தலைவியை வற்புறுத்தது.

தொல்கபிலர்

ப-ரை: தோழி - தோழீ!, கிழங்கு - கிழங்குகள், வீழ்ந்து - கீழே இறங்கி, தேன் - தேன் அடைகள், மேல் தூங்கி - மிகுதியாக மேலே வைக்கப்பட்டு,சிற்சில வித்தி - மிகச் சிலவாய தினைகளை விதைத்து, பற்பல விளைந்து - அவை மிகப்பலவாக விளைதலும், தினை -விளைந்ததினைப் பயிரைக் கிளிகள் கொய்யாதவண்ணம், கிளிகடியும் - கிளிகளை மகளிர் ஓட்டும், பெருங்கல் நாடன் - பெரிய மலைநாடனுடைய, பிறப்பு - பிறப்பானது, ஓர் அன்மை அறிந்தனம் - நம்முடன் ஒரு தன்மையல்லாமையை நன்கு

அறிந்தோம்; அதனால், அது - அவனின் உயர்த்த பிறப்பு, இனி - இனி என்றும், வாழி - வாழ்வதாகுக. (அவன் உயர் பிறப்பினன் ஆகையால் சொன்ன சொல் பிறழான் அன்றோ?) முதல் மழை பெய்தவுடன் வருவேன் என்றவன் வழுவாது வருவன், இனி - இப்பொழுது, எண் பிழி நெய்யொடு - எள்ளைப் பிழிந்து எடுக்கும் எண்ணெயையும், வெண்கிழி - வெள்ளிய ஆடையையும், வேண்டாது - விரும்பிப் பெறாது, சாந்து தலைக்கொண்ட - சந்தன மரங்களை நிறையப் பெற்ற, ஓங்கு பெரும் சாரல் - உயர்ந்த பெரிய மலைச்சாரலிலே, விலங்கு மலை அடுக்கத் தானும் - குறுக்கிட்ட மலையின் புறத்து இருக்கும் பக்கமலை யிடத்து, கலம்பெறும் - நல்ல அணிகலன்களைப் பெற்ற, விறலி - விறல்படப் பாடியாடும் திறன்மிக்க விறலி, ஆரும்-கூத்து அயரும், இவ்வூர் - இவ்வூரில் உள்ள, புனன் - நம்முடைய தினைப்புனத் தில், சிறுபல் கருவித்து ஆகி - மேகம் சிறிய பலவாய மின்னல் இடி முதலாகிய தொகுதிகளை உடையவாகி, வலன்ஏர்பு - வலமாக எழுந்து, பெரும் பெயல் - பெருமழையை, ஒருநாள் - ஒருநாள், தலைக - பெய்திடுக; பெய்த அன்றே தலைவன் வருவானாதலின் வருந்தாதே.

முடிபு : தோழி! நாடன் பிறப்பு ஓரன்மை அறிந்தனம்; விறலியாடும் இவ்வூர் பெரும் பெயல் தலைக என முடிக்க.

கருத்து : தலைவன் உயர்குடிப் பிறப்பினன், சொல் தவறான், குறித்த பருவத்து வருவான், கவலற்க.

உள்ளுறை : கிழங்கு கீழ் இறங்க தேனடை மேல் தூங்கியது என்றது தலைவன் நின்பால் வைத்த காதல் கீழாக வேர் ஊன்றி இறங்கி மேலாகக் காணும்போது தேனினும் இனிமையுடைத்தாய் இரா நின்றது என்றவாறாம். சிற்சிலவித்திப் பற்பல விளைந்து என்றது, ஒரோஒருகால் இயற்கைப் புணர்ச்சி யிலே நீ இன்பம் நல்க, அதற்கு ஈடாகப் பற்பல நன்மைகள் நினக்குத் தருவன் என்றபடி. கிளி கடியும் என்றாள், அந்த அன்பு கெடாதவண்ணம் பாதுகாக்கப்படும் என்பதை உணர்த்த. எண்ணெய் கிழி வேண்டாது விறலி ஆடும் என்றது, அவன் பெரும் பண்பைக் கருதி அருங்கலம் முதலியன வேண்டாது நுமர் உன்னைக் கொடுக்க உடன்படுவர் என்றபடி.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - ஆற்றுவித்தல்.

# 329. பாலை

## தோழி கூற்று

வரையா நயவினர் நிரையம் பேணார்
கொன்றுஆற்றுத் துறந்த மாக்களின் அடுபிணன்
இடுமுடை மருங்கில் தொடுமிடம் பெறாஅது
புனிற்றுநிரை கதித்த பொறிய முதுபாறு
5 இறகுபுடைத்து இற்ற பறைப்புன் தூவி
செங்கணைச் செறித்த வன்கண் ஆடவர்
ஆடுகொள் நெஞ்சமொடு அதர்பார்த்து அல்கும்
அத்தம் இறந்தனர் ஆயினும் நத்துறந்து
அல்கலர் வாழி தோழி உதுக்காண்
10 இருவிசும்பு அதிர மின்னிக்
கருவி மாமழை கடல்முகந் தனவே.

எ-து : பிரிவிடை மெலிந்த தலைவியைத் தோழி பருவம் காட்டி வற்புறுத்தது.

மதுரை மருதங்கிழார் மகனார் சொகுத்தனார்

ப-ரை : தோழி - தலைவீ! வாழி - வாழ்வாயாக, வரையா- அள்விட்டு உரைக்க முடியாத, நயவினர் - இனிமையுடையவராய், நிரையம் - நரகத்துன்பம் போன்ற தீய ஒழுக்கங்களை, பேணார் - பெற்றிலாதவராய் இருக்கும் நமது தலைவர், ஆறு - சுரவழியின்கண், கொன்று - கொலை செய்து, துறந்த - போடப் பட்ட, மாக்களின் - மக்களுடைய, அடுபிணம் - கொலையுண்ட பிணங்களிலிருந்து, இடுமுடை மருங்கில் - எழும் முடை நாற்றத் தின் அருகிற் சென்று, தொடும் இடம் பெறாஅது - பறித்துத் தின்ன முடியாமல், புனிற்று நிரை கதித்த - ஈன்ற அணிமையால் நெருங்காது வெறுத்துப் போயிருந்த, பொறிய - புள்ளிகளை உடைய, முதுபாறு - முதிய பருந்து, இறகு புடைத்து இற்ற - தன் சிறகை அடித்துக்கொள்ளுதலால் உதிர்ந்த, பறைப்புன் தூவி - பறத்தலையுடைய, புல்லிய வன்கண் ஆட்வர் - தறுகண்மை மிக்க மறவர்கள், ஆடுகொள் நெஞ்சமொடு - தாம் வெற்றிகொள்ளும் கருத்துடனே, அதரி பார்த்து - வழியைப் பார்த்து, அல்கும் - தங்கியிருக்கும், அத்தம் - கொடிய வழியில், இறந்தனர் ஆயினும் - சென்றார் என்றாலும், நம் துறந்து - நம்மை மறந்து, அல்கலர் - அங்கேயே தங்குவார் அல்லர். (கார்காலத்து வருவேன்

என்றாராகலின்,) உதுக்காண் - அதோ பாராய், இருவிசும்பு - கரிய மேகங்கள், அதிர - அதிரும்படி, மின்னி - மின்னி இடித்து, கருவி மாமழை - இடி, மின்னல் முதலாய தொகுதியை உடைய கரியமேகம், கடல் முகந்தன - கடல்நீரை முகந்து பெய்வான் வேண்டி வந்தன. கார் வந்துற்றது. இப்பொழுதே வருவார்.

முடிபு : தோழி! பேணார் நத்துறந்து அல்கலர், மாமழை உதுக்காண் என முடிக்க.

கருத்து : வருவேன் என்று குறித்த பருவம் வந்துவிட்டது. தலைவர் அவண் உறையார், இப்பொழுதே வருவர்.

வி-ரை : பொய்ச்சூள் உரைத்து நரகம் புகும் தீயவர் அல்லர் நம் தலைவர் என்பாள் "வரையா நாவினர் நிரையம் பேணார்" என்றாள்.

இறைச்சி - ஈன்ற பருந்து பிணத்தின் நாற்ற மிகுதியால் அதன் அருகில் நெருங்கித் தின்ன மாட்டாது அகன்று போய் இருக்கும் என்றது, நினது நெற்றியிலே தோன்றும் பசலை, அவர் வைத்திருக்கும் அன்பு மிகுதியால் குறித்தநாள் வருதல் தவறாது எனவே அது கண்டு தானே அகலும் என்றபடி. அம்பு ஏந்திய ஆறலை கள்வர் வெல்லும் நெஞ்சத்துடன் வழி நோக்கித் தங்கி இருப்பர் என்றது, கொடிய உள்ளம் படைத்த அயல் மாதர் பலரும் நின்னை அலர் தூற்றும் கருத்தோடு சமயம் பார்த்து இருப்பவராதலின் நின் மெய்யின் வேறுபாடறிந்தால் இகழ்ந்து பழி தூற்றுவர் என்றதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

8. நத்துறந்து

"அத்தம் அரிய என்னார் நத்துறந்து" (குறுந். *174:4, 288:4*)
(அகநா. *85:3, 183:3, 185:3, 223:1, 298:20, 317:21*)

11. கருவிமா மழை

"கருவி மாமழை வீழ்ந்தென அருவி"
(குறுந். *42:2, 94:7, 197:2, 205:1*)
(பெரும்பாண். *24*) (அகநா. *4:6*) (புறநா. *159:19, 204:13*)

# 330. மருதம்

## தோழி கூற்று

தடமருப்பு எருமைப் பிறழ்சுவல் இரும்போத்து
மடநடை நாரைப் பல்இனம் இரிய
நெடுநீர்த் தண்கயம் துடுமெனப் பாய்ந்து
நாட்தொழில் வருத்தம் வீடச் சேண்சினை
5 இருள்புனை மருதின் இன்நிழல் வதியும்
யாணர் ஊரநின் மாண்இழை மகளிரை
எம்மனைத் தந்துநீ தழீஇயினும் அவர்தம்
புன்மனத்து உண்மையோ அரிதே அவரும்
பைந்தொடி மகளிரொடு சிறுவர்ப் பயந்து
10 நன்றி சான்ற கற்போடு
எம்பாடு ஆதல் அதனினும் அரிதே.

எ-து : தோழி தலைவனை வாயில் மறுத்தது.

ஆலங்குடி வங்கனார்

ப-ரை : தடமருப்பு - வளைந்த கொம்பையும், பிறழ்சுவல் - வலிமை பொருந்திய பிடரியையும் உடைய, எருமை இரும் போத்து - கருமை நிறம் வாய்ந்த எருமைக்கடா, மடநடை - இளநடையை உடைய, நாரைப்பல் இனம் - பலவாகிய நாரையின் கூட்டம் அனைத்தும், இரிய - அஞ்சி ஓட, நெடுநீர் - நிறைந்த நீரை உடைய, தண்கயத்து - குளிர்ந்த தடாகத்தில், துடுமென - துடும் என்னும் ஓசையுண்டாகும்படி, நாட் தொழில் - காலையில் தான் உழுத, வருத்தம் - துன்பம், வீட - நீங்குமாறு, பாய்ந்து - பாய்ந்து விழுந்த பின்பு, சேண் - நீண்ட, சினை - கிளைகளை உடைய, இருள்புனை-இருள் நிரம்பிய, மருதின் - மருத மரத்தின். இன்நிழல் - இனிய நிழலில், வதியும் - தங்கிப் படுத்து உறங்கும், யாணர் - புது வருவாயை உடைய, ஊர - ஊரனே! நின் - உன்னுடைய, மாண் இழை மகளிரை - பெருமை வாய்ந்த கலன்கள் தரித்த பரத்தையரை, எம் மனை தந்து - எமது மனையின்கண் அழைத்து வந்து, நீ தழீஇயினும் - குலமகளிரைப்போல் எண்ணி நீ அவர்களைத் தழுவினாலும், அவர்தம் - அப் பரத்தையரின், புன்மனத்து - இழிந்த உள்ளத்தில், உண்மையோ - உள் அன்பைக் காண்பது என்பது, அரிது- அரியதேயாம்; அவரும்- அப் பரத்தையரும், பைந்தொடி மகளிரொடு - பசிய வளையல்களை

அணிந்த புதல்வியரையும், சிறுவர் - புதல்வர்களையும், பயந்து - எம்மைப்போல் உரிமையுடன் பெற்று, நன்றி சான்ற - நன்மை அமைந்த, கற்போடு - கற்பு என்னும் செல்வத்தோடு, எம்பாடு ஆதல் - எம் அருகில் அமர்ந்து இருத்தலும், அதனினும் அரிது - அதைக் காட்டிலும் அரியது ஒன்றாகும். இந்த உண்மையை நீ அறியாய் போலும்.

முடிபு : யாணர் ஊர! மகளிரைத் தழீஇயினும் உண்மையோ அரிது; அவரும் எம்பாடு ஆதல் அதனினும் அரிது என முடிக்க.

கருத்து : பிள்ளைகளைப் பெற்று மெய்யன்பு காட்டி இல்லறம் நடத்தும் தலைவிபோல் பொய்யன்பு காட்டும் பரத்தையர் ஆகா என்றவாறு.

வி-ரை : பரத்தையரை வீட்டிற்கே அழைத்து வந்து வதுவை அயர்ந்து இன்பம் துய்த்தலும் உண்டென்பது இப்பாடலால் தெரிய வருகின்றது.

"பிறரும் ஒருத்தியை எம் மனைத் தந்து

வதுவை அயர்ந்தனை" (அகம்-46) என்றார் பிறரும். பரத்தையர் பொருட் பெண்டிராகையால் அன்புடைப் பெண்டிர் ஆகார் என்க. அவர் பெறும் பிள்ளைகள் குலத்திற்குப் பயன் படார் என்றபடி.

உள்ளுறை : எருமைக்கடா தலைவனாகவும், நாரைகள் காமக்கிழத்தியராகவும், தடாகம் பரத்தையர் சேரியாகவும், மருதநிழல் புதிய பரத்தையின் மனையாகவும் உவமம் கொள்க. கொள்ளவே, எருமைக்கடா நாரைகள் அஞ்சி ஓட தடாகத்திலே பாய்ந்து வருத்தம் அகன்றபின், தன் தொழுவம் மீளாது, மருத நிழலில் இருத்தல் போல, தலைவன் முதற்கண் காமக்கிழத்தியரிடம் இன்பம் துய்த்து, பின்னர் அவர் பயந்து அகல, பரத்தையர் சேரிக்கண் தங்கி, ஆங்கு அவரைத் தழுவி இன்பம் துய்த்து, அதன் பின்பும் மனைபுகாது, புதிய பரத்தையின்பால் தங்கியிருந்தனன் என்னும் கருத்தை இவண் காண்க.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - வாயின் மறுத்தல்.

# 331. நெய்தல்

## தோழி கூற்று

உவர்விளை உப்பின் உழாஅ உழவர்
ஒகை உமணர் வருபதம் நோக்கிக்
கானல் இட்ட காவற் குப்பைப்
புலவுமீன் உணங்கல் படுபுள் ஓப்பி
5 மடநோக்கு ஆயமொடு உடன்உப்பு ஏறி,
எந்தை திமில்இது நுந்தை திமில்என
வளைநீர் வேட்டம் போகிய கிளைஞர்
திண்திமில் எண்ணும் தண்கடற் சேர்ப்ப
இனிதே தெய்யஎம் முனிவில் நல்லூர்
10 இனிவரில் தவறும் இல்லை எனையதூஉம்
பிறர்பிறர் அறிதல் யாவது
தமர்தமர் அறியாச் சேரியும் உடைத்தே.

எ-து : தோழி இரவுக்குறி நேர்ந்தது.

**உலோச்சனார்**

ப-ரை : புலவு - புலால் நாற்றம் நாறும், மீன் - மீனை, உணங்கல் - உப்புப்படுத்து உலர்த்துங்கால், படுபுள் - அவற்றைத் தின்ன வரும் காக்கை முதலியவற்றை, ஓப்பி - ஓட்டி, மட நோக்கு - மடப்பம் வாய்ந்த பார்வையை உடைய, ஆயமொடு - தோழிமாருடன், உழாஉ உழவர் - உழாது விளைவிக்கும் தொழிலைக்கொண்ட நெய்தல்நில மக்களாகிய பரதவர், உவர் விளை உப்பின் - உவர் நிலத்து விளைகின்ற உப்பினை, ஒகை உமணர் - உவகையுடன் வண்டியில் ஏற்றி வருகின்ற உப்பு வாணிகரின், வருபதம் நோக்கி - வருகின்ற காலம் பார்த்து, கானல் - கழிக்கரைச் சோலைப் பக்கம், இட்ட - குவடாகக் குவித்த, காவல் குப்பை - காவலையுடைய குவியலாகிய அவ்வுப்புக் குவட்டில், உடன் உப்பு ஏறி - பரதவ மகளிர் ஏறி நின்று, இது எந்தை திமில் - இதோ வருகின்றது எம் தந்தையின் மீன்பிடி படகாகும்; நுந்தை திமில் - அதோ தெரிகின்றது நும் தந்தையின் படகாகும், என - என்று, வளைநீர் - கடல் மேல், வேட்டம் போகிய - மீன் வேட்டைக்குச் சென்ற, கிளைஞர் - சுற்றத்தாருடைய, திண்திமில் - வலிய படகுகளை, எண்ணும் -

எண்ணிப் பார்க்கும், தண்கடல் சேர்ப்ப - குளிர்ந்த கடலுக்குரிய சேர்ப்பனே, எம் முனிவுஇல் நல்ஊர் - வெறுத்தலைக் கருதாத எம்முடைய நல்ல ஊர், இனிது - மிக இனிமையை உடையது; இனி - இப்பொழுது முதலாக எப்பொழுதும், வரில் - நீ வந்து செல்வதில், தவறும் இல்லை - தவறொன்றும் இல்லை, தமர் தமர் அறியா - சுற்றத்தார் ஒருவர் ஒருவரை அறியாத, சேரியும் உடைத்து -சேரியை உடையது. ஆதலால், எனையதூஉம் - சிறிய அளவேனும், பிறர் பிறர் அறிதல் யாவது - அயலவர் ஒருவர் ஒருவரை எவ்வாறு அறிதல் இயலும்? ஆதலின் இரவில் நீ வந்து செல்வதில் தடையில்லை காண்.

முடிபு : சேர்ப்ப! நல்லூர் இனிது, தவறும் இல்லை, சேரியும் உடைத்து, அறிதல் யாவது? என முடிக்க.

கருத்து : இரவுக்குறி வேண்டி நின்ற தலைவனை நோக்கி, எம் ஊர் இனியது, ஒருவர் ஒருவரை அறியார், எனவே நீ வந்து செல்வதில் தடையில்லை என்று தோழி உடன்பட்டுக் கூறினாள்.

வி-ரை : நும்மூர் போன்றே எம்மூர் இனிது எனக் கூறி வைத்தாள் அவன் உவகை பெறுவான் வேண்டி. எமர் ஐயுறார், எனவே குறிபிடம் வழுவாது வருவேன் என்பாள் தவறும் இல்லை என்றாள். நீ ஒப்பனை செய்துவரினும் எமர் அறியார் என்பாள், தமர்தமர் அறியாச் சேரி என்றாள்.

பி.ம்.12. 'தமர் தம் அறியா'

உள்ளுறை : பரதவமகளிர் புட்களை ஓட்டி மாலையில் உப்புக் குவியலின் மேலேறிக் கடலிலே வருகின்ற மீன்பிடி படகுகளை நோக்கி 'இஃது எந்தையின் படகு', 'அஃது நுந்தையின் படகு' என எண்ணும் துறை என்றது, பறவைகளை நாங்கள் பகல் எல்லாம் மீன் உணங்கலிற் ஓட்டி, இரவில் வீடு சென்ற சோலையில் நீ செய்யும் குறியினை நினைந்து இவ்வோசை பறவை ஓசை, இவ்வோசை வேற்றோசை இவ்வோசை நின் வரவோசை என நின் வரவை எதிர்பார்த்திருப்போம் என்றவாறு.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - இரவுக்குறி நேர்தல்.

ஒப்புமைப்பகுதி

6-8. மீன் வேட்டம் புக்கார் திமிலில் வருதல்

"இன்னும் வாரார் வரூஉம்
பன்மீன் வேட்டத்து என்ஐயர் திமிலே" (குறுந். 123:4-5)
(அகநா. 190:2-3)

# 332. குறிஞ்சி

## தலைவி கூற்று

இகுளைத் தோழிஇஃது என்னெனப் படுமோ
குவளை குறுநர் நீர்வேட் டாங்கு
நாளும் நாள்உடன் கவவவும் தோளே
தொன்னிலை வழீஇயநின் தொடிஎனப் பல்மாண்
5 உரைத்தல் ஆன்றிசின் நீயே விடர்முகை
ஈன்பிணவு ஒடுக்கிய இருங்கோள் வயப்புலி
இரைநசைஇப் பரிக்கும் மலைமுதல் சிறுநெறி
தலைநாள் அன்ன பேணலன் பலநாள்
ஆர்இருள் வருதல் காண்பேற்கு
10 யாங்கு ஆகும்மே இலங்கிழை செறிப்பே.

எ-து : பிரிவிடை மெலிந்த தலைவியைத் தோழி களவுக் காலத்து வற்புறுப்ப, தலைவி கூறியது. வன்புறை எதிர் மறுத்ததூஉம் ஆம்.

## குன்றூர் கிழார் மகன் கண்ணத்தனார்

ப-ரை : இகுளைத் தோழி - இகுளையாகிய தோழியே! குவளை குறுநர் - நீரில் இறங்கி நின்று குவளை மலர்களைப் பறிப்போர், நீர் வேட்டாங்கு - தாம் நீருண்ணும் வேட்கையால் துன்புற்றாற் போல், தோள் - உன்னுடைய தோள்கள், நாளும் நாள் உடன் - நாள்தோறும் இடைவிடாது, கவவவும் - காதல னுடைய தோள்களை முயங்கிய வழியும், நின்தொடி - நின் வளையல்கள், தொல்நிலை வழீஇய என - முன்பு செறிந்திருந்த இடத்திலிருந்து கழலுகின்றன. என்று, பல்மாண் உரைத்தல் ஆன்றிசின் - பலமுறை மாட்சிமைப்பட்ட நீதான் உரைக் கின்றனை, விடர்முகை - துறுகல்லை அடுத்த மலை வெடிப்பில், ஈன் பிணவு - குட்டிகளை ஈன்ற பெண் புலியின் பசியைப் போக்க, இருங்கோள் வயப் புலி - பெரிய கொலைத் தொழிலை மேற் கொண்ட வலிமையையுடைய ஆண் புலி, இரை நசைஇ - இரை மேல் எழுந்த விருப்பத்தால், ஒடுக்கிய பரிக்கும் - ஒடுங்கிப் பதுங்கி இருக்கின்ற, மலை முதல் சிறுநெறி - மலை அடிவாரத்திலுள்ள சிறிய வழியிலே, தலை நாள் அன்ன - இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த காலத்து இருந்தாற்போன்ற, பேணலன் - ஆர்வமுடைய வனாய், பலநாள் - பலநாளும், ஆர் இருள் வருதல் - எவரும்

இயங்குதற்கு அரிய இருளில் வருதலை, காண்பேற்கு - காண்கின்ற எனக்கு, இவங்கு இழை - என் வளை முதலாய கலன்கள் கழலா தவாறு, செறிப்ப - செறிப்பது, யாங்கு ஆகும் - எவ்வாறு முடியும்? இஃது என் எனப்படும் - இவ்வாறு என் உடம்பு இளைத்தல் எதில் போய் முடியுமோ? அறியேன்.

முடிபு : தோழீ! நாளுடன் கவவவும் நின்றொடி வழீஇப, உரைத்தலான்றிசின், என்கின்றவை? வருதல் காண்பேற்கு இழை செறிப்பு யாங்காகும்? இஃது என் எனப்படும், என முடிக்க.

கருத்து : புலி பதுங்கி இரை தேடும் கொடிய வழியில் ஆர் இருளில் தலைவன் வருகின்றமை காரணமாக யான் துயரப்படு கின்றேன் என்று தோழியிடம் தலைவி வன்புறை எதிர் அழிந்தாள்.

வி-ரை : பேணலன் - விரும்புதலுடையவன். இகுளைத் தோழி - இரு பெயரொட்டுப் பண்பு.

இறைச்சி : பெண் புலியின் பசியைப் போக்க வேண்டி ஆண் புலி இரை தேடிப் பதுங்கியிருக்கும் நெறியைக் கண்டு வைத்தும், என் கவலை நீங்கும்வண்ணம் தலைவன் பொருள் ஈட்டி வந்து மணம் முடிக்கக் கருதுகின்றிலனே என்று இரங்கினாள்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

8. தலைநாளன்ன

"தலை நாட்போன்ற விருப்பினன் மாதோ"
(புறநா. 101:3, 58:28)

"பெருவரை அடுக்கத்துக் கிழவன் என்றும்
அன்றை அன்ன நட்பினன்" (குறுந். 385)

"தண்டாக் காதலும் தலைநாட் போன்மே" (அகநா. 332)

"அன்றை அன்ன விருப்பொடு" (குறிஞ்சி. 238)

"தலைநாள் அன்ன புகலொடு வழிசிறந்து
பலநாள் நிற்பினும்" (மலைபடு. 565-6)

"பன்னாளும் சென்றக்கால் பண்பிலார் தம்முழை
என்னானும் வேண்டுப என்றிகழ்ப - என்னானும்
வேண்டினும்நன்று மற்றென்று விழுமியோர்
சான்டொறும் செய்வர் சிறப்பு" (நாலடி. 159)

"தலைநாள் விழைவொடு" (வி-பா-குருகுல. 79)

1. என்னெனப் படுங்கொல் தோழி
"என்னெனப் படுங்கொல் தோழி மின்னுப்" (குறுந். 194:1)
(அகநா. 206:1)

2. குறுநர் நீர் வேட்டல்
"ஆம்பல் குறுநர் நீர் வேட்டாங்கு இவள்" (குறுந். 178:3)

# 333. பாலை

## தோழி கூற்று

மழைதொழில் உலந்து மாவிசும்பு உகந்தென
கழைகவின் அழிந்த கல்அதர்ச் சிறுநெறிப்
பரல்அவல் ஊறல் சிறுநீர் மருங்கின்
பூநுதல் யானையொடு புலிபொருது உண்ணும்
5 சுரன்இறந்து அரிய என்னார் உரன்அழிந்து
உள்மலி நெஞ்சமொடு வண்மை வேண்டி
அரும்பொருட்கு அகன்ற காதலர் முயக்கெதிர்ந்து
திருந்துஇழைப் பணைத்தோள் பெறுநர் போலும்
நீங்குக மாதோநின் அவலம் ஓங்குமிசை
10 உயர்புகழ் நல்இல் ஒண்சுவர்ப் பொருந்தி
நயவரு குரல பல்லி
நள்என் யாமத்து உள்ளுதொறும் படுமே.

எ-து : பொருள்வயிற் பிரிவின்கண் ஆற்றாளாகிய தலைவியைத் தோழி வற்புறுத்தது.

### கள்ளிக்குடி பூதம் புல்லனார்

ப-ரை : தோழி - தலைவீ! ஓங்குமிசை - உயர்ந்த இடத்தில், உயர் புகழ் - உயர்ந்த புகழை உடைய, நல்இல் - நல்ல வீட்டின் கண்ணே, நள் என் யாமத்து - 'நள்' என்னும் ஓசையை உடைய நடுநிசியில், உள்ளுதொறும் - நாம் நமது தலைவனை நினைக்குந் தோறும், நயவரு குரலபல்லி - இனிமையான குரலையுடைய பல்லி, ஒண்சுவர்ப் பொருந்தி - ஒள்ளிய சுவரிலே பொருந்தி நின்று, படும் - நல்லனவற்றையே கூறுகின்றது. ஆகையால், மழை - மேகந்தான், தொழில் உலந்து - பெய்தலைத் தவிர்ந்து, மா விசும்பு - பெரிய ஆகாயத்திலே, உகந்தென - உயரே

சென்றொழிந்ததனால், கழைகவின் அழிந்த - வெப்பத்தால் மூங்கில்கள் எல்லாம் வாடி அழகு அழிந்த, கல் அதர்ச் சிறுநெறி - மலைவழியின் சிறுநெறியிலே, பரல் அவல் - பருக்கைக் கற்கள் நிரம்பிய பள்ளத்தில், ஊறல் - ஊறி வருகின்ற, சிறுநீர் மருங்கில் - மிகவும் குறைவுபட்ட சிறிய நீரிடத்தில், பூ நுதல் யானையொடு - பொலிவு பெற்ற நெறியை உடைய யானையொடு, புலி பொருது உண்ணும் - புலி போர் செய்து அந் நீரை உண்ணுகின்ற, சுரன் - சுரநெறியில், இறந்து - சென்று, அரிய - பொருள் தேடுதல் அரிது, என - என்று, எண்ணார் - நினையாராய், உரன் அழிந்து - உறுதி தளர்ந்து, உள்மலி நெஞ்சமொடு - உள்ளே மகிழ்ச்சியுற்ற நெஞ்சோடு, வண்மை வேண்டி - தாம் கொடைத்தன்மையுடைய ராக இருத்தலை விரும்பி, அரும்பொருட்கு - பெறுதற்கு அரிய பொருளை ஈட்டுதற்கு, அகன்ற - பிரிந்து சென்ற, காதலர் - தலைவர், முயக்கு எதிர்ந்து - நின்னை முயங்குவதை எதிர் நோக்கி, திருந்து - திருந்திய, இழை - அணிகலன்களை உடைய, பணை - பருத்த, தோள் - உன் தோள்களை, பெறுநர் - இன்று வந்து கூடுவார் போலும், நின் - உன்னுடைய, அவலம் - துயரம், நீங்குக - இன்று நீங்குவதாக.

முடிபு : தலைவீ! யாமத்து உள்ளுதொறும் பல்லி படும், அகன்ற காதலர் தோள் பெறுநர் போலும், நின் அவலம் நீங்குக என முடிக்க.

கருத்து : நம் தலைவரை நாம் நினைக்கும்போது எல்லாம் பல்லி சொல்லுகின்றது. நிமித்தம் நன்றாயுள்ளது. தலைவர் வருவார். துயரும் நீங்குக என்றவாறு.

இறைச்சி : பள்ளத்தில் உள்ள தண்ணீரை யானையொடு போர் செய்து புலி பருகும் என்றது, வேற்றரசரை வென்று பொருள்கொண்டு வந்து நின்னைத் தலைவர் மணக்க வருவார் என்றதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

3. பரலிலுள்ள நீர்

"வன்பரற் றெள்ளறல் பருகிய இரலை தன்"

(குறுந் 65:1, 250:1) (அகநா. 4:4) (மலைபடு. 198)

12. நள்ளென் யாமம்
"கையற நரலும் நள்ளென் யாமத்து" (குறுந். 160:4, 6:1)
(நெடுநல். 186) (ஐங். 324:3)
(அகநா. 103-12, 129:2, 142:20, 170:12, 279:6)

# 334. குறிஞ்சி

## தோழி கூற்று

கருவிரல் மந்திச் செம்முகப் பெருங்கிளை
பெருவரை அடுக்கத்து அருவி ஆடி
ஓங்குகழை ஊசல் தூங்கி வேங்கை
வெற்புஅணி நறுவீ கற்சுனை உறைப்பக்
5 கலையொடு திளைக்கும் வரையக நாடன்
மாரி நின்ற ஆர்இருள் நடுநாள்
அருவி அடுக்கத்து ஒருவேல் ஏந்தி
மின்னு வசிவிளக்கத்து வரும்எனின்
என்னோ தோழிநம் இன்னுயிர் நிலையே.

எ-து : தோழி இரவுக்குறி முகம் புக்கது.

ஐயூர் முடவனார்

ப-ரை : தோழி - தலைவீ! கருவிரல் - கரிய விரலையும், செம்முகம் - சிவந்த முகத்தையும் உடைய, மந்தி - பெண் குரங்கு, பெருங்கிளை - தன் பெரிய சுற்றத்துடன், பெருவரை அடுக்கத்து - பெரிய மலைப்பக்கத்து, அருவி - அருவியில், ஆடி - விளையாடி, ஓங்கு - உயர்ந்த, கழை - மூங்கிலின் நுனியில் ஏறி, ஊசல் தூங்கி - ஊசல் போன்று அங்கும் இங்கும் அசைத்து விளையாடி, வெற்பு - மலையில், வேங்கை - வேங்கையின், அணி நறுவீ - அழகிய நறிய மலர்கள், கல் சுனை உறைப்ப - அங்குள்ள சுனையிலே உதிர்ந்து விழும்படி அதன் கிளையில் ஏறி, கலையொடு திளைக்கும் - கடுவனோடு புணரா நிற்கும், வரையக நாடன் - மலை நாட்டிற்குரிய தலைவன், மாரி நின்ற - மழை பெய்து ஒழிந்த, ஆர் இருள் நடுநாள் - அவரும் இயங்குதற்கு அரிய நடுநிசியில், அருவி அடுக்கத்து - அருவியை உடைய மலைப்பக்கத் தின் வழியில், ஒரு வேல் ஏந்தி - ஒப்பற்ற வேற்படையை ஏந்தி, மின்னு வசி விளக்கத்து - மின்னலானது இருளைப் பிளக்க அந்த

மின்னல் ஒளியில், வரும் எனில் - வரக் கருதினான் என்றால், நம் - நம்முடைய, இன் உயிர் நிலை - இனிய உயிரின் நிலை, என்னோ - அவன் வரும் வழியை நினைந்து என் ஆகுமோ.

முடிபு : தோழி! நாடன் ஆர் இருள் நடுநாள் வரும் எனின், இன்னுயிர் நிலை என்னாம்? எனமுடிக்க.

உள்ளுறை : மந்தி அருவி ஆடி ஊசலிலே தூங்கி நறுமலர் சுனையில் உதிரும்படி மரத்திலேறிக் கலையோடு புணரும் என்றது, நீயும் பகலிலே அருவியாடி ஊசலில் தூங்கி இரவில் நின் காம வேட்கை முற்றுமொழியத் தலைவனோடு முயங்குவாயாக என்பதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - சைகை செய்து உடன்படுத்தல்.

# 335. நெய்தல்

### தலைவி கூற்று

திங்களும் திகழ்வான் ஏர்தரும் இளநீர்ப்
பொங்குதிரைப் புணரியும் பாடு ஓவாதே
ஒலிசிறந்து ஓதமும் பெயரும் மலிபுனல்
பல்பூங் கானல் முள்இலைத் தாழை
5 சோறுசொரி குடவயின் கூம்புமுகை அவிழ
வளிபரந்து ஊட்டும் விளிவில் நாற்றமொடு
மைஇரும் பனைமிசைப் பைதல உயவும்
அன்றிலும் என்புறம் நரலும் அன்றி
விரல்கவர்ந்து உழந்த கவர்வின் நல்யாழ்
10 யாமம் உய்யாமை நின்றது
காமம் பெரிதே களைஞரோ இலரே.

எ-து : காமம் மிக்க கழிபடர் கிளவி மீதூர்ந்து தலைவி சொல்லியது.

### வெள்ளி வீதியார்

ப-ரை : திங்களும் - சந்திரனும், திகழ்வான் - விளங்கும் விசும்பின் கண்ணே, ஏர்தரும் - எழுந்து தோன்றும், இளநீர் -

மெல்லிய நீர்மையில், பொங்கு - பொங்கி வருகின்ற, திரை - அலைகளை உடைய, புணரியும் - கடலும், பாடு - ஒலி செய்வதில், ஓவாது - அடங்காது, ஒலி சிறந்து - ஓசை மிகுந்து, ஓதமும் - அலைகளும், பெயரும் - கரையில் மோதித் திரும்பும், மலிபுனல் - நிறைந்த கழிநீரால் சூழப்பெற்ற, பல்பூங்கானல் - பலவாய அழகிய கடற்கரைச் சோலையின் கண்ணுள்ள, முள் இலைத் தாழை - முள் நிறைந்த இலையையுடைய தாழையின், சோறு - சோற்றை, சொரி - சொரிகின்ற, குடவயின் - குடம் போல் பருத்த, கூம்புமுகை அவிழ - உள்ளீட்டினையுடைய கூம்பிய அரும்புகள் மலரா நிற்ப, வளி பரந்து ஊட்டும் - காற்றானது அப் பூ மடலினுள்ளே புகுந்து பரவி வந்து ஒலிக்கும்; இவற்றுடன், விளிவுஇல் நாற்றமொடு - கெடாத நறுமணத்துடன், மை - கரிய, இரும் - பெரிய, பனைமிசை - பனை மரத்தின் மேலிருந்து, பைதல - வருத்தத்துடன், உயவும் - துன்புறும், அன்றில் - அன்றிலும், என்புறம் - என் அருகில் வந்து, நரலும் - ஒலிக்கும்; அன்றி - அவைவல்லாமல், விரல் கவர்ந்து உழந்த - விரலாலே தடவி வருந்தி எழும், கவர்வுஇல் நல் யாழ் - இசை கூட்டிய விருப்பத்தைச் செய்யும் நல்ல யாழும், யாமம் - நள்ளிரவில், உய்யாமை - யான்உயிர் வாழாவண்ணம், நின்றது - இசைக்கின்றது: காமமோ பெரிது - எல்லாவற்றைக் காட்டிலும் யான் பெற்ற வேட்கையோ பெரியது; களைஞரோ - இவ் வேட்கையை போக்கும் காதலரோ, இலர் - என் அருகில் இராது அகன்று போயினர்: இனி யான் எவ்வாறு பிழைப்பேன்?

முடிபு: ஏர்தரும், ஓவாது, பெயரும், நரலும், நின்றது, பெரிது, இலர் எனமுடிக்க.

கருத்து: காமம் மிக்க தலைவி, திங்கள், கடல், அன்றில், யாழிசை இவற்றால் என் காமம் பெருகுகின்றது; இதனைப் போக்கும் காதலரைக் காணேன்; என் உயிர் ஒழியுமோ என்று ஏங்கியது.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

7.8. அன்றில் யாமத்து நரலுதல்

"நெருப்பின் அன்ன செந்தலை அன்றில்
.........................
கையற நரலும் நள்ளென் யாமத்து" (குறுந். 160:1-4)
(தொல். களவு.16, ந. மேற்.

11. காமம் பெரிது
"உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே" (குறுந். 18:5)
"வான்றோய்வு அற்றே காமம்" (குறுந். 102:3)
"மருவேன் தோழியது காமமோ பெரிதே" (குறுந். 371:4)

## 336. குறிஞ்சி

### தோழி கூற்று

பிணர்ச்சுவல் பன்றி தோல்முலைப் பிணவொடு
கணைக்கால் ஏனல் கைம்மிகக் கவர்தலில்
கல்அதர் அரும்புழை அல்கிக் கானவன்
வில்லில் தந்த வெண்கோட்டு ஏற்றைப்
5 புனைஇருங் கதுப்பின் மனையோள் கெண்டிக்
குடிமுறை பகுக்கும் நெடுமலை நாட
உரவுச்சின வேழம் உறுபுலி பார்க்கும்
இரவின் அஞ்சாய் அஞ்சுவல் அரவின்
ஈர்அளைப் புற்றம் கார்என முற்றி
10 இரைதேர் எண்கினம் அகழும்
வரைசேர் சிறுநெறி வாரா தீமே.

எ-து : ஆறு பார்த்துற்றுச் சொல்லியது.

**கபிலர்**

ப-ரை : பிணர் - சருச்சரை வாய்ந்த, சுவல் - பிடரினை யுடைய, பன்றி - ஆண் பன்றி, தோல் முலைப் பிணவொடு - தோலாய் வறண்ட கொங்கையையுடைய பெண் பன்றியுடனே போய், கணைக்கால் - திரண்ட அடித்தண்டுடைய, ஏனல் - தினைக் கதிரை, கைம்மிக - அளவு கடந்து, கவர்தலில் - தின்றழித்தலினால், கானவன் - வேடுவன், கல் அதர் - மலை வழியிலுள்ள, அரும்புழை அல்கி - செல்லுதற்கரிய சிறிய புழை அருகில் பதுங்கி இருந்து, வில்லில்தந்து - வில்லால் எய்து கொன்று தந்த, வெண் கோட்டு ஏற்றை - வெள்ளிய கொம்பை உடைய அவ் ஆண் பன்றியை, புனை இரும் கதுப்பின் - அலங்கரித்த கரிய கூந்தலையுடைய, மனையோள் - அவனுடைய மனைவி, கெண்டி - அதனை வெட்டி, குடிமுறை பகுக்கும் - தன் சுற்றமாகிய குடிகள் இருக்கும் இடந்தோறும் சென்று பகுத்துக் கொடுக்கும், நெடும்லை நாட - நெடிய

மலையை உடைய நாடனே! உரவுச் சின வேழம் - மிக்க வலிமையை உடைய களிற்றி யானை, உறுபுலி பார்க்கும் - அங்கு வருகின்ற புலியின் வருலகையை எதிர்பார்த்து இருக்கும், இரவின் - இரவில், அஞ்சாய் - நீ இங்கு வருதலை அஞ்சு கின்றிலை; அஞ்சுவல் - அதனை நினைக்கையில் யான் அஞ்சுவேன் ஆகையால், அரவின் - பாம்பின், ஈர் அளைப் புற்றம் - வாழ்விட மாகிய ஈரிய புழையை உடைய புற்றை, கார் என முற்றி - மேகம் போலச் சூழ்ந்து கொண்டு, இரை தேர் - தமக்கு இரையினைத் தேடுகின்ற, எண்கு இனம் அகழும் - கரடியின் கூட்டம் குடைந்து எடுக்கும், வரைசேர் - மலையை அடுத்த, சிறு நெறி - சிறிய வழியில், வாராதீம் - இனி வாராது ஒழிவாய்.

முடிபு : நாட! அஞ்சாய், அஞ்சுவல், அகழும் சிறுநெறி வாராதீம் எனமுடிக்க.

கருத்து : வரும் நெறியின் ஏதம் கூறித் தலைவனை வாரற்க என்றாள், அவன் வரைவொடு புகுதல் வேண்டும் என்னும் கருத்தால்.

பி-ம். 3. 'அரும்புழையொல்கி'

வி-ரை : தான் வரும் வழியின் ஏதம் குறித்து அஞ்சி தலைவி இறந்துபடினும் படும், எனவே வரைதற்குரிய முயற்சியில் தலைவன் ஈடுபடுவான் என்க.

உள்ளுறை : தினையைத் தின்ற பன்றியைக் கானவன் கொடுப்ப அவன் மனைவி அதனை வாங்கி வெட்டிப் பகுத்துச் சுற்றத்தார்கள் பலர்க்கும் முறைப்படி கொடுக்கும் என்றது, நீ இவளை மணம் செய்து கொண்டு இல்லறம் நிகழ்த்தத் தொடங்கி வேற்று நாட்டுச் சென்று அடங்காத பகைவரை வென்று பொருள் ஈட்டி இவளிடம் தந்து இவளும் சுற்றத்தார்க்குக் கொடுக்குமாறு செய்வாயாக என்பதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

# 337. பாலை

## தோழி கூற்று

உலகம் படைத்த காலைத் தலைவ
மறந்தனர் கொல்லோ சிறந்திசி னோரே
முதிரா வேனில் எதிரிய அதிரல்
பராரைப் பாதிரிக் குறுமயிர் மாமலர்
5 நறுமோ ரோடமொடு உடன்எறிந்து அடைச்சிய
செப்புஇடந்து அன்ன நாற்றம் தொக்குடன்
அணிநிறம் கொண்ட மணிமருள் ஐம்பால்
தளர்நறும் கதுப்பில் பையென முழங்கும்
அரும்பெறல் பெரும்பயம் கொள்ளாது
10 பிரிந்துஉறை மரபின் பொருள்படைத் தோரே.

எ-து : தோழி தலைவன் பொருள்வயிற் பிரிதலுற்றானது குறிப்பறிந்து விலக்கியது.

(அல்லது)

தோழி உலகியல் கூறிப் பிரிவு உணர்த்தியதூஉம்ஆம்.

பாலை பாடிய பெருங்கடுங்கோ

ப-ரை : தலைவ - தலைவனே! முதிரா வேனில் - முற்றாத இளவேனிற் காலத்தை, எதிரிய - எதிர் நோக்கிய, அதிரல் - காட்டு மல்லிகை மலரையும், பராரை - பருத்த அடியினை உடைய, பாதிரி - பாதிரியின், குறுமயிர் - குறுகிய நுண்ணிய மயிரையுடைய, மாமலர் - சிறந்த மலரையும், நறு - நறிய, மேரோடமொடு - செங்காலி மலரையும் கொய்து, உடன் அறிந்து அடைச்சிய - ஒருசேர உள்ளே செறித்து வைத்த, செப்பிடந்தன்ன - பூஞ்செப்பைத் திறந்து வைத்தால் ஒத்த, நாற்றம் உடன்தொக்கு - நறுமணம் ஒருங்கே அமையப் பெற்று, அணி நிறம் கொண்ட - அழகிய நல்ல நிறம் பொருந்திய, மணி மருள் - நீலமணியை ஒத்த, ஐம்பால் - ஐந்து வகையாக முடித்தற்குரிய, தளர் - சரிந்து விழுகின்ற, பையென - வண்டுகள் மெல்ல, முழங்கும் - ஒலித்தலையுடைய, நறும் - நறிய, கதுப்பில் - கூந்தலினுடைய, அரும்பெறல் - பெறுதற்கு அரிய, பெரும்பயம் - பெரிய பயனைக் கொள்ளாது, பிரிந்து - தாம் விரும்பும் தலைவியரைப் பிரிந்து, உறை - வாழ்கின்ற, மரபின் - முறைமையை உடைய, பொருள் படைத்தோர் - பொருளை

ஈட்டி வாழ்வோர், உலகம் படைத்த காலை - இவ்வுலகத்தைப் படைத்த காலம் முதற்கொண்டு, மறந்தனர் கொல்லோ - தன்னை நம்பி வாழ்கின்றவரைப் பாதுகாக்க வேண்டும் என்னும் கடமையை மறந்து விட்டனரோ? சிறந்திசினோர் - அத்தகைய அறத்தை மறந்தோர் சிறந்த தகுதிப்பாட்டினை உடையவர் காண்.

முடிபு : தலைவ! ஐம்பாற் பயங் கொள்ளாது பிரிந்து உறை மரபின் பொருள் படைத்தோர் மறந்தனர் கொல்லோ என முடிக்க.

கருத்து : அடைந்தாரைக் காப்பது பேர் அறம் அன்றோ; அங்ஙனம் காவாது பிரிந்துறைவோர் சான்றோரல்லர்.

அ-ள் : நறுமோரோடம் - செங்கருங்காலி, அதிரல் - காட்டு மல்லிகை. வண்டு - அவாய் நிலை. சிறந்திசினோர் - இகழ்ச்சிக் குறிப்பு. ஐம்பால் - குழல், கொண்டை, பனிச்சை, சுருள், அளகம் என ஐந்து வகையாகப் பகுக்கப்படும் கூந்தல். அதனாற் பெறும் பயனாவது அதனிடைத் துயிலலாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - செலவழுங்குவித்தல்.

ஒப்புமைப்பகுதி

3-6. செப்பிலே பூவை வைத்தல்

"மடைமான் செப்பில் தமிய வைகிய
பெய்யாப் பூவின் மெய்சாயினளே" (குறுந். 9:2-3)

"புடையமை பொலிந்த வகையமை செப்பிற்......
கமிழ் நறும்பூ" (மதுரை. 421-3)

"செப்புவாயவிழ்நல தேம்பொதி நறுவிரை நறுமலர்" (சிலப். 22:121-2)

"பித்திகைக்கோதை செப்புவாய்மலரவும்" (பெருங். 1-3:76)

"பூத்தகைச் செப்பும்" (பெருங். 3-5:78)

"கற்பகமாலையும் சேமமணி நகைச்
செப்பினுள் ஏந்துபு" (சூளா. மந்திர. 56)

3. மகளிர் அதிரற் பூச்சூடல்

"புதுப்பூ அதிரல் தாஅய்க்
கதுப்புறலணியும் காமர் பொழுதே" (ஐங். 345)

# 338. நெய்தல்

## தலைவி கூற்று

கடுங்கதிர் ஞாயிறு மலைமறைந் தன்றே
அடும்புகொடி துமிய ஆழி போழ்ந்துஅவர்
நெடுந்தேர் இன்ஒலி இரவும் தோன்றா
இறப்ப எவ்வம் நலியும் நின்நிலை
5 நிறுத்தல் வேண்டும் என்றி நிலைப்ப
யாங்ஙனம் விடுமோ மற்றே மால்கொள
வியல்இரும் பரப்பின் இரைஎழுந்து அருந்துபு
புலவுநாறு சிறுகுடி மன்றத்து ஓங்கிய
ஆடுஅரைப் பெண்ணைத் தோடுமடல் ஏறிக்
10 கொடுவாய்ப் பேடைக் குடம்பைச் சேரிய
உயிர்செலக் கடைஇப் புணர்துணைப்
பயிர்தல் ஆன பைதல்அம் குருகே.

எ-து: ஒருவழித்தணந்த காலை ஆற்றாத தலைவி வன்பொறை எதிர் மொழிந்தது.

மதுரை, ஆருலவிய நாட்டு, ஆலம்பேரி, சாத்தனார்

ப-ரை: கடும் கதிர் ஞாயிறு - கொடிய வெப்பத்தை உடைய ஞாயிறும், மலை - மேற்றிசையில் உள்ள அத்தமனக் குன்றில், மறைந்தன்று - மறைந்தொழிந்தது! அடும்பு கொடி - அடும்பின்கொடிகள், துமிய - துண்டித்து விழுமாறு, ஆழி - சக்கரத்தால், போழ்ந்து - பிளந்துகொண்டு, அவர் - தலைவர், நெடுந் தேர் - ஏறி வரும் நெடிய தேர் எழுப்பும், இன்ஒலி - இனிய ஓசை, இரவும் - இரவு நெடுநேரமாகியும், தோன்றா - செவிக்கு எட்டவில்லை; எவ்வம் - காம நோய்த் துன்பம், இறப்ப - தன் எல்லை அளவையுங் கடந்து தோன்றி, நலியும் - என்னைத் துன்புறுத்தும்; இவை மட்டும் அல்லாமல், மால் கொள - காம வேட்கை அதிகரிக்கும் எண்ணம், வியல் அரும் பரப்பின் - அகன்ற கரிய கழிப் பரப்பின்கண்ணே, இரை எழுந்து - இரை தேடிப் பறந்து, அருந்தி - இரையைக் கண்டு தின்று பின்பு, புலவு நாறும் - புலால் நாற்றம் நாறும், சிறுகுடி மன்னத்து - நமது சிறுகுடியிலுள்ள பொது அம்பலத்தில், ஓங்கிய - உயர்ந்து வளர்ந்த, ஆடு - ஆசைகின்ற, அலர - பருத்த அடியினை உடைய, பெண்ணைத் தோடு மடல் ஏறி - பனையின் தோடாகிய மடலில்

ஏறியிருந்து, கொடுவாய்ப்பேடை - வளைந்த வாயை உடைய பேடையை, குடம்பை - கூட்டில், சேரிய - வந்து தன்னோடு புணருமாறு, உயிர் செலக் கடைஇப் புணர்துணை பைதலங்குருகு பயிர்தல் ஆனா - யான் கேட்டு உடனே என் உயிரை விடுக்கும் வண்ணம் கடிந்து தான் தன் பெடையோடு புணர்ச்சி துணியு மளவும் துன்பத்தைச் செய்யும் நாரையானது அதனைக் கூவுதலை நிறுத்தவில்லை; இந்த நிலையில், நின்நிலை - என்னை நெருங்கி நீ படுந்துன்பத்தை, நிறுத்தல் வேண்டும் - அயலவர் அறியாதபடி மறைத் தொழுகுதல் வேண்டும், என்றி - என்கின்றாய்; நிலைப்ப- என் உயிர் நிலைத்து நிற்க, யாங்ஙனம் விடுமோ - இனி இந்நோய் எப்படி என்னை விட்டொழியுமோ.

முடிபு : தோழீ! நிறுத்தல் வேண்டும் என்றி, மறைந்தன்று, தோன்றா, நலியும், குருகு பயிர்தல் ஆனா, யாங்ஙனம் படுமோ என முடிக்க.

கருத்து : அலருக்கு அஞ்சி, தலைவன் பிரிய தலைவி மாலை வந்தது - தேர் வந்திலது - நாரை பெடையை முயங்க அழைக்கும் யான் என் செய்வேன் என்றது.

நயம் - அஃறிணையாகிய குருகும் இரையருந்திக் குடம்பை யிலே சென்றிருந்து தன் பெடையை அணையும் அளவும் அதனைக் கூவா நிற்கும் என்றது, எல்லாம் அறிந்த காதலர் நாரையின் பண்பைக்கூடப் பெற்றிலரே என் செய்வேன் என்றதாம்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

2-3. கடற்கரைக் கொடிகள் நேமியால் குறைதல்.
"பூண் வனைந்தன்ன பொலஞ்சூட்டு நேமி
வாண் முகந்துமிப்ப வள்ளிதழ் குறைந்த" (குறுந். 227 1-2)
(அகநா. 80:8-10)

8. புலவு நாறு சிறுகுடி
"புன்னை ஓங்கிய புலாலஞ் சேரி" (குறுந். 351:6, 320:1-4)
(அகநா. 270:2)

# 339. குறிஞ்சி

## தோழி கூற்று

தோலாக் காதலர் துறந்துநம் அருளார்
அலர்வது அன்றுகொல் இதுஎன்று நன்றும்
புலரா நெஞ்சமொடு புதுவ கூறி
இருவேம் நீந்தும் பருவரல் வெள்ளம்
5 அறிந்தனள் போலும் அன்னை சிறந்த
சீர்கெழு வியன்நகர் வருவனள் முயங்கி
நீர்அலைக் கலைஇய ஈர்இதழ்த் தொடையல்
ஒண்நுதற் பெதும்பை நன்னலம் பெறீஇ
மின்நேர் ஓதி இவளொடு நாளைப்
10 பன்மலர் கஞலிய வெறிகமழ் வேலித்
தெண்ணீர் மணிச்சுனை ஆடின்
என்னோ மகளிர்தம் பண்புஎன் றோளே.

எ-து : சிறைப்புறமாகத் தலைவன் கேட்பச் சொல்லியது.

**சீத்தலைச் சாத்தனார்**

ப-ரை : தலைவியே! அன்னை - நம் அன்னை ஒருநாள், சிறந்த - பெருமை மிக்க, சீர்கெழு வியன் நகர் - அழகு தங்கிய அகன்ற நம் மனைக்கண், வருவனள் - வந்தனள்; முயங்கி - வந்தவள் நின்னைத் தழுவி மகிழ்ந்து, (நீ சூட்டிக்கொண்டிருக்கும் மாலை கலைந்திருக்கும் காரணத்தையும், நின் தோற்றம் வேறு பட்டிருக்கும் காரணத்தையும் கண்டு, என்னிடம் கேட்கவே, நாம் சுனைநீரில் விளையாடினோம், ஆதலால் இம் மாற்றம் நிகழ்ந்தது போலும் என்று கூறவே,) அவற்றை வேறுபட உணர்ந்து, நீர் அலைக் கலைஇய - சுனையில் ஆடுகையில் நீர் மோதி அலைத் தலால் கலைந்து போகிய, ஈர் இதழ்த் தொடையல் - குளிர்ச்சி யுற்ற மலர் மாலையையும், ஒள் நுதல் - சிறந்த நெற்றியையும் உடைய, பெதும்பை - பெதும்பைப் பருவத்தின், நன்னலம் பெறீஇ - நல்ல வனப்பைப் பெற்று, மின் நேர் ஓதி - மின்னலை ஒத்து நெளிந்து நீண்டிருக்கும் கூந்தலை உடைய, இவளொடு - இம் மகளோடு, நாளை - நாளைப் பொழுதில், பல்மலர் கஞலிய - பலவாகிய மலர்கள் நெருங்கிய, வெறிகமழ் - நறுமணம் வீசுகின்ற, வேலி - சோலைகளை வேலியாகக் கொண்டிருக்கின்ற, தெண்ணீர் - தெளிந்த நீரையுடைய, மணி - அழகிய, சுனை -

சுனையின்கண், ஆடின் - ஆடினால், மகளிர் தம் பண்பு - மகளிர் மேனியின் நிறம் இன்னும், என்னோ - என்ன ஆகுமோ? என்றோள் - என்று கூறினாள்; ஆதலால், தோலா - போரில் தோல்வி என்பதை அறியாத, காதலர் - வெற்றியே பெறும் நம் தலைவர், துறந்து - நம்மைவிட்டுப் பிரிந்து, நம் அருளார் - நமக்கு இனி அருள் செய்பவர் அல்லர்; இது- அவருடன் ஏற்பட்ட நின் களவொழுக்கமானது, அலர்வது அன்று கொல் - அயலவர்க்குப் புலனாகி அலர் தூற்றும் தன்மையை எய்தும் அல்லவா? என்று, நன்றும்- பெரிதும், புலரா- வாட்டங்கொண்டு, நெஞ்சமொடு - நம் உள்ளத்துடனே, புதுவ கூறி - புதிய சில சொற்களைக் கூறி, இருவேம் - நாம் இருவரும், நீந்தும் பருவரல் வெள்ளம் - துன்ப வெள்ளத்துள் நீந்துகின்றதனை, அறிந்தனள் போலும் - நம் அன்னை அறிந்துகொண்டாள் போலும்.

முடிபு : அன்னை நாளை இவளொடு சுனை ஆடின் மகளிர் தம் பண்பு என்னோ என்றாள்; இருவேம் நீந்தும் வெள்ளம் அறிந்தனள் போலும் என முடிக்க.

கருத்து : களவொழுக்கத்தினை அன்னை அறிந்தனள்; இனி இது நீட்டித்தல் இயலாது. எனவே தலைவன் வரைதலே தக்கது என்று தலைவன் செவியிற் கேட்கும்வண்ணம் தோழி தலைவியிடம் கூறினாள்.

பி.ம். 2. 'ஆவதன்று கொல்'

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவுகடாதல்.

# 340. மருதம்

## தலைவி கூற்று

புல்லேன் மகிழ்ந புலத்தலும் இல்லேன்
கல்லா யானைக் கடுந்தேர்ச் செழியன்
படைமாண் பெருங்குளம் மடைநீர் விட்டெனக்
கால்அணைந்து எதிரிய கணைக்கோட்டு வாளை
5 அள்ளல்அம் கழனி உள்வாய் ஓடிப்

பகடுசேறு உதைத்த புள்ளிவெண் புறத்துச்
செஞ்சால் உழவர் கோற்புடை மதரிப்
பைங்காற் செறுவின் அணைமுதற் புரளும்
வாணன் சிறுகுடி அன்னஎன்
10 கோனேர் எல்வளை நெகிழ்த்த நும்மே.

எ-து : பரத்தையின் மறுத்தந்த (மீண்டுவந்த) தலைவனைத் தலைவி நொந்து சொல்லியது.

நக்கீரர்

ப-ரை : மகிழ்ந - தலைவ! கல்லா - போர்மேற் செல்வதை யன்றி வேறொன்றையும் கற்றறியாத, யானை - யானைப் படையையும், கடுந்தேர் - விரைந்து செல்லும் தேர்ப் படையை யும் உடைய, செழியன் - செழியன் பெயரால், படைமாண் - வெட்டப்பட்ட மாண்புடைய, பெருங்குளம் - பெரியகுளத்து நீர், மடைநீர் விட்டென - மடை அடைத்திருந்தது திறந்துகொண்டு ஓடியதனாலே, (அக் குளத்திநின்றும் வெளியே வந்து) கால் அணைந்து - கால்வாயை அடைந்து சென்று, எதிரிய - திரும்பிய, கணைக்கோட்டு வாளை - திரண்ட கோட்டினையுடைய வாளை மீன், அள்ளல் அம் கழனி - அக் கால்வாயினின்றும் சேற்றை யுடைய வயலில், உள்வாய் ஓடி - உள்ளிடம் அனைத்தும் பாய்ந்து சென்று, பகடு சேறு உதைத்த - அவ்விடத்து உழுது வருகின்ற எருமைக்கடாவின் கால் சேறுபட்ட, புள்ளி- புள்ளிகளை உடைய, வெண்புறத்து - வெளிய மேற்புறத்தொடு, செஞ்சால் உழவர் - சிறந்த பலவாறாக மறித்து உழுகின்ற உழவர், கோல் புடை - தம் கைக்கோல்கொண்டு அடித்தற்கும் அஞ்சாது, மதரி - செருக்குற்று, பைங்காற் செறுவின் - பசுமையான வரம்பு அடியில் ஓடி அப்பாற் போக முடியாமையால், அணை முதல் புரளும் - அவ் வரம்பு அடியிலேயே புரளுகின்ற, வளம் செறிந்த, வாணன் - வாணன் என்பானது, சிறுகுடி அன்ன - 'சிறுகுடி' என்னும் ஊர் போன்ற, என் கோல் நேர் எல்வளை நெகிழ்த்த நும்மே - என்னுடைய தொழில் நுட்பம் செறிந்த அழகிய ஒளி பொருந்திய வளையல்கள் நெகிழுமாறு செய்த நின்னை, புல்லேன்-தழுவேன்; புலத்தலும் இல்லேன் - வெறுத்தலும் இல்லேன்; அயலவள் ஆயினேன்; என்னைத் தீண்டல் வேண்டாம்.

முடிபு : மகிழ்ந! வளை நெகிழ்த்த நும்மைப் புல்லேன் புலத்தலும் இல்லேன் என முடிக்க.

கருத்து : பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனைப் பார்த்து முதற்கண் ஊடி, நின்னை முயங்கேன், வெறேன், என்று உரைத்துப்பின் தலைவி தழுவினாள்.

வி-ரை : சிறகுடி - காவிரியின் வடபால் வாணனுக்கு உரிமை பூண்ட ஊர்.

உள்ளுறை : குளத்தை அடைதிதுப் புறப்பட்டுக் கால்வாய் வழியே சென்ற வாளை கழனியுள் பாய்ந்து சென்று புறத்தே சேற்றைப் பூசிக்கொண்டு, ஆங்கு உழவர் அடித்தற்கும் அஞ்சாது, செருக்குண்டு வரப்படியிலே சென்று பிறழும் என்றது, மனை யகத்து விட்டுச் சென்ற நீ பாணன் சொன்ன வழியே சென்று ஒரு பரத்தை இல் புகுந்து, பிறர் கூறும் பழிச் சொற்களைத் தாங்கி இருந்த போழ்து, ஏனைய பரத்தையரும் நின்னை விரும்பி இழுக்க, அவர் மாட்டுச் செல்லாது ஒருத்தியில்லத்து உறங்கி வந்தனை என்றதாம்.

மெய்ப்பாடு - வெகுளி பற்றிய உவகை.

பயன் - ஊடல் தீர்ந்து முயங்கல்.

ஒப்புமைப்பகுதி

4. கணைக்கோட்டு வாளை

"கணைக் கோட்டு வாளை கமம் சூல் மடநாகு"

(குறுந். 164:1) (அகநா. 129:8)

# 341. குறிஞ்சி

## தலைவன் கூற்று

வங்கவரிப் பாறைச் சிறுபாடு முனையின்
செம்பொறி அரக்கின் வட்டுநா வடிக்கும்
விளையாடு இன்நகை அழுங்காப் பால்மடுத்து
அலையா உலவை ஓச்சிச்சில கிளையாக்
5 குன்றக் குறவனொடு குறுநொடி பயிற்றும்
துணைநன்கு உடையள் மடந்தை யாமே
வெம்பகை அருமுனைத் தண்பெயல் பொழிந்தென
நீர்ஈர்ங் கரைநாள் மயங்கிக் கூதிரொடு
வேறுபுல வாடை அலைப்பத்
10 துணையிலேம் தமியேம் பாசறை யேமே.

எ-து : வினைவயிற் பிரிந்து ஆற்றானாகிய தலைவன் சொல்லியது.

## மதுரை மருதனிள நாகனார்

ப-ரை : குன்ற மடந்தை - இங்கு குன்றில் வாழும் ஒரு குறப் பெண், வங்கம் - வெள்ளி போன்று வெண்மை நிறத்துடன், வரிப் பாறை - நீர்க்கால்கள் விழுந்தோடும் கற்பாறையிலே விழும் அருவியில் ஆடி, சிறுபாடு - அதில் சற்று, முனையின் - வெறுப்பு அடையின், செம்பொறி - சிவந்த புள்ளிகளை உடைய, அரக்கின் - அரக்கினாற் செய்யப்பட்ட, வட்டு - வட்டைச் சாடியின், நாவடிக்கும் - நாவினாற் காய்ச்சி வடிக்கப்படுகின்ற, விளையாடு - விளையாடும் இனிய மகிழ்ச்சி, அழுங்கா - நீங்கப் பெறாத, பால் - கள்ளின் தெளிவை (சாராயத்தை) மடுத்து - குடித்து, அலையா உலவை ஓச்சி - சுழன்று மரத்தின் கிளையை ஒடித்துச் சுழற்றி வீசி, சில - சிற்சில வார்த்தைகளை, கிளையா - கூறி, குன்றக் குறவனொடு - குன்றில் வாழும் தன் காதலனோடு, குறுநொடி பயிற்றும் - சிறிய நொடி பயிற்றுகின்ற, துணை - துணைவனை, நன்கு உடையள் - நன் முறையிற் பெற்று இருக்கின்றாள். யாம் - யாமோ (இதற்கு மாறாக) வெம்பகை அருமுனை - நெருங்குதற்கு அரிய கொடிய பகைவர் முன்னிலையில், தண் பெயல் பொழிந்தென - குளிர்ந்த மழை பொழிந்ததாக, நீர் ஈர்ங்கரை - நீர் நிறைந்த தண்ணிய கான் யாற்றங்கரையில், நாள் - நாட் காலையில், கூதிரொடு மயங்கி - கூதிரொடு கலந்து, வேறு புல வாடை அலைப்ப - வேற்றுப் புலத்துள்ள வாடைக் காற்று துன்புறுத்தலால், துணையிலேம் - துணை இன்றி, தமியேம் - தனிமையுடன், பாசறையேம் - பாசறையிற் கிடந்து வாடுகின்றேம்.

முடிபு : மடந்தை முனையில் பால் மடுத்து கிளையா பயிற்றும் துணையுடையள்; யாம் தமியேம் பாசறையேம் என முடிக்க.

கருத்து : ஒரு காதலனும் காதலியும் ஒடியாடி மகிழ்வதைக் கண்ட தலைவன் அவ்வாறின்றிப் பாசறையில் தனித்திருக்கும் நிலைபற்றி வருந்திக் கூறினான்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - பாசறைப் புலம்பியாறுதல்.

# 342. நெய்தல்

## தோழி கூற்று

மாவென மதித்து மடல்ஊர்ந் தாங்கு
மதிலென மதித்து வெண்தேர் ஏறி
என்வாய் நின்மொழி மாட்டேன் நின்வயிற்
சேரி சேரா வருவோர்க்கு என்றும்
5 அருளல் வேண்டும் அன்புடை யோய்எனக்
கண் இனிது ஆகக் கோட்டியும் தேரலள்
யானே எல்வளை யாத்த கானல்
வண்டுஉண் நறுவீ நுண்ணிதின் வரித்த
சென்னி சேவடி சேர்த்தின்
10 என்எனப் படுமோ என்றலும் உண்டே.

எ-து : குறை நேர்ந்த தோழி தலைவியை முகம்புக்க தன் சொற் கேளாதுவிடலின் இறப்ப ஆற்றானாயினான் என உணர்ந்து ஆற்றாளாய்த் தன்னுள்ளே சொல்லியது.

(அல்லது)

தலைவனுக்குக் குறை நேர்ந்த தோழி தலைவியை முகம் புக்கலளாய் ஆற்றாது தன்னுள்ளே சொல்லியதூஉம் ஆம்.

### மோசி கீரனார்

ப-ரை : அன்புடையோய் - அன்புடைய தோழியே! (நின் குறை நீயே சென்று உரை என்று குறை வேண்டி நின்ற தலைவனிடம் யான் கூறிய அளவில் அவன் மயங்கி நின்று) மாஎன மதித்து - குதிரை என்று கருதி, மடல் ஊர்ந்து - பனை மடலில் ஏறி வந்தும், மதில் என மதித்து - இது காவலை உடைய மதில் என்று கருதி, வெண்தேர் ஏறி - வெளிய பேய்த் தேரைச் சென்று நோக்கியும், நின்மொழி-தலைவன் குறைவுற்றுக் கூறும் இரப்புரைகளை,என் வாய் - யான் வாய் திறந்து கூற, மாட்டேன்-இயலாத நிலையில், நின்வயிற் - உன்னைக் காண, சேரி - நம் சேரிக்கண், சேரா வருவோர்க்கு - கலக்க வருவோர்க்கு, என்றும் - எப்பொழுதும், அருளல் வேண்டும் - நீ அருள் செய்து உடன்படல் வேண்டும், என - என்று, கண் இனிதாகக் கோட்டியும் - கண்ணினால் இனிய குறிப்புத் தோன்ற தலைசாய்த்துக் காட்டியும், எல்வளை - ஒளி பொருந்திய வளையல்களை அணிந்த தலைவி,

தேரலள் - அவற்றை அறிந்துகொள்ளவில்லை, ஆதலால், யான் - யானே, யாத்த கானல் - வேலி சூழ்ந்த கடற்கரைச் சோலையில், வண்டு உண் நறுவீ - வண்டுகள் உண்ணுகின்ற நறிய மலர்கள் உதிர்ந்து, நுண்ணிதின் வரிந்த - நுண்ணிதாகக் கோலம் செய்த அவ்விடத்து, சென்னி - எனது தலையை, சேவடி சேர்த்தின் - அத் தலைவியின் சிவந்த அடிகளிலே சேர்த்து வணங்கினால், என் எனப்படுமோ - அத் தலைவர் செயல் இப்பொழுது எப்படி இருக்கின்றதோ என்று, என்றலும் உண்டு - என்னை வினாவலும் உண்டாகும்; அப்பொழுது நிகழ்ந்தவற்றைக் கூறுவேன்.

முடிபு : அன்புடையோய்! ஊர்ந்து ஏறிச்சேரி வருவோர்க்கு அருளல் வேண்டும் எனக் கோட்டியும் தேரலள்; எல்வளை சேவடி சேர்த்தின் என் எனப்படுமோ? என முடிக்க.

கருத்து : தலைமகனது குறை தீர்க்க உடன்பட்ட தோழி, குறிப்பாற் கூறியும் இத் தலைவி உடன்பாடு உணர்த்தவில்லை, இனி, சோலையில் சென்று யான் பணிந்து கூறுவேன் என்று தனக்குள் தோழி கூறிக் கொண்டாள். மடலேறுதலும் வரைபாய்தலும் புலவர் நாட்டிய புனைந்துரை வழக்கென்று அறிக.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தன்னுள் ஆராய்தல்.

ஒப்புமைப்பகுதி

1. மடல்மா

"மாவென மடலும் ஊர்ப" (குறுந். 17:1)

"மடன்மா கூறும் இடனுமாருண்டே" (தொல்-களவு:11)

"படரும் பனையீன்றமாவும் சுடரிழை நல்கியாள் நல்கியவை" (கலி. 138:12-3)

"மாமேலேனென்று மடல்புணையா நீந்துவேன்" (கலி. 139:15)

"மாவென்றுணர்மின் மடலென்று" (கலி. 140-3)

"மடல்மா மேல்மன்றம் படர்வித்தவள்" (கலி. 141. 9-10)

# 343. பாலை

## தலைவி கூற்று

முல்லை தாய கல்அதர்ச் சிறுநெறி
அடையாது இருந்த அங்குடிச் சீறூர்த்
தாதுஎரு மறுகின் ஆபுறம் தீண்டும்
நெடுவீழ் இட்ட கடவுள் ஆலத்து
5 உகுபலி அருந்திய தொகுவிரற் காக்கை
புன்கண் அந்திக் கிளைவயிற் செறியப்
படையொடு வந்த பையுண் மாலை
இல்லைகொல் வாழிதோழி நத்துறந்து
அரும்பொருட் கூட்டம் வேண்டிப்
10 பிரிந்துறை காதலர் சென்ற நாட்டே.

எ-து : தலைவி பிரிவிடை ஆற்றாளாய்ச் சொல்லியது.

### கருவூர்க் கதப்பிள்ளைச் சாத்தனார்

ப-ரை : தோழி - தோழியே! வாழி - வாழ்வாயாக; முல்லை தாய - முல்லைக்கொடி படர்ந்த, கல் அதர்ச் சிறுநெறி - மலை வழியாகிய சிறிய நெறியை, அடையாது - சாராது, இருந்த - விலகி இருந்த, அம் குடிச்சீறூர் - அழகிய குடிகள் அமைந்த சிறிய ஊரின்கண்ணே, தாது எரு மறுகின் - மலரின் மகரந்தங்களே எருவாக உதிர்ந்து கிடக்கும் தெருவின்கண், ஆ - செல்லுகின்ற பசுக்கள், புறம் தீண்டும் - தங்கள் முதுகுகளை உரசிக்கொள்ளும், நெடுவீழ் இட்ட - நீண்ட விழுதுகளைக் கொண்ட, ஆலத்து - கடவுள் தன்மை வாய்ந்த ஆல மரத்தி லிருந்து, உகுபலி அருந்திய - கடவுளுக்குப் படைத்த பலிச் சோற்றைத் தின்ற, தொகு - தொக்க, விரல் - விரல்களை உடைய, காக்கை - காக்கைகள், புன்கண் - பொலிவு இழந்த, அந்தி - மாலைப் பொழுதில், கிளைவயிற செறிய - தம் சுற்றம் இருக்கும் இடத்தை அடைய, படையொடு - பிரிந்தவர்களை வருத்தும் படையுடனே, வந்த - வருதலைச் செய்த, பையுள் மாலை - துன்பத்தைத் தரும் இம் மாலையானது, நத்துறந்து - நம்மை விட்டுப் பிரிந்து போய், அரும் பொருள் - பெறுதற்கு அரிய பொருளை, கூட்டம் வேண்டி - ஈட்ட விரும்பி, பிரிந்து உறை காதலர் - பிரிந்து வாழும் நமது காதலர், சென்ற நாட்டு - சென்ற நாட்டின் கண்ணே, இல்லை கொல் - போய்த் துன்புறுத்

துவது இல்லையோ? துன்பப்படுத்தியிருப்பின் அவர் உடனேயே திரும்பி வந்திருப்பரே.

முடிபு : தோழி! பலி அருந்திய காக்கை செறிய வந்த மாலை, காதலர் சென்ற நாட்டு இல்லை கொல் எனமுடிக்க.

கருத்து : மாலைப் பொழுதால் துன்புறும் தலைவி தலைவர் சென்ற நாட்டு இப்பொழுது இல்லை போலும் என்று வருந்தினாள்.

இறைச்சி : ஆலமரத்தின் கீழே இடப்பட்ட பலியைக் காக்கை தின்று தன் சுற்றத்திடத்தே சென்று தங்கும் என்றது, என் அழகு எல்லாம் உண்ட பசலை நெற்றியிலே படரா நின்றது என்றவாறு.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

1. முல்லை யூர்ந்த கல்
"முல்லை யூர்ந்த கல்உயர் ஏறி" (குறுந். 275-1)
"கல்இவர் முல்லைக் களிவண்டு" (யா. வி. 42.மேற்)

2. அங்குடிச் சீறூர்
"அத்த நண்ணிய அங்குடிச் சீறூர்" (குறுந். 79:5, 41:3)
(புறநா. 324:8)

3. மன்றத்து எருவின் தாது
"மன்றத்து, எருவின் நுண்தாது குடைவன ஆடி"
(குறுந். 46:3-4)
"தாதெருத் ததைந்த முற்றம்" (மலைபடு. 531)
(புறநா. 33:11, 215:2, 311:3)
"தாதெரு மன்றத்து அயர்வர் தழூஉ" (கலி. 103:62)
"காஞ்சித்தாது உக்கன்ன தாதெரு மன்றத்து" (கலி. 108:60)
"தாதெரு மறுகின் மூதூராங்கண்" (அகநா. 165:4)
"தாதெரு மன்றம தானுடன் கழிந்து" (சிலப். 16:102)
"தாதெரு மன்றத்து ஆடும் குரவை" (சிலப். 17)
"தாதெரு மன்றத்து மாதரி எழுந்து" (சிலப். 27:74)

தாதெரு மன்றம்
"தாதெருமன்றம் தானுடன் கழிந்து"
(சிலப். 16:102) (மலைபடு. 531)
(குறுந். 46:3-4) (கலி. 103:62) (புறநா. 33:11)

4. கடவுள் ஆலம்

"கடவுள் ஆலத்துத் தடவுச்சினைப் பல்பழம்" (புறநா. 199:1)

"அழல்புரை குழைகொழு நிழல் தரும் பலசினை
ஆலமும் கடம்பும்......வேறுவேறு பெயரோய்"
(பரி:4, 66-9)

"துறையும் ஆலமும் தொல்வலிமராமும், முறையுளிபராய்"
(கலி. 101)

"ஆலும் கடம்புமார்" (கலி. 106)

5. காக்கையது பலி

"விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே."
(குறுந். 210:6)

"செஞ்சோற்ற பலிமாந்திய கருங்காக்கை" (பொருந. 183:4)

8. நத்துறந்து

"அத்தம் அரிய என்னார் நத்துறந்து" (குறுந். 174:4)

(அகநா. 85:3, 183:3, 185-8, 223-1, 298-20, 317-21)

(குறுந். 288:4)

# 344. குறிஞ்சி

## தோழி கூற்று

அணிவரை மருங்கின் ஐதுவளர்ந் திட்ட
மணிஏர் தோட்ட மைஆர் ஏனல்
இரும்பிடித் தடக்கையின் தடைஇய பெரும்புனம்
காவல் கண்ணினம் ஆயின் ஆயிழை
5 நம்நிலை இடைதெரிந்து உணரான் தன்மலை
ஆரம் நீவிய அணிகிளர் ஆகம்
சாரல் நீள்இடைச் சாலவண்டு ஆர்ப்ப
செல்வன் செல்லும்கொல் தானே உயர்வரைப்
பெருங்கல் விடரகம் சிலம்ப இரும்புலி
10 களிறுதொலைத்து உரறும் கடிஇடி மழைசெத்துச்
செந்தினை உணங்கல் தொகுக்கும்
இன்கல் யாணர்த் தம்உறைவின் ஊர்க்கே.

எ-து: தோழி, சிறைப்புறமாகத் தலைவன் கேட்பச் சொல்லியது.

## மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்

ப-ரை: ஆய்இழை - ஆராய்ந்து அணிந்த இழையினை உடையாய்! அணிவரை மருங்கின் - அழகிய மலைப்பக்கத்திலே, ஐது - வியப்புத்தருமாறு, வளர்ந்திட்ட - வளர்ந்த, மணிஏர் - நீல மணிபோன்ற, தோட்ட - தோட்டினை உடைய, மைஆர் ஏனல் - கருமை பொருந்திய தினைக்கதிரெல்லாம், இரும்பிடித்தடக்கை யின் - பெரிய பெண்யானையின் பருத்துநீண்ட கைபோல, தடைஇய - வளைந்துள்ள, பெரும்புனம் - பெரிய தினைக் கொல்லையை, காவல் கண்ணினம் ஆயின் - நாளை முதல் காவல் செய்யக் கருதினேம் ஆயின், நம்நிலை - நம் தலைவன் நம்முடைய நிலையை, இடைதெரிந்து உணரான் - இடையிலே தெரிந்து உணரானாய், தன்மலை - தன்னுடைய மலையிற் கிடைக்கப் பெற்ற, ஆரம் - சந்தனத்தை, நீவிய - பூசிய, அணிகிளர் - அழகு தங்கும், ஆகம் - மார்பில், வண்டு ஆர்ப்ப - வண்டுகள் ஆரவாரித்து மொய்க்க, உயர்வரை - உயர்ந்த மூங்கிலை உடைய, பெருங்கல் விடர்அகம் சிலம்ப - பெரிய மலை யிடத்துள்ள பிளப்பெல்லாம் எதிரொலி எடுக்கும்படியாக, இரும்புலி - கரியபுலி, களிறுதொலைத்து - களிற்றி யானையைக் கொன்று, உரறும் - முழங்கும் பூசலைக்கேட்டு, கடி இடி மழை செத்து - இது மேகத்தின் இடி யோசை என்று கருதி, செந்தினை - சிவந்ததினை, உணங்கல் - உலருமாறு போட்டவற்றை, தொகுக்கும் - மழை வருமென்று எண்ணிக் கூட்டிக் குவிக்கின்ற, இன் - இனிய, கல் - மலையிலுள்ள, யாணர் - புதிய வருவா யினை உடைய, சாரல் நீள்இடை - சாரலின் நெடிய வழியிலே, தான் தம் உறைவுஇன் ஊர்க்கு - தான் தமரோடு வாழும் இனிய தன்ஊர்க்கு, செல்வன் - தலைவன், செல்லும் கொல் - செல்வான் கொல்லோ?

முடிபு: ஆயிழை! புனம் காவல் கண்ணினம் ஆயின், செல்வம் தம் உறைவின் ஊர்க்குச் செல்லுங் கொல்லோ என முடிக்க.

கருத்து: இல்வயிற் செறிப்பின் தினைப்புனத்தில் தலைவனைக் காணமுடியாது, நாம் தினைப்புனம் காத்தலைக் கருதினேம்; அஃது உணராத தலைவன் தன்னூர்க்குச் செல்வான் போலும். 'காவல் கண்ணினம்' என்றாள் தலைவனிடம் பேரன்பு கொண்டுள்ளமை விளங்கவும் அவள் இன்றி வாழாமையும் புலப்படுத்தற்கு.

யானையைப் புலி அடித்து முழங்கிய முழக்கத்தை மேக முழக்கம் எனத்திரிய உணர்ந்து புலர்த்திய தினையைக் குவிக்கும் என்றது தலைவனை ஊரார் வரவொட்டாதபடி அலர் எடுத்ததை அன்னை கட்டினாலும் கழங்கினாலும் திரிய உணர்ந்து தினை காத்திருந்த தலைவியைக் காவல் ஒருவி இல்வயின் எடுத்த வெறிக் களத்துக்குக் கொண்டு போகும் என்றதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

2-3. தினைக் கதிருக்குப் பிடியின் கை

"மடப்பிடித் தடக்கை அன்ன பால்வார்பு
கரிக்குறட்டு இறைஞ்சிய செறிகோட் பைங்குரல்"
(குறுந். *198:3-4, 360:5*)

"யானை......இறங்குகை கடுப்பத்துய்த்தலை
வாங்கிய, புனிறு தீர்பெருங்குரல், நற்கோட் சிறுதினை"
(குறிஞ்சிப். *35:8*)

"பொய்பொரு கயமுனி முயங்குகை கடுப்ப, கொய்பதம்
உற்றனகுலவுக் குரல்ஏனல்" (மலைபடு. *107:8*)

"உறங்கு பிடித்தடக்கை ஒருங்கு நிரைத்தவை
போல் இறங்கு குரலிறடி" (பெருங். *1-49:103-4*)

5-8. தலைவன் சந்தனம் பூசிவருதல்

"மலைச் செஞ்சாந்தின் ஆரமார்பினன்" (குறுந். *321:1*)

11-12. பாறையில் தினையை உலர்த்தல்

"இருங்கல் வியலறைச் செந்தினை பரப்பிச்"
(குறுந். *335:2*)

# 345. நெய்தல்

## தோழி கூற்று

கானல் கண்டல் கழன்றுஉகு பைங்காய்
நீல்நிற இருங்கழி உட்பட வீழ்ந்தென
உறுகால் தூக்கத் தூங்கி ஆம்பல்
சிறுவெண் காக்கை ஆவித்து அன்ன
5 வெளிய விரியும் துறைவ என்றும்

அளிய பெரிய கேண்மை நும்போல்
சால்புஎதிர் கொண்ட செம்மை யோரும்
தேறா நெஞ்சம் கையறுபு வாட
நீடின்று விரும்பார் ஆயின்
10 வாழ்தல்மற்று எவனோ தேய்கமா தெளிவே.

எ-து : தெளிவிடை விலங்கியது. (தலைவன் தலைவியைத் தெளிவித்துப் பிரிய முற்படுகையில் தோழி அவள் தெளியாள் என்று கூறித் தடுத்தது.)

நம்பிகுட்டுவனார்

ப-ரை : கானல் - கடற்கரைச் சோலையில், கண்டல் - கண்டல் மரத்திலிருந்து, கழன்றுஉகு - காற்றுமோதுதலால் கழன்று விழுகின்ற, பைங்காய் - பசிய காய்கள், நீல்நிற இருங்கழி - நீலநிறத்தையுடையை கரிய கழியிடத்து, உட்பட - உள்ளே சென்று பொருந்துமாறு, வீழ்ந்தென - விழுதலால், அதுமோதப் பட்டு, உறுகால் - பெரியகாற்று, தூக்க - அசைக்க, தூங்கி - அசைந்து, ஆம்பல் - ஆம்பலின் அரும்புகள் சாய்ந்து, சிறுவெண் காக்கை - சிறியவெளிய் நீர்க் காக்கை, ஆவித்து அன்ன - கொட்டாவி விட்டாற்போன்ற, வெளிய விரியும் துறைவ - வெளியவாய் மலரா நிற்கும் துறைவனே! அளிய - கருணை மிக்க, பெரிய கேண்மை - பெரிய நட்பை உடைய, நும்போல் - நும்மைப் போல, சால்பு - சான்றாண்மையை, எதிர்கொண்ட - எதிரேற்றுக் கொண்ட, செம்மையோரும் - மேலானவர்களும், தேறா நெஞ்சம் - தம்மை நம்பினாரைப் பிரியேம் என்று அரிய சூள் செய்து அவர் தெளியாத நெஞ்சுடனே, கையறுபு - செயல் இழந்து, வாட - வாடுமாறு, நீடு இன்று - நெடுங்காலம், விரும் பாராயின் - விரும்பாமல் இருப்பாரானால், வாழ்தல் - நம்பினார் உயிருடன் வாழ்தல், மற்று எவனோ - எவ்வாறு இயலும்; எனவே தெளிவு தேய்க - நும் தெளிவு ஒழிக; இவள் துன்புற்று அழிக,

முடிபு : பைங்காய் வீழ்ந்தென ஆம்பல் ஆவித்தன்ன விரியும் துறைவ! செம்மையோரும் விரும்பாராயின் வாழ்தல் மற்று எவனோ? தெளிய தேய்க எனமுடிக்க.

கருத்து : பிரியேன் என்று சூளுறவு செய்து பின் பிரிதல் சான்றாண்மையன்று. துறைவ என ஒருமையால் விளித்து நும் போல் எனப்பன்மைபடக் கூறியது ஒருமைப்பன்மை மயக்கமாம்.

உள்ளுறை : கண்டற்காய் மோதி விழுதலால் மலரும் பருவத்தல்லாத ஆம்பல் வருந்தி விரியும் என்றது, அயலவர் அலர் தூற்றலால் இதுகாறும் நாணம் முதலாய பண்பு மிகுதியால் வாய் திறவாதிருந்த இவள் இப்பொழுது புலம்பா நிற்கும் என்றதாம்.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - தலைவனைக் கடிந்து கூறி வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

3. காற்றுத் தூக்கல்
"கோடை தூக்கும் கானம்" (குறுந். 369:3)
"உறுவளி தூக்கும் உயர்சினை மாவின்" (கலி. 84:1)

4. சிறுவெண்காக்கை
"பெருங்கடற் கரையது சிறுவெண்காக்கை" (குறுந். 246:1)
(மு. ஐங். 161:70)
"பெருங்கடல் கரையது சிறுவெண்காக்கை" (குறுந். 313:1)

## 346. பாலை

### தலைவன் கூற்று

குணகடல் முகந்து குடக்கேர்பு இருளித்
தண்கார் தலைஇய நிலம்தணி காலை
அரசுபகை நுவலும் அருமுனை இயவின்
அழிந்த வேலி அம்குடிச் சீறூர்
5 ஆள்இல் மன்றத்து அல்குவளி ஆட்டத்
தாள்வலி ஆகிய வன்கண் இருக்கை
இன்றுநக் கனைமன் போலா என்றும்
நிறையுறும் மதியின் இலங்கும் பொறையன்
பெரும்தண் கொல்லிச் சிறுபசும் குளவிக்
10 கடிபதம் கமழும் கூந்தல்
மடமா அரிவை தடமென் தோளே.

எ-து : பொருள் வயிற் பிரிந்த தலைவன் ஆற்றானாய்த் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

**எயினந்தை மகன் இளங்கீரனார்**

ப-ரை : நெஞ்சமே! குணகடல் - கீழ்க்கடலில், முகந்து - சென்று நீரை முகந்து, குடக்கு - மேலைத் திசைக்கண், ஏர்பு - எழுந்து சென்று, இருளி - இருண்டு, தண்கார் - குளிர்ந்த மேகம், தலைஇய - மழை பெய்து விடப்பட்ட, நிலம் தணிகாலை - நிலத்தின் வெப்பம் தணிந்தகாலத்து, அரசு பகை நுவலும் - அரசரது பகையால் அழிந்தது என்று சொல்லப்படும், அருமுனை இயவின் - அரிய ஊர்முனை அடுத்த நெறியில், வேலி - வேலியை உடைய, அழிந்த - குடிகள் அழிந்த, அம் குடிச் சீறூர் - முன்பு அழகிய குடிமக்களைக் கொண்டிருந்த சிறிய ஊரின் கண்ணே, ஆள்இல் - மக்கள் இல்லாத, மன்றத்து - பொது அம்பலத்தில், அல்குவளி ஆட்ட - நெருங்கிய காற்று வீச, தாள் வலி ஆகிய - முயற்சி கருதி உறைகின்ற, வன்கண் இருக்கை - வீரம் வாய்ந்த இருக்கையின் கண்ணே, இன்று - இப்பொழுது, என்றும் - எக் காலத்தும், நிறையுறு மதியின் - நிறைவுற்ற திங்கள்போல, இலங் கும் - விளங்குகின்ற, பொறையன் - பொறையன் என்பானது, பெரும் தண் கொல்லி - பெரிய தண்ணிய கொல்லிமலை இடத் துள்ள, சிறுபசுங்குளவி - சிறிய பசிய மலை மல்லிகையைச் சூடுத லால், கடிபதம் கமழும் கூந்தல் - அதன் வாசனை செவ்விதிற் கமழ்கின்ற கூந்தலையுடைய, மடமா அரிவை - இளைய அழகிய மடந்தையினுடைய, தடமென் தோள் - வளைந்த மெல்லிய தோள்களை, நக்கனைமன் - நீ தழுவக் கருதி மகிழ்கின்றனை போலும்; அத் தோள்கள் உன்னால் அடைதற்கு எளியன அல்ல.

முடிபு : அரிவை தோள் இன்று நக்கனைபோலும் என்று முடிக்க,

கருத்து : பிரிவின்கண் தலைவியின் தடந்தோள்களைத் தழுவ இயலாது என்பதை உணராது பிரிந்து நின்று தழுவ நினைக்கின் இயலாது என்று நெஞ்சிற்குக் கூறினான்.

வி-ரை : இன்று நக்கனை என்றான், நீ பிரிவதற்கு முன்னர் அன்றோ இதனை எண்ணியிருத்தல் வேண்டும்; அவ்வாறின்றி இன்று கருதி மகிழ்வதில் யாது பயன் விளையும் என்பது பற்றி.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - இடைச்சுரத்து அழுங்கல்.

ஒப்புமைப்பகுதி

9. குளவி

"குளவி மொய்த்த அழுகற் சின்னீர்" (குறுந். 56:2)

"குவளையொடு பொதிந்த குளவி நாறுநின் நறுநுதல்" (குறுந். 59:3)

"பருவிலைக் குளவியொடு பசுமரல் கட்கும்" (குறுந். 100:2)
(மலைபடு. 334) (பதிற். 71)

# 347. குறிஞ்சி

## தலைவி கூற்று

முழங்குகடல் முகந்த கமஞ்சூல் மாமழை
மாதிரம் நனந்தலை புதையப் பாஅய்
ஓங்குவரை மிளிர ஆட்டிப் பாம்புஎறிபு
வான்புகு தலைய குன்றம் முற்றி
5 அழிதுளி தலைஇய பொழுதில் புலையன்
பேழ்வாய்த் தண்ணுமை இடம்தொட் டன்ன
அருவி இழிதரும் பெருவரை நாடன்
இன்ன நிலையன் பேர்அன்பினன் எனப்
பன்மாண் கூறும் பரிசிலர் நெடுமொழி
10 வேனில் தேரையின் அளிய
காண விடுமோ தோழிஎன் நலனே.

எ-து : வரையாது நெடுங்காலம் வந்தொழுக ஆற்றாளாகிய தலைவியைத் தோழி வற்புறுக்க மறுத்தது.

## பெருங்குன்றூர் கிழார்

ப-ரை : தோழி - என் ஆருயிர்த் தோழியே! வேனில்-வேனிற் காலத்து, தேரையின் - மணலுள் முழுகி மறைந்து கிடக்கும் தேரையைப் போல, என் நலன் - என் உடம்பினுள்ளே பொதிந்து மறைந்து உறையும் என் அழகு எல்லாம், என்னை ஒறுத்துத் துன்புறுத்துமே அன்றி, முழங்கு கடல் - முழங்குகின்ற கடலிலே விழுந்து, முகந்த - நீரை நிறைய முகந்த, கமம் சூல் மாமழை - செறிந்த சூலை உடைய கரிய மேகம், மாதிரம் - திசைகளின், நனந்தலை - அகன்ற இடம் எங்கும், புதைய - மறையும்படி, பாஅய் - பரவி, ஓங்கு - உயர்ந்த, வரை - மலையின் சிகரங்கள்,

மிளிர - புரண்டு விழும்வண்ணம், ஆட்டி - மழையைப் பெய்து, பாம்பு எறிபு - இடியினால் பாம்புகளைத்தாக்கி, வான்புகு தலைய - விசும்பில் உயர்ந்த முடியை உடைய, குன்றம் - குன்று களை, முற்றி - ஒருங்கே சூழ்ந்து, அழிதுளி - சிதைந்த மழையின் துளிகளை, தலைஇய பொழுதில் - யாண்டும் பெய்து ஒழிந்த பொழுது, புலையன் - புலையனது, பேழ்வாய்த் தண்ணுமை - அகன்ற வாயை உடைய தண்ணுமையின், இடம் தொட்டன்ன - கண்ணில் மோதுதலால் எழுகின்ற ஒலி போன்ற, அருவி - பேரொலியுடன் அருவிநீர், இழிதரும் - இறங்கி ஓடும், பெருவரை நாடன் - பெரியமலை நாடன், இன்ன நிலையன் - இன்னதொரு நிலைமையுடையன், பேர் அன்பினன் - பெரிய அன்புடையவன், என - என்று, பல்மாண் கூறும் - பலவாய அவனுடைய மாண்பு கள் எல்லாம் கூறும், பரிசிலர் - பரிசிலர்களின், நெடுமொழி - சிறந்த புகழுரைகளை, காணவிடுமோ - காணவும் கேட்கவும் மகிழவும் என்னை உயிருடன் விடுமோ? அளிய - அவை அளிக்கத் தக்கன,

முடிபு : தோழி! என் நலன் பெருவரைநாடன் பரிசிலர் நெடுமொழி காண விடுமோ என முடிக்க.

கருத்து : வற்புறுத்திய தோழியை நோக்கி, "யான் எவ்வாறு ஆற்றுவேன்; என் நலம் அனைத்தும் பயன் இன்றிப் பாழ்படுகின்றதே" என்று தலைவி அழிந்து கூறினாள்.

அ-ள் : மிளிர்தல் - புரளுதல். நெடுமொழி - புகழ். நலன் - அழகு அன்றிப் பசலை எனவும்படும். இது பசலை பாய்தல் எனப்படும்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

1. கமஞ்சூல் எழிலி

"சேயுயர் விசும்பின் நீர்உறு கமஞ்சூல்
தண்குரல் எழிலி" (குறுந். 314:1-2)

"கமஞ்சூல் மாமழை" (முருகு. 7) (அகநா. 134:2)

1-2. மழையால் விசும்பு மறைக்கப்படுதல்

"பெயல்கண் மறைத்தலின் விசும்பு காணலையே" (குறுந். 355:1)

"விசும்புகண் புதையப் பாஅய் வேந்தர்
வென்றெறி முரசின் நன்பல முழங்கிப்
பெயலா னாதே வானம்". (குறுந். 380:1-3)

1-3. மழை பாம்பை வருத்தி மலையைத் துளக்குதல்.
"நெடுவரை மருங்கிற் பாம்புபட இடிக்கும் (குறுந். 158:1)

6-7. அருவிக்கு முரசு
"துன்னரு நெடுவரைத் ததும்பிய அருவி"
(குறுந். 365:3-4, 78-1-2)
(அகநா. 25:21-2; 138 8-9; 172:2-4: 313:5-6)
(தஞ்சை. 22:2-6)

# 348. நெய்தல்

## தலைவி கூற்று

நிலவே நீல்நிற விசும்பில் பல்கதிர் பரப்பிப்
பால்மலி கடலின் பரந்துபட் டன்றே
ஊரே ஒலிவரும் சும்மையொடு மலிதொகுபு ஈண்டிக்
கலிகெழு மறுகின் விழவய ரும்மே
5 கானே பூமலர் கஞலிய பொழிலகந் தோறும்
தாம்அமர் துணையொடு வண்டி மிரும்மே
யானே புனைஇழை ஞெகிழ்த்த புலம்புகொள் அவலமொடு
கனைஇரும் கங்குலும் கண்படை இலனே
அதனால் என்னொடு பொருங்கொல் இவ்வுலகம்
10 உலகமொடு பொருங்கொல்என் அவலமுறு நெஞ்சே.

எ-து : வேட்கை பெருகத் தாங்கலளாய் ஆற்றாமை மீதூர் கின்றாள் சொல்லியது.

வெள்ளி வீதியார் ○

ப-ரை : நிலவோ - தண் நிலவோ, நீல்நிற விசும்பில் - நீல நிறமுடைய ஆகாயத்தில், பல் கதிர் பரப்பி - பலவாய கதிர்களைப் பரப்பி, பால்மலி கடலின் - பால் நிறைந்த கடல்போல, பரந்து பட்டன்று - எங்கு பரவியதன்மை பெற்றுள்ளது, ஊரே - இந் நில வொளியில் இவ்வூரோ எனில், ஒலிவரும் சும்மையொடு - தழைந்து வரும் பேரொலியுடன், மலி தொகுபு ஈண்டி - மிக்க தெருவெங்கும், விழவு - திருவிழா, அயரும் - கொண்டாடும் தன்மை பெற்

றுள்ளது, கான் - காடோ என்றால், பூமலர் கஞலிய பொழில் அகம் தோறும் - மலர்ந்த பூக்கள் விளங்கிய சோலையிடங்கள் தோறும், தாம் அமர் துணையொடு - தாம் தாம் விரும்பியொழுகும் பெண் வண்டுடனே, வண்டு - ஆண் வண்டுகள், இமிரும் - கலந்து ஒலிக்கும்; யானே - இன்னதொரு பொழுதிலே யான் மட்டுமே, புனை இழை நெகிழ்த்த - அணிந்த கலன்களை நெகிழவிடுத்த, புலம்புகொள் - தனிமையைக்கொண்ட, அவலமொடு - துன்பத்தோடு, கனை இரும் கங்குலும் - மிக்க நீடிய கங்குல் முழுவதும், கண்படை இலன் - தூங்குகின்றிலேன், அதனால், இவ்வுலகம் - இந்த உலகமானது, (அனைவர் செயலுக்கும் மாறுபாடாக யான் இருத்தலால், என்னொடு - என்னுடன், பொருங்கொல் - போர் செய்து என்னைத் துன்புறுத்துமோ? நெஞ்சு - அன்றி யாதொரு பயனும் இல்லாத எனது நெஞ்சம், உலகமொடு பொருங்கொல் - தன் செயலுக்கு மாறுபாடாய் இவ்வுலகம் இருக்கின்றது என்று எண்ணி அதனோடு போர் செய்ய எழுமோ.

முடிபு : நிலவு பட்டன்று, ஊர் அடங்கும், கான் இமிரும், யான் கண்படை இலன், அதனால் உலகம் பொருங்கொல்? அன்றி நெஞ்சு பொருங்கொல்? என முடிக்க.

கருத்து : எல்லோரும் மகிழ்ந்து இன்புறும் இந்த நள்ளிரவில் யான் உறங்குதலின்றித் துன்புறுகின்றேன், என் செய்வேன்.

வி-ரை : யானே, ஏ - பிரிநிலை. நிலவே, ஊரே, கானே - ஏகாரங்கள் வினா.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயர்வுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி,

7. இழை நெகிழ்தல்

"வால்இழை நெகிழ்த்தோர் வாரார்" (குறுந். 188)
"வீங்கு இழை நெகிழ" (குறுந். 358:1)
"விறலிழை நெகிழ்த்த வீவருங் கடுநோய்" (குறிஞ்சி. 3)
"இழை நெகிழ் செல்லல்" (ஐங். 25:4)
"இழைநிலை நெகிழ" (ஐங். 310:2)
"இழை நெகிழ் செல்லல் உறீஇ" (ஐங். 315:3)
"வில்லிழை நெகிழ" (ஐங். 318:2)
"திருந்திழை நெகிழ்ந்தன" (அகநா. 206:16)
"வீங்கிழை நெகிழ" (அகநா. 251:3)
"திருந்திழை நெகிழ்ந்து" (அகநா. 255:17)

# 349. நெய்தல்

## தலைவன் கூற்று

கடுந்தேர் ஏறியும் காலிற் சென்றும்
கொடுங்கழி மருங்கின் அடும்புமலர் கொய்தும்
கைதை தூக்கியும் நெய்தல் குற்றும்
புணர்ந்தாம் போல உணர்ந்த நெஞ்சமொடு
5 வைகலும் இனையம் ஆகவும் செய்தார்ப்
பசும்பூண் வேந்தர் அழிந்த பாசறை
ஒளிறுவேல் அழுவத்துக் களிறுபடப் பொருத
பெரும்புண் உறுநர்க்குப் பேஎய் போலப்
பின்னிலை முனியா நம்வயின்
10 என்னென நினையுங்கொல் பரதவர் மகளே.

எ-து : தலைவன் தோழி கேட்பத் தன்னுள்ளே சொல்லியது.

மிளை, கிழான் நல்வேட்டனார்

ப-ரை : கடுந்தேர் ஏறியும் - விரைந்தோடும் திறன் வாய்ந்த தேரின்மேல் ஏறிச் சென்றும், காலிற் சென்றும் - பின்பு காலால் நடந்து சென்றும், (இவளுக்கு ஏவல் செய்பவனாகி) கொடுங்கழி மருங்கின் - வளைந்த கழியருகிலுள்ள அடும்பின் மலைப் பறித்தும், கைதை தூக்கியும் - தாழம்பூவைப் பறிக்குமாறு இவளைத் தூக்கிப் பிடித்தும், நெய்தல் குற்றும் - தழையுடை தரிக்க வேண்டி நெய்தல் அந்தளிரையும், சூடவேண்டி அதன் மலரையும் பறித்துக் கொடுத்தும், புணர்ந்தாம்போல - நாம் தலைவியைப் முயங்கினோம்போல, உணர்ந்த நெஞ்சமொடு - கருதிய உள்ளத்துடனே, வைகலும், நாள்தோறும், இனையம் ஆகவும் - இவ்வாறு ஒழுகா நிற்பவும், செய்தார் - நன்கு புனைந்த மாலையணிந்த, பசும்பூண் - பசுமையான அணிகலன் களை உடைய, வேந்தர் - அரசர்கள், அழிந்த போரிலே மடிந்த, பாசறை - பாசறையின் கண்ணே, ஒளிறுவேல் அழுவத்து - விளங்குகின்ற படையையுடை போர்க்களப் பரப்பில், களிறுபடப் பொருத - களிற்றி யானைபடுமாறு போர் செய்தலானாகிய, பெரும்புண் உறுநர்க்கு - பெரிய புண்ணுற்றுக் கிடந்தாரை, வேறு காப்போரின்மையால் அவருடைய உயிர் போகும் அளவும், கழுகும் நரியும் கடித்து அவர் தசையைத் தின்னுமே என்று கருணை கொண்டு, பேஎய்போல - பேய்தானே காத்து நின்றாற்

போல, பின்நிலை முனியா - இரந்து பின் நிற்றலை வெறாத, நம்வயின் - நம்மிடத்து, பரதவர் மகள் - நம் தலைவியாகிய பரதவர் மகள், என்என - என்னவாறு மாறுபாடாக, நினையும் கொல் - நினைக்கின்றாளோ?

முடிபு : ஏறியும், சென்றும், கொய்தும், குற்றும், உணர்ந்த நெஞ்சமொடு இளையமாகவும் பரதவர் மகள் நம்வயின் என்னென நினையுங்கொல் எனமுடிக்க.

கருத்து : நாம் குறையுற்று இரந்து பின் நிற்றலைத் தலைவி வேறுபாடாக எண்ணின் யாதாகுமோ என்று தலைவன் நொந்து கூறினான்.

வி-ரை : இது பேய்க்காஞ்சி என்னும் புறத்துறையின் பாற் படும். புண்பட்டோரை ஊறு அடையா வண்ணம் பேய் அருகிருந்து காப்பதுபோல, இவள் தெளிந்து கூறும் அளவும் யான் பின்னின்றேன் என்றவாறு.

தேர் ஏறி வந்தமை தலைவனின் செல்வ மிகுதியைச் சுட்டிற்று. புறத்தார்க்குப் புலனாகா வண்ணம் வந்தேன் என்பான் காலிற் சென்றும் என்றான். மலர் கொய்தல் முதலிய வற்றால் தன் பணிவுடைமை கூறினான்.

மெய்ப்பாடு - தன்கண் தோன்றிய பிணிபற்றிய இளிவரல்.

பயன் - தோழி கேட்டுக் குறைமுடிப்பாள்.

## 350. மருதம்

### தலைவி கூற்று

வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇப்
பழனப் பல்புள் இரியக் கழனி
வாங்குசினை மருதத் தூங்குதுணர் உதிரும்
தேர்வண் விராஅன் இருப்பை அன்னஎன்
5 தொல்கவின் தொலையினும் தொலைக சார
விடேஎன் விடுக்குவென் ஆயின் கடைஇக்
கவவுக்கை தாங்கும் மதுகைஅம் குவவுமுலை
சாடிய சாந்தினை வாடிய கோதையை
ஆகில் கலம்கழீஇ அற்றும்
10 வாரல் வாழிய கவைஇநின் றோளே.

எ-து : தலைவி ஊடல் மறுத்தாள் சொல்லியது.

**பரணர்**

ப-ரை : வெண் நெல் அரிநர் - வெள்ளிய நெற்கதிரை அறுக்கும் மள்ளர், தண்ணுமை - முழக்குகின்ற தண்ணுமை ஓசைக்கு அஞ்சி, பழனம் - வயலுள்ள, பல்புள் - பலவாகிய பறவைகள் எல்லாம், இரிய - இரிந்து ஓடிச் செறிதலால், கழனி - வயலின் மீது, வாங்கு சினை - தாழ்ந்து வளைந்த கிளைகளை உடைய, மருத - மருதமரத்தே, தூங்கு - தொங்குகின்ற, துணர் - பூங்கொத்துக்கள், உதிரும் - உதிரா நிற்கும், தேர்வண் - பாவலர்க்குத் தேர்கொடுக்கும் வண்மையை உடைய, விராஅன் - விராஅன் என்பவனுக்கு உரிமையான, இருப்பை அன்ன - 'இருப்பை' என்னும் ஊர்போன்ற, என் - என்னுடைய, தொல்கவின் - பழைமை தொட்டு வந்த அழகு எல்லாம், கெடுக - - கெடுவதாயினும் கெடுக, சார - என் அருகில் நெருங்க, விடேஎன் - நின்னை விடுவேன் அல்லேன்; விடுக்குவென் ஆயின் - அங்ஙனம் உன்னை நெருங்க விடுவேனானால், கடைஇ - வாயால் உன்னைத்தடுக்கவும், கவவுக்கை - என் தழுவும் கைகள், தாங்கும் - என் - விருப்பம் இன்றி நின்னைவல்லே அணைத்து முயங்கா நிற்கும்; நீதானும், மதுகை - வலிமையை உடைய, அம் - அழகிய, குவவுமுலை - பரத்தையின் குவிந்த கொங்கையி னாலே, சாடிய - தாக்கப்பட்ட, சாந்தினை - சந்தனத்தை உடையை; வாடிய கோதையை - அவள் அழுந்தத் தழுவினமை யால் துவண்டு வாடிய மாலையை உடையை, ஆகில் - ஆகலால், உன்னை யான் தழுவுதல், கலம் கழீஇ அற்று - கழித்து எறியப் பட்ட மட்கலங்களைத் தொடுவது போல் ஆகும். வாரல் - எனவே நீ என் மனை வாரற்க: கவைஇ நின்றோள் - உன்னை அணைத்து முயங்கும் அப்பரத்தையுடன், வாழி - நீ நெடுங் காலம் வாழ்க, என்று ஊடினாள்.

முடிபு : வெரீஇ புள்இரிய, கழனி துணர் உதிரும் விராஅன் இருப்பை அன்ன கவின் தொலைக; விடேஎன், சாந்தினை, கோதையை, கலம்கழீ இயற்று நின்றோள் வாழிய எனமுடிக்க.

கருத்து : தலைவ! என் நலம் கெடுக. நீ பரத்தையைத் தழுவி நெடுங்காலம் வாழ்க; நெருங்கேல் என்றாள்.

வி-ரை : என்னைக் கேளாமலேயே என் கைகள் உன்னைத் தழுவுகின்றன என்றாள் தன் அன்பின் மிகுதியை அறிவுறுத்த.

உள்ளுறை : பறவைகள் மள்ளரின் தண்ணுமைக்கு அஞ்சி மருதிற் செறிதலான் அம்மருதமரம் கிளை அசைந்து பூங்கொத்துக்களை உதிர்க்கும் என்றது, என்னிடம் உனக்கு அன்பு இன்றி ஏதிலாரி கூறும் பழிமொழிக்கு அஞ்சி, நீ இங்கு வருதலால் என்னுள்ளம் நின்னை வெறுத்தொழிக்கும் என்றதாம்.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - ஊடல் தீர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

1. பறவைகள் தண்ணுமை ஒலிக்கு அஞ்சுதல்
"வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ" (புறநா. 348,1)
"வெண்ணெலரிநர் மடிவாய்த் தண்ணுமை
பன்மலர்ப் பொய்கை படுபுள் ஓப்பும்" (அகநா. 40:13-4)
"வெண்ணெலரிநர் தண்ணுமை வெரீஇச்
செங்கண் எருமை இனம்பிரி ஒருத்தல்" (மலைபடு. 471-2)

4. விராஅன் இருப்பை
"கைவண் விராஅன் இருப்பை அன்ன" (ஐங். 58)

5. தொல்கவின் தொலைதல்
"தொல்கவின் தொலைந்து தோள் நலம் சாஅய்"
(குறுந். 381:1) (கலி. 2:28, 16:5, 26:10)
(அகநா. 147:12, 177:1, 235:18, 270:10)

# 351. குறிஞ்சி

## தோழி கூற்று

இளமை தீர்ந்தனள் இவளென வளமனை
அருங்கடிப் படுத்தனை ஆயினும் சிறந்துஇவள்
பசந்தனள் என்பது உணராய் பன்னாள்
எவ்வ நெஞ்சமொடு தெய்வம் பேணி
5 வருந்தல் வாழிவேண்டு அன்னை கருந்தாள்
வேங்கைஅம் குவட்டிடைச் சாந்திற் செய்த
களிற்றுத்துப்பு அஞ்சாப் புலியதள் இதணத்துச்
சிறுதினை வியன்புனம் காப்பின்
பெறுகுவள் மன்னோஎன் தோழிதன் நலனே.

எ-து : தோழி அருகு எடுத்தது.

## மதுரைக் கண்ணத்தனார்

ப-ரை : அன்னை - அன்னையே! வாழி - நெடுங்காலம் வாழ்க; யான் கூறுகின்றதனைச் சற்றுக் கேட்பாயாக. இவள்-நின் மகள், இளமை தீர்ந்தனள் என - பருவம் அடைந்தாள் என்று, வளமனை - செல்வம் கொழிக்கும் நின் மனையில், அருங்கடிப் படுத்தனை - வீட்டுச் சிறையில் வைத்தனை, ஆயினும் - என்றாலும்; சிறந்து-சிறப்புடன், இவள் - நின் மகள், பசந்தனள் - பசுமை நிறம் பெற்றனள், என்பது - என்பதன் காரணத்தை, உணராய் - உணர்ந்தனை அல்லை, பல்நாள் - பல நாட்களாக, எவ்வ நெஞ்சமொடு - துன்பம் மிக்க உள்ளத்தோடு, தெய்வம் பேணி - முருகக் கடவுளை வழிபட்டு, வருந்தல் - வருந்தாதே: (வெறியாட்டு ஆடல் வேண்டாம்.) கருந்தாள் - கரிய அடியினை உடைய, வேங்கை - வேங்கை மரங்கள் நிறைந்த, அம் குவட்டிடை - அழகிய குன்றினிலே, சாந்தில் செய்த - சந்தன மரத்தாற் செய்த, களிற்று - களிற்றி யானையின், துப்பு - வலிமைக்கு, அஞ்சா - பயப்படாத, புலி அதள் - புலித்தோல் வேய்ந்த, இதணத்து - கட்டுப்பரணில், சிறுதினை - தங்கியிருந்து சிறிய தினைப்புனத்தை, காப்பின் - மீண்டும் சென்று காவலை மேற்கொள்ளின், என் - என்னுடைய, தோழி - தலைவி, தன் நலன் - தன் அழகை, பெறுகுவள் - மீட்டும் பெறுவாள்; மன் - அவ் அழகு வீணே கழிகின்றது;

முடிபு : அன்னை! தெய்வம் பேணி வருந்தல், என் தோழி வியன் புனம் காப்பின் நலன் பெறுகுவள், வாழி என முடிக்க.

கருத்து : மகளை அணங்கு தீண்டியது போலும் என்று எண்ணி அன்னை வெறியயர, தோழி, மீண்டு அவளைத் தினை காக்க அனுப்பி வைப்பின் இழந்த நலனை மீண்டும் பெறுகுவள் என்றாள். புலித் தோலால் வேயப்பட்ட கட்டுப்பரணில் இருப்பேம் ஆனபடியால் வேலனின் வெறியாடல் கண்டு அஞ்சேம் என்றாள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வெறி விலக்கல்.

### ஒப்புமைப்பகுதி

5-6. கருங்கால் வேங்கை

"கருங்கால் வேங்கை வீயுகு துறுகம்" (குறுந். 47:1, 26:1) (மதுரைக். 296) (அகநா. 345:6, 349:10) (புறநா. 137:9)

# 352. பாலை

## தலைவன் கூற்று

இலைமாண் பகழிச் சிலைமாண் இரீஇய
அன்புஇல் ஆடவர் அலைத்தலிற்பலருடன்
வம்பலர் தொலைந்த அரும்சுரக் கவலை
அழல்போல் செவிய சேவல் ஆட்டி
5 நிழலொடு கதிக்கும் நிணம்புரி முதுநரி
பச்சூன் கொள்ளை மாந்திவெய்து உற்றுத்
தேர்திகழ் வறும்புலம் துழைஇ நீர்நயந்து
பதுக்கை நீழல் ஒதுக்கிடம் பெறாஅ
அஞ்சுவரு கவலை வருதலின் வருந்திய
10 நமக்கும் அரிய ஆயின அமைத்தோள்
மாண்புடைக் குறுமகள் நீங்கி
யாங்குவந் தனள்கொல் அளியள் தானே.

எ-து : பொருள்வயிற் பிரிந்த தலைவன் இடைச்சுரத்துக் கண் ஆற்றானாய்த் தன்னுள்ளே சொல்லியது.

மதுரைப் பள்ளிமருதங்கிழார் மகனார் சொகுத்தனார்

ப-ரை : இலை - இலை வடிவாக அமைந்த, மாண் - மாட்சிமைப்பட்ட, பகழி - அம்பினை, சிலை - வில்லிலே, மாண் - மாண்புபட, இருத்திய - இருத்திய, அன்புஇல் - அன்பு என்பது சிறிதும் அற்ற, ஆடவர் - மறவர், அலைத்தலில் - கொன்று துன்புறுத்தியதால், வம்பலர் - புதியராக வரும் வேற்று நாட்டினர், பலருடன் - பலரும் ஒரு சேர, தொலைந்த - இறந்து கிடந்த, அரும் - எவரும் கடந்து உயிருடன் செல்லுதற்கு அரிய, சுரக் கவலை - பாலைவனத்திலுள்ள கவர்த்த வழியில் (அவ்வாறு இறந்து கிடந்த பிணங்களை) அழல்போல் - நெருப்பைப்போல் சிவந்த, செவிய - செவிகளையுடைய, சேவல் - ஆண் கழுகுகள், ஆட்டி - தின்னாதவாறு அலைத்து, நிழலொடு கதிக்கும் - தன் நிழலோடு மகிழ்ந்து விளையாடும், நிணம்புரி - தசைகளைத் தின்னுதலில் விருப்பம் மிக்க, முதுநரி - கிழநரி, பச்சூன் - பசிய தசையை, கொள்ளை - வேண்டிய அளவிற்குமேல், மாந்தி - தின்று, வெய்து உற்று - வாய் வறண்டு, நீர் நயந்து - தண்ணீரை விரும்பி, தேர்திகழ் வறும்புலம் - பேய்த் தேர் விளங்குகின்ற நீரற்ற வெற்றிடத்லத, துழைஇ - நீருள்ள இடமென்று மயங்கி

அலைந்து ஆங்குக் கிடைக்கப் பெறாமையால் வருந்தி, பதுக்கை நீழல் - கற்குவியலின் நிழலிலே, ஒதுக்கு இடம் பெறா - தான் வெயிலுக்கு ஒதுங்கி இருக்கவும் இடம் பெறாது, அஞ்சுவரு கவலை - வருந்துகின்ற அஞ்சத்தக்க பலவாய வழி, வருந்திய நமக்குஅரிய ஆயின-வருந்திய நமக்கும் கடத்தற்கு அரியவாயின; (அவ்வாறிருக்க) அமை தோள் - மூங்கில் போன்ற தோளை யுடைய, மாண்பு உடைக் குறுமகள் - மாட்சிமைப்பட்ட இள மடந்தையாகிய நமது காதலி, நீங்கி - தன் மனையைவிட்டு, வருதலின் - வந்தனளாதலால், யாங்கு - எவ்வாறு, வந்தனள் - இக் கொடிய வழியில் வந்தனள்? அளியள் - அந்தோ இவள் இரங்கத் தக்காள்.

முடிபு : அஞ்சுவருகவலை நமக்கு அரியவாயின, குறுமகள் யாங்கு வந்தனள்? அளியள் என முடிக்க.

கருத்து : இடைச்சுரத்துத் தலைவன் தலைவியின் உருவெளித் தோற்றம் கண்டு இக்கொடிய வழியில் எவ்வாறு வந்தனள் என்று இரங்கினான்.

இறைச்சி : வழிப்பறி செய்வோர் கொன்று வீழ்த்திய உடல்களைக் கழுகு தின்னாதபடி நரி தானே தின்று உண்ண நீர் பெறாது ஒதுங்கவும் நிழல் இன்றி வருந்தும் காடு என்றது, நல்வினையால் யான் பெற்ற தலைவியை பசலை படராவண்ணம் யான் நுகர்ந்து, ஈதல் முதலியவற்றிற்குப் பயன்படும் பொருள் பெறாது, அடையும் வகையும் அறிதலின்றி வருந்துகின்றேன் என்றவாறு.

மெய்ப்பாடு - மருட்கை.

பயன் - இடைச்சுரத்து அழுங்கல்.

ஒப்புமைப்பகுதி

1-3. வெஞ்சுரத்து வம்பலர் இறத்தல்

"வெஞ்சுரத்து, உலந்த வம்பலர் உவலிடு பதுக்கை"

(குறுந். 77:2-3) (அகநா. 113:18, 161:2-4, 175:1-6, 313:12-3)

ஆறலை கள்வர் செயல்

"கூற்றத்து அன்ன கொலைவேல் மறவர்"

(குறுந். 283:5, 274:3-4, 297:1-4, 331:1-3)

"அற்றம் பார்த்து அல்கும் கடுங்கண் மறவர்தாம்
கொள்ளும் பொருள்இலர் ஆயினும் வம்பலர்,
துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்து உயிர் வௌவலின்"
(கலி. 4: 3-5)

"இறந்தோர் கைப்பொருள் இல்லை யாயினும்
மெய்க்கொண்டு இன்னுயிர் செகாஅர் விட்டதந் தப்பற்கு"
(அகநா. 109:10-12)

"அம்புதொடை அமைதி காண்மார் வம்பலர்
கலனிலராயினும் கொன்றுபுள் ஊட்டும் கல்லா இளையர்"
(அகநா. 375:8-5)

8. பதுக்கை நிழல் தருதல்

"உலந்த வம்பலர் உவலிடு பதுக்கை
நெடுநல் யானைக்கு இடுநிழல் ஆகும்"
(குறுந். 77:3-4 372:5)

"வெண்ணுனை அம்பின் விசையிட வீழ்ந்தோர்,
எண்ணுவரம்பு அறியா உவலிடு பதுக்கைச் சுரம்"
(அகநா. 109:7-9)

# 353. குறிஞ்சி

## தோழி கூற்று

ஆளில் பெண்டிர் தாளிற் செய்த
நுணங்குநுண் பனுவல் போலக் கணங்கொள
ஆடுமழை தவழும் கோடுஉயர் நெடுவரை
முடமுதிர் பலவின் குடமருள் பெரும்பழம்
5 கல்உழு குறவர் காதல் மடமகள்
கருவிரல் மந்திக்கு வருவிருந்து அயரும்
வான்தோய் வெற்ப சான்றோய் அல்லைஎம்
காமம் கனிவது ஆயினும் யாமத்து
இரும்புலி தொலைத்த பெருங்கை யானை
10 வெஞ்சின உருமின் உரறும்
அஞ்சுவரு சிறுநெறி வருத லானே.

எ-து: தோழி ஆற்றது அருமை அஞ்சித் தான் ஆற்றா ளாய்ச் சொல்லியது.

கபிலர்

ப-ரை : ஆள்இல் பெண்டிர் - பாதுகாக்கும் கணவனை இழந்த கைம்மை மகளிர், தாளில் - தம்முடைய முயற்சியால், செய்த - நூற்கின்ற, நுணங்கு - நுணங்கிய, நுண் - நுண்ணிய, பனுவல்போல - பறித்த பஞ்சுபோல, கணம்கொள - கூட்டமாக, ஆடுமழை - காற்றால் தாக்கப்படும் மேகம், தவழும் - தவழ் கின்ற, கோடு உயர் நெடுவரை - கொடிய உயர்ந்த நீண்ட சிகரங்களைக் கொண்ட மலையிடத்து, முடம் - வளைந்த, முதிர் - முதிர்ந்த, பலவின் - பலாமரத்திலுள்ள, குடம் மருள் - குடம் போன்ற, பெரும்பழம் - பெரிய பழத்தின் சுளையை, கல்உழு குறவர் - மலைப்பகுதியில் உழுது உண்டு வாழும் குறவரின், காதல் மடமகள் - அன்பு சான்ற இளையமகள், வருவிருந்து - வருகின்ற விருந்தாக ஏற்றுக் கொண்டு, கருவிரல் மந்திக்கு - கரிய விரலையுடைய மந்திக்கு, அயரும் - விருந்துண்பிக்கும், வான் தோய் வெற்ப - வானைத் தொடும் மலைநாடனே! எம் - எம்மிடம், காமம் - வேட்கை, கனிவது ஆயினும் - மிக்கு இருப் பினும், யாமத்து - நடுநிசியில், இரும்புலி - கரிய புலியை, தொலைத்த - கொன்ற, பெருங்கை - பெரிய கையை உடைய யானை, வெம்சின உருமின் - கொடிய சினத்தை உடைய இடிபோல, உரறும் - முழங்கும், அஞ்சுவருசிறுநெறி—யாவரும் அஞ்சுகின்ற சிறியகொடிய வழியில், வருதலால்—வருகின்ற காரணத்தால், சான்றோய் அல்லை—நீ சால்புடையை அல்லை, (ஆதலால், இவ்வாறு வருதலைத் தவிர்த்து விரைந்து வந்து தலைவியை மணந்து கொள்க)

முடிபு : வெற்ப, யாமத்து யானை உருமின் உரறும் சிறுநெறி வருதலான் சான்றோய் அல்லை என முடிக்க.

கருத்து : தலைவ! நள்ளிரவில் நீ வரும் வழி இன்னாது; எனவே வரைவிற்குரிய முயற்சியில் ஈடுபடுக.

வி-ரை : ஆள்இல் பெண்டிர் - தாபத மகளிர். கணவனை இழந்து கைம்மை நோன்பு நோற்பவர். பனுவல் - பஞ்சு. புறத் திலும் (125) "பருத்திப்பெண்டிர் பனுவலன்ன" என்று போந்துள்ளது காண்க.

உள்ளுறை : குறவர் மடமகள் பலாப்பழத்தின் சுளையை மந்தியை விருந்தாகக்கொண்டு அயரும் என்றது, நீ வரைந்து கொள்ள வருவையாயின் எம் உறவினர் நின்னை மணமகனாக ஏற்பர் என்றவாறு. உன் நாட்டுக் குறமகளிரும் பசித்து வந்த மந்தியை ஓம்பும் தன்மையராக இருக்க, நீ நம்பி வாழும்

தலைவியை மணவாது வாழ்தல் நன்றோ என்றாள். இத்தகைய கொடியவன் வாழும் மலையில் மஞ்சு தவழ்வது எவ்னோ என்று வியந்தாள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவுகடாதல்.

ஒப்புமைப்பகுதி

2. நுணங்கு நுண்பனுவல் போல
"பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கம்" (புறநா. 326:5)
நுண்ணிய பலவாய பஞ்சு நுனிகளால்
கைவன் மகடூஉத் தனது செய்கை மாண்பினால் ஓரிழைப்
படுத்தலாம் உலகத்து நூல் நூற்றல் என்பது
(இறை: சூ-1. உரை)
"பஞ்சிதன் சொல்லாப் பனுவல் இழையாக"
(நன்னூல். சூ-23)

9-10. களிறு புலியைத் தாக்குதல்
"சிறுகட் பெருங்களிறு வயப்புலி தாக்கி"
(குறுந். 88:2-3, 141:4-5, 343:1-3) (மலைபடு. 307:9)
(கலி. 38:6-7, 42:1-2, 48:1-7, 49:1-2, 52:1-4)
(அகநா. 332:2-9)

# 354. நெய்தல்

## தோழி கூற்று

தானது பொறுத்தல் யாவது கானல்
ஆடுஅரை ஒழித்த நீடுஇரும் பெண்ணை
வீழ்கா ஓலைச் சூழ்சிறை யாத்த
கானல் நண்ணிய வார்மணல் முன்றில்
5 எல்லி அன்ன இருள்நிறப் புன்னை
நல்அரை முழுமுதல் அவ்வயின் தொடுத்த
தூங்கல் அம்பித் தூவல்அம் சேர்ப்பின்
கடுவெயில் கொதித்த கல்விளை உப்பு
நெடுநெறி ஒழுகை நிரைசெலப் பார்ப்போர்
10 அளம்போகு ஆகுலம் கடுப்பக்
கௌவை ஆகின்றது ஐய நின்நட்பே.

எ-து : தோழியாற் செறிப்பு அறிவுறீஇ வரைவு கடாயது.
(அல்லது)
மனைவயின் தோழியைத் தலைவன் புகழ்ந்தாற்கு மறுத்துச் சொல்லியதூஉம் ஆம்.

## உலோச்சனார்

ப-ரை : ஐய - தலைவ!, கானல் - கடற்கரைச் சோலை இடத்து, ஆடு - காற்றால் அசைகின்ற, அரை - அடியில் உள்ளன வற்றை, ஒழித்த - வெட்டி அழித்தலான், நீடு - நெடிய, இரும் - கரிய, பெண்ணை - பனையினின்று, வீழ் - விழுகின்ற, காஓலை - காவிக் கொண்டு வந்த ஓலையை, சூழ் - சூழ்கின்ற, சிறை - வேலியில், யாத்த - மறைபடக் கட்டிய, கானல் நண்ணிய - கடற் கரைச் சோலையை அடுத்த, வார்மணல் முன்றில் - வெளிய மணலை உடைய முன்றிலின் கண்ணே, எல்லி அன்ன - இரவு போன்ற, இருள் நிறப் புன்னை - இருண்ட நிறத்தை உடைய புன்னையின், நல் அரை முழுமுதல் அவ்வயின் - நல்ல பெரிய அடிமரத்திலே, தொடுத்த - பிணித்துக் கிடத்தலான், தூங்கல் - தங்குதலைக் கொண்ட, அம்பி - தோணியை உடைய, தூவல் அம் சேர்ப்பின் - நீர்த்துவலை தெறித்து வீழும் கடற்கரை யிடத்தே, கடுவெயிற் கொதித்த - கொடிய வெயிலினாற் கொதிக் கின்ற, கல்விளை உப்பு - கல்லாக் விளைந்த உப்புக்களை ஏற்றி, நெடுநெறி - நீண்ட வழியிலே செலுத்தும், ஒழுகை - பண்டிகளின், நிரைசெலப் பார்ப்போர் - வரிசைகளைக் காண்போர், அளம் போகு ஆகுலம் கடுப்ப - உப்பை அளந்து கொடுக்கும் போழ்து எழும் ஆரவாரத்தைப் போன்று, நின் - தலைவியுடன் நீ கொண்ட, நட்பு - களவு ஒழுக்கம், கௌவை ஆகின்று - பழிச் சொல்லுக்கு இடமாக இருக்கின்றது; தானது பொறுத்தல் யாவது - அலரால் ஏற்பட்ட இற் செறிப்பை யாங்கள் எவ்வாறு பொறுப்போம்? ஆய்ந்து கூறுவாயாக.

முடிபு : ஐய! நின் நட்பு அளம் போகு ஆகுலம் கடுப்பக் கௌவை யாகின்றது; தானது பொறுத்தல் யாவது? எனமுடிக்க.

கருத்து : தலைவ! நின் நட்பை அன்னை அறிந்து இற் செறிப்புச் செய்தனள்; இனிக் காணல் இயலாது; விரைக, வரைக என்று தோழி கூறினாள்.

இறைச்சி : ஓலைச் சூழ் சிறை யாத்த கானல் என்றது, தலைவி இற் செறிக்கப்பட்டாள் ஆதலின் இரவுக்குறியில் நீ வரின் பயனில்லை என்றும், புன்னையினடியிலே தோணி இயக்கமறப்

பிணித்தது என்றது தலைவி காவல் அருமை உடையவளாயினாள் எனவும் கூறியதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

இரண்டாந்துறைக்கு மெய்ப்பாடு - உவகை.

பயன் - மகிழ்தல்.

# 355. குறிஞ்சி

## தோழி கூற்று

புதல்வன் ஈன்ற பூங்கண் மடந்தை
முலைவாய் உறுக்கும் கைபோல் காந்தள்
குலைவாய் தோயும் கொழுமடல் வாழை
அம்மடற் பட்ட அருவித் தீநீர்
5 செம்முக மந்தி ஆரும் நாட
முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்
அம்சில் ஓதிஎன் தோழி தோள்துயில்
நெஞ்சின் இன்புறாய் ஆயினும் அதுநீ
10 என்கண் ஓடி அளிமதி
நின்கண் அல்லது பிறிதுயாதும் இலளே.

எ-து : தோழி அருகு அடுத்தது.

(அல்லது)

தோழி தலைவியது ஆற்றாமை கண்டு வரைவு கடாயதூஉம் ஆம்.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : புதல்வன் - 'புத்' என்னும் நரகக்குழியில் விழாத வண்ணம் பெற்றோரைப் பாதுகாக்கும் புதல்வனை, ஈன்ற - அரிதிற் பெற்றெடுத்த, பூங்கண் மடந்தை - நீலமலர் போன்ற கண்களை உடைய மடந்தை, முலை - தன்னுடைய முலையை, வாய்உறுக்கும் கைபோல் - பால் பருகுவதற்கு குழந்தையின் வாயில் கையால் வைப்ப, அக் குழந்தை அதன் கண்ணுள்ள

பாலைப் பருகுதல் போல, காந்தள் - காந்தளின், குலை வாய் தோயும் - பூங்கொத்தோடு பொருந்திய, கொழுமடல் வாழை - கொழுவிய மடல்களையுடைய வாழைப்பூவின், அம்மடற்பட்ட - அந்த மடலுட்பட்ட, அருவித் தீம்நீர் - அருவிபோலப் பெருகி வரும் இனிய நீரை, செம்முக மந்தி - சிவந்த முகத்தை உடைய பெண் குரங்கு, ஆரும் - பற்றிப் பருகும், நாட - மலைநாடனே! நட்டோர் - உள்ளத்தால் நட்புடையோர், முந்தையிருந்து - கண்ணோட்டமுடைய நண்பர்க்கு எதிரே சென்று, கொடுப்பின் - இதனை நீவிர் உண்மை நண்பராயின் உண்மின் என விடத்தைக் கொடுத்த இடத்தும், நனிநாகரிகர் - நட்பின் மிக்க கண்ணோட்டமுடையார், நஞ்சும் - கொடுத்தது நஞ்சு எனக் கண்ட இடத்தும், உண்பர் - மறுக்காது உண்பர். (மேலும் அவரோடு கழி பெருங்காதல் உடையர் ஆவர்) நீர் அத்தகைய நட்புக் கொண்டவராயிருந்தும், அம் சில் ஓதி - அழகிய சிலவாகிய கூந்தலையுடைய, என் தோழி - எனது தோழியின், தோள் - தோளிலே, துயில் - உறங்குவதை, நெஞ்சில் - நும் உள்ளத்து, இன்புறாய் - இன்பமாகக் கருதினாய் இல்லை; ஆயினும் - ஆனாலும், அது - அவ்வாறு உறங்கி இன்புறுவதை, என்கண் ஓடி - என்பாலுள்ள கண்ணோட்டத்தினாலாவது, அளிமதி - தலையளி செய்குவை; ஏன் எனில், இத்தலைவிதான், நின் - நின்னுடைய, கண் அல்லது - அருளின்றி, பிறிது - வேறொரு ஆதரவும், இலள் - பெற்றிலள்.

முடிபு : மந்தி ஆரும் நாட! நாகரிகர் நஞ்சும் உண்பர்; நீ என், கண்ணோடித் தோழிக்கு அளிமதி. நின் கண்ணல்லது பிறிது யாதும் இலள் எனமுடிக்க.

கருத்து : தலைவ! நின் அருளின்றித் தலைவி உயிர் வாழாள்.

வி-ரை : நாகரிகர் - கண்ணோட்டமுடையவர். இவ்வாறே "பெயக்கண்டு நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர்" தமிழ்மறையும் (580) பேசும்.

வாழை மடலிலுள்ள இனிய நீரை மந்தி பருகும் நாடனாக இருந்தும் அதுபோல இவளது நலனை நுகர நீ விரும்பினாயில்லையே இஃது என்னை என வியந்தது.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - ஆற்றாது உரைத்து வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

3. வாழைக் கூம்பு முகிழ்

"வாழையந் தாளூறழ் குறங்கின் வாழைக்
கூம்பு முகிழன்ன வீங்கிள வனமுலை"
(பெருங். 4,74-5)

"அரம்பை முலையின் அருந்தவே" (சீவக. 74)

8. அஞ்சில் ஓதி

"அஞ்சில் ஓதி ஆய்வளை நெகிழ" (குறுந். 211:1)
"அஞ்சிலோதி அசையியற் கொடிச்சி" (குறுந். 214:3)
"நெஞ்சு பிணிக்கொண்ட அஞ்சிலோதி" (குறுந். 280:2)
(குறிஞ்சி. 180) (ஐங். 49:1, 391:6, 448:5)
(அகநா. 261:3) (சீவக. 2576)

# 356. குறிஞ்சி

## தலைவன் கூற்று

நிலம்தாழ் மருங்கின் தெண்கடல் மேய்ந்த
விலங்குமென் தூவிச் செங்கால் அன்னம்
பொன்படு நெடுங்கோட்டு இமயத்து உச்சி
வான்அர் மகளிர்க்கு மேவல் ஆகும்
5 வளராப் பார்ப்பிற்கு அல்குஇரை ஒய்யும்
அசைவில் நோன்பற்ற போலச் செல்வர
வருந்தினை வாழிஎன் உள்ளம் ஒருநாள்
காதலி உழையள் ஆகவும்
குணக்குத்தோன்று வெள்ளியின் எமக்கும்ஆர் வருமே.

எ-து: வரைவு மறக்கப்பட்டு ஆற்றானாகிய தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

பரணர்

ப-ரை: என் உள்ளம் - என் நெஞ்சமே! வாழி - நெடுங்காலம் நீ வாழ்வாயாக, நிலம் தாழ் மருங்கின் - நிலத்தின்கண்ணே ஆழ்ந்த இடத்தினை உடைய, தெண்கடல் - தெளிந்த கடல் பக்கம் சென்று, விலங்கு மென் தூவி - இரை தேடித் தின்ற ஒன்றற்கொன்று விலகிய, மென்மையான இறகுகளையும், செங்கால் - சிவந்த கால்களையும் உடைய, அன்னம் - அன்னப்

பறவைகள், பொன்படு நெடுங்கோடு - பொன் பொருந்திய நெடிய கொடு முடிகளை உடைய, இமயத்து - இமயமலையின், உச்சி - உச்சியில் இருக்கின்ற வான் அர மகளிர்க்கு - தேவருலகில் வாழும் தெய்வ மகளிர்க்கு, மேவல் ஆகும் - விருப்பத்தோடு விளையாடுவதற்குப் பயன்படும், வளரா - இறகு முளைத்து வளராத, பார்ப்பிற்கு - தம் இளம் குஞ்சுகளுக்கு, அல்கு இரை ஒய்யும்-இட்டு உண்ணும் உணவைக் கொடுக்குமாறு செல்லுகின்ற பொழுது, அசைவுஇல் நோன் பறை போல - அவற்றின் வருந்துதல் இல்லாத வலிய சிறகுகள் வருந்தினாற்போல, செல்வர - தலைவிபாற் சென்றும், மீண்டும் எள்பால் வந்தும், வருந்தினை - நீ வருத்தமுற்றனை. இதனை யான் நன்கு அறிவேன். ஒருநாள் - இன்று இல்லாவிடினும் என்றாவது ஒருநாள், குணக்குத் தோன்று - கீழ்த் திசையில் விடியற்காலை யில் தோன்றும், வெள்ளியின் - வெள்ளி என்னும் விண்மீனைப் போல, காதலி - என் தலைவி, எமக்கும் - எம்மைச் சார்ந்தும், உழையள் ஆகவும் - அருகில் இருக்குமாறு, வருமே - வரவும் கூடுமோ? அதனையேனும் கூறுவாய்.

முடிபு : என் உள்ளம்! அன்னம் அரமகளிர்க்கு மேவலாகும் பார்ப்பிற்கு இரை ஒய்யும் பறைபோல வருந்தினை; காதலி உழையளாக எமக்கும் வருமே என முடிக்க.

கருத்து : வரைவு மறுக்கப்பட்ட தலைவன் தன் நெஞ்சிற்கு, நம்மால் விரும்பப்பட்ட நம் காதலியை நாம் அடைய முடியுமோ என்று கூறினான்.

அ-ள் : ஒய்யும் - கொண்டு சென்று கொடுக்கும். ஆர் - அசைநிலை. ஏ - வினா.

அன்னப்பறவை இமயத்து உச்சியில் அரமகளிர் கையில் உள்ள தம் பார்ப்புகட்கு கடலகத்துள்ள இரையைக்கொண்டு சென்று கொடுக்கும் என்றது, யாமும் தமர்வயிற்பட்ட நமது காதலி நிமித்தமாக வேற்றுநாட்டுச் சென்று பொருள் ஈட்டி, உள்ளமும், அந்தணரும் சான்றோரும் துணையாகக்கொண்டு சென்று மீண்டு எய்தி வருந்தா நின்றேம் என்பதாம்.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

3. பொற்கோட்டு இமயம்

"பொற்கோட்டு இமயமும் பொதியமும் போன்றே"
(புறநா. 2:24)

"பொன்படு நெடுங்கோட்டு, இமயம் சூட்டிய
ஏம விற் பொறி" (புறநா. 39:14-5)

"பொன்னுடை நெடுங்கோட்டு இமயத்தன்ன"
(புறநா. 369:24)

# 357. குறிஞ்சி

## தலைவி கூற்று

நின்குறிப்பு எவனோ தோழி என்குறிப்பு
என்னொடு நிலையாது ஆயினும் என்றும்
நெஞ்சுவடுப் படுத்துக் கெடஅறி யாதே
சேண்உறத் தோன்றும் குன்றத்துக் கவாஅன்
5 பெயல்உழந்து உலறிய மணிப்பொறிக் குடுமிப்
பீலி மஞ்ஞை ஆலும் சோலை
அம்கண் அறைய அகல்வாய்ப் பைஞ்சுனை
உண்கண் ஒப்பின் நீலம் அடைச்சி
நீர்அலைக் கலைஇய கண்ணிச்
10 சாரல் நாடனொடு ஆடிய நாளே.

எ-து: தலைவன் வரைவு நீடிய இடத்து ஆற்றுவல் என்பதுபடச் சொல்லியது.

(அல்லது)

மனைமருண்டு வேறுபாடு ஆயினாய் என்ற தோழிக்குத் தலைவி சொல்லியதூஉம் ஆம்.

குறமகள் குறியெயினி

ப-ரை: தோழி - என் ஆருயிர்த் தோழியே! என் குறிப்பு - என்னுடைய எண்ணம், என்னொடு - என்னோடு, நிலையாது ஆயினும் - பொருந்தாது இருப்பினும், சேண்உற - ஆகாயத்தில் உயர்ந்து, தோன்றும் - தோன்றுகின்ற, குன்றத்து - மலையின், கவாஅன் - பக்கத்தில், பெயல் - மழை பெய்கையில், உழந்து - நனைந்து, உலறிய - மயிர் சிலிர்த்த, மணிப்பொறிக்

குடுமி - நீலமணி போன்ற புள்ளிகளையுடைய, கொண்டை யையும், பீலி - தோகையையும் உடைய, மஞ்ஞை - மயில், ஆலும் - சென்று உலாவுகின்ற, சோலை - சோலை சூழ்ந்த, அங்கண் - இடம் அகன்ற, அறைய - கற்பாறையிற் பொருந்திய, அகல் வாய்ப்பைஞ்சுனை - அகன்ற வாயை உடைய குளிர்ந்த சுனையிடத்துள்ள, உண்கண் - மையுண்ட கண்ணை, ஒப்பின் - ஒத்த, நீலம் - குவளை மலர்களை, அடைச்சி - கொய்து, நீர் அலை - நீராடும்போழ்து அந்நீர் அலைத்தலால், கலைஇய - குலைந்த, கண்ணி - மாலையை உடைய, சாரல் நாடனொடு - சாரல் நாடனுடனே, ஆடிய அருவியில் ஆடிய, நாள் - நாளினை நினைந்து, என்றும் - எக்காலத்தும், நெஞ்சு வடுப்படுத்து - நெஞ்சைப் புண்படுத்திக் கொண்டு, கெட - கெட்டொழிய, அறியாது - அறியாததாக இருக்கின்றது. நின் குறிப்பு - அது காரணமாக நின் எண்ணந்தான், யாதோ - எவ்வாறுள்ளதோ? அதனைக் கூறுவாயாக.

முடிபு : தோழி! சாரல் நாடனொடு ஆடிய நாள் என்றும் நெஞ்சுவடுப்படுத்துக் கெடவறியாதே; நின் குறிப்பு எவனோ? என முடிக்க.

கருத்து : யான் துன்புறாதிருப்பதை நெஞ்சமே நீ அறிந்தனையாதலால் என்னைப்பற்றி நின் குறிப்பு எவனோ என்றாள்.

இறைச்சி - மழை பெய்தலால் நனைந்த மயில் சோலையில் உலாவிவரும் என்றது, அவன் முன்பு ஒரு காலத்தே கூடித் தலையளி செய்தலால் மகிழ்ந்த எனது நெஞ்சம், இப்பொழுதும் சோர்வடையாமல் அவன் தோள்மீது இயங்காநிற்கும்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தோழியொடு கூறி ஆற்றியிருத்தல்.

ஒப்புமைப்பகுதி

7-10. தலைவி தலைவனோடு நீராடுதல்

"ஆர்கலி வெற்பன் மார்பு புணையாக
கோடுயர் நெடுவரைக் கவாஅற் பகலே
பாடின்னருவி ஆடுதல் இனிதே" (குறுந். 353:1-3)

8. குவளையையும் நெய்தலையும் அடைச்சுதல்

"கண்ணவிழ் நெய்தலும் கதுப்புற அடைச்சி"
(சிலப்-ஊர்காண்:77) (மதுரைக். 588)

# 358. நெய்தல்

## தோழி கூற்று
[தலைவி கூற்றும் ஆம்]

பெருந்தோள் நெகிழ அவ்வரி வாடச்
சிறுமெல் ஆகம் பெரும்பசப்பு ஊர
இன்னேம் ஆக எற்கண்டு நாணி
நின்னொடு தெளித்தனர் ஆயினும் என்னதூஉம்
5 அணங்கல் ஓம்புமதி வாழிய நீஎனக்
கணம்கெழு கடவுட்கு உயர்பலி தூஉய்ப்
பரவினம் வருகம் சென்மோ தோழி
பெருஞ்சேய் இறவின் துய்த்தலை முடங்கல்
சிறுவெண் காக்கை நாள்இரை பெறூஉம்
10 பசும்பூண் வழுதி மருங்கை அன்னஎன்
அரும்பெறல் ஆய்கவின் தொலையப்
பிரிந்துஆண்டு உறைதல் வல்லி யோரே.

எ-து: பட்டபின்றை வரையாது பொருள் வயிற் பிரிந்த காலத்து, இவள் ஆற்றாளாயினாள்; இவளை இழந்தேன் எனக் கவன்றாள் வற்புறுத்தது.

(அல்லது)

அக்காலத்து ஆற்றாளாய் நின்ற தலைவி தோழிக்குச் சொல்லியதூஉம் ஆம்.

நக்கீரர்

ப-ரை: தோழி - தோழி! பெருஞ்சேய் துய்த்தலை இறவின் - பெரிய செவ்விய பஞ்சு போன்ற தலையை உடைய இறாவின், முடங்கல் - வற்றலை, சிறுவெண் காக்கை - சிறிய வெளிய காக்கை, நாள் - விடியற்காலையில், இரை - இரையாக, பெறூஉம் - பெறுகின்ற, பசும்பூண் - பசுமையான ஆபரணங்களை அணிந்த, வழுதி - பாண்டியனுக்குச் சொந்தமான, மருங்கை அன்ன - மருங்கூர் போன்ற, என் - என்னுடைய, அரும் பெறல் - பெறாதற்கு அரிய, ஆய் - நுண்ணிதாகிய, கவின் - அழகு அனைத்தும், தொலைய - கெடும்படியாக, பிரிந்து - என்னை விட்டுப் பிரிந்து, ஆண்டு - ஆங்கு, உறைதல் - தங்குதற்கு, வல்லியோர் - வல்ல தலைவர், பெருந்தோள் - முன்னொரு சமயம் நம்பெருந்

தோள்கள், நெகிழ - தளர்வு அடைய, அவ்வரி - அழகிய வரிகள் (இரேகைகள்), வாட - வாட்டம் அடைய, சிறு - சிறிய, மெல் - மென்மையான, ஆகம் - மார்பில், பசப்பு - பசலை நிறம், ஊர - படர, இன்னேம் ஆக - யாம் இத்தன்மையேம் ஆதலும், (அவர் பிரிதலினால் தலைவிக்கு இம்மாற்றம் ஏற்பட்டது என்று எண்ணி) என் கண்டு - என்னை நோக்கி, நாணி - வெட்கமுற்று, நின்னொடு - உன்னோடு, தெளித்தனர் - தெய்வத்தைச் சுட்டி ஒருபொழுதும் பிரியேன் என்று சூளுறவு செய்தனர் என்றாலும், அச்சூள் பொய்த்தமையால், என்னதூஉம் - ஒரு சிறிதும், நீ அணங்கல் ஓம்புமதி - நீ அவரைச் சினந்து வருந்தாதேகொள், காப்பாய், வாழிய - வாழ்க, என - என்று, கணம் கெழுகடவுட்கு - பூதகணங்களையுடைய அக்கடவுளுக்கு, உயர் - சிறந்த, பலி - பலியினை, தூஉய் - படைத்து, பரவி - சாந்திசெய்து வழிபட்டு, வருகம் - தொழுது வருவோம், சென்மோ - அதற்காகச் செல்வேமோ? யோசித்து ஒன்று உரைப்பாய்.

முடிபு : தோழீ! நெகிழ, வாட, ஊர, நாணி, தெளித்தனர் ஆயினும் பிரிந்து உறைதல் வல்லியோரை அணங்கல் ஓம்புமதி எனப் பரவினம் சென்மோ.

கருத்து : பிரியேன் என்று பொய்த்துப் பிரிந்தவனை ஒறுக்காதே என்று தெய்வத்தைப் பரவுவோம்.

வி-ரை : தலைவியின் நலனைத் தன் நலம் என்று தோழி கூறியது "தாயத்தின் அடையா" (தொ. பொ, 221) என்ற விதிப் படி.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

1-2. தோள் மெலிதலும் பசலை உண்டாதலும்

"தொல்கவின் தொலைந்து தோள்நலம் சாஅய்
அல்ல னெஞ்சமோ டல்கலுந் துஞ்சாது
பசலை யாகி விளிவது கொல்லோ" (குறுந். 381:1-3)

# 359. குறிஞ்சி

## தோழி கூற்று

சிலம்பின் மேய்ந்த சிறுகோட்டுச் சேதா
அலங்குகுலைக் காந்தள் தீண்டித் தாதுகக்
கன்றுதாய் மருளும் குன்ற நாடன்
உடுக்கும் தழைதந் தனனே அவையாம்
5 உடுப்பின் யாய்அஞ் சுதுமே கொடுப்பின்
கேளுடைக் கேடுஅஞ் சுதுமே ஆயிடை
வாடல கொல்லோ தாமே அவன்மலைப்
போருடை வருடையும் பாயாச்
சூருடை அடுக்கத்த கொயற்குஅரும் தழையே.

எ-து: தோழி தழையேற்றுக்கொண்டு நின்று தலைவி குறிப்பின் ஓடியது.

கபிலர்

ப-ரை: சிலம்பின் - மலையில், மேய்ந்த - மேயச் சென்ற, சிறுகோட்டு - சிறிய கொம்புகளை உடைய, சேதா - செவ்விய பசு, அலங்கு குலைக் காந்தள் - அசைகின்ற குலையை உடைய காந்தளை, தீண்டி - உரசி, தாதுஉக - அக் காந்தள் மலரிலுள்ள தாதுக்கள் தன்மேலே உதிரப் பெற்றதனால், கன்று - அதன் கன்று, தாய் - நிறம் வேறுபட்டுத் தோன்றும் தன் தாய்ப்பசுவை, மருளும் - அறியாமல் மயங்கும், குன்ற நாடன் - மலைநாடன், உடுக்கும் - உடுத்திக்கொள்ள, தழை - தழையினை, தந்தனன் - கையுறையாகத் தந்தனன். அவை - அவற்றை, யாம் - நாங்கள், உடுப்பின் - (எம் நாட்டினர் எவரும் உடுக்காது) யாங்கள் மட்டும் உடுத்திக்கொள்ளின், யாய் - அன்னை கேட்டற்கு விடை சொல்ல அறியாது, அஞ்சுதும் - அஞ்சுவோம், கொடுப்பின் - அத் தழையை உடுக்காது மீட்டும் தலைவனிடமே திருப்பிக் கொடுத்து விடின், கேள் உடைக் கேடு அஞ்சுவதும் - அதனால் தலைவன் படும் துன்பத்திற்கு அஞ்சுவோம். ஆயிடை - ஆகிய அவற்றிடையே, அவன் - அத் தலைவனின், மலை - மலையிலுள்ள, போருடை - போரைச் செய்தலை உடைய, வருடை - மலையாடும், பாயா - அஞ்சிப் பாயாத, சூர்உடை - தெய்வம் வாழ்கின்ற, அடுக்கத்த - மலைப் பக்கத்தின் கண்ணுள்ள, கொயற்கு

அரும்தழை - கொய்தற்கு அரிய தழைகள் தாம், வாடல கொல்லோ? - வாடுதல் உடைய ஆகலாமோ?

முடிபு : குன்ற நாடன் தழை உடுப்பின் யாய் அஞ்சுதும்; கொடுப்பின் கேளுடைக் கோடு அஞ்சுதும்; ஆயிடை, தழை வாடல கொல்லோ? என முடிக்க.

கருத்து : தலைவன் தரும் தழையை ஏற்பின் யாய்க்கு அஞ்சுவேன் கொடுப்பின் தலைவன் ஆற்றாமைக்கு அஞ்சுவேன், யான் யாது செய்வேன் என்று தோழி தலைவியின் குறிப்பு அறிய முற்பட்டாள்.

உள்ளுறை : காந்தளம் தாது தன் மேல் மூடப்படுதலால் தாய்ப் பசுவின் நிறம் மாறுபடக் கண்ட கன்று மயங்கும் என்றது, தலைவி நாணம் முதலியவற்றால் வேறுபட்டுக் கருத்து வேறாதலைக் கண்ட தோழி மயங்கா நின்றாள் என்பதாம்.

மெய்ப்பாடு - இளிவரலைச் சார்ந்த பெருமிதம்.

பயன் - குறை நயப்பித்தல்.

ஒப்புமைப்பகுதி

2. குலைக் காந்தள்

"குருதிப்பூவின் குலைக் காந்தட்டே" (குறுந். 1:4)

"சிலம்புடன் கமழும் அலங்கு குலைக் காந்தள்" (குறுந். 239:3)

"எடுத்த நறவின் குலையலங் காந்தள்" (கலி. 40:12)

"பஃறுடுப்பு எடுத்த அலங்கு குலைக் காந்தள்" (அகநா. 108:15)

"பூந்தண் சாரற் பொங்கு குலையெடுத்த
காந்தட் கொழுமுகை" (பெருங். 2, 12:57-8)

7-8. வரைச் சேக்கை வருடை

"செவ்வரிச் சேக்கை வருடை மாண்மரி (குறுந். 187:1)

"வரையாடு வருடை" (பட். 139)

"வரைவாழ் வருடை" (அகநா. 378:6)

"வரையாடு வருடையும்" (சிலப். 25:1)

"வரைபாய் வருடை" (தொல்:தொகை. 15. ந.மேற்)

"சிலம்புபாய் வருடை ஒடுக்கருஞ் சென்னிநீர்" (சீவக. 1238)

"குருங்கால் வருடை" (ஐங். 287)

9. சூருடை அடுக்கம்

"சூருடை அடுக்கத்து ஆரம் கடுப்ப" (குறுந். 376:2)
(அகநா. 158:8, 162:25, 198:14-7, 359:11)

# 360. மருதம்

## தோழி கூற்று

முழவுமுகம் புலர்ந்து முறையின் ஆடிய
விழவுஒழி களத்த பாவை போல
நெருநைப் புணர்ந்தோர் புதுநலம் வெளவி
இன்றுதரு மகளிர் மென்தோள் பெறீஇயர்
5 சென்றீ பெரும சிறக்க நின்பரத்தை
பல்லோர் பழித்தல் நாணி வல்லே
காழிற் குத்திக் கசிந்தவர் அலைப்பக்
கையிடை வைத்தது மெய்யிடைத் திமிரும்
முனியுடைக் கவளம் போல நனிபெரிது
10 உற்றநின் விழுமம் உவப்பேன்
மற்றும் கூடும் மனைமடி துயிலே.

எ-து : பரத்தையிற் பிரிந்த தலைவனைத் தோழி தலைவி குறிப்பறிந்து வாயின் மறுத்தது.

(அல்லது)

தலைவி ஊடிச் சொல்லியதூஉம் ஆம்.

### ஓரம்போகியார்

ப-ரை : பெரும - பெருமானே!, பல்லோர் - பலரும், பழித்தல் - பழித்துக் கூறுதலைப் பொறுக்காது, நாணி - வெட்கம் உற்று, வல்லே - விரைவாக, காழில் குத்தி - இருப்பு முள்ளால் குத்தி, கசிந்தவர் - வருந்திய பாகர், அலைப்ப - தன்னைத் துன்புறுத்துவதால், கையிடை வைத்ததை - தன் கையிடம் வைத்ததை வெறுப்புடன், மெய்யிடை திமிரும் - தன் உடல் முழுதும் வாரி இறைத்துக்கொள்ளும், முனியுடை - யானைக் கன்றுக்கு இட்ட, கவளம்போல - கவள உணவினைப் போல, நனி பெரிது உற்ற - மிகப் பெரிதாக நீயுற்ற நின் சீர்மையை யான் கண்டு, உவப்பேன் - மகிழ்வேன், மனை - மனையின்கண், மடிதுயில் - வந்து துயிலுகின்ற துயிலானது, மற்றும் கூடும் - பிறிதொரு சமயத்திலும் நிகழும்; ஆதலால், முழவு முகம் புலர்ந்து - மத்தளத்தின் நடுவில் உள்ள மார்ச்சனை வறண்டு போகும்வண்ணம், முறையின் - முறையாக, ஆடிய - கூத்துக்களை ஆடிய, விழவு ஒழி களத்த - திருவிழா நீங்கிய களத்திலுள்ள, பாவை போல - கூத்தியைப் போல, நெருநை - நேற்றை நாள் வந்து, புணர்ந்தோர் - நின்னை முயங்கிய பரத்தையருடைய

புதுநலம் வெளவி - புதிய அழகை எல்லாம் கொள்ளைகொண்டு, இன்று - இற்றைநாள், தரு - பாணனால் கொண்டுவந்து தரப்படு கின்ற மகளிர் - பரத்தையருடைய, மென்தோள் பெறீஇயர் - மெல்லிய தோளை அணையும்வண்ணம், சென்றீ - செல்வாயாக; சிறக்க நின் பரத்தை - நின்னொடு நின் பரத்தை நெடுங்காலம் வாழ்வாளாக.

முடிபு : பெரும! அலைப்ப, திமிரும், முனியுடைக் கவளம் போல நின் விழுமம் உவப்பேன், துயில் மற்றும் கூடும், மகளிர் மென்றோள் பெறீஇயர் சென்றீ என முடிக்க.

கருத்து : பெருமானே! நின் சீர்மை கண்டு மகிழ்வன் என்று தோழி அசதியாடி, மீண்டும் பரத்தைபாற் செல்க என்று தலைவி யின் ஊடலைத் தோழி அறிவுறுத்தினாள்.

அ-ள் : காழ் - இருப்புமுள். முனி - யானைக் கன்று. அது தனக்குப் பாகர் இட்ட சோற்றைத் தன் உடல் முழுதும் வாரி இறைத்துக்கொள்வதுபோல், வெட்கம் இன்றி நீ மேலே போட்டுக் கொண்ட பழிச் சொல்லை யான் கண்டு மகிழ்வேன் என்றாள். விழுமம் - இகழ்ச்சிக் குறிப்பு.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - வாயின் மறுத்தல்.

# 361. முல்லை

## தோழி கூற்று

சிறுவீ முல்லைப் பெரிதுகமழ் அலரி
தானும் சூடினன் இளைஞரும் மலைந்தனர்
விசும்புகடப்பு அன்ன பொலம்படைக் கலிமாப்
படுமழை பொழிந்த தண்ணறும் புறவின்
5 நெடுநா ஒண்மணி பாடுசிறந்து இசைப்ப
மாலை மான்ற மணல்மலி வியன்நகர்த்
தந்தன நெடுந்தகை தேரே என்றும்
அரும்படர் அகல நீக்கி
விருந்துஅயர் விருப்பினள் திருந்திழை யோளே.

எ-து : வாயில்களோடு தோழி உறழ்ந்து சொல்லியது.

மதுரைப் பேராலவாயர்

ப-ரை : சிறுவீ முல்லை - சிறிய மலரை உடைய முல்லையினது, பெரிது கமழ் அலரி - மிகவும் நறுமணம் வீசுகின்ற மலரை, நெடுந்தகைதானும் சூடினன் - நீண்ட புகழை உடைய இறைவன் தானும் சூடினன், இளைஞரும் - அவனுடன் வந்த தோழர்களும், மலைந்தனர் - சூடினர், விசும்பு கடப்பு அன்ன - விசும்பைக் கடந்தால் ஒத்த, பொலம் படை - பொன்னால் ஆகிய சேணத்தை அணிந்த, கலிமா - கனைக்கின்ற குதிரைகள், படுமழை - மிக்க மழை, பொழிந்த - பெய்த, தண் நறும் புறவில் - குளிர்ந்த நறுமணம் கமழும் காட்டில், நெடுநா - நீண்ட நாவை உடைய, ஒண்மணி - ஒள்ளிய மணியோசை, பாடுசிறந்து இசைப்ப - மிக்கு ஒலிப்ப, தேர் - அவனுடைய தேரை, மாலை மான்ற - மாலைப் பொழுது மயங்கிய காலை, மணல்மலி வியன் நகர் - மணல்மிக்க அகன்ற மாளிகையின் வாயிலிலே, தந்தன - கொண்டு வந்து நிறுத்தின; திருந்து இழையோளே - திருந்திய கலன் அணிந்த தலைவிதான், என்றும் - முன்பு எந்நாளும் பெற்றிருந்த, அரும்படர் - தீர்தற்கு அரிய துன்பம் எல்லாம், அகல - ஒருங்கே நீங்கி, விருந்து அயர் விருப்பினள் - தலைவனுக்கு விருந்து அயரும் விருப்பத்தை உடையவளாக இருக்கின்றனள், ஆகையால் அவள் ஊடல் நீளும் என்று நீயிர் கவலற்க.

முடிபு : கலிமா நெடுந்தேர் வியன் நகர்த் தந்தன; திருந்து இழையோள் அரும் படர் அகலவிருந்தயர் விருப்பினள் என முடிக்க.

கருத்து : வாயில்காள்! நீவிர் கவலற்க; தலைவன் தேர் வந்தற்று. தலைவி விருந்தயர்கின்றாள் என்று தோழி மாறு பட்டுரைத்தாள்.

அ-ள் : படை - கலனை - சேணம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வாயில்கள் மகிழ்தல்.

ஒப்புமைப்பகுதி

5-9. தலைவன் வரவு குறித்து விருந்தயர்தல்

"மாலை நனிவிருந் தயர்மார்
தேர்வரும் என்னும் உரைவாராதே" (குறுந். 155:6-7)

"விருந்தும் பெறுகுநள் போலும், திருந்திழைத் தடமென்
பணைத்தோள் மடமொழி அரிவை...செல்லும்
நெடுந்தகை தேரே" (அகநா. 324)
"வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை அயர்கம் விருந்து" (குறள், 1268)

# 362. பாலை

## தலைவன் கூற்று

வினையமை பாவையின் இயலி நுந்தை
மனைவரை இறந்து வந்தனை ஆயின்
தலைநாட்கு எதிரிய தண்பெயல் எழிலி
அணிமிகு கானத்து அகன்புறம் பரந்த
5 கடும்செம் மூதாய் கண்டும் கொண்டும்
நீவிளை யாடுக சிறிதே யானே
மழகளிறு உரிஞ்சிய பராரை வேங்கை
மணல்இடு மருங்கின் இரும்புறம் பொருந்தி
அமர்வரின் அஞ்சேன் பெயர்க்குவன்
10 நுமர்வரின் மறைகுவென் மாஅ யோளே.

எ-து : உடன்போகாநின்ற தலைவன் தலைவிக்குச் சொல்லியது.

### மதுரை மருதன் இளநாகனார்

ப-ரை : மாயோளே - கரிய மாமை நிறமுடைய என் அருமைக் காதலியே! வினை அமை பாவையின் - இயந்திரம் அமைந்த கொல்லிப்பாவைபோல, இயலி - நடந்து, நுந்தை - நின்னை அருமையாகப் பெற்றெடுத்த தந்தையின், மனைவரை இறந்து - வீட்டின் எல்லையைக் கடந்து, யான் கூறுகின்ற சொற்களைக் கேட்டு, வந்தனை - என்னொடு போந்தனை; ஆதலால், தலைநாட்கு - முதல்நாளில், எதிரிய - மேலே எழுந்து, தண்பெயல் எழிலி - குளிர்ச்சி வாய்ந்த மேகம் மழைபொழிய, அணிமிகு கானத்து - அதனால் அழகு மிகப் பெற்ற காட்டில், அகன்புறம் - அகன்ற மேலிடம் எல்லாம், பரந்த - பரவிய, கடும் - விரைந்த செலவினையுடைய, செம்மூதாய் - சிவந்த தம்பலப் பூச்சியை, கண்டும் - பார்த்தும், கொண்டும் - அவற்றைப்

பிடித்தும், நீ சிறிது - நீ சற்று நேரம், விளையாடுக - விளையாடிக் கொண்டிருப்பாயாக; யானே - யானோ எனில், மழகளிறு - இளையகளிற்றியானை, உரிஞ்சிய - உராய்ந்த, பராரை - பருத்த அடியை உடைய; வேங்கை - வேங்கை மரத்தின், மணல் இடு மருங்கின் - மணற்பரப்பையுடைய அதன் பெரிய பின்புறத்தில், அமர்வரின் - ஆறலை கள்வர் சூழ்ந்து வந்து போர் செய்வராயின், பெயர்க்குவென் - அஞ்சாது, போர் புரிந்து அவர்கள் ஒடுமாறு செய்குவேன், நுமர்வரின் - மாறாக நுஞ்சுற்றத்தார் பின் தொடர்ந்துவரின், மறைகுவென் - மறைந்து கொள்வேன்; கவலுறேல்.

முடிபு : மாயோளே! நீ மூதாய் கண்டும் கொண்டும் சிறிது விளையாடுக, யான், அமர்வரின் அஞ்சேன், நுமர்வரின் மலறகுவென் என முடிக்க.

கருத்து : உடன் போக்கின் கண் அயர்வுற்ற தலைவியை நோக்கி, அயரேல்; நீ சற்று விளையாடுக. நான் ஆறலை கள்வர்வரின் அமர் செய்து ஓட்டுவேன்; நுமர்வரின் மறையா நிற்பல் என்று தலைவி அயர்வொழியுமாறு தலைவன் கூறினான்.

வி-ரை : எவர்வரினும் வெல்லும் ஆற்றலுடையேன், எனினும் தலைவி தன்னுள்ளத்து, தலைவனுக்கு ஏதேனும் ஏதம் விளையுங்கொல் என்று ஏங்குவாளாகலின், மறைகுவென் என்றான்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தன் வலியுணர்த்தித் தலைவியை ஆற்றுவித்தல்.

## 363. நெய்தல்

### தோழி கூற்று

கண்டல் வேலிக் கழிசூழ் படப்பைத்
தெண்கடல் நன்னாட்டுச் செல்வன் யான்என
வியம்கொண்டு ஏகினை ஆயின் எனையதூஉம்
உறுவினைக்கு அசாவா உலைவுஇல் கம்மியன்
5 பொறிஅறு பிணைக்கூட்டும் துறைமணல் கொண்டு

வம்மோ தோழி மலிநீர்ச் சேர்ப்ப
பைந்தழை சிதையக் கோதை வாட
நன்னர் மாலை நெருநை நின்னொடு
சிலவிலங்கு எல்வளை ஞெகிழ
10 அலவன் ஆட்டுவோள் சிலம்புஞெமிர்ந் தெனவே.

எ-து : பகற்குறி வந்து நீங்கும் தலைவனைத் தோழி தலைவியை என்னை ஆற்றுவிக்கும் என்று ஆகாதோ எம்பெருமான் கவலாது செல்வது? யான் ஆற்றுவிக்கும் இட்த்துக் கவன்றால் நீ ஆற்றுவி எனச் சொல்லியது,

(அல்லது)

கையுறை நேர்ந்த தோழி தலைவிக்குக் கையுறை உரைத்ததூஉம் ஆம்.

## உலோச்சனார்

ப-ரை: மலிநீர்ச் சேர்ப்ப - நிறைந்த கடல்நீர் பரவிய நெய்தல் நிலத்தலைவனே! பைந்தழை - உடுத்தியிருந்த தழையாடை சிதைய, கோதை - சூடியிருந்த மாலை வாட, சில - சிலவாகிய, இலங்கு - விளங்கிய, எல்வளை - ஒளிபொருந்திய வளையல்கள், ஞெகிழ - நெகிழ, நன்னர் - நன்றாக, நெருநை - நேற்று, மாலை - மாலை நேரத்தில், நின்னொடு - உன்னோடு, அலவன் - நண்டை, ஆட்டுவோள் - பிடித்து ஆட்டி, விளையாடிய தலைவியின், சிலம்பு - சிலம்பென்னும் காலணி, ஞெமிர்ந்தென - உடைந்து போனதனால், கண்டல் - தாழைகளை, வேலி - வேலியாகக் கொண்டிருக்கும், கழிசூழ் - நீர்க்கழிகள் சூழ்ந்த, படப்பை - கொல்லைகளையுடைய, தெண்கடல் - தெளிந்த நல்ல கடலையுடைய, நாட்டுச் செல்வன் - நெய்தல் நிலத் தலைவன், யான் என - யான் என்று, வியம்கொண்டு - வந்த வழியிற் செல்ல எண்ணி, ஏகினையாயின் - போதலை மேற்கொள்வையாயின், எனையதூஉம் - எத்துணை அளவேனும், உறுவினைக்கு - தான் செய்யும் மிக்க கம்மத் தொழிலில், அசாவா - வருத்தமுறாத, வலைவு இல் - கெடுதல் அற்ற, கம்மியன் - பொற்கொல்லன், பொறிஅறு பிணைக் கூட்டும் - அணிகலன் பொறி அற்றுப் போயினவிடத்து இணைத்து சந்து ஊதிக் கூட்டுதற்கு மண் கட்ட வேண்டுமன்றோ? அங்ஙனம் கட்டுதற்கு, துறைமணல் கொண்டு வம்மோ - மண் எடுக்கும் துறையிலுள்ள மணலைக் கொண்டு வந்து தந்து செல்வாயாக.

முடிபு : சேர்ப்ப! சிதைய வாட நெகிழ சிலம்பு ஞெமிர்ந்தன ஏயினையாயின் மணற் கொண்டு வம்மோ எனமுடிக்க.

கருத்து : தலைவ! நின்னொடு ஆடியதால் தலைவியின் சிலம்பு சிதைந்து விட்டது. அதைப் பொருத்துதற்கு நின் துறையின் மணலைக் கொண்டு வருவாயாக.

வி-ரை : சிலம்பு சிதைவுற்றதை அன்ன அறியின் இற்செறிப்பு நிகழும். எனவே அன்னை அறிதற்கு முன் சிலம்பைச் சரி செய்ய வேண்டும். இற்செறிப்பு நிகழின் என்னால் தலைவியை ஆற்றுதல் அரிது. எனவே நின்துறை மணலை நீயே கொணர்ந்து சிலம்பைக் கூட்டி ஆற்றுவிப்பாய் என்றாள். நீ ஆற்றுதி எனவே நின்னையன்றி உயிர் வாழாள் என்பதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - ஆற்றாமை உரைத்து வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

10. அலவன் ஆட்டல்

"இலங்குவளை தெளிர்ப்ப அலவன் ஆட்டி" (ஐங். 197)
(பட். 101)

"பொன்வரி அலவன் ஆட்டியஞான்றோ" (குறுந். 303:7)

"முள்ளி வேரளைக் களவன் ஆட்டி" (ஐங். 23)

# 364. முல்லை

## தலைவி கூற்று

சொல்லிய பருவம் கழிந்தன்று எல்லையும்
மயங்கிருள் நடுநாள் மங்குலோடு ஒன்றி
ஆர்கலி வானம் நீர்பொதிந்து இயங்கப்
பனியின் வாடையொடு முனிவுவந்து இறுப்ப
5 இன்ன சின்னாட் கழியிற் பன்னாள்
வாழலேன் வாழி தோழி ஊழின்
உருமிசை அறியாச் சிறுசெந் நாவின்
ஈர்மணி இன்குரல் ஊர்நனி இயம்பப்
பல்ஆ தந்த கல்லாக் கோவலர்
10 கொன்றைஅம் தீங்குழல் மன்றுதோறு இயம்ப
உயிர்செலத் துனைதரும் மாலை
செயிர்தீர் மாரியொடு ஒருங்கு தலைவரினே.

எ-து : தலைவி வரைவிடை மெலிந்தது.

## கிடங்கில் காவிதிப் பெருங் கொற்றனார்

ப-ரை : தோழி - தோழி!, வாழி - நீ நெடுங்காலம் வாழ் வாயாக, சொல்லிய - தலைவர் வருவேம் என்று சொல்லிச் சென்ற, பருவமோ - கார் காலமோ, கழிந்தன்று - வந்து போய் விட்டது; எல்லையும் - பகற்பொழுதும், மயங்கு இருள் நடுநடு நாள் - இருள்செறிந்த நடுநிசியில், மங்குலோடு - கார் இருளோடு பொருந்தி, ஆர்கலி வானம் - நிரம்பிய இடி முழக்கத்தையுடைய வானம், நீர் பொதிந்து - நீர் நிறைந்து, இயங்க - சஞ்சரிக்க, வாடையொடு - வாடைக் காற்றுடனே, பனியின் முனிவு - பனி யின் சினம் அனைத்தும், வந்து இறுப்ப - வந்து என்மேல் தங்க, இன்ன சில்நாள் - இவ்வாறாகிய சில நாட்கள், கழியின் - நீங்கு வன ஆயினும், ஊழின் - முறையே, மிசை - விசும்பில், உரு அறியா - இடி முழக்கம் கேட்கப்படாத, செயிர் தீர் மாரியொடு - குற்றம் தீர்ந்த மாரியுடனே, சிறு செந்நாவின் - வல்லோசை செய்தறியாத சிறிய செவ்விய நாவினை உடைய, ஈர்மணி இன் குரல் - மணியின் குளிர்ந்த இனிய ஓசை, ஊர் நனி இயம்ப - ஊரின் கண்ணே புகுந்து மிக ஒலிக்கும் வண்ணம், பல்ஆ - பல வாய ஆநிரைகளை, தந்த - நமது ஊரிலே செலுத்தி வந்த, கல்லா - நிரை ஓம்பலைத் தவிர பிறிதொரு தொழிலைக் கற்றறி யாத, கோவலர் - ஆயருடைய, கொன்றை அம் தீம்குழல் - கொன்றைப் பழத்தாற் செய்த இனிய புல்லாங்குழல் இசை, மன்று தோறு இயம்ப - இவ்விடம் எங்கும் ஒலிக்க, உயிர்செல - பிரிந்தோரின் உயிர் உடலை விட்டு உடனே நீங்கும்படி, துனை தரு - விரைந்து வருகின்ற, மாலை - மாலைப் பொழுதானது, ஒருங்கு - ஒருசேர, தலைவரின் - வந்து சேர்ந்தால், வாழலேன் - எந்நாளும் உயிர் வாழேன், காண்.

முடிபு : தோழி! ஊர் நனி இயம்ப, மன்று தோறு இயம்ப, மாரியொடு மாலைவரின் வாழலேன் எனமுடிக்க.

கருத்து : சொன்ன கார்காலமோ நீங்கியது. இனி வரும் மாலைப்பொழுதில் நான் எவ்வாறு உயிர் வாழ்வேன் என்று தலைவி அழிந்து கூறினாள். பிரிந்தவர் உயிரை மாலை வருத்தும் என்னும் உண்மை,

> "மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும்
> வேலைநீ வாழி பொழுது"

என்னும் குறளானும் (1221) அறியலாம்,

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

# 365. குறிஞ்சி

## தோழி கூற்று

அருங்கடி அன்னை காவல் நீவிப்
பெருங்கடை இறந்து மன்றம் போகிப்
பகலே பலரும் காண வாய்விட்டு
அகல்வயற் படப்பை அவன்ஊர் வினவிச்
5 சென்மோ வாழி தோழி பல்நாள்
கருவி வானம் பெய்யாது ஆயினும்
அருவி ஆர்க்கும் அயம்திகழ் சிலம்பின்
வான்தோய் மாமலை நாடனைச்
சான்றோய் அல்லை என்றனம் வரற்கே.

எ-து : தோழி தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவிக்கு உரைப்பாளாய் இயற்பழித்து இன்னது செய்தும் என்பாளாய்ச் சொல்லியது.

### கிள்ளிமங்கலம், கிழார் மகனார் சோகோவனார்

ப-ரை : தோழி - தலைவியே! வாழ்க - நீ நீண்ட நாட்கள் வாழ்க, பல்நாள் - பல நாட்களாக, கருவி - இடி மின்னல் முதலாய தொகுதியை உடைய, வானம் - மேகம், பெய்யாது ஆயினும் - மழை பொழியாமற் போயினும், அருவி - அருவியின் கண் நீர் வற்றாது, ஆர்க்கும் - ஒலியுடன் ஓடி வரும், அயம் - தண்ணீர், திகழ் - குறைவின்றி விளங்குகின்ற, சிலம்பின் - பக்க மலையினை உடைய, வான் தோய் - வானை அளாவிய, மா - பெரிய, மலை நாடனை - மலை நாடனாகிய நம் தலைவனை, சான்றோய் அல்லை - (நெருங்கி நின்னை நம்பிய எம்மை நீ வரையாது கை விடுதலால்,) சால்பு உடையை அல்லை, என்றனம் - என்று கூறினேமாகி, வரற்கு - மீண்டு வருதற்கு, அருங்கடி - அருமையாகிய காவலை அமைத்த, அன்னை - அன்னையின், காவல் - இற்செறிப்பை, நீவி - எவரும் அறியாதபடி நீங்கி, பெருங்கடை இறந்து - பெரிய முன் வாயிலையும் தாண்டி, மன்றம் போகி - பொது அம்பலத்தையும் கடந்து, பலரும் காண - பலரும் காணுமாறு, பகல் - பகற் பொழுதில், வாய்விட்டு - நாணம் சிறிதும் இன்றி வாய் திறந்து, அகல் - அகன்ற, வயல் - வயல்களாற் சூழப்பட்ட, படப்பை - கொல்லைகளை உடைய, அவன் ஊர் வினவி - அவனுடைய ஊர் எவ்விடத்து உள்ளது

என்று கேட்டறிந்து, செல்மோ - சென்று வருவேமோ, ஒன்று கூறுவாயாக.

முடிபு : தோழி! மலை நாடனைச் சான்றோய் அல்லை என்றனம் வரற்கு, நீவி, இறந்து, போகி, வினவிச் செல்மோ என முடிக்க.

கருத்து : தலைவன் வந்து நிற்றலைக் காணாததுபோல் தோழி தலைவியிடம் "வரையாது ஒழுகும் தலைவனைச் சான்றோய் அல்லை என்று அவன் ஊர் வினவிச் சென்று கூறி வருவோம்" என்று தோழி கூறினாள்.

அ-ள் : அயம் - நீர். 'சான்றோய் அல்லை' என்பது இயற்பழித்து உரைத்தல்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

3-5. தலைவன் உள்ள இடத்துப் போவேமாக என்றல்.
"அளிதோ தானே நாணே, ஆங்கவர் வதிவயின்
நீங்கப் படினே" (குறுந். 395:7-8)

8-9 தலைவன் 'சான்றோன் அல்லன்' எனப்படுதல்.
"சான்றோர் அல்லர்யா மரீஇயோரே" (குறுந். 102:4)

# 366. பாலை

## தலைவன் கூற்று

அரவுக்கிளர்ந்து அன்ன விரவுறு பல்காழ்
வீடுறு நுண்துகில் ஊடுவந்து இமைக்கும்
திருந்துஇழை அல்குல் பெருந்தோள் குறுமகள்
மணிஏர் ஐம்பால் மாசுஅறக் கழீஇக்
5 கூதிர் முல்லைக் குறுங்கால் அலரி

மாதர் வண்டொடு சுரும்புபட முடித்த
இரும்பல் மெல்அணை ஒழியக் கரும்பின்
வேல்போல் வெண்முகை பிரியத் தீண்டி
முதுக்குறை குரீஇ முயன்றுசெய் குடம்பை
10 மூங்கில் அம்கழை தூங்க ஒற்றும்
வடபுல வாடைக்குப் பிரிவோர்
மடவர் வாழிஇவ் வுலகத் தானே.

எ-து : உலகியல் கூறிப் பொருள்வயிற் பிரிய வலித்த நெஞ்சிற்குத் தலைவன் சொல்லியது.

## மதுரை, ஈழத்துப் பூதன் தேவனார்

ப-ரை : நெஞ்சமே! அரவு - பாம்பு, கிளர்ந்து அன்ன - படம் எடுத்து எழுந்தாற் போன்ற, விரவுஉறு - பல்வகையாகக் கலந்த, பல்காழ் - எண்மணிக் கோவையாகிய மேகலை அணிந்த, வீடுஉறு - நடத்தலால் ஒதுங்குதல் அமைந்த, நுண்துகில் ஊடு வந்து இமைக்கும் - நுண்ணிய துகிலின் உள்ளால் வந்து தோன்றி விளங்குகின்ற, திருந்து இழை - திருந்திய இழைகளை அணிந்த, அல்குல் - அல்குலையும், பெருந்தோள் - பெரிய தோளையு முடைய, குறுமகள் - இளமடந்தையின், மணிஏர் - நீலமணியை ஒத்த, ஐம்பால் - ஐவகையாக முடிக்கப்படும் கூந்தலை, மாசு அறக் கழீஇ - மாசு போகத் தூய்மை செய்து, விளக்கி, கூதிர்முல்லை - குளிர் காற்றால் மலருகின்ற முல்லையின், குறுங்கால் - குறுகிய காம்பை உடைய, அலரி - மலர்களை, மாதர் வண்டொடு - இளைய பெண் வண்டுடனே, சுரும்பு - ஆண் வண்டும், பட - சூழுமாறு, முடித்த - முடித்திருக்கின்ற, இரும்பல்மெல் அணை - மிகப் பலவாகிய மெல்லிய அக் கூந்தல் படுக்கையில், ஒழிய - கிடந்து தூங்குதலைத் தவிர்த்து, கரும்பின் - கரும்பினது, வேல் போல் வெண்முகை பிரிய - வேல் போல்கின்ற வெளிய முகை பிரியும்படி, தீண்டி - மோதி, முதுக்குறை - அறிவு மிக்க, குரீஇ - தூக்கணங் குருவி, முயன்று செய் குடம்பை - தான் முயன்று செய்த கூட்டினை உடைய, மூங்கில் அம் கழை - மூங்கில் தன் அடிப்பகுதியும், தூங்க - அசையுமாறு, ஒற்றும் - தாக்குகின்ற, வடபுல வாடைக்கு - வடதிசைக்குரிய வாடைக் காற்று வீசும் கூதிர்ப் பருவத்திலே, பிரிவோர் -பிரிபவர், இவ்வுலகத்து - இந்தப் பரந்த உலகில், மடவர் - அறியாமை மிக்கு உடையர் ஆவர், வாழி - அவர் தாம் வாழ்க.

முடிபு : நெஞ்சே! கூந்தல்மெல் அணை ஒழிய வாடைக்குப் பிரிவோர் இவ்வுலகத்தான் மடவர் வாழி என முடிக்க.

கருத்து : வாடையால் தலைவி வருந்தி இறந்தொழியுமாறு பொருள்வயிற் பிரிவோர் மிகவும் அறியாமை உடையவர்.

பி.ம். 4. 'மாசறக் கெழீஇ'

இறைச்சி : மணமற்ற கரும்பின் மலரை வாடை தீண்டும் என்றது, நெஞ்சே! நிலையற்ற பொருளை நீ விரும்பி வருந்துகின்றனை என்றவாறு. வாடை வீசுதலால் குருவியின் குடம்பை அசைந்து வருந்துமாறு மூங்கிற் சென்று மோதும் என்றது, பொருளாசை நின்னைத் தூண்டுதலால் யான் வருந்துமாறு நீ என்னைத் துன்புறுத்துகின்றனை என்றதாம்.

மெய்ப்பாடு - பிறன்கண் தோன்றிய பிணி பற்றிய இளிவரல்.

பயன் - இல்லத்தழுங்கல்.

ஒப்புமைப்பகுதி

8. வேல்போல் வெண்முகை

"தோடுகொள் வேலின் தோற்றம்போல
ஆடுகட் கரும்பின் வெண்பூ நுடங்கும்" (புறநா. 35:9-10)

7-8. கரும்பின் வெண்பூ

"திங்களழைக் கரும்பின் நாறா வெண்பூக் கொழுதும்" (குறுந். 85:4-5)

"ஆடுகட் கரும்பின் வெண்பூ நுடங்கும்" (புறநா. 35:10)

7-9. குருவிச் சேவல் கருப்பம் பூவாற் பேடைக்கு ஈன்இல் இழைத்தல்.

"சூல்முதிர் துள்ளுநடைப் பெடைக்குத் துணைச் சேவல் செய்வான்
தேன்முதிர் வேழத்தின் வெண்பூ". (திருச்சிற். 369)

"மனையுறை குருவி வளைவாய்ச் சேவல்
சின்னமுதிர் பேடைச் செவ்வி நோக்கி,
ஈனில் இழைக்க வேண்டியானா அன்பு பொறை கூர,
மென்மெல முயங்கிக் கண்ணுடைக் கரும்பின்
உண்டோடு கவரும்" (திருவாரூர்:மும்மணிக். 19)

# 367. முல்லை

## தோழி கூற்று

கொடுங்கண் காக்கைக் கூர்வாய்ப் பேடை
நடுங்குசிறைப் பிள்ளை தழீஇக் கிளைபயிர்ந்து
கருங்கண் கருனைச் செந்நெல் வெண்சோறு
சூருடைப் பலியொடு கவரிய குறுங்கால்
5 கூழ்உடை நல்மனை குழுவின இருக்கும்
மூதில் அருமன் பேர்இசைச் சிறுகுடி
மெல்இயல் அரிவை நின்பல்இரும் கதுப்பின்
குவளையொடு தொடுத்த நறுவீ முல்லைத்
தளைஅவிழ் அலரித் தண்நறும் கோதை
10 இளையரும் சூடி வந்தனர் நமரும்
விரிஉளை நன்மாக் கடைஇப்
பரியாது வருவர் இப்பனிபடு நாளே.

ஏ-து : வரவு மலிந்தது.

**நக்கீரர்**

ப-ரை : கொடுங்கண் கூர்வாய் காக்கைப் பேடை - வட்டமாகிய கண்களையும் கூரிய வாயையும் உடைய பெண் காக்கை, நடுங்கு சிறைப் பிள்ளை தழீஇ - நடுங்குகின்ற சிறகையுடைய தன் பிள்ளையைத் தழுவிக்கொண்டு, கிளை பயிர்ந்து - தன் இனத்தையும் அழைத்து, கருங்கண் - கரிய கண்ணையுடைய, கருனை - கருனைக் கிழங்கின் பொரிக்கறியோடு கூடிய, செந்நெல் வெண் சோறு - செந்நெல் அரிசியாலாக்கிய வெளிய சோற்றுத்திரளை, சூர்உடைப் பலியோடு - தெய்வத்துக்கு இடும் பலியுடனே, கவரிய - கவர்ந்துகொள்ளுமாறு, குறுங்கால் - குறிய கால் நாட்டிக் கட்டிய, கூழ் உடை வியன்நகர் - மிக்க உணவை உடைய நல்ல மனையின்கண்ணே, குழுவின இருக்கும் - கூடினவாய்த் திரண்டு இருக்கும், மூதில் அருமன் - பழைமையான வீடுகளை உடைய 'அருமன்' என்பவனது, பேர்இசை - பெரிய புகழ் பொருந்திய, சிறுகுடி - சிறுகுடியென்னும் ஊரைச் சார்ந்த, மெல் இயல் அரிவை - மெத்தென்ற சாயலை உடைய அரிவையே! நின் - உன்னுடைய, பல் இரும் கதுப்பின் - பலவாகிய கரிய கூந்தலிற் சூடிய, குவளையொடு தொடுத்த நறுவீ முல்லை - மாலைபோலக் குவளை மலரோடு இடையிட்டுத் தொடுத்த

நறிய பூவை உடைய முல்லையின், தளைஅவிழ் - கட்டு அவிழ்ந்த, அலரி - மலராலாகிய, தண்நறும் கோதை - குளிர்ந்த மண முடைய பூமாலையை, இளையரும் - தலைவனுடன் சென்றிருந்த வீரர் எல்லாரும், சூடி வந்தனர்; இப் பனிபடுநாள் - அதனால் இப் பனி மிக்க பருவத்திலேதானே, நமரும் - நம்முடைய அன்பிற்குரிய தலைவரும், விரிஉளை - விரிந்த பிடரி மயிரை உடைய, நன்மாக் கடைஇ - நல்ல குதிரையைச் செலுத்திக் கொண்டு, பரியாது - வருந்தாது, வருவர் - இப்பொழுதே வருகுவர் காண்; வருந்தாதே.

முடிபு : அரிவை! இளையல் கோதை சூடி வந்தனர்; நமரும் இப் பனிபடுநாள் நன்மாக் கடைஇ வருவர், என முடிக்க.

கருத்து : வினைவயிற் பிரிந்த தலைவன் இன்னே வருகுவன்; நீ வருந்தாது இல்லறம் நடத்துக என்றவாறு.

வி-ரை : வினை முடித்தனன் என்ற அளவிலேயே தலைவி ஆற்றுவள் ஆகலின் அதுபோன்ற இளைஞர் மலர் சூடி வந்தனர் என்றாள்.

உள்ளுறை : காக்கையின் பேடை தன் பார்ப்பைத் தழுவிக் கொண்டு சோற்றுப் பலியைக் கவர வேண்டிக் கிளையை அழைத்து மனையின்கண்ணே சூழ்ந்திருக்கும் என்றது, நீயும் நின் மகவைத் தழுவினையாகித் தலைவன் தருகின்ற பொருளைத் துய்க்குமாறு சுற்றத்தாரை அழைத்துச் சூழ இருத்தி, மனையறம் ஓம்புக என்றதாம்.

கைகோள் - கற்பு.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

6. அருமனது ஊர்

"ஆதியருமன் மூதூர் அன்ன" (குறுந். 293:4)

# 368. குறிஞ்சி

## தோழி கூற்று

பெரும்புனம் கவரும் சிறுகிளி ஓப்பிக்
கருங்கால் வேங்கை ஊசல் தூங்கிக்
கோடுஏந்து அல்குல் தழைஅணிந்து உம்மோடு
ஆடினம் வருதலின் இனியதும் உண்டோ
5 நெறிபடு கூழைக் கார்முதிர்பு இருந்த
வெறிகமழ் கொண்ட நாற்றமும் சிறிய
பசலை பாய்தரு நுதலும் நோக்கி
வறிதுஉகு நெஞ்சினள் பிறிதொன்று சுட்டி
வெய்ய உயிர்த்தனள் யாயே
10 ஐய அஞ்சினம் அளியம் யாமே.

எ-து : தோழி தலைவனுக்குச் செறிப்பு அறிவுறீஇயது.

கபிலர்

ப-ரை : ஐய - ஐயனே! பெரும்புனம் - பெரிய தினைப்புனத்தில் விளைந்துள்ள கதிர்களை, கவரும் - கொய்யவரும், சிறுகிளி - சிறிய கிளிகளை, ஓப்பி - ஓட்டி, கருங்கால் - கரிய அடியினை உடைய, வேங்கை - வேங்கை மரத்தில் கட்டிய, ஊசல் - கயிற்று ஊசலில், தூங்கி - ஏறி ஆடி, கோடு ஏந்து அல்குல் - பக்கங்கள் உயர்ந்த அல்குலுக்கு, தழை அணிந்து - தழையாடை அணிந்து, உம்மோடு - நும்முடன், ஆடினம் - அருவியாடி விளையாடி, வருதலின் - வருதலைக் காட்டிலும், இனியதும் உண்டோ - எமக்கு வேறொரு இனிய செயலும் உளதாமோ? இல்லையே; நெறிப்படு - நெளிவுடன் கூடிய, கார் முதிர்பு இருந்த - கருமை முதிர்ந்து இருந்த, கூழை - கூந்தலில், வெறிகமழ்கொண்ட நாற்றமும் - நறுமணம் கமழ்தலைக்கொண்ட நல்ல புது நாற்றத்தையும், பசலை பாய்தரு நுதலும் - பசலை பரவிய சிறிய நெற்றியையும், நோக்கி - பார்த்து, வறிது உகு நெஞ்சினள் - பலன் இன்றிச் சிதைந்த உள்ளத்தை உடையவளாய், யாய் - எமது அன்னை, பிறிது ஒன்று சுட்டி - பிறிதொன்றனைக் கருதி நின்றாற்போல, வெய்ய - வெப்பமாக, உயிர்த்தனள் - பெருமூச்சு எறிந்து சினவா நின்றாள்; அஞ்சினம் - அதனால் இற்செறிப்பு ஏற்பட்டுப் பிறரால் இரங்கத்தக்க தன்மையேமாய் அஞ்சா நின்றேம்; யாம் அளியம் - அனைவராலும் யாம் அளிக்கத் தக்கேம்.

முடிபு : ஐயனே! ஒப்பி தூங்கி அணிந்து வருதலின் இனியதும் உண்டோ? யாய் நாற்றமும் நுதலும் நோக்கி வெய்ய உயிர்த்தனள்; யாம் அஞ்சினம்; அளியம் என முடிக்க.

கருத்து : தலைவனே! நின் கூட்டத்தால் தலைவிக்கு ஏற்பட்ட மாற்றத்தை அன்னை அறிந்துகொண்டனள். இற்செறிப்பு நிகழினும் நிகழும். என் செய்வேம்; அளிக்கத் தக்கேம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவுகடாதல்.

ஒப்புமைப்பகுதி

2. கருங்கால் வேங்கை
"கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்" (குறுந். 47:1)
"அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை" (குறுந். 26:1)
"கோடை யொற்றிய கருங்கால் வேங்கை" (குறுந். 343:5)
(மதுரைக். 296) (அகநா. 345:8, 349:10)
"கருங்கால் வேங்கை மலரின் நாளும்" (புறநா. 137:9)

2. வேங்கை ஊசல்
"வேங்கையொடு தொடுத்த விளையாட்டு ஊசல்"
(பெருங். 33:23)

7. நுதல் பசத்தல்
"பசைஇப் பசந்தன்று நுதலே" (குறுந். 87:4)
"நன்னுதல் பசலை நீங்க" (குறுந். 48:5)
"தேங்கமழ் திருநுதல் ஊர்தரும் பசப்பே" (குறுந். 205:7)

# 369. நெய்தல்

## தலைவி கூற்று

சுடர்சினம் தணிந்து குன்றம் சேர
நிறைபறைக் குருகினம் விசும்புஉகந்து ஒழுக
எல்லை பைபயக் கழிப்பி முல்லை
அரும்புவாய் அவிழும் பெரும்புன் மாலை
5 இன்றும் வருவது ஆயின் நன்றும்

அறியேன் வாழி தோழி அறியேன்
ஞெமைஓங்கு உயர்வரை இமயத்து உச்சி
வாஅன் இழிதரும் வயங்குவெள் அருவிக்
கங்கைஅம் பேர்யாற்றுக் கரைஇறந்து இழிதரும்
10 சிறைஅடு கடும்புனல் அன்னஎன்
நிறைஅடு காமம் நீந்துமாறே.

எ-து: பட்டபின்றை வரையாது பொருள்வயிற் பிரிந்து, ஆற்றாளாகிய தலைவி வன்புறை எதிர் அழிந்தது.

## மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார்

ப-ரை: தோழி - தோழியே! வாழி - நீ வாழ்க! சுடர் - கதிரவன், சினம் தணிந்து - வெப்பம் குறையப் பெற்று, குன்றம் - மேற்கு மலையில், சேர - சென்று மறைய, நிறைபறை குருகு இனம் - நிறைந்த சிறகுகளையுடைய நாரையின் கூட்டம், விசும்பு - ஆகாயத்தில், உகந்து ஒழுக - உயரத்திலே பறந்து செல்லா நிற்ப, எல்லை - பகற்பொழுதை, ஞபய - மெல்ல மெல்ல, கழிப்பி - போக்கி, முல்லை அரும்புகள், வாய் அவிழும் - கட்டு அவிழ்ந்து மலரா நிற்கும், பெரும்புன்மாலை - பெரிய புற்கென்ற மாலைப் பொழுதானது, இன்றும் - நேற்றுபோல் இன்றும் துன்புறுத்த, வருவது ஆயின் - வருமேயானால், நன்றும் - பெரிதும், ஞெமை - ஞெமைய மரங்கள், ஓங்கு - உயர்ந்து வளர்ந்த, உயர்வரை இமயத்து - உயர்ந்த மலையாகிய இமயத்தின், உச்சி - உச்சியின் கண்ணே, வான் - வானிடத்து நின்றும், இழிதரும் - இறங்கி ஓடிவரும், வயங்கு வெள் அருவி - விளங்கிய வெள்ளிய அருவியினை உடைய, கங்கை அம் பேர் யாற்று - பெரிய கங்கையாற்றின், கரை இறந்து - கரைகடந்து, இழிதரும் - ஓடிவரும், சிறை அடு கடும் புனல் அன்ன - அணையை உடைத்துச் செல்லும் கடிய ஓட்டத்தினை உடைய நீர் வெள்ளம் போன்ற, என் - என்னுடைய, நிறை - ஒழுக்கத்தை, அடு - அழித்து வரும், காமம் - காம வெள்ளத்தை, நீந்தும் ஆறு - நீந்தும் வழியை, அறியேன் அறியேன் - நன்றாகத் தெரிந்தேனும் இல்லை; எவ்வாறு பிழைப்பேன்.

முடிபு: தோழி! கடும்புனல் அன்ன என் நிறைஅடு காமம் நீந்துமாறு, சேர, ஒழுக, கழிப்பி, அவிழும் மாலை வருவதாயின் அறியேன் அறியேன் எனமுடிக்க.

கருத்து: தலைவன் பிரிவைப் பொறுத்திரு என்ற தோழியை நோக்கி "மாலைப்பொழுது நெருநல்போல இன்றும் வருகுவதா

யின் நான் எவ்வாறு உய்குவேன்?'' என்று தலைவி கூறினாள்.
துன்பமிகுதிபற்றி அறியேன் அறியேன் என்று இருகால் அடுக்கினாள்.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

1. சுடர் சினம் தணிதல்
"சுடர் சினம் தணிந்து குன்றம் சேர" (குறுந். 195:1)

# 370. மருதம்

## தலைவன் கூற்று

வாராய் பாண நகுகம் நேரிழை
கடும்புஉடைக் கடுஞ்சூல் நம்குடிக்கு உதவி
நெய்யோடு இமைக்கும் ஐயவித் திரள்காழ்
விளங்குநகர் விளங்கக் கிடந்தோட் குறுகி
5 புதல்வன் ஈன்றெனப் பெயர்பெயர்த்து அவ்வரித்
திதலை அல்குல் முதுபெண்டு ஆகித்
துஞ்சுதியோ மெல்அம் சில்லோதி எனப்
பல்மாண் அகட்டில் குவளை ஒற்றி
உள்ளினென் உறையும் எற்கண்டு மெல்ல
10 முகைநாண் முறுவல் தோற்றித்
தகைமலர் உண்கண் கைபுதைத்துவந் ததுவே.

எ-து: ஊடல்நீட ஆற்றானாய் நின்றான் பாணற்குச் சொல்லியது; முன் நிகழ்ந்ததனைப் பாணற்குச் சொல்லியதூஉம் ஆம்.

உறையூர், கதுவாய்ச் சாத்தனார்

ப-ரை: பாண - பாணனே! வாராய் - என் பக்கம் வருவாயாக; நேர்இழை - நேர்மையான அணிகலன்களை உடையாள், கடும்பு - எனது சுற்றத்தார், உடை - சுற்றி நின்று பாதுகாக்க, கடுஞ்சூல் - சிறந்த தலைச்சூல் உடையளாய், நம்குடிக்கு உதவி - நம்குடிவளர மகவு ஈன்று உதவி, நெய்யோடு இமைக்கும் - நெய்

யுடனே கலந்து ஒளிருகின்ற, ஐயவி - சிறுவெண் கடுகாகிய, திரள் காழ் - திரண்ட விதைகளை, விளங்கு நகர் - சிறந்த மனை எங்கும், விளங்க - விளங்கும்படியாகப்பூசி, கிடந்தோள் - அசதியுடன் படுக்கையில் படுத்திருந்தோளை, குறுகி - நெருங்கி, மெல் அம் சில் ஓதி - மென்மை வாய்ந்த அழகிய சிலவாகிய கூந்தலை உடையவளே! புதல்வன் ஈன்றெனை - நீ பெறற்கரிய புதல்வனைப் பெற்றமையால், பெயர் பெயர்த்து - வேறாகத் தாய் என்னும் பெயரையும் பெற்று, அவ்வரி - அழகிய வரிகளும், திதலை - தேமலும் உடைய, அல்குல் - அல்குலை உடைய, முதுபெண்டு ஆகி - முதிய பெண்ணாந் தன்மையையும் பெற்று, துஞ்சுதியோ - உறங்குதியோ, என - என்று கூறி, பல்மாண் அகட்டில் - பலவாகிய மாட்சிமைப்பட்ட வயிற்றிடத்தில், குவளை - என் கையில் உள்ள குவளை மலரால், ஒற்றி - தடவி, உள்ளினென் - சிலபொழுது அவள் அழகையும் குழந்தையையும் நினைத்தனனாகி, உறையும் - அங்கு நின்று கொண்டிருந்த, எற் கண்டு - என்னைக் கண்டு, மெல்ல முகை நாள் முறுவல் தோற்றி - மெல்ல முல்லையின் நாள் அரும்பு போன்ற நகையையும் தோற்றுவித்து, தகை மலர் உண்கண் - சிறந்த நீலமலர் போன்ற மையுண்ட கண்களை, கை புதைத்து - கைகளால் மூடி, வந்தது - மகிழ்ச்சி மிகக் கொண்டிருந்தது எனக்கு நகைப்பைத் தந்து நின்றது; அதனை நினைக்கும் போதெல்லாம், நகுகம் - நாம் நகுவோம்; அத்தன்மையாள் இப்பொழுது ஊடி இருப்பது என்னோ?

முடிபு: பாண! நேரிழை குடிக்கு உதவி கிடந்தோள் குறுகி பெயர் பெயர்த்து துஞ்சுதியோ என, கண் புதைத்து வந்தது நகுகம் எனமுடிக்க.

கருத்து: ஊடினாளை விரும்பித் தலைவன், புதல்வனை ஈன்ற காலை நாம் சென்று காண்கையில் கண்களை மூடிக் கொண்ட தலைவியின் நிலையை நினைக்குந்தோறும் நகை யுண்டாகின்றது என்று பாணனிடம் கூறினான்.

பெயர் பெயர்த்தல்: புதல்வனைத் ஈன்றதினாற் பருவப் பெயர் மாறுபடுதல். மங்கை மடந்தைப் பருவங்கள் கடந்து, அரிவை தெரிவைப் பருவமாதல்.

மெய்ப்பாடு - வருத்தம் பற்றிய நகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

7. அஞ்சிலோதி

"அஞ்சிலோதி ஆய்வளை நெகிழ" (குறுந். 211:1)

"அஞ்சில் ஓதி அசை இயற் கொடிச்சி" (குறுந். 214:4)

(குறிஞ்சிப். 180) (ஐங். 49:1, 391:6. 448:5)

(அகநா. 261,3) (சீவக. 2576)

# 371. முல்லை

## தலைவன் கூற்று

காயாங் குன்றத்துக் கொன்றை போல
மாமலை விடரகம் விளங்க மின்னி
மாயோன் இருந்த தேஎ நோக்கி
வியலிரு விசும்பகம் புதையப் பாஅய்ப்
5 பெயல்தொடங் கினவே பெய்யா வானம்
நிழல்திகழ் சுடர்த்தொடி ஞெகிழ ஏங்கி
அழல்தொடங் கினளே ஆயிழை அதன்எதிர்
குழல்தொடங் கினரே கோவலர்
தழங்குகுரல் உருமின் கங்கு லானே.

எ-து : வினை முற்றி மறுத்தரா நின்றான் பாகற்குச் சொல்லியது.

ஔவையார்

ப-ரை : பாகனே! பெய்யா - இதுகாறும் பெய்யாது இருந்த வானம் - மேகங்கள், காயாம் குன்றத்து - காயா மரங்கள் நிறைந்த மலையின்கண்ணே, கொன்றை போல - இடையே சரக்கொன்றை மலர்ந்தாற்போல, மாமலை விடர் அகம் - பெரிய மலை பிளப்பிடங்கள் எல்லாம், விளங்க - விளங்கும்படியாக, மின்னி - மின்னுதலைச் செய்து, மாயோள் - என் காதலியாகிய மாமை நிறமுடையாள், இருந்த - தங்கியிருந்த, தேஎ நோக்கி - இடம் நோக்கிச் சென்று, வியல்இரும் - இடம் அகன்ற பெரிய, விசும்பு அகம் புதையப்பாஅய் - அகன்ற கரிய ஆகாயத்தினிடம் எல்லாம் மறையும்படிப் பரந்து, பெயல் தொடங்கினவே - மழை பெய்யத் தொடங்கின. ஆதலால், ஆய்இழை - ஆராய்ந்து அணிந்த அணிகலன்களை உடைய நமது காதலி, நிழல் திகழ்,

சுடர் விளங்குகின்ற, சுடர்த்தொடி - பிரகாசம் மிகுந்த கை வளையல்கள், ஞெகிழ - நெகிழ, ஏங்கி - திண்ணமாக ஏக்கமுற்று, அழல்தொடங்கினள் - அழத் தொடங்கினளேயாம். அதன் எதிர்- அவள் அழும் இடத்திற்கு எதிரே, கங்குலான் - இராப்பொழுதில், தழங்கு குரல் உருமின் - முழங்குகின்ற இடியோசைபோல, கோவலர் - ஆயர்கள், குழல் தொடங்கினர் - புல்லாங் குழலை வாசிக்கத் தொடங்கினர். ஆதலால் தேரை விரைந்து செலுத்து வாயாக.

முடிபு : வானம், மின்னி, நோக்கி, பாஅய், பெயல் தொடங்கின; ஆயிழை அழத் தொடங்கினள். கங்குலான் கோவலர் குழல் தொடங்கினர் என முடிக்க.

கருத்து : சென்று வினை முற்றி மீளும் தலைவன் பாகனை நோக்கி, 'கார்ப்பருவம் கண்டு தலைவி வருந்துவாள்; விரைந்து தேரைச் செலுத்துக' என்று கூறினான்.

வி-ரை : மலர்ந்த காயா நீருண்ட மேகத்திற்கும், மலர்ந்த கொன்றை மின்னலுக்கும் உவமை. தொடங்கினள் - தொடங்கிலர் என்பன தெளிவு பற்றி வந்த காலவழுவமைதி.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - கேட்ட பாகன் தேர் விரைந்து கடாவல்.

# 372. நெய்தல்

## தோழி கூற்று

அழிதக் கன்றே தோழி சேர்பு
கானற் பெண்ணைத் தேனுடை அழிபழம்
வள்இதழ் நெய்தல் வருந்த மூக்குஇறுபு
அள்ளல் இருஞ்சேற்று ஆழப் பட்டெனக்
5 கிளைக்குருகு இரியும் துறைவன் வளைக்கோட்டு
அன்ன வெண்மணற்று அகவயின் வேட்ட
அண்ணல் உள்ளமொடு அமர்ந்துஇனிது நோக்கி
அன்னை தந்த அலங்கல் வான்கோடு
உலைந்தாங்கு நோதல் அஞ்சி அடைந்ததற்கு
10 இனையல் என்னும் என்ப மனைஇருந்து
இருங்கழி துழவும் பனித்தலைப் பரதவர்
திண்திமில் விளக்கம் எண்ணும்
கண்டல் வேலிக் கழிநல் லூரே.

எ-து : மேல் இற்செறிப்பான் அறிந்து ஆற்றாளாகி நின்ற தலைவி ஆற்றவேண்டி, உலகியல் மேல் வைத்துச் சிறைப் புறமாகச் செறியார் எனச் சொல்லியது.

## உலோச்சனார்

ப-ரை : தோழி - தோழீ! கானல் - கடற்கரைச் சோலை யில் உள்ள, பெண்ணை - பனையின், தேன்உடை அழிபழம் - தேனையுடைய அழிந்தபழம், மூக்கு இறுபு - மூக்குச் சிதைந்து, கழிசேர்பு - கழியை அடைந்து, வள்இதழ் நெய்தல் வருந்த - பெரிய இதழை உடைய நெய்தல் மலர் வருந்துமாறு, அள்ளல் இருஞ் சேற்று - அள்ளுதல் அமைந்த கரிய சேற்றிலே, ஆழப் பட்டென - புதையும்படி விழுந்ததனால், [விழுந்த ஓசையைக் கேட்டு அஞ்சி] கிளைக் குருகு இரியும்-நாரைகள் தம் இனத்தோடு பயந்து அப்பாற் பறந்து செல்லும், துறைவன் - நீர்த்துறையை உடைய நினது காதலன், வளைக்கோட்டு அன்ன - வளையாகிய சங்கு போன்ற, வெண்மணற்று அகவயின் - வெளிய மணலை உடையதாகிய இடத்தில், வேட்ட - முயங்க விரும்பிய, அண்ணல் உள்ளமொடு - நினது பெருந்தகை கொண்ட உள்ளத்தோடு, அமர்ந்து - பொருந்துமாறு, மனை இருந்து - மகளிர்தம் மனை யின்கண் இருந்து, இருங்கழி துழவும் - (வருவிருந்து ஓம்பும் தன்மையால்) கரிய கழியிடத்து மீனைத் தேடுகின்ற, பனித் தலைப்பரதவர் - குளிரால் நடுங்கும் பரதவருடைய, திண் - திண்ணிய, திமில் - படகுகளில் இருக்கும், விளக்கம் - விளக்கு களை, எண்ணும் - எண்ணுகின்ற, கண்டல் - கண்டல் மரத்தை வேலியாகவுடைய, கழிநல் ஊர் - கழி சூழ்ந்த நம்முடைய நல்ல ஊரானது, இனிது - இனிதாக, நோக்கி - பார்த்து, அன்னை தந்த - அன்னை நினக்கு மீன் ஒப்பக் கொடுத்த, அலங்கல்-அசைகின்ற, வான்கோடு உலைந்தாங்கு - பெரிய குழையை உடைய கோடு குலைதலாலே நீ வருந்துவதுபோலக் கருதி, நோதல் அஞ்சி - நின் துன்பம் கண்டு அச்சம் அடைந்து, அட்டந்ததற்கு - நடந்ததற்கு, இனையல் - வருந்தாதே, என்னும் - என்று கூறா நிற்கும், இங்ஙனம் கூறுவதனால் இற்செறிப்புச் செய்யார். அழிதக்கன்று - ஆதலின் நீ மனம் அழிவது தகுதியன்று காண்.

முடிபு : தோழீ! அன்னை தந்த கோடு உடைந்தாங்கு அஞ்சி நோதல் இனையல் என்னும் கழிநல் ஊரே எனமுடிக்க.

கருத்து : நின்னை இல்வயிற் செறிப்பார் அல்லர்; நீ வருந்துவது தகுதியன்று காண்.

அ-ள் : மணற்று – மணலை உடையது; முற்றெச்சம். கோல் - மீனை விரட்டப் பயன்படும் கோல். என்ப - அசைநிலை.

உள்ளுறை : பனம்பழம் நெய்தல் வருந்தச் சேற்றில் விழக் கண்டு நாரையினம் அஞ்சி ஓடும் என்றது தலைவன் களவு தவிர்ந்து நின்னை மணப்பின் அலர்வாய்ப் பெண்டிர் இரிந்து ஒழிவர் என்றதாம்.

இறைச்சி : மகளிர் மனையிர் இருந்து பரதவர்மீன் பிடிக்கும் படகை எண்ணும் என்றது, நாம் மனையின் கண் இருந்து காதலனது கைவிடலானாகிய பழியை எண்ணா நின்றோம் என்றவாறு.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் – தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

11-2. திமிற்பரதவர்

"கொடுந்திமிற் பரதவர் கோட்டு மீன் எறிய" (குறுந். 304:4)

# 373. குறிஞ்சி

## தோழி கூற்று

முன்றிற் பலவின் படுசுளை மரீஇப்
புன்றலை மந்தி தூர்ப்பத் தந்தை
மைபடு மால்வரை பாடினள் கொடிச்சி
ஐவன வெண்ணெல் குறூஉம் நாடனொடு
5 சூருடைச் சிலம்பின் அருவி ஆடிக்
கார்அரும்பு அவிழ்ந்த கணிவாய் வேங்கைப்
பாஅமை இதணம் ஏறிப் பாசினம்
வணர்குரல் சிறுதினை கடியப்
புணர்வது கொல்லோ நாளையும் நமக்கே.

எ-து : செறிப்பறிவுறீஇயது.

கபிலர்

ப-ரை : தோழி - தலைவியே! ஐயுற்ற அன்னை வீட்டுக் காவல் செய்ய எண்ணியதனால், புன்தலை மந்தி - மெல்லிய

தலையை உடைய மந்தி, முன்றில் பலவின் - வீட்டின் முன்புள்ள பலாமரத்திலிருந்து, படுசுளை மரீஇ தூர்ப்ப - அதன்பழத்தைக் கீண்டு நிறைந்த சுளைகளைத்தின்று பலாக்கொட்டைகளைக் கீழே எறிய, கொடிச்சி - அயலிலே நின்ற கொடிச்சி, தந்தை - தன் தந்தையின், மைபடு மால்வரை பாடினள் - மேகம் தவழும் கரிய மலையின் வளப்பம் பாடியவளாக, ஐவன வெண்நெல் குறூஉம் - வெள்ளிய மலைநெல்லைக் குத்துகின்ற, நாடனொடு - மலைநாடனாகிய நமது தலைவனோடு, சூர்உடைச் சிலம்பின் - அச்சத்தைத் தரும் மலைப்பக்கத்திலுள்ள, அருவி ஆடி - அருவியின்கண் நீராடி, கார் அரும்பு அவிழ்ந்த - கரிய நிறத்தை உடைய அரும்பு மலர்ந்த, கணிவாய் வேங்கை - சோதிடம் வல்லார் போன்ற வேங்கை மரத்தின் மேலே, பாஅமை இதணம் ஏறி - கட்டிய பரப்பு அமைந்த பரண்மீது ஏறி, வணர் - வளைந்த, குரல் - கதிர்களை உடைய, சிறுதினை - சிறியதினைப் புனத்தின் கண்ணே, பாசினம் - தின்னவருகின்ற கிளியினத்தை, கடிய - ஓட்ட, (இன்றுபோல்) நாளையும் - நாளையதினமும், புணர்வது கொல் - நமக்குப் பொருந்துவது ஆமோ? அவ்வாறு வாய்ப்பு, கிடைக்காது போலும்.

முடிபு : தோழீ! நாடனொடு அருவி ஆடி இதணம் ஏறி பாசினம் கடிய நமக்கு நாளையும் புணர்வது கொல்லோ எனமுடிக்க.

கருத்து : நம் களவினை அன்னை அறிந்தனள்; இனி இற்செறிப்பு நிகழ்வது திண்ணம்; இனிக் கூட்டம் வேண்டின் தலைவன் வரைந்து கோடலே தக்கது என அவன் செவியில் விழும் வண்ணம் தலைவியிடம் தோழி கூறினாள்.

வேங்கை அரும்பும் காலம் தினைமுற்றும் ஆதலின் அரும்பியது கண்ட கானவர் தினைகொய்ய ஈண்டுவர். அது பற்றிச் சோதிடம் வல்லார்போறலின் வேங்கை கணி எனப் பட்டது. கணி - சோதிடம்.

உள்ளுறை : மந்தி பழத்தின் சுளையைத்தின்று அதன் கொட்டையைக் கீழே உகுப்பக் கொடிச்சி வரைபாடி நெற்குற்றுவாள் என்றது, தலைவன் தலைவியது நலனைக் களவில் உண்டு அதனாலாய பழிச்சொல்லைப்பரவ விட அன்னை வேலனை அழைத்து முருகனைப் பாடி வெறியயர்ந்து யாட்டைச் சிதைக்கும் என்றதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவுகடாதல்,

ஒப்புமைப்பகுதி

3. தலைவனது குன்றத்தைப் பாடுதல்
"நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே" (குறுந். 23:5)
(சிறுபாண். 128) (ஐங். 244:2-4) (கலி. 40, 41, 43,)
(அகநா. 208:2)

3. மைபடுமால்வரை
"மையணி நெடுவரை யாங்கண் ஒய்யென" (புறநா. 174:11)
"மைபடு மாமலை" (அகநா. 153)

4-5. தலைவி தலைவனோடு நீராடுதல்.
"ஆர்கலி வெற்பன் மார்பு புணையாகக்
கோடுயர் நெடுவரைக் கவா அற்பகலே
பாடின்னருவி ஆடுதல் இனிதே" (குறுந். 353:1-3)

# 374. முல்லை

## தலைவன் கூற்று

முரம்புதலை மணந்த நிரம்பா இயவின்
ஓங்கித் தோன்றும் உமண்பொலி சிறுகுடிக்
களரிப் புளியிற் காய்பசி பெயர்ப்ப
உச்சிக் கொண்ட ஓங்குகுடை வம்பலீர்
5 முற்றையும் உடையமோ மற்றே பிற்றை
வீழ்மா மணிய புனைநெடும் கூந்தல்
நீர்வார் புள்ளி ஆகம் நனைப்ப
விருந்துஅயர் விருப்பினள் வருந்தும்
திருந்துஇழை அரிவைத் தேமொழி நிலையே.

எ-து: வினை முற்றி மீள்வான் இடைச்சுரத்துக் கண்டார்க்குச் சொல்லியது.

வன்பரணர்

ப-ரை: முரம்புதலை மணந்த - பரல் நிரம்ப மேலே பொருந்திய, நிரம்பா - சென்று அடைதற்கு இயலாத, இயவின் - நெறியில், ஓங்கித் தோன்றும் - உயர்ந்து தோன்றும், உமண் பொலி சிறுகுடி - உப்பு வாணிகர்கள் நிறைந்திருக்கின்ற சிறியகுடிகளை உடைய, களரிப் புளியில் - களர் நிலத்தில் விளைந்த

புளியின் கனியைச் சுவைத்து உண்டு, காய் பசி பெயர்ப்ப - நும்மை வருத்துகின்ற பசியைப் போக்குதலாலே மீண்டும் வழிநடைச் செல்லும் வலிமையுடையீராய், உச்சிக்கொண்ட - தலைமேல் பிடித்த, ஓங்கு - உயர்ந்த, குடை - குடையை உடைய, வம்பலீர் - புதிய மாந்தர்காள்!, பிற்றை - இதுகாறும் பிரிந்த தனால் பிரியும்பொழுது இன்றி அதன் பின்பும் வருந்தி, நீர்வார் புள்ளி - கண்ணீர் வடிந்து விழுதலால் ஆகிய நீர்த்திவலைகள், ஆகம் - மார்பை, நனைப்ப - நனையா நிற்க, விருந்து அயர் விருப்பினள் - யாம் புதியேமாகி வருதலின், எமக்கு விருந்து செய்யும் விருப்பத்தோடு அட்டிற் சாலை புகுந்து உணவு அடும் தொழிலில், வருந்தும் - வருந்துகின்ற, வீழ் மா மணிய - விரும்பிய கரிய மணியின் தன்மையை உடைய, புனை நெடும் கூந்தல் - அலங்கரித்த நெடிய கூந்தலையும், திருந்து இழை - திருந்திய அணிகலன்களையும், தேமொழி - இனிய மொழியையும் உடைய, அரிவை - தலைவியின் நிலையை, முற்றையும் - முன்பும், உடையமோ - முழுதும் பெற்றுடையேமோ? மற்று - இல்லை காண். இப்பொழுதுதான் பெறலாகியதே! இஃது என்ன வியப்பு!

முடிபு: வம்பலீர்! விருந்து அயர் விருப்பினள் வருந்தும் கூந்தல் திருந்திழை தேமொழி அரிவை நிலை முற்றையும் உடையமோ என முடிக்க.

கருத்து: என்னைப் பிரிந்து தலைவி வருந்துவள் என்பதை யான் முன்பே அறிந்திலேன்; அவள் உணவு அட்டு விருந்து அயரும் நிலையை முன்பே பெற்றிலேன்.

பி.ம் 3. 'காய் செவி பெயர்ப்ப' பசியாலாய செவி அடைப்பு நீங்க என்று பொருள் செய்க.

பின்பு பிற்றையானாற்போல முன்பு முற்றையாயிற்று. அருகிய வழக்கு.

இதன்முன் அட்டு அறியாதாள் எம்பாலுள்ள அன்பால் இன்று அட்டிற் சாலை புகுந்து வருந்துவாள் என்று மகிழ் கின்றவன் "முற்றையும் உடையமோ" என்றான்.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - மகிழ்தல்.

# 375. நெய்தல்

## தோழி கூற்று

நீடுசினைப் புன்னை நறுந்தாது உதிரக்
கோடுபுனை குருகின் தோடுதலைப் பெயரும்
பல்பூங் கானல் மல்குநீர்ச் சேர்ப்ப
அன்பிலை ஆதலின் தன்புலன் நயந்த
5 என்னும் நாணும் நன்னுதல் உவப்ப
வருவை ஆயினோ நன்றே பெருங்கடல்
இரவுத்தலை மண்டிலம் பெயர்ந்தென உரவுத்திரை
எறிவன போல வருஉம்
உயர்மணல் படப்பை எம்உறைவின் ஊரே.

எ-து : வரையாது நெடுங்காலம் வந்தொழுகத் தலைவியது நிலை உணர்ந்த தோழி வரைவுகடாயது.

பொதும்பில், கிழார் மகன் வெண்கண்ணனார்

ப-ரை : நீடுசினைப் புன்னை - நீண்ட கிளைகளைப் பெற்றிருக்கும் புன்னை மரங்களில் உள்ள பூக்கள், நறும் - நறிய, தாது-மகரந்தங்களை, உதிர-உதிர்க்கும் வண்ணம், கோடு புனைக் குருகின் - அக் கிளைகளின் மேல் அலங்கரித்தாற்போல் தங்கிய நாரையின், தோடு - கூட்டம், தலைப்பெயரும் - இரை வேண்டிப் பெயர்ந்து உலவவும், பல் பூங்கானல் - பலவாகிய மலர்களை உடைய, கானல் - கடற்கரைச் சோலையையும், மல்குநீர் - நிறைந்த நீர் வளப்பத்தையும் உடைய, சேர்ப்ப - நெய்தல் நிலத் தலைவனே! அன்பு இலை - பலகால் நீ என்னை வந்து முயங்கியும் என்பால் அன்பு உடையை இல்லை; நீ அன்பு கொண்டிருப்பின், தன் புலன் நயந்த - அவளுடைய அறிவின் வழியே ஒழுகா நின்ற, என்னும் - என்னிடமும், நாணும் - தன் எண்ணத்தைச் சொல்வதற்கு வெட்கப்படுகின்ற, நல்நுதல் - அழகிய நெற்றியையுடைய அத் தலைவி மகிழும்வண்ணம், பெருங்கடல் - பெரிய கடலானது, இரவுத்தலை - இரவின்கண், மண்டிலம் - தண்கதிர்த் திங்கள், பெயர்ந்தென - எழுந்ததாக, உரவுத்திரை எறிவனபோல - அது கண்டு வலிய அலைகள் பொங்கி எழுந்து மோதுவனபோல, வருஉம் - வாரா நிற்கும், உயர்மணற் படப்பை - உயர்ந்த மணல் நிரம்பிய கொல்லைகளை உடைய, எம் உறைவின் ஊர்க்கு - யாம் வாழ்கின்ற எம் இனிய ஊரிடத்து, வருவை ஆயின் - நீ அவளை

மணம் புரிய வரல் வேண்டும்; அவ்வாறு வருகுவையானால், நன்று - அது மிக நல்லதொரு செயலாகும்.

முடிபு : தாது உதிர தலைப்பெயரும் நீர்ச் சேர்ப்ப! அன்பிலை! எம் உறைவு இன் ஊர்க்கு வருவையாயின் நன்று என்று முடிக்க.

கருத்து : எம்மூரின்கண்ணே விரைந்து வந்து தலைவி மகிழுமாறு மணம் புரிவாயாக.

உள்ளுறை : புன்னைக் கிளையில் வைகிய குருகினம் அதன் மகரந்தம் உதிருமாறு அலைத்து எழுந்து செல்லும் சேர்ப்பன் என்றதனால் களவு ஒழுக்கம் மேற்கொண்டு தலைவிபால் தங்கிய நீ அவள் அழுது கண்ணீர் வடிக்குமாறு கையகன்று போயினை: இனி அவ்வாறின்றி வரைந்து பிரியாது உறைக என்றதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவுகடாதல்.

திங்களைக் கண்டு கடல் பொங்கி அலை எழுந்து ஆரவாரிக்கும் என்றது, நீ வரைவொடு வருதல் கண்டு எமர் எதிர்கொண்டு மகிழ்ந்து ஆரவாரிப்பர் என்றதாம்.

# 376. குறிஞ்சி

## தோழி கூற்று

முறஞ்செவி யானைத் தடக்கையின் தடைஇ
இறைஞ்சிய குரல பைந்தாட் செந்தினை
வரையோன் வண்மை போலப் பலவுடன்
கிளையோடு உண்ணும் வளைவாய்ப் பாசினம்
5 குல்லை குளவி கூதளம் குவளை
இல்லமொடு மிடைந்த ஈர்ந்தண் கண்ணியன்
சுற்றுஅமை வில்லன் செயலைத் தோன்று
நற்றார் மார்பன் காண்குறின் சிறிய
நற்குஅவற்கு அறிய உரைமின் பிற்றை
10 அணங்கும் அணங்கும் போலும் அணங்கி
வறும்புனம் காவல் விடாமை
அறிந்தனிர் அல்லிரோ அறன்இல் யாயே,

ஏ-து : தோழி கிளிமேல் வைத்துச் சிறைப்புறமாகச் செறிப்பு அறிவுறீஇயது.

கபிலர்

ப-ரை : முறம் செவி யானை - முறம் போலும் செவிகளை உடைய யானையினது, தடக்கையின் - தளைந்த கையைப் போல, தடைஇ - பருத்து, இறைஞ்சிய - தலை தாழ்ந்த, குரல - கதிர்களையும், பைந்தாள் - பசிய அடித்தண்டினையுமுடைய, செந்தினை - செவ்விய தினைப்பயிரை, வரையோன் வண்மை போல - வரையாது கொடுப்பவனது கைவண்மைக்கு ஈண்டும் பரிசிலர்போல, பலவுடன் கிளையோடு - பலவாகிய சுற்றத் தோடு சேர வந்து, உண்ணும் - உண்ணா நிற்கும், வளைவாய்ப் பாசினம் - வளைந்த வாயை உடைய பசிய கிளிகளே! தலைவனை முன்பு முயங்கி அவனை நீங்கிய பின்னர், அறன் இல்யாய் - அறநெறியிலே நில்லாத எம் அன்னை, அணங்கி வரும்புனம் காவல் விடாமை - எம்மை வருத்திக் காவலின்றி அழிகின்ற தினைப்புனத்தினை யாம் காவல் செய்ய விடாது இற்செறிப்புச் செய்திருப்பதனை, அறிந்தனிர் அல்லிரோ - நீயிர் அறிந்தீர் அல்லவா? பிற்றை அணங்கு அணங்கும் போலும் - இதற்குமேலும் வெறியாட்டு அயர்தலால் முருகவேளும் எம்மைத் துன்புறுத்தும் போலும்: ஆகையால், குல்லை குளவி கூதளம் குவளை இல்லமொடு மிடைந்த ஈர்ந்தண் கண்ணியன் - 'குல்லை, மலைப் பச்சை, கூதாளி, குவளை, தேற்றா' என்பவனவற்றின் மலராற் புனைந்த மிகக் குளிர்ந்த மலர் மாலையை உடைய வனும், சுற்று அமை வில்லன் - வரிந்து கட்டிய அமைந்த வில்லை யுடைவனுமாகி, செயலைத் தோன்றும் - அசோக மரத்தின் கீழ் வந்து நிற்கும், நல்தார் மார்பன் - நல்ல மாலை அணிந்த மார்பை உடைய அவனை, காண்குறின் - நீயிர் காண்பீரானால், (இங்கு நிகழ்ந்த அனைத்தையும் கூறாவிட்டாலும்) சிறிய - சில வற்றையேனும், அவற்கு - தலைவனுக்கு, நற்கு - நன்றாக, அறிந்து கொள்ளுமாறு, உரைமின் - சொல்வீராக.

முடிபு : பாசினம்! யாய் காவல் விடாமை அறிந்தனிர்; நற்றார் மரர்பன் காண்குறின் நற்கு அறிய அவற்கு உரைமின் என்முடிக்க.

கருத்து : களவின் வந்தொழுகும் தலலவன் செவியிற் கேட்கும் வண்ணம், கிளிகளைப் பார்த்து "தலைவிக்கு இற் செறிப்பு ஏற்பட்டுள்ளதையும் அன்னை வெறியயரினும் அயரும் என்பதையும் தலைவனுக்கு அறிவிப்பீர்; வரைய வருமாறு செய்குவீர்" என்று தோழி கூறியது.

தூது முனிவின்மை.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

1-4. தினைக்கதிருக்குப் பிடியின் கை
"பைத்தாட் செந்தினை, மடப்பிடித் தடக்கை அன்ன
பால்வார்பு கரிக்குறட்டு இறைஞ்சிய செறிகோட்
பைங்குரல்" (குறுந். 198:2-5)

5-6. குளவியும் குவளையும்
"குவளையொடு பொதிந்த குளவி நாறுநின்" (குறுந். 59:3)

தலைவன் குவளைப்பூ அணிந்து வருதல்
"சுனைப்பூங் குவளைச் சுரும்பார் கண்ணியன்"
(குறுந். 321:2) (அகநா. 38:2, 128:9-10)

12. அறனில்யாய்
"உறங்குதொறும் முயங்கும் அறனில்யாயே" (குறுந். 244:6)

# 377. குறிஞ்சி

## தலைவன் கூற்று

மடல்மா ஊர்ந்து மாலை சூடிக்
கண்அகன் வைப்பின் நாடும் ஊரும்
ஒள்நுதல் அரிவை நலம் பாராட்டி
பண்ணல் மேவலம் ஆகி அரிதுற்று
5 அதுபிணி யாக விளியலம் கொல்லோ
அகல்இரு விசும்பின் அரவுக்குறை படுத்த
பசுங்கதிர் மதியத்து அகல்நிலாப் போல
அளகம் சேர்ந்த சிறுநுதல்
கழறும் மெலிக்கும் நோயா கின்றே.

எ-து : சேட்படுக்கப்பட்டு ஆற்றானாகிய தலைவன், தோழி கேட்பத் தன்னுள்ளே சொல்லியது,

**மடல் பாடிய மாதங்கீரனார்**

ப-ரை : அகல் இரு விசும்பின் - அகன்ற கரிய ஆகாயத்தின் கண், அரவு - பாம்பினால், குறைபடுத்த - சிறிது விழுங்கிக் குறைபடுக்கப்பட்ட, பசும் கதிர் - பசுமையான கதிர்களை உடைய, மதியத்து - திங்களின், அகல் நிலாப்போல - விரிந்த நிலாவைப் போல, அளகம் சேர்ந்த - ஒளி வீசுகின்ற கூந்தல் சேர்ந்த, சிறுநுதல் - சிறிய நெற்றியை உடைய தலைவி, - (யாம் நினைக்குந்தோறும் உருவெளித் தோற்றமாய் எம் முன் தோன்றி) கழறும் - எம்மை வினாவும்; மெலிக்கும் - எம்மை மெலிவிக்கும்; நோய் ஆகின்று - அதனால் எமக்குக் காமநோய் அதிகரித்து வாட்டுகின்றது; அந்நோய் நீங்குமாறு, மடல் மா ஊர்ந்து - யான் பனை மடலாற் செய்த குதிரையின் மேல்ஏறிச் செலுத்தி, மாலை சூடி - ஆவிரை, எருக்கு, பூளை, உழிஞை என்பனவற்றின் மலரை அணிந்து, கண் அகல் வைப்பின் - இடம் அகன்ற வைப்புகளையுடைய, நாடும் ஊரும் - நாடுகள்தோறும் ஊர்கள்தோறும் சென்று, ஒள் நுதல் அரிவை - ஒள்ளிய நெற்றியை யுடைய தலைவியின், நலம் பாராட்டி - அழகைச் சிறப்பித்துக் கூறி, பண்ணல் - அம்மடல் ஏறும் தொழிலில், மேவலம் ஆகி - செல்லேம் ஆகி, அரிது உற்று - எம் உள்ளத்தை அரிதாக நிலை நிறுத்தி, அது பிணியாக - அதுவே நோயாகக் கொண்டு, கிடந்து, விளியலம் கொல்லோ - இறந்து போக மாட்டேமோ, மடல் ஏறுவதைக் காட்டிலும் அவள் நினைவால் இறந்து போவது என்பது நன்றன்றோ.

முடிபு : சிறுநுதல் கழறும் மெலிக்கும் நோயாகின்று, (அதனால்) ஊர்ந்து சூடி, பாராட்டி, மேவலம் ஆகி விளியலம் கொல்லோ எனமுடிக்க.

கருத்து : நெஞ்சமே: தலைவியை உள்ளுந்தோறும் காம நோய் மிகா நின்றது. இறந்து படேமோ. என்று தலைவன் அழிந்து கூறினான்.

இத் துன்பத்துப் புலம்பலாம்.

மெய்ப்பாடு - தன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன் - தோழி குறை முடிப்பது. தானே கூறி ஆறுதலுமாம், மடலேறும் நிகழ்ச்சியை விவரித்தமையால் இதைப் பாடிய புலவர் இவ் அடைமொழி பெற்றார் போலும்,

ஒப்புமைப்பகுதி

ஆடவர் மடலூர்தல்

"சோலை வேய்மருள் சூழ்வளைத் தோழிதன்
வேலைமாக்கடல் வேட்கை மிக் கூர்தர
ஓலைதாழ் பெண்ணை மாமடல் ஊர்தலை" (சீவக. 999)

# 378. நெய்தல்

## தோழி கூற்று
## (தலைவி கூற்றும் ஆம்)

யாமமும் நெடிய கழியும் காமமும்
கண்படல் ஈயாது பெருகும் தெண்கடல்
முழங்குதிரை முழவின் பாணியிற் பைபயப்
பழம்புண் உறுநரின் பரவையின் ஆலும்
5 ஆங்குஅவை நலியவும் நீங்கி யாங்கும்
இரவுஇறந்து எல்லை தோன்றலது அலர்வாய்
அயல்இல் பெண்டிர் பசலை பாட
ஈங்கா கின்றால் தோழி ஓங்குமணல்
வரியார் சிறுமனை சிதைஇ வந்து
10 பரிவுதரத் தொட்ட பணிமொழி நம்பிப்
பாடுஇமிழ் பனிநீர்ச் சேர்ப்பனொடு
நாடாது இயைந்த நண்பினது அளவே.

எ-து: தோழி சிறைப்புறமாகச் சொல்லியது. அல்லது, தலைவன் ஒருவழித் தணந்த பின்னை வன்புறை எதிர் மொழிந்ததூஉம் ஆம்.

வடமவண்ணக்கன் பேரி சாத்தனார்

ப-ரை: தோழி - தோழி! யாமமும் - இரவு நடுயாமமும், நெடிய - நெடும்பொழுது உடையவாகி, கழியும் - கழியா நிற்கும். காமமும் - தலைவன்பால் உள்ள வேட்கையும், கண்படல் ஈயாது - கண் உறங்க ஒட்டாது; பெருகும் - துயரம் பெருகா நிற்கும்; தெண்கடல் - தெளிந்த கடலின்கண்ணே, முழங்குதிரை - முழங்குகின்ற அலைகளும், முழவின் பாணியில் - முழவினது ஓசை போல, பைபய - மெல்ல மெல்ல ஒலித்து, பழம்புண் உறுநரின் -

நெடுநாள் புண் உற்றாரைப்போல, பரவையின் ஆலும் - புரண்டு புரண்டு அக் கடலிடத்து இயங்கும், ஆங்கு - அவ்விடத்து, அவை - அவை அவ்வாறு, நலியவும் நீங்கி- வருத்தா நிற்கவும் நீங்கி, இரவு இறந்து - இரவுப்பொழுதைக் கடந்து, எல்லை - பகற்பொழுது, தோன்றலது - தோன்றின பாடில்லை; ஓங்கு மணல் - உயர்ந்த மணற் பரப்பிலே, வரிஆர் சிறுமனை - புனைந்து கோலம் இட்ட சிறிய மணற் சிற்றிலை, சிதை - சிதைத்து, வந்து - நம்மிடம் வந்து, பரிவுதர - அன்பு மிகும்படி. தொட்ட - கூறிய, பணிமொழி - மெல்லிய சூள் உரையை, நம்பி - உண்மையென நம்பி, பாடு - பக்கத்தில், இமிழ் - ஒலிக்கும், பனிநீர் - குளிர்ச்சி மிக்க நீரை யுடைய, சேர்ப்பனொடு - கடற்கரைத் தலைவனொடு, நாடாது - முன்பு இவன் நட்பு இத்தன்மைத்து என்று ஆராயாது, இயைந்த - உடன்பட்டதனால் ஆகிய, நண்பினது - நட்பினது, அளவு - அளவானது, அயல்இல் பெண்டிர் - அயல் வீட்டுப் பெண்டிர், அவர் வாய் - பழிச்சொற் கூறும் வாயால், பசலை பாட - என் மேற் பரவிய பசலையைப் பற்றிப் பாடா நிற்க, ஈங்கு ஆகின்றால் - இத்தகைய இழிநிலையை யான் எய்தப் பண்ணியது கண்டாய்.

முடிபு : தோழி! சுழியும், பெருகும், ஆலும், நீங்கி எல்லை தோன்றலது, சிதை, வந்து தொட்ட மொழி நம்பி இயைந்த நண்பினது அளவு பசலைபாட ஈங்கு ஆகின்று என முடிக்க.

கருத்து : ஆராயாது தலைவனோடுகொண்ட நட்பு நமக்குப் பசலை நோயைத் தந்தது.

வி-ரை : "நாடாது நட்டலிற் கேடில்லை" என்னும் குறளை இவண் நினைவு கூர்க. சிறுமனை சிதைத்தல் ஆடவர்க்கு இயல்பு என்பதை, "மணற் சிற்றிற் காலிற் சிதையா அடைச்சிய கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி" என்ற கலியினும் (கலித்-51) உணர்க. இது துன்பத்துப் புலம்பல்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவுகடாதல்.

இரண்டாவது துறைக்கு மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

ஒப்புமைப்பகுதி

3. பைபய

"படரும் பைபயப் பெயரும் சுடரும்" (குறுந். 215:1)
(ஐங். 83:1, 113:5)

# 379. குறிஞ்சி

## தோழி கூற்று
## (தலைவி கூற்றும் ஆம்)

புன்தலை மந்திக் கல்லா வன்பறழ்
குன்றுஉழை நண்ணிய முன்றிற் போகாது
எரிஅகைந்து அன்ன வீததை இணர
வேங்கைஅம் படுசினைப் பொருந்திக் கைய
5 தேம்பெய் தீம்பால் வெளவலின் கொடிச்சி
எழுதுஎழில் சிதைய அழுத கண்ணே
தேர்வண் சோழர் குடந்தை வாயில்
மாரிஅம் கிடங்கின் ஈரிய மலர்ந்த
பெயல்உறு நீலம் போன்றன விரலே
10 பாஅய் அவ்வயிறு அலைத்தலின் ஆனாது
ஆடுமழை தவழும் கோடுஉயர் பொதியில்
ஓங்குஇரும் சிலம்பில் பூத்த
காந்தள்அம் கொழுமுகை போன்றன சிவந்தே.

எ-து: தோழி தலைவற்குத் தலைவி மடமை கூறியது.

(அல்லது)

காப்புக் கைம்மிக்க காலத்துத் தலைவி தோழிக்குச் சொல்லியதூஉம் ஆம்.

**குடவாயிற் கீரத்தனார்**

ப-ரை: தலைவ! புன் தலை மந்தி - புல்லிய தலையை உடைய பெண் குரங்கினது, கல்லா - தாவும் தொழிலை முற்றக் கற்று அறியாத, வன் பறழ் - வலிய குட்டி, குன்று உழை நண்ணிய - சிறு குன்றினிடத்துப் பொருந்திய, முன்றிற் போகாது - சிறுகுடியின்கண்ணுள்ள மனை வாயிலினின்றும் போகாது, எரி அகைந்து அன்ன - நெருப்புக் கொழுந்து விட்டாற் போன்ற, வீ - மலர்கள், ததை - நெருங்கிய, இணர - பூங்கொத்தினை உடைய, வேங்கை - வேங்கை மரத்தின், படு - தாழ்ந்த சினை - கிளையின்மேல், பொருந்தி - மறைந்து இருந்து, கொடிச்சி கைய - நின் காதலியின் கையிடத்திருந்த, தேம் பெய் தீம்பால் - தேன் கலந்த இனிய பாலை, வெளவலில் - கலத்தோடு வலிந்து பறித்துக்கொண்டு சென்று விட்டதனால், எழுது எழில்

சிதைய - ஓவியர் எழுதுதற்குரிய அழகு அனைத்தும் கெடும்படி, அழுத கண் - அழுத அவளுடைய கண்கள், தேர்வண் சோழர் - இரவலர்க்குப் பரிசாகத் தேர்களைத் தருகின்ற கொடைத் தன்மை வாய்ந்த சோழ மன்னர்க்குரிய, குடந்தை வாயில் - "குடவாயில்" என்னும் ஊரகத்து, மாரிஅம் கிடங்கின் - மழை பெய்து நிரம்பப் பெற்ற அகழியிலே, ஈரிய மலர்ந்த - தண்ணியவாய் மலர்ந்த, பெயல்உறு நீலம் போன்றன - பெய்யும் மழை நீரை ஏற்ற நீல மலரைப் போன்றன; அங்ஙனம் பால் கலம் பறிபட்டதற்கு ஆற்றாது, அவ் வயிற்றில் - அழகிய வயிற்றிலே, பாய் - பரவ, அலைத்தலின் - அடித்துக்கொண்டதனால், சிவந்த - அவளுடைய விரல்கள் சிவந்து, ஆனாது - அமையாது, ஆடுமழை தவழும் - இயங்குகின்ற மேகம் தவழும், கோடுஉயர் பொதியில் - கொடுமுடிகள் உயர்ந்த பாண்டியனது பொதியில் என்னும், ஓங்குஇரும் சிலம்பில் - உயர்ந்த பெரிய மலையில், பூத்த - மலர்ந்த, காந்தள் அம் கொழுமுகை போன்றன - கொழுவிய காந்தளின் மலரும் பருவமுகை போன்றன. இத்தகைய இளமை வாய்ந்த அறியா மடமையாள் நின்னை மயக்கினள் என்பதும்; நின் காமம் தணிக்கும் என்பதும் எவ்வண்ணம்? நீயே கூறுவாயாக.

முடிபு : ஐய! கொடிச்சி அழுத கண் நீலம் போன்றன; விரல் சிவந்து காந்தள் முகை போன்றன என்று முடிக்க.

கருத்து : தலைவி குறுமகள்; அறியாமை உடையவள், அவள் நின்னை மயக்கினள் என்பது எவ்வாறு பொருந்தும்.

தோழி கூற்றிற்கு மெய்ப்பாடு - பெருமிதம்.
பயன் - பேதமையூட்டல்.
தலைவி கூற்றிற்கு மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்தல்.

கொடிச்சி வயிறு அலைத்து அழுமாறு மந்தியின் மகவு பால் கலத்தை வெளவுதல்போல, நீ மனம் தளருமாறு ஏதிலார் பொன் அணிந்து தலைவியைக் கைக்கொள்ளினும் கொள்வர். ஆதலின் விரைக வரைக எனினும் தகும்.

ஒப்புமைப்பகுதி

5-9. அழுதகண் நீலமலர் போறல்

"அதுபுலந்து அழுத கண்ணே சாரல்
..............................
தண்துளிக்கு ஏற்ற மலர் போன்றனவே" (குறுந். 291:5-8)

# 380. மருதம்

## தோழி கூற்று

நெய்யும் குய்யும் ஆடி மையொடு
மாசுபட்டன்றே கலிங்கமும் தோளும்
திதலை மென்முலைத் தீம்பால் பிலிற்ற
புதல்வற் புல்லிப் புனிறு நாறும்மே
5 வால்இழை மகளிர் சேரித் தோன்றும்
தேரோற்கு ஒத்தனெம் அல்லேம் அதனால்
பொன்புனை நரம்பின் இன்குரல் சீறியாழ்
எழாஅல் வல்லை ஆயினும் தொழாஅல்
கொண்டுசெல் பாண நின்தண்துறை ஊரனைப்
10 பாடுமனைப் பாடல் கூடாது நீடுநிலைப்
புரவியும் பூண்நிலை முனிகுவ
விரகுஇல மொழியல் யாம்வேட்டது இல்வழியே.

எ-து : பாணற்குத் தோழி வாயில் மறுத்தது.

கூடலூர்ப் பல்கண்ணனார்

ப-ரை : பாணா - பாணனே! கலிங்கமும் - யாம் உடுத்திருக்கும் எம்முடைய ஆடைதானும், நெய்யும் குய்யும் ஆடி - நெய்யும் நறும்புகையும் பட்டு, மையொடு - புதல்வற்குத் தீட்டிய மையும் இழுகி, மாசு - அழுக்கும், பட்டன்று - அடைந்துள்ளது, திதலை மென்முலை - தேமல் படர்ந்த மெல்லிய கொங்கையில், தீம்பால் - இனிய பால், பிலிற்ற - பெருகுதலால் அந்தப் பால் சுரப்ப, புதல்வற்புல்லி - புதல்வனைத் தழுவிக் கொண்டு, தோளும் - எம்முடைய தோள்களும், புனிறு - ஈன்ற அணிமையானாகிய, முடை நாற்றம், நாறும் - வீசா நிற்கும், இங்ஙனமாகையில், வால் இழை மகளிர் - தூய அணிகலன்களைத் தரித்த பரத்தையர், சேரி - சேரிக் கண்ணே, தோன்றும் - தோன்றுகின்ற, தேரோற்கு - தேரையுடைய தலைவன் கூடுதற்கு, ஒத்தனெம் அல்லேம் - யாம் தகுதிப்பாடு உடையேம் அல்லேம்; அதனால் - ஆதலால், நின் தண் துறை ஊரனை - உன்னுடைய தண்ணிய நீர்த் துறையை உடைய ஊரனை, கொண்டு செல் - இப்பொழுதே அழைத்துச் சென்று பரத்தையர் பால் விடுவாயாக; பொன்புனை நரம்பின் - பொன்னைப் போன்ற நரம்பின் இன் குரல் சிறியாழ் - இனிய ஓசையை உடைய சிறிய யாழை

எடுத்து, எழாஅல் வல்லை ஆயினும் - இன்னிசை எழுப்பி மகிழ்விப்பதில் வல்லமை உடையை என்றாலும், தொழாஅல் - ஈண்டு எம்மைத் தொழுது பாடாதே; பாடு மனை - சிறந்த எமது மனையின் கண்ணே, பாடல் கூடாது - நீ நின்று பாடுதலைச் செய்யாத படி, நீடுநிலை - நெடும் பொழுது நின்று கொண்டிருக்கும், பூண் நிலப் புரவியும் - தேரிலே பூட்டிய குதிரைகளும், முனிகுவ - தம்மைக் கட்டியிருத்தலை வெறுக்கின்றன காண்; யாம் - நாம், வேட்டது - விரும்பியது, இல்வழி - இல்லாத இடத்து, விரகு இல - பயன் அற்ற வார்த்தைகளை, மொழியல் - எம்மிடம் சொல்லல் வேண்டா.

பி-ம். 2. 'பட்டின்று' 3. 'பிலிற்றா' 'பனிற்ற'

முடிபு : பாண! கலிங்கமும் மாசுபட்டன்று, தோளும் நாறும், அதனால் தேரோற்கு ஒத்தனம் அல்லேம்; வல்லையாயினும் தொழா அல், ஊரனைக் கொண்டு செல், முனிகுவ, விரகில மொழியல் எனமுடிக்க.

கருத்து : புதல்வனை ஈன்றமையால் யான் முடை நாற்றம் உடையேம். பாணனே! தலைவனைப் பரத்தையர் பால் கொண்டு உய்ப்பாய் என்று ஊடிக் கூறியது.

நெய் - புதல்வனை ஈன்றமையால் எழுந்த தூய்மை இன்மை நீங்க ஆடும் எண்ணெய் நீராட்டு. குய் - முடைநாற்றம் நீங்க இடும் நறும்புகை.

வி-ரை : பரத்தை மகளிர் தூயர் ஆதலின் வாலிழை மகளிர் அதற்கு மாறாகத் தன் இழிந்த நிலை கூறுவாள் 'புனிறு நாறும்' என்றாள். இடம்மாறிச் சென்றமை தோன்றத் தேரைச் 'சேரித் தோன்றும்' என்றாள்.

நின் இசையால் எம்மை மயக்கற்பாலை அல்லை என்பாள் 'எழால் வல்லை' என்றாள். தலைவன் வெகுநேரம் வாயிலில் நிற்பதை யான் அறிவேன் என்பாள்' நீடுநிலைப் புரவி' என்றாள்.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - வாயின் மறுத்தல்.

### ஒப்புமைப்பகுதி

1-2. தயிர்முதலியவற்றை ஆடையில் துடைத்துக் கொள்ளல்

"முளிதயிர் பிசைந்த காந்தள் மென்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇ" (குறுந். 167:1-2)

# 381. முல்லை

## தலைவி கூற்று

அருந்துயர் உழத்தலின் உண்மை சான்ம்மெனப்
பெரும்பிறிது இன்மையின் இலேனும் அல்லேன்
கரைபொருது இழிதரும் கான்யாற்று இகுகரை
வேர்கிளர் மாஅத்து அம்தளிர் போல
5 நடுங்கல் ஆனா நெஞ்சமொடு இடும்பை
யாங்கனம் தாங்குவென் மற்றே ஓங்குசெலல்
கடும்பகட்டு யானை நெடுமான் அஞ்சி
ஈர நெஞ்சமோடு இசைசேண் விளங்கத்
தேர்வீசு இருக்கை போல
10 மாரி இரீஇ மான்றன்றால் மழையே.

எ-து : பிரிவிடை ஆற்றாளாகிய தலைவி பருவ வரவின்கண் சொல்லியது.

**ஔவையார்**

ப-ரை : ஓங்கு செலல் - தலை நிமிர்ந்து நடக்கும் உயர்ந்த விரைந்த நடையை உடைய, கடும் பகட்டு யானை - கொடிய யானைப்படையையும், நெடுமான் - சிறந்த செலவினையுடைய குதிரைப்படையையும் உடைய, அஞ்சி - அஞ்சி என்னும் கொடை வள்ளல் ஈரநெஞ்சமோடு - கருணைமிக்க உள்ளத்தால், தன் பெயர் நிலைத்து நிற்குமாறு, இசை சேண் விளங்க - தன் புகழ் சேய்மையிலும் பரவுமாறு, தேர் வீசு இருக்கைபோல - இரவலர்க்குத் தேர்களைப் பரிசாகக் கொடுக்க இருக்கின்ற நாள் ஓலக்கம்போல, மாரி - மேகம், மழைஇரீஇ - மழை பெய்யத் தொடங்கி, மான்றன்றால் - மாறாது ஒருதன்மையாகப் பெய்யா நின்றது. (எனது காதலர் வருவேம் என்ற கார்ப்பருவத்தில் வாராமையாலே) அரும் துயர் உழத்தலின் - தாங்குதற்கு அரிய துன்பத்தை நுகர்தலின், உண்மை சான்மென - அறிகுறியாக யான் இறந்தொழியின் அவர்பால் அன்புடையேன் என்பது உண்மையாகும். பெரும்பிறிது இன்மையின் - அவ்வாறு இறந்து படாமையால், இலேனும் அல்லேன் - அன்பிலேன் அல்லேனோ? (அன்பில்லாத என்பால் அவர் அருள் இலர் ஆயினும்) கரை பொருது - கரையை மோதி, இழிதரும் - ஒடி வருகின்ற, கான் யாற்று இகுகரை - கான்யாற்றின் இடிகரையில், வேர்கிளர்

வேர்கள் யாவும் அலசப்பட்டுத் தோன்றிக் காற்றால் அலையும், மாஅத்து - மாமரத்தின், அம் தளிர்போல - அழகிய தளிர்போல, நடுங்கல் ஆனா - நடுக்கம் நீங்காத, நெஞ்சமொடு - நெஞ்சுடனே, இடும்பை - இத்துன்பத்தை, மற்று யாங்கனம் தாங்கு வென் - மாறாக எங்ஙனம் தாங்க வல்லேன்?

முடிபு : அஞ்சி யானை வீசு இருக்கைபோல மாரி மழை மான்றன்றால், இலேனும் அல்லேன், நெஞ்சமொடு இடும்பை யாங்கனம் தாங்குவென், எனமுடிக்க.

கருத்து : காதலர் வருவேன் என்ற கார்ப்பருவமும் வந்துற்றது. அவரோ வரார்; யானோ இறவேன். இத்துன்பத்தை எவ்வாறு தாங்குவேன் என்று தலைவி அழிந்தாள்.

அ-ள் : பெரும் பிறிது - சாக்காடு. இகுகரை - இடிந்த கரை. இடும்பை - காமநோய்.

மெய்ப்பாடு - அழுகை.
பயன் - அயாவுயிர்த்தல்.

# 382. நெய்தல்

## தலைவி கூற்று

கானல் மாலைக் கழிநீர் மல்க
நீல்நிற நெய்தல் நிரைஇதழ் பொருந்த
ஆனாது அலைக்கும் கடல்மீன் அருந்திப்
புள்ளினம் குடம்பை உடன்சேர்பு உள்ளார்
5 துறந்தோர் தேஎத்து இருந்து நனிவருந்தி
ஆர்உயிர் அழிவது ஆயினும நேரிழை
கரத்தல் வேண்டுமால் மற்றே பரப்புநீர்த்
தண்அம் துறைவன் நாண
நண்ணார் தூற்றும் பழிதான் உண்டே.

எ-து : ஒரு வழித் தணந்த காலத்துப் பொழுதுபட ஆற்றாளாகி நின்ற தலைவியைத் தோழி ஆற்றுவிக்கல்லாள் ஆயினாட்கு தலைவி சொல்லியது.

## நிகண்டன், கலைக்கோட்டுத் தண்டனார்

ப-ரை : நேரிழை - நேர்மையான கலன்களை உடைய தோழி! பரப்புநீர்த் தண்அம் துறைவன் நாண - பரப்புதல் கொண்ட கடல் நீரின் தண்ணிய துறைக்குத் தலைவராகிய நமது காதலர் களவொழுக்கம் மேற்கொண்டு பலகாலும் வருதலால் அவரும் நாணம் எய்தி, மீண்டும் இவ்விடத்தை நோக்காதபடி, நண்ணார் - நமக்குப் பகைவராயுள்ள ஏதிலாட்டியரும் சேரிவாழ் பெண்டிரும், தூற்றும் - ஒரு சேரத் தூற்றுகின்ற, பழிதான் உண்டே-பழிச்சொல்லுதான் மிகுதியாக உண்டன்றே; (ஆதலின்) மாலை - மாலைப்பொழுதிலே, கானல் கடற்கரைச் சோலை சூழ்ந்த, கழிநீர் மல்க - கழியிடத்துநீர் உவா வெள்ளமாகிப் பெருக, நீல்நிற நெய்தல் - நீல நிறத்தை உடைய நெய்தலின், நிரை இதழ் குறுக - நிரையாகிய இதழ்கள் குவிய, ஆனாது - அமைந்திராது, அலைக்கும்- அலைகள் வீசும், கடல்- கடலிடத்து, மீன் அருந்தி - மீன்களைத் தின்னுகின்ற, புள்இனம் - பறவை களின் கூட்டம், குடம்பை - கடற்கரைச் சோலையின்கண் இருக் கின்ற தம் தம் கூட்டினிடத்தே, உடன்சேர்பு - ஒருசேரச் சென்று புகும் மாலைப் பொழுதை, உள்ளார் - நினையாராய், துறந்தோர் - நம்மைப் பிரிந்தோர், தேஎத்து - தங்கியிருந்த இடத்து, இருந்து - நாம் இருந்து, நனி - மிகவும், வருந்தி - பிரிவி னால் வருந்தி, ஆர் உயிர் கழிவது ஆயினும் - பெறுதற்கு அரிய உயிர் அழிந்து போவதாக இருந்தாலும், கரத்தல் வேண்டுமால் - பிறருக்குப் புலன் ஆகாதவாறு மறைத்துக்கொள்ளுதல் வேண்டும், மற்று - ஆதலால் யான் புலம்பேன். ஆற்றியிருப்பேன்; நீ கவலேல்.

முடிபு : நேரிழை, துறைவன் நாண பழிதான் உண்டு; எனவே உயிர் கழிவதாயினும் கரத்தல் வேண்டுமா, என முடிக்க.

கருத்து : தலைவரும் நாணும்படி எழும் அலருக்கு அஞ்சி நம் களவொழுக்கத்தை மறைத் தொழுகுதலே தக்கது என்று தலைவி தோழியிடம் கூறினாள்.

வி-ரை : துறந்தோர் துறைவன் - பன்மை ஒருமை மயக்கம். புள்ளினங்கள் இரையருந்தித் தத்தம் கூடுகளைச் சென்றடையும், ஆனால் நம் தலைவர் அரிய வழியிற் சென்று வினை முடித்து மீண்டு வந்து என்னைக் கண்டார் இல்லையே என்றாள்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவி ஆறியது கூறல்.

# 383, குறிஞ்சி

## தோழி கூற்று

கல்அயற் கலித்த கருங்கால் வேங்கை
அலங்கல்அம் தொடலை அன்ன குருளை
வயப்புனிற்று இரும்பிணப் பசித்தென வயப்புலி
புகர்முகம் சிதையத் தாக்கிக் களிறட்டு
5 உரும்இசை உரறும் உட்குவரு நடுநாள்
அருளினை போலினும் அருளாய் அன்றே
கனைஇருள் புதைத்த அஞ்சுவரும் இயவில்
பாம்புஉடன்று இரிக்கும் உருமோடு
ஓங்குவரை நாடநீ வருத லானே.

எ-து : தோழி ஆறுபார்த்துற்றுச் சொல்லியது.

### கோளியூர்க் கிழார்மகனார் செழியனார்

ப-ரை : ஓங்கு வரை நாட - உயர்ந்த மலை நாடனே! அருளினை போலினும் - நீ தலைவிபால் பெரிதும் அன்புடையை போல் தோன்றினும், கல் அயல் கலித்த - மலையின் அடிவாரத்தில் தழைத்த, கருங்கால் - கரிய அடியை உடைய, வேங்கை - வேங்கை மலர்களால் தொடுக்கப்பட்ட, அலங்கல் அம் தொடலை அன்ன - அசைதலையுடைய மாலையைப் போன்ற, குருளை - குட்டிகளை ஈன்ற, வயப் புனிற்று இரும்பிணவு - வயநோய் பொருந்திய கரிய பெண் புலியானது, பசித்தென - பசியால் வருந்தியதாக, வயப்புலி - அதனை அறிந்த வலிய ஆண் புலி, புகர்முகம் - புள்ளிகளையுடைய பெரிய முகம், சிதைய - சிதையுமாறு, தாக்கி - மோதி, களிறு அட்டு - களிற்றியானையைக் கொன்று நிற்கும், உரும்இசை உரறும் - இடியைக் காட்டிலும் மேலாக முழங்கா நிற்கும், உட்குவரு - அச்சம் தருகின்ற, நடுநாள் - நள்ளிரவில், கனை இருள் - நிறைந்த இருளால், புதைத்த - மூடப்பட்டிருக்கும், அஞ்சுவரும் இயவில் - வருவார்க்கு நடுக்கம் தருகின்ற வழியில், பாம்பு உடன்று - பாம்பின்மேல் சினந்து விழுந்து, இரிக்கும் - கொல்லுகின்ற, உருமோடு - இடி இடிக்கும் போழ்து, நீ வருதலான் - நீ எங்களை நினைந்து வருகின்ற காரணத்தால், அருளாய் அன்றே - சிறிதும் அருள் உடையை அல்லை.

முடிபு : ஓங்குவரை நாட! உட்குவரு நடுநாள் உருமோடு நீ வருதலான் அருளினை போலினும் அருளாய் அன்றே என முடிக்க.

கருத்து : யானையைக் கொன்று புலி திரியும், இடி விழும் காட்டில் தலைவ! நீ வருதலால் அன்புடையை அல்லை.

இறைச்சி : பெண் புலி பசியுடையது என்று அறிந்து ஆண் புலி களிறுஅட்டு முழங்கும் என்றது, தலைவி வரைய விரும்புதலை அறிந்து நீ வேற்று நாடு சென்று பகை வென்று பொருள்கொண்டு வலம்புரி முழங்க வருவாயாக என்றவாறு.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவுகடாதல்.

ஒப்புமைப்பகுதி

1. கருங்கால் வேங்கை

"கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்" (குறுந். 47:1)
"அரும்புஅற மலர்ந்த கருங்கால் வேங்கை" (குறுந். 26:1)
"கோடை ஒற்றிய கருங்கால் வேங்கை" (குறுந். 343:5)
(மதுரை. 296), (அகநா. 345;8, 349:10), (புறநா. 137:9)

4. புலிக்குப் பூத்த வேங்கைச் சினை

"மிகுவலி இரும்புலிப் பகுவாய் ஏற்றை
..............
வாடுபூம் சினையிற் கிடக்கும்" (குறுந். 343:3-6)
"உறுபுலி உருஏய்ப்பப் பூத்த வேங்கையை" (கலி. 38:6)
"வேங்கை அம்சினையென விறற் புலி முற்றியும்"
(கலி. 46:5)
"கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு, நெடுவரை மருங்கில் துஞ்சும் யானை, நனவில் தான் செய்தது மனத்தது ஆதலில், கனவிற் கண்டு கதுமென வெரீஇப், புதுவதாக மலர்ந்த வேங்கையை, அது என உணர்ந்து அதன் அணிநலம் முருக்கி" (கலி. 49:1-6)
"மலர்ந்த வேங்கை வெறித்தழை வேறுவகுத்தன்ன,
ஊன்பொதி அவிழாக் கோட்டுகிர்க் குருளை"
(அகநா. 147:1-3)
"புலிக்கேழ் வேங்கைப் பூஞ்சினை" (அகநா. 227:8)

# 384. பாலை

## தலைவன் கூற்று

வண்புறப் புறவின் செங்காற் சேவல்
களரி ஓங்கிய கவைமுட் கள்ளி
முளரிஅம் குடம்பை ஈன்றுஇளைப் பட்ட
வயவுநடைப் பேடை உணீஇய மன்னர்
5 முனைகவர் முதுபாழ் உகுநெல் பெறூஉம்
மாண்இல் சேய்நாட்டு அதரிடை மலர்ந்த
நல்நாள் வேங்கைப் பொன்மருள் புதுப்பூ
பரந்தன நடக்கயாம் கண்டனம் மாதோ
காண்இனி வாழி என்நெஞ்சே நாண்விட்டு
10 அருந்துயர் உழந்த காலை
மருந்தெனப் படூஉம் மடவோ ளையே.

எ-து: உடன்போகா நின்றான் மலிந்து தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

பாலை பாடிய பெருங்கடுங்கோ

ப-ரை: என் நெஞ்சே! - என் மனமே! வாழி - நெடுங்காலம் வாழ்வாயாக. நாண்விட்டு - காம நோய்ப்பெருக்கால் நாணத்தைக் கைவிட்டு, அருந்துயர் உழந்த காலை - அந் நோயால் அரிய துன்பம் எய்தியவிடத்து, மருந்து எனப்படூஉம் - அந் நோயை நீக்குதற்குரிய மருந்தைப் போன்ற, மடவோளை - இளமைத் தன்மையுடைய இவளை, வண்புறச் செங்கால் புறவின் சேவல் - வளவிய புறத்தையும் சிவந்த காலையுமுடைய புறாவின் சேவல், களரி ஓங்கிய - களரில் உயர்ந்து வளர்ந்த, கவை முள்கள்ளி - பிளவுபட்ட முட்களையுடைய கள்ளியின் தலையிலே, முளரி அம் குடம்பை - சுள்ளிகளை அடுக்கி அழைத்த கூட்டின் கண்ணே, ஈன்று - பிள்ளைகளைப் பெற்று, இளைப்பட்ட - அவற்றைக் காத்தலாற் சோர்வுற்றுத் தளர்ந்த, வயவு நடைப் பேடை - வருந்திய நடையையுடைய பெண் புறா, உணீஇய - உண்ணும் பொருட்டு, மன்னர் - பகையரசர், முனைகவர் - படையொடு வந்து எல்லாவற்றையும் கொள்ளையடித்தலினாலே, முதுபாழ் - யாருமின்றி முதிர்ந்த பாழ் நிலத்திலே, உகு - தானே உதிர்ந்து விழுந்த, நெல் - நெற் கதிர்களை, பெறூஉம் - பெற்றுத் தரும், மாண்இல் சேய்நாட்டு - பெருமை குன்றிய

வெகு தூரத்திற்கு அப்பாலிருக்கும் நாட்டிற்குச் செல்லும், அதர்இடை - வழியில், நல்நாள் மலர்ந்த - நல்ல விடியற் காலையில் மலர்ந்த, பொன்மருள் - பொன்னைப் போன்ற, புதுப்பூ - புதிய பூக்கள், பரந்தன - பரவிக் கிடக்க, நடக்க - அப் பரப்பின் மேல் அன்னம் நடப்பதுபோல நடந்துவர, யாம் கண்டனம் - யாம் கண்களாற் கண்டு மகிழ்ந்தேம்; இனி இப்பொழுது, காண் - நீயும் கண்டு களிப்பாயாக;

முடிபு : நெஞ்சே! மடவோளை நடக்க யாம் கண்டனம், இனி, காண்; வாழி என முடிக்க.

கருத்து : களவில் தலைவியை உடன்போக்கில் அழைத்துச் செல்லும் தலைமகன் முரம்பு நிலத்திற் பரவிய பூக்களிடை அவள் நடந்து வரும் அழகைக் கண்டு மகிழ்கின்றான்.

பி.ம். 1. : 'பண்புறப் புறவு'

இறைச்சி : பார்ப்பை ஈன்று தளர்ந்த தன் பேடை உண்பான் வேண்டி, அதன் சேவல் முதுபாழில் விளைந்த நெற் கதிரைப் பெற்று வந்து கொடுக்கும் என்றது, ஏமனமே! இவளைப் பெற்று இல்வாழ்க்கை நடத்த இருக்கின்ற யாம் அதற்கு ஏற்ப அயல்நாடு சென்று பொருள் ஈட்டிக் கொணர்ந்து தலைவியைக் காப்போம் என்றவாறு.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - மகிழ்தல்.

ஒப்புமைப்பகுதி

11. மருந்து

"மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே"

(குறுந். 71:1)

# 385. நெய்தல்

எல்லை சென்றபின் மலரும் கூம்பின
புலவுநீர் அடைகரை யாமைப்பார்ப் போடு
அலவனும் அளைவயிற் செறிந்தன கொடுங்கழி
இரைநசை வருத்தம் வீட மரமிசைப்
5 புள்ளும் பிள்ளையொடு வதிந்தன அதனால்
பொழுதன்று ஆதலின் தமியை வருதி
எழுதுஎழில் மழைக்க.........

(இப்பாடல் முழுவதும் கிடைக்கப் பெறவில்லை. பாடினோர் பெயரும் அறியக்கூடவில்லை. இருக்கும் பகுதியைக்கொண்டு திணை மட்டும் உணர முடிகிறது.)

ப-ரை : எல்லை சென்றபின் - பகற்பொழுது நீங்கியவுடன், மலரும் - கழிக்கரையிலுள்ள மலர்களும், கூம்பினை - குவியத் தொடங்கின; புலவுநீர் அடைகரை - புலால் நாற்றம் வீசும் கடற்கரையிலே, யாமை - யாமைகள், பார்ப்போடும் - தம் பார்ப்புடனும், அலவனும் - நண்டுகளும், அளைவயில் - புற்றுக் களில், செறிந்தன - சென்று பதுங்கின; கொடுங்கழி - கொடிய நீர்க்கழியில், இரை நசை - இரைமேல் எழுந்த விருப்பம், வீட - கெட, மரம் மிசை - மரத்தின்மேல், புள்ளும் - பறவைகளும், பிள்ளையொடு - குஞ்சுகளோடு, வதிந்தன - அடங்கின; அதனால் - ஆகையால், பொழுது அன்று - நீ வருதற்கு ஏற்ற சமயம் அன்று; தமியை வருதி - அஞ்சாது தனித்து வருகின்றனை; எழுது எழில் - அழகு செறிந்த, மழைக் கண் - குளிர்ந்த கண்களை உடையவள்.

## 386. குறிஞ்சி

### தோழி கூற்று

சிறுகண் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்
துறுகண் கண்ணிக் கானவர் உழுத
குலவுக்குரல் ஏனல் மாந்தி ஞாங்கர்
விடர்அளைப் பள்ளி வேங்கை அஞ்சாது
5 கழைவளர் சாரல் துஞ்சும் நாடன்
அணங்குடை அருஞ்சூள் தருகுவன் எனநீ
நும்மோர் அன்னோர் துன்னார் இவைஎனத்
தெரிந்துஅது வியந்தனென் தோழி பணிந்துநம்
கல்கெழு சிறுகுடிப் பொலிய
10 வதுவைஎன்று அவர்வந்த ஞான்றே.

எ-து பரத்தையின் மறுத்தந்த தலைவற்கு வாயில் நேர்ந்த தோழி, தலைவியை முகம்புகுவல் என முற்பட்டாள், தலைவி மாட்டு நின்ற பொறாமை நீங்காமை அறிந்து, பிறிது ஒன்றன் மேல் வைத்து "பாவியேன் இன்று பேதைமை செய்தேன்; எம் பெருமாட்டி குறிப்புணர்ந்து வழிப்படுவேனாவேன் மன்னோ" எனச் சொல்லியது.

## தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார்

படரை : தோழி - தோழீ! சிறுகண் - சிறிய கண்ணும், பெருஞ்சினம் - பெரிய சினமும் உடைய, பன்றி ஒருத்தல் - ஆண் பன்றிகள், தறுகண் - கொடிய கண்களை உடைய, கண்ணி - மாலையணிந்த, கானவர் - வேடர், உழுத - உழுது விளைத்த, குலவுக் குரல் ஏனல் - வளைந்த தினைக்கதிர்களை, மாந்தி - தின்று, ஞாங்கர் - பக்கத்திலுள்ள, விடர் அளை - மலைவெடிப்பினை, பள்ளி - தனக்குரிய இடமாகக் கொண்ட, வேங்கை - புலிக்கு, அஞ்சாது - சிறிதும் பயப்படாது, கழைவளர் சாரல் - மூங்கில்கள் வளரும் மலைச்சாரலில், துஞ்சும் - உறங்கும், நாடன் - மலைநாடனாகிய தலைவன், அணங்குடை அருஞ்சூள் தருகுவன் - நின்னை மணந்து கொள்வேன்; அதற்குச் சான்றாக முருகவேளைத் தொட்டுச் சூளுறவு செய்குவேன்; என - என்றலும், நீ - அது கேட்டு நீ சினம் தணியாது, நும்மோர் அன்னோர் - உன்னைப் போன்ற பெருந்தகையாளர், இவை - இத்தகைய சூளுறவினை, துன்னார் - நினைத்தும் சொல்லார்; பெருந்தகைமை நின்பால் இல்லை, எனவே சூளுற்றனை, என - என்று கூற, (அஃது உண்மையென்று நம்பிய யான் பின்பு ஒரு சமயம்) கல்கெழு சிறுகுடி - நமது மலையகத்து விளங்கிய சிறுகுடி, பொலிய - பொலிவடைய, வதுவை என்று - திருமணம் அயர்தும் என்று, அவர் - அத்தலைவர், வந்த ஞான்று - அந்தணர் சான்றோரை முன்னிட்டு அருங்கலத்துடன் வந்த போழ்து, தெரிந்து - இவர் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத உத்தமர் என்பது தெரிந்து, அது - அவர் வருகை கண்டு, வியந்தனென் - ஆச்சரியப்பட்டேன் காண்.

முடிபு : தோழீ! ஒருத்தல் மாந்தி துஞ்சும் நாடன் சூள் தருகுவன் என நீ இவை துன்னார் என, அவர் வதுவை என்று வந்த ஞான்று வியந்தனென் எனமுடிக்க.

கருத்து : வாயில் நேர்ந்த தோழி, தலைவியிடம் தலைவர் பொய் கூறார். பெருந்தகுதிப்பாடுடையர் எனவே ஏற்க என்றனள்.

உள்ளுறை : பன்றி குறவருடைய ஏனற் கதிரைத் தின்று புலிக்கு அஞ்சாது மலைச்சாரலிலே தூங்கும் என்றது தலைவன் பரத்தையர்பால் இன்பம் துய்த்து உலகம் இகழும் இகழ்ச்சிக்கு அஞ்சாது நின் வாயில் முன் காத்திருக்கின்றான் என்றவாறு.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - ஊடலைத் தணித்தல்.

# 387. பாலை

## தோழி கூற்று

நெறிமிருங் கதுப்பும் நீண்ட தோளும்
அம்ம நாளும் தொன்னலம் சிதையேல்
ஓராச் செந்தொடை ஒரீஇய கண்ணிக்
கல்லா மழவர் வில்லிடை விலங்கிய
5 துன்னருங் கவலை அருஞ்சுரம் இறந்தோர்
வருவர் வாழி தோழி செருஇறந்து
ஆலங் கானத்து அஞ்சுவர இறுத்த
வேல்கெழு தானைச் செழியன் பாசறை
உறைகழி வாளின் மின்னி உதுக்காண்
10 நெடும்பெரும் குன்றம் முற்றிக்
கடும்பெயல் பொழியும் கலிகெழு வானே.

எ-து: பிரிவிடை மெலிந்த தலைவியைத் தோழி பருவம் காட்டி வற்புறுத்தியது.

### பொதும்பில் கிழார் மகனார்

ப-ரை: தோழி - தலைவீ! வாழி - வாழ்வாயாக; அஞ்சுவர - யாவரும் அஞ்சும் வண்ணம், செரு இறந்து - போர்வென்று, ஆலம் கானத்து - தலையாலங் கானத்து, இறுத்த - சென்று தங்கிய, வேல் கெழுதானைச் செழியன் - வேற்படை பொருந்திய சேனைகளை உடைய பாண்டியன் நெடுஞ்செழியன், தனது பாசறை - பாசறையிலிருந்து, உறை கழி வாளின் - உறையினின்றும் எடுத்த வாளைப் போல, மின்னி - பளிச்சிட்டு, உதுக்காண் - உவ்விடத்தே பாராய்! நெடும் - நெடிய, பெரும் - பெரிய, குன்றம் - மலையை, முற்றி - சூழ்ந்து, கலிகெழு வான் - முழக்கம் மிக்க மேகம், கடும் பெயல் பொழியும் - விரைந்து மழையைப் பெய்கின்றது. (இப் பருவத்தினைக் கண்டவுடன்) ஒரீஇய கண்ணி - வெறுத்தொழிந்த மாலையை உடைய, கல்லா மறவர் - மறத்தொழிலை அன்றிப் பிறிதொன்றையும் கல்லாத வீரர், ஓரா - பயிலாது ஏந்திய, செந்தொடை - செவ்விய அம்பினை, வில்லிடை விளங்கிய - வில்லில் பூட்டிச் செலுத்தியது கண்டு, துன்அரும் கவலை - எவரும் செல்லற்கரிய வழியினை உடைய, அருஞ்சுரம் - கொடிய பாலை நிலவழியை, இறந்தோர் - கடந்து சென்றோர், வருவர் - விரைந்து வருகுவர். அதற்குள்

ளாக, நீ வருத்தமுற்று, நெறி இரும் கதுப்பும் - நெறித்த கரிய கூந்தலினும், நீண்ட தோளும், - நெடிய தோளினும், நாளும் - நாள்தோறும், தொல் நலம் சிதையேல் - பழைமையாயுள்ள அழகு எல்லாவற்றையும் கெடுத்துக் கொள்ளாதே.

முடிபு : தலைவீ! செருவிறந்து கானத்து இறுத்த செழியன் வாளின் மின்னி முற்றி வான் பொழியும், நலம் சிதையேல், வருவர், வாழி! எனமுடிக்க.

கருத்து : குறித்த கார்ப்பருவம் வந்துற்றது. இன்னே தலைவர் வருவார்; நலம் சிதையேல். உதுக்காண் என்றது கார்ப் பருவத்தைச் சுட்டியது.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

1. கதுப்பும் தோளும்
"நெறியிருங் கதுப்பொடு பெருந்தோள் நீவி" (குறுந். 190:1)

7-8. ஆலங்கானத்து அமர்
"ஆலங்கானத்து அமர்கடந்த அட்ட" (புறநா. 23:16)

# 388. நெய்தல்

## தலைவி கூற்று

அம்ம வாழி தோழி நன்னுதற்கு
யாங்கா கின்றுகொல் பசப்பே நோன்புரிக்
கயிறுகடை யாத்த கடுநடை எறிஉளித்
திண்திமில் பரதவர் ஒண்சுடர்க் கொளீஇ
5 நடுநாள் வேட்டம் போகி வைகறைக்
கடல்மீன் தந்து கானற் குவைஇ
ஓங்குஇரும் புன்னை வரிநிழல் இருந்து
தேங்கமழ் தேறல் கிளையொடு மாந்திப்
பெரிய மகிழும் துறைவனெம்
10 சிறிய நெஞ்சத்து அகல்வு அறியானே.

எ-து : வரைவு நீட ஆற்றாளாகிய தோழிக்குத் தலைவி, தலைவன் சிறைப்புறமாகச் சொல்லியது.

(அல்லது)

மனையுள் வேறுபடாது ஆற்றினாய் என்றாற்குத் தலைவி சொல்லியதூஉமாம்.

## மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார்

ப-ரை : தோழி - தோழியே! வாழி - வாழ்வாயாக; அம்ம - யான் கூறுகின்றதனைக் கேட்பாயாக, நோன்புரி - வலிமை கொண்ட புரிகளான் முறுக்குண்ட, கயிறு கடை - கயிற்ற நுனியிலே, யாத்த - கட்டிய, கடுநடை - விரைந்து செல்லும் திறன் அமைந்த, எறிஉளி - திமிங்கிலத்தின் மேல் எறிகின்ற ஈட்டியையுடைய, திண்திமில் - உறுதி வாய்ந்த மீன் பிடிபடகிலே செல்லுகின்ற, பரதவர் - நெய்தல் நிலமக்கள், ஒண்சுடர்க்கொளீஇ - ஒள்ளிய விளக்கங்களைக் கொளுத்திக் கொண்டு, நடுநாள் - நடுநிசியில், வேட்டம் போகி - வேட்டை மேற்சென்று, கடல்மீன் - கடலிற் பிடித்த மீன்களை, வைகறை - விடியற் காலையில், தந்து - கொண்டு வந்து, கானல் - கழிக்கரைச் சோலையில், குவைஇ - குவித்து, ஓங்கு இரும் புன்னை - உயர்ந்த கரிய புன்னையின், வரிநிழல் இருந்து - வரியமைந்த நிழலின் கண் இருந்து, தேம் கமழ் தேறல் - தேன்மணம் வீசும் தெளிந்த கள்ளை, கிளையொடு - தம் சுற்றத்தாருடன், மாந்தி - பருகி, பெரிய மகிழும் - அளவற்ற உவகையுடன் மகிழ்ந்து வாழும், துறைவன் - கடலின் துறையையுடைய நம் தலைவன் எம்சிறிய நெஞ்சத்து - எமது சிறிய உள்ளத்தினின்றும், அகல்வு அறியான் - அகன்று வாழ்தலை அறியான். எப்போதும் எம்மனத்தகத்தே இருக்கின்றான்; அவன் அவ்வாறு பிரியாது உறைதலின், நல்நுதற்கு - எமது நல்ல நுதலின் கண்ணே, பசப்பு - பசலை நிறம், யாங்கு - எவ்வாறு, ஆகின்றுகொல் - படராநிற்கும்? எண்ணிப்பார்.

முடிபு : தோழீ; பரதவர் ஒண்சுடர்க் கொளீஇ, போகி, தந்து, இருந்து, மாந்தி, மகிழும் துறைவன் அகல்வு அறியான்; நன்னுதற்குப் பசப்பு யாங்காகின்று?

கருத்து : என் உள்ளத்தை விட்டுத் தலைவன் அகலான் ஆகலின் யான் துன்புறேன்.

வி-ரை : தன் தாழ்வும் தலைவனின் உயர்வும் தோன்றச் சிறிய நெஞ்சம் என்றாள். தலைவனை மறவாமல் இருத்தலினால் தான் நுதலைப் பசலை தீண்டவில்லை என்றும், அவனுடன் முயக்கம் பெற்றிலேன் என்றும் கூறினாள்.

உள்ளுறை : பரதவர் படகுடன் சென்று மீன் பிடித்துக் கொணர்ந்து கானலின் கண் குவித்து புன்னையின் நிழலில் அமர்ந்து கிளையோடு மது வருந்தி மகிழும் துறைவன் என்றது, தலைவன் தேரோடு வேற்று நாட்டுச் சென்று பொருள் ஈட்டி வந்து முன்றிலிற் குவித்து எம் மனைக்கட் சுற்றத்தாரோடு மகிழ்ந்து என்னை மணந்து எனது நலனை நுகர்ந்து மகிழ்வானாக என்றவாறு.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - வரைவுடன்படுத்தல்.

ஒப்புமைப்பகுதி

1-2. நுதல் பசத்தல்
"பசைஇப் பசந்தன்று நுதலே" (குறுந். 87:4)
"நன்னுதல் பசலை நீங்க" (குறுந். 48:5)
"தேங்கமழ் திருநுதல் ஊர்தரும் பசப்பே" (குறுந். 205:7)
(ஐங். 55:4, 67:5, 105:4, 107:2, 219:4, 222:4) (கலித் 28:15)
(அகநா. 102:19, 235:17, 376:13)

3-5 பரதவர் எறியுளியாற் சுறாமீனை எறிதல்
"கொல்வினைப் பொலிந்த கூர்வாய் எறியுளி
...............
கொடுந்திமிற் பரதவர் கோட்டுமீன் எறிய"
(குறுந். 304:1-4)
"பரதவர் எறியுளி பொருத ஏமுறு பெருமீன்"
(அகநா. 210:1-2)

5. நடுநாள் வேட்டம்
"பன்மீன் வேட்டத்து என் ஐயர் திமிலே" (குறுந். 123:5)
"புன்றலை இரும்பரதவர்.........
பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லாது" (பட். 90-92)
(அகநா. 110, 170:11, 10:11) (புறநா. 399:5)

# 389. குறிஞ்சி

## தோழி கூற்று

வேங்கை யும்புலி ஈன்றன அருவியும்
தேம்படு நெடுவரை மணியின் மானும்
அன்னையும் அமர்ந்துநோக் கினளே என்னையு
களிற்றுமுகம் திறந்த கல்லா விழுத்தொடை
5 ஏவல் இளையரொடு மாவழிப் பட்டெனச்
சிறுகிளி முரணிய பெருங்குரல் ஏனல்
காவல் இனிஎன் றோளே சேவலொடு
சிலம்பிற் போகிய சிதர்கால் வாரண
முதைச்சுவற் கிளைத்த பூழி மிகப்பல
10 நன்பொன் இமைக்கும் நாடனொடு
அன்புறு காமம் அமைந்தநம் தொடர்பே.

எ-து : பகற்குறி வந்தொழுகா நின்ற காலத்துத் தலைவன் கேட்பச் சொல்லியது.

### காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார்

ப-ரை : என் ஐயும் - எனது தந்தையும், களிற்று முகம் திறந்த - யானையின் மத்தகத்தைக் கிழித்த, விழு - சிறந்த, தொடை - அம்பையுடைய, கல்லா - கொலைத் தொழிலை அன்றிப் பிறவற்றை அறியாத, ஏவல் இளையரொடு - ஏவல் மக்களாகிய வீரருடனே, மாவழிப்பட்டென - விலங்கின்மேல் வேட்டைக்குச் சென்றானாக, அன்னையும் - தாயும், அமர்ந்து - விரும்பி, நோக்கி - என்னைப் பார்த்து, சிறுகிளி - சிறிய கிளிகளால், முரணிய - கொய்து அழிக்கப்படுகின்ற, பெருங்குரல் ஏனல் - பெரிய கதிர்களை உடைய தினைப்புனம், இனி - இப்பொழுது, காவல் என்றோள் - நின்னாற் காக்கப்படுவதாகுக என்றனள்; அதுமுதல் யாம் காவலை மேற்கொண்டு ஒழுகா நின்றேம்; சிலம்பில் - மலையில், போகிய - சென்ற, சிதர்கால் வாரணம் - புழுதியைக் கிளைக்கின்ற கால்களை உடைய கோழி, சேவலொடு - தன் சேவலுடனே, முதைச் சுவல் - பழங்கொல்லையின் மேற்புறத்தை, கிளைத்த - கிளைத்தமையால் எழுந்த, பூழி - புழுதியிடையே, மிகப்பல - மிகப்பலவாகிய, நன்பொன் இமைக்கும் - நல்ல பொன் ஒளிவீசா நின்ற, நாடனொடு - நாடனுடன், அன்புறு காமம் - அன்புமிக்க காமமே பற்றுக் கோடாக, நம்

தொடர்பு அமைந்த - நாம் நட்புடையேம் ஆயினேம்; அந்த நட்பு நீங்கும் வண்ணம், வேங்கையும் - வேங்கை மரங்களும், புலி ஈன்றன - புலி போன்ற புள்ளிகளையுடைய மலர்களைப் பூத்தன. அருவியும் - அருவிகள் யாவும், தேம்படு - தேன் மணம் மிக்க, நெடுவரை - நெடிய மலையிடத்தில், மணியின் - நீல மணியைப்போல, மானும் - தெளிந்து ஒத்திருக்கும்; தினை கொய்யும் பருவமும் மணம் புரியும் காலமும் ஒரு சேர வந்தமை கருதி என்னை உற்று நோக்கினள். இனி நட்பு என்னாம்? அறியேன்.

முடிபு : நாடனொடு அமைந்த நம் தொடர்பு என்னாம்? எனமுடிக்க.

கருத்து : தினை முற்றி விட்டது; இனிக்காவல் செய்யேம்; தலைவன் தொடர்பு யாதாம்? வரைதலே அவன் செயத் தக்கது என்றபடி.

வி-ரை : வேங்கை மலர்ந்தவுடன் தினை கொய்தலும் இற் செறிப்பும் நிகழுமாதலால் தலைவன் தொடர்பறுமோ என்று ஏங்கினாள்.

கோழி கிளைத்த பூழியிடத்து நன்பொன் இமைக்கும் என்றது செல்வக் குறைபாடு இலன். ஆதலால் எமர்க்கு வேண்டும் பொருள் கொடுத்து என்னை மணம் புரிந்து கொண்டான் இல்லையே என்றவாறு.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவுகடாதல்.

## 390. மருதம்

காமக்கிழத்தி கூற்று
(தலைவி கூற்றுமாம்)

வாளை வாளிற் பிறழ நாளும்
பொய்கை நீர்நாய் வைகுதுயில் ஏற்கும்
கைவண் கிள்ளி வெண்ணி சூழ்ந்த
வயல்வெள் ஆம்பல் உருவ நெறித்தழை
5 ஐதுஅகல் அல்குல் அணிபெறத் தைஇ

விழவிற் செலீஇயர் வேண்டும் மன்னோ
யாணர் ஊரன் காணுநன் ஆயின்
வரையா மையோ அரிதே வரையின்
வரைபோல் யானை வாய்மொழி முடியன்
10 வரைவேய் புரையும் நல்தோள்
அளிய தோழி தொலையுந பலவே.

எ-து: பாங்காயின வாயில் கேட்ப நெருங்கிச் சொல்லியது.
(அல்லது)

தலைவி தோழிக்கு உரைப்பாளாய் வாயிலாகப் புக்கார் கேட்பச் சொல்லியதூஉம் ஆம்.

## ஔவையார்

ப-ரை: தோழி - தோழீ! வாளை - வாளை மீன்கள், வாளின் - வாள்போல, பிறழ - நெளிந்து பிறழ, நாளும் - நாள் தோறும், பொய்கை - பொய்கையிலுள்ள, நீர்நாய் - நீர்நாய், வைகு துயில் ஏற்கும் - அந்த மீன் இரையைத் தின்னக் கருதாது உறங்கா நிற்கும், கை வண் கிள்ளி - கொடைத் திறன் வாய்ந்த கிள்ளி வளவனது, வெண்ணி - கோயில் வெண்ணி என்னும் ஊரை, சூழ்ந்த - சுற்றியுள்ள, வயல் - வயல்களில் வளர்ந்த, வெள் - வெள்ளிய, ஆம்பல் - ஆம்பலின், உருவ - அழகிய, நெறித் தழை - நெறிப்பையுடைய தழையை, ஐது - மெல்லிய தாக, அகல் - அகன்ற, அல்குல் - அல்குலின் மேலே, அணிபெற - அழகுபெற, தைஇ - உடுத்து, விழவிற் செலீ இயர் வேண்டும் - யானும் இங்கு நடக்கின்ற விழாக்களத்தின் கண்ணே செல்ல வேண்டும்; மன்னோ - முன்னமே அது செய்யாமையின் வீணே கழிந்தது, (இப்பொழுது, இந்த இளமகள் ஒப்பனையோடு செல்லுதலை) யாணர் ஊரன் - புதுவருவாயினை உடைய தலைவன், காணுநன் ஆயின் - காண்பானேயானால், வரையாமையோ அரிது - ஏனையோரைப் பாராது இவளையே அடைய முயலுவன். அங்ஙனம் முயலாதிருத்தல் அரிதே யாம்; வரையின் - இவளைக் கொண்டு செல்லின், வரைபோல் - மலையைப்போன்று உயர்ந்த, யானை - யானையையும், வாய் மொழி - தவறாத மெய்ம்மையையும் உடைய, முடியன் - முடியன் என்பானுக்குரிய, வரை - மலையில் ஓங்கி வளர்ந்த, வேய்புரையும் - மூங்கிலை ஒத்திருக்கும், நல்தோள் பல - இவனுக் குரிய இல்லுறை மகளிரின் நல்ல தோள்கள் பல, தொலையுந - தம் நலன் இழப்பனவாகும்; அளிய - அவை இரங்கத்தக்கன.

முடிபு : தோழி! யாணர் ஊரன் காணுநன் ஆயின் வரையாமையோ அரிது; வரையின் தோள் பல தொலையுந, எனமுடிக்க.

கருத்து : பிறமகளிரை அடையாத வண்ணம் யான் தலைவனை அகப்படுப்பேன். பிறர் அளிக்கத்தக்கார்.

உள்ளுறை : பொய்கையில் வாளை மீன் பிறழ அதனை இரையாகக் கொள்ளக் கருதாது நீர்நாய் உறங்கும் என்றது, விழாவின்கண் அயலாட்டியொருத்தி புனைந்து வந்து நிற்ப அவளைக் கடிந்து போக்காது வாளா வீட்டின் கண்ணேயே இருந்தேன் என் செய்தேன் எனக் காமக்கிழத்தி நொந்து கூறினாள்.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - காமக்கிழத்தி இனிவருந் தலைவியைக் கடிதல்.

ஒப்புமைப்பகுதி

1. வாளென வாளை பாய

"வலையவர் முன்றிற் பொங்கி வாளென வாளை பாய"

(சீவக. 2583: 1180)

"வாளை பிறழும் கயங்கடுப்ப" (பு. வெ. 147)

# 391. பாலை

## தோழி கூற்று

ஆழல் மடந்தை அழுங்குவர் செலவே
புலிப்பொறி அன்ன புள்ளிஅம் பொதும்பின்
பனிப்பவர் மேய்ந்த மாயிரு மருப்பின்
மலர்தலைக் காரான் அகற்றிய தண்ணடை
5 ஒண்தொடி மகளிர் இழைஅணிக் கூட்டும்
பொன்படு கொண்கான நன்னன் நல்நாட்டு
ஏழிற் குன்றம் பெறினும் பொருள்வயின்
யாரோ பிரிகிற் பவரே குவளை
நீர்வார் நிகர்மலர் அன்னநின்
10 பேர்அமர் மழைக்கண் தெண்பனி கொளவே.

எ-து : பிரிவுணர்த்தப்பட்டு ஆற்றாளாகிய தலைவியைத் தோழி வற்புறுத்தியது.

(அல்லது)

வரைவு உணர்த்தியதூஉம் ஆம்.

பாலை பாடிய பெருங்கடுங்கோ

ப-ரை : மடந்தை - மடந்தாய்! குவளை நீர்வார் நிகர்மலர் அன்ன - குவளையின் நீர் வடிகின்ற ஒளி பொருந்திய மலர் போன்ற, நின் - நின்னுடைய, பேர் அமர் மழைக்கண் - பெரிய மதர்த்தலையுடைய குளிர்ச்சியுற்ற கண்களிலே, தெண்பனி - தெளிந்த நீர் வடியும்படி, ஆழல்- அழாதே; நீ அழுவதனை அறிந் தால், செலவு - பொருள் ஈட்டச் செல்வதை, அழுங்குவர் - தவிர்வர். புலிப்பொறி அன்ன - புலியினது புள்ளிகளைப் போன்ற, புள்ளிஅம் பொதும்பில் - புள்ளிகள் அமைந்த நிழலை யுடைய மரச் செறிவில், பனிப்பவர் மேய்ந்த - படர்ந்த குளிர்ந்த கொடியை மேய்ந்த, மாஇரு மருப்பின் - பெரிய கரிய கொம்பு களையும், மலர் தலை - பருத்த தலையையும் உடைய, கார்ஆன் - எருமை மாடு, அகற்றிய - தின்றொழித்த, தண்ணடை - மலைப் பச்சையின் இலைகள், ஒண்தொடி மகளிர் - ஒள்ளிய தொடியை யுடைய மகளிர், இழை அணி கூட்டும் - கலன்களை அணிதற்குப் பயன்படுமாறு கூட்டா நிற்கும், பொன்படு - பொன் விளையும், கொண்கானம் - கொண்கானத்தின் கண்ணுள்ள, நன்னன் - நன்னன் என்னும் மன்னனது, நல்நாட்டு - சிறந்த நாட்டிலிருக் கின்ற, ஏழிற் குன்றம் - அழகு தங்கிய ஏழில் மலையை, பெறினும்- நாம் பெறுவதாயினும், பிரிகிற்பவர் - நின்னை விட்டுப் பிரிபவர், யாரோ - யாவர்? எவரும் பிரியார்.

முடிபு : மடந்தை! ஏழிற் குன்றம் பெறினும் நின்னை யாரோ பிரிகிற்பவர்? தெண்பனிகொள ஆழல் என முடிக்க.

கருத்து : மலை போன்ற நிதியம் கிடைப்பதாயினும் தலைவியை விட்டுத் தலைவன் பிரியான்.

உள்ளுறை : எருமை தின்றொழித்த மலைப்பச்சை, மாதர் இழையணியாகக் கூட்டும் என்றது, அவர் ஈட்டிக் கொணர நீ இல்லறம் நிகழ்த்தி எஞ்சிய பொருள் உலகத்திற்குப் பயன்படுங் காண் என்றதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

1. அழல்

"அழாஅல் தோழி அழுங்குவர் செலவே" (குறுந். 135:4)

"அழாஅல் என்று நம் அழுதகண் துடைப்பார்" (குறுந். 82:2)

3-4. பவர் மேய்தல்

"தாளித் தண்பவர் நாளா மேயும்" (குறுந். 104. 3-4)

6. கொண் பெருங்கானம்

"கொண்பெருங் கானம் பாடல் எனக்கு எளிதே"

(புறநா. 154:13, 155:7, 156:2)

7. ஏழில்

"எம்மிலயலது ஏழில் உம்பர்" (குறுந். 138:2)

(அகநா. 152:13, 345:7, 349:9)

10. பேரமர் மழைக்கண்

"பேரமர் மழைக்கட் கொடிச்சி
மூரன் முறுவலொடு மதைஇய நோக்கே" (குறுந். 286:4)

(ஐங். 214:4) (அகநா. 326:2)

# 392. நெய்தல்

## தோழி கூற்று

கடுஞ்சுறா எறிந்த கொடுந்தாள் தந்தை
புள்இமிழ் பெருங்கடற் கொள்ளான் சென்றென
மனைஅழுது ஒழிந்த புன்தலைச் சிறாஅர்
துனையதின் முயன்ற தீங்கண் நுங்கின்
5 பணைகொள் வெம்முலை பாடுபெற்று உவக்கும்
பெண்ணை வேலி உழைகண் சீறூர்
நன்மனை அறியின் நன்றுமன் தில்ல
செம்மல் நெஞ்சமொடு தாம்வந்து பெயர்ந்த
கானலொடு அழியுநர் போலாம் பால்நாள்
10 முனிபடர் களையினும் களைப
நனிபேர் அன்பினர் காத லோரே.

எ-து : இரவுக்குறி முகம்புக்கது.

(அல்லது)

வரைவுநீட ஆற்றாளாய தலைவியைத் தோழி வரைவுணர்த்தி வற்புறுத்தியதூஉம் ஆம்.

## மதுரை மருதனிளநாகனார்

ப-ரை : கடும் சுறா எறிந்த - கொடிய சுறாமீனை வலையிட்டுப் பிடிக்கின்ற, கொடுந்தாள் தந்தை - கடிய முயற்சியுடைய தந்தை, புள்இமிழ் - நீர்க் காக்கைகள் ஒலிக்கின்ற, பெருங்கடல் - பெரிய கடலின் கண் வேட்டைக்குச் செல்கின்றவன், கொள்ளான் - தன்னுடன் அழைத்துச் செல்லானாய், சென்றென - தான் மட்டும் சென்றானாக, மனை அழுது ஒழிந்த - தந்தையுடன் செல்ல விரும்பி மனையின் கண்ணிருந்து அழுது நின்ற, புன்தலைச் சிறாஅர் - மெல்லிய தலையை உடைய சிறுவர், துணையதின் முயன்ற - ஆங்கு விரைய முயற்சியாலே கிடைத்த, தீங்கண் நுங்கின் - இனிய கண்ணையுடைய பனை நுங்காகிய, பணை கொள் - பருத்தலைக்கொண்ட, வெம்முலை - விருப்பம் தரும் கொங்கையின், பாடுபெற்று - பயனைப் பெற்ற, உவக்கும் - மகிழும், பெண்ணை - பனை ஓலையிட்டுக் கட்டிய, வேலி - வேலி சூழ்ந்த, உழைகண் சிறூர் - அகன்ற இடத்தையுடைய சிறிய ஊரில் உள்ள, நல்மனை - நல்ல நமது மனையகத்தை, அறியின் - நமது காதலர் அறிவாராயின், நன்றுமன் தில்ல - நல்லதேயாம். அஃது எல்லோராலும் விரும்பத்தக்கதேயாம்; எவ்வாறென்றால், அத்தகைய காதலர், பால் நாள் - நள் இரவில், முனிபடர் - நாம் படும் பிரிவுத் துன்பத்தை, களையினும் - தாம் வந்து போக்கினும் போக்குவர். காதலோர் - நம் தலைவர், நனி பேரன்பினர் - நம்மிடம் பெரிதும் அன்புடையார்; அவர்தாம், செம்மல் நெஞ்சமொடு - பெருமிதமான உள்ளத்துடன், தாம் வந்து பெயர்ந்த - தாம் முன்பு வந்து நின்னைக் கூடிச் சென்ற, கானல் - கடற்கரைச் சோலையிடத்து, இப்பொழுது நின்னைக் காண வந்து, அழியுநர் போலாம் - வருந்துகின்றனர் போலாம்.

முடிபு : காதலோர் பால்நாள் படர் களையினும் களைப; நனிபேரன்பினர்; தாம் வந்து கானலொடு அழியுநர் போலாம் என முடிக்க.

கருத்து : இரவுக்குறி விரும்பிய தலைவன் பகற்குறியை நினைந்து வருந்துகின்றனன் போலும்; அவர் நம்மனை அறியின் நன்றன்றோ.

வி-ரை : 'பானாள் முனிபடர்' என்றதனால் இரவு நடுநிசியில் உறக்கமின்றி வருந்துகின்றனையாதலின் இரவுக்குறிக்கு உடன்படுவாயாக என்றாள். 'களைப' என்றதனால் தலைவன் அஞ்சாது இரவிடை வந்து நின் துயர் போக்குவான் என்றவாறு. 'நன்மனை அறியின்' என்றது நீ ஒப்பு அளிப்பின் யானே சென்று அழைத்து வந்து நம் வீட்டை அறியச் செய்வேன் என்றவாறு.

தந்தையோடு செல்ல முயன்றும் செல்லப் பெறாத சிறார் பனை நுங்கைப் பெற்று மகிழும் என்றது, தலைவனை வரைந்து அவனுடன் இல்லறம் நிகழ்த்தற் பாலமாகிய யாம் அவ்வாறு நிகழ்த்த முடியாமையின் அவனுடன் சேரும் இன்பத்தை நம் வீட்டிலேயே பெறுவேம் என்றபடி.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - இரவுக்குறி ஏற்குமாறு தலைவியின் குறிப்பறிதல்.

# 393. குறிஞ்சி

## தோழி கூற்று

நெடுங்கழை நிவந்த நிழல்படு சிலம்பிற்
கடுஞ்சூல் வயப்பிடி கன்றுஈன்று உயங்கப்
பாலார் பசும்புனிறு தீரிய களிசிறந்து
வாலா வேழம் வணர்குரல் கவர்தலின்
5 கானவன் எறிந்த கடுஞ்செலல் ஞெகிழி
வேய்பயில் அடுக்கம் சுடர மின்னி
நிலைகிளர் மின்னின் தோன்றும் நாடன்
இரவின் வருஉம் இடும்பை நாம்உய
வரைய வந்த வாய்மைக்கு ஏற்ப
10 நமர்கொடை நேர்ந்தனர் ஆயின் அவருடன்
நேர்வர்கொல் வாழி தோழிநம் காதலர்
புதுவர் ஆகிய வரவும்நின்
வதுவைநா ணொடுக்கமும் காணுங்காலே.

எ.து : வரைவு மலிந்தது.

கோவூர் கிழார்

ப-ரை : தோழி - தலைவியே! வாழி - நீ வாழ்க! நெடுங் கழை நிவந்த - நீண்ட மூங்கில் உயர்ந்த, நிழல்படு சிலம்பில் - நிழல் மிக்க மலையில், கடுஞ்சூல் - முதிர்ந்த சூலினைக்கொண்ட, வயப்பிடி - வலிய பிடியானை, கன்று ஈன்று - கன்றைப் பெற்று, உயங்க - வருந்த, பால்ஆர் - பால்மடி பெருகிய, பசும்புனிறு - பசிய ஈன்ற அணிமையால் உண்டாகிய, தீரிய - பசியினைப் போக்க வேண்டி, களி - மகிழ்ச்சி, சிறந்து - மிக்கு, வாலா

வேழம் - வெண்மையற்ற கரிய களிற்றியானை, வணர் - வளைந்த, குரல் - தினைக் கதிர்களை, கவர்தலின் - கொய்து கொண்டு போதலாலே, கானவன் - வேடுவன், எறிந்த - அது கண்டு வீசிய, கடுஞ்செலல் ஞெகிழி - விரைந்த செலவினையுடைய எரிகொள்ளி, வேய் பயில் அடுக்கம் - மூங்கில் நிரம்பிய மலைப் பக்கம் எங்கும், சுடர - பிரகாசிக்க, மின்னி - ஒளி விட்டு, நிலைகிளர் மின்னின் - விண்ணிடை நிலைபெற்று இராது தோன்றி மறைகின்ற மின்னலைப்போல, தோன்றும் - தோன்றா நிற்கும், நாடன் - மலைநாட்டினராகிய நமது காதலர், இரவின் வருஉம் இடும்பை - இரவில் அவர் வருதலால் நமக்கு எழும் துன்பத் தினின்றும், நாம் உய - நாம் விடுபட, வரைய வந்த - நம்மை வரைந்துகொள்வதற்கென வந்த, வாய்மைக்கு ஏற்ப - உண்மைக்கு ஏற்றவாறு, நமர் - நம் சுற்றத்தார், கொடை - அவருக்கு மணம் செய்து கொடுத்தலை, அவருடன் நேர்வர் கொல் - அவரோடு உடன்படுவரோ? காதலர் - நம் தலைவர், புதுவராகிய - புதியவராய் வரும், வரவும் - வருகையும், நின் - நின்னுடைய, வதுவை - திருமணத்தில் நின்பால் நிகழும், நாண் ஒடுக்கமும் - நாணி ஒடுங்கி இருக்கும் ஒடுக்கமும், காணுங்கால் - கண்டவிடத்துக் காதலருடன் களிப்போடு உரையாடுவரோ?

முடிபு : தோழி! பிடி உயங்க களிசிறந்து வேழம் குரல் கவர்தலில் எறிந்த ஞெகிழி, மின்னில் தோன்றும் நாடன் இடும்பை நாம்உய வரவும் ஒடுக்கமும் காணுங்கால் காதலர்க்கு வரைவு நேர்வர்கொல் என முடிக்க.

கருத்து : தலைவன் வரைவொடு வருதலை அறிந்த தோழி தலைவியை நெருங்கி மகிழ்ந்து கூறுகின்றாள்.

உள்ளுறை : ஈன்ற பிடியின் பசியைப் போக்க வேண்டிக் களிறு தினைக்கதிரை அழிக்கக் கண்ட வேடுவன் எறிந்த தீக்கொள்ளி எங்கும் சுடர மின்னித் தோன்றும் என்றது, நீ படும் காம நோயைக் கண்டு நான் தலைவனை இயற்பழிக்க, அதுகண்டு ஆற்றாது தலைவன் நின்பால் அன்பு கொண்டு நமர் பெறுமாறு முன்றிலிற் குவித்த மணியும் பொன்னும் எங்கும் சுடரொளி வீசும் என்பதாம்.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - கேட்ட தலைவி மகிழ்தல்.

ஒப்புமைப்பகுதி

4-7. ஞெகிழிக்கு விண்மீன்

"ஞெகிழியிற் பெயர்ந்த நெடுநல் யானை
மீன்படு சுடரொளி வெரூஉம்" (குறுந். 357:6-7)

"சேணோன் மாட்டிய நறும்புகை ஞெகிழி
வான மீனின் வயின் வயின் இமைக்கும்" (குறுந். 150:1-2)

5. கானவன் செலுத்திய ஞெகிழி

"சேணோன், ஞெகிழியிற் பெயர்ந்த நெடுநல் யானை"
(குறுந். 357:5-6)

13. வதுவை நாணொடுக்கம்

"புதுமண மகளிரிற் கதுமெனத் தோன்றும்"
(பெருங். 1:40: 309)

"வதுவை நாணொடுக்கமும் காணுவல் யானே" (கலி. 52)

"வதுவைநாட் கலிங்கத்துள் ஒடுங்கிய,
மாதர்கொல் மான்நோக்கின் மடநதை" (கலி. 69)

"புதுநா ணொடுக்கமும் காண்குவம் யாமே" (அகநா. 122)

"நாணட நடுங்கிக் கையால் நகைமுகம்
புதைத்த தோற்றம்" (சீவக. 2461)

"நாணிக் கண் புதைத்தல்" என்னும் துறைப் பெயரும் ஈண்டு நினைவு கூரத்தக்கது.

# 394. முல்லை

## கண்டார் கூற்று

## (தோழி கூற்றுமாம்)

மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்து
அலந்தலை ஞெமையத்து இருந்த குடிஞை
பொன்செய் கொல்லனின் இனிய தெளிர்ப்பப்
பெய்ம்மணி ஆர்க்கும் இழைகிளர் நெடுந்தேர்
5 வன்பால் முரம்பின் நேமி அதிரச்
சென்றிசின் வாழியோ பனிக்கடு நாளே
இடைச்சுரத்து எழிலி உரைத்தென மார்பிற்
குறும்பொறிக் கொண்ட சாந்தமொடு
நறுந்தண் ணியன்கொல் நோகோ யானே.

எ-து : வினை முற்றி மறுத்தராநின்ற தலைவனை இடைச் சுரத்துக் கண்டார் சொல்லியது.

(அல்லது)

வன்சொல்லாற் குறை நயப்பித்த தோழி தான் தனித்துக் கூறியதூஉமாம்,

ஔவையார்

ப-ரை : மரம் தலை மணந்த - மரங்கள் மிக நெருங்கிப் பொருந்திய, நனம்தலைக் கானத்து - இடம் அகன்ற காட்டின் கண்ணே, அலந்தலை - நீரின்றி வாடிய, ஞெமையத்து - ஞெமை யென்னும் மரத்தின் மேல், இருந்த - தங்கியிருந்த, குடிஞை - பேராந்தை, பொன் செய் கொல்லனின் - பொற்கொல்லன் தொழில் செய்யுங்கால் எழுகின்ற ஒலிபோல, இனிய தெளிர்ப்ப- இனிய வாய் ஒலிப்ப, பெய்ம்மணி ஆர்க்கும் - பூட்டிய மணிகள் ஆரவாரியா நிற்கும், இழை கிளர் நெடுந்தேர் - அருங்கலம் விளங்கிய நெடிய தேரின், நேமி - சக்கரம், வன்பால் முரம்பின் அதிர - சுரத்திலுள்ள மேட்டு நிலத்தின்கண் அதிர்ந்து செல்ல, பனிக்கடு நாள் சென்றிசின் - முன்பு இத் தலைவன் முன்பனி நாளிலே சென்றனன்; இப்பொழுது, இடைச்சுரத்து - சுரத் திடையே, எழிலி உரைத்தென - மேகம் எழுந்து உலாவியதாக, கார்ப்பருவம் எனக் கருதி, மார்பில் - மார்பினிடத்து, குறும் பொறிக்கொண்ட - குறிய புள்ளிகள் அமைந்த, சாந்தமொடு - பூசிய சந்தனத்தினும், நறும் தண்ணியன் - நறிய குளிர்ச்சியை உடையவனாய் வருகின்றான், யான் நோகோ - யான் இதற்காக வருந்துவேனோ? மகிழ்வேன்;

முடிபு : குடிஞை தெளிர்ப்ப நேமி அதிர பனிக்கடுநாள் சென்றிசின்; மார்பிற் சாந்தமொடு தண்ணியன் வரூஉம்; யான் நோகோ என முடிக்க.

கருத்து : முன்பனிப் பருவத்திற் சென்ற தலைவன் கார்ப் பருவத்தில் மீளுதலைக் கண்டு கண்டோர் உவகை பூத்தனர்.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - மகிழ்தல்.

இரண்டாவது துறைக்குப் பின்வருமாறு பொருள் காண்க. நெருநல் என்னிடம் குறை வேண்டிக் கையுறை தந்து சென்ற தலைவன் இடைச்சுரத்து மேகம் முழங்கி மழை பொழிய குளிர்ச்சி மிக்கவனாய் மீண்டும் ஈங்கு வாரா

நின்றான். யான் வற்புறுத்தியுள்ளமையால் தலைவியை அவன் தடையின்றி முயங்கி மகிழ்வானாக என்றவாறு.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தோழி தானே மகிழ்ந்துரைத்தல்,

ஒப்புமைப்பகுதி

9. நோகோ யானே

"பெருவிதுப்புற்றன்றால் நோகோ யானே"

(குறுந். *131,6, 178:7, 212:5*) (ஐங். *107:4*)

(அகநா. *137:16*) (புறநா. *116:9, 234:1*)

# 395. நெய்தல்

## தோழி கூற்று

யாரை எலுவ யாரே நீஎமக்கு
யாரையும் அல்லை நொதும லாளனை
அனைத்தாற் கொண்கஎம் இடையே நினைப்பின்
கடும்பகட்டு யானை நெடுந்தேர்க் குட்டுவன்
5 வேந்துஅடு களத்தின் முரசுஅதிர்ந்து அன்ன
ஓங்கற் புணரி பாய்ந்தாடு மகளிர்
அணிந்திடு பல்பூ மரீஇ ஆர்ந்த
ஆபுலம் புகுதரு பேரிசை மாலைக்
கடல்கெழு மாந்தை அன்னஎம்
10 வேட்டனை அல்லையால் நலம்தந்து சென்மே.

எ-து : 'நலம் தொலைந்தது' எனத் தலைவனைத் தோழி கூறி, வரைவு கடாயது.

அம்மூவனார்

ப-ரை : எலுவ - நண்ப! யாரை - யாரை நீ நட்பாகக் கொண்டொழுகுகின்றனை? நீ எமக்கு யாரே - நீ எமக்கு யாரா நீ தன்மையை உடையை? யாரையும் அல்லை - எண்ணிப் பார்க்கின் நட்புடையாரையும் போல்வாய் இல்லை; நொதுமலாளனை - அயலான் ஆயினை; எம் இடையே நினைப்பின் - எம்மிடத்தில் நீ

நடந்து கொள்ளும் செயலைப் பார்க்கையில், கொண்க - தலைவ!, அனைத்தால் - அத்தன்மையதே, கடும்பகட்டு யானை - கடிய பகடாகிய யானையையும், நெடுந்தேர் - நெடிய தேரினை யும் உடைய, குட்டுவன் - குட்டுவன் என்பான், வேந்து - பகை மன்னரை, அடுகளத்தில் - கொன்ற போர்க்களத்தின் கண்ணே, முரசு - அவனது வெற்றி முரசு, அதிர்ந்து அன்ன - அதிர்ந்தாற் போன்ற, ஓங்கல் புணரி - ஒலியை எழுப்புகின்ற உயர்ந்த அலை களை உடைய கடலில், பாய்ந்து ஆடு மகளிர் - நீரிற் பாய்ந்து விளையாடும் மகளிர், அணிந்திடு - அணிந்து கழித்து எறிந்த, பல்பூ - பலவாய மலர்களை, மரீஇ - பொருந்தி, ஆர்ந்த - மேய்ந்த, ஆ - பசுக்கள், புலம்புகுதரு - மீண்டும் தாம் உறை கின்ற புலத்துட் புகுகின்ற, பேர்இசை - பெரிய இசையையுடைய, மாலை - மாலைப் பொழுதை வரவேற்கின்ற, கடல்கெழு மாந்தை அன்ன - கடற்கரையின் கண்ணே விளங்கிய மாந்தை நகர் போன்ற, எம் வேட்டனை அல்லையால் - எம்மை விரும்பி ஒழுகுவாய் அல்லையாதலின், நலன் - நின்னால் இழந்த எமது நலனை, தந்து - எம்பால் மீண்டும் தந்து விட்டு, சென்மே - அப்பாற் செல்வாயாக.

முடிபு : எலுவ! நீ எமக்கு யாரை? யாரையும் அல்லை; நொதுமலாளனை; மாந்தை அன்ன எம் வேட்டனை அல்லை யால்; நலம் தந்து சென்மே எனமுடிக்க.

கருத்து : தலைவ! நீ யார்? எம்மோடு என்ன தொடர்பு உடையை? எம் நலம் தந்து செல்வாய் என்று வேற்று வரைவு கூறி வரைவு கடாயினாள்.

உள்ளுறை : மகளிர் கழித்து நீக்கிய பூவை முதிர்ந்த பசு தின்னும் என்றது, நின்னாற் கைவிடப்பட்ட தலைவியை ஏதிலார் போந்து மணம் வேண்டா நிற்பர் என்பதாம்.

மெய்ப்பாடு - வெகுளி.

பயன் - நலம் தொலைவு உரைத்து வரைவு கடாதல்.

ஒப்புமைப்பகுதி

10. என் நலத்தைத் தா என்றல்

"விட்டென விடுக்குநாள் வருக அதுநீ
நேர்ந்தனை ஆயின் தந்தனை சென்மோ"

(குறுந். 236:2-6, 238:3-4, 349:3-4) (ஐங். 159:5)
(கலி. 128:10-11) (அகநா. 376:18, 396:19)
(ஐங். எழு. 64, 66)

# 396. குறிஞ்சி

## தோழி கூற்று

பெய்துபோகு எழிலி வைகுமலை சேரத்
தேன்தூங்கு உயர்வரை அருவி ஆர்ப்ப
வேங்கை தந்த வெற்புஅணி நல்நாள்
பொன்னின் அன்ன பூஞ்சினை துழைஇக்
5 கமழ்தாது ஆடிய கவின்பெறு தோகை
பாசறை மீமிசைக் கணம்கொள்பு ஞாயிற்று
உறுகதிர் இளவெயில் உண்ணும் நாடன்
நின்மார்பு அணங்கிய செல்லல் அருநோய்
யார்க்குநொந்து உரைக்கோ யானே பல்நாள்
10 காமர் நனிசொற் சொல்லி
ஏமம் என்றுஅருளாய் நீமயங் கினையே.

எ-து : தோழி தலைவனை வரைவு கடாயது.

(அல்லது)

வரைவுணர்த்தப்பட்டு ஆற்றாளாய்ச் சொல்லியதூஉம் ஆம்.

(அல்லது)

இரவுக் குறி மறுத்ததூஉம்ஆம்.

பாடினோர் பெயர் தெரியவில்லை

ப-ரை : பெய்து போகு எழிலி - மழையைப் பெய்து ஒழிந்து செல்லும் மேகம் எல்லாம், வைகு மலை சேர - தாம் முன்பு தங்கியிருந்த மலையின் கண்ணே சென்று தங்க, தேன் - தேன் கூடுகள், தூங்கு - தொங்குகின்ற, உயர்வரை - உயர்ந்த வெற்பினின்று, அருவி -அருவிகள், ஆர்ப்ப -ஆரவாரித்து வீழ, வேங்கை தந்த -வேங்கை மரங்கள் மலர்ந்த, வெற்பு அணி - அழகிய மலையில், நல்நாள் - நல்ல விடியற் காலையில், பொன்னின் அன்ன - பொன்னைப் போன்ற, பூஞ்சினை - பூக்களை உடைய கிளையிலிருந்து, துழைஇ - அளாவி, கமழ்தாது ஆடிய - நறுமணம் வீசும் மகரந்தத்தில் அளைந்த, கவின் பெறு தோகை - அழகு பெற்ற மயில், பாசறை மீமிசை - பசிய கற்பாறையின் உச்சி மீது, கணம் கொள்பு - தன் கூட்டத்தோடு கூடி, ஞாயிற்று - ஆதித்தனது, உறுகதிர் - மிக்க கதிரையுடைய, இளவெயில் - இளமையான வெயிலை, உண்ணும் - துய்க்கும், நாடன் - மலைநாடனே! நின் - நின்னுடைய, மார்பு - மார்பானது, அணங்கிய - வருத்தியத

னால் எழுந்த, செல்லல் - துன்பமாகிற, அருநோய் - எவராலும் பொறுத்தற்கு அரிய காமநோயை, யான் - யான், யார்க்கு - யாரிடத்து, நொந்து உரைக்கோ - நொந்து கூறாநிற்பேன். பல்நாள் - நீ வந்து புணரும் பலநாளும், காமர் - யான் விரும்பும் வண்ணம், நனி சொற் சொல்லி - மிக இனிய வார்த்தைகளைக் கூறி, ஏமம் என்று கூறியபடி நடத்தல் தலைவிக்கு பாதுகாப்பாகும் என்று கருதி, அருளாய் - அருள்புரியாமல், நீ மயங்கினை - நீ மயக்கம் உற்றனை; யான் - நான், யார்க்கு - எவர்க்கு, நொந்து - இதனை வருந்தி, உரைக்கோ - உரைப்பேன்?

முடிபு : எழிலி சேர, அருவி ஆர்ப்ப, வேங்கை தந்த பூஞ்சினை துழைஇ தோகை வெயில் உண்ணும் நாட! நீ மயங்கினை; யான் யார்க்கு நொந்து உரைக்கோ?

கருத்து : களவொழுக்கம் வேண்டி நின்ற தலைவனே! நீ தந்த நோயை யாரிடம் உரைக்க மாட்டுவம்; விரைக, வரைக என்றபடி.

வி-ரை : இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த ஞான்று, "நின்னிற் பிரியேன் பிரியின் ஆற்றேன்" என்றானாதலால் 'நனி சொற் சொல்லினை' என்றாள். பிரியின் தலைவி இறப்பது திண்ணம்; என்பாள் 'அருளாய்' என்றாள்.

உள்ளுறை : மயில் வேங்கை மலரின் தாதில் அளைந்து தன் கூட்டத்தோடு சேர்ந்து ஞாயிற்றின் இளவெயிலைத் துய்க்கும் என்றது, நீதானும் இவளை மணந்து இன்பம் நுகர்ந்து நின் சுற்றத்தோடு பொருந்தி இல்லறம் நிகழ்த்தற் பாலை என்றதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - வரைவு கடாதல்.

## 397. பாலை

### தலைவி கூற்று

தோளும் அழியும் நாளும் சென்றென
நீள்இடை அத்தம் நோக்கி வாள்அற்றுக்
கண்ணும் காட்சி தெளவின என்நீத்து
அறிவும் மயங்கிப் பிறிதா கின்றே
5 நோயும் பேரும் மாலையும் வந்தன்று

யாங்கா குவென்கொல் யானே ஈங்கோ
சாதல் அஞ்சேன் அஞ்சுவல் சாவிற்
பிறப்புப்பிறி தாகுவது ஆயின்
மறக்குவேன் கொல்என் காதலன் எனவே.

எ-து : பிரிவிடை ஆற்றாளாகிநின்ற தலைவியை வற்புறா நின்ற தோழிக்கு, 'ஆற்றுவல்' என்பது படச் சொல்லியது.

## அம்மூவனார்

ப-ரை : நாளும் - தலைவன் மீண்டு வருவதாகக் குறித்த கார்ப்பருவமும், சென்றென - சென்றொழிந்ததனால், தோளும் - என் தோள்களும், அழியும் - அழகு ஒழியும்; நீள்இடை அத்தம் நோக்கி - அவன் வரும் நீண்ட நெறியையுடைய சுரத்து வழியைப் பார்த்துப் பார்த்து, வாள் அற்று - ஒளி அவிந்து, கண்ணும் - கண்களும், காட்சி தௌவின - காணுதற்குரிய பொலிவு குன்றின; அறிவும் - என்பால் இருந்த அறிவும், நீத்து - என்னைக் கைவிட்டு, மயங்கி - மயக்கமுற்று, பிறிது ஆகின்று - வேறாக நின்றது; நோயும் பேரும் - நோயை வைத்து உயிர் நீங்காது ஆகலின் அந்நோயும் காடேறிச் சென்றொழியா நின்றது. மாலையும் - உயிரைப் போக்குதற்குரிய மாலைப்பொழுதும், வந்தன்று - வந்து தங்கிவிட்டது. ஈங்கு யான் யாங்காகு வென்கொல் - இங்கு யான் இனி எவ்வண்ணம் ஆவேனோ? அறியேன். சாதல் அஞ்சேன் - பிறந்தவர் சாவது உறுதியாகலின் இறத்தற்கு யான் பயப்படேன்; சாவின் - இறப்பின், பிறப்புப் பிறித ஆகுவது ஆயின் - வரும் பிறப்பு மக்கட்பிறப்பின்றி வேறொரு பிறப்பாசி மாறிவிடின், என் காதலன் - என் காதலனை, மறக்குவேன் என - அப்பொழுது மறக்க நேரிடுமோ என்று, அஞ்சுவல் - அஞ்சா நிற்பேன்.

முடிபு : சாதல் அஞ்சேன்; பிறப்புப் பிறிது ஆகுவதாயின் காதலனை மறக்குவேன்கொல் என அஞ்சுவல் எனமுடிக்க.

கருத்து : இம்மையில் மட்டுமன்று; மறுமையிலும் யான் இத்தலைவனையே நினையா நிற்பேன்

அ-ள் : நோய் பேரும் என்றது இறக்கு முன் நோய் காடேறிற்று என்னும் வழக்கு நோக்கி. தௌவல் - பொலிவு குன்றல் மாறிப் பிறத்தலாவது விலங்கு, பறவை முதலியவாகப் பிறத்தல். இது கலக்கம் என்னும் மெய்ப்பாடு.

மெய்ப்பாடு - அழுகை.

பயன் - அயாவுயிர்த்த

ஒப்புமைப்பகுதி

3. கண்ணுங்காட்சி தௌவின

"வெளிறு கண்போகப் பன்னாள் திரங்கி" (புறநா. 177:2)

"கண்ணே நோக்கி நோக்கி வாள் இழந்தனவே" (குறுந். 44)

"வாளற்றுப் புற்கென்ற கண்ணும்

- அவர்வரும் வழிபார்த்து என் கண்களும் ஒளியிழந்து புல்லியவாயின" (குறள். 1261, பரிமேல்.)

"கண்ணும் வாளற்று" (சீவக. 998) (மலைபடு. 369)

# 398. முல்லை

## தோழி கூற்று

உருகெழு தெய்வமும் கரந்துறை இன்றே
விரிகதிர் ஞாயிறும் குடக்குவாங் கும்மே
நீர்அலைக் கலைஇய கூழை வடியாச்
சாஅய் அவ்வயிறு அலைப்ப உடன்இயைந்து
5 ஓரை மகளிரும் ஊர்எய் தினரே
பன்மலர் நறும்பொழில் பழிச்சியாம்முன்
சென்மோ சேய்இழை என்றனம் அதன்எதிர்
சொல்லாள் மெல்லியல் சிலவே நல்அகத்து
யாணர் இளமுலை நனைய
10 மாண்எழில் மலர்க்கண் தெண்பனி கொளவே.

எ-து : முன்னுற உணர்ந்து பகற்குறி வந்து மீளும் தலைவனை "நீதான் இவளது தன்மையை ஆற்றுவி" எனச் சொல்லியது.

உலோச்சனார்

ப-ரை : உருகெழு தெய்வமும் - கண்டார்க்கு அச்சம் தரும் கடவுளும், கரந்து - மறைந்து, உறையின்று - இருக்காமல் எங்கும் நடமாடிக் கொண்டிருக்கும்; விரிகதிர் ஞாயிறும் - விரிந்த கதிர் களுடன் ஒளி வீசிக் கொண்டிருந்த கதிரவனும், குடக்கு வாங்கும் - மேலைத் திசையிலே சென்று மறையும்; நீர்அலை - நீரை அலைத் தலால், கலைஇய - கலைந்து போன, கூழை - கூந்தலையுடைய, ஓரை மகளிரும் - வண்டல் ஆடிய மகளிரும், வடியா - அச்

கூந்தலின் ஈரத்தைப் பிழிந்துகொண்டு, சாஅய் - தளர்ந்து, அவ் வயிறு - அழகிய வயிற்றை, அலைப்ப - நனைந்த கூந்தலைக் கருதிப் பிசைந்துகொண்டு, உடன் இயைந்து - ஒருசேர, ஊர் எய்தினர் - தம்மூர் சென்றனர். (அன்னதொரு பொழுதில்) பன்மலர் நறும் பொழில் - யாம் பலவாய நறிய மலர்களையுடைய சோலையிடத்தே, பழிச்சி - நின் காதலியைப் பலவாறு பாராட்டி, சேய்இழை - சேயிழாய்!, சென்மோ என்றனம் - 'யாம் முன்னே செல்லா நிற்போம்; வாராய்' என்று கூறினேமாக, அதன் எதிர் - யாம் கூறியதற்கு எதிராக, மெல்லியல் - மென்மையமைந்த தலைவி, சில சொல்லாள் - சிற்சில மொழியும் கூறினாள் இல்லை. மாறாக, நல் அகத்து - அழகிய மார்பின் கண்ணே, யாணர் - புதியனவாகத் தோன்றுகின்ற, இளமுலை - இளைய கொங்கைகளின் முகடுகள், நனைய - நனையும்வண்ணம், மாண் - மாண்பமைந்த, எழில் - அழகுடைய, மலர்க்கண் - மலர் போன்ற கண்கள், தெண்பனி கொள - தெளிந்த நீர்கொண்டு வடியா, நிற்ப - நின்றனள்; இத்தகையாளை நீயே தேற்றுவித்து ஏகுவாயாக, என்றாள்.

முடிபு : தலைவ! சேயிழை! சென்மோ என்றனம்; மலர்க்கண் தெண்பனி கொள அதன் எதிர் சில சொல்லாள் என முடிக்க.

கருத்து : சேர்ப்பனே! தலைவி நின் பிரிவினைப் பொறாள். பிரியின் நீயே அவளை ஆற்றுவித்துப் பிரிகுவை.

அ-ள் : உருகெழு தெய்வம் - பேய், பூதம், நரகர், சவந்தின் பெண்டிர் போன்றோர். வடித்தல் - கூந்தலில் ஈரம் புலராது வடித்தல். வயிறு அலைத்தது. கூந்தல் நனைந்தமை பற்றி வயிற்றைப் பிசைந்துகொண்டு அன்னை சினப்பாள் என அழுதது. கண்பனி கொளற்குக் காரணம் தலைவன் வரையவில்லையே என்பதனால் எழுந்த ஏக்கம்.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவனது ஆற்றாமை கூறி வரைவுகடாதல்.

ஒப்புமைப்பகுதி

5. ஓரை மகளிர்

"ஓரைமகளிர் ஓராங்காட்ட" (குறுந். 316:5)

"ஓரை ஆயம் கூறக் கேட்டும்" (குறுந். 48:3) (கலி. 75:4)

# 399. குறிஞ்சி

## தோழி கூற்று
## (தலைவி கூற்றுமாம்)

அருவி ஆர்க்கும் பெருவரை அடுக்கத்துக்
குருதி ஒப்பின் கமழ்பூங் காந்தள்
வரிஅணி சிறகின் வண்டுஉண மலரும்
வாழிஅம் சிலம்பில் கேழல் கெண்டிய
5 நிலவரை நிவந்த பலஉறு திருமணி
ஒளிதிகழ் விளக்கத்து ஈன்ற மடப்பிடி
களிறுபுறம் காப்ப கன்றொடு வதியும்
மாமலை நாடன் நயந்தனன் வருஉம்
பெருமை உடையள் என்பது
10 தகுமோ தோழிநின் திருநுதல் கவினே.

எ-து : நெடுங்காலம் வந்தொழுக ஆற்றாமை வேறுபட நின்ற தலைவியைத் தோழி எம்பெருமான் இதற்காய நல்லது புரியும் என்று தலைவன் சிறைப்புறத்தானாகச் சொல்லியது.

(அல்லது)

இதற்காய நல்லது புரியும் பெருமான் திறம் வேண்டும் என்றாட்குத் தலைவி சொல்லியதூஉமாம்.

### தொல்கபிலர்

ப-ரை : தோழி - தலைவீ! நின் - நின்னுடைய, திரு - சிறந்த, நுதல் - நெற்றியின், கவின் - அழகானது, அருவி - அருவி கள், ஆர்க்கும் - ஆரவாரித்து ஒலிக்கும், பெருவரை - பெரிய மூங்கில்கள் செறிந்த, அடுக்கத்து - மலைச் சாரலில், குருதி ஒப்பின் - இரத்தத்தைப் போன்ற நிறம்கொண்ட, கமழ் - நறுமணம் வீசுகின்ற, பூங்காந்தள் - செங்காந்தள் மலர்கள், வரி அணி - வரிகள் பொருந்திய அழகிய, சிறகின் - சிறகுகளை யுடைய, வண்டு - வண்டுகள், உண - தேனைப் பருகும்படி, மலரும் - பூக்கும், அம் - அழகிய, சிலம்பில் - சிலம்பின் கண்ணே, கேழல் - பன்றி, கெண்டிய - கிளறிய, நிலவரை - நிலத்திலே, நிவந்த - கிடந்து வெளிப் போந்த, பலவுறு திருமணி - பலவாகிய மிக்க அழகிய மணிகளின், ஒளி திகழ் விளக்கத்து – ஒளி வீசுகின்ற விளக்கத்திலே, ஈன்ற - கன்றை ஈன்ற, மடப்பிடி - இளைய

பெண் யானை, களிறு புறம் காப்ப - தனக்கு இடர் வாராவண்ணம் களிற்றியானை அயலிலே பாதுகாத்து நிற்ப, கன்றொடு வதியும் - அச்சம் இன்றித் தன் கன்றோடு அமைதியாக வாழும், மாமலை நாடன் - சிறப்பமைந்த கரிய மலைநாடன், நயந்தனன் - தானே வேட்கை கொண்டவனாக, வருஉம் - வருகின்றான் என்னும், பெருமை - பெருமையை, உடையள் - தலைவி பெற்றிருக்கின்றாள், என்பது - என்பதை, தருமோ - தரும் அன்றோ? அவ்வாறு தருமாகையால் அதனை வேறாகக் கருதாது விரைய வரையுங்காண்; வாழி - நீ வாழ்க.

முடிபு : தோழி! நின் திருநுதற்கவின் நாடன் நயந்தனன் வருஉம் பெருமையுடையள் என்பது தருமோ; வாழி! எனமுடிக்க.

கருத்து : தலைவியின் அழகே மலைநாடனைத் தானே மணம் புரிந்து சேர்த்துவிக்கும்.

உள்ளுறை : மணியினொளியில் கன்றையீன்ற பிடி களிறு தன்னைக் காப்பக் கன்றொடு வதியும் என்றது, நின்னைத் தலைவன் வரைந்துகொண்டு இல்லறம் நிகழ்த்த அவனது இல்லில் நீ புதல்வரையீன்று நின்தலைவன் நின்னைக்காப்ப மக்களொடு மகிழ்ந்து மனையறம் காப்பை என்றவாறு.

இறைச்சி : வண்டுவந்துண்ணக் காந்தள் மலரும் என்றது, தலைவன் நின்நலனை நுகரும் போழ்து நீவெறாது மகிழ்ந்துறை குவை என்றபடி.

மெய்ப்பாடு - பெருமிதம்.

பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

ஒப்புமைப்பகுதி

2. காந்தளின் குருதிப் பூ

"குருதிப்பூவின் குலைக் காந்தட்டே" (குறுந். 1:4)

"தோட்டார் தோன்றி குருதி பூப்ப" (முல்லை. 96)

"குருதி மலர்த் தோன்றி" (கைந்நிலை. 26)

# 400. மருதம்

## பரத்தை கூற்று

வாழைமென் தோடு வார்புறுபு ஊக்கும்
நெல்விளை கழனி நேர்கண் செறுவின்
அரிவனர் இட்ட சூட்டுஅயல் பெரிய
இருஞ்சுவல் வாளை பிறழும் ஊர
5 நின்இன்று அமைகுவென் ஆயின் இவண்நின்று
இன்னா நோக்கமொடு எவன்பிழைப்பு உண்டோ
மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து
அறங்கெட அறியா தாங்குச் சிறந்த
கேண்மையொடு அளைஇ நீயே
10 கெடுஅறி யாய்என் நெஞ்சத் தானே.

எ-து: பரத்தை தலைவனைப் புகழ்ந்தது. முன்பு நின்று யாதோ புகழ்ந்தவாறெனின் நின்னின்றமையாமென்று சொன்ன மையான் என்பது.

**ஆலங்குடி வங்கனார்**

ப-ரை: வாழை - வாழைமரத்தின், மெல் - மெல்லிய, தோடு - தாற்றின் நுனியில், வார்பு உறுபு - தொங்கி நிற்கும் வாழைப் பூவை, ஊக்கும் - நிலத்தினின்றும் ஓங்கி வளர்ந்து அசைக்கும், நெல் விளை கழனி - நெற்கதிர்கள் செழுமையுடன் விளையா நின்ற வயலிலே, நேர்கண் - கண்ணுக்கு இனிய, செறுவில் - சேற்றில், அரிவனர் - அறுவடைத் தொழில் புரியும் உழவர், இட்ட - அறுத்துப் போட்ட, சூட்டு அயல் - நெற் கதிர்க் குவியலின் பக்கத்தில், பெரிய இருஞ்சுவல் வாளை - பெரிய கரிய பிடரையுடைய வாளைமீன், பிறழும் - துள்ளி விளையாடும், ஊர - வளம் கொழிக்கும் மருதநிலத் தலைவனே! நின் இன்று நின்னையில்லாமல், அமைகுவென் ஆயின் - யான் வாழ்வேனா யின், இவண் நின்று - இங்கு நின்று, இன்னா நோக்கமொடு - இனிமையைத் தாராத நோக்கத்துடன் வாழ்வதால், எவன் - என்ன, பிழைப்பு உண்டு - பயன் உண்டாகும்? ஒன்றும் இல்லை; ஆகையால், மறம்கெழு - வீரம் செறிந்த, சோழர் - சோழ மன்னர்க்குரிய, உறந்தை அவையத்து - உறையூர்க்கண் அமைந்த அவைக்களத்து, அறம் கெட அறியாதாங்கு - அறம் சிறிதும் சிதையாது என்றும் நின்று நிலைபெற்றாற் போன்று, நீயே -

நீதான், சிறந்த - உயர்ந்த, கேண்மையொடு - நட்புடனே, அளைஇ - அளாவி, என் - என்னுடைய, நெஞ்சத்தான் - உள்ளத்தினின்றும், கெடு - நீங்கி நிற்றலை, அறியாய் - கற்றறிந்தாய் அல்லை; அதனால் நீ இருப்பின் நான் வாழ்வேன்.

முடிபு : வாளை பிறழும் ஊர! எவன் பிழைப்பு உண்டு? என் நெஞ்சத்தான் நீ கெடு அறியாய் என முடிக்க.

கருத்து : தலைவ! நின்னையின்றி யான் வாழேன்; என் நெஞ்சைவிட்டு அகலாய்; நீயுள்ளமையால் யானும் உள்ளேன் என்று பரத்தை தலைவனைப் புகழ்ந்தாள்.

அ-ள் : தோடு - நுனி, செறு - சேறு. சூடு - நெற்கதிர்க் குவியல். சுவல் - பிடரி. ஊக்குதல் - அசைத்தல்.

உள்ளுறை : வாழையின் பூவை அசைக்கின்ற வயலில் விளைந்த நெற்கதிர்களை உழவர்கள் அறுவடை செய்து இட்ட அரிச்சூட்டின் அயலில் வாளைமீன்கள் துள்ளியாடும் என்றது, தலைவியின் உள்ளத்தைத் துன்புறுத்தும் காதற்பரத்தையின் செய்கைகளை வாயில்கள் அடக்க, அவள் நெஞ்சிலே தலைவன் விளங்கலாயினன் என்பதாம்.

மெய்ப்பாடு - உவகை.

பயன் - தலைவனைப் பரத்தை புகழ்தல்.

ஒப்புமைப்பகுதி

7-8. அரசனது செங்கோல் அவையம்

"முறையுடை அரசன் செங்கோல் அவையத்து"

(குறுந். 276:5)

"மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து
அறநின்று நிலையிற்று ஆகலின்" (புறநா. 39:8-9 71:7-9)
(அகநா. 93-5) (சிலப். 5:135) (பெருங். 1:34:25)

நற்றிணை மூலமும் உரையும் ஒப்புமைப் பகுதிகளுடன் முற்றுப் பெற்றன.

இத்தொகை முடித்தான் பன்னாடு தந்தான் பாண்டியன் மாறன்வழுதி.

## பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 3 | இளையோ | இளையோன் |
| 13 | 2 | நாணமும் | நானமும் |
| 20 | 8 | மாகலில் | மாகலின் |
| 21 | 11 | அகநா | குறுந் : 192 |
| 51 | 10 | இறஆரி | இறஆர் |
| 82 | 7 | குறுத்தனள் | குறித்தனள் |
| 55 | 22 | பாலும் | பரலும் |
| 62 | 28 | ண்ணுவரெனின் | எண்ணுவரெனின் |
| 81 | 17 | குறல் | குரல் |
| 82 | 13 | சோடை | கோடை |
| 82 | 21 | ஆடை | ஆரிடை |
| 108 | 6 | பெறுமுது | பெருமுது |
| 130 | 29 | செலவமுங்குத்தது | செலவமுங்குவித்தது |
| 198 | 35 | உள்ளுரை | உள்ளுறை |
| 233 | 5 | எனவனோ | னெவனோ |
| 323 | 30 | நடுநசி | நடுநிசி |
| 397 | 25 | வருந்துவெனோ | வருந்துவனோ |
| 419 | 12 | அமிழ்ந்து | அமிழ்து |
| 421 | 15 | இருபுறம் | இரும்புறம் |
| 491 | 22 | தோன்றல் | நோன்றல் |
| 550 | 12 | எமூப்பி | எழுப்பி |
| 585 | 3 | 332 | 323 |

# பாடல் முதற்குறிப்பகராதி

[எண் - பாடலெண்]

# பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 3 | இளையோ | இளையோன் |
| 13 | 2 | நாணமும் | நாணமும் |
| 20 | 8 | மாகலில் | மாகலின் |
| 21 | 11 | அகநா. 25:6 | குறுந்: 192 |
| 32 | 12 | செகுத்தன | செகுத்தனன் |
| 33 | 6 | செகுத்தன | செகுத்தனன் |
| 51 | 10 | இறஆரி | இறஆர் |
| 52 | 7 | குறுத்தனள் | குறித்தனள் |
| 55 | 22 | பாலும் | பரலும் |
| 62 | 28 | ண்ணுவரெனின் | எண்ணுவரெனின் |
| 71 | 2,23 | அகதிர் | அகறிர் |
| 73 | 16 | தீம்பிழை | தீம்பிழி |
| 81 | 17 | குறல் | குரல் |
| 82 | 13 | சோடை | கோடை |
| 82 | 21 | ஆடை | ஆரிடை |
| 108 | 6 | பெறுமுது | பெருமுது |
| 128 | 32 | அன்பிணையோ | அன்பினையோ |
| 130 | 29 | செலவழுங்குத்தது | செலவழுங்குவித்தது |
| 134 | 10 | துஞ்சம் | துஞ்சும் |
| 140 | 24 | போகி | போகிப் |
| 152 | 10 | பலபாராட்டி | பலபா ராட்டி |
| 163 | 17 | அறனில் | வறனில் |
| 198 | 35 | உள்ளுரை | உள்ளுறை |
| 214 | 5 | தேக | ஏக |
| 233 | 5 | உவன்வரிஎனவனோ | உவன்வரின் எவனோ |
| 249 | 10 | அலகுநிழல் | அல்கு நிழல் |
| 291 | 14 | நாஹும் | நாணும் |
| 308 | 1 | துருருன் | துருவின் |
| 323 | 30 | நடுநசி | நடுநிசி |
| 328 | 20 | றாய்கும் | றாகும் |
| 350 | 30 | அன்றியும | அன்றியும் |
| 352 | 23 | கலுமும் | கலுழும் |
| 356 | 2 | மின்னி | மின்னிக் |
| 361 | 8 | கதிர | கதிர் |
| 365 | 8 | கவழம் | கவளம் |
| 396 | 25 | பரியரைப் | பராரைப் |
| 397 | 25 | வருந்துவெனோ | வருந்துவனோ |
| 419 | 12 | அமிழ்ந்து | அமிழ்து |
| 421 | 15 | இருபுறம் | இரும்புறம் |
| 491 | 22 | தோன்றல் | நோன்றல் |
| 550 | 12 | எழுப்பி | எழுப்பி |
| 553 | 19 | உரோடோகத்துக் கந்தரத்தனார் | உரோடகத்துக் கந்தரத்தனார் |
| 585 | 3 | 332 | 323 |
| 658 | 27 | நன்நாட்டுச் | நாட்டுச் |

உ
கணபதி துணை

# நற்றிணை அரும்பத அகராதி

(எண் — செய்யுளெண்)


44005

# டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலைய அண்மை வெளியீடுகள்

தொலைபேசி: 044-24911697-மின்னஞ்சல்: druvslibrary@gmail.com

| | விலை |
|---|---|
| ஐங்குறுநூறு | 200.00 |
| பதிற்றுப்பத்து | 240.00 |
| பரிபாடல் | 200.00 |
| புறநானூறு | 400.00 |
| குறுந்தொகை | 500.00 |
| சிலப்பதிகாரம் | 500.00 |
| மணிமேகலை | 320.00 |
| புறப்பொருள் வெண்பாமாலை | 150.00 |
| திருத்தலங்கள் வரலாறு | 400.00 |
| சிவசிவ வெண்பா | 80.00 |
| தூது நூல்கள் - 7 | 175.00 |
| ஸ்ரீமீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் சரித்திரம் | 400.00 |
| நினைவு மஞ்சரி | 200.00 |
| சங்கீத மும்மணிகள் | 180.00 |
| சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும் | 120.00 |
| வித்துவான் தியாகராச செட்டியார் | 100.00 |
| சங்கீத வித்துவான்கள் சரித்திரம் | 80.00 |
| தில்லையுலா | 80.00 |
| மத்தியார்ச்சுன மான்மியம் | 40.00 |
| திருவானைக்கா அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ் | 60.00 |
| திருவிடைக்கழி முருகர் பிள்ளைத்தமிழ் | 80.00 |
| திருக்குடந்தை மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ் | 60.00 |
| சேக்கிழார் பிள்ளைத்தமிழ் | 100.00 |
| உறையூர் காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ் | 100.00 |
| திருக்கன்றாப்பூர்ப் புராணம் | 30.00 |
| மண்ணிப்படிக்கரைப் புராணம் | 80.00 |
| வில்லைப்புராணம் | 80.00 |
| வீரவனப் புராணம் | 45.00 |
| தனியூர்ப்புராணம் | 45.00 |
| தணிக்காசலப்புராணம் | 100.00 |
| விளத்தொட்டிப்புராணம் | 60.00 |
| திருவாரூர்ப் புராணம் | 250.00 |
| நூற்றெட்டுத் திருப்பதி வண்ணவிருத்தம் | 120.00 |
| அபிநயதர்ப்பணம் | 100.00 |
| நற்றிணை மூலமும் உரையும் | 500.00 |

---

விலை: ₹ 500

ISBN 978-81-943775-5-9

